ஸ்ரீ ஃ

# ஸ்ரீ மஹாபாரதம்.

# சாந்திபர்வம்.

## விஷயஸூசிகை.

ராஜதர்மம்.

அத்தியாயம். பக்கம்.

அத்தியாயம். பக்கம்.

அத்தியாயம். பக்கம்.

அத்தியாயம். பக்கம்.

அத்தியாயம். பக்கம்.

அத்தியாயம். பக்கம்.

ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய வ்யாஸரூபிணே நம:.

ஸ்ரீ க்ருஷ்ணத்வைபாயனாய நம:.

# ஸ்ரீ மஹாபாரதம்.

## சாந்திபர்வம்.



### முதலாவது அத்தியாயம்.

## ராஜதர்மம்.

[1] நாராயணம் நமஸ்க்ருத்ய நரம் சைவ நரோத்தமம்।
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத்॥

(தர்மபுத்திரரிடம் ரிஷிகள்வந்ததும், நாரதர் தர்மபுத்திரரை விஞவியதும், தர்மபுத்திரர் தமதுமனக்குறைகளைச் சொல்லிச் சிலஸந்தேகங்களைக் கேட்டதும்.)

வைசம்பாயனர், ஜனமேஜயரைப்பார்த்து, "எல்லாச்சினேகிதர்களுக்கும் தர்ப்பணம் செய்தபிறகு, பாண்டவர்களும் விதுரரும் திருதராஷ்டிரனும் பாதவம்சத்தியஎல்லாஸ்திரீகளும் மஹாத்மாக்களான அந்தமற்றக்கௌரவர்களும் சுத்தியைச் செய்துகொள்ளவேண்டிப் பட்டணத்திற்குவெளியில்அந்தக்கங்கைக்கரையில் [2]ஒருமாஸம்வஸித்

[1] இதன்உரைவிசேஷத்தை ஆதிபர்வம் 1-வது பக்கம் குறிப்பிற்காண்க.

[2] 'சிலசமயங்களில் கபடயுத்தஞ்செய்ததோஷநிவிர்த்திக்காகப் புண்ணியநதிதீரத்தில் ஒருமாஸம்வஸித்தார்களேயன்றி ஆசௌசநிவிர்த்திக்கு அன்று' என்றும், 'யுத்தம்நடந்த பதினெட்டுநாள்களில் நேர்ந்தமரணங்களுக்கு அன்றன்றே சுத்தியாகிறது; (மநுஸ்ம்ருதி, ரு-வது அத்யாயம், கூஅ-வது சுலோகம்.) பதினெட்டாநாள் ஸௌப்திகவதத்தில் மரித்தவர்களுக்காகப் பன்னிரண்டுநாள் ஆசௌசம் அனுஷ்டிக்கவேண்டும்; யுத்ததினம் பதினெட்டு, ஆசௌசதினம் பன்னிரண்டு, இப்படிஇரண்டும்சேர்ந்து முப்பதுநாள்என்று ஒருபக்ஷம்உண்டு' என்றும் பழையஉரை கூறுகிறது.

'பிராம்மணன் பத்துநாளிலும் க்ஷத்திரியன் பன்னிரண்டுநாளிலும் வைசியன் பதினைந்துநாளிலும் சூத்திரன் ஒருமாஸத்திலும் சுத்தியடைகிறன்' என்கிறமனுவசனப்படி (மநுஸ்ம்ருதி, ரு-வது அத்யாயம், அரு வது சுலோகம்.) விதுரர்சூத்திரராகையால் அவருக்கு ஒருமாஸம்ஆசௌசமுண்டென்றும், அவருடன்எல்லாரும் ஒருமாஸம் அங்கேவஸித்தார்களென்றும் கொள்வதும் பொருந்தும்.

தார்கள். மஹாத்மாக்களும் ஸித்திபெற்றவர்களும் பிரம்மநிஷ்டர்களில் உத்தமர்களுமான வ்யாஸரும் நாரதரும் தேவலரும் மஹரிஷியான தேவஸ்தானரும் கண்ணுவரும் அவர்களுடைய சிறந்தசிஷ்யர்களும், தர்ப்பணஞ்செய்தவரும் தர்மாத்மாவுமான யுதிஷ்டிரரிடம் வந்தார்கள். இன்னும், வேதம் தெரிந்தவர்களும் ஞானமுடையவர்களும் [1]ஸ்நாதகர்களும் கிருஹஸ்தர்களுமான பிராம்மணர்கள் குருச்ரேஷ்டரான தர்மபுத்திரரைக் கண்டார்கள். அந்த மஹரிஷிகள் மஹாத்மாவான தர்மபுத்திரரை அடைந்து விதிப்படி பூஜிக்கப்பெற்று மிகவும் உயர்ந்த ஆஸனங்களில் உட்கார்ந்தார்கள். பிறகு, பிராம்மணர்கள் அந்தஸமயத்திற்குத் தக்கபடி பூஜையைப் பெற்றுக்கொண்டு, பரிசுத்தமான கங்காதீரத்தில் அப்பொழுது சோகத்தால் துயரமுற்ற சிந்தையையுடைய தர்மபுத்திரமஹாராஜாவை நூறுயிரம்விதமாக ஆஶ்வாஸப்படுத்த அவரைச்சூழ்ந்து நாற்புறமும் நெருங்கி உட்கார்ந்தார்கள். நாரதரானவர் வ்யாஸர்முதலிய ரிஷிகளுடன் பேசிக்கொண்டு தர்மபுத்திரரைப் பார்த்து ஸமயத்தில் சொல்லலானார். "ஓ! தர்மபுத்திரனே! அர்ஜுனனுடைய கைவன்மையினாலும் கிருஷ்ணனுடைய அனுக்ரஹத்தினாலும் தர்மத்தாலும் இந்தப் பூமிமுழுதும் ஜயிக்கப்பட்டது. உலகத்திற்குப் பயத்தையுண்டுபண்ணுகின்ற இந்தப்போரிலிருந்து பாக்கியத்தால் விடுபட்டீர்கள். க்ஷத்திரியர்களின் தர்மத்தில் விருப்பத்தையடைந்தவனாகஇருக்கிறாய். ஓ! பாண்டவனே! ஸந்தோஷிக்கிறாயா? ஓ! ராஜாவே! சத்துருக்களைக் கொன்றவனாகிய நீ நண்பர்களைத் திருப்திசெய்விக்கிறாயா? இந்தச்செல்வத்தையடைந்தபிறகு உன்னைச் சோகம் பீடிக்காமலிருக்கிறதா?" என்றார்.

யுதிஷ்டிரர், "ஓ! பகவானே! கிருஷ்ணனுடைய புஜபலத்தையடைந்ததாலும் பிராம்மணர்கள் அனுக்ரஹத்தினாலும் பீமார்ஜுனர்களுடையபலத்தினாலும் இந்தப்பூமிமுழுமையும் ஜயிக்கப்பட்டது. ஆனால், என்னுடையமனத்தில் இந்தப்பெரியதுக்கம் எப்பொழுதும் இருக்கிறது. பார்க்கப்பயங்கரமான இந்தப்பெரியஞாதிகளின் நாசத்தைச்செய்தும் பிரியமுள்ளபிள்ளைகளாகிய அபிமன்யுவையும் உபபாண்டவர்களையும் கொல்வித்துவிட்டும் அடைந்தஇந்தஜயமானது, அபஜயமாகவே எனக்குத்தோன்றுகிறது. துவாரகையில்வஸிக்கும் என்மருமகளாகிய ஸுபத்ரையானவள் க்ருஷ்ணன் இங்கிருந்து

1 பிரம்மசாரிவிரதம் முடித்துக் குருவினால் விடைகொடுக்கப்பெற்ற பிறகும் கிருஹஸ்தாஶ்ரமம் எடுத்துக்கொள்வதற்கு முன்னும் ஸ்நாதகர் ஆவார். அவர்களுக்கு ராஜாவுக்கு மேற்பட்ட மரியாதைசெய்யும்படி தர்மசாஸ்திரம் விதிக்கிறது.

போனவுடன் என்னசொல்லப்போகிறாளோ? பிள்ளைகள்கொல்லப்பட்டும் உறவினர்கள்கொல்லப்பட்டும் கஷ்டப்படும் திரௌபதியானவள் நமக்குப்பிரியத்தையும் ஹிதத்தையுமே திரும்பவும்நடத்திக்கொண்டிருப்பதானது என்னைப் பீடிப்பதுபோலவேயிருக்கிறது. பூஜ்யரானநாரதரே! மற்றும் இதொன்றும் உம்மிடம் சொல்லுகிறேன். குந்தி ரஹஸ்யத்தை மறைத்துவைத்தமையால் நான் துக்கத்தோடுசேர்க்கப்பட்டவனாக இருக்கிறேன். உலகத்தில் பதினாயிரம் யானைபலமுள்ளவனும், யுத்தத்தில் ஒப்பற்றவனும், ஸிம்மம்போன்ற சௌரியமுள்ள நடையுடையவனும், ஜயசீலனும், மாறுதநியமமுள்ளவனும், திருதராஷ்டிரருடைய பிள்ளைகளுக்கு ஆதாரமானவனும், மானியும், கொடுமையான பராக்ரமமுடையவனும், பகைவரைப் பொறுதவனும், எப்பொழுதும் சுருசுருப்புள்ளவனும், ஒவ்வொரு யுத்தத்திலும் எங்களை எறிந்தவனும், அதிவேகமான அஸ்த்ரமுள்ளவனும், ஆச்சரியமானயுத்தம்செய்கிறவனும், ஸமர்த்தனும், ஆச்சரியமானபராக்ரமமுள்ளவனும், குந்திக்கு ரஹஸ்யத்திலுண்டான புத்திரனுமான அந்தக்கர்ணன் எங்களுக்குத் தமையனன்றோ? அந்தஸமயம் தர்ப்பணம்செய்யும்போது அவனை எல்லாக்குணத்தோடும்கூடியவனும் முந்திஜலத்தில்விடப்பட்டவனுமான கர்ணனென்னும்தன்னுடைய குமாரனென்று குந்தி எனக்குச்சொன்னாள். எவனைப்பெட்டியில்வைத்துக் கங்கையின்பிரவாகத்தில்மூழ்கச்செய்தாளோ, எவனைத் தேர்ப்பாகன்பிள்ளையாயும் ராதையின்பிள்ளையாயும் உலகம்நினைத்ததோ, அந்தக்கர்ணன் குந்தியிடமிருந்து ஸூர்யனுக்குப்பிறந்தவன்; தாய்வழியில் எங்களுக்குத்தமையனாயிருந்தவன்; ராஜ்யத்தில் ஆசையுள்ளவனும் தெரியாதவனுமான என்னால் யுத்தத்தில்கொல்லப்பட்டான். அந்தவதமானது பஞ்சுப்பொதியைத் தீயெரிப்பதுபோல என் அங்கங்களை எரிக்கிறது. சுவேதவாஹனனான அர்ஜுனனும் அவனைத் தமையனென்று அறியவில்லை; நானும் அறியவில்லை; பீமனும் அறியவில்லை; நகுலஸஹதேவர்களும்அறியவில்லை. அவனோ உண்மையாய் எங்களைத்தெரிந்துகொண்டான். எங்களுக்கு ஸந்தியை விரும்பியகுந்தியானவள், 'நீயும் என்னுடைய குமாரன்தான்' என்று சொல்லிக்கொண்டு அவனுடைய ஸமீபம்சென்றாளென்று எங்களுக்குக்கேள்வி. பிறகு மஹாத்மாவான அவனால் குந்தியின் விருப்பம் செய்யப்படவில்லை. அவன், 'தாயே! மிகவும் அயுக்தமானவார்த்தையைச் சொன்னாய்' என்றும், யுத்தத்தில் துரியோதனனைவிடுகிறதற்கு நான்சக்தனேயல்லன். அயோக்கியத்தன்மையும் குரூரத்தன்மையும்

நன்றியற்றதன்மையும் எனக்குவந்துவிடும். உன்னுடைய இஷ்டத்திற்காக யுதிஷ்டிரனோடு ஸந்தியைச்செய்தேனாகில் என்னை உலகமானது யுத்தத்தில் அர்ஜுனனுக்குப் பயந்தீவனென்று நினைக்கும். அப்படியாயின், க்ருஷ்ணனோடுகூடின அர்ஜுனனை யுத்தத்தில்ஜயித்தபிறகு தர்மபுத்திரனோடு சேருகிறேன்' என்றுஞ்சொன்னான். மறுபடியும் குந்தியானவள் அகன்றமார்பையுடைய அந்தக்கர்ணனை 'நாலுபேர்களுக்கு அபயங்கொடு; இஷ்டம்போல அர்ஜுனனோடு போர்செய்' என்றுசொன்னாளாம். புத்திசாலியான அவன் நடுங்குகின்ற தாயைப்பார்த்து அஞ்சலிசெய்துகொண்டு, 'தேவியே! உன்னுடைய நான்குகுமாரர்களை அவர்கள் கொல்லக்கூடியவர்களாக வந்தாலும் நான் கொல்லேன்; கர்ணன் அடிபட்டால் அர்ஜுனனைக்கூட்டியோ, அர்ஜுனன் அடிபட்டால் கர்ணனைக்கூட்டியோ உனக்குப் பிள்ளைகள் ஐவர்கள்தாம் ஸ்திரமாய்இருக்கப்போகிறார்கள்' என்று சொன்னான். பிறகு பிள்ளைகளிடம் பாசம்வைத்த தாயானவள் திரும்பவும், 'எந்தப்ராதாக்களுக்கு க்ஷேமத்தைச்செய்ய விரும்புகிறாயோ அவர்களுக்கு க்ஷேமத்தைச்செய்' என்று சொன்னாள். இவ்விதம்சொல்லிக் குந்தியானவள் அவனைநீங்கி வீடுசென்றாளாம். உடன்பிறந்த தமையனான் அந்தவீரன், தம்பியான அர்ஜுனனால் கொல்லப்பட்டான். ஓ! ரிஷியே! குந்தியினுடையரஹஸ்யம் வெளியாகவில்லை. அவனுடைய ரஹஸ்யமும் வெளியாகவில்லை. ஆகையால் பெரியவில்லாளியான சூரன் அர்ஜுனனால் யுத்தத்தில் வீழ்த்தப்பட்டான். ஓ! பிராம்மணச்ரேஷ்டரே! பிறகு குந்தியினுடைய வசனத்தினால் கர்ணனை ஸஹோதரனென்றும் முன்பிறந்த தமையனென்றும் நான் தெரிந்துகொண்டேன். ஆகையால் தமையனைக் கொலைசெய்தவனை என்னுடையமனம் மிகவும் தபிக்கின்றது. கர்ணனையும் அர்ஜுனனையும் துணையாகப்பெற்றால் நான் இந்திரனையும் ஜயிப்பேன். துஷ்டபுத்தியுள்ளவர்களான் திருதராஷ்டிரபுத்ரர்களால் ஸபையில் பிடிக்கப்பட்டு உடனே (எனக்கு) வெளிவந்தகோபம் கர்ணனைக் கண்டு தணிவடையும். ஸபையில் சூதாடுவதில் துர்யோதனனுக்கு ஹிதத்தை விரும்புகிறவனாகப் பேசுகிற இந்தக்கர்ணனுடையகடுமையான ஆரம்பமுள்ளனவும் கொடுமையுள்ளனவுமான சொற்களைக்கேட்டபோது உண்டான என்னுடையகோபமானது, அவனுடைய பாதங்களைக் கண்டவுடன் நீங்கிவிடும். கர்ணனுடையபாதங்கள் குந்தியினுடைய பாதங்களுக்குஒப்பானவையென்பது என்னுடைய எண்ணம். குந்திக்கும் அவனுக்கும் ஒற்றுமைக்குக் காரணத்தைத்தேடி

யும் சிந்தித்தும் எவ்விதத்திலும் நான் அதைத் தெரிந்துகொள்ள வில்லை. யுத்தத்தில் பூமியானது அவனுடைய தேருருளையை எங்ஙனம் விழுங்கிற்று? என்னுடையதமையன் எவ்விதம் ஜயிக்கப்பட்டான்? இதில் உண்மையைச்சொல்ல நீரே தக்கவர். ஓ! பகவானே! உள்ளபடி உம்மிடத்திலிருந்து எல்லாவற்றையும் கேட்க விரும்புகிறேன். எல்லாம்தெரிந்த வித்வானுகியநீர் உலகத்தில் செய்ததையும் செய்யப்போகிறதையும் அறிகிறீர்" என்று சொன்னுர்.

---

## இரண்டாவது அத்தியாயம்

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(நாரதர், கர்ணன் துரோணரைப்பிரம்மாஸ்த்ரம் வேண்டியதையும் அவர்மறுத்ததையும் அவன் பரசுராமரையடுத்ததையும் அவனுக்குப் பிராம்மணசாபம் நேர்ந்ததையும் கூறியது.)

இப்படி (தர்மபுத்திரரால்) கேட்கப்பட்டவரும் பேசுகிறவருட்சிறந்தவருமான அந்தநாரதர், அப்பொழுது அந்தக்கர்ணன் சபிக்கப்பட்டவாலாற்றையெல்லாம் சொல்லத்தொடங்கினுர். "ஓ! மஹாபாஹுவானபாரதனே! நீசொல்லுகிறதுசரிதான். கர்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் யுத்தத்தில்ஜயிக்கமுடியாதது ஒன்றுமிராது. ஓ! ராஜனே! ஆனுல் தேவரஹஸ்யமானஇதனை உனக்குச்சொல்லுகிறேன். ஓ! புஜபலமுள்ளவனே! முன்பு இஃதுஎப்படிநடந்ததென்பதைத் தெரிந்துகொள். ஓ! பிரபுவே! க்ஷத்ரியஜாதியானது ஆயுதங்களால் பரிசுத்தியடைந்து எவ்விதம் ஸ்வர்க்கத்தையடையுமென்றுஆலோசித்து அந்தக்காரணத்திற்காகக் கன்னிகையாகிய குந்தியினிடத்தில், வைரத்தையுண்டுபண்ணத்தக்க கர்ப்பமானது உண்டுபண்ணப்பட்டது. அந்தக்கர்ப்பத்திலுண்டான குழந்தையானவன் பராக்ரமத்துடன்கூடியவனுகவும் ஸாரதிக்குப்பிள்ளையாகவும் ஆனுன். ஆங்கிரஸகுலத்தவருள்சிறந்தவரும் உன்னுடையகுருவுமான துரோணரிடத்தில் தனுர்வேதத்தை அப்யாஸம்செய்தான். ஓ! ராஜச்ரேஷ்டனே! அவன் பீமஸேனனுடையபலத்தையும் அர்ஜுனனுடைய அஸ்த்ரஸாமர்த்தியத்தையும் உன்னுடையபுத்தியையும் அப்படியே நகுலஸஹதேவர்களுடைய விநயத்தையும் காண்டீவமென்னும்வில்லையுடையஅர்ஜுனனுக்குஇளமைப்பருவத்திலேயே க்ருஷ்ணனேடுஉண்டானஸ்நேஹத்தையும் பிரஜைகளுடையஅன்புடைமையையும் சிந்தித்து மிகவும் தாபமடைந்தான். அவன் ஸ்வபாவத்தாலும் தேவர்களின் ஸங்கல்பத்தாலும் உங்களோடு எப்போதும் பகைமையுள்ளவனுகிய அரச

ஞன துரியோதனனோடு இளமையில் ஸ்நேஹத்தையடைந்தான். பிறகு கர்ணனனவன் அர்ஜுனனைத் தனுர்வேதத்தில் ஞானத்தால் சிறந்தவனென்றுதெரிந்துகொண்டு, ரஹஸ்யத்தில் துரோணரையடைந்து பின்வருமாறு வார்த்தையைச்சொல்லலானான்.

"பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகமுறை நிவிர்த்திமுறைகளோடு தெரிந்துகொள்ள விரும்புகிறேன். யுத்தத்தில் அர்ஜுனனோடு ஸமமாகஇருக்கவேண்டுமென்பது எனதுவிருப்பம். உமக்குப் பிள்ளைகளிடத்திலும் சிஷ்யர்களிடத்திலும் ஸ்நேஹம்ஸமமாயிருப்பது நிச்சயம். உம்முடையஅனுக்ரஹத்தால், என்னை அஸ்த்ராப்யாஸமில்லாதவனென்று தெரிந்தவர்கள் சொல்லாமலிருக்கவேண்டும்" என்றான். அப்படிக் கர்ணனால்சொல்லப்பட்ட துரோணர் அர்ஜுனனிடத்தில்விருப்பமுள்ளவராதலாலும் கர்ணனுடையதுஷ்டபுத்தியையறிந்ததாலும் அவனைப்பார்த்து, "விதிப்படி விரதத்தையனுஷ்டித்த பிராம்மணன் பிரம்மாஸ்திரத்தைத் தெரிந்துகொள்ளத்தக்கவன்; அல்லது, மிகுந்ததவத்தையுடைய க்ஷத்திரியனும் தெரிந்துகொள்ளத்தக்கவன்; மற்றவன் எவ்விதமும் தெரிந்துகொள்ளத்தக்கவனல்லன்" என்றார். ஓ! ராஜனே! இவ்விதம் சொல்லப்பட்டகர்ணன் அங்கிரஸசிரேஷ்டரான துரோணரைப்பூஜித்து விடைபெற்றுக்கொண்டு மஹேந்திரமென்னும் மலையைநோக்கி உடனேசென்றான். அந்தக் கர்ணனே பரசுராமரையடைந்து தலையால்வணங்கி, "நான் ப்ருகுவம்சத்திற்பிறந்த பிராம்மணன்" என்று பெருமையாகச் சொல்லிக்கொண்டு வந்தனஞ்செய்தான். பரசுராமரானவர் கோத்திரம்முதலியவற்றையெல்லாங்கேட்டு அவனை அங்கீகரித்துக்கொண்டார். நல்வரவுகூறி, "நீ இங்கேயிருக்கலாம்" என்றுசொல்லி மிகவும் அன்புடையவராயிருந்தார். ஸ்வர்க்கத்துக்குஒப்பாகிய அந்தமஹேந்திர பர்வதத்தில் வஸிக்கிறகர்ணனுக்கு, கந்தர்வர்கள், ராக்ஷஸர்கள், யக்ஷர்கள், தேவர்களாகிய இவர்களோடு சேர்க்கையுண்டாயிற்று. அவன் அந்தஇடத்தில் விதிப்படி ப்ருகுச்ரேஷ்டரான பரசுராமரிடமிருந்து பாணத்தையும் அஸ்த்ரத்தையும் அப்யஸித்தான்; தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் மிகப்பிரியனாகவும்இருந்தான். அந்த ஸூதகுமாரனனகர்ணன் ஒருகால் ஸமுத்திரத்தினருகிலுள்ள ஆச்ரமத்திற்குஸமீபத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு தனியே கத்தியும் வில்லும் கையிற்பிடித்து உலாவினான். ஓ! பார்த்தனே! அவன் அக்னிஹோத்திரஞ்செய்துகொண்டிருக்கும் ஒருவேதமோதும்பிராம்மணருடைய ஹோமத்திற்காகஇருந்த பசுவை அறியா

மையால் தற்செயலாகக் கொன்றான். கர்ணன், தான் அறியாமையால் செய்ததையறிந்து பிராம்மணருக்குத் தெரிவித்தான். அவரைக் கோபமில்லாதவராகச் செய்யவேண்டி இந்தவார்த்தையைச் சொல்ல லானான். "ஓ! பகவானே! உம்முடைய இந்தப்பசுவானது முன் னமே தெரியாததால் என்னால் கொல்லப்பட்டது. எனக்கு அனுக் கிரகஞ்செய்யவேண்டும்" என்று மறுபடியும் மறுபடியும் சொன்னான். கோபமுற்ற அந்தப்பிராம்மணர் அந்தக்கர்ணனைப்பார்த்து வார்த்தை யால் மிகவும் அதட்டுகிறவர்போலச் சொன்னார். "கெட்டநடையுடை யவனே! நீ கொலைக்கு யோக்கியன். கெட்டபுத்தியுடையவனே! இதன்பயனையடையப்போகிறாய். பாபி! எப்பொழுதும் எவனோடு பகைகொண்டிருக்கிறாயோ, எவனுக்காக எப்பொழுதும் முயற்சிசெய் கிறாயோ அவனோடு யுத்தஞ்செய்கிறபொழுது உன்னுடைய தேரு ருளையைப் பூமி விழுங்கப்போகிறது. மனிதர்களில் இழிவானவனே! பிறகு சக்கரமானது பூமியால் விழுங்கப்பட்டவுடன் தடுமாறிக்கொண் டிருக்கும் உன்னுடையதலையைச் சத்துருவானவன் ஆக்ரமித்துத் தள் ளப்போகிறான். போ; மூடனே! அஜாக்ரதையாயிருந்த என்னுடைய இந்தப்பசுவானது உன்னால் எப்படிக்கொல்லப்பட்டதோ அப்படியே என்னுடைய வசனத்தினாலேயே அஜாக்ரதையாயிருக்கும்உன்னுடை யதலையை அவன் தள்ளப்போகிறான்" என்று சபித்தார். (அப்படி) சபிக்கப்பட்ட கர்ணன் அந்தப் பிராம்மணச்ரேஷ்டரைப் பசுக்களா லும் பொருள்களாலும் ரத்தினங்களாலும் திருப்திசெய்வித்தான். அவரும் இவனைப்பார்த்துத் திரும்பவும், "இந்தச்சொல்லைப் பிரம்ம லோகத்திலும் சொல்லாததாகச் செய்யமுடியாது. நீபோனாலும் சரி; நின்றாலும் சரி; அல்லது எதுசெய்யவேண்டுமோ அதைச்செய்" என்று சொன்னார். இவ்விதம் பிராம்மணரால் சொல்லப்பட்டகர்ணன் பிறகு சோகத்தால் தலைகுனிந்து மனத்தால் அதையே நினைத்துக் கொண்டு பயமடைந்து பரசுராமரிடம் வந்தான்.

## மூன்றாவது அத்தியாயம்.

### ராஜதர்மம். (தொடர்ச்சி.)

**(பரசுராமர் கர்ணன்துடையில் தலைவைத்துத்தூங்கியதும், அவன் துடையில் கிருமி துளைத்ததும், அவர் அவனைச் சபித்ததும், அவன் தன்னூருக்குத் திரும்பியதும்.)**

கர்ணனுடைய கைவன்மையினாலும் வணக்கத்தாலும் அடக் கத்தாலும் அப்படியே குருவானதமக்குச்செய்த பணிவிடையாலும்

ப்ருகுச்ரேஷ்டரானபரசுராமர் ஸந்தோஷமடைந்தார். பிறகு பெரிய பராக்ரமமும் மிக்கஞானமும் தவமுமுடையவரான அந்தப்பரசுராமர் தவத்தையுடைய அந்தக்கர்ணனுக்குப் பிரம்மாஸ்திரத்தை நிவர்த் தனமந்திரத்துடன் உபதேசித்தார். பிறகு அஸ்த்ரமறிந்தகர்ணன் ப்ருகுவின்ஆச்ரமத்தில் விளையாடிக்கொண்டு ஆச்சரியமானபராக்ரம முடையவனாகித் தனுர்வேதத்தைப்பயிற்சிசெய்துகொண்டிருந்தான். பின்புஒருகாலத்தில் புத்திமானானபரசுராமர் கர்ணனோடுகூடி ஆச்ர மத்தின் அருகில் ஸஞ்சாரஞ்செய்துகொண்டிருந்தார். உபவாஸத்தால் கிலேசமடைந்து வாட்டமுற்றமனத்தையுடைய குருவானஜாமதக் னியர் விசுவாஸத்தினாலுண்டான ஸ்நேகமுள்ளவராக அந்தக்கர் ணனுடையமடியில் தலையைவைத்துக்கொண்டு நித்திரை செய்தார். பிறகு பயங்கரமானதும் பயங்கரமான வடிவமுள்ளதும் ரக்தமாம் ஸங்களை ஆகாரஞ்செய்வதும் சிலேஷ்மவிகாரமுள்ளதுமான ஒரு புழுவானது கர்ணனுடையஸமீபம்வந்தது. பிறகு ரக்தத்தையுண் ணும் அந்தப்புழுவானது அவனுடையதுடையையடைந்து துளைக் கத்தொடங்கிற்று. குருவினிடமுள்ளபயத்தால் கர்ணன் அதைத்தள் ளுவதற்குச் சக்தியற்றவனாயிருந்தான். ஓ! பரதகுலத்திலுதித்தவா சனே! அப்படி அந்தப்புழுவினாற்கடிக்கப்பட்டும் ஸூர்யகுமாரனான அந்தக்கர்ணன் குரு விழித்துக்கொள்ளுதலையெதிர்பார்த்துக்கொ ண்டு அதை உபேக்ஷித்திருந்தான். கர்ணன் ஸஹிக்கமுடியாத அந் தத்துன்பத்தைத் தைரியத்தால் அடக்கிக்கொண்டு அசையாமலும் பயத்தையுண்டுபண்ணாமலும் பார்க்கவரைத் தரித்துக்கொண்டிருந் தான். குருவான அந்தப்பார்க்கவர் ரக்தத்தால் சரீரத்தில் ஸ்பரிசிக் கப்பட்டபொழுது விழித்துக்கொண்டார். பராக்ரமமுடைய பரசு ராமர் கோபமுற்று, 'கஷ்டம்; அசுத்தியையடைந்தவனாகிறேன்; இஃது என்னகார்யம் உன்னாற்செய்யப்பட்டது? பயத்தைவிட்டு என க்கு இதனைஉண்மையாகச்சொல்லு' என்று கர்ணனைக்கேட்டார். கர் ணன் புழுவினால் அப்படிக்கடிக்கப்பட்டதை அவருக்குச்சொன்னான். ராமரும், எட்டுக்காலும் கூர்மையானபல்லுமுடையதும் ஊசிபோன்ற மயிர்களால் எங்கும்நிறைந்ததும் சுருங்கின அவயவமுள்ளதும் அள ர்க்கமென்னும்பெயரால் பிரஸித்தியுள்ளதும் பன்றிபோன்றதுமான அந்தப்புழுவைப்பார்த்தார். ராமரால் பார்க்கப்பட்டவுடன் அந்தப் புழுவானது அந்த உதிரத்திலேயே நனைந்துகொண்டு உயிரைவிட்டது. அஃது ஆச்சரியம்போலாயிற்று. பிறகு ஆகாயத்தில் எல்லாஉருவ முமெடுக்கச் சக்தியுடையவனும், குரூபமான உருவமுடையவனும்,

சிவந்தகழுத்தும் கறுத்த அங்கமுமுடையவனுமான ஒரு ராக்ஷஸன் மேகத்தைவாகனமாகக் கொண்டவனாகிக் காணப்பட்டான். அந்தராக்ஷஸன் கைகூப்பிக்கொண்டு நிறைந்த மனமுடையவனாகிப் பரசுராமரைப்பார்த்து, "ப்ருகுக்களில்சிறந்தவரே! உமக்கு க்ஷேமமுண்டாகட்டும்; நான் வந்தபடியேபோகிறேன். ஓ! முனிச்ரேஷ்டரே! உம்மால் இந்தநரகத்திலிருந்து விடுவிக்கப்பட்டேன். உமக்கு க்ஷேமமும் ஸித்தியுமுண்டாகட்டும்; என்னுடையஇஷ்டம் உம்மால் நிறைவேறியது" என்றுசொன்னான். கைவன்மையுள்ளவரும் பிரதாபமுள்ளவருமான பரசுராமர் அந்தராக்ஷஸனைநோக்கி, "நீ யார்? எங்கிருந்து நரகத்தையடைந்தாய்? அதனைச்சொல்லு" என்றுகேட்டனர். அவன், "ஓ! பிதாவே! முன்கிருதயுகத்தில் ப்ருகுரிஷிக்குச் சிநேகிதனுக்குஒப்பாகத் தம்சனென்னும் பெயரையுடைய பெரியஅஸுரனாக நான்இருந்தேன். அந்தநான் ப்ருகுவுக்கு மிகவும் பிரியமான மனைவியைப் பலாத்காரமாக அபகரித்தேன்; மஹரிஷியான அவருடையசாபத்தால் புழுவாகிப் பூமியில்விழுந்தேன். உமக்குமுந்தியபாட்டனாரான அவர் கோபமுற்று, என்னைநோக்கி, 'ஓ! பாபி! மூத்திரத்தையும் ச்லேஷ்மத்தையும் உண்ணுகிறவனாகி நரகத்தையடையப்போகிறாய்' என்றுசபித்தார். பிறகு அவரைப்பார்த்து, 'ஓ! பிராம்மணரே! சாபத்திற்குமுடிவுவேண்டும்' என்று பிரார்த்தித்துக்கேட்டேன். பின்பு ப்ருகுவானவர், 'ப்ருகுவம்சத்திலுண்டான ராமனிடத்திலிருந்து விமோசனமுண்டாகும்' என்று எனக்குச்சொன்னார். ஓ! ஸாதுவே! நான் க்ஷேமமில்லாதவன் அடைவதுபோல இந்தக்கதியையடைந்து உம்மிடம்சேர்ந்தபிறகு பாபயோனியிலிருந்து விடுபட்டேன்" என்றுசொன்னான். இவ்விதம்சொல்லிப் பரசுராமரைநமஸ்கரித்துப் பெரிய அஸுரன் சென்றான்.

ராமர் கோபத்துடன் கர்ணனைப்பார்த்து, "ஏ! மூடனே! இந்தப்பெரியதுக்கத்தை ஒருபோதும் பிராம்மணன்ஸஹிக்கமாட்டான். க்ஷத்திரியனைப்போல உனக்குத் தைரியமிருக்கிறது. கபடமின்றி ஸத்தியம்சொல்லவேண்டும்" என்றுசொன்னார். உடனே கர்ணன் சாபம்வருமெனப்பயந்து ஸந்தோஷமுள்ளவராகச் செய்யவிரும்பி அவரைநோக்கி, "ஓ! பார்க்கவரே! பிராம்மணருக்கும் க்ஷத்திரியருக்கும் வேறான இடத்தில்பிறந்த [1]ஸூதஜாதியாக என்னையறியும். பூமியில் ஜனங்கள் என்னை ராதையினுடையபிள்ளையான கர்ணனென்று சொல்லுகிறார்கள். ஓ! ப்ருகுவம்சத்திலுண்டான பிராம்மணரே! அஸ்த்

[1] ஆதிபர்வம் முதல்பக்கம் குறிப்பு.

ரத்தில்போரசையடைந்த எனக்கு அனுக்ரஹம்செய்யும். வேதவித்தையைக் கொடுக்கஸமர்த்தரான குருவானவர் பிதாவென்பதில் ஸந்தேஹமில்லை. ஆகையால், உங்களிடத்தில் பார்க்கவனென்று என்னால் கோத்திரம்சொல்லப்பட்டது" என்று சொன்னான். பூமியில்விழுந்தவனும் சோகமுடையவனும் நடுங்குகிறவனும் அஞ்சலிசெய்தவனுமான அந்தக்கர்ணனை ப்ருகுச்ரேஷ்டரானராமர் கோபத்தோடு எரிக்கிறவர்போலப்பார்த்து, "ஏ! மூடனே! அஸ்த்ரத்தில் பேராசையுற்றஉன்னால் இங்கு நான் பொய்யாக உபசரிக்கப்பட்டகாரணத்தினால் இந்தப்பிரம்மாஸ்திரமானது ஸமானமானவனிடத்தில் யுத்தஞ்செய்யும்போது உன்னுடைய வதகாலத்தைத்தவிர மற்றக்காலத்தில் தோன்றுமலிருக்கவேண்டாம். பிராம்மணனல்லாதவனிடத்தில் ஒருகாலத்திலும் பிரம்மாஸ்திரமானது நிலைத்திருக்கமாட்டாது; போ. இப்பொழுது பொய்யனானஉனக்கு இங்கு இடமில்லை. யுத்தத்தில் உன்னோடு ஸமமானக்ஷத்திரியன் பூமியிலிருக்கமாட்டான்" என்றுசொன்னார். இங்ஙனம் பரசுராமரால்சொல்லப்பட்ட அந்தக்கர்ணன் நியாயப்படி நமஸ்காராதிகள் செய்துவிட்டுத் துர்யோதனனையடைந்து, 'அஸ்த்ரங்களைக்கற்றவனாயிருக்கிறேன்' என்றுசொன்னான்.

## நான்காவது அத்த்யாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(துர்யோதனன் ராஜபுரம்சென்று கன்னியைப் பலாத்காரமாகத்தூக்கியதும், அரசர்கள் அவனையெதிர்த்ததும், அவன் கர்ணனுடைய உதவியால் வெற்றியடைந்து அஸ்தினபுரம் சேர்ந்ததும்.)

ஓ! பரதச்ரேஷ்டனே! கர்ணன் இங்ஙனம் பார்க்கவரின்புத்திரரான ராமரிடமிருந்து அஸ்த்ரத்தையடைந்து துர்யோதனனோடு கூடிக் களித்திருந்தான். ஓ! ராஜனே! பிறகு ஒருகாலத்தில் கலிங்கதேசத்தில் சித்திராங்கதராஜாவின் ஸ்வயம்வரத்தில் அரசர்கள் வந்து சேர்ந்தார்கள். ஓ! பாரதனே! அந்தத்தேசத்தில் சோபையையுடையதான ராஜபுரமென்னும்பட்டணத்தில் அங்குள்ளகன்னிகாநிமித்தம் அரசர்கள் நூற்றுக்கணக்காக வந்துசேர்ந்தார்கள். அங்கு எல்லாஅரசர்களும் வந்துசேர்ந்திருப்பதைக் கேள்வியுற்று, துர்யோதனன் கர்ணனுடன்கூடப் பொன்னுருளையுள்ள ரதத்திலேறிச்சென்றான். ஓ! ராஜச்ரேஷ்டனே! பிறகு பலதேசங்களிலுமுள்ள மஹா

ர்தர்களான அரசர்கள் கன்னிகைநிமித்தமாக அந்தஸ்வயம்வரத்தில் வந்துசேர்ந்தார்கள். தக்ஷிணதிக்கையடைந்த சிசுபாலன், ஜராஸந்தன், பீஷ்மகன், வக்கிரன், கபோதரோமா, நீலன், உறுதியானபராக்கிரமமுள்ளருக்மி, ஸ்திரீராஜ்யத்திற்கதிபதியான ஸ்ருகாலனென்னும் மஹாராஜன், விசோகன், சததந்வா, போஜன், வீரன் இவர்களும் மற்றும்அனேகர்களும் அப்படியே கிழக்குவடக்குத்திக்குக்களிலுள்ள மிலேச்சராஜர்களும் ஆரிய அரசர்களும் வந்தார்கள். எல்லாரும் பொன்னாலாகிய தோள்வளையுடையவர்களும் சுத்தமானபொன் போன்ற மேனியுடையவர்களும் பளபளப்பானசரீரமுள்ளவர்களும் புலிகள்போல மிக்கபலமுடையவர்களுமாயிருந்தார்கள். பரதவம்சத்தியஅரசனே! பிறகு அந்தஅரசர்கள் உட்கார்ந்தவுடன் அந்தக் கன்னிகையானவள் செவிலித்தாயுடனும் நபும்ஸகவேலைக்காரர்களுடனும் அந்தமண்டபத்தில்பிரவேசித்தாள். பாரதனே! பிறகு அரசர்களுடையபெயரை அறிவிக்கும்பொழுது உத்தமமான அழகுள்ள அந்தக்கன்னிகையானவள் திருதராஷ்டிரன்புத்திரனை துரியோதனனைத் தாண்டிச்சென்றாள். குருவம்சத்திலுண்டான துரியோதனனோ அவ்விதம்தாண்டிச்சென்றதைப் பொறுக்கவில்லை. மற்ற அரசர்களை நிந்தித்துக்கொண்டு அந்தக்கன்னிகையைத் தடுக்கவும்செய்தான். பீஷ்மரையும் துரோணரையும் அடைந்தஅந்தத்துரியோதனன் வீரியக் கொழுப்பினால் அந்தக்கன்னிகையைத் தேரில்தூக்கிவைத்துக்கொண்டு அரசர்களை யுத்தத்திற்குஅழைத்தான். ஓ! புருஷச்ரேஷ்டனே! ஆயுதம்தரித்தவர்களுள் சிறந்தவனான கர்ணன் தேரிலேறிக் கத்தியையேந்தி உடும்புத்தோலாலாகிய விரலுறையையும்பூண்டு துரியோதனனைப் பின்தொடர்ந்துசென்றான். பிறகு ரதங்களைப்பூட்டுகிறவர்களும் கவசங்களைக்கட்டுகிறவர்களும் போர்செய்யவிருப்பமுள்ளவர்களுமான அரசர்களுடையநெருக்கமானது அதிகமாகஉண்டாயிற்று. அதிககோபமுள்ள அந்தஅரசர்கள் சராமாரிகளைப்பொழிந்துகொண்டு மேகங்கள் இரண்டுமலைகளின்மேற்செல்லுவதுபோலக் கர்ணன் துரியோதனன் இவ்விருவர்களையும் எதிர்த்துஓடினார்கள். ஓடிவரும் அவர்களுடையவில்லுகளையும் சரக்கூட்டங்களையும் கர்ணன் ஒவ்வொரு பாணத்தால் பூமியில்விழும்படிசெய்தான். பிறகு யுத்தம்செய்கிறவர்களுள் ஶ்ரேஷ்டனானகர்ணனவன், சிலரை வில்லற்றவராகவும் சிலரை நிமிர்ந்துநின்றவில்லுடையவராகவும் சிலரைப் பாணத்தையிழந்தவராகவும் சிலரைத் தேர் வேல் கதை இவைகளைவிட்டவர்களாகவும் பலரைஸாரதியற்றவர்களாகவும்செய்து ஜயத்தையுண்டுபண்ணி

அவ்வரசர்களை எளிதில்வென்றான். அந்தஅரசர்கள் மனமுறிந்தவர்களாகித் தாமேகுதிரைகளையோட்டிக்கொண்டு, 'ஓடு, ஓடு' என்று சொல்லிக்கொண்டு யுத்தத்தைவிட்டு விலகிச்சென்றார்கள். அப்பொழுது துர்யோதனன் கர்ணனால்காப்பாற்றப்பட்டு ஸந்தோஷமுடையவனாகிக் கன்னிகையையெடுத்துக்கொண்டு அஸ்தினபுரம்சேர்ந்தான்.

ஐந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



**(ஜராஸந்தன் கர்ணனை யெதிர்த்ததும், கர்ணனுடைய பராக்ரமத்தை மெச்சி அவனோடு ஜராஸந்தன் தோழமைகொண்டதும், கர்ணனுடைய மரணத்துக்குக் காரணங்களும்.)**

யுத்தத்தில் பலத்தைவெளியிட்ட கர்ணனைக்கண்டு மகததேசத்திற்கதிபதியான ஜராஸந்தனென்னும் அரசன் தேரிலேறி யுத்தத்திற்கழைத்தான். யுத்தத்தில் பலஆயுதங்களால் ஒருவர்க்கொருவர் வர்ஷிப்பவர்களும் திவ்யமான அஸ்த்ரங்கள் தெரிந்தவர்களுமான அவ்விருவர்க்கும் பெரியயுத்தமானது உண்டாயிற்று. அதிக பலத்தோடுகூடின அவ்விருவர்களும் பாணம் அற்றவர்களும் வில்லற்றவர்களும் கத்திஒடிந்தவர்களுமானபின் பூமியிலிருந்துகொண்டு கைகளால் கலந்துகொண்டார்கள். ஜரையென்பவளால் சேர்க்கப்பட்ட ஜராஸந்தனது சரீரத்தினுடைய ஸந்தியைக் கர்ணனவன் [1]பாஹுகண்டகமென்று சொல்லப்பட்ட சண்டையினால் பிளந்தான். அந்த அரசன் தன்சரீரத்தினுடைய (பிளப்பாகிய) விகாரத்தைக்கண்டு பகையை நெடுந்தூரம்விலக்கி, 'ஸந்தோஷப்படுகிறேன்' என்று கர்ணனைப்பார்த்துச் சொன்னான். பிறகு அவன் கர்ணனிடம் ஸந்தோஷத்தால் மாலினியென்னும் பட்டணத்தை அவனுக்கு அளித்தான். ஓ! நரச்ரேஷ்ட! சத்துருவை ஜயிக்கும் அந்தக்கர்ணன் அங்கதேசத்தின் அரசனாகஇருந்தான். சத்துருசேனையைத் தொலைப்பவனான அவன் துர்யோதனனுடைய இஷ்டப்படி எல்லாஜாதிகளையும் பாதுகாத்துவந்தான். அப்படியிருந்தது உனக்கும் தெரியும். இங்ஙனம் ஆயுதவலிமையால் அந்தக்கர்ணன் பூமியில் பிரஸித்தனானான். அந்தக்கர்ணன் உன்னுடைய க்ஷேமநிமித்தம் தேவேந்திரனால் கவசத்தையும் குண்டலங்களையும் யாசிக்கப்பட்டவுடன் தேவர்களின்மாயை

---

[1] ஒருமுழங்காலை மிதித்துக்கொண்டு மற்றொருகாலைப் பிடித்துத் தூக்கிக் கிழிப்பது.

யால் மயக்கப்பட்டுத் திவ்யமானவையும் உடன்பிறந்தவையும் மிகவும் பூஜிக்கப்பட்டவையுமான குண்டலங்களையும் உடன்பிறந்தகவசத்தை யும்கொடுத்துவிட்டான்.' குண்டலங்களாலும் உடன்பிறந்த கவசத்தா லும் விடுபட்ட கர்ணன், பிராம்மணருடைய சாபத்தாலும், மஹாத் மாவான பரசுராமருடைய சாபத்தாலும், குந்திக்கு வரம்கொடுத்தத னாலும், இந்திரனுடைய மாயையாலும், ரதிகர்களைக் கணக்கிட்ட காலத்தில் அர்த்தரதனென்றுசொல்லிப் பீஷ்மர்செய்த அவமானத் தாலும், சல்லியன்செய்த தேஜோபங்கத்தாலும், ஸ்ரீ வாசுதேவரின் நீதியாலும், கிருஷ்ணன் பார்த்துக்கொண்டிருக்கையில் யுத்தத்தில் அர்ஜுனனால் அடிக்கப்பட்டான். ருத்திரர், தேவராஜன், யமன், வருணன், குபேரன், துரோணர், மஹாத்மாவான கிருபர் இவர்க ளுடைய திவ்யமான அஸ்த்ரங்களைப் பெற்றுக்கொண்டு காண்டீவ மென்னும் வில்லையுடைய அர்ஜுனனால் ஸூர்யனுக்குப் புத்திரனும் ஸூர்யனுக்குச்சரியான காந்தியுடையவனுமான கர்ணன் யுத்தத் தில் கொல்லப்பட்டான். புருஷச்ரேஷ்டனே! இவ்விதம் பலபேர்க ளால் சபிக்கப்பட்டும் வஞ்சிக்கப்பட்டும் உனதுதமையனான கர்ணன் யுத்தத்தில் முடிவையடைந்தான். நீ துக்கிக்கவேண்டாம்'' என்று சொன்னார்.

## ஆறுவது அதத்யாயம.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(குந்தி தர்மபுத்திரருடைய துக்கத்தைஆற்றியதும், அவர் பெண்க ளுக்கு ஒரு சாபம் கொடுத்ததும், அவர் பந்துமித்திரர்களுடைய மரணத்தைநினைத்து ராஜ்யத்தில் வெறுப்படைந்ததும்.)

தேவரிஷியான நாரதர் இவ்வளவும் சொல்லிவிட்டு மௌன மாகஇருந்தார். ராஜரிஷியான யுதிஷ்டிரரோ சோகத்தால் பீடிக் கப்பட்டவராகிச் சிந்தையை அடைந்தார். சோகத்தால் சூழப்பட்ட சரீரமுடையவளும் துக்கத்தால்கெடுக்கப்பட்ட புத்தியுடையவளு மான குந்தியானவள், தீனமானமனமுடையவரும் சோகப்படுகிற வரும் முகம்குவிந்து ஸர்ப்பம்போலப்பெருமூச்சுவிடுகிறவரும் ஜலம் ததும்பும்கண்களுடையவரும் தீரருமான அந்தத்தர்மபுத்திரரைப்பார் த்து, இனிமையானவார்த்தையுடன் ஸமயத்திற்குத்தக்கபடி அர்த்த முள்ளவார்த்தையைச் சொல்லத்தொடங்கினாள். ''ஓ! மஹாபாஹு

வான யுதிஷ்டிரனே! இந்தக்கர்ணனைக்குறித்து நீசோகப்படுவது நியாயமன்று. மிகுந்த புத்தியுடையனே! சோகத்தைவிட்டுவிடு. என்னுடைய இந்தவார்த்தையையும் கேள்.' தர்மத்தைக்காப்பாற்று கிறவர்களுள் சிறந்தவனான அந்தக்கர்ணன் முன்பு என்னாலும் தகப்பனான ஸூர்யனாலும் உன்னை அறிவிக்கவேண்டியதன்பொருட்டு [1]யாசிக்கப்பட்டான். நன்மையையேவிரும்புகிறவனும் ஸம்பத்தை இச்சிக்கிறவனுமானமனிதனால் ஸ்நேஹிதர்களுக்கு எதுசொல்லத்தக்கதோ அவ்விதம் அவன் ஸ்வப்னாவஸ்தைகளிலும் என்எதிரிலும் ஸூர்யபகவானால் சொல்லப்பட்டான். சினேககாரணங்களாலே முந்தியே இவனை உன்னோடுஒற்றுமையடையும்படி செய்யவாவது ஸமாதானப் படுத்தவாவது ஸூர்யனுக்கும்சக்தியில்லை; எனக்கும்சக்தியில்லை. பிறகு வைரத்தைவெளிப்படுத்துவதில் கருத்துடையவனும் காலத்தால்சூழப்பட்டவனுமான அந்தக்கர்ணன் உங்களுக்கு விரோதம் செய்கிறவனானதால் என்னாலும் உபேக்ஷிக்கப்பட்டான்" என்று சொன்னாள். தர்மபுத்தியுடையவரும் கண்ணீரால் கலக்கப்பட்ட கண்ணையுடையவரும் மிக்கதேஜஸையுடையவருமான தர்மபுத்திரர் தாயாரால் இப்படிச்சொல்லப்பட்டவுடன் சோகத்தால் மிகுதியாகத் துன்பப்படும் கண்ணையுடையவராய், "ரஹஸ்யத்தைமூடிவைத்துக் கொண்டபடியால் உன்னால் அப்பொழுது நாங்கள் மிகவும்வஞ்சிக்கப் பட்டோம்" என்றுசொல்லி மிகவும்துக்கத்தையடைந்து, "எல்லா உலகங்களிலும் இன்றுமுதல் பெண்கள் ரஹஸ்யத்தைவைத்துக்கொள்ளாமலிருக்கட்டும்" என்று சாபமிட்டார். அந்தத்தர்மபுத்திரரானவர் அப்பொழுது பிள்ளைகளையும் பேரர்களையும் ஸம்பந்திகளையும் சினேகிதர்களையும் நினைத்துக்கொண்டு மனநடுங்கிப் புத்திகலங்கினவரானார். பிறகு சோகத்தால்சூழப்பட்ட புத்தியையுடையவரும் தாபத்தால்பீடிக்கப்பட்டவரும் புகையுடன்கூடின அக்கினிபோலிருக்கும் புத்திமானுமான தர்மபுத்திரர் ராஜ்யத்தில் வெறுப்பையடைந்தார்.

[1] 'உடன்பிறந்தவர்களைக் காப்பாற்றவேண்டுமென்று போதிக்கப்பட்டான்' என்பது வேறுபாடம்.

## ஏழாவது அத்தியாயம்.

## ராஜ தர்மம். (தொடர்ச்சி.)



(தர்மபுத்திரர் பந்துநாசத்தைப்பற்றிப் பிரலாபித்து முனியாக வனஞ்செல்வேனென்றது.)

தர்மாத்மாவும்சோகத்தால்கஷ்டப்படும் புத்தியுடையவருமான தர்மபுத்திரரோ மஹாரதனுனகர்ணனைநினைத்துத் துக்கத்தால் தாபத்தையடைந்து வருந்தினர். துக்கத்தாலும் சோகத்தாலும் ஆக்ரமிக்கப்பட்டவரும் அடிக்கடி பெருமூச்சுவிடுகிறவரும் சோகத்தால் வாட்டமடைந்தவருமான தர்மபுத்திரர் அர்ஜுனனைப்பார்த்து இந்த வசனத்தைச் சொல்லத்தொடங்கினர்.

"நாம் விருஷ்ணி அந்தகதேசத்தில் பிக்ஷாடனஞ்செய்துகொண்டிருந்தோமானல் ஞாதிகளில் புருஷர்களில்லாமற்செய்து இந்தக் கெட்டகதியை அடைந்திருக்கமாட்டோம்; குருவம்சத்தார்களுடைய பயன் போயிற்று. நமதுசத்ருக்கள் பூர்ணமானபிரயோஜனமுள்ளவர்களானர்கள். நாமே நம்மைக்கொன்றுகொண்டால் எந்தத்தர்மத்தினுடையபயனையடைவோம்? க்ஷத்திரியர்களுக்கு ஏற்பட்டமுறை நிந்திக்கத்தக்கது. சேனையும் பௌருஷமும் அர்த்தமும் நிந்திக்கத்தக்கவை. அர்த்தமென்னும் காரணத்தால் நாம் இவ்விதரூபத்தையடைந்தோம். வனத்தில்ஸஞ்சரிப்பவர்களுக்குப் பொறுமை, அடக்கம், சுத்தி, பகையின்மை, மாற்சரியமில்லாமை, ஹிம்ஸையில்லாமை, ஸத்தியவசனம் இவைகள் எப்பொழுதும் இருக்கவேண்டியதர்மங்கள். இவை மிகவும்நல்லவை. நாமோ லோபத்தாலும் அவிவேகத்தாலும் கர்வத்தையும் அகங்காரத்தையும் அடைந்து அரசாட்சியிலுள்ள கஷ்டத்தையனுபவிக்கவிரும்பி இந்த அவஸ்தையையடைந்தோம். பூமியில் போகத்தைவிரும்பியநம்மையும் கொல்லப்பட்ட பந்துக்களையும்பார்த்தால் மூவுலகத்திலுமுள்ள அரசாட்சியாலும்ஒருவனும் புகழமாட்டான். அப்படிப்பட்டநாம் பூமியினிமித்தம் கொல்லத்தகாதவர்களைக்கொன்று பந்துக்களையிழந்தும் பொருளையிழந்தும் பூமியில் ஜீவித்திருக்கிறோம். போகத்தில்விருப்பங்கொண்டநமக்கு நாய்களுக்குநேர்வதுபோல (பந்துவதரூபமான) அசுபகாரியம் ஸம்பவித்தது. ஆனல், அவைகள் தமக்குரியபோகத்தையடைகின்றன. போகத்தைவிரும்புகிறவர்களாகியநமக்கோ போகமும்நஷ்டமாயிற்று. கொல்லப்பட்டவர்களாகிய இந்தஜனங்கள் இந்தப்பூமிமுழுமைக்கு

மாகவும் இழக்கத்தக்கவர்களல்லர்; ஸுவர்ணக்குவியல்களுக்காகவும் எல்லாயானைகுதிரைகளுக்குமாகவும் இழக்கத்தக்கவர்களல்லர். ஆசையாலும் சோகத்தாலும் மூடப்பட்டவர்களும் கோபத்தோடும் அஸூயையோடுங்கூடினவர்களுமான அவர்கள் மிருத்தியுவென்னும்வாகனத்தில்ஏறிக்கொண்டு யமனுடைய கிருஹம்போய்ச்சேர்ந்தார்கள். பலவிதமான க்ஷேமத்தைவிரும்புகிறவர்களான தந்தைகள் தவத்தாலும் ப்ரம்மசரியத்தாலும் பெரியோர்களைவணங்குவதனாலும் பொறுமையாலும் பிள்ளைகளை அடைய முயலுகிறார்கள். தாய்களோ அப்படியே உபவாஸங்களாலும் தெய்வவழிபாடுகளாலும் விரதங்களாலும் உத்ஸவங்களாலும் (மற்றுமுள்ள) சுபகாரியங்களாலும் கர்ப்பங்களை அடைகிறார்கள்; அவைகளைப் பத்துமாஸம் சுமக்கின்றார்கள். 'க்ஷேமமாகப் பிரஸவித்து, பிறந்தவைகள்ஜீவித்துமிருந்து, ஜீவிப்பவர்கள் கௌரவமுள்ளவர்களும் பலமுள்ளவர்களுமானால், நமக்கு இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் ஸுகத்தைச் செய்வார்கள்' என்று தீனர்களாய்ப் பிரயோஜனத்தைக் காரணமாகக்கொண்டு பிரார்த்திக்கிறார்கள். அவர்களுடைய இந்தப் பிரயத்னமானது மிகவும் பயனற்றதாக முடிந்தது. மெருகிட்ட குண்டலங்களையணிந்த யௌவனமுடையவர்களான இவர்களுடைய பிள்ளைகள் இவ்விதம் கொல்லப்பட்டார்கள். பூமியிலுள்ளபோகங்களை அனுபவியாமலும் பித்ருக்கள் தேவர்கள் இவர்களுடையகடனைத் தீர்க்காமலும் யமனுடைய வீடுசென்றார்கள். அம்மா! இவர்களுடைய தாய்தந்தைகள் பிறந்தகுழந்தைவடிவமுடைய இவர்கள்விஷயத்தில் எப்பொழுது ஜாதகர்மத்தைச் செய்தார்களோ அப்பொழுதே இந்தஅரசர்கள் கொல்லப்பட்டவர்களானார்கள். ஆசையும் தீனத்தனமுமுடையவர்களும் கோபம் அஸூயை இவைகளுடன்கூடினவர்களுமானவர்கள் எவ்விடத்திலும் எக்காலத்திலும் ஜயத்தின்பயனைச் சிறிதேனும் அனுபவிக்கப்போகிறதில்லை. பாஞ்சாலர்கள், கௌரவர்கள் இவர்களுள் எவர்கள் கொல்லப்பட்டார்களோ அவர்கள் கொல்லப்பட்டவர்கள்தாம்; எவ்விதபோகமும் அற்றவர்கள்தாம். நாமும் ஆசையின்பயனையடைந்தவர்களில்லை. அவர்களும் அப்படித்தான். நம்மாலும் ஜயிக்கப்படவில்லை; அவர்களாலுமில்லை. இந்தப்பூமியானது அவர்களால் அனுபவிக்கப்படவில்லை; ஸ்திரீகளும் பாட்டும் வாத்தியமும் அனுபவிக்கப்படவில்லை; மந்திரிகள், ஸ்நேஹிதர்கள் இவர்களின் வார்த்தையும் கேட்கப்படவில்லை; கற்றோர்களின் வார்த்தையும் கேட்கப்படவில்லை; உயர்ந்த ரத்தினங்களும் அடையப்பட

வில்லை; பூமியும் அடையப்படவில்லை; பொருள்வருவாயுமில்லை; நமது கர்மங்களால் தர்மம்தவறாமலிருந்து அடையக்கூடிய இவ்வுலகங்களையும் அடையவில்லை; நினைத்துப்பார்த்தால் திருதராஷ்டிரரின்புத்திரர்களால் அவமதிக்கப்பட்ட நாமே இவ்வுலகத்தின்நாசத்திற்குக் காரணமாகிறோம். குற்றஞ்செய்யாத நம்மிடங்களில் அந்தத்துர்யோதனன் எப்பொழுதும் அவமதிக்கும்புத்தியுடையவனும்பகையுள்ளவனும் த்வேஷத்தையே ஜீவனமாயுடையவனும் பொய்நடக்கையுடையவனுமாயிருந்தான்; நம்மிடத்திலுள்ள பெருமையைக்கண்டு அவன் நிறம்மாறியும் வெளுத்தும் இளைத்துமிருந்தான். (இதைப்பற்றி) திருதராஷ்டிரராஜாவும் சகுனியால் தெரிவிக்கப்பட்டார். தகப்பனாரான திருதராஷ்டிரரும் பிள்ளையிடத்திலுள்ள ஆசையினால் பிதாவான பீஷ்மரையும் அப்படியே விதுரரையும்கேளாமல் கெட்டநடையுள்ள அவனுக்கு இணங்கினார். இந்தராஜாவான திருதராஷ்டிரரும், அசக்தனும் லோபமுள்ளவனும் காமத்திற்கு ஈடுபட்டவனுமான பிள்ளையையடக்காமல் ஸந்தேஹமின்றி நாம் எப்படியோ அப்படியே போய்விட்டார். எப்பொழுதும் நம்மிடத்தில் பகைமையால் தபிக்கப்பட்டவனும் பாபபுத்தியுள்ளவனுமான துர்யோதனன் பிரகாசிக்கும் புகழைவிட்டுவிலகி உடன்பிறந்தார்களைக் கொல்வித்து (இந்தத்திருதராஷ்டிரரும் காந்தாரியுமாகிய) முதியோர்களையும் சோகத்தில் வீழ்த்திவிட்டுத் தானும்சென்றான். சண்டைசெய்யவேண்டுமென்று விருப்பமுள்ள இவன் கிருஷ்ணனுடைய ஸந்நிதானத்தில் எவ்விதமான வார்த்தையைச்சொன்னானோ அவ்வசனத்தை நல்லகுலத்தில் பிறந்தும் பந்துவாயுமுள்ள எந்தமனிதன் ஸ்நேஹிதனிடம் பேசுவான்? தேஜஸினாலே எல்லாத்திக்குக்களையும் கொளுத்துகிறவர்கள் போலப் பிரகாசிக்கும் நாம் [1]நம்முடையதோஷத்தால் மிகப் பலவருஷங்களுக்கு நாசமடைந்தோம். கெட்டபுத்தியுள்ள நம்முடைய அந்தப் பகைமையென்னும் புருஷன் உறுதியான கட்டுள்ளவனானான். துர்யோதனன் நிமித்தமாக நம்முடைய இந்தக்குலமானது விசேஷமாய் நசிக்கும்படி செய்யப்பட்டது. கொல்லத்தகாதவர்களைக் கொலைசெய்து உலகத்தில் நிந்திக்கக்கூடிய ஸ்திதியை அடைந்திருக்கிறோம். கெட்டபுத்தியுடையவனும் இந்தக்குலத்தின் நாசத்திற்குக் காரணனும் பாபபுருஷனுமான துர்யோதனனைத் திருதராஷ்டிரராஜாவானவர் ராஜ்யத்திற்கு அதிபதியாகச்செய்துவிட்டு, இப்பொழுது துக்கப்படுகிறார். சூரர்கள் கொல்லப்பட்டார்கள். பாபம் செய்யப்

[1] துரியோதனனைக்குறித்து இங்ஙனம் சொல்லியது.

பட்டது. இந்தத்தேசம் அழிக்கப்பட்டது. கொன்றபிறகு நமக்குக் கோபம் போயிற்று. இந்தச்சோகமானது என்னைப்பிளக்கிறது; அர்ஜுனா! செய்தபாபமானது [1]உபகாரத்தால் போக்கப்படுகிறது. வெளியிட்டுச் சொல்வதினாலாவது பச்சாத்தாபத்தாலாவது தானத்தினாலாவது தவத்தினாலாவது விரக்தியினாலாவது புண்ணியதீர்த்தங்களுக்குச் செல்லுவதினாலாவது சுருதிஸ்மிருதிகளை ஜபிப்பதனாலாவது விலக்கப்படுகிறது. தியாகமுள்ளவன் மறுபடியும் பாபத்தைச் செய்யமாட்டானென்றும் ஜனனமரணங்களை அடையமாட்டானென்றும் வேதம் உபதேசிக்கிற காரணத்தினால் [2]தியாகமென்னும் வழியையடைந்தவன் ஞானத்தையடைந்து அப்பொழுதே பிரம்மமாகிறான். ஓ! சத்துருக்களைத் தபிக்கச்செய்யும் அர்ஜுனா! அந்தநான் உங்கள்யாவரையும் கேட்டுக்கொண்டு (ஸுகதுக்கம் மானாவமானம் முதலிய) இரட்டைகளிலிருந்தும் விலகி ஜ்ஞானத்தோடுகூடினவனாகி முனியாகக் காடுபோய்ச் சேருகிறேன். கிருஹஸ்தாச்ரமமுள்ளவனால் எல்லாத்தர்மங்களையும் அடையமுடியாதென்று வேதம்சொல்லுகிறது. ஏ! சத்துருக்களைக் கொல்லும் அர்ஜுனா! அஃது எனக்குப்பிரத்தியக்ஷம். என்னால் செய்யப்பட்டது பாபந்தான். கிருஹஸ்தாச்ரமத்தை விரும்பும் மனிதனால் ஜனனமரணத்திற்குக்காரணமான தர்மந்தான் அடையக்கூடுமென்று வேதஞ்சொல்லுகிறது. ஆகையால், அந்தநான் கிருஹஸ்தாச்ரமத்தையும் எல்லாராஜ்யத்தையும் ஸுகங்களையும்விட்டு, விடுபட்டவனும் சோகமில்லாதவனும் ஓரிடத்திலும் பற்றில்லாதவனுமாகப் போய்ச்சேருகிறேன். ஏ! குருவம்சத்தில் பிறந்தவனே! ராஜ்யத்தினாலாவது போகங்களாலாவது எனக்குப் பிரயோஜனமில்லை. சத்துருக்களில்லாமலிருக்கிற இந்தப்பூமியை க்ஷேமமாய் நீங்கள் ஆளுங்கள்" என்றுசொன்னார். குருச்ரேஷ்டரான தர்மபுத்ரர் இவ்வளவு வார்த்தையைச்சொல்லிவிட்டு ஓய்வடைந்தார். பிறகு இளையவனான பார்த்தன் மறுமொழிசொல்லத் தொடங்கினான்.

---

## எட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன், இல்லறவொழுக்கத்தின் சிறப்பையெடுத்துக்காட்டி அசுவமேதம் செய்யும்படி தருமபுத்திரருக்குவற்புறுத்திக் கூறியது.)

பிறகு, உறுதியானசொல்லும் பராக்ரமமுமுடையவனும் க்ரூரமான பராக்ரமமுள்ளவனும் இந்திரகுமாரனும் மிக்க தேஜஸுள்ள

---

[1] மூலத்தில் 'கல்யாணேந' என்றிருக்கிறது.
[2] 'யோகமார்க்கத்தையடைந்தவன்' என்பது பழையவுரை.

வனுமான அர்ஜுனன், நிந்திக்கப்பட்ட பொறாமைக்காரன்போலத் தன்னைக் குரூபனாகக் காண்பித்துக்கொண்டும் கடைவாயை நக்கிக் கொண்டும் புன்சிரிப்புடன் மிக்கசீர்த்தியுள்ள இந்தவாக்கியத்தைச்சொல் லத்தொடங்கினான் :—"மனிதர்கள் செய்யமுடியாத காரியத்தைச் செய்துவிட்டு உயர்ந்ததான ஸம்பத்தை விடுகிறீரே. இந்தத்துக்க மும் ஆச்சர்யம்; பிரயாஸமும் ஆச்சர்யம்; இவ்வளவு அதிகமானபய மும் ஆச்சர்யம். சத்துருக்களைக்கொன்ற உமது தர்மத்தால் கிடை த்த பூமியையடைந்தும் எப்படிவிடுகிறீர்? இது புத்திக்குறைவன் றோ? பயப்படுகிறவனுக்கு ராஜ்யமேது? சோம்பலுடையவனுக்கும் ராஜ்யமேது? கோபத்தால் விவேகமற்றவராய் அரசர்களை என்னகார ணத்துக்காகக் கொன்றீர்? எந்தமனிதன் ஸுகமற்றவனும் ஒன்று மில்லாதவனும் எல்லாஉலகத்திலும் பிரஸித்தியில்லாதவனும் பிள்ளை களும் பசுக்களுமில்லாதவனுமாயிருக்கிறானோ அவன் பிச்சையெடு த்து ஜீவிக்கவிரும்புவான். அவன் முயற்சியால் எவனுடைய பொருள் களையும் அடைய விரும்பமாட்டான். நிறைந்தராஜ்யத்தைத் தள்ளி விட்டு மிகவும் இகழ்ச்சியான ஓட்டெடுக்கும் விருத்தியை அடைந்து பிழைக்கும் உம்முடையவிஷயத்தில் இவ்வுலகம் என்னசொல்லும்? ஓ! பிரபுவே! எல்லாமுயற்சிகளையும் தள்ளிவிட்டு க்ஷேமமற்றவராக வும் ஒன்றுமில்லாதவராகவும் அவிவேகிபோல என்னகாரணத்தால் பிச்சையெடுக்க விரும்புகிறீர்? ராஜகுலத்திற்பிறந்து பூமிமுழுமை யும் ஜயித்தபிறகு அறம்பொருள்களெல்லாவற்றையும் விட்டு என்ன மூடத்தனத்தால் காட்டுக்குப் புறப்படுகிறீர்? நீர் இல்லாமல்போன தால் தீயவர்கள் இந்தஹவிஸுகளைக் கெடுப்பார்களானால் அந்தப் பாபம் உம்மைத்தான் அடையும். ஒன்றுமில்லாமலிருப்பது முனிக ளுடைய தருமமாகும். பொருளில்லாத காலத்தில் கொடுமையான காரியத்தைச் செய்துவிட்டு, 'பொருளில்லாமை நிந்திக்கத்தக்கது' என்று நகுஷன்சொன்னான். [1]ஆச்வஸ்தன்ய விருத்தியானது ரிஷிக ளுக்குமாத்திரம் கூறப்படுகிறது. அதனை நீர் அறிவீர். தர்மமென்று பிரஸித்தமாய் எதைச்சொல்லுகிறார்களோ அது பொருளால் நடை பெறுகின்றது. எவனுடையபொருளை எவன் அபகரிக்கிறானோ அவ னுடையதர்மத்தை அவன் அபகரிக்கிறான். ஓ! அரசனே! பொரு ளானது அபகரிக்கப்படும்பொழுது நாம் எதைப் பொறுக்கமுடியும்? ஜனங்கள், பக்கத்திலிருக்கும் தரித்திரனைத் தோஷமுள்ளவனைப் போலப் பார்க்கிறார்கள். உலகத்தில் பொருளில்லாமை பாதகம்.

---

1 அடுத்தநாளைக்கு ஒன்றுமில்லாமலிருத்தல்.

அதைக் கொண்டாடத்தக்கவன் எவன்? ஓ! வேந்தரே! பதிதன் துக்கிக்கப்படுகிறான். பொருளில்லாதவனும் துக்கிக்கப்படுகிறான். பதிதனுக்கும் பொருளில்லாதவனுக்கும் வேறுபாட்டை நான் அறியவில்லை. ஆங்காங்கிருந்து சேர்க்கப்பட்டவையும் மிகுதியாகப் பெருகியவையுமான பொருள்களிலிருந்துதாம், மலைகளிலிருந்து நதிகள் பிரவிருத்திப்பதுபோல, எல்லாக்கார்யங்களும் பிரவிருத்திக்கின்றன. ஓ! நரச்ரேஷ்டரே! அர்த்தத்திலிருந்து தர்மமும் காமமும் ஸ்வர்க்கமும் ஸித்திக்கின்றன. உலகத்தின் பிராணயாத்திரையும் பொருளில்லாமல் சித்திபெறாது. அர்த்தத்திலிருந்துவிலகின அல்பபுத்தியுள்ள மனிதனுக்கு எல்லாக்காரியங்களும் கோடைக்காலத்திய சிறுநதிகள் போல அற்றுவிடும். எவனுக்குப் பொருளிருக்கிறதோ அவனுக்கு ஸ்நேஹிதர்களுண்டு; எவனுக்குப்பொருளிருக்கிறதோ அவனுக்குப் பந்துக்களுண்டு; எவனுக்குப் பொருளிருக்கிறதோ அவனே உலகத்தில் புருஷன்; எவனுக்குப்பொருளிருக்கிறதோ அவனே வித்துவான். பொருளாசையுடையவனுக்குப் பொருளின்றிப் பொருள் ஸம்பாதிக்கமுடியாது. யானைகளால் பெரியயானைகள் கட்டப்படுவது போலப் பொருள்களால் பொருள்கள் கட்டப்படுகின்றன. ஓ! நராதிபரே! தர்மம், காமம், ஸ்வர்க்கம், ஸந்தோஷம், கோபம், கல்வி, அடக்கம்ஆகியஇவைகளெல்லாம் அர்த்தத்திலிருந்து உண்டாகின்றன. ஓ! புருஷர்களுள்உத்தமரே! தனத்தால் குலமானது பெருமையுள்ளதாகிறது; தனத்தால் தர்மம்வளருகிறது. பொருளில்லாதவனுக்கு இவ்வுலகமுமில்லை; பரலோகமுமில்லை. பொருளில்லாதவன் தர்மகாரியங்களை உள்ளபடிசெய்யமுடியாது. மலையிலிருந்து நதியானதுபெருகுவதுபோலத் தனத்திலிருந்துதான் தர்மம்பெருகுகிறது. ஓ! அரசரே! எந்தமனிதனுக்குப் பொருளும் பசுக்களும் வேலைக்காரர்களும்அதிதிகளும் குறைந்திருக்கிறார்களோ அவன்தான் இளைத்தவனென்பதுபிரஸித்தம். சரீரமிளைத்தவன் இளைத்தவனல்லன். ஓ! ராஜரே! நியாயத்தைப்பாரும் தேவர்களும் அஸுரர்களும் எப்படியிருக்கிறார்களென்பதைப் பாரும். தேவதைகள், ஞாதிகளின்வதத்தால் பொருளையன்றி வேறெதைவிரும்புகிறார்கள். அயலானுடைய பொருள் அபகரிக்கத்தகாததாயிருந்தால் எப்படித் தர்மத்தைச்செய்யமுடியும்? ஸூக்ஷ்மதரிசிகளால் வேதங்களிலிருந்து இவைகள்தாம் நிச்சயம்செய்யப்பட்டன. அவை:—

'எப்போதும்வேதம்ஓதவேண்டும். எப்போதும் தெரிந்தவனாக இருக்கவேண்டும்; எல்லாவிதத்தாலும் பொருள்ஸம்பாதிக்கவேண்

டும்; பிரயத்தனத்துடன் யாகமுஞ்செய்யவேண்டும்' என்பன. ஸ்வர்க்கத்திலுள்ள பதவிகள்யாவும் ஞாதிகளைத் துரோகம்செய்தலாலேயே அடையப்பட்டன. எந்தக்காரணத்தால் தேவர்கள் தம்இஷ்டஸித்தியை விரும்புகிறார்களோ அது ஞாதிகளின் துரோகமல்லாமல் வேறுயாது? இங்ஙனம் தேவர்களின் நிச்சயமிருப்பதுடன் வேதவாதங்களும் சாசுவதமாயிருக்கின்றன. அத்யயனம் யாகம் இவைகளைச் செய்யவும் செய்விக்கவும் செய்கிறார்கள். உலகத்திலுள்ள பொருள்கள்யாவும் பிறரிடமிருந்து பெற்றவைதாம். அதுதான் நற்கதிக்கும் காரணம். பிறருக்கு அபகாரமில்லாததான எவ்விதப்பொருளையும் எவ்விடத்திலும் நாம்காணோம். இவ்விதமாகவேதான் அரசர்கள் இப்பூமியை ஆளுகிறார்கள். அவர்கள் ஜயித்தபிறகு பிள்ளைகள் தகப்பனுடைய பொருளைச் சொல்வதுபோல, 'இந்து என்னுடையது' என்றுசொல்லுகிறார்கள். அந்தராஜரிஷிகளும் ஸ்வர்க்கத்துக்குரியவர்கள்தாம். இவர்களுடையதர்மமானது உயர்ந்ததாகவும் சொல்லப்படுகிறது. எப்படி நிறைந்தகடலிலிருந்து ஜலமானது பத்துத்திக்குக்களிலும் பெருகுகிறதோ அப்படியே ராஜகுலத்திலிருந்து பொருளானது பூமியில்புறப்படுகிறது. இந்தப் பூமியானது திலீபனுடையதாயிருந்தது; நிருகனுடையதாயிருந்தது; நஹுஷனுடையதாயிருந்தது; அம்பரீஷனுடையதாயிருந்தது; மாந்தாதாவினுடையதாயிருந்தது; அதுவே உம்மிடத்திலுமிருக்கிறது. பலவிதமான தக்ஷிணையுள்ளதும் திரவ்யரூபமுள்ளதுமான இந்தயாகம் உம்மை நன்றாய்அடைந்திருக்கிறது. ஓ! வேந்தரே! அதை நீர்செய்யாவிட்டால் அரசுஎன்று சொல்லப்படுகிற பாபத்தை அடைந்தவராகிறீர். எவர்களுடையஅரசன் தக்ஷிணையுடன் அசுவமேதமென்னும்யாகத்தைச் செய்கிறானோ அவர்களெல்லாரும் அவனுடைய அவபிருதத்தில் பரிசுத்தர்களாகிறார்கள். விசுவரூபியான மஹாதேவர் ஸர்வமேதமென்னும் பெரியயாகத்தில் எல்லாப்பிராணிகளையும் அழைத்தார். அப்படியே தம்மையும் தாமே அழைத்துக்கொண்டார். இது சாசுவதமானக்ஷேமமார்க்கம். இதற்குஅழிவில்லையென்றுகேட்டிருக்கிறோம். ஓ! ராஜரே! [1] மஹாஜனங்கள் சென்றவழியேசெல்லும்; குமார்க்கத்தை அடையவேண்டாம்" என்றுசொன்னான்.

---

[1] 'தாசரதஃ பந்தா' என்று பாடங்கொண்டு, 'பசுவென்று, யஜமானனும் பத்நியும் இருவர், வேதங்கள் மூன்று, ரித்துவிக்குக்கள் நால்வர் ஆகப்பத்து ஸாதனங்களால் நடைபெறும்யாகம்' என்று பொருள்கூறுவது பழைய உரை.

## ஒன்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(தர்மபுத்திரர் ஸந்யாஸத்தில் தமக்கிருக்கும் உறுதியையும் அதன் தன்மையையும் உலகஇயல்புகளையும் கூறியது.)

தர்மபுத்திரர், அர்ஜுனனைப்பார்த்து, "மனத்தையும் செவியையும் [1]அந்தராத்மாவில் அடக்கிக்கொண்டு முதலில்ஒருமுகூர்த்தம் ஒருவழிப்பட்ட மனமுடையவனாகஇரு. பிறகு கேட்டால் என்வார்த்தையானது உனக்குப் பிரியமாயிருக்கும். விஷயஸுகங்களைத்தள்ளிவிட்டுப் [2]பெரியோர்களின் கூட்டத்தால் அடையத்தருந்தவழியை அடையப்போகிறேன். உனக்காக மறுபடியும் அந்தஅரசாட்சியை ஒருபோதும் அடையமாட்டேன். க்ஷேமத்திற்குக் காரணமும் ஒருவனாயிருந்து அடையக்கூடியதுமானவழி எதுவோ இருக்கிறதென்று என்னைக்கேள். அல்லது கேட்கவிருப்பமில்லாததனால் நீ (வலியக்) கேளாமலிருந்தாலும் என்னுடைய வசனத்தைக்கேள். விஷயஸுகங்களின் நடையைத்தள்ளிவிட்டுப் பெரியதவத்தைச் செய்கிறவனும், கனிகிழங்குகளைப்புசிப்பவனும், காலந்தவறாமல் அக்கினியைத்திருப்தி அடைவிப்பவனும், இரண்டுகாலங்கள் ஸ்நானம்செய்கிறவனும், சரீரமிளைத்தவனும், அளவுபட்டஆகாரமுடையவனும், தோல் மாவுரி சடை இவைகளைத்தரித்தவனும், குளிர் காற்று வெயில்களைப்பொறுப்பவனும், பசி தாகம் சிரமங்களைப்பொறுப்பவனும், சாஸ்திரத்தில் கூறியதவத்தால் சரீரத்தைவாட்டுகிறவனும், மனத்துக்கும்செவிக்கும்இனிமையான காட்டிலுள்ளமிருகம் பறவைஇவைகளின் பலவிதமானசந்தோஷசப்தங்களை எப்போதும்கேட்கிறவனும், மலர்ந்தமரம் கொடி இவைகளுடைய அழகானவாஸனைகளைமோக்கிறவனும், பல உருவங்களுடையனவும் அழகுள்ளனவும் காட்டிலுள்ளனவுமான பிராணிகளைப்பார்க்கிறவனுமாக அரண்யத்தில் மிருகங்களோடு ஸஞ்சரிக்கப்போகிறேன். நதிக்கரையில்வஸிக்கும் வானப்ரஸ்தஜனங்களைத் தரிசனஞ்செய்வதன்றி அவர்களுக்கு அப்ரியத்தைச்செய்யப் போகிறதில்லை. கிராமத்தில் வஸிப்பவர்கள்விஷயத்தில் அப்ரியஞ் செய்வதில்லையென்பது சொல்லவேண்டுமோ? ரஹஸ்யத்தில்யோகாப்பியாஸமுள்ளவனும் தியானம்பண்ணுகிறவனும் [3]பாகமானதும் பாக

1 'வேறு விஷயத்தில் மனத்தைச்செல்லவிடாமல்' என்பது கருத்து.
2 ஸாதுக்கள்என்று வேறுபாடம். 3 கனிவர்க்கங்கள்.

மாகாததுமான பதார்த்தத்தால் ஜீவிக்கிறவனும், பித்ருக்களையும் தேவர்களையும் காட்டிலுண்டானவஸ்துவாலும் [1]வாக்குக்களாலும் ஜலங்களாலும் திருப்திசெய்கிறவனும், இவ்வளவுகடுமையும் இதிலும் அதிகக்கடுமையுமாகிய ஆரண்யவாஸிகளுக்குள்ள சாஸ்திரங்களின் விதியை அநுஷ்டிப்பவனுமாயிருந்து இந்தச்சரீரத்தினுடைய முடிவை எதிர்பார்க்கப்போகிறேன். அல்லது நான் தனியே ஒவ்வொரு மரத்தடியிலும் ஒவ்வொருநாள் பிக்ஷைசெய்துகொண்டு முண்டனஞ்செய்துகொண்ட ஸந்நியாஸியாகிச் சரீரத்தை நசிக்கச்செய்யப்போகிறேன். புழுதிகளால் மூடப்பட்டவனும், சூன்யமானஇடத்தை ஆச்ரயிப்பவனும், மரத்தடியை வீடாகக்கொண்டவனும், எல்லாவற்றிலும் வேண்டுதல்வேண்டாமையை விட்டவனும், சோகமற்றவனும், ஸந்தோஷமற்றவனும், ஆத்மாவின் இகழ்ச்சிபுகழ்ச்சிகளை ஸமமாகக்கொண்டவனும், ஆசையும் மமதையுமற்றவனும், ஸுகதுக்கம்முதலிய [2]த்வந்துவங்களிலிருந்து விலகியவனும், [3]பரிக்ரஹமற்றவனாக இருந்துகொண்டு ஆத்மாவிலேயே க்ரீடிப்பவனும், தெளிந்தபுத்தியுடையவனும், ஜடன், குருடன், செவிடன்போன்ற ஆகிருதியுள்ளவனும், பிறரோடு எந்தச்சமயத்திலும் எவ்வித ஸல்லாபத்தையும் செய்யாதவனும், நடப்பதும் நடவாததுமான [4]நான்குவிதமாயுள்ள எல்லாப்பிராணிகளுக்கும் துன்பஞ்செய்யாதவனும், தம்முடையதர்மத்திலிருப்பவர்களும் இந்திரியங்களைப் போஷிப்பவர்களுமான பிரஜைகளைக்குறித்து ஸமபுத்தியுள்ளவனும், எதையும் பரிஹஸியாதவனும், எந்தவிஷயத்தைப்பற்றியும் புருவத்தின் [5]கோணல்களைச் செய்யாதவனும், எப்பொழுதும் தெளிந்தமுகமுடையவனும், எல்லா இந்திரியங்களையும் நன்றாகக்கட்டினவனும், எவனுடையவழியையும் வினவாதவனும், எவனோடும் சேராதவனும், குறிப்பிட்டு ஒருதேசத்திலும் ஒருதிக்கிலும்செல்ல விரும்பாதவனும், போவதில் விருப்பமற்றவனும், திரும்பிப்பாராதவனும், உண்மையுள்ளவனும், தியானத்துடன்போகிறவனும், [6]ஸ்திரீஉருவத்தை விலக்குகிறவனுமாக ஸஞ்

1 வேதமந்திரங்கள். 2 இரட்டைகள்.

3 மனைவி; உலகவாழ்க்கைக்குரிய மற்றைப்பொருள்களுமாம்.

4 ஜராயுஜம் ஸ்வேதஜம் அண்டஜம் எனஜங்கமங்கள் மூன்றும் உத்பிஜ்ஜம் எனஸ்தாவரம்ஒன்றும் ஆகநான்குவகை.

5 கோபமடையாதவன் என்பது கருத்து.

6 'த்ரஸஸ்தாவரவர்ஜக:' என்று பாடங்கொண்டு, 'பயமுள்ளஸூக்ஷ்ம சரீரத்திலும் இவ்வுலகத்திலேயேயிருக்கும் ஸ்தூலசரீரத்திலும் அபிமானத்தைவிட்டவன்' என்பது பழையவுரை.

சரிக்கப்போகிறேன் (முன்செய்தகர்மத்தின் வாஸனையென்னும்) ஸ்வபாவம் முந்திச்செல்லுகிறது. உணவுகளும் கிடைக்கின்றன. ஆனால், விரோதிகளான அந்த த்வந்துவங்கள்யாவற்றையும் சிந்தியாதவனும், புஜிக்கத்தக்கது கொஞ்சமானாலும் ருசியுள்ளதானாலும் ஒருசமயம் முதல்இடத்தில் கிடைக்காவிட்டால் வேறுஇடங்களில் கிடைத்ததைச் சாப்பிடுகிறவனும், கிடைக்காவிட்டால் ஏழுஇடங்களில் பூர்த்திசெய்துகொண்டும் புகையில்லாததும் உலக்கைவைக்கப்பட்டதும் நெருப்புஅவிந்ததும் ஜனங்கள் சாப்பிட்டானதும் பாத்திரங்களின் ஸஞ்சாரம்நின்றதும் பிச்சைக்காரர்கள் நின்றுபோனதுமான காலத்தில் இரண்டு அல்லது மூன்று அல்லதுஐந்துவீடுகளில் ஒருகாலம் பிக்ஷைசெய்கிறவனுமாயிருந்துகொண்டு ஸ்நேஹமென்னும்பாசத்தை நீக்கிவிட்டு நான் இந்தப்பூமியில் ஸஞ்சரிக்கப் போகிறேன். கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் ஒரேவிதமாகப்பார்க்கிறவனும், பெரியதவமுடையவனும், ஜீவிக்கவேண்டுமென்றாவது மரிக்கவேண்டுமென்றாவது ஆசையுள்ளவன்போல ஒன்றும்செய்யாதவனும், ஜீவனத்தையும் மரணத்தையும் ஸந்தோஷியாதவனும், பகையாதவனும், வாய்ச்சியால் ஒருகையைவெட்டுகிறவனும்சந்தனத்தால்ஒருகையை அபிஷேகஞ்செய்கிறவனுமான இருவருக்கும் தீங்கையும் நன்மையையும் நினையாதவனும், ஜீவிப்பவன்க்ஷேமத்திற்காகச் செய்யத்தக்க காரியங்கள்எவைகளோ அவைகள்யாவற்றையும் தள்ளிவிட்டுக் கண்ணிமைத்தல்முதலியவைகளில் மாத்திரம் இருப்பவனும், அவைகளிலும் எப்பொழுதும் பற்றில்லாதவனும், எல்லாக்கருவிகளின்தொழிலையும் விட்டவனும், மனத்தின்ஸங்கல்பத்தைப் போனவழிவிடாதவனும், புத்தியின் அழுக்குக்களை நன்றாய்ச்சுத்தம்பண்ணினவனும், எல்லாஸம்பந்தங்களிலிருந்தும் விடுபட்டவனும், எல்லாவலையையும் தாண்டினவனும், ஒருவனுடைய வசத்திலுமில்லாதவனும், வாயுவுக்குச்சமானமான தன்மையுடையவனும், ஆசைகளற்றவனுமாக இவ்விதம் ஸஞ்சரித்துக்கொண்டு மனத்திற்குவேண்டிய ஸந்தோஷத்தை அடையப்போகிறேன். அறிவின்மையாலுண்டான ஆசையினாலன்றோ பெரியபாபத்தைச் செய்தவனாகிறேன்? சிலமனிதர்கள் க்ஷேமமுள்ளனவும் க்ஷேமமில்லாதனவும் புண்ணியபாபங்கலந்தனவுமான கர்மங்களைச்செய்து (தம்காரியத்திற்கு அவர்கள்காரணமாகவும் அவர்கள்காரியத்திற்குத் தாம்காரணமாகவும்) காரியகாரண ஸம்பந்தத்திலுள்ளஜனங்களைப் போஷிக்கிறார்கள். ஒருவன் ஆயுள்முடிவில் பிராணன்நசித்துப்போன இத்தச்சரீரத்தைவிட்டு அந்தப்பாபத்தைப் புசி

க்க எடுத்துக்கொள்ளுகிறான். ஏனெனில், அந்தக்கர்மத்தின்பயனானது செய்தவனுக்கன்றோ? இப்படி வண்டியின்உருளைபோலச் சுற்றிக்கொண்டிருக்கும் இந்தஸம்ஸாரமென்னும் சக்கரத்தில் இந்தப் பிராணிஸமூஹமானது காரியநிமித்தமாகப் பிராணிஸமூஹத்துடன் சேருகிறது. பிறப்பு இறப்பு கிழத்தனம் வியாதி வேதனைஇவைகளால்பீடிக்கப்பட்டதும், கரையில்லாதகடல்போன்றதும், நிலையில்லாததுமான ஸம்ஸாரத்தை விடுகிறவனுக்கு ஸுகம் உண்டு. ஸ்வர்க்கத்திலிருந்து தேவர்கள்விழுகின்றதையும் மஹரிஷிகளும் தம்பதவியை இழந்துநசிப்பதையும் இதன்உண்மையான காரணத்தையும் அறிந்த எந்தமனிதன்தான் பிறப்பிலாசையுடையவனாயிருப்பான்? சிற்றின்பத்தில் ஆசைவைத்தகாரணத்தால் பற்பல லக்ஷணமுள்ளதும் பலவகைப்பட்டதுமான கார்யங்களைச்செய்தன்றோ அற்பர்களான அரசர்களால் ஓர் அரசன்கொல்லப்படுகிறான்? ஆகையால், இந்த அறிவென்னும் அமிர்தமானது நெடுநாளாக என்னை அடைந்திருக்கிறது. அதை அடைந்து குறைவற்றதும் எப்பொழுதும் நிலைத்ததும் ஓரேவிதமுமான ஸ்தானத்தை நான் பிரார்த்திக்கிறேன். இவ்விதமான தைரியத்தோடு எப்பொழுதும் ஸஞ்சரித்துப் பயமில்லாதவழியை அடைந்து ஜனனம், மரணம், ஜரை, வியாதி, வேதனை இவைகளால் பீடிக்கப்பட்டசரீரத்தை முடிவுபெறச்செய்யப்போகிறேன்" என்று சொன்னார்.

## பத்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீமஸேனன், க்ஷத்திரியனுக்கு ஸந்யாஸம்கூடாதென்பதையெடுத்துக் காட்டி, கர்மாவேசெய்யத்தக்கதென்று வற்புறுத்திக்கூறியது.)

பீமஸேனன், "ஓ! அரசரே! மந்தனும் அறிவற்றவனுமான வேதமோதுகிறவனுடைய [1]குருட்டுப்பாடத்தால் அடிபட்டபுத்தி போல உம்முடைய இந்தப்புத்தியானது உண்மையானவிஷயத்தைத் தெரிந்துகொள்ளவில்லை. பரதச்ரேஷ்டரே! சோம்பேறித்தனத்தில் புத்திசென்றவராயும் (அதுகொண்டு) ராஜதர்மங்களில் அஸூயையுள்ளவராயுமிருக்கிற உமக்குத் திருதராஷ்டிரர்பிள்ளைகளைக் கொன்றதில் என்னபயன்? க்ஷத்திரியர்களுக்குரியவழியில்நடக்கும் எவனுக்கும், பந்துவாயிருந்தாலும் உமக்கிருப்பதுபோலப் பொறுமையும்

---

1 மூலத்தில், 'அநுவாக:' என்றிருக்கிறது.

தையும் பரிதாபமும் தாக்ஷிண்யமும் இவ்விதம் இராது. நாங்கள் இவ்விதமான உம்முடைய இந்தப்புத்தியைத் தெரிந்துகொண்டிருந்தோமானால், ஆயுதத்தை எடுக்கவேமாட்டோம்; ஒருவரையும் கொல்லவுமாட்டோம்; சரீரத்தை விடுங்காலம்வரை பிக்ஷாடனத்தையே செய்வோம். அரசர்களுக்குப் பயங்கரமான இந்தச்சண்டையும் நடந்திராது. அறிந்தவர்கள் இவ்வுலகெல்லாம் [1]வலிமையுள்ளவனுக்கு அன்னமென்றறிகிறார்கள். ஸ்தாவரஜங்கமமெல்லாம் பலவானுடைய போக்கியவஸ்துக்களாகும். க்ஷத்திரியதர்மந்தெரிந்த பெரியோர்கள், 'ராஜ்யத்தை அடைகிறவனுக்கு எவர்கள்விரோதிகளோ அவர்கள் கொல்லத்தக்கவர்கள்' என்று அறிவிக்கிறார்கள். ஓ! யுதிஷ்டிரரே! நம்முடைய அன்னத்துக்குவிரோதிகளும் அதனால் தோஷமுள்ளவர்களுமான அந்தத் துர்யோதனாதியர்கள் நம்மால்கொல்லப்பட்டார்கள். அவர்களைத் தர்மப்படி கொன்றநீர் இந்தப்பூமியை அனுபவிக்கவேண்டும். ஒருமனிதன் கிணற்றைத்தோண்டி ஜலத்தையடையாமையோடு சேற்றால் பூசப்பட்டவனாகவும் திரும்புவதுபோலவே நம்முடைய இந்தக்கார்யமுமாகிறது. பெரியமரத்திலேறி அங்கிருந்து தேனைக்கொண்டுவந்து அதைப்புசியாமல் மரணமடைவது எப்படியோ அப்படியே இந்த நம்முடையகாரியமுமிருக்கிறது. ஆகையால், ஒருமனிதன் பெரியவழியில்சென்று அவனேஆசை நிறைவேறாமல் திரும்புவது எங்ஙனமோ அங்ஙனமே இந்தநம்முடைய கார்யமும்ஆயிற்று. குருநந்தனரே! ஒரு புருஷன் சத்துருக்களைக் கொலைசெய்துவிட்டுப் பிறகு தன்னையும் கொலைசெய்துகொள்வதுஎப்படியோ அப்படியே நமதுகாரியமுமிருக்கிறது. பசியுள்ளவன் அன்னத்தையடைந்தும் எக்காரணத்தாலாவது அதைப்புசியாமலிருப்பதும் ஆசையுள்ளவன் இஷ்டமானஸ்திரீயையடைந்தும்அவளை அனுபவியாமலிருப்பதும் எவ்விதமோ அவ்விதமே நம்முடையகாரியமுமிருக்கிறது. ஓ! பாரதராஜாவே! மந்தபுத்தியானஉம்மைத் தமையனென்று பின்தொடரும்நாங்கள்தாம் இந்தவிஷயத்தில் நிந்திக்கத்தக்கவர்கள். கைவன்மையுள்ளவர்களும் கல்விகற்றவர்களும் பெரியமனமுடையவர்களுமான நாங்கள் சக்தியற்றவர்கள்போல ஆண்மையற்ற உம்முடையவார்த்தையில் கட்டுப்பட்டிருக்கிறோம். கதியற்றவர்களையும்பாதுகாக்கும்நாமே பொருள்நஷ்டமுள்ளவர்களானால் ஜனங்கள் பொருளடைவதில் எவ்விதம் ஆலோசிக்கமாட்டார்கள்? இதை எவ்விதமென்று பாரும். கிழத்தனத்தால் மிகவும்சூழப்பட்டவனும்

---

1 'ப்ராணஸ்ய' என்பது மூலம்.

சத்துருக்களால் பிடிக்கப்பட்டவனும் ஆபத்துச் சமயத்திலன்றோ ஸந்யாஸமானது செய்யத்தக்கதென்று கூறப்படுகிறது? ஆகையால் கற்றறிந்தவர்கள் க்ஷத்திரியர்விஷயத்தில் ஸந்யாஸத்தைப் புகழ்கிறதில்லை. ஸூக்ஷ்மமறிந்தவர்கள் ஸந்யாஸத்தைத் தர்மத்தவறுதலாகவே கருதுகிறார்கள். க்ஷத்திரியஜாதியில்பிறந்து அதிலிருந்துகொண்டு அதனையேஆச்ரயித்து அந்த க்ஷத்திரியஜாதியின்தர்மத்தையே நிந்தித்துப்பேசுதல் எங்ஙனம்கூடும்? அந்தத்தர்மத்தைக்கற்பித்ததெய்வத்தையே ஏன்நிந்திக்கக்கூடாது? (ஸந்யாஸமென்பது) வேதம்தெரியாதவர்களும் பொருளில்லாதவர்களுமான நாஸ்திகர்களால் அனுஷ்டிக்கப்பட்டது. அது வேதத்தின் [1]அர்த்தவாதத்தால் வெளியானது. அந்தது உண்மைபோலத்தோற்றுமேயன்றிப் பொய்தான். ஸந்யாஸத்தையடைந்து தன்னைத்தானே சுமக்கிறமனிதன் பொய்யான தர்மத்தையடைந்து மரிக்கிறவனேதவிர ஜீவிக்கமுடியாது. புத்ரபௌத்ரர்கள் தேவர்கள் ரிஷிகள் அதிதிகள் பிதிருக்கள் இவர்களைத் திருப்திசெய்யாமல் தனியாயிருந்து காடுகளில் ஸுகமாகஜீவிக்கமுடியுமானால் இவ்விதமிருக்கிறமிருகங்கள் ஸ்வர்க்கத்தை ஜயிக்கவில்லையே? பன்றிகள் ஜயிக்கவில்லையே? பறவைகள்ஜயிக்கவில்லையே? தனிமையாயிருக்கிறஜனங்களும் (பசுபக்ஷிகளுக்கில்லாததான) வேறுவிதத்தால் தங்களுக்குப் பெருமையைக்கூறவில்லையே? அரசனாயிருக்குமொருவன் ஸந்யாஸத்தால் ஸித்திபெறுவானாகில் மலைகளும் மரங்களும் சீக்கிரம் ஸித்தியடையக்கூடும். இவைகள் ஸ்திரீஸங்கமில்லாதவைகளாயும் உலகவாழ்க்கைக்குரிய ஒருபொருளுமில்லாதவைகளாயும் உபத்திரவமற்றவைகளாயும் நித்யஸந்யாஸிகளாயும் காணப்படுகின்றனவே? ஆகையால், தமக்குரிய அதிருஷ்டங்களால் பிராணிகள் ஸித்திபெறவேண்டும். பிறருடையகர்மத்தால் ஸித்திபெற முடியாது. ஆனதால், கர்மத்தையே செய்யவேண்டும். கர்மத்தை விட்டவனுக்கு ஸித்திகிடைப்பதில்லை. (கர்மத்தைவிட்டு ஆத்மாவொன்றையே ரக்ஷிக்கவேண்டுமென்றிருப்பவர்க்கு ஸித்திகிடைக்குமானால்) ஜலத்திலிருக்கும் மீன்முதலியவைகளும்ஸ்தாவரங்களுமான ஜந்துக்களும் ஸித்தியடையலாம். அவைகளுக்கு ஆத்மாஒன்றே ரக்ஷிக்கத்தக்கது. வேறு ஒன்றுமில்லையே? உலகம் எங்ஙனமிருக்கிறதென்று பாரும். பிராணிகள் தம்தம்கர்மாக்களால் வியாபரிக்கப்பட்டனவாயிருக்கின்றன. ஆகையால், கர்மமேசெய்யத்தக்கது. கர்மத்தைவிட்டவனுக்கு ஸித்திகிடைப்பதில்லை" என்றுசொன்னான்.

[1] விதிநிஷேதங்களை வற்புறுத்துவதற்காக மிகுத்துக்கூறுவது.

பதினோராவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன், தர்மபுத்திரரைப்பார்த்துக் கர்மமார்க்கமே சிறந்த தென்றுகூறி, ஒருபக்ஷிக்கும் ரிஷிகளுக்கும் நடந்தஸம்வாதத் தைத் திருஷ்டாந்தமாகச் சொல்லியது.)

அர்ஜுனன், "ஓ! பரதச்ரேஷ்டரே! (கர்மம்பெரிதா ஸந்யாஸம்பெரிதா என்கிற) இந்தவிஷயத்திலேயே இந்திரனுக்கும் ரிஷிகளுக்கும்நடந்த ஸம்வாத ரூபமான பழைய இவ்விதிஹாஸத்தை (பெரியோர்கள்) உதாகரிக்கிறார்கள். நல்லகுலத்தில்பிறந்தவர்களும் ஸம்பத்துடையவர்களும் தர்மஞ்செய்யத்தக்கவர்களுமான சிலபிராம் மணர்கள் புத்திக்குறைவால் மீசையுண்டாகாதபருவத்திலேயே ஸந் யாஸம் நல்லதர்மமென்றும் அதனால் காடுகளில் ஸுகமாகஜீவிக்க முடியுமென்றுமெண்ணி உடன்பிறந்தவர்களையும் தாய்தந்தைகளையும் வீடுகளையும்விட்டுக் காடுநோக்கிச்சென்றார்கள். அவர்கள் விஷயத்தில் இந்திரனுக்குத் தயையுண்டாயிற்று. அந்த இந்திரன் பொன்னுருவமுள்ள பறவைவேஷம்பூண்டு அந்தப்பிராம்மணர்களை நோக்கி "ஓமம்செய்து மிச்சமான 'விகஸம்' என்னும் அன்னத்தைப் புஜிக்கும் மனிதர்கள் செய்யும்புண்ணியம் மற்றவர்களால்செய்ய இயலாது. அவர்களுடையகர்மம் புண்ணியமானது. ஜீவனமும் மிகவுயர்ந்தது. அவர்கள் இஷ்டஸித்தியடைகிறவர்கள். கர்மத்தை முக்கியமாகக் கொண்டவர்கள்தாம் உயர்ந்தகதியடைவார்கள்" என்று சொன்னான்.

அந்தரிஷிகள், (விகஸாசி-என்றபதத்திற்கு, அன்னமில்லாதகாய் கிழங்கு சருகுமுதலியவற்றைப் புஜிப்பவர்களென்று பொருள்கொண்டு,) "ஆச்சர்யம்! ஸந்தோஷம்! இந்தப்பக்ஷியானது விகஸத்தைப் புஜிப்பவர்களைப் புகழ்கிறது. இது நம்மையே அறிவிக்கிறது; ஸந்தேகமில்லை. நாம் விகஸத்தைப்புஜிப்பவர்கள்" எனப்பேசிக்கொண்டார்கள். பக்ஷி, "அழுக்கடைந்தவர்களும் தோஷமுள்ளவர்களும் எச்சிலைபுஜிப்பவர்களும மூடர்களுமான உங்களை நான் புக விகஸத்தைப்புஜிப்பவர்கள் வேறு" என்றுசொல்லிற்று. ரிஷிகள், "நாங்கள் இது மிகவும்நல்லவழியென்று நினைத்திருந்தோம். ஓ! பக்ஷியே! உன்னை நாங்கள் நம்புகிறோம். எங்களுக்கு நல்லவழியைச் சொல்லு" என்று கேட்டார்கள். பக்ஷி, "நீங்கள், [1](உள்ளொன்றும்

---

[1] மூலத்தில், 'ஆத்மாநம் ஆத்மநாவிபஜ்ய' என்றிருக்கிறது. 'ச்ரத்தை யுள்ள சொல்லுகிற ஆத்மாவேறுஎன்றும் சந்தேகிக்கிறவனை மனனஞ்செய்

புறமொன்றுமாக) உங்களை இரண்டுவிதமாகச்செய்துகொண்டு என்னைப்பற்றிச் சங்கியாமலிருப்பீர்களானால் உங்களுக்கு உண்மையும் ஹிதமுமானவசனத்தை நான் சொல்லுகிறேன்" என்றது. ரிஷிகள், "ஓ! தர்மபுத்தியுள்ள பக்ஷியே! அப்பா! உனக்கு வழிகள் தெரிந்திருக்கின்றன. உன்வார்த்தையைக் கேட்கிறோம். உன்னுடைய கட்டளைப்படியே இருக்கவிரும்புகிறோம். எங்களைக் கற்பிக்கவேண்டும்" என்றார்கள்.

பக்ஷி சொல்லத்தொடங்கிற்று:-"நாற்கால் பிராணிகளுள் பசு சிறந்தது. உலோகங்களுள் தங்கம்சிறந்தது. சப்தங்களுள் வேதம்சிறந்தது. இரண்டுகால்பிராணிகளுள் பிராம்மணன்சிறந்தவன். பிராம்மணனுக்கு ஜனனமுதல் மரணம்வரையில் காலத்துக்குத்தக்கபடி ஜாதகர்மமுதல் ச்மசானத்தில்செய்கிற முடிவானகார்யம் வரையிலுள்ளவையெல்லாம் வேதத்தால் விதிக்கப்பட்டன. பிராம்மணனுக்கு வேதத்தில்விதித்தகர்மங்கள் ஸ்வர்க்கத்தையடையத்தக்க எல்லாவழிகளிலும் மேலானவழி. கர்மங்கள்யாவும் மந்த்ரஸித்தங்களென்று வேதவாக்கியங்கள் உறுதியாகக்கூறுகின்றன. அப்படியே இந்தக் கர்மமார்க்கத்தில் [1]பக்ஷதேவதைகள், மாஸதேவதைகள், ருதுதேவதைகள்முதலிய தேவதைகளைமுன்னிட்டுச் சந்திரமண்டலமென்ற பிதிருலோகபதவி, ஸூர்யமண்டலமென்ற தேவலோகபதவி, ஸம்ஸாரத்தைத்தாண்டுவிக்கும் பரமாத்துமபதவியென்னும் மூன்றுவித ஸித்திகளடையப்படுகின்றன. பிராணிகள் கர்மத்தையேயனுபவிக்கின்றன. கர்மவழியைவிரும்புகிறவர்களுக்கு இந்தக்கர்மமானது எல்லாச்சித்தியுமடையக்கூடிய புண்ணியமான இடமாகும். இந்தக்கர்மவழிதான் பெரிய ஆச்ரமம். இப்பெரியகர்மவழியை இகழ்ந்து எந்த மனிதர்கள் வேறுகீழானவழியை அடைகிறார்களோ மூடர்களும் பொருளிழந்தவர்களுமான அவர்களுக்குப் பாபந்தான்உண்டாகும். (கீழ்ச்சொன்ன கர்மவழியைவிட்டு) நிலைபெற்றதான தேவபதவி,

கிற ஆத்மாவேறென்றும் ஆத்மாவிலேயே விஷமமான இரண்டுபோகஞ்செய்து' என்பது பழையவுரை. 'நீங்கள் தூர்த்தர்களாயில்லாமலிருந்தால்' என்று அதற்குக் கருத்தும் அதுவே கூறுகிறது.

1 கர்மவழியிற்செல்லும்சிலர், கிருஷ்ணபக்ஷதேவதைகள், சிராவணம்முதலிய ஆறுமாஸங்களுக்கதிபதிகளாகியதேவதைகள், வருஷருதுமுதலிய ருதுதேவதைகள், தக்ஷிணாயனதேவதை இவர்களால் சந்திரமண்டலத்திலிருக்கும் பிதிருலோகத்திற்குச் சேர்ப்பிக்கப்படுகிறார்கள்; தேவதைகளின் உபாஸ்தியுடன்சேர்த்துக் கர்மத்தைச்செய்தவர்கள் சுக்லபக்ஷம்முதலிய தேவதைகளால் ஸூர்யமண்டலத்திலிருக்கும் தேவலோகம் சேர்ப்பிக்கப்படுகிறார்கள்; ஞானத்தையடைந்தவர்கள் பரமாத்துமாவையடைகிறார்களென்பதுகருத்து.

பிதிருபதவி, பிரம்மபதவியென்னும் ஸ்திதிகளை இழந்திருக்கிற வர்கள் மூடர்களாவார்கள். அவர்கள் அக்காரணத்தால் (நாய் நரி புல்பூண்டுமுதலிய பிறப்புக்குரிய) அசுத்தமானவழிகளையடைகிறார் கள். கொடுக்கிறேனென்று வேதவாக்கியத்தால் விதிக்கப்பட்ட இந் தக்கர்மவழியானது உபாஸனத்தோடுசேர்ந்து உங்களுக்கு இருக்க வேண்டும்; ஆகையால், அந்தக்கர்மவழியிலிருப்பவர்தாம் தவமுடை யவனென்பது வேதத்தில் சொல்லப்படுகிறது. நிலைபெற்றதான தேவ காரியம், பிதிருகாரியம், ப்ரம்மத்தின்காரியம் இவைகளையும் குருவின் கார்யத்தையும் பகுத்தறிந்துசெய்யும் அந்தக்கர்மந்தான் செய்தற் கரியதவமென்று சொல்லப்படுகிறது. செயற்கரியகர்மத்தைச் செய்து தான் தேவர்கள் உயர்ந்தஸம்பத்தையடைந்தார்கள். ஆகையால், செய்யமுடியாத கிருஹஸ்தாச்ரமதர்மத்தை நீங்கள் வஹிக்கவேண்டு மென்று உங்களுக்குப்போதிக்கிறேன். பிராஜைகளுக்கு இந்தக்கர்மந் தான் மூலமாகும். ஆகையால், அஃது உயர்ந்தது; ஸந்தேகமில்லை. குடும்பவிதிமுறைப்படி இந்தக்கர்மத்தில் எல்லாம் நிலைபெற்றிருக் கின்றன. த்வந்துவங்களைவிட்டவர்களும் மாற்சரியமில்லாதவர்களு மான பிராம்மணர்கள், இந்தக்கிருஹஸ்ததர்மத்தைத் தவமென்று அறிகிறார்கள். உலகங்களில் வனத்தின்நடுவில் செய்யும்தவமானது இதற்கு அடுத்தபடியென்றே சொல்லப்படுகிறது. விகஸாசிகளா யிருப்பவர்கள் பிறர்களால் ஆக்கிரமிக்கமுடியாத பதவியையடைகிறார் கள். தம்குடும்பத்தில் காலைமாலையிரண்டுபோதும் விதிப்படி அன் னத்தைப்பங்கிட்டு அதிதிகள், தேவர்கள், பிதிருக்கள், உறவினர்க ளென்னும் இவர்களுக்குக்கொடுத்து மிச்சத்தைப்புசிப்பவர்கள் விக ஸாசிகளென்று சொல்லப்படுகிறார்கள். ஆகையால், தமக்குரியகர்ம மார்க்கத்திலிருந்து நல்லநியமமுடையவர்கள் உண்மையுரைப்பவர்க ளும் உலகத்திற்குக்குருக்களுமாகிச் சந்தேகமற்றவர்களாயிருக்கிறார் கள். செய்தற்கரிய கர்மமார்க்கத்தைச்செய்யும் ஜனங்கள் மூன்றாவ தான இந்திரனுடைய உலகத்தையடைந்து ஸ்வர்க்கலோகத்தில் மாத்ஸர்யமற்றவர்களாய் நீடித்தகாலம் வாஸஞ்செய்கிறார்கள்" என்று சொல்லிற்று. அறமும்பொருளுமடங்கிய ஹிதமான அந்தவார்த்தை யைக்கேட்டபிறகு அவர்கள் நாஸ்திகபுத்தியைவிட்டுக் கிருஹஸ்ததர் மத்தையடைந்தார்கள். எல்லாமறிந்த புருஷச்ரேஷ்டரே! ஆகையால் நீரும் உறுதியானதைரியத்திலிருந்துகொண்டு விரோதிகளற்ற இந் தப்பூமிமுழுமையும் ஆளக்கடவீர்" என்றுசொன்னான்.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(நகுலன், கர்மாவேசெய்யத்தக்கதென்பதையும் இல்லறத்தின்சிறப்பையும் ஸந்யாஸத்திலுள்ள சிரமத்தையும் தர்மபுத்திரருக்குக் கூறியது.)

அர்ஜுனனுடைய வார்த்தையைக் கேட்டபிறகு, எல்லாத்தர்மங்களையும் காப்பாற்றுகிறவர்களுள் சிறந்தராஜாவான தர்மபுத்திரரைநோக்கி, சிறந்தபுத்தியையும் விசாலமான மார்பையும் பெரிய கையையும் சிவந்தமுகத்தையுமுடையவனும் சுருக்கமாகப் பேசுகிறவனுமானநகுலன், தமையனான அர்ஜுனனுடைய சித்தத்தையனுஸரித்துப் பேசத்தொடங்கினான். "ஓ! மஹாராஜாவே! விசாகயூபமென்னும் க்ஷேத்திரத்தில் எல்லாத் தேவர்களாலும் கட்டப்பட்ட யாகாக்னியின் இடங்களானவை (இன்னுமிருக்கின்றன.) ஆகையால் தேவர்கள் கர்மத்தின்பயனிலிருக்கிறார்களென்று தெரிந்துகொள்ளும். ஆஸ்திகபுத்தியில்லாத பிராணிகளுக்குக்கூட (மழையின்வழியாக) அன்னத்தைக்கொடுக்கும் தந்தைகளாகியதேவர்களும் கர்மத்தையேசெய்கிறார்கள். ஓ! ராஜாவே! விதியின்பெருமையைப்பாரும். வேதத்தை விட்டவர்களும் அர்ஜுனனால் உதாகரிக்கப்பட்டவர்களுமான அந்தப்பிராம்மணர்களை மிகவும்நாஸ்திகர்களாக அறிந்துகொள்ளும். ஓ! பாரதரே! பிராம்மணன் வேதத்தில் சொல்லியகர்மத்தைத் தள்ளிவிட்டு மற்றையெல்லாக்கர்மங்களாலும் தேவயானமென்னும் வழியாய் ஸ்வர்க்கத்தின்மேலெல்லையான பிரம்மலோகத்தையடையமாட்டான். வேதங்களின்நிச்சயம் தெரிந்தவர்களும் சாஸ்திரங்களை நன்றாகக்கற்றவர்களுமான பிராம்மணர்கள், இந்தக்கிருஹஸ்தாச்ரமமானது எல்லா ஆச்ரமங்களிலும் உயர்ந்ததென்று சொல்லுகிறார்கள். அவர்களிடமிருந்து நீர் அறிந்துகொள்ளும். ஓ! மஹாராஜாவே! தர்மத்தால் அடையப்பட்ட பொருள்களை உத்தமமானயாகங்களில் தானஞ்செய்யும் மனிதன்தான் மனத்தைஜயித்தவன். அந்தமனிதன்தான் (ஸாத்விகமான) தியாகமுள்ளவன். ஓ! மஹாராஜரே! கிருஹஸ்ததர்மத்திலுள்ள ஸுகபோகங்களைப்பாராமல் அப்படியே (அரண்யத்தில்) உயர்ந்தநிஷ்டையை அடைபவனாகிச் சரீரத்தைவிடுகிறவன் எவனோ அவன் [1]தாமஸமனத்தியாகியாவான். வீடற்றவனும் பிச்சைக்கு ஸஞ்சரிப்பவனும் மரத்தினடியை இடமாகக்கொண்டவனும் மன

[1] வேறுபாடம் கொள்ளப்பட்டது.

னஞ்செய்பவனும் எப்பொழுதும் யோகமுள்ளவனும் [1]பிறரையாசியா தவனுமாயிருப்பவன் எவனோ அவன் ஸன்யாஸத்திற்குத்தக்க பிராம் மணஜாதியிலுள்ள தியாகியாவான். கோபத்தையும் ஸந்தோஷத்தை யும் தள்ளிவிட்டு விசேஷமாகப் பிறர் தூஷணத்தையும்விலக்கி எந்தப் பிராம்மணன் வேதம்ஓதுகிறானோ அவன் குருவைப்பூசிக்கும் தியாகி யாவான். ஓ! ராஜரே! கற்றறிந்தவர்கள் எல்லா ஆச்ரமங்களையும் தராசில்தூக்கிப்பார்த்து மூன்று ஆச்ரமங்களும் ஒருபக்கமும் கிரு ஹஸ்தாச்ரமமொன்றும் ஒருபக்கமுமென்று சொல்லுகிறார்கள். ஓ! பார்த்தரே! காமமும் ஸ்வர்க்கமும் ஸமமாயிருப்பதைக்கண்டு உலக நடைதெரிந்த மஹரிஷிகளுக்கு இந்தக்கிருஹஸ்தாச்ரமமே நல்வழி யென்றும் நற்கதியென்றும் இவ்விதம் எவன்தெரிந்துகொள்ளுகிறா னோ அவன் தியாகியாவான். ஓ! பாரதச்ரேஷ்டரே! ஒருவன் வீடு களைவிட்டுக் காடுசென்றபிறகு மூடனைப்போல ஒருஸமயத்தில் போக ங்களைநினைப்பானாகில், அவன் தர்மத்வேஷம்பூண்டவனாகிறான். இவனை மிருத்யுவானவன் தன்கயிற்றால் கழுத்தில் கட்டியிழுப்பான். ஓ! மஹாராஜரே! ஆசையைவைத்துக்கொண்டு செய்யப்படும் கருமம் பயனற்றதென்று சொல்லப்படுகிறது. ஆசையைவிட்டுச்செய்யும் கர்ம மெல்லாம் பெரியபயனுடையவையாகும். [2]சமம், [3]தமம் தைர்யம், உண்மை, சுத்தி, நேராயிருப்பது, யாகம், உற்சாகம், தர்மம் ஆகிய இவை ரிஷிகளுக்குவேண்டிய நித்தியமானவிதியென்று கூறப்படுகின் றன. இந்தக்கிருஹஸ்தாச்ரமத்தில் பிதிருக்கள், தேவர்கள், அதிதி கள்என்னும் இவர்களுக்கென்ற எண்ணத்துடன் செய்யும் முயற்சி சிலாகிக்கப்படுகிறது. ஓ! மஹாராஜரே! கிருஹஸ்ததர்மமென்னும் இவ்வழியிலேயே அறம் பொருள் இன்பமென்னும் இம்மூவகைப்பய னும் தவறாமலுண்டு. அபிமானத்தைவிட்டுப் பிராம்மணர்களாலனுஷ் டிக்கப்பட்ட இவ்விதிப்படிமுயலுகிறவனுக்கு எவ்விடத்திலும் நாசம் உண்டாகிறதில்லை. தர்மாத்மாவும் தோஷமற்றவருமான பிரம்ம தேவர், 'பலவிதமான தக்ஷிணையுள்ள யாகங்களால் நம்மைஆராதிப் பார்கள்' என்றன்றோ பிராணிகளைச்சிருஷ்டித்தார்? யாகத்திற்கா கவே கொடிகளையும் செடிகளையும் மரங்களையும் அப்படியேபரிசுத்த மானபசுக்களையும் ஹவிஸுகளையும் ஸ்ருஷ்டித்தார். அந்தயாகமென் னும்கர்மமானது கிருஹஸ்தாச்ரமமுள்ளவன்தான் செய்யத்தக்கது. ஆகையால், கிருஹஸ்ததர்மமொன்றுதான் அடையவும் செய்யவும்

---

1 'அபாசக:' என்றும்பாடமுண்டு.
2 இந்திரியங்களின் அடக்கம். 3 சரீரத்தின் அடக்கம்.

அரிதானது. அப்படிப்பட்ட கிருஹஸ்தாச்ரமத்தையடைந்து பசுவையும் தனதான்யங்களையும்பெற்று எவர்கள் யாகம்செய்யவில்லையோ அவர்களிடத்தில் பாபமானது நிலைபெற்றிருக்கும். சிலரிஷிகள் வேதாத்தியயனமென்னும் யாகத்தையே செய்கிறார்கள். மற்றுஞ்சிலர் ஞானமென்னும் யாகஞ்செய்கிறார்கள். வேறுசிலர் மனத்திலேயே யோகமென்னும் பெரியயாகத்தைச் செய்கிறார்கள். ஓ! மஹாராஜரே! கற்றோர்களால் எனக்கு வேறொன்று சொல்லப்பட்டது. அதாவது:—இவ்வுலகம் உண்டாவதற்குமுன் பூமி, அப்பு, தேயு, வாயு, ஸூர்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள், திக்குகள், காலம், சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் இவையொன்றுமில்லை. இவைகளை அறிவிக்கத்தக்க பிரத்யக்ஷம், அநுமானம், உபமானம், ஆகமம், அர்த்தாபத்தி, ஐதிஹ்யம் என்னும் பிரமாணங்களும் உதாஹரணமும் இல்லை. எவ்விடத்தும் ஸந்தேஹமும் நிச்சயமுமில்லை. தர்மமும் அதர்மமுமில்லை. தேவர், மனிதர், ஸ்தாவரம், ஜங்கமம், ஜாதி, ஆச்ரமம், இவைகளின்பிரிவுகள், வேலைசெய்பவர், பொருள், காமம், வேறு ஸம்பத்து, அதன்பயன் இவைகளில் யாதொன்றுமில்லை. இவ்வுலகெல்லாம் பிரகாசமற்று இருளாகவேயிருந்தது. ஆத்மாவிருந்தும் மனத்துடன் சேர்க்கையைவிரும்பவில்லை. மனமானது அறிவற்றது. ஆத்மாவொன்றுதான் அறிவுள்ளது. இவ்வுலகெங்கும் வியாபரித்தவராயும் ஒருவராயுமிருக்கிற ஈசுவரர் பிராணிகளுக்கும் மந்திரங்களுக்கும் தக்க உருவத்தை உண்டுபண்ணவில்லை. மந்திரங்களுக்குத் தேவதைகளாய்விளங்கும் ஸ்ருஷ்டிகர்த்தர்களென்னும் பெயர்வாய்ந்த சிலரிஷிகள் அக்காலத்தில் ஈசுவரரால் உண்டுபண்ணப்பட்டார்கள். அவர்கள் ஈசுவரரிடமிருந்து தக்க அறிவுபெற்றுக்கொண்டு இப்பிரம்மாண்டத்தைக்கற்பித்து விசுவஸ்ருஜமென்னும் யாகத்தைச்செய்து பிதாமஹரென்னும் ஒருவரையுண்டுபண்ணினார்கள். அப்பிதாமஹர் ஈசுவரர் அநுக்கிரஹத்தால் இவ்வுலகைச் ஸ்ருஷ்டிக்கத்தொடங்கினார். இவ்வுலகின் அறிவெல்லாம் ஈசருடைய அறிவுதான். ஈசுவரரான அந்தச் சம்பு தம்சக்தியால் இவ்வுலகெல்லாம் வியாபரித்திருக்கிறார். அந்த ஈசரால் பிரளயகாலத்தில் பிரம்மதேவருக்கு அறம்பொருள்இன்பம் வீடென்னும் இவைகள் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. அறிவற்றனவும் சக்தியற்றனவும் ஸுகதுக்கங்களுக்கிருப்பிடமுமானதால் ஜந்துக்கள் ஈசரால்ஏவப்பெற்று ஸ்வர்க்கத்தையும் நரகத்தையும்அடைகின்றன. பிராணிகள் ஈசராலும் மனத்தாலும் விஷயங்களாலும் கர்மங்களாலும் ஏவப்பட்டுப் பிரகிருதியையும் புருஷனையும் ஸுகதுக்கங்

களையும் அடைகின்றன. தேவர், அஸுரர், கந்தர்வர் இவர்களுடன் கூடிய இவ்வுலகைப்படைத்த ஈசுவரரே ஜாதியையும் ஆச்ரமங்களையும் இவைகளின் பிரிவுகளையும் ஏற்படுத்தியிருக்கிறார். ஓ! மஹாராஜரே! நீரும் மற்றுமுள்ளஎவர்களும் எவ்வகையாலும் ஈசுவரவசத்திலிருப்பவர்களே. பிராணிகளெல்லாம் அந்தஈசுவரர்வசத்திலிருந்துகொண்டே ஜீவனத்தையும் மரணத்தையும் அடைகின்றன. தேவர்கள் பிராணிகளையும் இவ்வுலகத்தையும்கொன்று யாகஞ்செய்கிறார்கள். அவர்கள் பாபத்தையே அடையவில்லை. தேவர்களானாலும் ரிஷிகளானாலும் கிருஹஸ்தாச்ரமம்பெற்றவர்எவர்க்கும் கர்மங்கள் ஹிம்ஸையுள்ளனவாகவே இருக்கின்றன. அந்தக்கர்மஞ்செய்யும்கிருஹஸ்தர்கள் உயர்ந்தகதியையடைகிறார்கள். பிரஜைகளுக்கும் தமக்கும் ஹிதத்தைவிரும்பிய அரசர்கள் முன்காலத்தில் பலவிடங்களில் சத்துருக்களைக் கொன்றிருக்கிறார்கள். அதில் பாபமிருக்குமானால் அவர்கள் எப்படி ஸ்வர்க்கத்தையடைவார்கள்? ஏன் அவ்விதபாபங்களால்சூழப்பட்டவர்களாகி நரகத்தையடையவில்லை? ஓ! ராஜரே! ஆகையால், கிருஹஸ்தாச்ரமத்தில் யாதொருதோஷமுமில்லை. அஃது உயர்ந்ததென்று இவ்விதம் மனத்துக்குச் சமாதானத்தைச்செய்துகொண்டு இந்தக்கர்மவழியிலிருந்து பிரம்மத்தையடையத்தக்க பிராம்மணர்முதலியவர்களைக்கண்டு தேவர்களும் ஆசைப்படுகிறார்கள். அவ்வளவுந்தெரிந்தநீர் அங்குமிங்குமிருந்து ஸம்பாதிக்கப்பட்ட ஆச்சரியமானரத்தினங்களை யாகங்களில் தானஞ்செய்யத்தொடங்காமல் நாஸ்திகவாதம்பேசுகிறீர். ஓ! ராஜரே! குடும்பத்தையடைந்தவனுக்குத் தியாகமென்பதுகிடையாது. ஆகையால், தேவராஜாவான இந்திரனுக்கொப்பாகியநீர் பிராம்மணர்களால் பூஜிக்கப்பட்ட ராஜஸூயம் அசுவமேதம் ஸர்வமேதமுதலான மற்றுமுள்ள சிறந்தயாகங்களைச் செய்யும். அரசனுடைய அஜாக்ரதையென்னும் குற்றத்தால் திருடர்களால் உபத்திரவப்படும்பிரஜைகளைப் பாதுகாவாத அரசன் கலியின்உருவமென்று சொல்லப்படுகிறான். ஓ! ராஜரே! அலங்கரிக்கப்பட்டகுதிரை, யானை, பசு, தாஸி, கிராமங்கள், ஊர்கள், நிலங்கள், வீடுகள் இவைகளைப் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்யாமல், மனத்தில் ஞாதிகளிடத்தில் பகைகொண்டநாம் அரசரென்றுசொல்லப்படும் கலிகளாகப்போகிறோம். கொடாதவர்களும் பாதுகாவாதவர்களும் அரசர்களுக்குள்ளபாவத்தையடைந்தவர்களுமான நாம் துன்பமடையப்போகிறோமேதவிர ஒருபோதும் ஸுகத்தையடையப்போகிறதில்லை. ஓ! பிரபுவே! பெரியயாகங்களையும் பிதிருக்களின் சிராத்

தத்தையும் புண்ணியதீர்த்தஸ்நானங்களையும் செய்யாமல் ஸன்யாஸ மடைவீரானால் இவ்வுலகம் மேலுலகம் இரண்டையும்விட்டுநழுவிப் பிசாசமாயிருந்துகொண்டு காற்றினால் அலைக்கப்பட்டுச்சிதறினமேகம் போல நாசமடைவீர். மனத்திற்குக் கவலையையுண்டாக்குகின்ற, உள்ளும்புறமுமிருக்கும் வஸ்துக்கள்யாவற்றையும் மனத்தால்விட்ட வன் ஸந்யாஸியாவான். வீட்டைவிட்டுவெளிப்பட்டவன் ஸந்யாஸி யாகமாட்டான். ஓ! மஹாராஜரே! பிராம்மணர்களால் உபாஸிக்கப் பட்ட இந்தக்கர்மமார்க்கத்திலிருப்பவனுக்கு எவ்விடத்திலும் கெடுதி யுண்டாகிறதில்லை. ஓ! பார்த்தரே! யுத்தத்தில் இந்திரன் அஸுர ஸேனையைக் கொல்வதுபோல வலியபகைவர்களை வேகமாகக்கொன்று முன்னோர்களால் கூறப்பட்டதும் நீதிதவறாதஅரசர்களால் அனுஷ் டிக்கப்பட்டதுமான ஒழுக்கந்தவறாமலிருக்குமெவன் இப்படிப்பட் டசோகத்தை அடைவான். ஓ! பிருதையின் குமாரரே! க்ஷத்திரியர் களுக்குரிய முறைப்படி பராக்கிரமத்தால் இந்தப்பூமியைஜயித்து, வேதந்தெரிந்தவர்களுக்குத் தானஞ்செய்து, (அந்தப்புண்ணியத் தால்) ஸ்வர்க்கலோகத்திற்கு மேலானபதத்தை அடையப்போகிறீர். இந்தச்சமயத்தில் நீர்சோகமுறுவது அழகன்று" என்றுசொன்னான்.

## பதின்மூன்றாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(ஸஹதேவன், ஸந்யாஸத்திலுள்ள சிரமத்தையும், முன்னோர்கள் அனுஷ்டித்தபடியே கர்மமார்க்கத்தைஅனுஷ்டிக்கவேண்டு மென்பதையும் தர்மபுத்திரருக்குக்கூறியது.)

ஸஹதேவன், "ஓ! பாரதரே! வெளியிலுள்ள (பிள்ளைபெண் டிர்முதலிய) வஸ்துக்களைவிடுவதால் ஸித்தியுண்டாகிறதில்லை. சரீ ரத்திலுள்ள (காமக்குரோதம்முதலிய) வஸ்துக்களைவிடுவதால் ஸித்தி வந்தாலும் வரலாம். வெளியிலுள்ளவஸ்துக்களிலிருந்து விடுபட்டும் சரீரத்திலுள்ள வஸ்துக்களில் பற்றுள்ளவனுக்கு எந்தத்தர்மமும் எந்தஸுகமும் உண்டாகுமோ அந்தத்தர்மமும் அந்தஸுகமும் அப் படியே நமதுவிரோதிகளுக்கு உண்டாகட்டும். சரீரத்திலுள்ளவஸ் துவைவிட்டுப் பூமியைப்பாதுகாப்பவனுக்குள்ள தர்மமும் ஸுகமும் அப்படியே நமதுநண்பர்களுக்கு உண்டாகட்டும். இரண்டெழுத் துள்ளது மிருத்யுவின் வழியாகும். மூன்றெழுத்துள்ளது நிலை

பெற்றதான பிரம்மத்தின் வழியாகும். [1]மமவென்னும் இரண்டெழுத்துள்ளது மிருத்தியுவின் வழியாம். [2]நமமவென்னும் மூன்றெழுத்துள்ளது சாச்வதமான பிரம்மத்தின்வழியாம். ஓ! ராஜரே! ஆகையால், பிரம்மம் மிருத்தியு இவ்விரண்டும் காணப்படாமலே மறைந்து புத்தியிலிருந்துகொண்டு பிராணிகளைத் தம்வசமாக்கிக் கொள்ளுகின்றன; ஸந்தேஹமில்லை. ஓ! பாரதரே! சரீரத்திற்கு நாசம்வந்தாலும் சரீரத்திலுள்ள இந்தப்புத்திக்கு நாசமில்லையென்பது நியதியாயிருந்தால் சரீரத்தைவிடுவதால் பிராணிகளுக்கு யாதொருதுன்பமும் நேரக்கூடாது. இந்தச்சரீரத்துடன்கூடவே புத்திக்கும் பிறப்பு இறப்புக்களிருக்குமானால் இந்தச்சரீரம் போனவுடன் புத்தியும் போய்விடும். அங்ஙனமானால், இக்கர்மவழி பயனற்றதாகிவிடும். ஆகையால், அறிவுடையோர் இதில் ஒருமுடிவையுங்கைக்கொள்ளாமல் முன்னோர்களும் அவர்களுக்கும் முன்னுள்ளவர்களுமான ஸாதுக்களால் அனுஷ்டிக்கப்பட்டவழியே செல்லவேண்டும். இந்தக் கர்மவழியானது தாழ்ந்ததாயிருந்தால் ஸ்வாயம்புவமனுவாலும் அப்படியே மற்றுமுள்ள பற்பலசக்கரவர்த்திகளாலும் எந்தக்காரணத்தால் இந்தவழி அனுஷ்டிக்கப்பட்டது? ஓ! பாரதராஜரே! கிருதயுகம், திரேதாயுகம்முதலிய காலங்கள் பெரும்பாலும் நற்குணம் பொருந்தியவைகள். அக்காலத்திலுள்ள அரசர்களால் விசேஷமாக இப்பூமியானது ஆளப்பட்டது. ஸ்தாவரஜங்கமங்களுடன் இந்தப் பூமிமுழுதையும் அடைந்தும் இதை ஒழுங்காக அனுபவியாத அரசனுடையஜன்மாவுக்கே பயனேது? ஓ! ராஜரே! அல்லது, காடுசென்று அங்குள்ளவஸ்துவால் ஜீவிக்கும் மனிதனுக்குத் திரவியங்களில் மமதையுண்டானால் அவன் மிருத்தியுவின்வாயில் அகப்பட்டவனுவான். ஓ! பாரதரே! அகத்தும் புறத்துமிருக்கிற வஸ்துக்களுடைய தன்மையைப் பாரும். எவர்கள் அதன்உண்மையைக் காண்கிறார்களோ அவர்கள் பெரியபயத்திலிருந்து விடுபடுகிறார்கள். (எனக்கு) தந்தை, தாய், உடன்பிறந்தார், ஆசார்யர் எல்லாம் நீரே. வருத்தத்தால்பிதற்றிய எனது வீண்வார்த்தைகளை நீர் பொறுக்கவேண்டும். ஓ! பரதச்ரேஷ்டரே! மெய்யாயிருக்குமோ, அல்லது பொய்யாயிருக்குமோ பக்தியால்மாத்திரம் என்னால் இப்படிச்சொல்லப்பட்டது. ஓ! ராஜரே! இதையறிந்துகொள்ளும்" என்றுசொன்னான்.

1 எனதென்னும்பற்று; மமதை. 2 மமதையின்மை.

## பதினைன்காவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(திரௌபதி, தர்மபுத்திரரைப்பார்த்து ஸமாதானஞ்செய்து தண்டநீதியின்சிறப்பையும், அதன்இன்றியமையாமையையும், அரசரின் சிறப்பையும், துர்யோதனனுதியரைக் கொன்றதுநியாயமென்பதையும்கூறி அரசாட்சிபுரியும்படி சொன்னது.)

பலவகைப்பட்ட அந்த அந்தவேதங்களின் ஸித்தாந்தங்களைச் சொல்லும் தம்பிமார்களின்முன் குந்தியின்குமாரரான தர்மபுத்திரர் மௌனமாயிருந்தபொழுது, பெரியகுலத்தில் பிறந்தவளும் ஸ்திரீகளுள் சிறந்தவளும் நீண்டகண்களுடையவளுமான திரௌபதியானவள் தர்மபுத்திரரைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினாள். யானைகளால்சூழப்பட்ட யூதபதிபோல, சிங்கம் புலி யானைகளுக்கொப்பான தம்பிமார்களால் சூழப்பெற்று உட்கார்ந்திருக்கும் ராஜச்ரேஷ்டரான தர்மபுத்திரரை, அவரிடத்தில் எப்போதும் விசேஷ அபிமானமுள்ளவளும் அவரால் எப்போதும் ஆதரிக்கப்பட்டவளும் தர்மாதர்மந்தெரிந்தவளுமான திரௌபதியானவள் மிகவும் அழகான நல்லசொல்லாலழைத்து அவரைநோக்கிப் பிறகு வார்த்தைசொல்லுகிறாள்.

"ஓ! பார்த்தரே! உம்முடைய இந்தத்தம்பிமார்கள் வாடுகிறார்கள்; சாதகப்புட்கள்போலக் கதறிக்கொண்டு நிற்கிறார்கள். இவர்களைச் சந்தோஷப்படுத்தாமலிருக்கிறீரே. ஓ! மஹாராஜரே! எப்பொழுதும்துக்கப்பட்ட இவர்களைத் தகுதியானவார்த்தையைச்சொல்லி மதமுள்ள பெரியயானைகளைப்போலச் சந்தோஷமுள்ளவர்களாகச்செய்யும். ஓ! ராஜரே! முன்பு த்வைதவனத்தில் சேர்ந்துகொண்டு குளிர் காற்று வெயில்களால் கஷ்டப்பட்ட இந்தத்தம்பிமார்களைநோக்கி, 'ஓ! சத்துருக்களையடக்குகிறவர்களே! யுத்தத்தில் ஜயத்தை விரும்புகிறநாம், பலஅரசர்களையும் ரதங்களையும் பெரியயானைகளையும் அடித்து, தேர்ப்பாகர்களாலும் தேர்களாலும் பூமியைநிரப்பி, துர்யோதனனைக்கொன்று போக்கியவஸ்துக்கள்யாவும்நிறைந்த இந்தப் பூமியையனுபவிப்போம். நல்லதக்ஷிணையுள்ள பலவிதயாகங்களைச் செய்வோம். வனவாஸத்தாலுண்டான துன்பம் நமக்கு ஸுகமாக முடியும்' என்றும் இன்னும் பலவிதமாகவும் வார்த்தைகளைச்சொல்லிவிட்டு, தர்மம்தெரிந்தவர்களுள் சிறந்தவரும் தீரருமாகியநீர் இப்பொழுது எங்களுடையமனத்தை எப்படித் துன்பப்படுத்துகிறீர்? தைரியமில்லாதவன் பூமியையாளமாட்டான்; பொருளையும் அடைய

மாட்டான். சேற்றிலுள்ளமீன்கள்போலத் தைரியமில்லாதவன்வீட்டில் பிள்ளைகள் நன்றாயிருக்கமாட்டார்கள். தண்டநீதி தெரியாத க்ஷத்திரியன் விளங்கமாட்டான். தண்டமில்லாதவன் பூமியையடையமாட்டான். ஓ! பாரதரே! தண்டமில்லாத அரசனைச்சேர்ந்த பிரஜைகள் ஸுகப்படமாட்டார்கள். தேவர், அஸுரர், கந்தர்வர், அப்ஸரஸ், குஹ்யகர், ராக்ஷஸர், நாகர், மனிதர்இவர்களால் அலங்கரிக்கப்பட்டும் அறம்பொருளின்பங்களால் நிரப்பப்பட்டுமிருக்கும் இவ்வுலகம்யாவும் தண்டத்தாலடக்கப்பட்டுப் புஜிக்கக்கூடியதாகிறது. ஓ! ராஜரே! ஸ்வயம்புவினிடமிருந்துவந்த சாச்வதமான நீதிசாஸ்திரத்தைக் கேளும். இஃது எல்லாப்பிராம்மணர்களுக்கும் உமக்கும் தெரிந்தவிஷயமே. அரசனில்லாமலிருந்தால் இவ்வுலகம் பயந்து நடுங்கி ஓடவேண்டுமென்று இவ்வுலகத்தைக் காப்பதற்காக ஈசுவரரானவர் இந்திரன், அக்கினி, யமன், வருணன், வாயு, குபேரன், சந்திரன், ஸூர்யன் இவர்களுடைய உறுதியான தேஜோ அம்சங்களை ஒன்றுசேர்த்து வலிமையானசரீரமும் பராக்ரமமுமுள்ளவனாக உலகத்தைப் பரிபாலிக்கத்தக்க அரசனை உண்டுபண்ணினார். தேவர்களிற் சிறந்த இந்திரன்முதலியவர்களுடைய அம்சத்தாலுண்டான அரசன் எந்தப்பிராணிகளையும் பராக்ரமத்தால் அடக்குபவன். அரசன் ஸூர்யனைப்போலக் கண்களையும் மனங்களையும் தபிக்கச்செய்பவன். இவனைக் கண்ணெடுத்துப்பார்க்கச் சக்தியுள்ளவன் உலகத்தில் ஒருவனுமில்லை. அந்தஅரசன் உலகத்தில் அக்கினியும் வாயுவும் ஸூர்யனும் சந்திரனும் யமனும் வருணனும் குபேரனும் தேவேந்திரனுமாகப் பிரகாசிக்கிறான். அரசனிடத்தில் எல்லாரிஷிகளுடையதேஜஸும் பிரம்மா விஷ்ணு சிவனென்னும் மும்மூர்த்திகளுடையதேஜஸும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அரசன் இளமைப்பருவத்திலிருந்தாலும் மனிதனென்றெண்ணி அவமதிக்கத்தக்கவனல்லன். பெரிய ஒருதேவதை அரசனென்னும் மனிதவுருவங்கொண்டு நிற்கிறதென்று நினைக்கவேண்டும். நெருப்பானது தவறிநெருங்கின ஒருமனிதனைச் சுடும். அரசனென்னும் அக்கினியோ பசு பொருள் முதலியவைகளோடு குலத்தையே சுடுமென்பதில் ஸந்தேஹமில்லை. உங்களுடைய கோபாக்கினியினால் திருதராஷ்டிரருடையகுலமே தஹிக்கப்பட்டது. இஃது உலகமறிந்தது. ஸம்சயமென்பதில்லை. நல்லகுலத்திற்பிறந்தவனும் நன்னடையுள்ளவனும் தர்மபுத்தியுள்ளவனும் பிரஜைகளை ரக்ஷிப்பதில் முயற்சியுள்ளவனுமான அரசன், தேவர்களாலும் பூஜிக்கப்படுகிறான். காரியத்தையும் சக்தியையும் இடத்தையும் காலத்தையும் உண்மையா

கப்பார்த்துத் தர்மத்திற்காக எவன் அடிக்கடி பலஉருவத்தையெடுத்துக்கொள்ளுகிருனே அவனுடைய அனுக்ரஹத்தில் லக்ஷ்மியும், பராக்ரமத்தில் ஜயமும், கோபத்தில் மிருத்யுவும் வஸிக்கிருர்கள். அரசன் எல்லாத்தேஜஸும் பொருந்தியவன்; அறியாமையால் அவனைப்பகைக்கிறமனிதன் நாசமடைவான். பகைக்கிறமனிதனை, அரசனும் விரைவில் கொல்வதற்குநினைப்பான். ஆனதால், அரசன் நண்பர்களிடத்திலும் பகைவர்களிடத்திலும் நன்மையோ தீமையோ எதைத் தீர்மானிப்பானே அதை மாற்றக்கூடாது. எல்லாஉலகங்களையும் ரக்ஷிக்கும் பிரம்மதேஜோரூபமானதும் தம்மிடமிருந்துண்டானதுமான தண்டநீதியென்னும் தர்மத்தை அரசனுக்காக ஈசுவரர் உண்டுபண்ணியிருக்கிருர். ஸ்தாவரமும் ஜங்கமமுமான எல்லாப்பிராணிகளும் தண்டநீதியின்பயத்தால் போகத்தைக்கொடுக்கின்றன. தர்மத்தைவிட்டுச் சலிக்கிறதில்லை. அரசன் அநியாயஞ்செய்யும் பிராணிகளைக் காலம், தேசம், சக்தி, கார்யம் இவைகளைக்கண்டு தக்கபடி அடக்கவேண்டும். (உலகத்திற்கு) அரசனும் அடக்குகிறவனும் ஆஜ்ஞைசெய்கிறவனுமாயிருப்பது தண்டநீதியே. அதுவே ஜாதிகள், ஆச்ரமங்கள் இவைகளின்தர்மத்திற்கு அழிவில்லாத பிரபுவாயிருக்கிறது. தண்டமானது பிரஜைகளையெல்லாம் அடக்குகிறது; ரக்ஷிக்கவும்செய்கிறது. உலகங்கள்தூங்கினாலும் தண்டம் விழித்துக்கொண்டேயிருக்கிறது. அறிஞர்கள் தண்டத்தைத் தர்மமென்று அறிவிக்கிருர்கள். நன்ருக ஆலோசித்துப் பிரயோகித்ததண்டமானது எல்லாப்பிராணிகளையும் ஸந்தோஷப்படுத்தும். ஆலோசியாமல்செய்யும் தண்டமானது எல்லாவற்றையும் நாசஞ்செய்யும். அரசன் சோம்பலின்றிக் குற்றவாளிகளிடம் தண்டத்தைச்செலுத்தாவிட்டால் ஜலத்திலுள்ள மீன்களைப்போல உலகத்தில் பலசாலிகள் பலஹீனர்களை விழுங்கிவிடுவார்கள். காக்கையும் [1]புரோடாசத்தைத் தின்னும். நாயும் ஹவிஸை நக்கும். யஜமானத்தன்மையென்பது எங்குமிராது. உலகம் கீழ்மேலாகிவிடும். உலகத்தில்உண்மையுள்ள நல்லமனிதன் மிகவும்அரியனுவான். உலகம் யாவும் தண்டத்தால் அடக்கப்பட்டு, அதன்பயத்தால் பயனுள்ளதாகிறது. தேவர்களும் அஸுரர்களும் கந்தர்வர்களும் ராக்ஷஸர்களும் உரகர்களும் பறவைமுதலியவைகளும் தண்டத்தால் பீடிக்கப்பட்டுத் தான் ஸுகவழிக்குவருகின்றனர். தண்டம்மாறினுல் ஜாதிகள்யாவும் கெட்டுப்போம். எவ்விதவரம்புகளும் உடைந்துபோம். உலகம் யாவும் கோபமுள்ளதாகும். கறுத்தஉருவமும் சிவந்தகண்ணும்

---

1 ஹோமத்திற்குரிய மா.

பாபத்தையடக்குந்திறமையுமுள்ள தண்டபுருஷன் எங்குஸஞ்சரிக்கிறானோ அங்குள்ளபிராணிகள் அவிவேகத்தையடைவதில்லை. அவ்விதமான தண்டத்திற்கு, நன்குஆராய்ந்துசெய்பவனும் அறிவுள்ளவனும் அறம்பொருள் இன்பங்களைப் பகுத்தறிந்தவனும் உண்மையுரைப்பவனுமான அரசன் காரணமாகிறான். அப்படித் தண்டத்தைச்செலுத்தும் அரசன் ஸ்வர்க்கலோகத்தைநோக்கிச் செல்லுகிறவனாகிறான். காமத்தில்புத்திசெலுத்தும் நீசனான அரசன் தண்டத்தால் அடிக்கப்படுகிறான். நல்லபுத்தியில்லாதவர்களால் வகிக்கத்தகாததும், பெரியதேஜஸையுடையதுமான தண்டமானது தர்மத்திலிருந்துவிலகின அரசனை இனத்தார்களுடன்கொல்லும். (அது) அரசனைக்கொன்று தூர்க்கத்தையும், ராஜ்யத்தையும், ஸ்தாவரஜங்கமமான உலகத்தையும், ஆகாயத்திலுள்ள முனிவர்களையும், தேவர்களையும் துன்பஞ்செய்யும். தண்டமானது புத்தியில்லாதவனும் பொருளாசையுள்ளவனும் சிற்றின்பத்தில் ஆசையுள்ளவனும் மூடனும் துணையற்றவனுமான மனிதனால் விதிப்படி செலுத்தமுடியாது. சுத்தனும் உண்மையுள்ளவனும் நீதிசாஸ்திரத்தையனுஸரிப்பவனும் நல்லதுணையுள்ளவனும் புத்திமானுமாயிருப்பவனால் தண்டம் நன்குசெலுத்தமுடியும். (அரசன்) தன்ராஜ்யத்தில் நியாயப்படியிருப்பவனும் சத்துருக்களிடம் கொடுமையான தண்டமுள்ளவனும் அன்புள்ளநண்பர்களிடத்தில் ஒழுங்கானவனும் பிராம்மணர்களிடம் பொறுமையுள்ளவனுமாயிருக்கவேண்டும். இவ்விதமிருக்கும் அரசன் [1]பிச்சையெடுத்துப்பிழைப்பானாலும் ஜலத்தில் எண்ணெயின்துளிபரவுவதுபோல உலகத்தில் அவனுடையபுகழ் பரவுகின்றது. இதற்குமாறுபாடான நடையுள்ள புத்தியில்லாத அரசனுடையகீர்த்தியானது ஜலத்தில் நெய்த்துளிபோல உலகத்தில் சுருங்கும். ஓ! ராஜரே! தர்மத்தைவிட்டு விலகினபடியினாலேதான் திருதராஷ்டிரருடையபுத்திரர்கள் தேவதேவரான ருத்திரராலும் பிரம்மாவினாலும் தேவரானவிஷ்ணுவினாலும் மஹாத்துமாவான இந்திரனாலும் திக்குப்பாலகர்களாலும் பஞ்சபூதங்களாலும் மஹாத்துமாக்களான பாண்டவர்களாலும் கொல்லப்பட்டார்கள். தர்மமில்லாதவர்களும் கெட்டநடையுள்ளவர்களுமான திருதராஷ்டிரகுமாரர்கள் சேனைகளுடன்கொல்லப்பட்டார்கள். ஓ! ராஜரே! வ்யாஜத்தாலோ மாயையாலோ அல்லது க்ஷத்திரியர்களுக்குள்ளநீதியாலோ அவர்களைக்கொன்றதால் உமக்குக் கொஞ்சமாவது தோஷமில்லை. எல்லாப்பிராணிகளிடத்தும் ஸ்நேஹமும் கொடுப்

[1] மூலத்தில், 'விலோஞ்சம்' என்றிருக்கிறது.

பதும் வேதமோதுவதும் தவமும் பிராம்மணர்களுக்குத்தான் தர்மமாகும். ஓ! ராஜச்ரேஷ்டரே! அரசர்களுக்கு இவைதர்மமாகா. அரசர்களுக்குத் துஷ்டர்களைத்தடிப்பதும் ஸாதுக்களைக்காப்பதும் யுத்தத்தில் ஓடாமலிருப்பதுமாகிய இவை முக்கியதர்மங்களாகும். எவனிடத்தில் பொறுமையும் கோபமும் கொடுப்பதும் வாங்குவதும் அஞ்சுவதும் அஞ்சாமையும் சிக்ஷையும் ரக்ஷணமும் இருக்கின்றனவோ அவன்தான் தர்மந்தெரிந்தவனென்று சொல்லப்படுகிறான். இந்தப்பூமியானது கல்வியினாலும் தானத்தினாலும் யாகத்தினாலும் நல்வார்த்தையினாலும் யாசகத்தினாலும் உம்மாலடையப்பட்டதன்று. உலகத்தில் பிரஸித்திபெற்றனவும் பலவீரர்களால் சூழப்பட்டனவும் யானை குதிரை தேர்களால்நிறைந்தனவும் [1]மூன்று அங்கங்களால்மிகவும் சிறந்தனவும் துரோணர், கர்ணன், அசுவத்தாமா, கிருபர் இவர்களால் காக்கப்பட்டனவுமான சத்துருக்களின் சேனைகளானவை உம்மால் கொல்லப்பட்டன. ஓ! வீரரே! ஆகையால், பூமியை நீர் அனுபவிக்கவேண்டும். ஓ! புருஷப்புலியாகிய மஹாராஜரே! பலஊர்களோடுகூடிய ஜம்பூத்வீபமானது உம்மால் தண்டத்தால் அடக்கப்பட்டது. ஓ! ராஜரே! இத்தீவுக்கொப்பானதும் மேருவுக்கு மேல்புறமுள்ளதுமான கிரௌஞ்சமென்னும்தீவும் உம்மால் தண்டத்தால் அடக்கப்பட்டது. ஓ! ராஜரே! மேருவுக்கு முன்பக்கமுள்ளதும் கிரௌஞ்சத்தீவுக்குச் சரியானதுமான சாகத்தீவும் தண்டத்தால் உம்மால்அடக்கப்பட்டது. ஓ! புருஷப்புலியே! மேருவுக்கு வடபாகத்திலிருப்பதும் சாகத்தீவுக்குச் சரியானதுமான பத்திராசுவமென்னும் தீவும் தண்டத்தால் உம்மால் அடக்கப்பட்டது. ஓ! வீரரே! பலஊர்களுக்கு இருப்பிடமானதீவுகளும் இடையிலுள்ள சிறுதீவுகளும் ஸமுத்திரத்தில்பிரவேசித்து உம்மால் தண்டத்தால் அடக்கப்பட்டன. ஓ! மஹாராஜரே! பாரதரே! ஒப்பற்ற இவ்விதக்காரியங்களைச்செய்து பிராம்மணர்களால் பூஜிக்கப்படுகிறநீர் ஸந்தோஷிப்படவில்லையே. ஓ! பாரதரே! கர்ஜிக்கும் காளைகள்போலவும் மதம்பிடித்தயானைகள்போலவுமிருக்கும் இந்தத் தம்பிகளைக்கண்டு ஸந்தோஷப்படும். சத்துருக்களை ஜயிக்கத்தக்கவர்களும் பிறரைத் தபிக்கச்செய்பவர்களுமான இவர்களெல்லோரும் தேவர்களுக்கொப்பானவர்கள். இவர்கள் ஒவ்வொருவரும் எனக்கு நன்மைசெய்பவரென்பது என்னுடைய எண்ணம். சரீரத்தைநடத்துவதில் இந்திரியங்கள்யாவும் சேர்ந்திருப்பதுபோல மனிதர்களுள் சிறந்தவர்களும் புலிபோன்றசூரர்களுமான

---

[1] பிரபுசக்தி, உத்ஸாஹசக்தி, மந்த்ரசக்தி.

பதிகள் யாவரும் என்விஷயத்தில் சேர்ந்திருப்பதில் என்னசொல்ல வேண்டும்? எல்லாமறிந்தவளும் எல்லாம்பார்த்தவளும் மாமியுமான குந்தியானவள், 'ஓ! பாஞ்சாலி! வேகமான பராக்ரமமுள்ள யுதிஷ்டிரன் விரோதிகளான பல்லாயிரம்அரசர்களைக்கொன்று உன்னை உயர்ந்தஸ்தானத்தில் வைக்கப்போகிறான்' என்றுசொன்னது பொய்யாயிராது. ஓ! அரசரே! உம்முடைய அவிவேகத்தால் அது வீணாகுமென்று நினைக்கிறேன். தமையனாரானநீர் உன்மத்தராயிருப்பதால் உம்மையனுஸரிக்கும் மற்றப்பாண்டவர்கள்யாவரும் உம்முடையபைத்தியத்தால் பைத்தியமுள்ளவர்களாயிருக்கிறார்கள். ஓ! ராஜாவே! உம்முடைய தம்பிகள் பைத்தியமில்லாதவர்களாயிருப்பார்களானால் உம்மை நாஸ்திகர்களோடுகூடக் கட்டிப்போட்டுவிட்டுப் பூமியைஆளுவார்கள். தனக்குரிய ஸ்வகவழியை அடையாதிருக்கும் மூடனன்றோ இவ்வாறுசெய்வான்? ஓ! ராஜரே! புகைகளாலும் கூட்டினமைகளாலும் நஸ்யங்களாலும் உமதுபைத்தியத்தை விலக்கவேண்டும். வழிதப்பிச்செல்லும் மனிதன் மருந்துகளால் பரிகாரஞ்செய்யத்தக்கவன். ஓ! பரதச்ரேஷ்டரே! உலகத்திலுள்ளஸ்திரீகளுள் நான் மிகக்கீழானவள். திருதராஷ்டிரரின் பிள்ளைகளால் அவ்விதம் அவமதிக்கப்பட்டும் நான் உயிரோடிருக்கவிரும்புகிறேன். ஓ! ராஜரே! திருதராஷ்டிரபுத்திரர்கள் எப்பொழுதும் தீயவழியிற்செல்லுகிறவர்கள். அவர்களைக்கொல்லுவதில் எவ்விதமான தோஷத்தையும் ஒருபோதும் காணவில்லை. ஓ! ராஜரே! சுக்கிராசாரியரால்சொல்லப்பட்ட இந்தச்சுலோகங்களைக் கேளும். (அவற்றின் பொருள்) "தன்னைக்கொல்லுகிறவன், தன்பொருளையழிப்பவன், பந்துக்களைக் கொல்லுபவன், விஷத்தைப்போடுகிறவன், காரணமின்றிக் கொல்லுகிறவன், மனைவியைஇழுப்பவன் இவர்கள் அறுவரும் ஆததாயிகளென்று சொல்லப்படுவார்கள். இவர்களைக்கொல்லுவதில் தோஷமேயில்லை" என்பது. இம்மஹாத்மாவான பார்க்கவரின்பொருட்டுப் பிரம்மதேவர் (இதைச்)சொன்னார். நல்வழியிலிருக்கும் பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் இவர்களுடையவீடுசென்று பலாத்காரமாக அடிப்பவனையும் விஷம்போடுபவனையும் புஜிக்கவும் குடிக்கவும் தகாதவஸ்துவைப் போடுபவனையும் தீயிடுபவனையும் கொல்லவேண்டும். பசுவையும் பிராம்மணனையும் கொல்லும்போதும் மாதர்களை மயிரைப்பிடித்திழுக்கும்போதும் பிதாமஹரான பிரம்மதேவராயிருந்தாலும் அடிக்கவேண்டும். மற்றப்பாபிகள்விஷயத்தில் என்ன சொல்லவேண்டும்? இஃது அரசர்களுக்குள்ள வழியாகும். பசுவுக்கும்

பிராம்மணர்களுக்கும் அரசர்களுக்கும் துன்பம் நேரிடுங்காலத்திலும் ராஜ்யத்திற்கு அழிவுநேருங்காலத்திலும் தனதுசரீரத்தை ரக்ஷிப்ப தற்காகவும் மங்கையர்களின் அழுகைச்சத்தங்கேட்டபோதும் பெரு மைபொருந்திய பிராம்மணனும் சண்டைசெய்யவேண்டும். தர்மத்தை விட்டுவிலகிய ஆததாயியானபிராம்மணனைக் கொல்லலாம். அறிந்த வன் பிராம்மணவதத்தை வேறெங்கும் மனத்தாலும் சிந்திக்கக் கூடாது. பசுவையும் பிராம்மணனையும் கொலைசெய்யத்துணிந்த பிரா ம்மணனை க்ஷத்திரியன்கொல்லலாம். மந்திரத்தைக் காப்பாற்றுவதற் காகவும் தன்குடும்பத்தை அடைவதற்காகவும் க்ஷத்திரியன் பிராம்ம ணனைக் கொல்லலாம். தர்மம்விட்டுவிலகினவனும் குரூரனும் திரு டனுமான பிராம்மணனுடன் க்ஷத்திரியஜாதியில்பிறந்தவன் யுத்தத் தில் சண்டைசெய்யலாம். வேதாந்தத்தில் கரைகண்டவனானாலும் தன்னைக் கொல்லவேண்டுமென்ற எண்ணத்துடன்வரும் ஆததாயியை ஒருவன் கொலைசெய்வதால் [1]ப்ரூணஹத்தியென்னும் தோஷமுள்ளவ னாகமாட்டான். பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன், சண்டாளன், மற்றுமுள்ளவனும் எந்தச்சமயத்திலும் சாந்தனான பிராம்மணனை ஒருபுல்லாலும் அடிக்கக்கூடாது. பிராம்மணனைப் பெ ரியதடியையெடுத்து அடிக்க ஓங்கினபாபி முந்நூறுவருஷங்கள் நல்ல நிலையையடையமாட்டான். அடிப்பவன் ஆயிரவருஷம் நரகத்தில் விழுவான். ஆகையால், பிராம்மணர்களை அடிக்கஓங்குவதும் ஆயு தத்தால் அடிப்பதும் ஆகா. (பிராம்மணன் சரீரத்திலிருந்துவரும்) உதிரம் எவ்வளவுஅணுக்களைப் பற்றக்கூடுமோ அவ்வளவுவருஷங் கள் அடித்தபாபி நரகத்தில்சுழலுகிறான். பிராம்மணனுடையதோல் எலும்புகளைப் பேதிக்கச்செய்தவனும் செய்வித்தவனுமான கெட்ட மனிதன் பிரம்மஹத்திசெய்தவனாகிப் பிராயச்சித்தஞ்செய்துகொள் ளத் தக்கவனாகிறான். வேதமோதின பிராம்மணனையும் ஆத்திரேய கோத்திரத்தில்உதித்த பிராம்மணஸ்திரீயையுங்கொன்றால் அது பிரம் மஹத்தியில் இரட்டிப்புத் தோஷமுள்ளதென்று ரிஷிகளால் சொல் லப்பட்டிருப்பதால் இருபத்துநான்குவருஷம் அதற்குப் பிராயச்சித் தம் செய்துகொள்ளவேண்டும். அவ்விதம் பிராயச்சித்தஞ்செய்து கொள்ளாதவனை அடையாளஞ்செய்து தேசத்தைவிட்டு வெளிப்படு த்தவேண்டும். பிராம்மணனைக் கொன்றவனும் திருட்டுத்தனமுள்ள வனுமான ஒருவன் பிராம்மணனானாலும் க்ஷத்திரியனானாலும் வைசிய னானாலும் சூத்திரனானாலும் அவனை அரசன் சிக்ஷைசெய்யவேண்டும்.

[1] வேதத்தை ஸாங்கமாக அத்தியயனஞ்செய்தபிராம்மணனைக் கொல்வது.

இவர்களில் சூத்திரனையும் வைசியனையும் க்ஷத்திரியனையும் கை கால் உதடு மூக்குகளையறுத்துவிட்டு இனி இவ்விதநடக்கையில்லாமலிருக்கும்படி செய்யவேண்டும். இவர்களே பிராம்மணனைக் கொலை செய்தவர்களானால் இவர்களின் கண்ணைப் பிடுங்கவேண்டும். இப்படிப்பட்ட தோஷமுள்ளபிராம்மணனைத் தேசத்தைவிட்டுத் துரத்தவேண்டும். பிராம்மணனைக்கொன்ற க்ஷத்திரியனையும் வைசியனையும் சூத்திரனையும் அரசன் ஆயுதத்தால்கொல்லவேண்டும். பிராம்மணனைக்கொன்ற பிராம்மணர்களை அரசன் அடையாளஞ்செய்து வெளியில்துரத்தவேண்டும். பிரம்மஹத்திசெய்த தாழ்ந்த மூன்றுஜாதிக்காரர்களையும் [1]இந்திரியக்குறைவுள்ளவர்களாகச்செய்து சண்டாளர்களுடன் கூடிவஸிக்கும்படி செய்யவேண்டும். அவர்களோடுசேர்ந்து புஜிக்கும்மனிதனும் அந்தப்பாபமுள்ளவனாவான். அவர்கள் இறந்தாலும் அவர்களுக்கு எவனும் பிண்டமுதலியவைகள் கொடுக்கக்கூடாது. கருநிறமும் விகாரமான உருவமுமுடையதும் தொங்குகிற மயிருள்ளதுமான பிரம்மஹத்தியென்பது காணமலே பின்தொடர்ந்து செய்தவனைப்பிடிக்கிறதென்று பெரியோர்கள் அறிகிறார்கள். பிரம்மஹத்திசெய்தவனோடு புஜித்துக்கொண்டிருந்தால் அப்படியிருக்கும் பிராம்மணர்களும் அவர்களிருக்கும் ஊர்களும் தேசங்களும் பஞ்சத்தாலும் வியாதியாலும் திருடர்களாலும் தாமதமின்றிப் பீடிக்கப்படுகிறார்கள். பிராம்மணர்களைக் கொல்லத்துணிந்தவர்களும் பாபிகளுமான பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களுடைய கண்ணைப் பிடுங்கிவிடவேண்டும். பலமில்லாதவர்களானாலும் பலமுள்ளவர்களானாலும் ஸாதுக்களுக்கு அரசன் பலமாகிறான்; வலியவர்களானாலும் வலிமையில்லாதவர்களானாலும் பாபிகளுக்கு யமனாகிறான். ஓ! அரசரே! வலிமையுள்ளவனும் வலிமையில்லாதவனுமான மனிதனைத் தோஷமுள்ளவனானாலும் அரசனுக்குத் தெரிவியாமல் அடிப்பவன் சிக்ஷிக்கத்தக்கவனாவான். அரசன்கட்டளையையும் அதிகாரியையும் மீறினவனும் ஸாக்ஷியையும் நியாயவார்த்தையையும் விட்டுவிலகினவனும் குற்றமுள்ளவராவார். சிறையிலிருந்து வெளிக்கிளம்பினவனும் குற்றவாளியைக்கொடாத பிணையாளியும் நல்லகுலத்திற் பிறந்தவரானாலும் பிரபுவானாலும் குற்றமுள்ளவராவார். அரசன் கட்டளையால் அழைக்கப்பட்டும் பலமுள்ள ஒருவனைத் துணையாகஅடுத்து ஆயுதமெடுத்துக்கொண்டு (மாறுபட்டு) ஸபைக்குவாராமலிருப்பவன் குற்றவாளியாவான். அவ்விதமான பெரியகுற்றமுள்ள மனிதனை அவ

---

[1] கண் காது மூக்கு முதலியவற்றைக் குறைத்தல்.

னுடையபொருளையும் சரீரத்தையும் இழக்கும்படிசெய்து பரலோகத்திற்கனுப்பிவிடவேண்டும். அப்படி இறந்துபோன அவனுக்கு எவனும் பிண்டமுதலியவைகள் கொடுக்கக்கூடாது. கட்டளையை மீறிக் கொடுப்பவன் இரண்டாவது [1]குற்றத்திற்குத்தக்க அபராதம் விதிக்கத்தகுந்தவன். பலாத்காரமாகக் குலஸ்திரீகளைக்கெடுப்பதும் ராஜ்யத்தைக்கெடுப்பதும் பிராம்மணனைக்கொல்லுவதும் திருடுவதும் அரசனைப்பகைப்பதும் யுத்தமில்லாதகாலத்தில் கொல்வதும் கள்ளுக்குடிப்பதும் குருவின்பத்னியைக்கெடுப்பதும் மித்திரத்ரோஹம்செய்வதுமாகிய இவ்வித மஹாபாபத்தைச் செய்பவன் பெருங்குற்றவாளியாவான். அவனைச் சற்றேனும் உபேக்ஷியாமல் பொருளையெல்லாம் பறித்து உடனே கொலைசெய்யவேண்டும். இவ்விதத்தண்டமானது சூத்திரன்முதலிய மூன்றுவருணத்தாருக்கென்றும் இப்பெருங்குற்றவாளியாகிய பிராம்மணனை அடையாளஞ்செய்து வெளியில் துரத்தவேண்டுமென்றும் பிரம்மதேவரால் முன்பு விதிக்கப்பட்டிருக்கிறது. பெரியபுத்தியுள்ள சுக்கிராசாரியார் நான்கு வர்ணத்தார்களுக்கும் ஸ்திரீகள் சிறுவர்கள் முதியோர்கள் இடையர்கள் இவர்களுக்கும் ஆயிரம்பொன் அபராதம் விதிக்கலாமென்றார். மிக்க ஐசுவரியமுள்ளவரே! பிருகஸ்பதி இந்தத் தீயஒழுக்கமுள்ள பெருங்குற்றவாளிகளுக்கும் ஆததாயியானயாவர்களுக்கும் மரணதண்டம் விதிக்கிறார். ஆகையால், கெட்டபுத்தியுள்ளவர்களும் பாபகார்யத்தையே செய்தவர்களுமான திருதராஷ்டிரர்பிள்ளைகள் அனைவர்களுக்கும் மரணதண்டனைசெய்ததில் யாதொருகுற்றமுமில்லை. ஓ! ராஜரே! ஓரேவஸ்திரமுள்ளவளும் ரஜஸ்வலையுமானஎன்னை உமதுகுற்றத்தால் உங்கள்கண் முன் பலவீரர்கள் பார்க்கும்படி ஸபையில் சூதாடிய அப்பொழுது இழுத்துவரச்செய்த துஷ்டர்களான கர்ணன், ஸௌபலன், துரியோதனன்முதலியவர்களைக் கொலைசெய்ததில் தோஷமேயில்லை. கோபாக்கினியால் பசுக்களோடு திரவியக்குவியல்களைக் [2]கொளுத்தித் திருதராஷ்டிரருடையகுலத்தை நாசஞ்செய்ததால் உமக்குத் தர்மக்குறைஉண்டாகாது. உம்முடைய நிமித்தம் நான் இவ்விதத்துன்பத்தையடைந்திருக்கிறேன். அந்தஸமயத்தில் உலகத்திற்குக் காலத்தையுண்டுபண்ணும் தேவதேவரான ஸூரியபகவானால் நான் ஆடை

---

[1] குற்றங்கள் மூவகையாகும்; அவைகளில் முதலாவதற்கு ஆயிரம்பொன்னும் இரண்டாவதற்கு ஐந்நூறுபொன்னும் மூன்றாவதற்கு நூறுபொன்னும் குறைந்த அபராதமாக விதிக்கப்பட்டிருக்கிறது. இதை யாஜ்ஞவல்கியஸ்மிருதி வியவகாரகாண்டம் ஸாஹஸப்பிரகரணம் முதல்ச்லோகம் டீகையில் காண்க.

[2] கவர்ந்து.

யற்றவளாகாமலிருக்கும்படி காக்கப்பட்டேன். ஆதித்யருடைய அநுக்ரஹத்தால் பிராணன்கள் என்னைவிட்டு விலகாமலிருந்தன. எனது வார்த்தை பொய்யன்று. நீரோ இவ்வளவு முயற்சியுள்ள தம்பிகளை அனுதாவுசெய்து இப்பூமிமுழுமையும் தள்ளிவிட்டுத் தாமாகவே துன்பத்தை உண்டுபண்ணிக் கொள்ளுகிறீர். ஓ! அரசசிரேஷ்டரே! மாந்தாதாவையும் அம்பரீஷரையும்போல இந்தப்பூமியில் அரசர்களால் நன்குமதிக்கப்பெற்று விளங்குகிறீர். ஓ! அரசரே! தர்மப்படி பிராணிகளைக்காப்பாற்றிக்கொண்டு காடு மலை தீவுகளோடு இந்தப்பூமிதேவியை நன்றாகஆளும். மனத்தில் இந்தச்சோர்வுவேண்டாம். ஓ! உத்தமஅரசரே! பலவகையான யாகங்களைச்செய்யும். பகைவர்களை வெல்லும். பொருள்கள் ஆடைகள் மற்றுமுள்ளபல போக்யவஸ்துக்கள் இவைகளைப் பிராம்மணர்களுக்குக் கொடும்" என்றுசொன்னாள்.

## பதினைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன் திரும்பவும் தருமபுத்திரரைப்பார்த்துச் செங்கோலின் சிறப்பைக்கூறி, அரசாளும்படி சொன்னது.)

அர்ஜுனன் திரௌபதியின் வசனத்தைக்கேட்டு, அரசரும் மஹாபாஹுவுமான தமையனாரை அநுஸரித்துப் பின்னும்சொல்லத் தொடங்கினான். "பிரஜைகள்யாவற்றையும் அடக்குவதும் காப்பதும் தண்டமே. உலகம்தூங்கினாலும் தண்டம் விழித்துக்கொண்டிருக்கிறது. தண்டமென்பதே தர்மமென்று அறிஞர்கள் அறிகிறார்கள். அறம் பொருள் இன்பமென்னுமூன்றையும் ரக்ஷிப்பது தண்டமாகையால் அது த்ரிவர்க்கமென்று கூறப்படுகிறது. தனமும் தான்யமும் தண்டத்தால் ரக்ஷிக்கப்படுகின்றன. இதனை நன்றாக ஏற்றுக்கொண்டு உலகஇயல்பைப்பாரும். சிலமனிதர்கள் அரசன்தண்டிப்பானென்றுபயந்து குற்றஞ்செய்யாமலிருக்கிறார்கள். சிலர் யமதண்டனைப்பயத்தாலும் சிலர் பரலோகபயத்தாலும் பாபஞ்செய்யாமலிருக்கிறார்கள். ஒருவரிடம் ஒருவருக்குள்ளபயத்தினால் சிலர் பாபஞ்செய்யாமலிருக்கிறார்கள். இப்படி உலகமிருப்பதைக்கண்டால் யாவும் தண்டத்தில்நிலைபெறவேண்டும். சிலர் தண்டத்திற்குப்பயந்துதான் ஒருவரையொருவர் விழுங்காமலிருக்கிறார்கள். தண்டம் ரக்ஷியா

விடில் இவ்வுலகம் பேரிருளில்முழுகிவிடும். அடங்காமலிருப்பவர்களையடக்குவதாலும் குற்றமுள்ளவர்களைச்சிக்ஷிப்பதாலும் அறிஞர்கள் தண்டமென்று சொல்லுகிறார்கள். பிராம்மணர்களுக்குச் சொல் தண்டமாகும்; [1]க்ஷத்திரியர்களுக்குக் கூலிகொடுப்பது தண்டமாகும். வைசியர்களுக்குப் பணம்தண்டமாகும். (சூத்திரனுக்கு ஊழியத்தைத்தவிர) வேறுதண்டமில்லையென்று சொல்லப்படுகிறது. ஓ! அரசரே! மனிதர்களுக்கு அவிவேகம்வாராமலிருப்பதற்கும் திரவியங்களைரக்ஷிப்பதற்கும் உலகத்தில் தண்டமென்னுங்கரை போடப்பட்டிருக்கிறது. எந்தத்தேசத்தில் அரசன் நன்குகவனிப்பதால் கரியஉருவமும் சிவந்தகண்ணுமுள்ள தண்டபுருஷன் கிளம்பிச் சஞ்சரிக்கிறானோ அங்குள்ளபிரஜைகள் அவிவேகத்தையடையமாட்டார்கள். பிரம்மசாரி, கிருஹஸ்தன், வானப்ரஸ்தன், ஸந்யாஸியென்னும் இந்தமனிதர்கள் தண்டத்தில்பயந்துதான் தம்தம்வழியில் நிற்கிறார்கள். பயமில்லாதவன் யாகஞ்செய்யமாட்டான்; தானஞ்செய்ய விரும்பமாட்டான். பயமில்லாதவனும் தன்னிலைமையிலிருக்கமாட்டான். எதிரியின்மர்மங்களையறுக்காமலும் செய்தற்கரியகாரியத்தைச் செய்யாமலும் மீன்பிடிப்பவனைப்போலக் கொல்லாமலும் பெரியஸம்பத்தையடையமுடியாது. கொல்லத்துணியாதவனுக்கு இவ்வுலகத்தில் கீர்த்தியும் பொருளும் பிரஜைகளுமில்லை. விருத்திரனென்னும் அஸுரனைக்கொன்றுதான் இந்திரன் மஹேந்திரன்என்கிறபெயரையும் அதற்குத்தக்கவீட்டையும் அடைந்து, உலகங்களுக்கு ஈசனுமானான். அடிக்கக்கூடியதேவர்களைத்தாம் உலகம் மிகவும்பூஜிக்கிறது. ருத்திரர், ஸ்கந்தர், அக்கினி, இந்திரன், வருணன், யமன், காலன், வாயு, மிருத்யு, குபேரன், ஸூர்யன், வஸுக்கள், மருத்துக்கள், ஸாத்தியர்கள், விசுவேதேவர்கள் இவர்கள் அடிக்குந்தன்மையுள்ளவர்களானதால் அவர்கள் பராக்ரமத்திற்குவணங்கி ஜனங்கள் அவர்களைப் பூஜிக்கிறார்கள். பிரம்மாவையும் தாதாவையும் பூஷாவையும் ஒருவரும் பூஜிக்கிறார்களில்லை. அடக்கமுள்ளவர்களும் மிக்கபொறுமையுள்ளவர்களும் எல்லாப்பிராணிகளிடத்தும் விருப்புவெறுப்பில்லாதவர்களுமான தேவர்களைச் சிலமனிதர்கள்மாத்திரம் பூஜிக்கிறார்கள். உலகத்தில் ஹிம்ஸையில்லாமல்ஜீவிக்கும்எவனையும் காணேம். பலமுள்ள பிராணிகள் பலமில்லாப்பிராணிகளால் ஜீவிக்கின்றன. கீரி எலிகளைத் தின்கிறது. கீரியைப் பூனைதின்கிறது. பூனையை நாய்தின்கிறது.

---

[1] ஸ்வதந்திரமின்றிப் பிறர்பொருளால்ஜீவிப்பது க்ஷத்ரியர்களுக்கு இகழ்ச்சியானது.

நாயை ஒருவகைப்புலி தின்கிறது. அந்தப்புலிகளையெல்லாம் மனிதன் கொல்லுகிறான். தர்மம் எப்படிப்போகிறது பாரும். [1]ஸ்தாவரஜங்கமம்யாவும் பிராணனுக்கு அன்னமென்று தெய்வம்விதிக்கிறது. அறிந்தவர்கள் இதில் சந்தேகப்படமாட்டார்கள். ஓ! அரசச்ரேஷ்டரே! எவ்விதம் [2](சூரத்தன்மை, தேஜஸ், தைரியம், ஸாமர்த்தியம் முதலிய க்ஷத்திரியஜாதிக்குள்ள தன்மையுள்ளவராக) ஈசனால் பிறப்பிக்கப்பட்டிருக்கிறீரோ அவ்விதமிருக்கக்கடவீர். மூடர்களானக்ஷத்ரியர்கள் கோபத்தையும் ஸந்தோஷத்தையும்விட்டுக் காடுசென்று தவஞ்செய்கிறவர்களாயிருந்தும் காய்கிழங்குகளின் வதமின்றிக் காலக்ஷேபஞ் செய்கிறார்களில்லை. ஜலத்திலும் பூமியிலும் பழத்திலும் பலஉயிர்களிருக்கின்றன. உலகத்தில் அவைகளைக் கொல்லாமலிருப்பவன் எவன்? பிராணிகளின் ஹிம்ஸையில்லாத ஜீவனம் என்னஇருக்கிறது? மிகச் சிறியஉருவமுள்ளவைகளும் அநுமானத்தால் அறியத்தக்கவைகளும் கண்ணிமைத்தலாலும் உயிரிழக்கத்தக்கவைகளுமான சிலபிராணிகளிருக்கின்றன. கோபத்தையும் அஸூயையையும்விட்டுக் கிராமத்திலிருந்து வெளிப்பட்டும் சிலமுனிவர்கள் அவிவேகத்தால் வனத்திலும் குடும்பமுறையுள்ளவர்களாகக் காணப்படுகிறார்கள். பூமியைக்கல்லி ஓஷதிகள் மரம்முதலியவைகளையும் பறவைகளையும் பசுக்களையும் வெட்டி மனிதர்கள் யாகஞ்செய்கிறார்கள். அவர்கள் ஸ்வர்க்கத்தையும் அடைகிறார்கள். ஓ! கௌந்தேயரே! தண்டநீதி நன்றாகச் செலுத்தப்பட்டால் எல்லாப்பிராணிகளுக்கும் எல்லாமுயற்சிகளும் நன்குபயன்படும். அதில் எனக்குச் சந்தேகமில்லை. உலகத்தில் தண்டமில்லாவிட்டால் இந்தப்பிராணிகள் நாசமடைந்துவிடும். ஜலத்திலுள்ள மீன்களைப்போல வலிமையில்லாதவர்களை வலிமையுள்ளவர்கள் விழுங்கிவிடுவார்கள். நன்குசெலுத்தப்பட்ட தண்டமானது பிரஜைகளை ரக்ஷிக்கிறதென்று முன்னொருகாலத்தில் பிரம்மதேவர் சொன்னது உண்மையே. அக்கினிகள் நாற்றமுள்ள இந்த மாம்ஸபிண்டத்தின் ஊதலில்பயந்து அதட்டப்பட்டனவாய் எரிவதும் தண்டத்தின் பயத்தினாலேதான். நன்மைதீமைகளை விளக்கிக்காட்டும் இந்தத்தண்டம் உலகத்திலில்லாவிடில் இவ்வுலகம் ஒரே இருளாகிவிடும்; ஒன்றுந்தெரியாது. மரியாதையைவிட்டு வேதத்தைப்பழித்து நாஸ்திகர்களாயிருப்பவர்களும் தண்டத்தால் பீடிக்கப்பட்டால் எளிதில்

---

[1] பிருஹதாரண்யகம் ஆறாவது அத்தியாயம் முதலாவது பிராம்மணம் 14-வதுகண்டத்தில் இவ்விதம் கூறப்படுகிறது.

[2] பகவத்கீதை 18-வதுஅத்யாயம். 43-வது சுலோகம்.

மரியாதையைக் காப்பாற்றத்தக்கவர்களாவார்கள். உலகம்யாவும் தண்டத்தால் ஜயிக்கப்பட்டது. உண்மையாகவே சுத்தனுயிருப்பவன் மிகவும் அரியன். தண்டத்தில் பயமுடையதாயிருத்தலால்தான் உலகம் மரியாதையுடன் அனுபவிக்கத்தக்கதாகிறது. நான்குவர்ணத்தார்களின் ஸந்தோஷத்திற்கும் நல்லநியாயம் வெளியாகிறதற்கும் அறம்பொருள்களைக் காப்பதற்கும் இந்தத்தண்டமானது பிரம்மாவினால் விதிக்கப்பட்டது. தண்டபயமில்லாவிட்டால் பக்ஷிகளும் துஷ்டமிருகங்களும், பசுக்களையும் மனிதர்களையும் யஜ்ஞத்திற்குரிய ஹவிஸுகளையும் தின்றுவிடும். பிரம்மசாரி அத்தியயனஞ்செய்யமாட்டான். ஸமயத்திற்குப் பசுக் கறக்கமாட்டாது. கன்னியானவள் மணம்புரிந்துகொள்ளமாட்டாள். இந்தத்தண்டம் பரிபாலியாவிட்டால் எல்லாமரியாதைகளும் அழிந்துபோம்; எல்லாவரம்புகளும் உடைந்துபோம். [1]எனது என்னும் எண்ணத்தை ஜனங்கள் கணக்கில் வைக்கமாட்டார்கள். விதிப்படி தக்ஷிணையுள்ள பலவருஷங்களில்செய்யத்தக்க ஸத்திரமென்னும் யாகங்களைப் பயமில்லாமல் அனுஷ்டிக்கமாட்டார்கள். ஆச்ரமம்பெற்றவர்கள் தம்தம் ஆச்ரமத்துக்குரிய தர்மத்தைச் சொன்னபடி செய்யமாட்டார்கள். ஒருவனும் கல்வியைக்கற்கமாட்டான். தண்டமில்லாவிட்டால் வண்டியில்கட்டிய காளை, குதிரை, ஒட்டகம், கழுதை, கோவேறுகழுதை இவைகள் (வண்டிமுதலிய) வாகனங்களை இழுக்கமாட்டா. வேலைக்காரர்கள் தலைவன்சொன்னதைச் செய்யமாட்டார்கள். தகப்பன் போதிக்கும் தருமத்தில் இளைஞன் எப்போதும் இருக்கமாட்டான். பிரஜைகள்யாவும் தண்டத்திலிருக்கின்றன. அறிஞர்கள் தண்டத்தில் பயமிருக்கிறதென்று சொல்லுகிறார்கள். மனிதர்களுக்கு இவ்வுலகமும் ஸ்வர்க்கமும் தண்டத்தில் நிலைபெற்றிருக்கின்றன. நன்கு செலுத்தப்பட்டு விரோதிகளை நாசஞ்செய்யும் தண்டம் எந்தத்தேசத்தில் நடையாடுகிறதோ அங்கு பொய்யும் பாவமும் வஞ்சகமும் காணப்படுகிறதில்லை. தண்டம் ஓங்கிநில்லாவிட்டால் ஹவிஸைக்கண்டு நாய் நக்கிவிடும்; காகம் புரோடாசத்தைக் கொண்டுபோய்விடும். இந்த ராஜ்யமானது தருமமாகவோ அதருமமாகவோ அரசனுக்கு விதிக்கப்பட்டபடியால் இதில் சோகப்படக்கூடாது. புஜிக்கக்கூடியவைகளைப் புஜியும்; யாகங்களைச் செய்யும். செல்வவான்கள் பரிசுத்தமானஉடையுள்ளவர்களும் அன்புள்ள மனைவிகளோடுசேர்ந்து வஸிப்பவர்களும்

[1] எவனும் எல்லாவற்றையும் தன்னுடைமை என்று நினைப்பான் என்பது கருத்து.

உத்தமமான அன்னத்தைப் புஜிப்பவர்களுமாயிருந்துகொண்டு ஸுக மாகத் தருமத்தைச்செய்கிறார்கள். எல்லாமுயற்சிகளும் பொருளைப் பற்றியிருக்கின்றன; ஸந்தேஹமில்லை. அந்தப்பொருளோ தண்டத் தைப்பற்றியிருக்கிறது. தண்டத்தின் சிறப்பைப் பாரும். (பசுவைக் கொல்லுதற்குக் கொட்டிலில்புகுந்த புலியைக்) கொல்லாமலிருப்பது (அப்பசுவின்) பெரியகொலையாய் முடியும். ஆகையால், தருமத்தை மேற்கொள்ளவேண்டியதுதான் மேலானது. இவ்விதமான தர்மோப தேசம் உலகம் நடைபெறுவதற்காகவே செய்யப்பட்டிருக்கிறது. முழுமையும் குணமேயுள்ளதும் முழுமையும் குணமேயில்லாதது மானபொருள் ஒன்றுமில்லை. நல்லதும் கெட்டதுமான இவ்விரண் டும் எல்லாக்கார்யங்களிலும் காணப்படுகின்றன. பலஜனங்கள் எரு துகளை விருஷணத்தைநசுக்கிப் பிறகு அவைகளின்மூக்குகளில் துளை யிட்டுப் பலசுமைகளைத் தூக்கச்செய்து கட்டவும் அடிக்கவும் செய்கி றார்கள். மஹாராஜரே! இப்படி உலகமானது பலவிதமான அந்த அந்த [1] நியாயங்களால் கலகலத்துப் பயர்துகொண்டிருக்கிறது. நீரும் பழ மையான தருமத்தைச்செய்யும். ஓ! கௌந்தேயரே! யாகம் செய் யும்; தானம் செய்யும்; பிராணிகளைக் காப்பாற்றும்; தருமத்தை நன்றாகப் பரிபாலனஞ்செய்யும்; பகைவர்களைக் கொல்லும்; இஷ்டர் களை ரக்ஷியும். அரசரே! பகைவர்களைக் கொல்லும்விஷயத்தில் உமக் குச் சோகம்வேண்டாம். ஓ! பாரதரே! பகைவர்களைக்கொல்லும் அரசனுக்குச் சிறிதும் பாதகமில்லை. ஆயுதமெடுத்து அடிக்கவருகிற வனை ஆயுதமெடுத்து எவன் அடிக்கிறானோ அவன் கொலைப்பாதக முள்ளவனாகான். கோபம் கோபத்தைச்சேருகிறது. எல்லாப் பிரா ணிகளினுள்ளுமிருக்கும் ஆன்மா வதஞ்செய்யப்படத்தக்கதன்று; ஸந் தேஹமில்லை. அடிபடக்கூடாத ஆத்மா யாரால் எப்படி அடிக்கப்படும்? ஒருமனிதன் (பழையவீட்டைவிட்டுப்) புதிதாகக்கட்டிய வீட்டில் பிர வேசஞ்செய்வதுபோல ஜீவன் பழையசரீரங்களைத் தள்ளிவிட்டுப் புதிய அந்த அந்தச் சரீரங்களையடைகிறது. இதுதான் மரணமென்று உண்மையறிந்தவர்கள் கூறுகிறார்கள்” என்று இங்ஙனம்சொன்னான்.

## பதினாருவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



**(பீமஸேனன் தர்மபுத்திரரை இடித்துரைத்து அசுவமேதம் செய்யும்படி சொன்னது.)**

*அர்ஜுனன்சொல்லியவார்த்தையைக்கேட்டு மிகவும்பொறுமைக்காரனும் தம்பியுமானபீமன் தைரியங்கொண்டு தமையனான அந்தயுதிஷ்டிரரைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினான். "ஓ! ராஜரே! நீர் தர்மந்தெரிந்தவர். உலகில் உமக்குத்தெரியாதது ஒன்றுமில்லை. உம்முடையநடையை எப்பொழுதும் நாங்களும்கற்றுக்கொள்ளுகிறோம். ஆகிலும் அவ்விதமே செய்யமுடியாதவர்களாயிருக்கிறோம். 'சொல்லவேண்டாம், சொல்லவேண்டாம்' என்றஎண்ணம் என்மனத்திலிருந்தது. மிக்கதுக்கத்தால்மாத்திரம் சொல்லத்தொடங்கினேன். அதைத் தெரிந்துகொள்ளும். உமக்குண்டான அவிவேகத்தால் எல்லாம்ஸந்தேஹமுள்ளதாகிவிட்டது. எங்களுக்கும் அதைரியமும் அப்படியே பலக்குறைவுமுண்டாயின. உலகத்திற்குராஜாவும் எல்லாச்சாஸ்திரங்களையும் நன்குதெரிந்தவருமான நீர் சிறியமனிதன்போலச் சோகத்தால் இப்படிப்பட்ட அவிவேகத்தை எப்படி அடையக்கூடும்? உலகத்தின் [1]ஆபத்தும்ஸம்பத்தும் உமக்குத் தெரிந்திருக்கின்றன. நிகழ்காலத்திலும் வருங்காலத்திலும் உமக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. ஓ! மஹாராஜரே! ஓ! ஜனாதிபரே! இப்படியிருக்கும்பொழுது ராஜ்யஞ்செய்யவேண்டுமென்ற விஷயத்தில் சில காரணமாத்திரம் நான்சொல்லுகிறேன். அதை மனத்தோடு கேளும். உலகில் சரீரத்தைப்பற்றினதென்றும் மனத்தைப்பற்றினதென்றும் இருவகை வியாதிகளுண்டாகின்றன. அவைகளில் ஒன்றிலிருந்து மற்றொன்று உண்டாகிறது. ஒன்றைப்பற்றாமல் மற்றொன்று உண்டாவதாகக் காணப்படவில்லை. சரீரவியாதியால் மனோவியாதியும் மனோவியாதியால் சாரீரவியாதியும் உண்டாவது நிச்சயம். சாரீரம் மானஸமென்ற இந்தவியாதிகளையும்குறித்து முன்பு போனதற்காக எவன் சோகப்படுகிறானோ அவன் அந்தச்சோகத்தால் துக்கத்தையும் அந்த இருவகைவியாதிகளையும் திரும்பவும் அடைகிறான். சீதம் உஷ்ணம் வாயுவென்னும்இம்மூன்றுகுணங்களும் சரீரத்திலுண்டானவைகள். இம்மூன்றுகுணங்களும் ஸமமாயிருப்பதுதான் நோயில்*

---

[1] 'நல்லவழியும் கெட்டவழியும்' என்பது பழையவுரை.

லாமையின் லக்ஷணமென்று சொல்லப்படுகிறது. அவைகளில் ஒன்று அதிகமானால் சிகித்ஸை விதிக்கப்படுகிறது. அதாவது: உஷ்ணத்தால்சீதமும் சீதத்தால் உஷ்ணமும் இவ்விரண்டுகளாலும் வாயுவும் முறையே விலகுவதாய்ச் சொல்லப்படுகின்றன. ஸத்துவம், ரஜஸ், தமஸ்என இந்த மூன்றுகுணங்களும் மனத்திலுண்டானவை. இம்மூன்று குணங்களும் ஸமமாயிருப்பது மனோவியாதியில்லாமையின் லக்ஷணமென்று சொல்லப்படுகிறது. மூன்றுகுணங்களில் ஒன்று அதிகமானால் அதன்பரிகாரத்துக்கு விதிசொல்லப்படுகிறது. ஸந்தோஷத்தால் துக்கமும் துக்கத்தால் ஸந்தோஷமும் இவ்விரண்டுகளாலும் அவிவேகமும் முறையே நிவ்ருத்திக்கின்றனவென்று விதி சொல்லப்படுகிறது. ஸுகத்திலிருக்கும் சிலமனிதர்கள், அறியாமையால், அந்த ஸுகத்தைவிலக்கத் துக்கத்தைநினைக்கவிரும்புகிறார்கள். துக்கத்திலிருக்கும் சிலமனிதர்கள் அதைவிலக்க ஸுகத்தை நினைக்கவிரும்புகிறார்கள். நீர் துக்கமுள்ளவராகவுமில்லை; துக்கமில்லாதவராகவுமில்லை; ஸுகமுள்ளவராகவுமில்லை; ஸுகமில்லாதவராகவுமில்லை; துக்கத்தை நினைக்கத்தக்கவராகவுமில்லை; ஸுகத்தை நினைக்கத்தக்கவராகவுமில்லை; என்னசெய்கிறது? தெய்வம் பெரிதாயிருக்கிறது. அல்லது இவ்விதம் ஸந்தோஷப்படுவது உம்முடைய ஸ்வபாவமோ. பாண்டவர்களின் கண்ணெதிரே, ரஜஸ்வலையும் ஒரே வஸ்திரமுள்ளவளுமாயிருந்த திரௌபதி ஸபையிலிழுபட்டதைக் கண்டும் அதை நினையாமலிருக்கிறீரே. பட்டணத்தைவிட்டு ஓடினதும் தோல்களைக் கட்டிக்கொண்டதும் பெரியவனத்தில் வஸித்ததும் நீர் நினைக்கவில்லையே. ஜடாஸுரனிடத்தில் பட்டபாட்டையும் சித்ரஸேனனோடு நடந்தயுத்தத்தையும் ஸைந்தவனிடமிருந்து நேர்ந்தகஷ்டத்தையும் எப்படி மறந்துவிட்டீர்? திரும்பவும் அஜ்ஞாதவாஸத்தில் ராஜகுமாரியான திரௌபதியைக் கீசகன் காலால் உதைக்கும்படிநேர்ந்த கஷ்டத்தையும் எப்படிமறந்தீர்? ஓ! சத்துருவையடக்குகிறவரே! துரோணபீஷ்மர்களுடன் முன்பு உமக்கு நேர்ந்தயுத்தம்போல இப்பொழுது மனமென்னும் ஒருசத்துருவோடு யுத்தஞ்செய்யும்படி நேர்ந்திருக்கிறது. இந்தச்சண்டையில் பாணங்களாலும் நண்பர்களாலும் உறவினர்களாலும் ஆகவேண்டியதொன்றுமில்லை. நீர் ஒருவராகவே செய்யவேண்டிவந்திருக்கிறது. இந்தச் சண்டையில் மனத்தைஜயிக்காமல் பிராணனைவிடுவீரானால் வேறு சரீரமெடுத்தபிறகும் இந்தச்சண்டை செய்யவேண்டிவரும். பிரபுத்தனமில்லாதவன் பதிதன். அவன் எச்சிலுக்கொப்பானவன். அவன்

அல்பன். பலமுள்ளவனுக்கும் அதிக அபத்தியஞ்செய்தால் அவன் பலம் அவனைக் காப்பாற்றமாட்டாது. ஓ! பாதச்ரேஷ்டரே! ஆகையால், கண்ணிற்காணும் இந்த ஸ்தூலசரீரத்தைவிட்டுக் காணக்கூடாத உருவமுடையமனத்திற்கும் புறத்திலுள்ளதான பதத்தையடையவேண்டி யமமுதலிய யோகானுஷ்டானத்தால் இப்பொழுதே மனத்தோடு யுத்தஞ்செய்யும். யுத்தத்தில் அந்தமனத்தை ஜயிக்காவிட்டால் என்னகதியையடைவீர்? ஓ! மஹாராஜரே! மனத்தை ஜயித்தால் கிருதார்த்தராவீர். இவ்விதமான எண்ணத்தை உறுதியாகக்கொண்டு பிராணிகளின் ஆபத்துஸம்பத்தைத்தெரிந்து தகப்பன்பாட்டன்பரம்பரையில்வந்த ஒழுக்கத்திலிருந்துகொண்டு நியாயப்படி ராஜ்யத்தைப் பரிபாலனஞ்செய்யும். பாபியான துரியோதனன் இனத்தாரோடுகூடத் தெய்வபலத்தாலும் திரௌபதியின் கூந்தல்முடி அதிர்ஷ்டத்தாலும் யுத்தத்திலடிக்கப்பட்டான். ஓ! பார்த்தரே! விதிப்படி தக்ஷிணையுள்ள அச்வமேதமென்ற யாகத்தைச்செய்யும். நாங்கள் உமக்குத் தாஸர்களாயிருக்கிறோம். வீரியம்பொருந்திய வாஸுதேவரும் உமக்குவேண்டியதைச்செய்வார்" என்றுசொன்னான்.

பதினேழாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(தர்மபுத்திரர் வைராக்யமடைவதே சிறந்ததென்று பீமனுக்குச்சொன்னது.)

யுதிஷ்டிரர், "ஸந்தோஷமில்லாமை, தவறுதல், மதம், ஆசை, பொறுமையில்லாமை, பலம், அவிவேகம், அபிமானம், பரபரப்பு இப்படிப்பட்ட பாவங்களால் பிடிக்கப்பட்டு, நீ ராஜ்யத்தில் பேராசைகொண்டிருக்கிறாய். இவைகளிலிருந்துவிடுபட்டுப் போக்யவஸ்துக்களைவிட்டுப் பொறுமையடைந்து நல்லஸுகிமாயிரு. இந்தப்பூமிமுழுமையும் ஒரே அரசனாகஇருந்து ஆளுபவனுக்கும் வயிறு ஒன்றுதானே. ராஜ்யத்தை நீ என்னகொண்டாடுகிறாய்? ஓ! பாதச்ரேஷ்டனே! ஒருநாளாலும் பலமாஸங்களாலும் பூர்த்திசெய்யமுடியாத இவ்வாசையை ஆயுள்முழுமையாலும் பூர்த்திசெய்யமுடியாது. அக்கினியானது (விறகுகளால்) எரிக்கப்பட்டால் மிகவும் ஜ்வாலையுள்ளதாகும்; எரிக்கப்படாவிட்டால் தானாகவே சாந்தமாகும். அதுபோல எரியத்தொடங்கும் வயிற்றிலுள்ள அக்னியை ஆகாரத்தைக்குறைத்து நீ சாந்தமாகச்செய். புத்தியில்லாதவன் தன்வயிற்றினிமித்தம் பலஹிம்சை

யைச் செய்கிறான். வயிற்றைஜயித்தால் அதனாலுண்டாகும் நற்கதி யால் இந்தப்பூமியும் உனக்கு ஜயிக்கப்பட்டதாகும். மனிதர்களுக் குரிய பலவிஷயபோகங்களையும் ஐசுவரியத்தையும் நீகொண்டாடு றாய். போகத்தைவிட்டவர்களும் தவத்தால் இளைத்தவர்களுமான பலர் மிகவும் உத்தமமானபதவியை அடைகிறார்கள். தன்னிடத்தில் இல்லாத திரவியத்தையடைவதும் அடைந்ததைப் பரிபாலிப்பதுமான ராஜ்யத்தின் யோகக்ஷேமமும் புண்ணியபாபங்களும் உன்னிடத்தி லிருக்கின்றன. இப்பெரியசுமையிலிருந்து விடுபட்டுத் தியாகமென் னும் ஸந்யாஸத்தைப் பெற்றுக்கொள். புலியானது தன் ஒருவயிற் றுக்காகப் பலஹிம்ஸையைச்செய்கிறது. அந்தமிருகம்போன்ற புத்தி கெட்ட சிலமனிதர்களும் அவ்வழியிற்செல்லுகிறார்கள். அரசாக விருந்தும் ஸந்தோஷமில்லாமலிருப்பவர் பலர். உள்ளவிஷயஸுகங் களைத்தள்ளிவிட்டு ஸந்யாஸத்தில் புத்தியைவைத்துச் சந்தோஷிப்ப வன் ஒருவனே. புத்திகளின்வேற்றுமை எப்படியிருக்கிறது பார். இலையை ஆகாரமாகக்கொண்டவர்களும், கிடைத்ததைக் கல்லால் தேய்த்துப் புஜிப்பவர்களும், பல்லை உரலாகக்கொண்டவர்களும், தண் ணீரையும் காற்றையும் புஜிப்பவர்களுமான ஸந்யாஸிகளால் இந்தநர கம் ஜயிக்கப்பட்டது. மிச்சமின்றி இந்தப்பூமிமுழுமையும் ஆளு கிறவேந்தனும் கல்லையும் பொன்னையும் ஸமமாகப்பார்க்கும் ஸந்யா ஸியுமாகிய இவ்விருவர்களில் அந்தஸந்யாஸி பயன்பெற்றவனாவான். அரசன் அங்ஙனமாகான். எந்தக்காரியங்களிலும் முயற்சியில்லாதவ னும் ஆசையும் அபிமானமும் அற்றவனுமாயிரு. இவ்வுலகிலும் மேலு லகிலும் அழிவற்றதும் துன்பமற்றதுமானபதத்தை அடை. போகத் தில் விருப்பமுள்ளவன் சோகப்படுகிறான். போகவிருப்பமற்றவனுக் குச் சோகமில்லை. ஆகையால், இப்போகவிருப்பமனைத்தையும்விட்டு (ராஜ்யத்திலுள்ளவனும் தியாகிதானென்ற) பொய்வாதத்திலிருந்து விடுதலையடை. பித்ருயானம் தேவயானமென இவ்விருவழிகளும் பிரஸித்தமானவைகள். இவைகளில் யாகமுதலிய கர்மாவைச்செய் கிறவர்கள் பித்ருயானமென்ற வழியாலும் ஆசையைவிட்டஸந்யா ஸிகள் தேவயானமென்றவழியாலும் செல்லுகிறார்கள். மஹரிஷிகள் தவத்தாலும், பிரம்மசரியத்தாலும், வேதாத்தியயனத்தாலும் காலங் கழித்துச் சரீரங்களைவிட்டு மிருத்யுவின்பயமில்லாத இடத்தை யடைகிறார்கள். இவ்வுலகில் ஆசையும் அப்படியே கர்மாவும் போகத் திற்குரியபாபமென்று சொல்லப்படுகின்றன. இவ்விரண்டுபாபங்களி லிருந்தும் விடுபட்டவன் அந்தப்பெரிய பதவியையடைகிறான். த்வந்

துவமற்றவரும் இப்பாவங்களிலிருந்து விடுபட்டவரும் மோக்ஷத்தைக்கண்டவருமான ஜனகமஹாராஜாவினால் முன்பு ஒருகாலத்தில் சொல்லப்பட்ட, 'என்னுடையசெல்வம் அளவற்றது; எனக்கு ஒன்றுமில்லை; மிதிலை தஹிக்கப்பட்டால் எனக்கு ஒன்றும் தஹிக்கப்படவில்லை' என்னும் இந்தவசனத்தைச் சொல்லுகிறார்களே. [1]ஞானமென்னும் உப்பரிகையிலேறினவன் சோகப்படும் ஜனங்களைக்கண்டு, தான் சோகமடையான். மந்தபுத்தியுள்ளவன் பூமியிலிருந்தாலும் மலையின்மேலிருந்தாலும் (உண்மையைக்) காணமாட்டான். தெரிந்துகொள்ளவேண்டியதைத் தெரிந்துகொள்ளுகிறவன்தான் கண்ணுள்ளவனும் புத்தியுள்ளவனுமாவான். அறியாதவைகளையறிவிப்பதாலும் ஸந்தேகங்களைத் தெளிவிப்பதனாலும் புத்தியென்று சொல்லப்படுகிறது. த்யானநிஷ்டையுள்ளவர்களும் ஞானமடைந்தவர்களும் பிரம்மத்தன்மைபெற்றவர்களுமான பெரியோர்களுடையவுண்மையை எவன் அறிகிறானோ அவன் பெருமையையடைவான். எப்பொழுது ஆகாசமுதலிய இந்தப்பூதங்களின் பலவிதவேற்றுமை ஒருவஸ்துவிலிருப்பது (அதாவது பிரபஞ்சம்யாவும் பிரளயத்தில் ஒரேவஸ்துவாயிருப்பது) என்றும் அதுபோலவே அவ்வொருவஸ்துவிலிருந்தே பலவித வேற்றுமையுண்டாவதென்றும் தெரிந்து அநுபவிக்கிறானோ அப்பொழுது [2]பிரம்மமாகிறான். அந்தப்புத்தியுள்ள ஜனங்கள் அந்தக்கதியடைகிறார்கள். தவமில்லாதவர்களும் புத்தியில்லாதவர்களும் ஞானமில்லாதவர்களும் அதனை அடையமாட்டார்கள். எல்லாம் புத்தியில் நிலைபெற்றிருக்கின்றன" என்றுசொன்னார்.

---

## பதினெட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன் ஜனகருக்கும் அவர்மனைவிக்கும்நடந்த ஸம்வாதத்தை எடுத்துக்கூறிக் கர்மமார்க்கத்தை அனுஷ்டிக்கவேண்டுமென்று தர்மபுத்திரருக்குச் சொன்னது.)

இப்படிச்சொல்லிப் பேசாமலிருந்த தர்மபுத்திரரை, அவரது வசனமென்னும்பாணத்தால் பீடிக்கப்பட்டுச் சோகத்தாலும் துக்கத்

---

1 'சோகப்படத் தகாதவர்களைக் குறித்துச் சோகப்படும் மனிதர்களை, ஞானமென்னும் உப்பரிகையேறினவன் மலையிலிருப்பவன் கீழிருப்பவர்களைப் பார்ப்பதுபோலப் பார்க்கிறான். புத்திக்குறையுள்ளவன் இப்படிப்பார்க்கமாட்டான்' என்பது வேறுபாடம்.

2 'ப்ரஹ்மஸம்பத்யதே' என்பது மூலம். 'பிரம்மத்தைச் சேருகிறான்' என்பது ஒருவகையாருடைய கொள்கை.

தா லும் வருந்தும் அர்ஜுனன் திரும்பவும் சொல்லத்தொடங்கினன். " ஓ! பாரதரே! விதேஹராஜாவான ஜனகருக்குத் தம்மனைவியோடு நடந்த ஸம்பாஷணமென்னும் இந்தஇதிஹாஸத்தை ஜனங்கள் சொல்லுகிறார்கள். ராஜ்யத்தைநீக்கிப் பிச்சையேற்கத்துணிந்த விதேஹ ராஜரைப்பார்த்து அவர்மனைவி துக்கத்துடன் மறுமொழிசொன்னாள். செல்வங்களையும் பலவகைரத்தினங்களையும் குழந்தைகளையும் நண்பர்களையும் துறந்து இப்படிப் பரிசுத்தமானவழியையும் விட்டு ஜனகர் மயக்கமடைந்தார். ஆசையையும் அஸூயையையும்விட்டு ஒன்றுமில்லாதவராய்ப் பிச்சைத்தொழிலை மேற்கொண்டு ஒருபிடி அவல் அல்லது அரிசி எப்பொழுதுவருமென்று எதிர்பார்த்திருக்கும் அந்தஜனகரை அன்புள்ள அவருடையமனைவி கண்டாள். மானமுள்ள அவர்மனைவி எவ்விடத்திலும் பயத்தைவிட்டிருக்கும் தன்னாயகரைச் சமீபித்துக் கோபங்கொண்டு ஒருவருமில்லாவிடத்தில் யுக்தியுள்ள இவ்வார்த்தையைச் சொல்லத்தொடங்கினாள்.

"பொருளுந் தானியமும் நிறைந்த சொந்தமான ராஜ்யத்தைத் தள்ளிவிட்டு ஓடெடுக்குந் தொழிலையடைந்து ஒருபிடிதான்யம் எப்பொழுது கிடைக்குமென்று ஏன் எதிர்பார்க்கிறீர்? ஓ! அரசரே! உமதுகொள்கை வேறு உமதுநடக்கை வேறாயிருக்கின்றன. பெரிய ராஜ்யத்தைத் தள்ளிவிட்டு அற்பத்தில் ஆசைப்படுகிறீர். ஓ! அரசரே! இப்பிடிஅரிசியைக்கொண்டு அதிதிகளை ஆராதிக்கத்தகுமோ? அல்லது தேவர்களையும் ரிஷிகளையும் பிதிர்க்களையும் ஆராதிக்கக் கூடுமோ? உம்முடைய இந்தச்ரமமானது வீண். ஓ! ராஜரே! கர்மாவைவிட்டபடியால் தேவர்களும், அதிதிகளும், பிதிர்க்களுமாகிய எல்லோராலும் விடப்பட்டவராகச் செல்லுகிறீர். மூன்றுவேதமறிந்தவர்களும் பெரியோர்களுமான பல்லாயிரம்பிராம்மணர்களை ரக்ஷிப்பவராயிருந்துவிட்டு அப்படிப்பட்டநீர் இப்பொழுது பிறர்களிடமிருந்து (வயிறுவளர்ப்பதற்குப்) பொருளைவிரும்புகிறீரே. விளங்கிக்கொண்டிருக்கும் லக்ஷ்மியைத்தள்ளிவிட்டு நாய்போல இப்பொழுது காணப்படுகிறீர். இப்பொழுது உமதுதாய் பிள்ளையில்லாதவளாகிறாள். கௌஸல்யையும் உம்மால் பதியற்றவளாகிறாள். தர்மத்தையும் மற்றுமுள்ள பலபிரயோஜனத்தையும் விரும்பும் பலஅரசர்கள் தீனர்களாகி உமதுபிரியத்தை விரும்பிக்கொண்டு உம்மையேஆசிரயித்து உபாஸிக்கிறார்களே? அவர்களையும் பயனற்றவர்களாய்ச் செய்துவிட்டு நீர் எந்த உலகத்தை அடையப்போகிறீர்? ஓ! ராஜரே! பாரதீனர்களாயிருக்கும் மனிதர்களுக்கு மோக்ஷம் ஸந்தேஹப்படக்கூடியது. ஆகை

யால் இவ்விதமான பாவஞ்செய்யும்உமக்கு மேலுலகமுமில்லை; கீழுலகமுமில்லை. தர்மந்தவறாத தாரங்களைத்தள்ளிவிட்டு ஜீவிக்கவிரும்பும் உமக்கு நல்லலோகம்ஏது? பலவிதஆடைகள், ஆபரணங்கள், மாலைகள், வாஸனைப்பொருள்கள் இவைகளைநீக்கிவிட்டு வேலையின்றி எதற்காகப் போகிறீர்? தண்ணீர்த்தொட்டிபோலவும் பழங்கள்நிறைந்த பெரியமரம்போலவும் பிராணிகள்யாவற்றிற்கும் பெரியபரிசுத்தமான போஷகராயிருந்தநீர் பிறரை யாசிக்கப்புறப்படுகிறீரே. வேலையைவிட்டு ஸந்யாஸியாயிருந்தால் யானையைக்கூட மாம்ஸந்தின்னும் பலமிருகங்களும் பலபுழுக்களும் தின்றுவிடுகின்றன. ஒருபயனும் அற்றஉம்மைத்தின்னக் கேட்கவும்வேண்டுமோ? ஒருவன் உமதுஇந்தக்கடத்தையுடைத்தாலும் மூன்றாகச்சேர்த்த இந்தத்தண்டத்தையும் உமதுகாஷாயத்தையும் பிடுங்கினாலும் உமதுமனம் அவன்மீது எங்ஙனமிருக்கும்? யாவற்றையும்விட்டஉமக்கு இப் பிடிஅரிசியில் என்னஆசை வேண்டியிருக்கிறது? இந்த அரிசிக்குச்செய்யும் வேலையும் ராஜ்யமுழுவதற்குஞ் செய்யும்வேலையும் ஒன்றன்றோ? அங்ஙனமிருக்கையில் இதனை எதற்காக நிச்சயித்தீர்? சரீரத்தைக்காப்பாற்ற விரும்பி இந்தப் பிடிஅரிசிக்குப் பாடுபட்டீரானால் உமதுஎண்ணம் வீண். (இதற்கு ராஜ்யத்தைவகிப்பது நல்லது.) உமக்கு நான்யார்? எனக்கு நீர்யார்? என்னிடம் உமக்கு என்னஸ்நேஹம்? (இவைகளையல்லவோ விடவேண்டும்; இல்லாவிட்டால்) உமது ஆசைக்குத்தக்கபடி உப்பரிகையும் படுக்கையும் வாகனமும் ஆடையும் ஆபரணமுமுள்ள ராஜ்யத்தைஆளும். பொருளில் ஆசையைவிட்டவர்களும் பொருளற்றவர்களும் நண்பர்களை விட்டவர்களும் ஒன்றுமில்லாதவர்களுமான துறவிகளாயிருந்தும் இன்பத்தைவிரும்பிக் குடம் தடிமுதலியவற்றைச் சேர்த்து வைத்திருப்பவர்களைக்கண்டு ஆசைப்படுகிற மனிதன் ராஜ்யத்தை எங்ஙனம் விரும்பாமலிருப்பான்? எப்பொழுதும்வாங்குகிறவனுக்கும் எப்பொழுதுங்கொடுக்கிறவனுக்குமுள்ள வேற்றுமையைத் தெரிந்துகொள்ளும். இவர்களுள் எவன் சிறந்தவன்? எப்பொழுதும் யாசிப்பவர்களும் டம்பமுள்ளவர்களுமான ஜனங்களிடத்தில் கொடுத்ததக்ஷிணை காட்டுத்தீயில்செய்த ஆகுதிபோலாகும். ஓ! ராஜரே! அக்கினியானது விறகையெரிக்காமல் அடங்காததுபோல எப்பொழுதும் யாசிக்கும்தொழிலுள்ள பிராம்மணன் சாந்தமுள்ளவனாகமாட்டான். ஸாதுக்களுக்கு அன்னமிடும் மனிதனுடைய ஜீவனந்தான் இவ்வுலகில் நிலைபெற்றது. அன்னங்கொடுக்கும் அரசனில்லாவிட்டால் மோக்ஷத்தைவிரும்பும் துறவிகள்

எங்கிருக்கமுடியும்? இவ்வுலகத்தில் கிருஹஸ்தர்கள் அன்னத்தை ஆச்ரயித்து ஜீவிக்கவேண்டும். அவ்வன்னங்கொண்டே ஸந்யாஸிகளும் ஜீவிக்கவேண்டும். பிராணனானது அன்னத்தால் நிலைபெறுகிறது. அன்னமளிப்பவன் பிராணனைக் கொடுத்தவனாகிறான். கிருஹஸ்தர்களிலிருந்து விடுபட்டு ஸந்யாஸியாயிருப்பவர்களும் அந்தக்கிருஹஸ்தர்களையே ஆச்ரயித்துச் சிலபெருமையையும் சிலபிரதிஷ்டையையும் பிடித்துக்கொண்டுதானிருக்கிறார்கள். யாசிப்பதாலும் விடுவதாலும் அறியாமையாலும் ஸந்யாஸியாகமுடியாது. நேராகவே திரவியங்களை விடுகிறவன் எவனோ அவனை முக்தனென்றும் ஸந்யாஸியென்றும் அறியும். ஆசையுள்ளவன்போலநடக்கிற ஆசையற்றவனும் பந்தத்திலிருந்து விடுபட்டவனும் சத்ருவினிடமும் மித்திரனிடமும் ஸமபுத்தியுள்ளவனுமாயிருப்பவன் முக்தனாவான். (மடம், பிக்ஷை, புஸ்தகம்முதலிய) பலவகைப்பாசங்களால் கட்டப்பட்டவர்களும் வீணில் பலபோகத்தைத் தேடுகிறவர்களுமாகி முண்டனஞ்செய்துகொண்டு காஷாயவுடையுள்ளவர்களாய்த் தமக்குத் தானங்கிடைக்கவேண்டி ஸந்யாஸம்பெறுகிறார்கள். வேதத்தையும் தம்பெயரையும் பிள்ளைகளையும் தள்ளிவிட்டுப் புத்தியில்லாதவர்கள் மூன்றுதண்டத்தையும் காஷாயத்தையும் எடுத்துக்கொள்ளுகிறார்கள். தர்மவேஷம் பூண்ட மொட்டைகளுக்கு மனத்திலிருக்கும் [1]கஷாயம் நீங்காமலிருக்கையில் உடுக்கப்படும்காஷாயம் வயிறு வளர்க்கவேண்டியென்றே எனதபிப்பிராயம். ஓ! மஹாராஜரே! ஜிதேந்திரியர்களாய்க் காஷாயம், தோல், மரவுரி இவைகளையுடுத்தவர்களும் அவதூதர்களும் ஜடைதரித்தவர்களும் சிகையற்றவர்களுமான ஸாதுக்களைப் பரிபாலனஞ்செய்துகொண்டு உலகங்களைஜயிப்பீர். அக்னியாதானமென்னும் கர்மாவையும் குருவுக்காக நல்லதக்ஷிணையுள்ள பலயாகங்களையும் ஒவ்வொருநாளும் செய்பவனெவனோ அவனைக்காட்டிலும் தர்மத்திற் சிறந்தவன் யார்?' என்றுசொன்னாள். இவ்வுலகில் ஜனகரென்னுமரசர் உண்மையறிந்தவரென்று சொல்லப்படுகிறார். அவரும் இப்படிப்பட்ட அவிவேகம் அடைந்தவரானார். ஆகையால், நீர் அவிவேகத்துக்குள்ளாகவேண்டாம். நாம் எப்பொழுதும் இவ்விதத் தர்மத்தைச்செய்பவர்களும் தானத்தையும் தவத்தையும் மேற்கொண்டவர்களும் ஆசையையும்சினத்தையும் விட்டவர்களும் நல்ல எண்ணமுள்ளவர்களும் மிகவும் அடக்கமுள்ளவர்களும் பிராணிகளைப்பாதுகாப்பதில் முயற்சியுள்ளவர்களும் பெரியோர்களையும் குருக்களையும்

1 காமக்குரோத முதலிய கல்மஷம்.

பூஜிப்பவர்களுமாயிருந்து யாகங்களைச்செய்து நல்லஉலகங்களையடைவோம்; பிராம்மணர்களுக்கு அனுகூலர்களாயும் உண்மையுரைப்பவர்களாயும் தேவர்களுக்கும் அதிதிகளுக்கும் மற்றப்பிராணிகளுக்கும் விதிப்படி திருப்தி செய்கிறவர்களாயுமிருந்து இஷ்டமான பதத்தைப்பெறுவோம்" என்றுசொன்னான்.

---

பத்தோன்பதாவது அத்தியாயம்.

ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(தர்மபுத்திரர் ஸந்யாஸமே சிறந்ததென்று அர்ஜுனனைப் பார்த்துச் சொன்னது.)

தர்மபுத்திரர், "அப்பா! கர்மசாஸ்திரங்களையும் பிரம்மசாஸ்திரங்களையும் நானறிகிறேன்; கர்மத்தைச் செய்யென்றும் கர்மத்தை விடென்றும் சொல்லுகிற இரண்டுவிதமான வேதவசனத்தையுமறிகிறேன். பலயுக்திகளால் விசாரித்தாலும் சாஸ்திரங்கள் ஒன்றுக்கொன்று பொருந்தாதவையாகக் காணப்படும். இப்படிப்பட்ட சாஸ்திரத்தில் எது ஸித்தாந்தமோ அதையும் முறைப்படி நானறிகிறேன். நீயோ சாஸ்திரத்தைமாத்திரம் படித்தவன்; பெரிய பிடிவாதமுள்ளவன். சாஸ்திரத்தின்கருத்தை உண்மையாக அறிந்துகொள்ள நீ எவ்விதத்திலும் வல்லவனல்லன். தர்மத்தைக் கண்டவனானால் நீ இப்படிப் பேசமாட்டாய். உண்மையான சாஸ்திரத்தின் கருத்தைக் கண்டவனும் தர்மத்தின்நிச்சயம் தெரிந்தவனும் எவனோ அவன் இப்படிப் பேசவேமாட்டான். ஏ! அர்ஜுனா! ஆகிலும், உடன்பிறந்தஸ்நேஹத்தை முன்னிட்டு நியாயப்படி உன்னாலுபதேசிக்கப்பட்ட வசனத்தைக்கேட்டு நான் ஸந்தோஷப்படுகிறேன். பிரம்மா, வாஸுதேவர், மஹேசுவரர் இவர்களுக்குச் சமமாக எவருமில்லையென்பதுபோல யுத்தவீரர்களில் உனக்கொப்பானவர் ஒருவருமில்லை. இந்திரனிடத்திலும் வாயுவினிடத்திலும் ஜனார்த்தனனிடத்திலும் எந்தவன்மையிருக்கிறதோ அந்தவன்மை உன்னிடத்திலும் பீமனிடத்திலுமிருக்கிறது. ஏ! பாண்டவனே! அர்ஜுனா! ஆச்சர்யமாக யுத்தஞ்செய்வதிலும் வெகுதூரத்திலிருந்து வீழ்த்துவதிலும் திவ்யமான அஸ்திரவித்தைகளிலும் உனக்குச்சரியான வேறுமனிதன் எவனிருக்கிறான்? யுத்தமுறையெல்லாவற்றிலும் பலவேலைத்திறமைகளிலும் உன்னைப் போன்ற ஒருவன் மூவுலகிலுமில்லை. தர்மமும் தர்மத்தைச்சேர்ந்ததும் மிச்சமின்றி எனக்குத் தெரியும். உண்மையான தர்மத்தின் ஸூக்ஷ்மத்தைச் சொல்லுகிறவிஷயத்தில் உன்னால் என்னை ஏய்க்க

முடியாது. ஏ! அர்ஜுனா! எனக்குத் தோன்றுகிறவிஷயத்தில் நீ ஸந்தேஹப்படவேண்டாம். நீ யுத்தசாஸ்திரத்தைக் கற்றவனேதவிரப் பெரியோர்களை உபாஸித்தவன் அல்லன். (தர்மத்தின்) சுருக்கத்தையும் விரிவையுமறிந்த அந்தப்பெரியோர்களின்நிச்சயத்தை நீ அறிந்தவனல்லன். அப்பா! தவம், தியாகம், அவிதியென இம்மூன்றும் புத்திமான்களால் நிச்சயிக்கப்பட்டவை. இவைகளில் ஒன்றைக்காட்டிலும் மற்றொன்று சிறந்ததென்று எங்களபிப்பிராயம். செல்வத்துக்கு மேற்பட்டதில்லையென்று நீ நினைக்கிறாய். ஏ! பார்த்தனே! இந்தச் செல்வமானது சிறந்ததன்றென்று உனக்கு அறிவிக்கிறேன். உலகத்தில் தவத்தையும் வேதாத்தியயனத்தையும் இயற்கையாகச் செய்யும் பலஸாதுஜனங்கள் காணப்படுகிறார்கள். அவ்விதம் தவஞ்செய்யும்ஜனங்களுக்கு அழிவற்றதானஉலகம் ஸித்திக்கிறது. அருணரென்றும் கேதுக்களென்றும் சிலரிஷிகள் மீசையுண்டாகாதபருவத்தில் தைரியத்துடன் காடுசென்று வேதாத்தியயனஞ்செய்து திவ்யலோகமடைந்திருக்கிறார்கள். தவத்தின்பெருமை இப்படியிருக்கிறது. விஷயங்களைத் தள்ளிவிட்டு அஜ்ஞானத்தாலுண்டான இருளை விலக்கிக்கொண்டு சிலஆர்யர்கள் தேவயானமென்னும் உத்தமமார்க்கத்தால் ஸந்யாஸிகளுக்குரிய சாச்வதமான லோகங்களை அடைந்திருக்கிறார்கள். (தியாகத்தின்பெருமை இவ்விதமிருக்கிறது.) பித்ருயானமென்னும் தக்ஷிணவழியிற்சென்று சந்திரலோகம் போகிறவர்கள் கர்மத்திலிருக்கிறவர்கள்தாம். அவர்கள்தாம் ச்மசானம்செல்லுகிறார்கள். மோக்ஷத்தையடைகிறவர்கள் எதையனுபவிக்கிறார்களோ வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத அந்தப் பிரம்மபதந்தான் கீழ்ச்சொன்ன அவிதியென்னும் மூன்றாவதாகச் சொல்லப்படுகிறது. இவ்விதம்உத்தமபதத்திற்குக் காரணமாயிருப்பதால் தியாகமானது ஸ்தானங்களில் முக்கியமென்பது என்அபிப்பிராயம். அஃது உன்னைப் போன்றவர்களுக்குத் தெரிவிப்பதற்கு மிகக்கடினமானது. ஸாராஸாரங்களைக் காணவிரும்பிய கவிகள், 'இங்குஇருக்குமோ, இங்கு இருக்குமோ' என்று பலசாஸ்திரங்களையும் ஆராய்ந்து இவ்விதமான தீர்மானத்தை அடைந்திருக்கிறார்கள். இதனுண்மைதெரியாத ஜனங்கள் வேதங்களையும் சாஸ்திரங்களையும் உபநிஷத்துக்களையும் தள்ளிவிட்டு வாழைமரத்தைப்பிளந்து ஸாரத்தைக்காணாததுபோலக் கண்டுகொள்ளவில்லை. அவ்விதஜனங்கள் ஏகாந்தமாயிருப்பதென்னும் தியாகமார்க்கத்தைத் தள்ளிவிட்டுப் பஞ்சபூதத்தாலுண்டான இச்சரீரத்திலிருக்கும் ஆத்மாவைப் பல அடையாளங்களால் ஆசை

துவேஷங்களோடுகூடினதாகச் சொல்லுகிறார்கள். அஃது அவ்வித மன்று. கண்முதலிய இந்திரியங்களுக்குப் புலப்படாததும் வாக்கால் சொல்லத்தகாததுமான ஆத்மாவானது கர்மத்துக்குக் காரணமான அஜ்ஞானத்தை முன்னிட்டுச் சரீரங்களில் சுற்றிவருகிறது. (மனிதன்) ஆசையை அடக்கி இந்தக் கர்மப்பிரவாஹத்தைத் தள்ளிவிட்டு அகங்காரமற்றவனாகி மோக்ஷமார்க்கத்தில் சென்று ஸுகமுள்ளவனாயிருக்கவேண்டும். ஏ! அர்ஜுனா! ஸாதுக்களால் அனுஷ்டிக்கப்பட்டதும் ஸூக்ஷ்மமாயறியத்தக்கதுமான இந்தமோக்ஷவழியிருக்கும் போது பலதுன்பங்கள் நிறைந்தபொருளை நீ எங்ஙனம் கொண்டாடுகிறாய்? ஏ! பாரத! கர்மசாஸ்திரம் கற்றவர்களும் எப்பொழுதும் தானம் யாகம்முதலிய கர்மங்களில் ஆசையுள்ளவர்களுமான ஜனங்களும் இப்படிப் பொருள் துன்பமுள்ளதென்றும் மோக்ஷவழி உயர்ந்ததென்றும் பார்க்கிறார்கள். யுக்திதெரிந்த பண்டிதர்களும் உறுதியான பூர்வகர்மத்தின் தோஷத்தால் மோக்ஷமில்லையென்றே சொல்லிக்கொண்டு மூடர்களாயிருக்கிறார்கள். அவர்களை நல்வழிக்குத் திருப்புவது மிக்ககடினம். பலசாஸ்திரங்களைக்கற்றுப் பலவிதமாகப்பேசுஞ்சிலர், ஜனக்கூட்டத்தில் பொய்சொல்லுகிறவர்களும் பிறரை அவமதிக்கிறவர்களுமாய் இந்தப்பூமியில் ஸஞ்சரிக்கிறார்கள். ஏ! பார்த்தா! எந்தவிஷயங்களை நாம் நன்றாய்த் தெரிந்துகொள்ளவில்லையோ அவைகளை மற்றவன் எங்ஙனம் தெரிந்துகொள்ளத்தக்கவன்? சாஸ்திரங்கற்ற பெரியபண்டிதர்களும் இவ்விதம் நன்றாகத் தெரிந்துகொள்ளாதவர்கள்தாம். ஏ! கௌந்தேய! தர்மந்தெரிந்தவன் தவத்தால் பெரிய வைராக்கியமடைகிறான்; அதன்மூலமான ஞானத்தால் பிரம்மத்தையடைகிறான்; தியாகத்தால் எப்பொழுதும் ஸுகத்தையடைகிறான்" என்றுசொன்னார்.

---

## இருபதாவது அத்யாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(தேவஸ்தானர் தர்மபுத்திரரைப்பார்த்து யாகஞ் செய்யும்படி சொல்லியது.)

இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில், பெரியதவமுள்ளவரும் பேசுந்திறமையுள்ளவருமான தேவஸ்தானரென்பவர், தர்மபுத்திரரைப்பார்த்து மிகவும் யுக்தியுள்ளவாக்கியத்தைச் சொல்லத்தொடங்கினார். "செல்வத்திலும் பெரியது வேறில்லையென்று அர்ஜுனன் சொன்னவிஷயத்தில் உமக்குக் கொஞ்சம்தெரிவிக்கிறேன். கவனி

த்து முழுமனத்துடன் கேளும். ஓ! அஜாதசத்துருவே! ராஜதர்மப்படி இந்தப் பூமிமுழுதும் உம்மால்ஜயிக்கப்பட்டது. இப்படிஜயிக்கப்பட்ட பூமியை நீர் விணுகவிடுவது நியாயமில்லை. பிரம்மத்தையடையப் பிரம்மசரியம்முதலிய நான்கு ஆச்ரமங்களும் நான்குபடியுள்ள ஏணியாய் ஏற்பட்டிருக்கின்றன. ஓ! அரசரே! அந்தநான்குபடியையும் முறையே விதிப்படி ஜயிக்கவேண்டும்; ஏ! பார்த்தரே! ஆகையால், அதிகதக்ஷிணையுள்ள பெரியயாகங்களைச்செய்யும். (நான்குபடிகளிலுள்ளவர்கள்) வேதமோதுதலையே யாகமாகக்கொண்ட பிரம்மசாரிகளும் சித்தசுத்திக்குத்தக்க நல்லகர்மங்களைச் செய்யும் கிருஹஸ்தர்களும் காடுசென்று தவத்திலிருக்கும் வானப்ரஸ்தர்களும் பிரம்மஞானத்தையே யாகமாகக்கொண்ட ஸந்யாஸிகளும் என்றுதெரிந்துகொள்ளும். ஓ! குந்திபுத்ரரே! 'ஆசைப்பட்டுப் பொருளைச்சம்பாதித்துக் கர்மத்தைச்செய்வதைக்காட்டிலும் ஆசையை விடுவதுதான் பெரிது' என்று வானப்ரஸ்தப்பிராம்மணர்கள் சொல்லுவதாய்க்கேள்விப்படுகிறோம். க்ஷத்ரியனுயிருப்பவன் அந்தக்கர்மாவைச் செய்ய மேற்கொள்வானுனல் மிகவும்தோஷமுள்ளவனுவான். கற்றோர்கள் கர்மசாஸ்திரத்தின் விதிப்படி, திரவியங்களையெல்லாம் ஒன்றுசேர்த்துக்கொள்ளுகிறார்கள். மனத்தில் கெட்ட ஆசைகொண்டு யோக்கியம்அயோக்கியம்இவைகளின் பகுத்தறிவற்றவர்கள் தம்சரீரம் பொருள்முதலியவற்றை யோக்கியமான யாகாதிகர்மத்திற்கு ஈடுசெய்யாமல் அயோக்கியவிஷயத்திற்கு உபயோகிக்கிறார்கள். அவர்கள் தமக்குநேரும் இவ்விதமான பெரியதோஷத்தைத் தெரிந்துகொள்ளவில்லை. அவர்களுக்குச் சித்தசுத்தியுண்டாவது கஷ்டம். பிரம்மதேவர் யாகத்திற்காகப் பொருள்களை ஸ்ருஷ்டித்தார்; அவைகளைப் பாதுகாக்கும் மனிதனையும் யாகஞ்செய்யக்கருதியே நியமித்தார். ஆகையால், பொருள்களையெல்லாம் யாகத்திலேயே உபயோகப்படுத்தவேண்டும். யாகஞ்செய்தால் உடனே வேண்டியபலித்திபெறலாம். அதிகதேஜஸுள்ள இந்திரன் ரத்தினங்களைத் தக்ஷிணையாகக்கொண்டு பலயாகங்களைச்செய்து ஸகலதேவர்கட்கும் மேலான இந்திரபதவியையடைந்து விளங்குகிறான். ஆகையால், பொருள்களை யாகத்திலுபயோகிக்கவேண்டும். தோலாடையுள்ளவரும் தேவர்களுக்கும்தேவரும் மஹாத்மாவுமான மஹாதேவர் ஸர்வமேதமென்னும் யாகத்தில்தம்மையே ஹோமஞ்செய்து இவ்வுலகையெல்லாம் தம்கீர்த்தியால் நிரம்பச்செய்து தேஜஸுள்ளவராய்ப் பிரகாசிக்கிறார். மருத்தனென்னும்அரசன் தன்புண்ணியமிகுதியால் தேவராஜனை இந்திர

ளையும் ஜயித்தான். அவன்செய்தயாகத்தில் பாத்திரங்கள்யாவும் பொன்னாற்செய்யப்பட்டனவாகவேயிருந்தன. லக்ஷ்மிதேவி நேரி லேயே யாகத்திற்குவந்தாள். அரிச்சந்திரனென்னும்வேந்தன் பல யாகங்களைச்செய்து பெரிய புண்ணியத்தையடைந்து சோகமற்றுத் தான் மானிடப்பிறவியாயிருந்தும் தன்ஸம்பத்தால் தேவேந்திரனை யும்ஜயித்தானென்று கேட்டதில்லையோ? ஆகையால், எல்லாப்பொ ருள்களையும் யாகத்தில்உபயோகிக்கவேண்டும்" என்றுசொன்னார்.

## இருபத்தோராவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(தேவஸ்தானர் ஸ்வதர்மத்தைஅனுஷ்டிப்பது சிறந்த தென்று தர்மபுத்திரருக்குச்சொன்னது.)

தேவஸ்தானர், க்ஷத்ரியனுக்கு யாகம்முதலிய கர்மந்தான் நியாயமென்றவிஷயத்தில் ஒருஸம்பம் இந்திரன்கேட்க, பிருஹஸ்பதி சொல்லிய இப்பழையஇதிஹாஸத்தையும் சொல்லத்தொடங்கினார். "ஸந்தோஷமென்பது பெரியஸுகமும் ஸ்வர்க்கத்துக்கொப்பானது மாம். ஸந்தோஷத்திற்குமேற் சிறந்ததொன்றுமில்லை. ஆமையானது தன்னுடைய அங்கங்களைச் சுருக்கிக்கொள்வதுபோலக் காமங்களை எல்லாவற்றிலுமிருந்தும் ஒருவன், எப்போது உள்ளடக்குகிறானோ அப்போது பிரகாசரூபமான ஆத்மா தன்னிலையிலிருந்தே உடனே தெளிவடையும். அப்பொழுது ஸந்தோஷம் நிலைபெறுகிறது. ஒருவன் எப்போது தான் பிறரிடமிருந்தும் பிறர் தன்னிடமிருந்தும் பயப்பட வில்லையோ, எப்போது விருப்பு வெறுப்புக்களை ஜயிக்கிறானோ அப் போது ஆத்மாவைப் பார்க்கிறான். எப்போது கர்மத்தாலும் மனத் தாலும் வாக்கினாலும் எந்தப்பிராணிகளைப்பற்றியும் அபகாரமும் உப காரமும்செய்யப் பிரவிருத்திக்கவில்லையோ அப்போது மனிதன் பிரம்ம மாகிறான். ஏ! குந்திபுத்ரரே! இப்படிப் பிராணிகள் அந்தஅந்தமாதிரி செய்யப்படும் தமக்குரிய அந்தஅந்தத்தர்மங்களை அப்போதுஅப் போது தாமேஅனுபவிக்கின்றன. ஆகையால், நீரும் உமக்குரியதர் மத்தைத் தெரிந்துகொள்ளும். சிலர் இன்சொற்சொல்லுதலைக்கொண் டாடுகிறார்கள். மற்றஜனங்கள் முயற்சியைக் கொண்டாடுகிறார்கள். இதிலொன்றைச் சிலர் கொண்டாடவில்லை. மற்றொன்றைச் சிலர் கொண்டாடவில்லை. சிலர் இவ்விரண்டையும் கொண்டாடுகிறார்கள். சிலர் யாகமுதலியகர்மத்தைக் கொண்டாடுகிறார்கள். வேறுசிலர் ஸந்

யாஸத்தைக் கொண்டாடுகிறார்கள். இவைகளில் ஒன்றைச்சிலரும் மற்றொன்றைச்சிலரும் கொண்டாடுகிறதில்லை. சிலர் இவ்விரண்டையும் முறையே கொண்டாடுகிறார்கள். கொடுப்பதைச்சிலரும் ஏற்பதைச்சிலரும் புகழுகிறார்கள். சிலர் எல்லாவற்றையும்விட்டு மௌனிகளாய்த் தியானஞ்செய்துகொண்டிருக்கிறார்கள். சிலர், கொன்றும் அறுத்தும் பிளந்தும் பிராணிகளைப்பாதுகாப்பதாகிய அரசாட்சியைக் கொண்டாடுகிறார்கள். சிலர் ஒன்றுமில்லாவிடத்தில் த்யானஞ்செய்கிறார்கள். இவைகளெல்லாம் நன்றாய்க்கண்டறிந்த பண்டிதர்களின் நிச்சயமோ, பிராணிகளுக்குத் துரோஹஞ்செய்யாமல் செய்யப்படும் தர்மமே ஸாதுக்களுக்கு ஸம்மதமென்பதுதான். துரோகமில்லாமை, உண்மையுரைத்தல், கொடை, தயை, அடக்கம், தன்மனைவியிடம்புத்திரோத்பாதனம், மென்மை, லஜ்ஜை, பொறுமை, ஆசையில்லாமை ஆகியஇவை முக்கியமானதர்மமென்று ஸ்வாயம்புவமனு சொன்னார். ஓ! குந்திபுத்ரரே! ஆகையால், இதை நல்லமுயற்சியுடன் எதிர்பாரும். ராஜ்யத்திலிருக்கும் எந்தஅரசன் எப்பொழுதும் அடக்கமுள்ளவனும் விருப்புவெறுப்புக்களைச் சமமாகநினைப்பவனும் யாகஞ்செய்து மிஞ்சினதை உண்பவனும் சாஸ்திரத்தின்உண்மையான கருத்தையறிந்தவனும் ஸாதுக்களைரக்ஷிப்பதிலும் துஷ்டர்களைச்சிக்ஷிப்பதிலும் முயற்சியுள்ளவனும், நீதிதவறாமல் பிராணிகளைத் தர்மவழியில்நிலைநிறுத்துகிறவனும், அப்படியே கடைசியில் ராஜ்யத்தைப் புத்திரனிடம்வைத்துவிட்டுக் காடுசென்று வனத்திலுண்டாகும் பொருள்களால் ஜீவிப்பவனும், தர்மத்தில்உறுதியுள்ளவனும், சோம்பலின்றித் தன் ஆச்ரமத்திற்குரிய கர்மங்களைச் செய்கிறவனுமாயிருக்கிறானோ அந்தஅரசனுக்குத்தான் இவ்வுலகும் மேலுலகும் நன்குபயன்படும். மோக்ஷமென்பது பலஇடையூறுள்ளதும் அடையமுடியாததுமென்பது எனதுகருத்து. கீழ்ச்சொன்ன தர்மத்தைச்செய்த பலஅரசர்கள் ஸத்யமும் தானமும் தவமுமுள்ளவர்களும் ஆசைகோபம்முதலிய தோஷமற்றவர்களும் பொறுமையுள்ளவர்களும் பிராணிகளை ரக்ஷிப்பவர்களும் பசுக்களுக்காகவும் பிராம்மணர்களுக்காகவும்போர் செய்கிறவர்களுமாயிருந்து மிகவும் மேலானகதியை அடைந்திருக்கிறார்கள். இப்படியே வஸுக்களும் ருத்திரர்களும் ஆதித்தியர்களும் ஸாத்தியர்களும் பலராஜரிஷிகளும் இந்தத்தர்மத்தையடைந்து பரிசுத்தமான தமதுகர்மங்களால் தவறாமல் ஸ்வர்க்கலோகத்தையடைந்திருக்கிறார்கள்," என்றுசொன்னார்.

---

## இருபத்திரண்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன் க்ஷத்ரியதர்மம் சிறந்ததென்றும் நடந்ததைப்பற்றி வ்யஸனிக்கவேண்டாமென்றும் தர்மபுத்திரருக்குக்கூறியது.)

இப்படியிருக்கும் ஸமயத்திலேயே, வெறுத்தமனத்தையுடையவரும் தர்மம்த்வருதவரும் ஜ்யேஷ்டருமான தர்மபுத்ரரைநோக்கி அர்ஜுனன் திரும்பவும் சொல்லத்தொடங்கினன். "ஓ! தர்மந்தெரிந்த புருஷச்ரேஷ்டரே! அரசர்களுக்குள்ள நீதிப்படி பகைவர்களைவென்று மிக்கஅரிதான இந்த ராஜ்யத்தையும் பெற்றபிறகு நீர் ஏன் துயரப்படுகிறீர்? ஓ! மஹாராஜரே! அரசர்களுக்கு யுத்தத்தில் முடிவடைவது சிறந்ததாகும். பலயாகங்களோடுகூடிய க்ஷத்திரியர்களுக்குரிய தர்மத்தை நினைத்துப்பாரும். ப்ராம்மணர்களுக்கு ஸந்யாஸத்தால் மரணமடைவது தர்மமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. க்ஷத்ரியர்களுக்கோ யுத்தத்தில் மரணம் விதிக்கப்பட்டிருக்கிறது. ஒருபொழுதும் ஆயுதம்விட்டுப்பிரியாத க்ஷத்திரியதர்மமானது மிக்க பயங்கரமென்று சொல்லப்படுகிறது. பாரதச்ரேஷ்டரே! க்ஷத்திரிய தர்மத்தைக் கைக்கொண்டவன் பிராம்மணனுயிருந்தாலும் அவன் ஆயுதத்தால் யுத்தத்தில் கொல்லப்படுவது நியாயமாயிருக்கிறது. க்ஷத்திரியஜாதியில் பிறப்பது உயர்ந்ததாகும். க்ஷத்திரியஜாதியானது வேதத்திலிருந்து உண்டானதாகும். ஸந்யாஸமும் யாகமும் தவமும் பிறர்பொருளால் பிழைப்பதும் க்ஷத்திரியனுக்கு விதிக்கப்படவில்லை. ஓ! பாரதச்ரேஷ்டரே! அந்த க்ஷத்திரியஜாதியிற்பிறந்தவரும் தர்மங்களெல்லாந்தெரிந்தவரும் தர்மபுத்தியுள்ளவரும் ராஜாவும் ஸாமர்த்தியமுள்ளவரும் உலகத்தில் முன்பின்தெரிந்தவருமான நீர் இப்படிப்பட்ட தாபத்தாலுண்டான சோகத்தைத் தள்ளிவிட்டு ஸ்வதர்மத்தில் கட்டுப்பட்டவராயிரும். க்ஷத்திரியனுடையமனம் விசேஷமாக வஜ்ரத்துக்கொப்பாயிருக்கவேண்டும். க்ஷத்திரியகர்மப்படி சத்துருக்களைஜயித்து இடையூறின்றி ராஜ்யத்தைப்பெற்றபிறகு, இந்திரியஜயமுள்ளவராயும் யாகதானங்களைச்செய்பவராயும்இரும். கச்யபப்ரஜாபதியின் பிள்ளையானஇந்த்ரன் க்ஷத்திரியத்தொழிலைமேற்கொண்டு கெட்டநடையுள்ள எண்ணூற்றுப்பத்து ஞாதிகளைக்கொன்றுன். ராஜரே! அவனுடைய அந்தச்செய்கையானது பெருமையுள்ளதும் கொண்டாடத்தக்கதுமாயிற்று. அந்தக்காரணத்தால் அவன்

தேவர்களுக்கு அரசனுமானுனென்று எங்களுக்குக்கேள்வி. மஹாராஜரே! மனிதர்களுக்கு இந்திரராகியநீர் இந்திரனைப்போல யாதொரு கஷ்டமுமின்றி நெடுங்காலம் அதிகதக்ஷிணையுள்ள பலயாகங்களைச் செய்துகொண்டிரும். க்ஷத்திரியச்ரேஷ்டரே! க்ஷத்திரியதர்மப்படி ஆயுதத்தால் சுத்திபெற்றுப் பரலோகத்தில் நற்கதிபெற்ற ஞாதிகளைக்குறித்து இவ்விதம் கொஞ்சமும் துக்கப்படவேண்டாம். ஓ! பரதச்ரேஷ்டரே! எதுநடந்ததோ அது அப்படியே நடக்கவேண்டியதுதான். ஓ! ராஜச்ரேஷ்டரே! விதியைவெல்ல முடியாதன்றோ?" என்றுசொன்னான்.

---

## இருபத்துமூன்றாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர் செங்கோல்செலுத்துவதின் மேன்மையையும் ஸுத்யும்னராஜன் சரித்திரத்தையும் கூறியது.)

பாரதரே! இப்படி அர்ஜுனனாற்சொல்லப்பட்ட குந்தியின் குமாரரான தர்மபுத்திரர் யாதொன்றும் பேசவில்லை உடனே, வ்யாஸர் சொல்லத்தொடங்கினார்.

"ஸௌம்யனான தர்மபுத்திரனே! அர்ஜுனன்சொன்னது உண்மையே. சாஸ்திரத்தில் கிருஹஸ்தாச்ரமமானது உயர்ந்ததர்மமென்று காணப்படுகிறது. தர்மந்தெரிந்தவனே! சாஸ்திரத்தில் சொல்லிய விதிப்படி உன்னுடையதர்மத்தை நீசெய். கிருஹஸ்தாச்ரமத்தைவிட்டுக் காடுசெல்வது உனக்கு விதிக்கப்படவில்லை. தேவர்களும் பிதிருக்களும் அதிதிகளும் வேலைக்காரர்களும் எப்பொழுதும் கிருஹஸ்தனையடைந்து பிழைக்கிறார்கள். அரசனே! அவர்களைக்காப்பாற்று. பசுக்களும் பக்ஷிகளும் மற்றுமுள்ள பிராணிகளும் கிருஹஸ்தர்களாலேதான் ரக்ஷிக்கப்படுகின்றன. ஆகையால், கிருஹஸ்தாச்ரமத்திலிருப்பவன் சிறந்தவன். இந்தநான்குஆச்ரமங்களுள்ளும் அந்தக்கிருஹஸ்தாச்ரமம் ஒழுங்காக நடத்தமுடியாது. ஓ! பார்த்த! இந்திரியபலமில்லாதவர்களுக்கு அனுஷ்டிக்கஅரிதான அவ்விதமான விதியை நீ (ஒழுங்காக)நடத்து. உனக்கு வேதங்களில் ஞானம் பூர்ணமாயிருக்கிறது. உன்னால் பெரியதவம் செய்யப்பட்டிருக்கிறது. (ஆகையால்) பிதிருபிதாமஹர்பரம்பரையாய்வரும் இந்தராஜ்யத்தை, பாரத்தை வஹிப்பதுபோல நீ வஹிக்கக்கடவாய். மஹாராஜ! தவம்,

யஜ்ஞும், ஆத்மஞானம், பிக்ஷாடனம், இந்திரியஜயம், தியானம், கல்வியில் முயற்சி, பொருளில் திருப்தி, தனிமையாயிருப்பது, ஸந்தோஷம், தன்சக்திக்குத்தக்க• தானம் இவ்விதமான தர்மங்களெல்லாம் பிராம்மணர்களுக்கு ஸித்தியைக் கொடுப்பனவாக விதிக்கப்பட்டவைகள். க்ஷத்திரியர்களுக்குரிய தர்மத்தை உனக்குத்தெரிந்திருந்தாலும் திரும்பவும் சொல்லுகிறேன். யாகமும் வித்யையும் முயற்சியும் பொருளில்திருப்தியில்லாமையும் செங்கோலும் தாக்ஷிண்யமின்மையும் பிராணிகளைப் பாதுகாப்பதும் வேதமனைத்தையுமறிவதும் தவமும் நன்னடக்கையும் விசேஷமாய்ப் பொருள்சம்பாதிப்பதும் நல்லபாத்திரத்தில் கொடுப்பதுமாகிய இந்த நல்லகர்மங்கள் அரசர்களுக்கு இவ்வுலகையும் மேலுலகையும் பயனுள்ளவையாகச் செய்கின்றனவென்று நாம் கேட்டிருக்கிறோம். ஓ! கௌந்தேய! செங்கோலென்னும் தண்டமானது இவைகளில் சிறந்ததென்று சொல்லப்படுகிறது. க்ஷத்திரியனிடத்தில் பலமும் பலத்தில் தண்டமும் எப்பொழுதும் நிலைத்திருக்கின்றன. இவ்விதக்காரியங்கள் தாம் க்ஷத்திரியர்களுக்கு ஸித்தியைக் கொடுக்கக்கூடியவை. ப்ருஹஸ்பதியானவர், 'யுத்தஞ் செய்யாத க்ஷத்திரியனையும் தேசஸஞ்சாரஞ்செய்யாத பிராம்மணனையும்,பாம்பு எலிகளை விழுங்குவதுபோல, பூமியானது விழுங்குகிறது' என்று இந்தக்காதையைப் பாடினார். ஸுத்யும்னனென்னும் ராஜரிஷியும் பிரசேதஸரின்புத்திரரான தக்ஷரைப்போல ஒழுங்காகச் செங்கோல்செலுத்தியதால் உயர்ந்த ஸித்தியைப்பெற்றானென்று கேள்வி" என்றுசொன்னார். தர்மபுத்திரர், "ஓ! பகவானே! ஸுத்யும்னனென்னும் அரசன் எந்தக்கர்மத்தால் உத்தமஸித்திபெற்றானென்பதைக் கேட்க விரும்புகிறேன்" என்றுகூறினார்.

வ்யாஸர், " (தெரிந்தவர்கள்) இந்தவிஷயத்திலும் இந்தப்பழைய இதிஹாஸத்தைச் சொல்லுகிறார்கள். உக்கிரமானதவமுள்ள சங்கரென்றும் லிகிதரென்றும் இரண்டுஸஹோதரர்களிருந்தார்கள். அவர்களுக்குப் பாஹுதையென்னும் நதிக்கரையில் பூக்களும் கனிகளும் எப்பொழுதும் நிறைந்த பலமரங்களால் சூழப்பட்டவையும் அழகானவையுமான இரண்டுஆச்ரமங்கள் தனித்தனியே இருந்தன. அவ்விதமிருக்கும்பொழுது ஒருகாலத்தில் லிகிதர் சங்கருடைய ஆச்ரமத்துக்கு வந்தனர். அப்பொழுது சங்கரும் தற்செயலாக ஆச்ரமம் விட்டு வெளியிற்சென்றிருந்தார். ஸஹோதரரின் ஆச்ரமஞ்சென்ற அந்தலிகிதரும் அப்பொழுது உலாவிக்கொண்டு அங்கு நன்றாய்ப்பழுத்த சிலபழங்களைப்பறித்தனர். அந்தப் பழங்களையெடுத்துச் சங்கை

யில்லாமல் அந்தப்பிராம்மணர் புஜிக்கத்தொடங்கினார். அவர் புஜித்துக்கொண்டிருக்கும் ஸமயத்திலேயே சங்கரும் ஆச்ரமம்வந்துசேர்ந்தார். பழங்களைத்தின்னும் தமதுதம்பியான லிகிதரைப்பார்த்து அவர், 'இப்பழங்கள் எங்கிருந்துகிடைத்தன? ஏன் தின்கிறாய்?' என்றுகேட்டனர். உடனே அந்தலிகிதர் ஜ்யேஷ்டரான சங்கரின் அருகிற்சென்று நமஸ்கரித்து, 'இங்கிருந்துதான் இப்பழங்களை நான் எடுத்துக்கொண்டேன்' என்று வேடிக்கையாகச் சிரித்துக்கொண்டு சொன்னார். உடனே சங்கர் கடுங்கோபங்கொண்டு, 'தானாகவே பழங்களையெடுத்தமையால் நீசெய்த இக்காரியம் திருட்டாகும். ஆகையால், அரசனிடம்போய், 'ஓ! ராஜச்ரேஷ்டனே! கொடாதபழத்தையெடுத்ததால் நான் திருடனாகிறேன். என்னைத் திருடனாக அறிந்துகொண்டு திருடனான எனக்குத் தக்கதண்டத்தைச் சீக்கிரம்விதித்து உனதுநீதியைக் காப்பாற்று' என்று தெரிவித்துக்கொள்' என்று சொன்னார். இவ்விதம் சொல்லப்பட்டலிகிதர் கடுமையான நியமமுள்ளவராகையால் அவர்சொற்படி ஸுத்யும்னனென்னும் அரசனிடம் சென்றார். ஸுத்யும்னனும் வாயில்காப்பவன்மூலமாக லிகிதர் வந்திருப்பதாகக்கேட்டு மந்திரியுடன் கால்நடையாக எதிர்கொண்டுவந்தான். அவ்வரசன் தர்மமறிந்தவர்களுள் உத்தமரான லிகிதரிடம் வந்து, 'ஓ! பகவானே! நீங்கள் எதற்காக வந்தீர்களோ அதைச் சொல்லவேண்டும். உடனே செய்கிறேன்' என்றுசொல்ல, உடனே அந்தப் பிரம்மரிஷியானவர் ஸுத்யும்னனைநோக்கி, 'நான் சொல்வதைக்கேட்டுச் செய்கிறேனென்று அங்கீகரித்தபடி செய்துவிடவேண்டும். ஓ! மஹாராஜனே! தமையனாரால்கொடுக்கப்படாதபழங்களை நானாகஎடுத்துத் தின்றுவிட்டேன். அந்தக்குற்றத்திற்காக என்னைத் தாமதமின்றித்தண்டிக்கவேண்டும்' என்றுசொன்னார். ஸுத்யும்னன், 'ஓ! பிராம்மணச்ரேஷ்டரே! தண்டம்விதிப்பது அரசனைச்சேர்ந்ததென்பது உமக்குப் பிரமாணமாக இருந்தால் அனுமதிகொடுப்பதும் அரசனைச்சேர்ந்ததாகும். ஆகையால், பெரியவிரதத்தையுடையநீர் என்னால் அனுமதிகொடுக்கப்பட்டுக் குற்றமற்றவரானீர். ஆகையால், வேறுவேண்டியவைகளைக்கேட்டீரானால் உமதுஇஷ்டம்போற் செய்கிறேன்' என்றுசொன்னான். மஹாத்மாவானஅரசனால் இவ்விதம் பிரார்த்திக்கப்பட்டும் அந்தரிஷியானவர் தமக்குச்சிக்ஷையைக்காட்டிலும் வேறொன்றையும் வேண்டவில்லை. பிறகு அவ்வரசன் மஹாத்மாவான லிகிதரின்கையை அறுத்துவிட்டான். இப்படிச் சிக்ஷையடைந்த லிகிதர் தமையனாரானசங்கரிடஞ்சென்று, 'எனதுகுற்றத்திற்குச்

சினைக்ஷயடைந்தேன். என்புத்திக்குறைவை நீங்கள் க்ஷமிக்கவேண்டும்' என்று வருத்தத்துடன்தெரிவித்தார்.

சங்கர், 'ஓ! தர்மந்தெரிந்தவனே! உன்னிடத்தில் எனக்குக் கோபமில்லை. நீ எனக்கு யாதொருகுற்றமுஞ்செய்யவில்லை. நமது குலம் மிகவும்பரிசுத்தமானதென்று இவ்வுலகில் பிரஸித்தமாயிருக்கிறது. அதில் பிறந்தநீ தர்மந்தவறினபடியால் அந்தக்குற்றத்திற்காக உனக்குப் பிராயச்சித்தஞ்செய்யப்பட்டது. நீ சீக்கிரம் பாஹுதையென்னும்நதிக்குச்சென்று விதிப்படி தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் பித்ருக்களுக்கும் தர்ப்பணஞ்செய். இனி அதர்மத்தில் மனத்தைச்செலுத்தாதே. அறிந்தவர்கள் பிரம்மஹத்தியும் ஸுராபானமும் திருட்டும் குருபத்நிகமனமும் இவைசெய்தவர்களுடன் சேர்க்கையுமாகியஇவைகளை மஹாபாதகங்களென்று சொல்லுகிறார்கள். இவைகளிலும் திருட்டுக்கொப்பானபெரும்பாவம் வேறுஇல்லை. திருட்டு இவ்வுலகில் பிரம்மஹத்திக்கொப்பாகும். பெரும்பாலும் பாதகம்யாவுக்கும் சரீரதண்டனை கூறப்படுகிறது. திருட்டுக்குச் சரீரதண்டத்தைத்தவிர வேறுதண்டனை விதிக்கப்படவில்லை. பிராம்மணனும் க்ஷத்திரியனும் வைசியனும் சூத்திரனுமாகியயாவரும் விரும்பிச்செய்தபாவத்திற்குச் சிக்ஷிக்கத்தக்கவர்களென்பதில் ஸந்தேஹமில்லை. பாவஞ்செய்தமனிதர்கள் அரசர்களால் தண்டனைபெற்று அந்தப்பாவம்விலகிப் புண்ணியமுள்ளஸாதுக்கள்போல ஸ்வர்க்கம் அடைகிறார்கள். நீ அரசனால் தண்டனையை அடைந்தபடியால் நமது குலம் உயர்ந்ததாயிற்று' என்றுசொன்னார். சங்கருடைய அந்தவார்த்தையைக்கேட்டு லிகிதரும் பரிசுத்தமான அந்தநதிக்குச்சென்று ஸ்நானஞ்செய்து தர்ப்பணஞ்செய்யத்தொடங்கினார். உடனே தாமரைப் புஷ்பங்கள்போல இருகரங்களும்அவருக்குஉண்டாயின. அதுகண்டு ஆச்சரியமடைந்தலிகிதர் அக்கைகளை ஜ்யேஷ்டரான சங்கருக்குக் காண்பித்தார். உடனே சங்கர், 'இது தபோமஹிமையால் என்னால் செய்யப்பட்டது; இதில் உனக்குச் சந்தேகம்வேண்டாம். அதிருஷ்டம் இவ்விதமிருக்கிறது' என்றுசொன்னார். உடனே லிகிதர், 'ஓ! பெரியதேஜஸுள்ள பிராம்மணச்ரேஷ்டரே! உமதுதவத்துக்கு இப்படிப்பட்ட மஹிமையிருக்குமானால் என்னை முன்னமே ஏன் பரிசுத்தனாகச்செய்திருக்கக்கூடாது?' என்றுகேட்டார். சங்கர், 'இப்படி என்னால் செய்திருக்கமுடியுமானாலும் நான் உனக்குத் தண்டனை விதிக்கும் அதிகாரமுள்ளவனல்லேன். அவ்வரசனும் பரிசுத்தனானான். நீயும் உன்முன்னோர்களுடன் பரிசுத்தனானாய்' என்றுசொன்னார்.

ஓ! பாண்டவச்ரேஷ்ட! உத்தமனான ஸுத்யும்னனென்னும் அந்த அரசன் அந்தத்தண்டவிதிசெலுத்தியதனால் பிரசேதஸின்புத்ரராகிய தக்ஷனைப்போல உத்தமமான ஸித்தியைப்பெற்றான். அரசர்களுக்குப் பிராணிகளைத் தீயவழியிற்செல்லாமல்பாதுகாப்பது பெரிய தர்மமாகும். ஓ! மஹாராஜனே! சோகத்தில் மனத்தைச்செலுத்த வேண்டாம். ஓ! தர்மந்தெரிந்தவர்களிற்சிறந்தவனே! தம்பியாகிய இந்த அர்ஜுனன்சொல்லும் ஹிதவசனத்தைக்கேள். க்ஷத்திரியர்களுக்குச் செங்கோல்செலுத்துவது தர்மமேயொழிய முண்டனஞ் செய்துகொள்வது தர்மமன்று" என்றுசொன்னார்.

## இருபத்துநான்காவது அத்யாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(வ்யாஸர் ராஜநீதிமுறையையும் ஹயக்ரீவராஜன் சரித்திரத்தையும் கூறியது.)

வ்யாஸமஹரிஷியானவர் அஜாதசத்துருவான தர்மபுத்திரரைப்பார்த்துத் திரும்பவும் நல்லஅர்த்தமுள்ள இந்தவசனத்தைச் சொல்லத்தொடங்கினார். "ஓ! தர்மபுத்திரமஹாராஜனே! பாதச்ரேஷ்டனே! அப்பா! மனத்தையடக்கிக்கொண்டு காட்டில்வஸிக்கும்போது தம்பிகளுக்கு என்னமனோரதங்களிருந்தனவோ அவைகளை மஹாரதர்களான இவர்களடையட்டும். பார்த்த! நகுஷன்குமாரனை யயாதிபோல இந்தப்பூமியையாளு. நரச்ரேஷ்டனே! தம்பிகள் தவமுடையவர்களாகக் காட்டில் மிகத் துன்பப்பட்டிருந்தார்கள். அந்தத்துன்பத்தின் முடிவுக்காலமான இந்தஸமயத்தில் அவர்கள் ஸுகங்களையனுபவிக்கட்டும். ஓ! பாரத! மனிதர்களுக்குத் தலைவனே! தம்பிகளுடன் தர்மார்த்தகாமங்களை அனுபவித்தபின் நீபுறப்படலாம். ஓ! கௌந்தேய! தேவர்களும் பிதிருக்களும் அதிதிகளுமாகிய இவர்களின்கடன்களைத் தீர்த்துவிட்டுப் பிறகு நீ ஸ்வர்க்கத்தையடையலாம். மஹாராஜனே! குருநந்தன! அசுவமேதம் ஸர்வமேதம் என்னும்யாகங்களைச் செய்தபிறகு, உயர்ந்தகதிபெறுவாய். ஓ! பாண்டவனே! தம்பிகளுக்கும் விசேஷதக்ஷிணையுள்ள யாகங்களைச்செய்வித்து உலகில் ஒப்பில்லாதகீர்த்திபெற்றபிறகு (இஷ்டம் போலப்) போகலாம். ஓ! குருச்ரேஷ்ட! புருஷப்புலியே! உனது வசனத்தின்கருத்தை நானறிகிறேன். அரசனே! ஆகிலும், எவ்வி

தம்செய்தால் தருமவழிவிட்டு நழுவாமலிருப்பாயோ அவ்விதம்சொல்லுகிறேன்; கேள். யுதிஷ்டிரனே! நரேசுவரனே! யுத்தஞ்செய்து ஜயமடைந்து ராஜ்யம்பெற்றவனுக்குரியதருமத்தை ஒழுங்கானதருமந்தெரிந்தவர்கள் (இங்ஙனம்) உறுதிப்படுத்துகிறார்கள். பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், ஆகமம், அர்த்தாபத்தி, ஐதிஹ்யம், ஸந்தேஹம், நிச்சயம், ஆகாரம், இங்கிதம், நடை, சேஷ்டை, பிரதிஜ்ஞை, ஹேது, திருஷ்டாந்தம், உபநயம், உக்தி, நிகமனம், இவைகளின்விஷயம், இவற்றின்பயன் ஆகியஇவைகள் பலபிரயோஜனங்களை ஸாதிக்கத்தக்க ஸாதனங்களாகக்கூறப்படுகின்றன. இவைகளில், பிரத்தியக்ஷமும்அநுமானமும் மற்றயாவுக்கும் காரணமென்று கூறப்படுகின்றன. பிரமாணமறிந்தவன்தான் தண்டவிதிசெலுத்த வல்லவனுவான். பிரமாணமறியாமல் செலுத்தப்படும்தண்டம் அரசனைக்கொல்லும். சாஸ்திரத்தின்கருத்தைத்தெரிந்து அரசன் தேசகாலங்களுக்குத்தக்கபடி குற்றவாளிகளை க்ஷமிப்பானுகில் அவ்வரசனுக்குப் பாவமில்லை. ஆறிலொருபாகம் வரிபெற்றுக்கொண்டு, எந்தஅரசன் ராஜ்யத்தை ரக்ஷிக்கவில்லையோ அவன் அந்தப்பிரஜைகளின்பாபத்தில் நாலிலொருபாகத்தை அடைகிறான். அரசன் தருமம்தவறாமல்நடக்கவேண்டியமுறையைச் சொல்லுகிறேன்; தெரிந்துகொள். தருமசாஸ்திரத்துக்கொத்தபடி தண்டனைசெய்துகொண்டு யாதொருபயமுமில்லாதவனும், காமத்தையும்கோபத்தையும் விலக்கிவிட்டுப் பிராணிகளிடம் தகப்பன்போல ஸமமானபார்வையுள்ளவனுமாயிருக்கவேண்டும். மிக்ககாந்தியுள்ளவனே! அரசன் நியாயமானஒருகார்யத்தைத் தொடங்கித் தெய்வவசத்தினுல் அந்தக்கார்யம் முடிவுபெறுவிடினும் அவ்வரசன் அதில் தவறுதலுள்ளவனுகமாட்டான். தன்புத்திசக்தியாலும் வலிமையாலும் பகைவர்களையடக்கவேண்டும். பாவமுள்ளவர்களுடன் ஸந்திசெய்வது நியாயமன்று. ராஜ்யத்தைத் தருமமாக நடத்தவேண்டும். சூரர்களையும் பெரியோர்களையும் வித்வான்களையும் கௌரவிக்கவேண்டும். யுதிஷ்டிரனே! பொருளுள்ளவர்களும் பசுக்களுள்ளவர்களுமான பிரபுக்களை விசேஷமாகப் பாதுகாக்கவேண்டும். விசேஷமாய்ச் சாஸ்திரம்கற்றவர்களை வியவகாரவிஷயத்திலும் தர்மகார்யங்களிலும் அதிகாரிகளாக நியமிக்கவேண்டும். உண்மையான வேதத்தின்கருத்தையறிந்தவனும் பூமியைஆளுகிறவனுமாகிய அரசனே! நீதிசாஸ்திரத்திலும் தர்க்கசாஸ்திரத்திலும் விசேஷப்பயிற்சியுள்ளவர்களும் பிரமாணங்களை நன்குஉணர்ந்தவர்களுமான வித்வான்களை அறிவுள்ளவன் ஆலோசனைஸபையிலும் வியவகாரஸபையி

னும் அதிகாரிகளாகநியமிக்கவேண்டும். தருமசாஸ்திரத்திலும் நீதி சாஸ்திரத்திலும் மிக்கதேர்ச்சியுள்ள புத்திமான்கள் செலுத்தும் தண்டநீதி இம்மூவுலகையும் ஜயிக்கும். ராஜனே! வேதத்தின்உண்மையை அறிந்தவர்களை யாகங்கள்செய்யும்படி செய்யவேண்டும். வேத சாஸ்திரங்களையறிந்தவர்கள் நல்லபுத்தியுள்ளவர்கள். தர்க்கசாஸ்திரத்திலும் வேதங்களிலும் தண்டநீதியிலும் கரைகண்ட பண்டிதர்களை எல்லாக்காரியங்களிலும் நியமிக்கவேண்டும். அவர்கள் அறிவின்கரையையடைந்தவர்கள். எவ்வளவு குணமுள்ளவனானாலும் ஒரேமனிதனை நம்புவது நியாயமன்று. பிராணிகளைரக்ஷியாமலும் பூஜிக்கத்தக்கவர்களைப்பூஜியாமலும் அடக்கமில்லாமலுமிருப்பவனும் அகங்காரம் அஸூயைகளையுடையவனுமான அரசன் பாபத்தையடைவதோடு கெட்டவனென்றும் சொல்லப்படுவான். ரக்ஷிக்கப்படாமல் எவர்கள் பஞ்சமுதலிய தெய்வக்குற்றத்தாலும் திருடர்களாலும் கஷ்டப்படுகிறார்களோ அவர்களுடையகஷ்டமெல்லாம் அரசனைச்சேர்ந்த பாவமாகும். ஓ! யுதிஷ்டிர! நன்றாகஆலோசித்து நீதிதவறாமல் மனுஷ்ய முயற்சியை எங்கும் உபயோகப்படுத்திவிட்டால் அரசனுக்குப் பாபமில்லை. முயற்சிகள் தெய்விகமாய் முடிவுபெறுவதுமுண்டு; பயனற்றனவாவதுமுண்டு. முயற்சியைச்செய்துவிட்டால் அரசனைப் பாவமணுகாது. ஓ! ராஜஸிம்மமே! பாண்டவனே! இதுவிஷயத்தில் சூரனும் குரூரமற்ற நடக்கையுள்ளவனும் ஸஹாயமின்றி யுத்தத்தில் பகைவர்களைக்கொன்று பின்பு தானுமடிக்கப்பட்டவனுமான ஹயக்ரீவனென்னும் பழைய அரசனுடைய இந்தக்கதையைச் சொல்லுகிறேன்; கேள்.

ஹயக்ரீவன் மனிதர்களைப் பாதுகாப்பதிலும் சத்துருக்களையடக்குவதிலும் தக்கமுயற்சிசெய்து இவ்வுலகில் புகழ்பெற்று யுத்தத்தால் தேவலோகம்சென்று ஸுகித்திருக்கிறான். அகங்காரம்விட்டவனும் பகைவர்களுக்குத் துன்பஞ்செய்பவனும் மஹாத்மாவுமான ஹயக்ரீவன் ஆயுதங்களாலறுக்கப்பட்டும் திருடர்களால்அடிக்கப்பட்டும் தன்தர்மம்தவறாமல் யுத்தத்தில்முன்சென்று ஸித்திபெற்றுத் தேவலோகத்தில் ஸந்தோஷப்படுகிறான். அரசர்களுக்கு யுத்தமென்பது ஓர்யாகம். அதில், வில் யூபமும், நாண் அதிலுள்ளகயிறும், பாணம் [1]ஸ்ருக்கும், கத்தி ஸ்ருவமும், உதிரம் நெய்யும், தேர் வேதியும், கோபம் அக்னியும், நான்குகுதிரைகளும் நான்குரித்துவிக்குகளுமாயிருக்கின்றன. அரசர்களுள் சிங்கம்போன்ற பலசாலியான

[1] ஸ்ருக் ஸ்ருவம்என்பன ஓமம்செய்ய எடுக்கும் அகப்பை.

ஹயக்ரீவன் யுத்தமென்னும்யாகத்தியில் சத்துருக்களை ஹோமஞ் செய்து பிறகு முடிவில் தன்உயிரையும் ஹோமஞ்செய்து பாவமற்ற வனுகித் தேவலோகமடைந்து ஸந்தோஷமடைகிறுன். நன்ருய்த் தெரிந்து நீதிதவருமல் ராஜ்யத்தைரக்ஷித்து யாகங்களைச்செய்து உல கெல்லாம் பரவியபுகழ்பெற்று அகங்காரமற்ற ஹயக்ரீவன் தேவலோ கத்தில் களிப்புற்றிருக்கிறுன். நல்லஉத்ஸாஹத்தையடைந்தும் அபி மானத்தைவிட்டும் யாகம்முதலியதெய்வகாரியத்தையும் மனிதர்களுக் குச்செய்யவேண்டியகாரியத்தையும் தண்டநீதியையும் பூமியையும் காப்பாற்றித் தானும் பலதர்மங்களைச்செய்து மஹாத்துமாவான ஹயக்ரீவராஜன் தேவலோகத்தில் ஸந்தோஷிக்கிறுன். அறிந்தவ னும் கொடையாளியும் சிரத்தையுள்ளவனும் நன்றியறிந்தவனுமாக வேதங்களைஓதிச் சாஸ்திரங்களையும் நன்ருகக்கற்றுணர்ந்து கர்மாக்க ளைச்செய்து ராஜ்யத்தை நன்ருகப்பரிபாலித்து நான்குவர்ணங்களை யும் தம்தம்தர்மத்தில்நிலைநிறுத்தி மானிடலோகத்தைவிட்டு, பூஜ்யர் களானவித்வான்களுக்குரிய நல்லுலகஞ்சென்று ஹயக்ரீவன்ஸந்தோ ஷிக்கிறுன். பிரஜைகளைப் பாதுகாத்து யுத்தத்தில் ஜயமடைந்து [1] ஸோமரஸத்தைப் பானஞ்செய்து பிராம்மணச்சிரேஷ்டர்களைத் திரு ப்திசெய்து நீதிப்படி பிராணிகளிடம்தண்டம்செலுத்தி யுத்தம்முடிவு பெற்றதும் ஹயக்ரீவன் தேவலோகத்தில்ஸந்தோஷிக்கிறுன். ஸாதுக் களும் வித்வான்களுமான மனிதர்கள் அவனுடைய புகழ்மிக்கசிறந்த சரித்திரத்தை விசேஷமாகக் கொண்டாடுகிறுர்கள். பரிசுத்தமான கீர்த்திபெற்ற மஹாத்துமாவான ஹயக்ரீவன் வீரர்களுக்குரிய உல கங்களையடைந்து ஸ்வர்க்கத்தைஜயித்து ஸித்தியையடைந்தான்" என்றுசொன்னுர்.

---

## இருபத்தைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(தர்மபுத்திரர் தமக்குச் சோகம்அதிகரிக்கிறதென்றுசொல்ல, வ்யாஸர், காலத்தின்வலிமையையும் நீதியோடு செங்கோல்செலுத்தும் அரசன் ஸ்வர்க்கமடைவானென்பதையும் அவருக்குச்சொன்னது.)

குந்தியின்புத்ரரான யுதிஷ்டிரர், வ்யாஸரும்இவ்விதம்சொல்லிய தைக்கேட்டு, அர்ஜுனனும் கோபித்துக்கொண்டிருக்கையில், வ்யா ஸரைக்கேட்டுக்கொண்டு, "இப்பூலோகமென்னும்ராஜ்யமும் இதி

[1] ஸோமயாகஞ்செய்து என்பதுபொருள்.

லுள்ளபலவிதப்போகங்களும் இப்பொழுது என்மனத்திற்கு ஸந்தோஷத்தைக்கொடுக்கவில்லை. பதிகளையும் புத்ரர்களையும் இழந்துகதறுகிற ஸ்திரீகளின் அழுகைக்குரலைக்கேட்டுச் சோகமானது என்னைப் பிளக்கிறது. என்மனத்தால்சிந்தித்தும் அதுநிவிர்த்தியை அடையவில்லை" என்று மறுமொழிசொன்னார். இவ்விதம் சொல்லப்பட்டவரும் வேதத்தின்கரைகண்டவரும் தர்மந்தெரிந்தவரும் நிர்ணயம் தெரிந்தவர்களுள் சிறந்தவரும் மஹாப்ராஜ்ஞருமான வ்யாஸர் தர்மபுத்திரரைக்குறித்துப் பிரதிவசனம் சொல்லத்தொடங்கினார்.

"ஸ்திரீகள், போனபுருஷனைக் கர்மத்தாலும் யாகத்தாலும் அடைகிறதில்லை. புருஷனைக்கொடுக்கவும் எவனுமில்லை. இது காலத்தின்முறைப்படி தெய்வத்தால் விதிக்கப்பட்டது. மனிதன் காலத்தால் எல்லாவற்றையும் அடைகிறான். புத்திசக்தியாலும் கல்வியாலும் மனிதன் அகாலத்தில் ஒரு [1]விசேஷத்தை அடையமுடியாது. மூடனாயிருப்பவனும் ஒருகாலத்தில் பலபொருள்களை அடைகிறான். மனிதனுக்கு எல்லாவற்றையுங்கொடுப்பது காலந்தான். பூமியும் மருந்துகளும் மந்திரங்களும் மற்றத்தொழில்களும் அகாலத்தில் பயன்படுகிறதில்லை. அவைகளே காலத்தால் வளர்ச்சியடைந்து நல்ல காலத்தில் பயனைத்தருகின்றன. காற்று வேகமாகவீசுவதும் காலத்தினாலேதான். மேகங்கள் மழைபெய்வதும் காலத்தினாலேதான். குளம்முதலியவைகளில் தாமரை நீலோத்பலங்கள் உண்டாவதும் காலத்தினாலேதான். காடுகளில் மரங்கள்செழிப்பதும் காலத்தினாலேதான். ராத்திரிகள் முறையே கறுத்தும்வெளுத்துமிருப்பதும் காலத்தினாலேதான். சந்திரன் பூர்ணமான மண்டலம்பெறுவதும் காலத்தினாலேதான். அகாலத்தில் மரங்களில் பூவுங்கனியும்உண்டாகிறதில்லை. அகாலத்தில் ஆறுகள் வேகமாகப்பெருகுவதில்லை. அகாலத்தில் மலையிலும்கிராமத்திலுமிருக்கும்பக்ஷிகளும் பாம்புகளும் மிருகங்களும் யானைகளும் மதமடைகிறதில்லை. அகாலத்தில் ஸ்திரீகளிடம்கர்ப்பமுண்டாகிறதில்லை. அகாலத்தில் குளிரும் வெயிலும் மழையும் வருகிறதில்லை. அகாலத்தில் மனிதன்பிறப்பதும் இறப்பதுமில்லை. அகாலத்தில் குழந்தைபேசுகிறதில்லை; அகாலத்தில் யௌவனப்பருவத்தையடைகிறதில்லை. அகாலத்தில்விதைக்கப்பட்டவிதை முளைக்கிறதில்லை. அகாலத்தில் ஸூர்யன் உதயத்தையும் அஸ்தமனத்தையும் அடைகிறதில்லை. அகாலத்தில் சந்திரனும் பெரிய அலைகள்சூழ்ந்த ஸமுத்திரமும் மிகுவதுமில்லை; குறைவதுமில்லை. ஓ! யுதிஷ்டிரா! இதுவிஷயத்

[1] 'புத்ரலாபமுதலியவை' என்பது பழையஉரை.

திலும் துக்கத்தால்கஷ்டப்பட்ட ஸேனஜித்தென்னும் அரசன்பாடின இப்பழைய இதிஹாஸத்தைச் சொல்லுகிறார்கள். பொறுக்கமுடியாதஇக்காலகதியானது எல்லாமனிதர்களையும் பிடிக்கிறது. எல்லா அரசர்களும் காலத்தால் முதிர்ச்சியடைந்துதான் மரிக்கிறார்கள். அரசனே! உலகத்தில் சிலர் சிலமனிதர்களை அடிக்கிறார்களென்பதும் அப்படியே அவர்களைச் சிலர் அடிக்கிறார்களென்பதும் உலகத்தில் வழங்கும்வெறும்பேர். ஓ! அரசனே! அடிக்கிறவனுமில்லை; அடிபடுகிறவனுமில்லை. ஒருவன் அடிக்கிறேனென்றெண்ணுகிறான். மற்றொருவன் அடிக்கவில்லையென்றெண்ணுகிறான். உண்மையோ பிராணிகளின்பிறப்பும் இறப்பும் காலத்தால் ஏற்படுகின்றன. பொருள்நஷ்டமானாலும் பிள்ளை பெண்டிர் தந்தைமரித்தாலும் அப்பொழுது கஷ்டமென்றுதோன்றுகிற துக்கத்தை நன்றாகஆலோசித்து விலக்கிக்கொள்ளவேண்டும். விவேகமற்று ஏன்சோகப்படுகிறாய்? சோகப்படும்ஜனங்களைப்பார்த்து அவர்களை (ஸமாதானஞ்செய்யாமல்) ஏன் நீயும் சேர்ந்து சோகத்தையடைகிறாய்? ஒருதுக்கத்தால் மற்றொரு துக்கம் விளைகிறதையும், ஒருபயத்திலிருந்து வேறுபயமுண்டாவதையும் (உன்னிடத்திலேயே) பார்த்துக்கொள். (ஸுகதுக்கம்) நமக்கு எப்படியோ அப்படியே மற்றவர்களுக்கும் ஸமம். ஆகையால், தனிமையாக, இந்த 'நான் என்ற தன்னைப்பற்றிய அபிமானங்கூடாது. அபிமானித்தால் இந்தப்பூமிமுழுவதும் நம்முடையதாகிறது' என்பதை அறிகிறவன் அவிவேகமடையமாட்டான். [1]சோகத்திற்கிடமாக ஆயிரமும் ஸந்தோஷத்திற்கிடமாகநூறும் ஒவ்வொருதினமும் மூடனைப்பிடிக்குமேயொழியப் பண்டிதனிடமணுகா. இப்படிக் காலகதியால் இஷ்டங்கள் அனிஷ்டமாயும், அனிஷ்டங்கள்இஷ்டமாயும், துக்கம் ஸுகமாயும், ஸுகம் துக்கமாயும் பிராணிகளிடம் மாறிக்கொண்டுவருகின்றன. உண்மையில் துக்கமிருக்கிறதேயல்லாமல் ஸுகமில்லை. ஆகையால், அதுதான் அனுபவிக்கப்படுகிறது. ஆசையின் கொடுமையால் துக்கமுண்டாகிறது. துக்கம்முடிவடைந்தால் ஸுகம் தோன்றுகிறது. ஸுகத்திற்குப்பின் துக்கமும் துக்கத்திற்குப்பின் ஸுகமும் உண்டாகின்றன. நிலைமையானஸுகத்தையும் நிலைமையானதுக்கத்தையும் அடைகிறதில்லை. ஒருஸமயம் ஸுகமே துக்கமாகமுடியும். துக்கமேஸுகமாகவுமுடியும். ஆகையால், அதிகதுக்கமடைந்து நிலைமையானஸுகத்தைவிரும்புகிறவன் ஸுகத்தின்முடிவிலுண்டாகும் துக்கத்தையும் துக்கத்தின்முடிவிலுண்டாகும் ஸுகத்

[1] இங்கு, ஆத்மஜ்ஞானத்தைப்பற்றியதென்று பழையஉரைகூறுகின்றது.

தையும் விடவேண்டும். சோகமும் தாபமும் அதிகத்துன்பத்தைத் தரும்ஆயாஸமும் எந்தக்காரணத்தால் உண்டாகின்றனவோ அந்தக் காரணம் சரீரத்தில் ஓர் அங்கமாயிருந்தாலும் அதைத்தள்ளவேண்டும். ஸுகமோ துக்கமோ பிரியமோ அப்பிரியமோ எதுவந்தாலும் மனம்மாறுபடாமல் அனுபவிக்கவேண்டும். ஐயனே! பிள்ளைபெண்டிர்களுக்குச் சற்றேனும் பிரியத்தைச்செய்யும் எவன் எந்தக்காரணத்தால் எங்ஙனம் என்னஸம்பந்தமுடையவனென்று தெரிந்துகொள். ஓ! யுதிஷ்டிர! தர்மமும் ஸுகதுக்கமும்தெரிந்தவனும் உலகத்தில் முன்பின் அறிந்தவனும் மிக்கஞானமுள்ளவனுமான ஸேனஜித்தென்னும் அரசன், 'உலகில்மிக்கஅறிவற்றவர்களும் கல்வியில்கரைகண்டவர்களும் உலகத்தில்செழிப்படைந்து ஸுகிப்பார்கள். நடுத்தரத்திலுள்ள மனிதர்கள்தாம் கஷ்டப்படுகிறார்கள்' என்றுசொன்னான். பிறர்துக்கத்தைக்கண்டு (அதைநிவிர்த்திசெய்யாமல்) தானும் துக்கப்படும் மனிதன் ஒருகாலத்திலும் ஸுகமுள்ளவனாகமாட்டான். துக்கத்துக்கு முடிவில்லையன்றோ? ஒருதுக்கத்திலிருந்து மற்றொருதுக்கமுண்டாகும். உலகத்தில் ஸுகமும் துக்கமும் ஸம்பத்தும் ஆபத்தும் லாபமும் நஷ்டமும் இறப்பும் பிறப்புமாகிய யாவும் காலத்தால் வருகின்றன. ஆகையால், மோகத்தையும் ஸந்தோஷத்தையும் அடையக்கூடாது. அரசர்களுக்கு யுத்தத்தில் தீக்ஷைபெறுவதும் ராஜ்யத்தைப்பரிபாலிப்பதும் தண்டநீதியை நன்றாகச்செலுத்துவதும் யாகத்தில் தக்ஷிணைகொடுப்பதும் நல்லதானஞ்செய்வதும் மிகப்பரிசுத்தமானதர்மமென்று தெரிந்துகொள்ளவேண்டும். நன்றாகத்தெரிந்துகொண்டு நீதிப்படி ராஜ்யத்தைரக்ஷிப்பவனும் அகங்காரம்விட்டுயாகங்களைச்செய்பவனும் பிராணிகளையெல்லாம் தர்மக்கண்ணால் ஸமமாகப் பார்ப்பவனும் மஹாத்மாவுமான அரசன் தேகத்தைவிட்டபின் தேவலோகத்தில் ஸந்தோஷிக்கிறான். யுத்தங்களில்வெற்றியடைந்து ராஜ்யங்களைப்பாதுகாத்து [1]ஸோமத்தைப்பானஞ்செய்து நீதிப்படி செங்கோல்செலுத்திப் பிராணிகளை வளர்க்குமரசன் ஆயுள்முடிந்தபின் தேவலோகமடைந்துஸந்தோஷிக்கிறான். அரசன் யாகங்களைச்செய்து ராஜ்யத்தைஜயித்து அதிலுள்ள பிரஜைகளையும் அவர்களிஷ்டங்களையும்ரக்ஷித்து வேதசாஸ்திரங்களைநன்குணர்ந்து நான்குவர்ணத்தாரையும் தம்தம்தர்மத்தில் நிலைநிற்கச்செய்து ராஜ்யத்தைநன்குபாதுகாத்துப் பரிசுத்தியுள்ளவனாகித் தேவலோகத்தில்விளங்குகிறான். எந்த அரசன் ஸ்வர்க்கத்திலிருக்கும்போதும் அவனுடைய சரித்திரத்தை

1 ஸோமயாகஞ் செய்தென்பது கருத்து.

மந்திரிகளும் ராஜ்யத்திலுள்ளமனிதர்களும் கொண்டாடுகிறார்களோ அவ்வரசன் அரசர்களில் மிகச்சிறந்தவனாவான்" என்றுசொன்னார்.

---

[1] அதிகபாடமான அத்தியாயம்.

**(தர்மபுத்திரர், பொருளானது யாகதானங்களுக்காகவே படைக்கப்பட்டதென்றும் போகத்துக்கு அன்றென்றும் அர்ஜுனனுக்குச் சொன்னது.)**

இந்தஸமயத்திலேயே மிக்கபுத்திமானான யுதிஷ்டிரர் அர்ஜுனனைநோக்கி நல்லநீதியுள்ளவாக்கியத்தைச் சொல்லத்தொடங்கினார். "ஏ! பார்த்தனே! 'பொருளுக்குமேற்பட்டது ஒன்றுமில்லை. பொருளில்லாதவனுக்கு ஸ்வர்க்கமும் ஸுகமும் பயனுமில்லை' என்று நீ நினைப்பது வீண். வேதங்களிலும் யஜ்ஞங்களிலும் ஸித்திபெற்றதாலும் தபஸுசெய்ததாலும் சாச்வதமான லோகமடைந்த பலஜனங்களும் ரிஷிகளும் காணப்படுகிறார்கள். ஏ! தனஞ்சய! பிரம்மசரியாசிரமம்பெற்றுத் தர்மத்தையெல்லாந் தெரிந்துகொண்டு ரிஷிகளின்ஸமய நெறியை ரக்ஷித்துவரும் ஜனங்களைத் தேவர்கள் பிராம்மணர்களாக அறிகிறார்கள். ஏ! அர்ஜுன! ரிஷிகளில்சிலர் வேதநிஷ்டையுள்ளவர்களென்றும் சிலர் ஞானநிஷ்டையுள்ளவர்களென்றும் சிலர் தர்மநிஷ்டையுள்ளவர்களென்றும் எப்பொழுதும் தெரிந்துகொள். ஏ! பாண்டவ! எவ்விதக்காரியங்களும் ஞானநிஷ்டையுள்ள ரிஷிகளிடங் கேட்டுத் தீர்மானிக்கத்தக்கவையென்று வைகானஸரென்னும் ரிஷிகளின்வசனத்தை நாம்கேட்டிருக்கிறோம். ஏ! தனஞ்சய! தானம் அத்தியயனம் யாகம் தாங்குவதற்குஅரிதானதண்டம் என்கிற வேதத்திற்சொல்லிய இக்காரியங்களைச்செய்து அஜர்களும், ப்ருச்னிகளும், ஸிகதர்களும், அருணர்களும், கேதுக்களுமாகியரிஷிகள் ஸ்வர்க்கலோகமடைந்தார்கள். கர்மநிஷ்டையுள்ளவர்கள் ஸூர்யனுக்குத் தக்ஷிணமானமார்க்கஞ்சென்று அடையும்இவ்வுலகங்களை நான் முந்தியே சொல்லியிருக்கிறேன். உத்தமயாகஞ்செய்த உபாஸகர்கள் அடையக்கூடியதும் என்றும் அழிவில்லாததுமான உலகத்திற்குச் செல்லும்வழி உத்தரமார்க்கமென்று சொல்லப்படும். ஏ! பார்த்த! தெரிந்தவர்கள் அவ்விரண்டிலும் உத்தரமார்க்கத்தைக் கொண்டாடுகிறார்கள். ஆனால், ஸந்தோஷமென்பதுதான் ஸ்வர்க்கத்திலுஞ்சிறந்ததும் ஒப்பற்றஸுகமுமாகும். ஸந்தோஷத்தைக்காட்டிலும் பெரிதொன்றுமில்லை. அந்தச் சந்தோஷமானது கோபத்தையும் ஆசையையும் விட்டமனிதனிடம் நிலைத்திருக்கும். இதுவிஷயத்திலும் யயாதியென்

---

[1] இதற்கு, கிருஷ்ணாசார்யர் பதிப்பிலும் அத்யாயஎண் கொடுக்கப்படவில்லை.

னும் அரசனால்சொல்லப்பட்ட இக்காதையைச் சொல்லுகிறார்கள். 'மனிதன், ஆமை தன் அங்கங்களை அடக்குவதுபோல வெளியில் நீண்ட ஆசையாவற்றையும் எப்பொழுது 'உள்ளடக்குகிறானோ, எப்பொழுது தான்பயமற்றவனாகவும் பிறர்பயத்திற்குக் காரணமாகாதவனாகவும் பகையும் நட்பும்விட்டவனாகவுமிருக்கிறானோ அப்பொழுது பிரம்மரூபமாகிறான். எப்பொழுது மனிதன் எல்லாப்பிராணிகளிடத்திலும் மனம், வாக்கு, தொழில்இம்மூன்றாலும் தீங்குசெய்யவில்லையோ அப்பொழுது அவன் பிரம்மரூபமாகிறான். அபிமானத்தையும் மோகத்தையும் பலவிதஆசைகளையும் விட்டு (உண்மையான) ஆன்மாவைக்கண்ட [1]ஸாது மோக்ஷம்பெறுவான்' ஏ! பார்த்த! இந்திரியங்களையடக்கிக்கொண்டு நான்சொல்வதைக்கேள். சிலர் தர்மத்தையும், சிலர் சீலத்தையும், சிலர் பொருளையும் விரும்புகிறார்கள். தர்மத்திற்குக்காரணமென்று எவன் பொருளைவிரும்புகிறானோ அவனுக்கு விருப்பமில்லாமையே மிகச்சிறந்தது. பொருளிலும் பொருளைமூலமாகக்கொண்ட தர்மத்திலும் பலதோஷமிருப்பதை நேரில் பார்க்கிறேன். நீயும் பார்க்கத் தக்கவன்தான். பொருளாசையுள்ளவன் விலக்கக்கூடிய கர்மங்களை விலக்குவது மிகக்கடினம். பொருளில் ஆசைபற்றியவர்களுக்கு நற்காரியம்நடப்பது மிகவரிது. பிறருக்குத் துரோகஞ்செய்கிறவர்களுக்குப் பொருள்உண்டாகிறதென்று சொல்லுகிறார்கள். எக்காரணத்தாலுண்டானாலும் பொருளென்பது பயத்தைத்தரும். நல்லஸ்வபாவங்கெட்டுச் சோகம் பயம் இவைகளை நினையாமல் அற்பப்பொருள்நிமித்தம் ஆசைகொண்டமனிதன், பிறரைக் கொல்வதனாலுண்டாகும் பெருங்கொலைக் குற்றத்தையும் நினைக்கிறானில்லை; அடையமுடியாத பொருளையடைந்து வேலைக்காரர்களுக்குக் கொடுப்பதைக்கூடத் திருட்டுப்போவதுபோலப் பயந்து மிகவும் மனவருத்தமடைவான். கூலிவாங்கும் வேலைக்காரர்களும் தோஷமுள்ளவர்களாகத் தோற்றுவார்கள். பொருளில்லாதவனை எவன் என்னசொல்லக்கூடும்? பொருளில்லாதவன்தான் எவ்விதத்தோஷத்திற்கும் இடமில்லாமல் ஸுகித்திருப்பான். பொருளென்பது தேவர்களின்ஸொத்தாகையால் அதனையடைபவன் ஸுகமாயிருக்கமாட்டான். இதுவிஷயத்தில் முன்னோர்கள், 'பிரம்மதேவர் பொருள்களை யாகத்திற்காகப்படைத்தார். அப்பொருளைக்காக்கும் மனிதனையும் யாகத்திற்கே உண்டுபண்ணினார். ஆகையால், பொருள் யாவும் யாகத்திலேயே உபயோகிக்கத்தக்கன. பொருளைத் தன்

[1] இங்கு, 'ஸாதோ:' என்றபாடங்கொள்ளப்பட்டது.

னிஷ்டத்திற்குஉபயோகிப்பது நீதியும் ஹிதமுமன்று' என்று யாக த்தை உறுதிப்படுத்திச்சொல்லும் யஜ்ஞரூபியான பகவான்கூறின வேதத்திலுள்ளவசனத்தைச் சொல்லுகிறார்கள். தனமுள்ளவர்களிற் சிறந்த கௌந்தேய! பிரம்மதேவர் இப்பொருளைத் தம்காரியத்தை யும் யாகத்தையுமுத்தேசித்து மனிதர்களுக்குக் கொடுக்கிறாரென்று தெரிந்துகொள். ஆகையால்தான் அப்பொருள் ஒருமனிதனுக்கும் சொந்தமில்லையென்று புருஷர்கள் அறிகிறார்கள்; ஆகையால், கிடை த்தபொருளை மனிதன் சிரத்தையுள்ளவனாகித் தானத்திலும் யாகத் திலும் உபயோகிக்கவேண்டும். பொருளைத் தானம்செய்வதன்றிப் புஜிப்பதும் அழிப்பதும்நீதியல்ல. யாகம்தானம்எனச் சிறந்தகாரி யம் செய்யவிருக்கும்பொழுது பொருளைச்சேர்த்துவைப்பதும் பய னற்றது. எவர்கள் புத்திக்குறைவால் பொருளை ஒழுக்கம்விட்டவ ரிடம் கொடுக்கிறார்களோ அவர்கள் சரீரம்விட்டபின் பலநூற்றாண்டு மலத்தைப்புசிக்கிறார்கள். யோக்கியன் அயோக்கியன் என்கிறபகுத் தறிவில்லாமையால் அயோக்கியனிடம் தானமும் யோக்கியனிடம் தானமில்லாததும்பற்றித் தானம் விதிப்படிநடப்பதும் மிகவரிது. அடைந்தபொருள்களுக்கும் அயோக்கியனிடம்கொடுப்பதும் யோக் கியனிடம் கொடாமையுமென இவ்விரண்டுதோஷங்களும் உண்டெ ன்று தெரிந்துகொள்" என்றுசொன்னார்.

## இருபத்தாறுவது அத்தியாயம்.

### ராஜதர்மம். (தொடர்ச்சி.)



**(தர்மபுத்ரர் பலவாறுபுலம்பிப் பிராயோபவேசஞ்செய்வேனென்ற தும், வ்யாஸர் கர்மாவே செய்யத்தக்கதென்றதும்.)**

யுதிஷ்டிரர், "குழந்தை அபிமன்யுவும் கொல்லப்பட்டு, திரௌ பதியின்பிள்ளைகளும்இறந்து, திருஷ்டத்யும்னனும் விராடனும் த்ரு பதனும் விருஷஸேனனும் தர்மந்தெரிந்ததிருஷ்டகேதுவும் மற்றும் பலதேசத்து வீரர்களானஅரசர்களும் யுத்தத்தில் மாண்டுபோகும் படி ஞாதிகளைக்கொலைசெய்து, ராஜ்யத்தில் ஆசைகொண்டு,தன்குலத் தையே ஒழிக்கக்காரணனும் மஹாகடோரனுமாகிக் கஷ்டப்படும் என்னைச் சோகம்விடவில்லை. நான் எவர்மடிமீது புரண்டுவிளையாடிக் கொண்டிருந்தேனோ அந்தப்பீஷ்மரை அந்தநானே ராஜ்யத்தில் பே ராசைபிடித்து யுத்தத்திற்கொன்றேன். சிகண்டியைப் பார்க்கும்

போது வஜ்ரத்துக்கொப்பான அர்ஜுனன்பாணங்களால் என்னிமித் தம் அடிபட்டு மூர்ச்சையடையும் இந்தப்பீஷ்மரை எப்பொழுதுகண் டேனோ அப்பொழுது பிரகாசிக்கும்பாணங்களால்சூழப்பட்ட கிழச் சிங்கம்போலிருக்கும் மஹாத்மாவும் பாட்டனுருமான பீஷ்மரைப் பார்த்ததும் என்மனம் நடுக்கமுற்றது. எதிராளிகளைக்கொல்லும் சக்திபெற்ற பாட்டனுரான பீஷ்மர் மலைபோல ரதத்திலிருந்துவிழுந்த பொழுதே எனக்குப்பாவம்வந்தது. அம்பும் வில்லும் கையிலெடுத் துப் பரசுராமரோடும் பலநாள் போர்புரிந்தவரும் காசியில் கன்னி கையை வேண்டிக்கூடின பல அரசர்களை ஒருதேருடன்சென்று யுத்தத் திற்கு அழைத்தவீரரும் ஒருவராலும் அடக்கமுடியாத உக்ராயுத னென்னும் சக்கரவர்த்தியைத் தம்அஸ்திரத்தின் அக்னியால் ஒரு நொடியில் எரித்தவருமான அந்தப்பீஷ்மர் என்னால் யுத்தத்தில்வீழ்த் தப்பட்டார். தம்மிஷ்டம்போல மிருத்யுவையிருக்கச்செய்யவல்லவ ராயினும் பாஞ்சாலதேசத்தாருகிய சிகண்டியைத் தம்பாணங்களால் கீழேவிழச்செய்யாத அந்தப்பீஷ்மர் அர்ஜுனனுல்வீழ்த்தப்பட்டார். ஓ! முனிச்ரேஷ்டரே! பூமியில்விழுந்து உதிரம்பெருகும்படி இவரை எப்பொழுதுகண்டேனோ அப்பொழுதே மிக்ககோரமான தாபம் என்னைப் பிடித்துக்கொண்டது. இளமைப்பருவத்தில் எங்களைவள ர்த்துப் பாதுகாத்துவந்த பாட்டனுரான அந்தப்பீஷ்மர், சிறிதுகாலம் சிற்றின்பத்தைத்தரும் இவ்விராஜ்யத்தினிமித்தம் பேராசைகொண்டு பெரியோர்களைக் கொலைசெய்யத்துணிந்தபாவியும் மூடனுமானஎன் னுல் வீழ்த்தப்பட்டார். பெரியவில்லாளியும் அரசர்கள்யாவராலும் பூஜிக்கப்பட்டவரும் ஆசாரியருமான துரோணரிடம் அவர்புத்திர னைக்குறித்து யுத்தத்தில் எதிர்சென்று பாவி பொய்யைச்சொன் னேன். 'ஓ! அரசனே! என்குமாரன்உயிரோடிருப்பானுனல் நீ ஸத்தி யத்தைச்சொல்' என்றுஆசிரியர் என்னைக்கேட்டவசனம் என் அங்கங் களைக் கொளுத்துகிறதே. நான் உண்மைசொல்லுகிறவனென்ற பெரு நம்பிக்கையுடன் பிராம்மணர் என்னிடம் அதைக்கேட்டனர். குரு வான அவரிடம் ஸத்யம்என்னும்கவசம்பூண்டு ராஜ்யத்தில்பேராசை பற்றிப் பெரியோர்களைக் கொல்லத்துணிந்த பாவியாகியஎன்னுல், யானை அடிபட்டவுடன் யானையென்பதைமறைவாகவைத்து 'அசுவத் தாமா அடிக்கப்பட்டார்' என்று பொய்சொல்லப்பட்டது. மிகவும் செய்யத்தகாத இக்கர்மத்தைச்செய்தநான் எவ்வுலகங்களை அடையப் போகிறேனே? யுத்தங்களில் புறங்கொடாத தமையனுன கர்ணனைக் கொன்றேன். என்னைவிடக் கொடும்பாவி இவ்வுலகில் எவனிருக்கி

ரூன். மலைகளில் சிங்கம்போலுதித்த குழந்தையாகிய அபிமந்யுவை யும் பேராசைகொண்டு துரோணரால் ரக்ஷிக்கப்படும் சேனைக்குள் பிரவேசிக்கச்செய்தேன். அதுமுதல், பெருங்கொலைசெய்த பாவி போல அர்ஜுனனையும் தாமரைக்கண்ணரான கிருஷ்ணபகவானையும் பார்க்கமுடியாதவனுனேன். துக்கப்படத்தகாத திரௌபதி ஐந்து மலைகளையிழந்த பூமிபோல ஐந்துபிள்ளைகளையுமிழந்ததை நினைத்துத் தபிக்கிறேன். இவ்விதம் இவ்வுலகத்திற்கேக நாசத்தை உண்டுபண் ணின நான் பேரபாதியும் பெரும்பாவியுமானேன். நான் இவ்விதமே யிருந்துகொண்டு இச்சரீரத்தை வாடச்செய்கிறேன். பெரியோர் களைக் கொலைசெய்தநான் மறுபிறவிகளிலாவது இங்ஙனம் குலபாதக ஞகாதிருக்கவேண்டி இப்படிப் பிராயோபவேசமடைந்திருக்கிறே னென்று தெரிந்துகொள்ளுங்கள். ஓ! மஹரிஷிகளே! இனி உண்ப தில்லை; எவ்விதமும் ஜலமும்உபயோகிக்கிறதில்லை. இப்படியே யிருந்துகொண்டு நான் இனியபிராணனைப் போகச்செய்கிறேன். ஓ! மஹரிஷிகளே! நீங்கள் இஷ்டப்படிபோகலாம். உங்களைநமஸ்கரித் துக் கேட்டுக்கொள்ளுகிறேன்; இந்தச்சரீரத்தை இவ்விதமே விடப் போகிறேன். எல்லோரும் எனக்கு அநுமதிகொடுக்கவேண்டும்" என்று சொன்னர்.

பந்துக்களின்சோகத்தால் பீடிக்கப்பட்டு இவ்விதஞ்சொல்லும் அந்தத்தர்மபுத்ரரை, 'அப்படியல்ல' என்றடக்கி, ரிஷிகளிற்சிறந்த வரான வ்யாஸபகவான் (திரும்பவும்) சொல்லத்தொடங்கினர். "ஓ! மஹாராஜனே! நீ கரைகடந்துசோகப்படுவது நியாயமன்று. ஓ! பிரபுவே! இஃது அதிருஷ்டமென்றுசொல்லியிருந்தும் திரும்பவும் சொல்லுகிறேன். உலகில்பிறந்த பிராணிகளுக்கு ஜலத்தில் குமிழி போலச் சேர்க்கையும்பிரிவும் வருவதும் போவதுமாயிருக்குமென் பது நிச்சயம். கூட்டங்களின்முடிவு நாசமே. உயர்வதின்முடிவு விழுவதே. சேர்க்கையின் முடிவு பிரிவதே; ஜீவனத்தின்முடிவு மர ணமே. சோம்பலாயிருத்தல் (அக்காலம்) ஸுகமாயிருப்பினும் முடி வில்துக்கமே. முயற்சி அந்தஸமயம்துக்கமாயினும் ஸுகத்தைத் தரும். அணிமாதிஸித்திகளும் ஸம்பத்தும் லஜ்ஜையும் தைரியமும் கீர்த்தியும் முயற்சியுள்ளவனிடம்இருக்குமேயல்லது சோம்பேறியிட மிரா. நண்பர்கள் ஸுகத்தைச்செய்யவும்முடியாது. விரோதிகள் துக் கத்தைச் செய்யவுமுடியாது. புத்திசாலித்தனத்தால் பொருளையடை யவுமுடியாது. பொருளால் ஸுகம்பெறவுமுடியாது. ஏ! கௌந் தேய! தெய்வத்தால் எவ்விதக்கர்மஞ்செய்யும்படி பிறப்பிக்கப்பட்

டாயோ அவ்விதக்கர்மத்தைச் செய். அதுகொண்டுதான் நீ ஸித்தி பெறவேண்டும். ஓ! அரசனே! உனக்கே நீ வல்லவனல்லன்" என்று சொன்னார்.

---

## இருபத்தேழாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(வ்யாஸர், தர்மபுத்திரருடைய சோகத்தைவிலக்கக்கருதி, அச்மர் ஜனகருக்குக்கூறிய ஞானோபதேசத்தைக் கூறியது.)

ஞாதிகளின்சோகத்தால் கஷ்டப்பட்டுப் பிராணனையும்விடத் துணிந்த பாண்டுகுமாரர்களில் முதல்வரான தர்மபுத்திரரின்சோகத்தை விலக்கவேண்டி வ்யாஸபகவான் சொல்லத்தொடங்கினார். "ஓ! புருஷச்ரேஷ்டனான யுதிஷ்டிரனே! இதுவிஷயத்தில் முன்ஒரு ஸமயம் துக்கத்தால்சோகப்பட்ட, விதேஹதேசத்திற்கு அரசனான ஜனகமஹாராஜன் அறிவிற்சிறந்த அச்மரென்னும்பிராம்மணரிடம் ஸந்தேஹத்தைக்கேட்க, அந்த அச்மர்பாடிய பழைய இவ்விதிஹாஸத்தைச் சொல்லுகிறார்கள். ஜனகர், 'பந்துக்களும்பொருளும் வரும்பொழுதும் நீங்கும்பொழுதும் ஸுகத்தைவிரும்பும் மனிதன் எவ்விதமிருக்கக்கடவன்?' என வினவினர். (அதனைக் கேட்ட) அச்மர் உபதேசிக்கத்தொடங்கினார். "மனிதனுக்கு இச்சரீரம் உண்டான பின் சரீரத்தைத்தொடர்ந்து பலதுன்பங்களும் ஸுகங்களும்உண்டாகின்றன. அவைகளில் ஏதாவதொன்றுண்டாகும்பொழுது அதில் மனம்பற்றிச்செல்வானாயின் உடனே வாயு மேகத்தைஇழுப்பதுபோல அம்மூது அவன்புத்தியை இழுத்துவிடும். 'நான் நற்குலத்திற்பிறந்தவன்; ஸித்தியுள்ளவன்; ஸாதாரணமனிதனல்லன்' என்ற மூன்று வகை (அபிமானரூபமான) காரணங்களால் மனம் கர்வமடையும். மனத்தில் அதிக ஆசைகொண்டு தகப்பன்தேடினபொருள்களையிழந்து தாழ்மையடைந்தமனிதன் பிறர்பொருளைக் கிரஹிப்பதை நலமெனக்கருதுகிறான். அக்கருத்துக்கொண்டவனும் உலகத்திலுள்ள மரியாதையைவிட்டு நியாயமின்றிப் பிறர்பொருளையெடுப்பவனுமான அவனை அரசர்கள், வேடர்கள் அம்புகளால் மிருகத்தை அடிப்பது போல அடிக்கிறார்கள். ஓ! அரசனே! இருபதுபிராயத்திலும் முப்பதுபிராயத்திலுமிருக்கும் அவ்விதமனிதர்கள் நூறுபிராயம்வரையிலும் ஜீவிக்கமுடியாது. இவ்விதம் அதிககஷ்டப்படும் மனிதர்களுக்கு

எல்லாப்பிராணிகளுடைய நடக்கையையும் தெரிவித்து முறையே உப தேசமென்னும் வைத்தியத்தைச்செய்யவேண்டும். சித்தத்தின்விகாரமோ வேண்டாததின்வரவோ இவ்விரண்டும்தாம் மனத்திலிருக்கும் துக்கங்களுக்குக் காரணங்களே தவிர மூன்றாவதிருக்க நியாயமில்லை. இவ்விதமுள்ள அந்தத்துன்பங்களும் விஷயஸம்பந்தத்தாலுண்டாகும் பற்பலதுன்பங்களும் மனிதனைத்தொடர்கின்றன. இப்படியிருக்கும் பொழுதே பலமுள்ளனவும் பலமில்லாதனவும் பெரியனவும் சிறியனவுமாகிய பிராணிகள்யாவற்றையும் செந்நாய்களுக்கொப்பான ஜரையும் மரணமும் விழுங்குகின்றன. ஸமுத்திரஞ்சூழ்ந்த இந்தப்பூமி முழுமையும் ஜயித்தவனானாலும் இந்தஜராமரணங்களை ஜயிக்கும் மனிதன் ஒருவனுமில்லை. பிராணிகளுக்குநேரிடும் ஸுகதுக்கமெல்லாம் பரவசமாக அனுபவிக்கவேண்டுமேதவிர அதைவிலக்க உபாயங் கிடையாது. ஓ! அரசனே! இளமையிலோ நடுவயதிலோ முதுமையிலோ தனக்கு வேண்டியனவும் வேண்டாதனவுமானவிஷயங்கள் மனிதனால் விலக்கத்தக்கவைகளல்ல. அனிஷ்டங்களுடன்சேருவதும் இஷ்டங்களைவிட்டுவிலகுவதும் ஸம்பத்தும் ஆபத்தும் ஸுகமும் துக்கமும் அதிருஷ்டத்தை அனுஸரித்துவரும். அப்படியே பிராணிகளின் பிறப்பும் சரீரத்தைவிடுவதும் வேண்டியதை அடைவதும் அதற்குத்தக்கமுயற்சியுமாகிய யாவும்(அதிருஷ்டத்திற்குத்தக்கபடி) நிலைபெறும். மணமும் உருவமும் ரஸமும் ஸ்பர்சமும் இயற்கையால் மாறுவதுபோல ஸுகமும்துக்கமும் அதிருஷ்டத்தையனுஸரித்து வருகின்றன. உட்காருவதும் படுப்பதும் போவதும் கிளம்புவதும் குடிப்பதும் புசிப்பதும் பிராணிகள்யாவுக்கும் காலத்தாலேயே கிடைக்குமென்பது நிச்சயம். வைத்தியர்கள் நோயாளிகளாயும் பலவான்கள் பலமற்றவர்களாயும் நபும்ஸகர்கள் பெண்டிருள்ளவர்களாயும் இருப்பதைநோக்க, காலத்தின்முறை ஆச்சரியமாயிருக்கிறது. நற்குடிப்பிறப்பும் நோயின்மையும் அழகும் வீரியமும் நல்லஉருவமும் போகங்களும் விதிப்படியே அடையப்படும். விருப்பமில்லாத ஏழைகளுக்குப் பலபிள்ளைகள் உண்டாகிறார்கள். விசேஷமாகச் செல்வமிக்க மனிதர்களுக்குப் புத்திரனில்லை. விதியின்செய்கை அற்புதமானது. வியாதி, ஜலம், ஆயுதம், அக்னி, பசி, விஷம், ஜ்வரம், மரணம், மேலிருந்துவிழுதல்முதலிய எந்தஆபத்தில் எந்த மனிதன் போகும்படி விதியிருக்கிறதோ அவன் அதேவழியிற்செல்லுகிறான். விதியைத்தாண்டினவனும் விதியிலிருந்து வெளிப்பட்டவனும் எவனுமில்லை. விதியில் அகப்படாதமனிதனே இல்லை. மிகு

ந்தபொருளடைந்த மனிதன் யௌவனப்பருவத்திலேயே நாசமடைவது காணப்படுகிறது. மிகவும் கஷ்டப்படும்ஏழை கிழத்தனத்துடன் நூறுபிராயமிருக்கிறான். பொருளற்றபுருஷர்கள் சிரஞ்சீவிகளாய்க் காணப்படுகிறார்கள். பிரபுத்தனமுள்ள குலத்திலுதித்தவர்கள் விட்டிற்பூச்சிபோல நசிக்கிறார்கள். உலகத்தில் பெரும்பாலும் பொருளுடையவர்களுக்குப் புசிக்கும்சக்தி இருக்கிறதில்லை. ஏழைகளுக்கு மிகவிசேஷமாகக் கட்டையும் கல்லுங்கூட ஜீர்ணமாகும். காலத்தாலேவப்பட்டு (மனிதன்,) 'நான் இதைச்செய்கிறேன்' என்று எண்ணுகிறான். கெட்டபுத்தியுள்ளவன் வேண்டாதகாரியத்தையும் வேண்டியதுபோல ஸந்தோஷமில்லாமலே செய்வதும் காலத்தாலேயே; வேட்டையும் சூதும் வேசைகளும் குடியும் விவாதங்களும் அறிஞர்களால் இகழப்பட்டனவாயினும் மிகக்கற்றவர்களான புருஷர்களும் இவைகளில் பிரவிருத்திப்பது காணப்படுகிறது. இவ்வாறு சிந்திக்கையில், இஷ்டம் அனிஷ்டம்முதலிய பயன்கள்யாவும் காலத்தாலேயே எல்லாப்பிராணிகளையும் தொடருகின்றன. வேறுகாரணம் காணப்படவில்லை. வாயு, ஆகாசம், அக்னி, சந்திரன், ஸூர்யன், பகல், இரவு, நக்ஷத்திரங்கள், ஆறுகள், மலைகள் இவைகளை எவன் படைக்கிறான்? எவன் பரிபாலிக்கிறான்? குளிரும் வெயிலும் மழையும் காலத்தாலேயே உண்டாகின்றன. ஓ! நரச்ரேஷ்ட! இங்ஙனமே மனிதர்களுக்கு ஸுகமும் துக்கமும் காலத்தாலுண்டாகின்றன. மருந்துகளும் ஆயுதங்களும் ஹோமங்களும் ஜபங்களும் மனிதனுடைய கிழத்தனத்தையும் மரணத்தையும் விலக்கி ரக்ஷிக்கத்தக்கவைகளல்ல. கருங்கடலில் எப்படிக் கட்டையும்கட்டையும்சேர்ந்து பிறகு பிரிவடைகின்றனவோ அப்படியே பிராணிகளின்சேர்க்கையும் உண்டாகிறது. இனிமையான கானம் வாத்தியம்முதலியவைகளால் உபசரிக்கப்படும் அரசர்களிடமும் ஒருவிதகதியுமற்று எப்பொழுதும் பரான்னம்புஜித்துப்பிழைக்கும் ஏழைகளிடமும் காலன் ஒரேவிதச் செய்கையுள்ளவன். இந்தஸம்ஸாரத்தில் இதுவரையில் பல்லாயிரம் தாய்தந்தைகளும் பலநூறுபிள்ளைபெண்டிர்களும் அனுபவிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் யாருடையவர்கள்? நாம் யாருடையவர்கள்? மனிதனுக்கு ஒருவரும் நிலைத்திருப்பவரில்லை. இவனும் ஒருவருக்கும் நிலைத்திருக்கிறவனில்லை. பெண்டிர் பந்துக்கள் நண்பர்களுடன் இந்தச்சேர்க்கையானது வழியில்நேரும் சேர்க்கைதான். மனிதன், 'எங்கிருக்கிறோம்? எங்குப் போகப்போகிறோம்? நாம் யார்? இங்கு எதற்காக வந்தோம்? எதைப்பற்றி எக்காரணத்தால்

சோகத்தை அடைகிறோம்' என்று ஆலோசித்து மனத்தைஉறுதிப் படுத்தவேண்டும். இஷ்டவஸ்துக்கள்உள்ளனவாயினும் நிலையின்றித் தேருருளைபோல உருளும்' இந்தஸம்ஸாரத்தில் தாய் தந்தை உடன் பிறந்தார் நண்பர்களெல்லாம் வழியில்நேரும் சேர்க்கைகளே. (ஆகை யால், பந்துக்களின்மரணத்தைப்பற்றித் துக்கிப்பது நியாயமன்று.)

'பரலோகமோ கண்ணுக்கெதிரில் காணத்தக்கதில்லை. அவ் வுலகில் சுகித்திருக்கவிரும்புவோன் சாஸ்திரத்தின் விதியைவிடாமல் நம்பிக்கையுடனிருக்கவேண்டும்' என்று தெரிந்தவர்கள் சொல்லுகி றார்கள். அறிந்தவன் பிதிருதேவதைகளுக்குரியகர்மத்தைச் செய்ய வேண்டும். மற்றுமுள்ள தர்மகாரியங்களையும் யாகத்தையும் மூவ கைப்பயனையும் விதிப்படி அடையவேண்டும். கிழத்தனமும் மரணமு மாகிய பெருமுதலையுள்ள ஆழ்ந்த இக்காலக்கடலில் மூழ்கியிருக் கும் இவ்வுலகில் அறிவுள்ளவன் யாருமில்லை. ஆயுள்வேதம்கற்று வீணில் பலஸாதனங்களைத்தேடி வைத்தியரானபலர் தாமே வியாதி யால் கஷ்டமுள்ளவர்களாய்க் காணப்படுகிறார்கள். அவர்கள் பல விதநெய்களையும் கஷாயங்களையும்குடித்தும் கடலானது கரையைக் கடவாததுபோல மிருத்யுவைக் கடந்துபோகமாட்டார்கள். சிலர் [1] ரஸாயனமென்னும் மருந்தைத்தெரிந்துகொண்டு அதை விதிதவறா மல் உபயோகித்தும் யானைகள் தமக்கு மேலான யானைகளாலடிக்கப் படுவதுபோலக் கிழத்தனத்தால் அடிக்கப்படுகிறார்கள். அங்ஙனமே வேதமோதுவதில் விடாமுயற்சிசெய்தும் தவஞ்செய்தும் தானத்தை யும்யாகத்தையும்செய்தும் ஜராமரணங்களைத் தாண்டினார்களில்லை. பகலும் மாஸமும் வருஷமும் எப்பொழுதும் ஒழிவடைவதில்லை. பிறந்தபிராணிகள் எல்லாவற்றிற்கும் திரும்பவும் சேர்க்கையுண்டாவ தென்பது கிடையாது. பிராணிகள் யாவற்றாலும் அடையப்படுவதும் நீண்டதும் நிலைபெற்றதுமான (இந்தஸம்ஸார)வழியைப் பிராணியான வன் காலமென்னும் பெருவெள்ளத்தாலிழுக்கப்பட்டு நிலைமையில்லா தவனாகி அடைகிறான். ஜீவனிடமிருந்து சரீரம்விலகுகிறதோ சரீ ரத்திலிருந்துதான் ஜீவன்விலகுகிறானோ எப்படியானாலும் பந்துக்கள் தாரங்கள் மற்றஜனங்கள் ஆகியவர்களின்சேர்க்கை வழியில்சேர் க்கைதான். இந்தச்சேர்க்கையானது எப்போதும் எவனாலும் நிலை மையாய் அடையப்படமுடியாது. தன்சரீரத்துடன் சேர்க்கையே நிலைமையாயிருக்கவில்லை. மற்றமனிதனுடன் சேர்க்கை எங்ஙனம்

---

[1] வியாதியையும் கிழத்தனத்தையும்விலக்கி ஆயுளை நிலைக்கச்செய்வது ரஸாயனத்தின் குணம்.

நிலைத்திருக்கமுடியும்? ஓ! பாபமற்ற அரசனே! இப்பொழுது உனது தகப்பனெங்கே? இப்பொழுது உனதுபாட்டனெங்கே? நீ அவர்களைப் பார்க்கவில்லை. உன்னை அவர்கள் பார்க்கிறார்களில்லை. ஸ்வர்க்கத்தையும் நரகத்தையும் நேரில்கண்டமனிதன் இல்லை. ஓ! அரசனே! இவ்விஷயங்களில் வேதமே ஆஸ்திகர்களுக்குக் கண்ணாகும். நீ அக்கண் காட்டியபடி நடக்கவேண்டும். பிரம்மசரியமென்னும் ஆச்ரமத்தை நிறைவேற்றிப் பிதிருக்கள் தேவர்கள் ரிஷிகள் இவர்களின் கடனைத் தீர்க்கவேண்டி அஸூயையின்றிப் புத்திரனை உண்டுபண்ண வேண்டும்; யாகங்களையும் செய்யவேண்டும். முதலில் பிரம்மசாரியாயிருந்து பிக்ஷைமுதலிய தர்மங்களை நடத்திப் பிறகு மனத்திலுள்ள [1] கஷ்டங்களை விலக்கிக்கொண்டு யாகங்களைச்செய்து புத்திரர்களையும் உண்டுபண்ணி இவ்வுலகையும் மேலுலகையும் பரமாத்மாவையும் பாதுகாத்துக்கொள்ளவேண்டும். நீ இப்படி பொருள்களைச் சம்பாதித்துத் தன்தர்மத்தை நன்றாகச்செலுத்தி ராஜ்யத்தைப் பெருகச்செய்யும் அரசனுடையகீர்த்தி ஸ்தாவரஜங்கமங்களான எல்லாஉலகங்களிலும் ஓங்கிச்செழிக்கும்" என்றுசொன்னார்.

இங்ஙனம் யுக்திகள்நிரம்பிய அச்மரின்வாக்கியம் முடிவுபெறக் கேட்டுப் புத்திதெளிந்து சோகமும்விலகி, விதேகதேசத்திற்கு அரசராகியஜனகர் அந்தஅச்மரிடம் விடைகேட்டுக்கொண்டு தம்வீடுசென்றார். ஓ! இந்திரனுக்கொப்பான குந்தியின் குமாரனே! நீயும் இப்பொழுது அப்படியே சோகத்தைவிட்டுக் கிளம்பு; ஸந்தோஷத்தையடை; க்ஷத்திரியர்களுக்குரியதர்மப்படி ஜயிக்கப்பட்ட இந்தப்பூமியைப் பரிபாலனம்பண்ணு; அவமதிக்கவேண்டாம்" என்றுசொன்னார்.

---

## இருபத்தெட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணன், நாரதரால் ஸ்ருஞ்சயனுக்கு உபதேசிக்கப்பட்ட ராஜசரித்திரங்களைத் தர்மபுத்திரருக்குச் சொல்லியது.)

(இவ்விதம் சொல்லப்பட்ட) அரசச்ரேஷ்டரும் தர்மபுத்திரருமானயுதிஷ்டிரர் பேசாமலிருக்கும்போது பாண்டவனான அர்ஜுனன் கிருஷ்ணபகவானைநோக்கி, "ஓ! மாதவரே! ஞாதிகளின் சோகத்

---

[1] 'சரீராதிகளில் ஆத்மாவென்னும் பிரமத்தை' என்பது பழையஉரை.

தால் மிகவும்கஷ்டப்படுபவரும் சத்ருக்களைத்தபிக்கச்செய்பவருமான இந்தத்தர்மபுத்திரர் சோகக்கடலில் மூழ்கிவிட்டார். அவரை ஸமாதானஞ் செய்யவேண்டும். ஓ! ஜனார்த்தனரே! (இவரதுசோகத்தால்) நாங்கள்யாவரும் திரும்பவும் ஸந்தேகமுள்ளவர்களானோம். பிராஜ்ஞர்களிற்சிறந்தவரே! (ஆகையால்) நீரே இவருடையசோகத்தை விலக்கத்தக்கவர்" என்றுசொன்னான். இங்ஙனம் மஹாத்மாவான அர்ஜுனனால் சொல்லப்பட்டவரும் தாமரைக்கண்ணரும் அழிவற்றவருமான பகவான் கிருஷ்ணன் ராஜாவாகியதர்மபுத்திரரைநோக்கித் திரும்பினார். கேசவர் தர்மபுத்திரருக்கு மீறத்தக்கவரல்லர். தர்மபுத்திரருக்கு இளமைப்பருவமுதல் அர்ஜுனனிடத்திற்காட்டிலும் கிருஷ்ணனிடத்தில் பிரீதிஅதிகமுண்டு. (அந்தக்காரணம்பற்றி) கிருஷ்ணன் சந்தனத்தால் அலங்கரிக்கப்பட்டதும் கல்லுத்தூணுக்கொப்பானதுமான தர்மபுத்திரருடைய கையைத் தமது நீண்டகரங்களால் பிடித்துக்கொண்டு வேடிக்கையாகப் பேசநினைத்தார். (அந்தக்ஷணத்தில்) அழகான பற்களும் கண்களுமுடைய தர்மபுத்திரருடையமுகம் ஸூர்யனால் தொடப்பட்டதும் நன்றாய்மலர்ந்ததுமான தாமரைமலர்போல விளங்கிற்று. வாஸுதேவர் சொல்லத்தொடங்கினார். "ஓ! புருஷப்புலியே! அங்கங்களைவாடச்செய்யும் சோகத்தை நீர் அடையவேண்டாம். இந்த யுத்தகளத்தில் கொல்லப்பட்ட மனிதர்களைத் திரும்பவும் அடைவது முடியாதன்றோ? ஓ! அரசரே! கனவில் அடையப்பட்டவஸ்துக்கள் விழித்துக்கொண்டவனுக்கு எங்ஙனம் பொய்யோ அப்பெரியயுத்தத்தில் கொல்லப்பட்டக்ஷத்திரியர்களும் அங்ஙனமேதான். யுத்தத்தில்விளங்கும் சூரர்களானயாவரும் எதிரில்நின்று கொல்லப்பட்டார்களேதவிர இவர்களில் ஒருவனும் பின்புறத்திலாவது ஓடும்பொழுதாவது கொல்லப்பட்டவனல்லன். வீரர்களானயாவரும் பெரியயுத்தத்தில் சண்டைசெய்து தம்முயிரைவிட்டு ஆயுதங்களால் பரிசுத்திபெற்றுத் தேவலோகமடைந்தார்கள். அவர்களைக்குறித்து நீர் சோகப்படுவது நியாயமன்று. வேதவேதாங்கங்களில் கரைகண்டவர்களும் க்ஷத்திரியர்களுக்குரியதர்மத்தில் முயற்சியுள்ளவர்களுமான அந்தச்சூரர்கள் புண்ணியமான வீரர்களுக்குரியகதியை அடைந்தார்கள். மஹானுபாவர்களான அரசர்கள் இவ்விதம் இறந்துபோனதைக்கேட்டு நீர்சோகப்படுவது நியாயமன்று. இதுவிஷயத்தில் புத்திரசோகத்தால் கஷ்டப்படும் ஸ்ருஞ்சயனுக்கு நாரதர்சொன்னதான இப்பழைய இதிகாஸத்தைச் சொல்லுகிறார்கள்.

நாரதர், 'ஓ! ஸ்ருஞ்சய! நானும் நீயும் மற்றுமுள்ளபிராஜைக ளும் ஸுகதுக்கங்களிலிருந்து விடுபடாமலே மரிக்கப்போகிறோம். அதில் ஏன் அழவேண்டும். முன்னிருந்த அரசர்களின் மஹிமையை நான் சொல்லுகிறேன். சற்றுக் கவனத்துடன் கேள். அரசனே! இறந்துபோன மஹானுபாவர்களான அரசர்களைக் கேட்டமாத்திரத் தில் உனது துக்கம் விலகிவிடும். தாபத்தைப் பொறுத்துக்கொள். நான்சொல்லுகிறதை விஸ்தாரமாகக்கேள். முன்னோர்களான அரசர் களின்சரித்திரம் பெருமையுள்ளதும் மனத்தைக்கவரத்தக்கதும் கிர ஹங்களின்கொடுமையை அடக்கி ஆயுளைவளரச்செய்வதும் உத்தமமு மானது. ஸ்ருஞ்சய! அவிக்ஷித்தின்குமாரனை மருத்தனென்னும் அரசன் இறந்ததைக் கேள்விப்படுகிறோம். மஹாத்மாவான அவ னுடையயாகத்தில் இந்திரன் வருணன் பிருஹஸ்பதிமுதலிய தேவர்க ளும் ஸ்ருஷ்டிகர்த்தர்களும் பிரத்தியக்ஷமாக வந்தார்கள். அவன் தான்செய்த யாகங்களால் தேவராஜாவாகிய இந்திரனையும் அஸூ(யை)யைப்படும்படி செய்வித்தான். இந்திரனுடையபிரியத்திற்காக வித் வானன பிருஹஸ்பதியானவர் அவனிடஞ்சென்று (இனியாகஞ்செய் யாதிருக்கவேண்டுமெனத்) தடுத்தார். அப்படியிருந்தும் அவர்தம்பி யான ஸம்வர்த்தரென்னும்ரிஷி தேவகுருவின்இஷ்டம் நிறைவேறா வண்ணம் அவனுக்கு யாகஞ்செய்வித்தனர். ஓ! அரசச்ரேஷ்டனே! மருத்தன் அரசனுகிப் பூமியை ஆண்டுவருங்காலத்தில் பூமிஉழவுமுத லிய வேலையின்றியே பயிர்கள் வளர்ந்தோங்கிச் செழித்து விளங் கிற்று. மஹாத்துமாவான மருத்தன்செய்த ஸத்ரயாகத்தில் விசுவே தேவர்கள் ஸதஸ்யர்களாகவும் மருத்தென்னும் தேவர்கள் ஸோம பானஞ்செய்யும் ரித்விக்குகளாகவும் ஸாத்தியர்களும் மற்றத்தேவர் களும் பரிசாரகர்களாகவும் இருந்தார்கள். (அவன்கொடுத்த) தக்ஷி ணைகள் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் கந்தர்வர்களுக்கும் அதி கமாயிருந்தன. ஸ்ருஞ்சய! உன்னையும் உனதுபுத்ரனையும்விடத் தர் மம், ஞானம், ஐசுவரியம், வைராக்கியம் இந்நான்கிலும் மிகச்சிறந்த வனும் அதிகபுண்யவானுமான அந்தமருத்தனே இறந்துபோய்விட் டானுகில் உனதுபுத்திரன் போனதைப்பற்றி வருத்தப்படவேண்டாம். விதிதன்புத்திரனுகிய ஸுஹோத்திரனும் இறந்ததாகக் கேள்விப்படு கிறோம். அவன் அரசனுயிருக்குங்காலம் இந்திரன் அவனுடையபிரி யத்திற்காக ஒருவருஷம் பொன்மாரிபெய்வித்தான். பூமியானது அவன்காலத்தில் வஸுமதியென்னும் உண்மைப்பெயர் வாய்ந்ததா யிற்று. ஆறுகளில் பொன்னீரோடிற்று. உலகங்களில் பூஜிக்கப்பட்ட இந்திரன் ஆறுகளில் மீன், நண்டு, ஆமை, முதலை, திமிங்கிலம் இவை

களைப் பொன்னுருவமுள்ளனவாகப் படைத்தனன். அற்புதமான பொன்னுருவமுள்ள பல்லாயிரங்களான அவைகளைக்கண்டு விதிதபுத்ரன் வியப்படைந்தான். இவ்விதம் நிரம்பிய அளவில்லாத ஸ்வர்ணத்தையும் அவன் குருக்ஷேத்திரத்தில் தான்செய்த விஸ்தாரமான யாகத்தில் பிராம்மணர்களுக்கு அளித்துவிட்டான். ஸ்ருஞ்சய! உன்னையும் உனதுபுத்திரனையும்விடத் தர்மம்முதலிய நான்கிலும் மிகச்சிறந்தவனும் அதிகபுண்ணியவானுமான அந்த ஸுஹோத்திரனே மரணமடைந்தான். ச்வைதபுத்ர! யாதொருயாகமும் தக்ஷிணையுமில்லாத உனதுபுத்திரன் இறந்ததைக்குறித்து வருத்தப்படவேண்டாம். சோகம்வேண்டாம். பொறுத்துக்கொள். ஸ்ருஞ்சய! பிருஹத்ரதனென்னும் அங்கதேசத்தரசன் இறந்ததையும் கேள்விப்படுகிறோம். அவன் வெண்மைநிறமான பத்துலக்ஷம்குதிரைகளையும் ஸுவர்ணஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட பத்துலக்ஷம்கன்னிகைகளையும் தானஞ்செய்தான். விஸ்தாரமாகத் தான்செய்தயாகத்தில் பத்மமாலையணிந்த பத்துலக்ஷம்யானைகளையும் ஸுவர்ணாபரணமுள்ளனவும் ஆயிரம் பசுக்களைத் தொடர்ந்தனவுமான கோடிகாளைகளையும் அவன் தக்ஷிணையாகக்கொடுத்தான். விஷ்ணுபதமென்னும் மலையில் அவன் செய்தயாகத்தில் ஸோமபானஞ்செய்து இந்திரன் மதத்ததையடைந்தான். தக்ஷிணைகளால் பிராம்மணர்களும் களித்தார்கள். அவனுடைய நூற்றுக்கணக்கான யாகங்களில் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் கந்தர்வர்களுக்கும் தக்ஷிணைகள் மிகவும் அதிகப்பட்டன. ஸோமஸம்ஸ்தையென்னும் [1]ஏழுயாகங்களில் அந்தஅங்கராஜன்கொடுத்த தக்ஷிணைபோலத் தக்ஷிணைகொடுக்கும்மனிதன் சென்றகாலத்திலும்இல்லை; வருங்காலத்திலுமில்லை. தர்மமுதலிய நான்கிலும் உன்னையும் உனது புத்ரனையும்விட மிகச்சிறந்தவனும் அதிகபுண்ணியவானுமான அந்த அங்கராஜனே மரணமடைந்தான். உனதுபுத்ரன் போனதைக்குறித்து நீ வருத்தப்படவேண்டாம். ஸ்ருஞ்சய! உசீநரன்புத்ரனை சிபியென்னும்அரசன் இறந்ததைக் கேள்விப்படுகிறோம். அவன் ஒரு தோலைப்போல இப்பூமிமுழுமையும் சுருட்டினன்; கம்பீரமான தன்ரதத்தின்சப்தத்தால் பூமி சப்திக்கும்படிசெய்தான்; ஜயம்பெறக்கூடிய ஒருதேரின்மீதிருந்துகொண்டு பூமியைத் தன் ஒருகுடைக்குள்ளாக்கினன். உசீநரன்புத்ரனை அந்தச்சிபி காட்டிலிருக்கும் பசுக்களோடுகூடத் தனக்குள்ளபசுக்கள் குதிரை

[1] அக்நிஷ்டோமம், அத்யக்நிஷ்டோமம், உக்தியம், ஷோடசி, அதிராத்ரம், வாஜபேயம், அப்தோர்யாமம்என்னும் யாகங்கள்.

கள்யாவற்றையும் யாகத்தில் தானஞ்செய்தான். 'எல்லா அரசர்களுள்ளும் இந்திரனுடைய பராக்ரமம்போன்ற பராக்ரமமுள்ளவனும் உசீநரன்புத்ரனுமான சிபியென்னும்ராஜரிஷியைவிட இவனதுபாரத்தைவஹிக்க வேறு அரசன் உண்டானதுமில்லை; உண்டாகப்போவதுமில்லை' என்று பிரம்மதேவரும்நினைத்தார். உன்னையும் உனதுபுத்திரனையும்விடத் தர்மமுதலிய நான்கிலும் நிரம்பவும்சிறந்தவனும் அதிகபுண்ணியவானுமான அந்தச்சிபிராஜனே இறந்துவிட்டான். ஒருதக்ஷிணையும் ஒருயாகமுமில்லாத உனதுபுத்ரன் இறந்துபோனதைநினைத்து நீ சோகப்படவேண்டாம்; தபிக்கவேண்டாம். ஓ! ஸ்ருஞ்சய! துஷ்யந்தனுக்குச் சகுந்தலையிடம் உண்டானவனும் மஹாத்மாவும் திரவியக்குவியல்களை மிகுதியாகவுடையவனுமான பரதனும் காலஞ்சென்றானெனக் கேட்கிறோம். அதிகபராக்கிரமம் பெற்ற அந்தப்பரதன் முன்பு தேவர்களைக்குறித்து யமுனைக்கரையில் முந்நூறும், ஸரஸ்வதியின்கரையில் இருபதும், கங்கைக்கரையில் பதினான்கும் மற்றவிடங்களில்பலவும்ஆக ஆயிரம் அசுவமேதயாகங்களையும் நூறுராஜஸூயயாகங்களையும் செய்திருக்கிறான். மனிதர்கள் ஆகாயத்தைக் கைகளால் (கட்டிப்பிடிக்கமுடியாதது) போல ஸகலமான அரசர்களும் ஆச்சர்யமான பரதனுடையகார்யத்தைப் பின்தொடரச் சக்தர்களல்லர். அவன் [1]வேதிகளை விஸ்தாரமாகப்போட்டு ஆயிரத்துக்குஅதிகமான குதிரைகளைக் கட்டினான். அந்தயாகசாலையில் பரதன் கண்வரின்பொருட்டு ஆயிரம் [2]பத்மக்கணக்கான பசுக்களைக் கொடுத்தான். உன்னையும் உனதுபுத்ரனையும்விடத் தர்மமுதலிய நான்கிலும் எவ்வளவோ மேலானவனும் அதிகபுண்யவானுமான அந்தப் பரதனே இறந்துபோனான். உனதுபுத்ரன்இறந்ததில் தாபமடையவேண்டாம். ஸ்ருஞ்சய! தசரதகுமாரராகிய ராமரும் இறந்ததாகக் கேள்விப்படுகிறோம். அவர் எப்பொழுதும் பிராணிகளிடம் ஔரஸபுத்திரன்மீதுபோலப் பிரீதி பாராட்டிவந்தார். அவருடைய தேசத்தில் பொருளில்லாதமனிதனும் கஷ்டப்படும்மனிதனும் இல்லை. ராமர் எல்லோருக்கும் தகப்பனுக்குச்சமமாயிருந்துகொண்டு ராஜ்யத்தை ஆண்டுவந்தார். ராமர் அரசாளும்பொழுது காலத்தில் மழைபெய்து பயிர்கள்செழித்து எப்பொழுதும் ஸுபிக்ஷமாகவேயிருந்தது. ராமர் ராஜ்யபரிபாலனஞ்செய்யுங்காலத்தில் பிராணிகளுக்கு ஜலத்தில்மூழ்குவது, தீயால் கொளுத்தப்படுவது, துஷ்டமிருகங்களிடமிருந்து பயமடைவதுமுதலிய தீங்குகள் இல்லை. ஸ்திரீகளும் புருஷர்களும் யா

[1] யாகத்திற்குச்செய்துகொண்ட இடங்கள். [2] பத்மம்=நூறுகோடி.

தொருவியாதியுமின்றி வேண்டியஸித்திகள்பெற்று ஆயிரம்வருஷம் ஸுகித்திருந்தார்கள். ஒருவருக்கொருவர் விவாதமென்பது ஸ்திரீக ளிடத்திலுங்கிடையாது; புருஷர்களிடம் ஏது? பிரஜைகள் யாதொரு பயமுமின்றி இஷ்டப்படி ஸஞ்சரிப்பவர்களும் வேண்டியஸித்தி பெற்று ஸந்தோஷமடைந்தவர்களும் உண்மையான நியமத்துடன் எப்பொழுதும் தர்மஞ்செய்கிறவர்களுமாயிருந்தார்கள். அவருடைய ராஜ்யத்தில் மரங்கள் யாவும் இடையூறின்றி எக்காலத்திலும் பூவும் கனியும் நிரம்பிச்செழிக்க, பசுக்கள்யாவும் பதக்குப்பால் கறப்பவை களாயிருந்தன. பெரியதவமுள்ள அந்தராமர் பதினொன்குவருஷம் வனவாஸஞ்செய்து பிறகு யாதொருதடையுமின்றி யாவருங்கொண் டாடத்தக்க பத்துஅசுவமேதயாகங்களைச் செய்தார். அழகானமுக மும் சிவந்தகண்ணும் சிங்கம்போன்றமார்பும் முழங்காலளவுநீண்ட பருத்தகைகளும் யூதபதியான யானைபோலக்கறுத்தஉருவமும் யௌ வனப்பருவமுமுள்ள ராமர் பதினோராயிரம்வருஷம் அயோத்திக்கு அதிபதியாயிருந்து அரசாட்சிசெய்துவந்தார். உன்னையும் உனதுபுத் திரனையும்விடத் தர்மம்முதலியவைகளில் மிகவுஞ்சிறந்தவரும் புண் ணியவானுமான அந்தராமரே இறந்துவிட்டார். ஒருயாகமும் தக்ஷிணை யுமில்லாத உனதுபுத்திரன் இறந்ததில் தாபப்படவேண்டாம். ஸ்ருஞ் சய! பகீரதனென்னும்அரசனும் இறந்ததாகக் கேள்விப்படுகிறோம். அவனது விஸ்தாரமானயாகத்தில் தேவர்களுக்கு அரசனான இந்தி ரன் ஸோமரஸத்தைப் பானஞ்செய்து மதம்பெருகித் தன்கைவன் மையால் பல்லாயிரம்அஸுரர்களை ஜயித்தான். அந்தப் பகீரதன் ஸுவர்ணபரணம்பூண்ட பத்துலக்ஷம் கன்னிகைகளைத் தன்யாகத் தில் தக்ஷிணையாகக்கொடுத்தான். தானம்கொடுத்த ஒவ்வொருகன் னிகைக்கும் நான்குகுதிரைகள்கட்டிய ஒவ்வொருரதமும், ஒவ்வொரு ரதத்திற்கும் பின்தொடர்வனவும் ஸுவர்ணபரணம் பூண்டனவுமான நூறுயானைகளும், ஒவ்வொருயானைக்கும்பின் ஆயிரம்குதிரைகளும் ஒவ்வொருகுதிரைக்கும்பின் ஆயிரம்பசுக்களும் ஒவ்வொருபசுவுக்கும் பின் ஆயிரம்ஆடுகளும் தானஞ்செய்தான். அவனதுமடியில் முன்பு ரஹஸ்யத்தில்வஸிக்கும் பாகீரதியென்னும்கங்கை குழந்தைபோல உட்கார்ந்திருந்தாள். அவன்துடையின்மீது உட்கார்ந்த காரணத் தால் கங்கை ஊர்வசியென்னும் பெயருள்ளவளானாள். மூவுலகை யும் பரிசுத்தமாகச்செய்யும் கங்கையும் அதிகதக்ஷிணையுள்ள யாகங் களைச்செய்த பகீரதராஜாவுக்குப் பெண்ணானாள். ஸ்ருஞ்சய! உன் னையும் உனதுபுத்ரனையும்விடத் தர்மமுதலியநான்கிலும் மிகச்சிறந்த

வனும் அதிகபுண்ணியவானுமான அந்தப் பகீரதராஜாவும் மரண மடைந்தான். உனது புத்திரனைக் குறித்துப் பரிதாபப்படவேண்டாம். ஓ! ஸ்ருஞ்சய! மஹாத்மாவான திலீபனென்னும் அரசனும் இறந்ததாகக் கேள்விப்படுகிறோம். அவன்காரியங்களைப் பிராம்மணர்கள் பெரியவையாகச்சொல்லுகிறார்கள். அவன் தான்செய்த பெரியயாகத்தில் பொருள்கள்நிறைந்த இந்தப்பூமியைச் சந்தோஷத்துடன் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். அவன் செய்த ஒவ்வொருயாகத்திலும் உபாத்தியாயர் ஸுவர்ணத்தால்செய்த ஆயிரம்யானைகளைத் தக்ஷிணையாகப்பெற்றார். அவன்செய்தயாகத்திலிருந்த பெரியயூபமானது தங்கத்தால்செய்யப்பட்டதும் ஒளியுள்ளதுமாயிருந்தது. இந்திரன்முதலிய தேவர்கள் அவனுக்குவேண்டிய காரியத்தைச்செய்து கொண்டு அவனை ஆராதித்தார்கள். பொன்னாற்செய்த அந்த யூபத்தின்மேலிருக்கும் சஷாலமென்னும் தங்கஸ்தூபியில் ஆறாயிரந்தேவர்களும் கந்தர்வர்களும் நடனஞ்செய்தார்கள். அதன்நடுவில் விசுவாவஸுவென்னும் கந்தர்வன் தானே ஏழுஸ்வரங்களுடன் வீணாகானஞ்செய்தான். எல்லாப் பிராணிகளும் அவன்செய்யும் வீணாகானம், 'எனக்கு' என்றுநினைத்தன. திலீபமகாராஜன்செய்த இக்காரியத்தை நடத்தத்தக்க அரசர்கள் இருந்ததேயில்லை. தங்கக்கவசம்பூண்ட அவனுடையயானைகள் மதம்பிடித்து வழியில்படுத்திருந்தன. ஸத்தியவாதியும் பெரியவில்லாளியும் மஹாத்துமாவுமான திலீபமஹாராஜனைத் தரிசனஞ்செய்தமனிதர்களும் ஸுவர்க்கலோகத்தைஜயித்தார்கள். திலீபனுடைய அரண்மனையில் வேதசப்தமும் வில்லின்சப்தமும் கொடுவென்றசப்தமும் குறைந்தகாலமில்லை. ஸ்ருஞ்சய! உன்னையும் உனதுபுத்திரனையும்விடத் தர்மமுதலியநான்கிலும்மிகச்சிறந்தவனும் அதிகபுண்யவானுமான அந்தத்திலீபனே மரணமடைந்தான். உனதுபுத்திரனை நினைத்துத்தாபப்படவேண்டாம். ஸ்ருஞ்சய! யுவனாசுவன்புத்திரனான மாந்தாதாவும் மரணமடைந்ததாகக் கேள்விப்படுகிறோம். அவன், மஹாத்மாவான யுவனாசுவன் வயிற்றில் பிருஷதாஜ்யத்திலிருந்து உதித்து விருத்தியடைந்தவனும் காந்தியுள்ளவனும் மூன்றுஉலகங்களையும் ஜயிக்கத்தக்கவனுமான அரசன். கர்ப்பரூபமாயிருந்த அவனை மருத்தென்னுந்தேவர்கள் தந்தையின் பார்சுவத்திலிருந்து வெளிப்படுத்தினார்கள். தேவவடிவமான அந்தக்குழந்தை தந்தையான யுவனாச்வன்மடியில் படுத்திருப்பதைக் கண்டு இக்குழந்தை யாரிடம் பால்குடிக்குமென்று தேவர்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, இந்திரன், 'என்

னிடம்குடிக்கும்' என்ற பொருளடங்கிய 'மாம்தாதா' என்னும் வார்த்தையைச் சொல்லிக்கொண்டு வந்தான். அந்தக்காரணத்தால் அந்தக்குழந்தைக்கு மாந்தாதாவென்று பெயருண்டாயிற்று. பிறகு மஹாத்மாவான அந்தக்குழந்தையை ரக்ஷிக்கவேண்டி இந்திரன் குழந்தையின்வாயில் தன்கையைவைத்துப் பால்பெருகச்செய்தான். இந்திரனுடையகையைப் பானஞ்செய்த அந்தமாந்தாதாவின் சரீரம் நாளொன்றுக்கு நூறுபலம்வீதம்வளர்ந்து பன்னிரண்டுநாளில் பன்னிரண்டுபிராயமுள்ள அழகிய அரசவடிவமாயிற்று. மஹாத்மாவும் யுத்தத்தில் இந்திரனுக்கொப்பான சௌரியமுள்ளவனும் தர்மபுத்தியுள்ளவனுமான அந்தமாந்தாதா இந்தப்பூமிமுழுமையும் ஒரேநாளில் கைப்பற்றிக்கொண்டான். அவன் யுத்தத்தில் அங்காரன், மருத்தன், அஸிதன், கயன், அங்கன், பிருஹத்ரதனென்னும்அரசர்களை ஜயித்தான். மாந்தாதா அங்காரனென்னும்அரசனை எதிர்த்து யுத்தஞ்செய்யுங்காலம் அவன் வில்லின்தொனியால் தேவர்கள் தேவலோகமிடிந்து போயிற்றென நினைத்தார்கள். ஸூர்யனுடைய உதயாஸ்தமயங்களுக்குட்பட்ட பூமியாவும் மந்தாதாவின்நிலமென்று சொல்லப்படுகிறது. ஓ! அரசனே! மாந்தாதா நூற்றுக்கணக்கான அசுவமேதங்களையும் ராஜஸூயங்களையுஞ்செய்து அவைகளில் பிராம்மணர்களுக்கு ஒருயோஜனை பருமனும் பத்துயோஜனை நீளமுமுள்ள பொன்னாற் செய்த மத்ஸ்யங்களைத் தானஞ்செய்தான். அந்தயாகத்தில் அதிகமாயிருந்தபொருள்களை மற்றஜனங்கள் தாங்கள் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தார்கள். ஸ்ருஞ்சய! உன்னையும் உனதுபுத்ரனையும்விடத் தர்மமுதலிய நான்கிலும் மிகச்சிறந்தவனும் அதிகபுண்யவானுமான அந்தமாந்தாதாவே மரணமடைந்தான். உனதுபுத்திரனைக்குறித்துத் தாபப்படவேண்டாம். ஸ்ருஞ்சய! நகுஷன்புத்ரனான யயாதி இறந்ததாகக் கேள்விப்படுகிறோம். அவன் ஸமுத்திரங்களோடுகூட இந்தப் பூமிமுழுமையும் ஜயித்து, [1]சம்யைபோகுந்தூரமுள்ள பூமியை ஒவ்வொரு வேதியாகச்செய்து அவ்வேதிகளால் பூமியை அலங்கரித்து உயர்ந்த பல யாகங்களைச்செய்து இப்பூமிமுழுமையும் யாகசாலையாகச் செய்தான். நூறுவாஜபேயயாகங்களையும் வேறு ஆயிரம்யாகங்களையுஞ்செய்து யயாதி மூன்றுதங்கமலைகளைத் தானஞ்செய்து பிராம்ம

1 'அடிபெருத்து நுனிசிறுத்ததடி 'சம்யை' என்று சொல்லப்படும்' என்பது பழையஉரை: நுகத்தடியின் நுனியில்போடும் மூளை சம்யையென்று சொல்லப்படும். அதைப் பலமுள்ளஒருமனிதன் எறிந்தால் எவ்வளவுதூரம் போடுமோ அவ்வளவுதூரம் என்பது மூலத்தின்கருத்து.

ணச்ரேஷ்டர்களைச் சந்தோஷப்படுத்தினன் நகுஷனின் புத்ரனான யயாதி பூமியிலுள்ள அஸுரராக்ஷஸர்களை யுத்தத்தில் அடித்துவிட்டு இந்தப்பூமியை முழுவதுங்கைப்பற்றி த்ருஹ்யுமுதலிய புத்திரர்களுக்குப் பங்கிட்டுக்கொடுத்து அவர்களை 'ராஜ்யத்தின்கோடியிலிருக்கும்படிசெய்து பூருவென்னும் புத்திரனுக்கு ராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ்செய்துவிட்டு மனைவியுடன் முதுமைப்பருவத்தில் காடுசென்றான். ஸ்ருஞ்சய! உன்னையும் உனதுபுத்ரனையும்விடத் தர்மம்முதலிய நான்கிலும் மிகவும் மேலானவனும் அதிகபுண்யவானுமான அந்தயயாதியே காலஞ்சென்றான். உனதுபுத்திரனைக் குறித்துத் தாபப்படவேண்டாம். ஸ்ருஞ்சய! நாபாகனுடையபுத்ரனான அம்பரீஷனும் இறந்ததாகக் கேள்விப்படுகிறோம். ஜனங்கள் புண்ணியாத்மாவும் ராஜச்ரேஷ்டனுமான அவனை ரக்ஷகனாகவரித்தார்கள். அவன் தான்செய்த பெரியயாகத்தில் யாகஞ்செய்விக்கும்பிராம்மணர்களுக்கு யாகஞ்செய்தவர்களான பத்துலக்ஷம் அரசர்களைப்பணிவிடைசெய்யக் கட்டளையிட்டான். 'இங்ஙனம்செய்தவர்கள் முன்னுமில்லை; பின்னுமில்லை' என்று அறிஞர்கள் நாபாகபுத்ரனான அம்பரீஷனை மிகக்கொண்டாடினார்கள். அவனுடையயாகத்தில் (பிராம்மணர்களுக்கு ஊழியஞ்செய்த) அரசர்கள்யாவரும் அசுவமேதயாகஞ் செய்தவர்கள் போல உத்தராயணமென்னும் தேவயானமார்க்கஞ்சென்று பிரம்மலோகமடைந்தார்கள். ஸ்ருஞ்சய! உன்னையும்உனதுபுத்ரனையும்விடத் தர்மமுதலியநான்கிலும் மிகமேலானவனும் அதிகபுண்யவானுமான அந்தஅம்பரீஷனும் இறந்துவிட்டான். உனதுபுத்திரனைக்குறித்துச் சோகப்படவேண்டாம். ஸ்ருஞ்சய! சித்ரரதன்புத்திரனான சசபிந்துவென்னும்அரசனும் இறந்ததாகக் கேள்விபபடுகிறோம். மஹாத்மாவானஅவனுக்கு லக்ஷம்பாரியைகளிருந்தார்கள். அந்தப்பாரியைகளிடம் அவனுக்குப் பத்துலக்ஷம்புத்திரர்கள் உண்டானார்கள். அந்தப்புத்திரர்கள் யாவரும் தங்கக்கவசம்பூண்ட பெரியவில்லாளிகளாயிருந்தார்கள். தனித்தனியே ஒவ்வொருபுத்திரனுக்கும் நூறுநூறு கன்னிகைகளும் ஒவ்வொருகன்னிகைக்கும் நூறுநூறு யானைகளும் ஒவ்வொருயானைக்கும் நூறுநூறுதேர்களும் ஒவ்வொருதேருக்கும் ஸுவர்ணாபரணமணிந்த உயர்ந்த நூறுநூறுகுதிரைகளும் ஒவ்வொரு குதிரைக்கும் நூறுநூறுபசுக்களும் ஒவ்வொருபசுவுக்கும் நூறுநூறு வெள்ளாடுகளும் ஒவ்வோர் ஆட்டுக்கும் நூறுநூறுசெம்மறியாடுகளும் அடங்கிய அளவில்லாத இப்பெரியபொருளை அசுவமேதயாகத்தில் சசபிந்துமஹாராஜன் பிராம்மணர்களுக்கு அளித்தனன். ஸ்ருஞ்

சய! உன்னையும் உனதுபுத்ரனையும்விடத் தர்மமுதலிய நான்கிலும் மிகச்சிறந்தவனும் அதிக புண்யசாலியுமான அந்தச்சசபிந்துவே இறந்துவிட்டான். உனது புத்ரனைக்குறித்துத் தாபப்படவேண்டாம். ஸ்ருஞ்சய! அதூர்த்தரஜஸினுடையபுத்திரனான கயனும் மரணமடைந்ததாகக் கேள்விப்படுகிறோம். அந்தஅரசன் ஹோமஞ்செய்த மிச்சத்தை நூறுவருஷம் புசித்துக்கொண்டிருந்தான். அக்னிபகவான் (தானகவே) அவனுக்கு வரங்கொடுக்கவேண்டி வந்தான். 'நான் எவ்வளவுதானஞ்செய்தாலும் எனதுபொருள் அழிவற்றதாயிருக்கவேண்டும். எனக்குத் தர்மத்தில் சிரத்தை விருத்தியடையவேண்டும். ஓ! அக்கினிபகவானே! உனது அனுக்கிரகத்தால் என் மனம் ஸந்தோஷமாய் ஸத்தியத்திலேயே செல்லவேண்டும்' என இவ்வரங்களைக் கேட்டுக்கொண்டான். அக்னிபகவானும் அவனிஷ்டப்படியே அவ்வரங்களையெல்லாம் கொடுத்தானென்று எங்களுக்குக் கேள்வியுண்டு. அவன் தர்சம், பூர்ணமாஸம், சாதுர்மாஸ்யம், அசுவமேதமென்ற யாகங்களைப் பலஆயிரம்வருஷங்கள் செய்துகொண்டிருந்தான். நூறுயிரம்பசுக்களையும் பதினுயிரம்குதிரைகளையும் ஆயிரம் வருஷம்வரையில் திரும்பவும்திரும்பவும் கொடுத்துக்கொண்டிருந்தான். புருஷச்ரேஷ்ட! அவன் ஸோமயாகத்தால் தேவர்களையும், தனங்களால் பிராம்மணர்களையும், சிராத்தங்களால் பிதிருக்களையும், காமங்களால் தன்மனைவிகளையும் திருப்திசெய்வித்தான். அசுவமேதமென்னும் பெரியயாகத்தில் ஐம்பதுமுழஅகலமும் நூறுமுழநீளமுமுள்ளதான பொற்பூமியையுண்டுபண்ணித் தக்ஷிணையாகஅளித்தான். கயன் கங்கைக்கரையிலிருக்கும் மணல்களுக்குச்சரியான எண்ணுள்ள பசுக்களைத் தானஞ்செய்தான். ஸ்ருஞ்சய! உன்னையும்உனதுபுத்திரனையும்விடத் தர்மமுதலியநான்கிலும் மிகச்சிறந்த அந்தக்கயனும் மரணமடைந்தான். உனதுபுத்திரனைக்குறித்துத் தாபப்படவேண்டாம். ஸ்ருஞ்சய! ஸங்கிருதியின்புத்திரனான ரந்திதேவனும் இறந்ததாகக் கேள்விப்படுகிறோம். அவன் பெரியதவஞ்செய்து இந்திரனை ஆராதித்து அவனிடமிருந்து, 'எங்களுக்கு மிகவும் அன்னமிருக்கவேண்டும். நாங்கள் அதிதிகளையும் அடையவேண்டும். எங்களுக்கு ச்ரத்தை விலகாமலிருக்கவேண்டும். நாங்கள் ஒருவரையும் யாசியாமலிருக்கவேண்டும்' என்னும் வரங்களைப்பெற்றான். கடுமையான நியமமுள்ள மஹாத்துமாவும் கீர்த்தியுள்ளவனுமான ரந்திதேவனிடம் தங்களை நல்லகாரியத்தில் உபயோகிக்கவேண்டுமென்று வனத்திலும் கிராமத்திலுமிருக்கும் பசுக்கள் தாமாகவேவந்தன. அவனால்

யாகத்தில் உபயோகிக்கப்பட்ட பசுக்களின் தோற்சுமையிலிருந்து கசியும்ஜலம் சர்மண்வதியென்னும்பெயர்கொண்ட பெரியநதியாகிப் பிரஸித்திபெற்றிருக்கிறது. அந்தஅரசன் பெரியஸபையில் பிராம்மணர்களுக்கு அதிகமானஸுவர்ணங்களைத் தானஞ்செய்தான். அந்தக்காலத்தில் பிராம்மணர்கள், [1]"உமக்கு நூறுஸுவர்ணங் கொடுக்கப்போகிறார். உமக்கு நூறுகொடுக்கப்போகிறார்' என்று சொல்லும் பொழுதே, 'உமக்கு ஆயிரம்ஸுவர்ணம்' என்றுசொல்லிக் கொடுத்துப் பிராம்மணர்களை அவன் சந்தோஷமாய்அடைந்தான். புத்திமானை ரந்திதேவன்வீட்டில் பாகத்திற்குள்ள பாத்திரங்கள்,மற்றப்பண்டங்களுக்குள்ள பாத்திரங்கள், குடங்கள், தோண்டிகள், ஸ்தாலிகள், அண்டாக்கள், தாளக்கூடைகள் இவைகளில் தங்கமல்லாதது ஒன்றுமில்லை. ஸங்க்ருதியின்புத்திரனை ரந்திதேவன்வீட்டில் ஓர்இராத்திரிக்கு ஆயிரத்துநூற்றிருபதுபசுக்கள் உபயோகிக்கப்பட்டன. அங்கு மெருகிட்ட ரத்தினகுண்டலம்பூண்ட பரிசாரகர்கள் போஜனஞ்செய்பவர்களை, 'இப்பொழுது முன்போலமாம்ஸமில்லை. வேண்டியபடி பருப்புமுதலியவைகளைச் சாப்பிடுங்கள்' என்று கூவினார்கள். ஸ்ருஞ்சய! உன்னையும் உனதுபுத்திரனையும்விடத்தர்மமுதலியநான்கிலும் மிகச்சிறந்த அந்தரந்திதேவனும் மரித்துவிட்டான். உனதுபுத்திரனைக்குறித்துப் பரிதபிக்கவேண்டாம். ஸ்ருஞ்சய! மஹாத்துமாவான ஸகரனும் இறந்ததாகக் கேள்விப்படுகிறோம். இக்ஷ்வாகு குலத்திற்பிறந்து மனிதர்களுக்கில்லாத பராக்ரமம்பெற்றுப் புருஷர்களில் புலிபோலவிளங்கும் அந்தச்சகரன் புறப்படும்பொழுது அவனுடைய அறுபதினாயிரம்புத்திரர்களும், சரத்காலத்தில் மேகமில்லாதஆகாயத்தில் சந்திரனை நக்ஷத்திரக்கூட்டங்கள் பின்தொடருவதுபோலப் பின்தொடர்ந்தார்கள். முற்காலத்தில் அவனதுபராக்ரமத்தால் பூமி ஒரேகுடையின்கீழிருந்தது. ஆயிரம்அச்வமேதயாகங்களால் அவன் தேவர்களுக்குத் திருப்திசெய்வித்தான். தாமரையிதழ் போன்ற கண்களையுடையஸ்திரீகளாலும் படுக்கைகளாலும் நிறைந்தனவும் பொன்மயமான தூண்களுள்ளனவும் பொன்மயமுமான உப்பரிகைகளையும், மற்றும் பலபோக்கியவஸ்துக்களையும் தக்கபிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். அவன்கட்டளையின்படி பிராம்ம

---

[1] 'அவன் ஸதஸில் நூறுஸுவர்ணம் கொடுக்கத் தொடங்கும்பொழுது பிராம்மணர்கள் அதைப்பெற்றுக்கொள்ளாமல் நாங்கள் உமக்கு நூறுஸுவர்ணங் கொடுக்கிறோமென்று சொல்லவும் பிறகு ஆயிரக்கணக்கான ஸுவர்ணத்தைக் கொடுத்து அவன் பிராம்மணர்களை அடைந்தான்' என்பது பழைய உரை.

ணர்கள் அப்பொருளைப் பிரித்தெடுத்துக்கொண்டார்கள். ஸமுத்திரத்தால் அடையாளம்பண்ணப்பட்ட பூமியைக் கோபத்தால் அவன்தோண்டும்படிசெய்தகாரணத்தால் அவன்பெயர் ஸம்பந்தமாக ஸாகரமென்னும்பெயரை ஸமுத்திரம்அடைந்தது. ஸ்ருஞ்சய! உன்னையும் உனது புத்திரனையும்விடத் தர்மமுதலிய நான்கிலும் மிகவும் மேலான அந்தச்சகரனே மரணமடைந்தான். உனதுபுத்திரனுக்காகத் தாபப்படவேண்டாம். ஸ்ருஞ்சய! வேனபுத்திரனுன பிருதுவென்னும் அரசனும் மரித்தானென்று கேள்விப்படுகிறோம். பெரியகாட்டில் மஹரிஷிகள் ஒன்றுசேர்ந்து, உலகங்களை இவன்பெருகச்செய்வானென்று எண்ணி, பிருதுவென்று பெயரிட்டு, அவனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்தார்கள். அவன் உலகத்தை [1]க்ஷதத்திலிருந்து காப்பதால் க்ஷத்திரியனென்றும், அவனைக்கண்ட பிராணிகள்யாவும் அவனிடம் [2]ராகம்கொண்ட காரணத்தால் ராஜாவென்றும் பெயருள்ளவனுனன். அவன் உலகத்தை ஆளுங்காலத்தில் பூமி உழவின்றிப் பயிர்செழித்தது. மரங்களில் ஒவ்வோர்இலையிலும் தேனொழுகிற்று. பசுக்கள் யாவும் பதக்குப்பால் கறந்தன. மனிதர்கள் நோயில்லாமலும் ஒருவிதப் பயமுமில்லாமலும் வேண்டியஸித்திபெற்று வீட்டிலும் வெளிகளிலும் இஷ்டம்போல வஸித்துக்கொண்டிருந்தார்கள். அவன் ஸமுத்திரத்தில் செல்லுங்காலத்தில், ஜலமும் கல்லுப்போல நிலைத்திருந்தது. அவன்வில்லால் மலைகளும் பிளக்கப்பட்டன. அவனது கொடிக்குப் பங்கமுண்டாகவில்லை. அவன் தான்செய்த அசுவமேதமென்னும் பெரியயாகத்தில் மூன்றுஆள் உயரமுள்ள இருபத்தொரு தங்கமலைகளைப் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். ஸ்ருஞ்சய! உன்னையும் உனதுபுத்திரனையும்விடத் தர்மம் ஞானம் வைராக்கியம் ஐசுவரியம் இந்நான்கிலும் எவ்வளவோமேலான அந்தப்பிருதுவும் மரணமடைந்தான். உனது புத்திரனைக்குறித்துத் தாபப்படவேண்டாம். ஓ! ஸ்ருஞ்சய! என்ன நீ பேசாமல் தியானஞ்செய்கிறாய்? என்னுடைய இந்தவார்த்தையைக் கேட்கவில்லையா? என்னுடைய இந்த வார்த்தையானது மரணமடைபவனுக்கு முயற்சியாற் செய்யப்படும் பத்தியம்போலப் பயனற்றதாகாததாயிருக்குமா?" என்றுசொன்னார்.

ஸ்ருஞ்சயன், "ஓ! நாரதரே! ஆச்சர்யமான அர்த்தமுள்ளதும் நல்லவாஸனையுள்ள மாலைபோன்றதும், மஹாத்துமாக்களும் கீர்த்தியுள்ளவர்களும் புண்ணியஞ்செய்தவர்களுமான அரசச்ரேஷ்டர்களைப் பற்றியதும், சோகங்களை விலக்குவதுமான அந்த உமதுவார்த்தை

[1] ஆபத்து. [2] விருப்பம்.

யைக் கேட்கிறேன். ஓ! மஹரிஷியே! உமதுவார்த்தையானது பய னற்றதன்று. வேதத்தை உபதேசிக்கும் மஹரிஷியே! நாரதரே! உம்மைக் கண்டவுடன் நான் சோகமற்றவனானேன். அமிருதபானத் தில் போதுமென்னும் திருப்தியுண்டாகாததுபோல உமதுவசனத் தைக் கேட்பதில் நான் திருப்தியடையவில்லை. திரும்பவும் கேட்க விரும்புகிறேன். குற்றமற்றஞானமுள்ள பிரபுவே! தாபத்தால்கொளு த்தப்பட்ட என்மீது உங்களுக்கு அனுக்ரஹமிருக்குமானால் இப் பொழுது எனதுபுத்திரன் ஜீவிக்கவேண்டும். உங்களுடைய அனுக் ரஹத்தால் நான் புத்திரனுடன் சேரவேண்டும்" என்று கேட்டான். நாரதர், "பர்வதரென்னும்ரிஷியால் உனக்குக்கொடுக்கப்பட்டவனும் இவ்விதம் படுத்திருப்பவனும் ஸுவர்ணஷ்டீவியென்று சொல்லப் பட்டவனும் உனதுபுத்திரனுமான ஹிரண்யநாபனென்பவனை ஆயிரம் பிராயமுள்ளவனாகத் திரும்பவும் நான் உனக்குக் கொடுக்கிறேன்" என்று சொன்னார்.

---

## இருபத்தோன்பதிரவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



**(கிருஷ்ணன், நாரதருக்தும் பர்வதருக்தும் சாபநேர்ந்ததையும் அதன் நிவிருத்தியையும் தர்மபுத்திரருக்குச் சொல்லியது.)**

யுதிஷ்டிரர், "அந்த ஸ்ருஞ்சயபுத்திரன் எங்ஙனம் ஸுவர்ண ஷ்டீவியென்று சொல்லப்பட்டான்? அவன் பருவதரென்னும் ரிஷி யால் கொடுக்கப்படவும் மரிக்கவும் காரணமென்ன? மனிதன் ஆயி ரம்வருஷம் ஆயுள்பெற்றிருக்கும் அக்காலத்தில் இளமைப்பருவமும் நிரம்பாத ஸ்ருஞ்சயபுத்திரன் மரித்ததெப்படி? அவனுக்கு ஸுவர் ணஷ்டீவியென்பது வெறும்பெயரா? அல்லது காரணமுள்ளதா? இதனை அறியவிரும்புகிறேன்" என்று சொன்னார்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லத்தொடங்கினார். "ஓ! அரசரே! இதுவிஷயத்தில் நடந்தபடி உமக்குச் சொல்லுகிறேன். பிரபுவே! உலகத்திற்சிறந்த நாரதர் பர்வதரென மாமனும் மருகருமான இர ண்டுரிஷிகள் முன்ஒருகால் மானிடதேசங்களில் விளையாடவிரும்பித் தேவலோகமிருந்து இவ்வுலகம் ப்ரீதியோடுவந்தார்கள். தவத்தை யுடையவர்களும் அம்மானும்மருமானுமான அவ்விரண்டு ரிஷிகளும் பூதலத்தில் சஞ்சரித்து, தேவர்களுண்ணத்தக்க நெய்யையும் ஹவிஸ் முதலிய பரிசுத்தமான அன்னங்களையும் புசித்து, இஷ்டப்படி இம்

மானிடபோகங்களையடைந்து, பலவிடங்களிலும் சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள். உலகத்தால்பூஜிக்கப்படும் அவ்விரண்டுமுனிவர்களும், 'நம்மில் நல்லதோகெட்டதோ மனத்திலுதிக்கும்எண்ணம் யாவற்றையும் ஒருவருக்கொருவர் தெரிவித்துக்கொள்ளவேண்டும். இம்முறை தவறியவர் சாபத்திற்குள்ளாவோம்' என்று சந்தோஷமாகவே பிரதிஜ்ஞை செய்துகொண்டார்கள். இங்ஙனம் சபதம் செய்துகொண்ட அவ்விருவர்களும் ஸ்ருஞ்சயனென்னுமரசனிடம்சென்று, "ஓ! அரசனே! நாங்களிருவரும் உனதுநன்மைக்காக உன்னிடம் சிலகாலம் வஸிக்கவிரும்புகிறோம். உள்ளபடி எங்களுக்கு நீ அநுகூலமாயிருக்கவேண்டும்" என்று சொன்னார்கள். அரசனும் அங்ஙனமே யங்கீகரித்து அம்முனிவர்களை மரியாதைசெய்து உபசரித்துவந்தான். பின்னொருகாலத்தில் தவத்தையே பொருளாகக்கொண்ட மஹாத்மாக்களான அந்தமுனிவர்களைநோக்கி, விசேஷப்பிரீதியுடன் அவ்வரசன், "தேவவடிவமுள்ள ஸுகுமாரி என்னும் இவ்வொருபெண்தான் எனதுகன்னிகை. இவள் குற்றமற்ற அங்கங்களுள்ளவளும் நன்னடக்கையும் நல்லசீலமுமுள்ளவளும் தாமரைமலரின் உள்ளிதழுக்கொப்பான நல்லகாந்தியுள்ளவளும் பார்க்கத்தக்கவளும் இளமைப்பருவமுள்ளவளும் மேனியுள்ளவளுமான கன்னிகையாயிருக்கிறாள். இவள் உங்களிருவரையும் உபசரித்துக்கொண்டிருக்க விரும்புகிறேன்" என்று தெரிவித்தான். உடனே மிகவும் உத்தமமென்று அம்முனிவர்களால்சொல்லப்பட்ட அரசன் அந்தக் கன்னிகையையழைத்து, "பெண்ணே! இந்தப்பிராம்மணர்களைத் தேவர்களைப்போலவும் பிதிர்க்களைப்போலவும் உபசரித்துக்கொண்டிருக்கவேண்டும்" எனக் கட்டளையிட்டான். தர்மத்தைச்செய்யும் தன்மையுள்ள அந்தக்கன்னிகையும் பிதாவினிடம், 'அப்படியே செய்கிறேன்' என்று சொல்லி அவன்கட்டளைப்படி அம்முனிவர்களை மரியாதையுடன் உபசரித்துவந்தாள். அவ்வுபசாரத்தாலும் ஒப்பற்ற அவளது லாவண்யத்தாலும் காமன் பலாத்காரமாக நாரதரை விரைவில் அடைந்தான். பிறகு அந்தமஹாத்மாவின் மனத்திலுள்ளகாமம் சுக்லபக்ஷத்தின் தொடக்கத்திலிருக்கும் சந்திரனைப்போலக் கிரமமாக ஓங்கிவளர்ந்தது. தர்மம்தெரிந்த அந்தநாரதர் கொடுமையான காமத்தை வெட்கத்தால் மஹாத்மாவும் மருகருமான பர்வதரிடம் தெரிவிக்கவில்லை. பிறகு பர்வதரோ இங்கிதங்களாலும் தமது தவவலிமையாலும் அந்தநாரதரைக் காமவிடாயுள்ளவராயறிந்துகொண்டார். உடனே மிகக்கோபங்கொண்டு இந்தநாரதரைச் சபிக்கத்தொடங்கினார். "ஓ! பிராம்

மணே! 'நல்லதோ கெட்டதோ மனத்திலுதித்த எண்ணம்யாவற்றை யும் நாம் ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளவேண்டும்' என்று என்னுடன் மனப்பூர்வமாக நீர் பிரதிஜ்ஞைசெய்துவிட்டு இப்பொழுது நீரே அதை மாற்றிவிட்டீர். ஸுகுமாரியென்னும் பெண்ணிடம் உமக்குண்டானகாமத்தை நீர் எனக்குச் சொல்லவில்லை. பெரியவரும் பிரம்மசாரியும் தவமுள்ளவரும் பிராம்மணருமாயிருந்தும் நாம் ஒருவருக்கொருவர் செய்துகொண்ட சபதத்திலிருந்து நீர் நழுவினது எனக்குப் பொறுக்கவில்லை. அந்தக்காரணத்தால் கோபங்கொண்டு நான் உம்மைச்சபிக்கிறேன். ஸுகுமாரி உமக்குப் பாரியையாவாளென்பதில் சந்தேகமில்லை. பிரபுவே! அப்பெண்ணை மணம்புரிந்தக்ஷணமுதல் உமதுசொந்தஉருவம்நீங்கிக் குரங்குஉருவமாக உம்மை மற்றமனிதர்கள் பார்ப்பார்கள்" என்று சபித்தார். அம்மானை அந்தநாரதர் மருகரான பர்வதரின்சாபவாக்கியத்தைக்கேட்டு, "அடா! தவம், பிரம்மசரியம், ஸத்தியம், தமம் இவைகளிருந்தும் நிலைத்த தருமமிருந்தும் உனக்கு, ஸ்வர்க்கமில்லாமல் போகட்டும்" என்று பிரதி சாபங்கொடுத்தார். பொறாமையால் மிகக் கோபங்கொண்டு அந்தமுனிவர்கள் ஒருவருக்கொருவர் சாபமிட்டது இரண்டு சிறந்தயானைகள் கோபத்துடன் ஒன்றுக்கொன்று எதிர்த்ததுபோலிருந்தது. ஓ! பாரதரே! பேரறிவுள்ள பர்வதர் தமக்குத் தேஜஸுள்ளகாரணத்தால் நியாயப்படி பூஜிக்கப்பட்டவராய் இந்தப்பூமியெங்கும் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தார். பிறகு, பிராம்மணசிரேஷ்டரான நாரதர் குற்றமில்லாத ஸ்ருஞ்சயனுடையபுத்திரியான ஸுகுமாரியென்னும் அக்கன்னிகையைத் தர்மப்படிமணம்புரிந்துகொண்டார். அக்கன்னிகையோ பர்வதாநுசாபத்திற்கேற்றபடி உடனே அந்தநாரதர் வானரஉருவமாயிருப்பதைக் கண்டாள். ஆகிலும் அன்புள்ள ஸுகுமாரி குரங்குபோன்ற முகமுள்ள அந்தநாரதரிஷியைச் சற்றும் அவமதியாமல் விவாகத்திற்குரிய மந்திரங்களின் விதிப்படியே விசேஷப் பிரீதியுடன் பர்த்தாவாக உபசரித்துவந்தாளேதவிர வேறு தேவனையும் ரிஷியையும் யக்ஷனையும் மனத்திலும் பதியாக நினைத்தாளில்லை. பின்னொருகாலத்தில் பூஜ்யரானபர்வதர் ஒருவருமில்லாத ஓர் அரண்யம் செல்லும்பொழுது அங்கு நாரதரைக்கண்டார். உடனே பர்வதர் நாரதரிடம் சென்று நமஸ்கரித்து, "பிரபுவே! நான் ஸ்வர்க்கலோகஞ்செல்லும்படி எனக்கு நீங்கள் அநுக்ரஹஞ்செய்யவேண்டும்" என்று வேண்டினர். உடனே, பயந்து வருத்தத்துடன் கைகட்டி வணக்கமாகநிற்கும் பர்வதரைக்கண்டு நாரதர் தாமும் மிகவருத்த

முற்று, "அப்பா! குரங்குஉருவமாக என்னை நீமுதலில் சபித்தகார ணத்தால் நானும் கோபத்தால், 'இதுமுதல் உனக்கு ஸ்வர்க்கத்தில் வாஸமில்லாமற்போகட்டும்.' என்று உன்னைச்சபித்தேன். எனக்குப் புத்திரனென்றுசொல்லத்தக்க உனக்கு இந்தக்காரியம் அழகோ?" என்றுசொன்னார். உடனே அவ்விரண்டு முனிவர்களும் ஒருவருக் கொருவர் சாபங்களைவிலக்கிக்கொண்டார்கள். உடனே தம்உருவம் வந்து தேவவடிவத்தால்ஜ்வலிக்கும் அந்தநாரதரைக்கண்டு பரபுருஷ ரென்றுசங்கைகொண்டு ஸுகுமாரி விலகத்தொடங்கினாள். குற்ற மில்லாத ஸுகுமாரி அவ்விதம்விலகுவதைக்கண்ட பர்வதர், "இவர் உன்பர்த்தாவென்பதில் ஸந்தேகம்வேண்டாம். தர்மத்தில் உத்தம மான்புத்தியுள்ளவரும் உலகெல்லாம்பூஜிக்கப்படுபவருமான நாரத ரிஷியென்னும் இந்தப்பிரபு உன்னிடத்திலேயே உறுதியானமன முடையவர். இதில் உனக்குச் சந்தேகம்வேண்டாம்" என்று பலவித மாகத் தேர்ச்சியடையும்படிசெய்தார். மஹாத்மாவானபர்வதர்சொன் னதைக்கேட்டுத் தன்பர்த்தாவுக்கு நடுவில்தோன்றியஉருவம் சாப தோஷத்தால்வந்ததென்று தெரிந்துகொண்டு ஸுகுமாரியும் முன் போல ஸ்வபாவமாயிருந்தாள். உடனே பர்வதர் ஸ்வர்க்கஞ்சென்றார். நாரதரும் வீடுசென்றார். ஓ! அரசரே! எல்லாவற்றையும் நேரில் கண்ட பூஜ்யரான அந்தநாரதரிஷி இதோஇருக்கிறார். கேட்டால் நடந்தபடி உமக்குச்சொல்வார்" என்றுசொன்னார்.

## முப்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(நாரதர், தர்மபுத்திரருக்கு ஸ்வர்ணஷ்டீவியின்சரித்திரத்தைக்கூறியது.)

பிறகு, பாண்டுபுத்திரரான தர்மபுத்திரர் நாரதரைப்பார்த்து, "பகவானே! ஸுவர்ணஷ்டீவியின்உத்பத்தியைக் கேட்கவிரும்பு கிறேன்" என்றுசொன்னார்.

தர்மராஜரால் இவ்விதஞ்சொல்லப்பட்ட அந்தநாரதமுனிவர் ஸுவர்ணஷ்டீவியைக்குறித்து நடந்தபடி சொல்லத்தொடங்கினார். "ஓ! மஹாபாஹுவே! ஸ்ரீகிருஷ்ணபகவான்சொன்ன இந்தக்கதை இங்ஙனமே நடந்தது. இந்தக்கதையின்மிச்சத்தை உனக்குச் சொல் லுகிறேன். நானும் என்மருமானானபருவதனும் ஜயமுள்ளவர்களிற் சிறந்த ஸ்ருஞ்சயனிடம் வஸிக்கவிரும்பிச் சென்றோம். அப்பொழுது அவனால் விதிப்படிபூஜிக்கப்பட்டநாங்கள் எங்களிஷ்டம்போல அவன்

வீட்டில் வஸித்துக்கொண்டிருந்தோம். மழைக்காலஞ்சென்று வெளியிற்புறப்படவேண்டியஸமயத்தில் பர்வதன், 'நாம் இவ்வரசன்வீட்டில் மிகவும்பூஜிக்கப்பெற்று வஸித்துக்கொண்டிருந்தோம்; ஆகையால், அவன்க்ஷேமத்தைக்கருதவேண்டும்' என்று என்னிடம்தெரிவித்தான். பிறகு நான், 'மருகனே! இதெல்லாம் செய்யவல்லவன் நீ. ஸ்ருஞ்சயன் எவ்விதவரத்தைவிரும்புகிறானோ அதைக்கேட்டு உனக்கிஷ்டமிருந்தால் நம்மிருவர்களுடையதவத்தாலும் அவ்வரம்ஸித்திபெறும்படி செய்துகொடு' என்று பர்வதனுக்குச்சொன்னேன். ஓ! குருபுங்கவ! உடனே பர்வதன், ஐயமுள்ளவர்களிற்சிறந்த ஸ்ருஞ்சயனைப் பிரியமாயழைத்து, 'ஓ! அரசனே! உண்மையாய்ச்செய்யப்பட்ட உனதுபூஜைகளால் நாங்களிருவரும் ஸந்தோஷமடைந்தோம். நாங்கள் உனக்கு ஒருமரியாதைசெய்ய விரும்புகிறோம். மஹாராஜனே! தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் யாதொருகேடும்வாராதிருக்கும் வண்ணம் உனக்கிஷ்டமானவரத்தைக் கேட்டுக்கொள்' என்றுசொன்னான். உடனே ஸ்ருஞ்சயன், 'நீங்கள் ஸந்தோஷமுள்ளவர்களாயிருப்பீர்களானால் அதுவே எனக்குப் போதுமானது. எனக்கு அதுவே உத்தமமான பயனைக்கொடுக்கத்தக்க பெரியலாபம்' என்று சொன்னான்.

இவ்விதஞ்சொன்ன அரசனைப்பார்த்துப் பர்வதன், 'ஓ! அரசனே! வெகுகாலமாக உன்மனத்திலிருக்குமெண்ணத்தைக் கேள். நீ இந்திரனுக்கொப்பான காந்தியுள்ளவனும் உறுதியானநியமமுள்ளவனும் பராக்கிரமசாலியும் சிரஞ்சீவியுமான புத்திரனை விரும்பிக்கொண்டிருக்கிறாய். உன்னுடையவிருப்பம் நிறைவேறும். உனது மனத்தில் இவ்வண்ணம் தேவராஜனை அவமதிக்கவேண்டுமென்றிருக்கிறது. ஆகையால், அந்தப்புத்திரன் சிரஞ்சீவியாயிருக்கமாட்டான். அப்புத்திரன் ஸுவர்ணத்தைக்கக்குவதால் ஸுவர்ணஷ்டீவியென்று சொல்லப்படுவான். தேவராஜன்போன்ற காந்தியுள்ள அந்தக்குமாரனைத் தேவராஜனிடமிருந்து ரக்ஷிக்கவேண்டும்' என்றுதிரும்பவும்சொன்னான். மஹாத்மாவான பர்வதனுடையவாக்கியத்தைக் கேட்ட ஸ்ருஞ்சயன் அப்பொழுது, 'ஓ! மஹரிஷியே! இஃது இவ்விதம் இல்லாமலிருக்கவேண்டும்; உங்களிருவர்களின்தவவலிமையாலும் எனதுபுத்திரன் சிரஞ்சீவியாயிருக்கவேண்டும்' என்று மிக்க அநுக்ரஹத்தைவேண்டினான். பர்வதன் இந்திரனைவேண்டி அவ்வரசனுக்கு யாதொருமறுமொழியும் சொல்லவில்லை. அப்பொழுது வருத்தமுற்றுநிற்கும் அவ்வரசனைப்பார்த்து நான், 'மஹாராஜ! அந்தக்

சமயம் என்னைநினை; யமன்வசம்போனாலும் உன் அருமைப்புத்திரனை யாதொருகுறையுமின்றி அங்ஙனமே திரும்ப உனக்குக்கொடுக்கி றேன். நீ வருத்தப்படவேண்டாம்' என்று திரும்பவுஞ்சொன்னேன். அரசனுக்கு இவ்விதம்சொல்லிவிட்டு நாங்களிருவரும் இஷ்டம்போ லச் சென்றோம். ஸ்ருஞ்சயனும் தன்னிஷ்டப்படி தன் அரண்மனை வந்துசேர்ந்தான். பின்பு ஒருஸமயத்தில் ஸ்ருஞ்சயனுக்கு மிகவும் பிரகாசிக்கும் தேஜஸுள்ள வீரனை ஒருபுத்திரனுண்டானன். அந் தப்புத்திரன் பெரியகுளத்தில் தாமரைப்பூவளர்வதுபோற் காலத்திற் குத்தக்கபடி வளர்ச்சியடைந்தான். அந்தப்புத்திரன் ஸுவர்ணத் தைக்கக்கும்காரணத்தால் ஸுவர்ணஷ்டீவியென்னும் பெயரடைந் தான். அஃது இவ்வுலகெல்லாம் பெரியவிந்தையாயிருந்தது. அறிஞர் களானமஹரிஷிகள் ஸ்ருஞ்சயனுக்கு அளித்தவரத்தையறிந்ததேவே ந்திரன் தனக்கு அவமதிநேருமோவெனப்பயந்து ஆசிரியராகிய பிரு ஹஸ்பதியின் அபிப்பிராயப்படி எப்பொழுதும் அந்தப்புத்திரனின் ஆபத்திற்கு இடம்தேடிக்கொண்டிருந்தான். பின்பு ஒருகாலத்தில் அவன், உருவங்கொண்டு எதிரிலிருக்கும் தன் திவ்யாஸ்திரமான வஜ் ரத்தைநோக்கி, 'ஓ! வஜ்ரமே! பர்வதரிஷிசொன்னபடி ஸ்ருஞ்சய னுடையபுத்திரன் வளர்ந்து தன்வலிமையால் என்னை அவமதிப்பா னுகையால் நீ இப்போதே புலிவேஷம்பூண்டு அவ்வரசன்புத்திரனைக் கொல்லவேண்டும்' என்றுகட்டளையிட்டான். பகையாளிகளை வெல் லும்வல்லமையுள்ளவஜ்ரமும் இந்திரனால் இங்ஙனம்ஏவப்பட்டு அந்தக் குமாரனைக்கொல்ல எப்பொழுதும் இடம்பார்த்துக்கொண்டேயிருந் தது. ஸ்ருஞ்சயனும் இந்திரனுக்கு ஒப்பாகவிளங்கும் புத்திரனையடை ந்து ஸந்தோஷமுள்ளவனுகி அந்தப்புரத்திலிருந்தவர்களுடன் எப் பொழுதும் அரணியவாஸம் செய்துகொண்டிருந்தான். பின்ஒருகால் கங்கைக்கரையில் ஒருவருமில்லாதஒருவனத்தில் அந்தப்பாலன் விளை யாடவேண்டித் தாதியுடன் சென்றான். ஏறக்குறைய ஐந்துபிராய முள்ளவனும் பெரியயானையின்பலமுள்ளவனுமான அப்பாலகன் வேக மாகஓடிவரும் ஒருபுலியைக்கண்டான். உடனே நடுக்கமுற்ற அப் பாலகனை அரசகுமாரன் புலியாலடிக்கப்பட்டு உயிரிழந்து பூமியில் விழுந்தான். உடனே தாதியும் கூச்சலிட்டாள். தேவராஜாவின் மாயையால்வந்த அந்தப்புலியும் அரசகுமாரனைக்கொன்றவுடன் அங் கேயே மறைந்துபோயிற்று. மிகவுங்கஷ்டத்துடன் கூச்சலிடும் தாதி யின்ஒலியைக்கேட்டு ஸ்ருஞ்சயனென்னும்அரசன் தானே அவ்விடம் [illegible] உதிரங்களுறிஞ்சப்பட்டு உயிரிழந்து ஆகாயத்திலிருந்து

நழுவிவிழுந்த சந்திரமண்டலம்போல ஆனந்தமில்லாமல் படுத்திருக்கும் அந்தக்குழந்தையை அவன் கண்டான். உடனே அடிபட்டமார்புடன் உதிரத்தால்நனைக்கப்பட்டிருக்கும் அந்தப்புத்திரனை மடியிலெடுத்துப் போட்டுக்கொண்டு ஸ்ருஞ்சயன் கஷ்டத்துடன் கதறினான். உடனே அந்தக்குழந்தையின் தாய்களும் சோகத்தாலழுதுகொண்டு ஸ்ருஞ்சயனிருக்கும் அவ்விடத்திற்கு ஓடிவந்தார்கள். பிறகு ஸ்ருஞ்சயன் என்னிடத்தில் மனத்தைச்செலுத்தி என்னையேசிந்தித்தான். அப்பொழுது அவனுடையசிந்தையையறிந்து நான் அவனுக்கெதிரில் தரிசனம்கொடுத்தேன். சோகத்தால்கஷ்டப்படும் ஸ்ருஞ்சயனை, யதுவீரனானகிருஷ்ணன் உனக்குபதேசித்தஇக்கதைகளைக்கேட்பித்தேன். உடனே இந்திரனுக்கொப்ப இருக்கவேண்டுமேயல்லாமல் வேறுவிதமிருக்க முடியாதென்றுசொல்லி அந்தப்பிள்ளையையும் பிழைக்கச்செய்தேன். அதற்குப்பிறகு ஸுவர்ணஷ்டீவியென்னும் குமாரன் மிக்கபுகழையும் வீரியத்தையும்அடைந்து தாய்தந்தைகளையும் ஸந்தோஷிப்பித்தான். பயங்கரமான பராக்ரமமுள்ள ஸுவர்ணஷ்டீவியானவன் தகப்பன் ஸுவர்க்கஞ்சென்றதும் ஆயிரத்துநூறுவருஷம் அரசாட்சிசெய்திருந்தான். அந்தக்காலத்தில் அதிகதக்ஷிணையுள்ள பலபெரியயாகங்களைச்செய்து தேவர்களுக்கும் பிதிர்க்களுக்கும் திருப்திசெய்வித்தான். அவன் தன்வம்சத்தின்தொடர்ச்சிக்குக் காரணமான பலபுத்திரர்களையுண்டுபண்ணி நெடுங்காலஞ்சென்றபின் பரலோகமடைந்தான். ஓ! ராஜச்ரேஷ்டனே! நீயும் உனக்குண்டான இந்தச்சோகத்தை விலக்கிக்கொள். ஸ்ரீகிருஷ்ணபகவானும் மஹரிஷியானவ்யாஸரும் சொல்லுகிறபடி உனதுதகப்பன்பாட்டன்பரம்பரையாய்வந்த ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு பரிபாலனம்பண்ணு; பரிசுத்தமான பெரியயாகங்களைச்செய்து இஷ்டமானலோகத்தை நீ அடையலாம்" என்றுசொன்னார்.

---

## முப்பத்தோராவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(வியாஸர் தர்மபுத்திரருக்குத் தத்வோபதேசம்செய்ததும், தர்மபுத்திரர் ஆச்ரமங்களின்சிறப்பைக்கூறும்படி வியாஸரைவினவியதும்.)

மௌனமாகச்சோகப்படும் தர்மபுத்திரராஜரைநோக்கித் தர்மத்தின்உண்மையையறிந்த வியாஸமஹரிஷி திரும்பவும் சொல்லத்தொடங்கினார். "ஓ! தாமரைக்கண்ணனே! க்ஷத்திரியர்களுக்குப்

பிராணிகளைக்காப்பதுதான் தர்மம்; உலகத்திற்குத் தர்மமே பிரமாணம். எப்பொழுதும் தர்மத்தை அனுசரிக்கவேண்டும். ஆகையால், தர்மத்தைச்செய். அரசனே! உனதுகுலபரம்பரையில்வந்த ராஜபதத்தைக் காப்பாற்று. ஓ! பாரதச்ரேஷ்ட! வேதத்தால்நிச்சயிக்கப்பட்டுப் பிராம்மணர்களிடம் நிலைபெற்றிருக்கும் தர்மம்யாவும் பிரமாணங்களுள் சாசுவதமான பிரமாணமாகும். அந்தத்தர்மத்தையெல்லாம் ரக்ஷிக்கக்கடமைப்பட்டவன் க்ஷத்திரியனே. அங்ஙனமிருக்க அரசன் கட்டளையைமீறுகிறவனும் உலகநடைக்கு இடையூறுசெய்கிறவனுமான ராஜ்யத்திலுள்ள அந்தமனிதன்கையை வெட்டிவிடவேண்டும். அவிவேகமுள்ளசேவகனாலும் புத்திரனாலும் ரிஷியாலும் பிரமாணமானதர்மத்தை அப்பிரமாணமாகச்செய்கிற அந்தப்பாவியை எல்லாஉபாயத்தாலும் அடக்கவேண்டும்; அல்லது கொல்லவேண்டும். இந்தமுறைப்படி நீதிசெலுத்தாமலிருந்தால் அரசனைப் பாவமடையும். நாசத்தையடையும்தர்மத்தைப் பாதுகாவாத அரசனே தர்மத்தைக்கொன்றவனாவான். தர்மத்தைக்கெடுத்தவர்களான துர்யோதனாதியர்கள்தாம் தங்கள்சேனையுடன் உன்னால்கொல்லப்பட்டார்கள். ஓ! பாண்டவ! ஸ்வதர்மத்தில் ஸரியாயிருக்கும் நீ ஏன் சோகப்படுகிறாய்? அரசன் அடிக்கவும்வேண்டும்; கொடுக்கவும்வேண்டும்; தர்மமுறைப்படி பிரஜைகளைப் பாதுகாக்கவும்வேண்டும்" என்று சொன்னார். தர்மபுத்திரர், "தர்மங்கள்யாவும் அறிந்தவர்களிற் சிறந்தமஹாரிஷியே! நீங்கள் சொல்லும்வசனத்தில் நான் சங்கைப்படவில்லை. தர்மமென்பது உங்களுக்குப் பிரத்தியக்ஷமன்றோ? ஆனால் கொல்லத்தகாத அனேகர்களை ராஜ்யநிமித்தம் நான் கொன்றுவிட்டேன். பிராம்மணரே! அந்தக்காரியங்கள் என்னைத் தகிக்கவும் வேகவும் செய்கின்றன" என்றுசொன்னார்.

வியாஸர் சொல்லத்தொடங்கினார். "ஓ! பாரத! மனிதன் நன்மையோ தீமையோ எவற்றையும் ஈசுவரனால்ஏவப்பட்டுச் செய்கிறானா? அல்லது ஸ்வதந்திரனாகவே செய்கிறானா? உலகத்தில் ஸுகதுக்கமென்னும்பயன் காரணமின்றிப் பலாத்காரமாகச் செய்யப்படுகிறதா? அல்லது முன்செய்தகர்மத்தாலுண்டாகிறதா? இவைகளில் மனிதன் நல்லதையும் கெட்டதையும் ஈசுவரனால்ஏவப்பட்டே செய்கிறானென்பது உண்மையாயிருந்தால் காட்டிலிருக்கும்மரத்தைக் கோடாலியால் மனிதன்வெட்டுவானாகில் அப்பாவம் வெட்டினமனிதனுக்கேதவிர அவனேவிய கோடாலிக்குச் சிறிதுமில்லையென்பது எங்ஙனமோ, அங்ஙனமே அக்காரியங்களின்பயன் ஈசுவரனைச்சேரவேண்டும். அறி

வுள்ளமனிதன் ஆயுதத்தையெடுத்துப்போவதால் அறிவற்றஆயுதம் போலல்லாமல் அந்தக்கர்மத்தின்பயன் அவனைத்தொடருமென்று சொன்னால், அவ்வாயுதங்களை உண்டுபண்ணின அறிவுள்ளமனிதனை அப்பாவம் ஏன்தொடராது? கௌந்தேய! அங்ஙனம்தொடர்வது நியாயமா? ஒருவன்செய்தகர்மத்தின்பயன் மற்றொருவனை எங்ஙனம் அடையக்கூடும்? ஆகையால், கர்மத்தின்பயன்யாவும் ஈசுவரனையே சேரவேண்டும்.

மனிதன் புண்ணியம்பாவமெனக் கர்மங்களைத் தானே ஸ்வதந்திரனாகச்செய்கிறான்; இவனை ஏவும்ஈசனென்பவனே இல்லையென்றால், அப்போதும் நீசெய்தது கெட்டதன்று. ஏனெனில், எந்தமனிதனும் எப்போதும் முன்செய்தகர்மத்திற்குமாறாக நடக்கவல்லனல்லன். இந்தக்காரியத்திற்குமூலமான முன்கர்மத்தையும் நாமேசெய்திருந்தோமாகிலும் ஆயுதஞ்செய்தவனுக்கு அச்செய்கைபோல அது நமக்குப் பாவமாகாது. கர்மப்பிரவாகம் அனாதியாம்.

மனிதனுக்குப் பலாத்காரமாகவே கொலையுண்டாவது உறுதியென்று எண்ணுவாயானால், அப்பொழுதும் நீசெய்தது கெட்டகாரியமன்று. இவ்வபிப்பிராயத்தில் முன்னும்பின்னும் யாதொருநன்மையும் தீமையும் உண்டாகக் காரணமில்லை; அல்லது உலகத்தில் புண்ணியபாவமென்னும்காரணத்தாலே ஸுகமும் துக்கமும் வருமென்று சொல்லுவது யுக்தமென்றுநினைப்பாயானால், அப்புண்ணியபாபங்களும் சாஸ்திரமொன்றாலேயே வெளியாகிறபடியால் அரசர்களுக்கு ஆயுதமெடுப்பது புண்ணியமென்று சாஸ்திரத்தில்சொல்லியபடி யுக்தமென்று உலகத்திலும்ஒப்புக்கொள்ளப்பட்டதுதான். உலகத்திலுள்ளவிதிப்படி அரசனுக்கு ஆயுதமெடுப்பது நியாயமானாலும் அவ்விதமிருப்பதில் நல்லகாரியம்போலக் கெட்டகாரியமும் அவனறியாமல் வந்துவிடுமென்று உனக்குத்தோற்றுமானால், ஓ! அரசப்புலியே! அதற்காகக் கெட்டகாரியத்துக்குக் காரணமாயிருப்பதைத் தள்ளிவிட்டு நிலைத்ததான சுபகாரியத்தின்பயனைத் தெரிந்துகொள். அதைவிட்டுச் சோகத்தில் இங்ஙனம் மனத்தைச்செலுத்தவேண்டாம். பிறரிகழத்தக்கதாயினும் விதிப்படியுள்ள ஸ்வதர்மத்திலிருக்கும் நீ இங்ஙனம் சரீரத்தைவிடத்துணிவது உனக்குஅழகன்று. ஓ! பாரத! சரீரத்துடன்ஜீவித்திருப்பவன் கெட்டகர்மங்களைவிலக்கத்தக்க பிராயச்சித்தங்களை விதிப்படி செய்துகொள்ளமுடியும். சரீரத்தையிழந்தவன் அவ்விதம்செய்யமுடியாமல் தாழ்வையடையவேண்டும். ஆகையால், ஓ! அரசனே! நீ உயிரோடிருந்தால் பிராயச்சித்தம்செய்து

கொள்ளக்கூடும். பிராயச்சித்தம்செய்துகொள்ளாமல் சரீரத்தைவிட்டுக் கஷ்டப்படப்போகிறாயே" என்றுசொன்னார்.

அந்தவார்த்தையைக்கேட்டுத் தர்மபுத்திரர் சொல்லத்தொடங்கினார். "ஓ! பிதாமஹரே! ராஜ்யத்தில் ஆசைபிடித்த என்னொருவன் நிமித்தமாகப் பிள்ளைகளும் பேரர்களும் உடன்பிறந்தார்களும் தந்தைகளும் பிதாமஹர்களும் மாமனார்களும் குருக்களும் அம்மான்களும் மருமான்களும் ஸம்பந்திகளும் சிநேகிதர்களும் தோழர்களும் ஞாதிகளுமாகிய மஹாத்மாக்களான க்ஷத்திரியர்கள் பலதேசங்களிலிருந்துவந்த பல அரசர்கள் யாவரும்கொல்லப்பட்டார்கள். ஓ! தபோதனரே! அடிக்கடி யாகம்செய்பவர்களும் தர்மத்தில் விடாமுயற்சியுள்ளவர்களும் வீரர்களுமான அவ்வித அரசர்களைக்கொன்ற நான் எந்தக்கதி அடையப்போகிறேனோ? திரும்பவும் திரும்பவும் நினைத்து நினைத்து அந்தச்சோகத்தால் எப்பொழுதும் நான் தகிக்கப்படுகிறேன். ஸ்ரீமான்களும் அரசர்களிற்சிங்கம்போன்றவர்களுமான அந்தவீரர்களையிழந்த இந்தப்பூமியையும் கடோரமானஞாதிகளின் வதத்தையும் பலவிதமாகக்கொல்லப்பட்ட மற்றக்ஷத்திரியர்களையும் கோடிக்கணக்காக மாண்டுபோன மற்றப்பிராணிகளையும் பார்த்துப் பரிதபிக்கிறேன். ஓ! பிதாமஹரே! பதிகளையும் பிள்ளைகளையும் உடன்பிறந்தாரையும் இழந்த அந்தஉத்தமஸ்திரீகளின் அவஸ்தை இப்பொழுது எவ்விதமாயிருக்கிறதோ? 'விருஷ்ணிகளுடன் சேர்ந்தவர்களும் பாவிகளுமான பாண்டவர்கள் நாசஞ்செய்தார்கள்' என்று பாண்டவர்களான எங்களைத் திட்டிக்கொண்டு மெலிந்தவர்களும் துயரமுள்ளவர்களுமாகி அவர்கள் பூதலத்தில்விழுந்து புரளுவார்கள். பிராமணச்ரேஷ்டரே! பதிகளையும் புத்திரர்களையும் தந்தைகளையும் உடன்பிறந்தார்களையும் காணாத அந்தஸ்திரீகள் யாவரும் பிரியத்தினால் தம்முயிரையுமிழந்து அந்தகன்வீடு செல்லுவார்களென்பதில் எனக்குச் சற்றேனும் ஐயமில்லை. தர்மத்தை நன்கு ஆராய்ந்து கவனித்தால் நாம் ஸ்த்ரீவதத்தையுமடையப்போகிறோம். அவ்விதமான நாம் நண்பர்களைக் கொலைசெய்து அழிவில்லாப்பாவத்தையடைந்து தலைகீழாய் நரகத்தில் விழப்போகிறோம். ஓ! பரமபூஜ்யரே! கடுந்தவஞ்செய்து இச்சரீரத்தையொழித்துவிடுகிறேன். ஓ! பிதாமஹரே! ஆகினும், ஆச்ரமங்களின் விசேஷத்தை நீர் எனக்குச் சொல்லவேண்டும்" என்று சொன்னார்.

## முப்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(வியாஸர், போரில்மடிந்த அரசர்களின் ஸந்ததிகளை அவரவர் நாட்டைஆளச்செய்து அசுவமேதம் செய்யும்படி தர்ம புத்திரருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரரின் அந்தவசனத்தைக்கேட்ட வியாஸமஹரிஷி, புத்தியால் நன்றாயாலோசித்துத் திரும்பவும் பாண்டவரான தர்மபுத்திரரைநோக்கிச் சொல்லத்தொடங்கினர். "ஓ! க்ஷத்திரியச்ரேஷ்டனான அரசனே! க்ஷத்திரியர்களுக்குரிய தர்மத்தைநினைத்துப்பார்த்து நீ இச்சோகத்தை விலக்கிக்கொள்ளவேண்டும். ஸ்வதர்மத்தை முன்னிட்டல்லவோ இந்த க்ஷத்திரியர்கள் கொல்லப்பட்டார்கள்? பூர்ணமான ஸம்பத்தையும் இப்பூமியில் பெரியகீர்த்தியையும் விரும்பிப் பிறர்களைக்கொல்ல முயன்ற அந்தக்ஷத்திரியர்கள் காலத்தால் முடிவடைந்தார்கள். நீயும் பீமனும் அர்ஜுனனும் இரட்டையரும் அவர்களைக் கொன்றவர்களல்லர். காலம் தான்செய்யும் மரணவிதிப்படி அந்த மனிதர்களினுயிரைக் கொண்டுபோயிற்று. காலத்துக்குத் தாயென்றும் தந்தையென்றும் அல்லது வேறெதுவென்றும் அபிமானப்படக்கூடியதில்லை. பரதச்ரேஷ்டனே! பிராணிகளின் புண்ணிய பாபங்களுக்குச் சாக்ஷியாயிருக்கும் அக்காலம் இந்த உங்களுடைய யுத்தத்தைப் பேருக்குக் காரணமாகக்கொண்டு அவர்களை ஸம்ஹாரம் பண்ணிற்று. பிராணிகளைக்கொண்டு பிராணிகளைக் கொல்லும்படி செய்வது காலத்துக்குள்ள ஈசுவரத்தன்மையாகும். ஸுகதுக்கங்களைக்கொடுப்பதும் புண்ணியபாபங்களுக்குச் சாக்ஷியாயிருப்பதுமாகிய இக்காலத்தையே கர்மத்தின்பிரத்தியக்ஷஉருவமெனத் தெரிந்துகொள். சிறந்தகைகளையுடையவர்களான அவர்களைக் காலனுக்கு வசமாக்கி நாசமடையச்செய்ய அவர்களுடைய முன்செய்தகர்மங்கள் காரணங்களென்றும் தெரிந்துகொள். விதியின்ஏவுதலால் இவ்விதமான கர்மத்தைச்செய்த நீயும் உன்னைக் காலத்தில் அடங்கிய ஆசாரமுள்ளவனென்று தெரிந்துகொள். தச்சனால்செய்யப்பட்ட யந்திரம் அதைச்சுழற்றிவிடும் மனிதனிடம் அடங்கியிருப்பதுபோல இவ்வுலகனைத்தும் காலத்துடன்சேர்ந்த கர்மத்தால் சுழற்றப்படுகிறது. காரணம்தெரியாமல் மனிதனுக்குநேரும் பிறப்பையும் இறப்பையும் கண்டால் இச்சோகமும் சந்தோஷமும் பயனற்றனவாகும். ஓ! ராஜனே! இதுவிஷயத்தில் இல்லாததானபந்தத்தை உனதுமனத்

தூக்கு உண்டுபெண்ணிக்கொண்டிருக்கிறாய். அதை விலக்கிக்கொள்ள வேண்டி, நீ வேண்டுமானால் பிராயச்சித்தத்தைச் செய்துகொள். ஓ! பார்த்தா! முன்னொருகாலத்தில் தேவாஸுரர்களுக்குள் யுத்தம் நடந்ததாகக் கேள்விப்படுகிறோம். அவர்களில் அஸுரர்கள் தமையன்மார்களும் தேவர்கள் அவர்களுக்குத் தம்பிமார்களுமாயிருந்தார்கள். அவர்களுக்கும் ராஜ்யலக்ஷ்மிநிமித்தமாகவே உண்டான பெரியவிரோதத்தைமுன்னிட்டு முப்பத்திராயிரம்வருஷம் வரையில் யுத்தம்நடந்தது. அதில் தேவர்கள் இந்தப்பூமிமுழுமையும் ஒரேஉதிரக்கடலால் நிரம்பச்செய்து அஸுரர்களைக்கொன்று ஸ்வர்க்கத்தை யடைந்தார்கள். அந்தயுத்தத்தில் அகங்காரத்தால் அஸுரர்களுக்கு உதவிசெய்ய வந்தவர்களும் சாலாவிருகர்களென்று இம்மூவுலகிலும் பிரஸித்தி பெற்றவர்களும் வேதத்தின்கரைகண்டவர்களுமான பூமியிலிருந்த எண்பத்தெண்ணாயிரம் பிராம்மணர்களையும் தேவர்கள் கொன்றார்கள். அதர்மத்தைவிருத்திசெய்து தர்மத்துக்கு இடையூறுசெய்யவிரும்பும் கெட்டமனிதர்களை அரசன், கொடியவர்களான அஸுரர்களைத் தேவர்கள் கொலைசெய்வதுபோலக் கொலைசெய்யவேண்டும். ஒருகூட்டத்தில் ஒருவனைக்கொல்வதனால் மற்றவர்களுக்கு க்ஷேமம்வருமானாலும், அங்ஙனமே ஒரு கூட்டத்தைக் கொல்வதனால் ஒருதேசத்துக்கு க்ஷேமமுண்டாகுமானாலும் அந்தக் கொலைகள் தர்மவிரோதமாக மாட்டா. ஓ! நரபதியே! தர்மமானசில அதர்மம்போலவும் அதர்மமானசில தர்மம்போலவுமிருக்கும்; பகுத்தறியத்திறமையுள்ளவன் அதனை ஊகமாய்த்தெரிந்துகொள்ளவேண்டும். ஆகையால், ஓ! பாண்டவனே! கல்விமானாயிருக்கும்நீ மனத்தைத் திடப்படுத்திக்கொள். ஓ! பாரத! முன் தேவர்களால்நடைபெற்றவழியில் சென்றவனாயிருக்கிறாய். இவ்விதமிருப்பவர்கள் நரகமடையமாட்டார்கள். பகையாளிகளைத்தபிக்கச்செய்யும் பாண்டவவீர! இந்தத்தம்பிகளையும் ஸ்நேஹிதர்களையும் ஸமாதானஞ்செய். எந்தமனிதன் கெட்டஎண்ணங்கொண்டு கெட்டகாரியத்தையும்செய்துவிட்டு மனவருத்தமும் லஜ்ஜையுமற்றவனாயிருக்கிறானோ அவனிடம் அக்காரியம்யாவுமே பாவமென்று சொல்லப்படும். அவ்விதப்பாவத்திற்குப் பிராயச்சித்தமுமில்லை. பிராயச்சித்தத்தால் அப்பாவம் குறைவதுமில்லை. நீயோ நல்லகுலத்தில் பரிசுத்தமான பிறப்புடையவன். பகையாளியான துரியோதனனுடைய தோஷத்தால் உனக்கிஷ்டமில்லாமலே இந்தக்காரியம் செய்யும்படி நேர்ந்தது. செய்தபிறகும் இவ்விதம் பரிதபிக்கிறாய். அசுவமேதமென்னும்பெரியயாகம் உத்தமமானபிராயச்சித்தமெனக் கூறப்

படுகிறது. ஓ! மஹாராஜ! அந்தயாகத்தைச்செய். உனதிஷ்டப் படி பாபமற்றவனுயிருப்பாய். மருத்துக்களுடன்கூடின பகவானுன தேவேந்திரன் பகைவர்களைக்கொன்று ஒவ்வொருயாகமாய் முறையே நூறு அசுவமேதயாகங்களைச்செய்து பாவங்களற்று ஸுகித்துவாழும் ஸுவர்க்கமென்னும் லோகத்தையடைந்து அம்மருத்துக்களுடன் திசைகளைவிளங்கச்செய்கிறான். அப்படி அமரர்களுக்கு அரசனுகஸ்வர்க்கலோகத்தில் அப்ஸரஸ்திரீகளுடன்விளங்கும் சசீபதியான இந்திரனை ரிஷிகளும் தேவர்களும் ஆராதிக்கிறார்கள். ஓ! குற்றமற்றவனே! நீயும் பராக்ரமத்தால் அரசர்களைவென்று இப்பூமியையடைந்திருக்கிறாய். அரசனே! உன்னால் ஜயிக்கப்பட்ட அரசர்களுடைய பட்டணங்களுக்கும் ராஜ்யங்களுக்கும் சிநேகிதர்களுடன்சென்று அங்குள்ள அவ்வரசர்களின்புத்திரர்கள், பேரர்கள், அல்லது ஸஹோதரர்களை அந்தஅந்தராஜ்யத்திற்குஅரசராக அபிஷேகஞ்செய். குழந்தைகளையும் கர்ப்பத்திலிருப்பவர்களையும் ஆதரவுடன் நன்மொழி கூறிச் சந்தோஷப்படுத்துவதோடு பிரஜைகள் யாவரையும் பிரியமாய் வைத்துக்கொண்டு பூமியைப் பரிபாலனஞ்செய். எந்தஅரசர்களுக்குக் குமாரரில்லையோ அவர்களுடையபெண்களை அந்தராஜ்யத்தில் முடிசூட்டி அரசாளச்செய். இங்ஙனம்செய்தால் இயற்கையில் போக விருப்பமுள்ளஸ்திரீகள் சோகத்தைத் தள்ளிவிடுவார்கள். ஓ! பாரத! இவ்விதம் எல்லாராஜ்யங்களிலும் ஸமாதானஞ்செய்துவிட்டு ஜயத்தையுடையஇந்திரன் முன்னஞ்செய்ததுபோல அசுவமேதயாகத்தைச்செய். ஓ! க்ஷத்திரியச்ரேஷ்டனே! யமனுக்கொப்பான வன்மையுள்ளவர்களென்கிற அகங்காரங்கொண்டு தம்கர்மத்தாலேயே நாசமடைந்த மஹாத்மாக்களான அந்தஅரசர்களைக்குறித்து வருத்தப்படவேண்டாம். க்ஷத்திரியர்களுக்குரியதர்மமும் விரோதிகளில்லாதராஜ்யமும் உன்னாலடையப்பட்டன. கௌந்தேய! பரலோகத்தில் பாதுகாக்கத்தக்கதும் சிறந்ததுமானஉனக்குரியதர்மத்தை ரக்ஷித்துக்கொள்" என்றுசொன்னார்.

---

## முப்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(வியாஸர் விதிவிலக்குகளைத் தர்மபுத்திரருக்குக் கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! மனிதன் இங்கு எந்தக்காரியங்களைச்செய்து பிராயச்சித்தஞ்செய்துகொள்ள வேண்டியவனுகிறு

னென்பதையும் எதைச்செய்து அந்தப்பாவத்திலிருந்து விடுதலைப் பெறுகிறுனென்பதையும் எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்று கேட்க, வியாஸமஹரிஷி சொல்லத்தொடங்கினர்.

"விதிப்படியுள்ள கர்மத்தைச் செய்யாததாலும் விலக்கப்பட்ட கர்மங்களைச் செய்வதாலும் மனிதன் பொய்ந்நடக்கையுள்ளவனுகிப் பிராயச்சித்தஞ் செய்துகொள்ள வேண்டியவனுகிறுன். ஸூர்யன் உதயமாகும் காலத்திலும் அஸ்தமயமாகுங்காலத்திலும் படுத்துறங்கும் பிரம்மசாரி, சொத்தைநகமுள்ளவன், கறுத்தபல்லுள்ளவன், [1] தமையன்பிரம்மசாரியாயிருக்கத் தான் மணம்புரிந்ததம்பி, [2]தம்பி மணம்புரிந்திருக்கப் பிரம்மசாரியாயிருக்கும் தமையன், பிராம்மணர்களின் பெருமையைநிந்திப்பவன், முன்பிறந்தவள் கன்னியாயிருக்கத் தங்கையைமணம்புரிந்தவன், பின்புமுன்பிறந்தவளை மணம்புரிந்தவன், விரதத்தைவிட்டவன், துவிஜாதிகளென்னும் மூன்றுவர்ணத்தாரையும் கொன்றவன், அபாத்திரத்தில் தானஞ்செய்தவன், பாத்திரத்தில் கொடாதவன், ஸமுதாயத்திற்கு யாகம்செய்துவைத்தவன், [3]மாம்ஸத்தை விற்றவன், ஔபாஸனமுதலிய அக்கினிகளைவிட்டவன், வேதத்தைவிற்றவன், சூத்திரஸ்திரீயைக்கொன்றவன் இவர்களில் முன் முன்சொன்னவர்கள் அதிகபாபமுள்ளவர்கள். யாகத்திற்கல்லாமல் பசுவைக்கொன்றவன், காட்டையெரித்தவன், பொய்சொல்லி அடுத்தவன், குருவைத்தடுத்தவன், வாக்காலாவது மனத்தாலாவது தாரைவார்த்தாவது தான்கொடுத்ததைய பகரித்தவன், [4]பிறர்கொடுப்பதைத் தடுத்தவன், ஒருபந்தியில் வேறுபாகத்தாலுண்டவன், பூஜிப்பவரை அவமதித்தவன், உறவினர்களிடம் கலகஞ்செய்தவன், அடுத்தவனைக் காவாதவன், ஆசாரத்தைவிட்டவன் இவர்கள்யாவரும் தம்தம்பாவத்திற்குத்தக்கபடி பிராயச்சித்தஞ்செய்துகொள்ளத்தக்கவர்கள்.

இனி உலகத்திற்கும் வேதத்திற்கும் விரோதமாயிருக்கும் அகார்யங்களை உனக்குபதேசிக்கிறேன்; கவனித்துக் கேள். தனக்குரியதர்மத்தைவிடுதல், பிறர்தருமத்தைச்செய்தல், அயோக்கியனுக்குயாகஞ்செய்வித்தல், பூஜிக்கத்தகாதவைகளைப் பூஜித்தல், சரணமென்றுவந்தவனைக் கைவிடுதல், காப்பாற்றவேண்டியவர்களைக் காப்பாற்றுமை, உப்புப்புளிமுதலிய ரஸவஸ்துக்களை வியாபாரஞ்செய்தல்,

---

[1] இவனுக்குப் 'பரிவேத்தா' என்றுபெயர்.

[2] இவனுக்குப் 'பரிவித்தி' என்றுபெயர்.

[3] ஆடு, மாடுமுதலியவைகளை.

[4] இங்கு இரண்டுசொற்கள் விடப்பட்டன.

பசுபக்ஷிகளைக்கொல்லுதல், சக்தியிருந்தும் [1]ஆதானம்முதலியகர்ட கஙளச்செய்யாமை, (பசுக்களுக்கு ஆகாரம்முதலிய) நித்தியமாய். கொடுக்கவேண்டியவைகளைக் கொடாமை, தக்ஷிணைகொடாமை, ம்மணர்களின் பொருளைத்திருடுதல் இவைகளையெல்லாம் தருமமறிந் தோர்கள் அகார்யமென்று அறிவிக்கிறார்கள். தகப்பனுடன்சண்டை போடும்புத்ரனும், குருவின்தாரத்தைச்சேருமவனும், தர்மபத்நியிடம் நியாயப்படி சேராமலிருப்பவனும் அதர்மமுள்ளவர்களாவார்கள். இங் ஙனம் எவைகளைச்செய்தும் செய்யாமலும் மனிதன் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளவேண்டுமோ அக்காரியங்கள் வேதங்களில் விரிவாக வும் சுருக்கமாகவும் கூறப்பட்டிருக்கின்றன. இவ்விதமான கார்யங்க ளைச்செய்தும் மனிதனைப் பாவம்தொடாதிருக்கச் சிலகாரணங்க ளுண்டு. அவைகளைச் சொல்லுகிறேன். யுத்தத்தில் ஆயுதமெடுத் துத் தன்னையடிக்கவருமவன்பிரம்மஜ்ஞானியானாலும் அவனைக்கொல் வது பிரம்மஹத்தியாகாது. இவ்விதி வேதங்களிலுள்ள மந்திரத் தால் உபதேசிக்கப்பட்டது. வேதத்தில்விதிக்கப்பட்ட தர்மமுறையை நான் உனக்கு உபதேசிக்கிறேன். தன் ஒழுக்கத்தை விட்டுவிலகிய ஆததாயியான பிராம்மணனைக்கொல்வது கொலைப்பாவமுள்ளதன்று. ஒருவனுடையகோபம் மற்றொருவனுக்குக் கோபத்தையுண்டுபண் ணிற்று. உயிருக்கபாயம் நேருங்கால் தர்மமறிந்தவர்களின் அனுமதி பெற்றுத் தெரிந்து [2]ஸுரையைஉபயோகிப்பவன் பின்பு சுத்திபெறத் தக்கவனாவான். கௌந்தேய! புஜிக்கத்தகாதனதைப் புஜிப்பதாலுண் டாகும் இந்தப்பாவம்யாவும் பிராயச்சித்தவிதிப்படி சுத்திபெறு மென்பதை உனக்குச்சொன்னேன். குருவின்ஆஜ்ஞைப்படி குருதா ரத்தைச்சேருவதால் மனிதன் குற்றமுள்ளவனாகமாட்டான். உத்தா லகரென்னும்ரிஷி சிஷ்யனைக்கொண்டு சுவேதகேதுவென்னும் புத்தி ரனை உண்டுபண்ணிக்கொண்டார். குருவின்நிமித்தம் ஸங்கடகாலத் தில் திருட்டைச்செய்வது குற்றமென்றுதடுக்கப்படவில்லை. ஆனால் (இவ்விதியைமூலமாகக்கொண்டு) ஆசைபிடித்தாவது பலவிடங்களி லாவது பிராம்மணர்களின்பொருளையாவது கவரப்போவதும் அப் பொருளை ஆசிரியருக்கன்றித் தான்புஜிப்பதும் எப்பொழுதும் நியாய மாகா. தனக்காவது பிறருக்காவது உயிரைக்காப்பற்றவேண்டியும் குருவின்நிமித்தமும் ஸ்திரீகள்நிமித்தமும் விவாகநிமித்தமும் பொய் சொல்வது பாவமாகாது. ஸ்வப்னகாலத்தில் சுக்லம்போவதால் திரு

---

[1] ஔபாஸனமென்னும் ஸ்மார்த்தாக்கினியை வைதிகமான மூன்று அக்னிகளாகச் செய்யும் விதி.

[2] கள்.

ம்ப உபநயனஞ்செய்யவேண்டுமென்ற பிராயச்சித்தமில்லை. அக்நியை வளர்த்து அதற்குரியமந்திரத்துடன் நெய்யை ஓமஞ்செய்யவேண்டும். தமையன் பதிதனுகவும் ஸந்யாஸியாகவும் போய்விட்டால் தம்பிக்குப் [1]பாரிவித்யமென்னும் தோஷமாகாது. தர்மநிமித்தம் ஸ்திரீகளின்வேண்டுகோளின்படி அவர்களைச்சேருதல் பாதாரத்தைச்சேர்ந்தபாவமாகாது. சாஸ்திரவிதியல்லாமல் பசுக்களைக் கொல்வதும் கொல்லச்செய்வதும்கூடா. விதிப்படியுள்ள பசுக்களின்வதம் அவைகளுக்குள்ள அனுக்ரஹமாம். அறியாமையால் அயோக்கியப்பிராம்மணனிடம் தானஞ்செய்வதும் யோக்கியரிடத்தில் எப்பொழுதும் மரியாதையுடன் தானஞ்செய்யாமையும் தோஷமாகா. [2]குற்றமுள்ள ஸ்திரீயை விலக்கிவைப்பது தோஷமாகாது. அவளை அங்ஙனமிருக்கும்படிசெய்வித்தல் அவள்பரிசுத்திக்குக் காரணமாகும். அப்படிச் செய்யும்புருஷனுக்குப் பாவமில்லை. சாஸ்திரத்திற் சொல்லியபடி ஸோமரஸத்தின் பெருமையாகிய உண்மையையறிந்து ஸோமமென்னும்கொடியை விக்கிரயஞ்செய்வது தோஷமாகாது. வேலைக்குத்திறமையில்லாதவேலைக்காரனை விலக்குவதிற் பாவமில்லை. பசுக்களினிமித்தம் காடுகளையெரிப்பது பாவமாகாது. இங்ஙனம் உபதேசிக்கப்பட்டபடி இக்காரியங்களைச்செய்வதில் தோஷமில்லை. ஓ! ராஜனே! தோஷங்களைவிலக்கிப் பரிசுத்தியைக்கொடுக்கும் பிராயச்சித்தவிதிகளை விரிவாக உனக்குச் சொல்லுகிறேன்" என்று பின்னும்சொல்லலானார்.

---

## முப்பத்துநான்காவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(வியாஸர் பாபபரிஹாரமான பிராயச்சித்தங்களைத் தர்மபுத்திரருக்கு உபதேசித்தது.)

வியாஸர், "மனிதன் சாந்திராயணமுதலிய தவத்தையும் யாகமுதலிய கர்மங்களையும் கோதானமுதலிய தானங்களையும் செய்தும் திரும்ப அப்பாவங்களில் போகாமலுமிருந்தால் பாவம்விலகிப் பரிசுத்தனுவான். பிரம்மஹத்தியென்னும் பாவமுள்ளவன் அஸ்தியை

---

1 தமையனுக்குவிவாஹமாகாமல் தம்பிவிவாஹஞ்செய்துகொள்ளும்தோஷம்.

2 குற்றமுள்ளஸ்திரீக்கு ஆகாரம் வஸ்திரம் முதலியவற்றை மாத்திரம் கொடுத்து உடனுண்ணல் சேர்க்கைமுதலியவற்றை நிறுத்துவது.

முதலிய தோஷங்களைவிட்டு எப்பொழுதும் பிரம்மசாரியாய்த் தன க்கு வேண்டியதைத் தானே செய்துகொண்டும் தன்பாவத்தை உல கத்தாருக்குத் தெரிவித்துக்கொண்டும் ஒருகையில் கட்வாங்கமென் னும் தடியும் ஒருகையில் ஓடுமெடுத்துப் பிச்சையெடுத்த அன்னத்தை ஒருவேளையுண்டும் பூமியில்படுத்தும் பன்னிரண்டுவருஷகாலமிருப் பானாகில் அப்பாவத்திலிருந்து விடுபடுவான். வேண்டுமென விரும் பிப் பிரம்மஹத்தியைச்செய்தவனானால் ஆயுதமுள்ள ஒருமனிதனிடஞ் சென்று தன்னைக்கொல்லும்படி சொல்லவேண்டும்; அல்லது அறிந்த வர்களுடைய கட்டளைப்படியோ தன்னிஷ்டப்படியோ அக்கினியை வளர்த்து அதில் தன்தேகத்தை விட்டுவிடவேண்டும். விருப்பமின் றிச்செய்த அப்பாவத்தைவிலக்கத் தலைகுனிந்து ஏதாவதொரு வேத த்தை ஜபித்துக்கொண்டு முந்நூறுயோஜனைதூரம் யாத்திரை செய்ய வேண்டும். அல்லது தன்னுடைய திரவியமனைத்தையும் வேதமறி ந்த பிராமணருக்கு அளிக்கவேண்டும். அல்லது ஜீவனத்திற்குப் போதுமான பொருளையும் வேண்டிய வஸ்துக்கள்நிறைந்த வீட்டை யும் தானஞ்செய்து பசுக்களையும் பிராமணர்களையும் போஷித்து வந்தால் பிரம்மஹத்தியென்பது நிவிருத்தியடையும். அல்லது [1]கிருச் சிரமென்னும்தவத்தை ஆறுவருஷகாலம் தொடர்ச்சியாகச் செய்து வந்தால் பிரம்மஹத்தியுள்ளவன் பரிசுத்தனாவான். அல்லது ஒரு மாஸத்தை நான்காகப்பகுத்து முன்சொல்லிய ஆகாரநியமப்படி மூன்றுவருஷகாலம் புஜித்துவந்தால் அப்பாவத்திலிருந்து விடுபடு வான். அல்லது ஒவ்வொருமாஸத்தில் ஒவ்வொருநியமப்படி நாலு மாஸத்தில் கீழ்ச்சொல்லிய கிருச்சிரவிதியை அனுஷ்டிப்பானாகில் ஒரேவருஷத்தில் பரிசுத்தனாவதில் ஸந்தேகமில்லை. அங்ஙனமே உறு தியான உண்ணாவிரதமிருப்பானாகில் பின்னுங் குறைந்தகாலத்திலும் சுத்திபெறலாம். அசுவமேதயாகமும் இப்பாவத்தைவிலக்கிச் சுத்தி யைக்கொடுப்பதில் ஸந்தேகமில்லை. அசுவமேதத்தைச்செய்து அவ பிருதஸ்நானஞ்செய்த மனிதர்கள்யாவரும் இவ்விதப்பாவங்களிலிரு ந்து விடுபட்டுப் பரிசுத்தர்களாகிறார்களென்பது வேதத்தின் முக்கிய மான கருத்து. பின்னும் பிராம்மணனிமித்தம் யுத்தத்தில் அடிபட் டாலும் லக்ஷம்பசுவையோ அல்லது கறக்கத்தக்க இருபத்தையாயி

[1] மூன்றுநாள் காலையில்மாத்திரமும் பின்மூன்றுநாள் மாலையில்மாத்திர மும் பின்மூன்றுநாள் தன் முயற்சியின்றிக் கிடைத்ததைமாத்திரமும் புஜித் துக்கொண்டு பின்மூன்றுநாள் உண்ணாவிரதமுள்ளவனாயி
பது கிருச்சிரவிதி.

ரம் காராம்பசுக்களையோ நல்லபாத்திரத்தில் தானஞ்செய்தாலும் பிரம்மஹத்திமுதலிய பாவங்களிலிருந்து நிவிருத்தியடைவான். உயிருக்குச் சந்தேகமுள்ளகாலத்தில் நன்றாகக்கறக்கும் ஆயிரம்பசுக்களைக் கன்றுடன்கூட யோக்கியர்களான ஏழைகளுக்குத் தானஞ்செய்தால் பாவங்கள்யாவும் விலகிப் பரிசுத்தனாவான். அரசனே! எவன் நியமமுள்ள பிராம்மணர்களுக்குக் கம்போஜதேசத்திலுண்டான நூறுகுதிரைகளைத் தானஞ்செய்தும் அல்லது ஒருபிராம்மணனுக்காவது அவன்வேண்டியதையெல்லாம் தானஞ்செய்வதுடன் அத்தானத்தைத் தான் சொல்லிக்கொள்ளாமலுமிருக்கிறானோ அவன் எல்லாப் பாவங்களிலுமிருந்து விடுபடுகிறான். ஒருமுறை ஸுரையைப்பானஞ் செய்தவன் அந்தஸுரையை நெருப்புப்போலக் காய்ச்சிப் பானஞ் செய்தோ அல்லது மலையிலிருந்து பாலைநிலத்தில்விழுந்தோ அல்லது அக்கினியில் விழுந்தோ அல்லது [1] மஹாபதயாத்திரைசெய்தோ தன்சரீரத்தைத் தியாகஞ்செய்தால் பாவங்களிலிருந்து விடுபட்டு இரண்டுஉலகிலும் சுத்திபெறுவான். பிருகஸ்பதிஸவமென்னும் யாகத்தைச்செய்தால் ஸுராபான தோஷம்விலகி ஸபையில்செல்ல யோக்கியதைபெறுவானென்று வேதத்திற் சொல்லியிருக்கிறது. அல்லது, அரசனே! மாத்ஸர்யமுதலிய தோஷமில்லாதவனாகித் திரும்பவும் பானத்தில் மனம்வையாமல் பூதானஞ்செய்தானாகில் ஸுராபான தோஷத்திலிருந்து சுத்திபெறுவான். குருதாரத்திற்சென்ற பாபி பழுக்கக்காய்ச்சிய இரும்புப்பாவையைக் கட்டிக்கொண்டோ அல்லது தனதுஆண்குறியை அறுத்துவிட்டு ஆகாயத்தைப்பார்த்து நடந்துகொண்டோ தன்சரீரத்தைவிடுவானாகில் அக்கொடிய பாவத்திலிருந்து மீளுவான். அவ்விதப் பாவமுள்ளஸ்திரீகள் ஓராண்டு ஆகாரமுதலியவற்றைவிலக்கி விரதமிருப்பார்களாகில் அப்பாவத்திலிருந்து விலகுவார்கள். எந்தமனிதன் ஒருமாஸம் நீருங்குடியாத கடுநியமமுள்ளவனோ அல்லது தன்திரவியமனைத்தையும் தானஞ்செய்கிறானோ அல்லது ஆசிரியனிமித்தம் யுத்தத்திலடிபட்டவனாகிறானோ அவன் பாவத்திலிருந்து விடுபடுவான். பொய்யாக ஒருவனையடுத்தவனும் குருவைத்தடுத்தவனும் அவர்கள் சொல்லும்இஷ்டத்தைச் செய்து கொடுத்தால் அப்பாவத்திலிருந்து விலகுவார். பிரம்மசரியவிரதத்தையிழந்தவன் பிரம்மஹத்திக்குரிய பிராயச்சித்தத்தைச் செய்து

---

1 கேதாரமென்னும் க்ஷேத்திரஞ்சென்று இமயமலையில் ஏறுவது மஹாபதயாத்திரை என்று சொல்லப்படும். அதற்கு மஹாப்ரஸ்தானம் என்றும் பெயர்.

கொள்ளவேண்டும். அல்லது ஆவின் தோலைத்தரித்துக்கொண்டு ஆறுமாஸம் கிருச்சிரமென்னும் தவத்தைச்செய்தால் அப்பாவம்நீங்கிச் சுத்தனுவான். பாதாரத்தைப் பின்சென்றவன் ஒருவருஷம் தவநியமத்துடனிருந்தும் மற்றும் பலநற்காரியங்களைச்செய்தும், பிறர் பொருளை அபகரித்தவன் அப்பொருளை அவரிடங்கொடுத்துவிட்டு ஒருவருஷம் தவநியமத்துடனிருந்தும் மற்றும் பலநல்லகாரியங்களைச் செய்தும் அப்பாவத்தை விலக்கிக்கொள்ளவேண்டும். பரிவித்தியும், பரிவேத்தாவும் தமையனுக்கு விவாஹமானபின் நியமத்துடன் பன்னிரண்டுநாளில் செய்யவேண்டிய கிருச்சிரமென்னும் தவத்தைச் செய்துகொள்ளவேண்டும். அவர்களில் தம்பி பிதிர்க்களைக் கரையேற்றவேண்டி வேறுபெண்ணை விவாகஞ்செய்துகொள்ளவேண்டும். முதலில் கொண்டபெண்ணுக்கு அத்தோஷத்தின் ஸம்பந்தமில்லையாகையால் அவள் அசுத்தமுள்ளவளல்லள். விபசாரக்குற்றமுள்ள ஸ்திரீகள் நான்குமாஸம் உபவாஸவிரதமிருந்து சுத்திபெறவேண்டுமென்று தர்மமறிந்தோர் அறிவிக்கிறார்கள். குற்றமுள்ளவளோவென்று சங்கையுள்ள ஸ்திரீகளுடன்சேருவது அறிந்தவனுக்குநியாயமன்று. அங்ஙனமுள்ள ஸ்திரீகள் பாத்திரம் சாம்பலால் சுத்தியாவதுபோல ரஜஸ்கொண்டுவிலகுவதால் சுத்தர்களாகிறார்கள். சூத்திரன் எச்சில்பட்டதும் பசுக்களால் மோக்கப்பட்டதும் வாயிலுள்ள எச்சில்பட்டதுமான வெண்கலப்பாத்திரத்தைக் கோவின் பால், தயிர், நெய், மூத்திரம், சாணம் இவ்வைந்தும் மண், ஜலம், சாம்பல், புளி, நெருப்பு இவ்வைந்தும் ஆகிய பத்துப்பொருள்களாலும் சுத்திசெய்யவேண்டும். இவ்விதமான சுத்திவிதிகளில் பிராம்மணனுக்கு முழுமையும் க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் இவர்களுக்கு முறையே நாலில் ஒவ்வொருபாகங் குறைந்ததாயும் தாரதம்மியத்துடன் விதித்திருக்கிறதெனத் தெரிந்துகொள்ளவேண்டும். பசுபக்ஷிகளைக் கொன்றாலும் வளரக்கூடிய பலமரங்களை வெட்டினாலும் அப்பாபத்தை வெளியிட்டுக் கொண்டு மூன்றுநாள் காற்றைப் புசித்தவனாக நியமத்துடனிருக்கவேண்டும். அரசனே! சேரத்தகாத ஸ்திரீகளைச் சேர்ந்ததாலுண்டாகும்பாவத்தை விலக்கவேண்டி ஆறுமாதம்ஈரவஸ்திரத்துடன்[1] திருநீற்றுமுட்டில்படுத்திருக்கவேண்டும். இவ்விதமே மற்ற அகாரியங்களெல்லாவற்றிற்கும் அவ்வவைகளின்

---

[1] 'பஸ்மசாயிநா' என்பதுமூலம். பஸ்மாவைச் சொன்னதனால் ருத்ரஜபமும் செய்யவேண்டுமென்பதும் அங்ஙனம் வ்ருத்தசாதாதபர் கூறியிருரென்பதும் பழையவுரை.

தாரதம்மியத்திற்குத் தக்கபடி வேதத்திற்சொல்லிய விதிபோலப் பரிசுத்தமான தேசத்தில் ஹிம்ஸை காமம் குரோதமுதலிய தோஷங்களில்லாமல் குறைந்த ஆஹாரமுள்ளவனுக மௌனத்தோடு காயத்திரியென்னுமந்திரத்தை ஜபித்துக்கொண்டிருக்கவேண்டும். இவ்வித நியமத்தோடிருக்குங்காலத்தில் தினந்தோறும் பகலில்மூன்றுமுறையும் இரவில் மூன்றுமுறையும் வஸ்திரத்தோடுஸ்நானஞ்செய்து ஸ்திரீகளும் சூத்திரர்களும் பதிதர்களுமாகிய இவர்களுடன்பேசாமலும் மறைவில்லாத இடத்தில் பகல்முழுவதும் உறங்காமலும் அவ்விடத்திலேயே ராத்திரியில் தூங்குகிறவனுயுமிருக்கவேண்டும். இவ்வித விரதத்தையனுஷ்டிப்பவன் அறியாமையால்செய்த பாவங்களைப் போக்கிப் பரிசுத்தியடைகிறுன். மனிதன் பஞ்சபூதங்களைச்சாக்ஷியாகக்கொண்டு தான்செய்தபுண்ணியபாவங்களின் பயனை இச்சரீரத்தை விட்டபின் அடைகிறுன். கர்மத்தைச்செய்யும் மனிதன் தான்செய்த புண்ணியபாவங்களில் எஃது அதிகமோ அதன்பயனை முந்தி அடைகிறுன். குறைந்தது பயனைக்கொடுக்க ஸமயத்தை எதிர்பார்த்திருக்கும். ஆகையால் மனிதன் அகாரியத்தைச் செய்திருந்தாலும் புண்ணியத்தை அதிகப்படுத்தவேண்டித் தானத்தாலும், தவத்தாலும், யாகத்தாலும் சுபத்தை விருத்திபண்ணிக்கொள்ளவேண்டும். பாபகர்மங்களில் பயந்து அக்காரணத்திற்காவது எப்பொழுதும் தனங்களைத் தானஞ்செய்யவும் மற்றச் சுபகர்மங்களைச்செய்யவும் வேண்டும். அவ்விதஞ்செய்தவன் அப்பாபத்திலிருந்து விடுபடுகிறுன். பாபத்திற்குத் தக்கபடி செய்யவேண்டியதாயுபதேசித்த பொதுவான இந்தப் பிராயச்சித்தம் மஹாபாதகங்களென்னும் பெரும்பாபங்களைத் தவிர மற்றவைகளுக்குத்தான் உபதேசிக்கப்படுகிறது. இப்பிராயச்சித்த விதியானது புஜிக்கத்தக்கது புஜிக்கத்தகாதது பேசத்தக்கது பேசத்தகாதது அறிவு அறியாமை இவைகளின் விஷயமான சாஸ்திரத்தின் விதிகளுக்கு உள்ளாகும் மனிதனுக்குத்தான் உபதேசிக்கப்படுகிறது. பிராயச்சித்தமென்பது அறியாமையால் ஒருமுறை செய்த தோஷத்தை விலக்க விதிக்கப்படுவதேயன்றி அறிவுடன் வேண்டுமென்று செய்த பாபத்தை விலக்கத்தக்கதன்று. பாபம்யாவும் அறிவுடன்செய்தால் அதிகக் கொடுமையுள்ளதாகும். இவ்விதிகள் யாவும் ஆஸ்திகனும் சிரத்தையுள்ளவனுமாயிருப்பவனுல் விதிப்படி செய்யப்படுமாகில் பாவத்தை விலக்கத் திறமையுள்ளவையாகும். டம்பத்தையும் துவேஷத்தையும் மேற்கொண்டு அச்ரத்தையுள்ள நாஸ்திக மனிதனிடம் எக்காலத்திலும் இவை பயன்படா. தர்மஞ்செய்கிறவர்க

ஒருள் சிறந்த புருஷச்ரேஷ்டனே! இம்மையிலும் மறுமையிலும் ஹித த்தையே விரும்புகிறமனிதன் பெரியோர்களின் நடக்கையையும் தர் மத்தையும் தெய்வத்தையும் எப்பொழுதும் அனுஸரிக்கவேண்டும். அவ்விதம் அனுஸரிக்கும் மனிதன் அதையே முக்கியகாரணமாகக் கொண்டு பாவங்களை விலக்கிக்கொள்வான். ஓ! அரசனே! கொல் லப்பட்டமனிதர்களின் க்ஷேமத்தைக்கருதியோ அல்லது அரசர்க ளின் கடமையென்றெண்ணியோ அல்லது ஒருவகையாக அருள்பற் றியோ பிராயச்சித்தத்தைச் செய்துகொள். அங்ஙனமில்லாமல் அறி வீனர்களான மூடர்கள் சென்றவழியிற்சென்று மரணத்தால் முடி வடைய எப்போதும் நினைக்கவேண்டாம்" என்றுசொன்னர். இவ் விதம் வியாஸபகவானால் உபதேசிக்கப்பட்ட யுதிஷ்டிரர் ஒரு முகூர்த் தம் சிந்தையுள்ளவராயிருந்து பின் அம்முனிவரைநோக்கிச் சொல் லத்தொடங்கினர்.

---

## முப்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(வியாஸர், புஜிக்கத்தக்கவை தகாதவைகளையும், தானத்துக்குத்தக்கவர் தகாதவர்களையும் யுதிஷ்டிரருக்குச் சொன்னது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! எது புஜிக்கத்தக்கது? எது புஜிக்கத்தகாதது? கொடுக்கத்தக்க வஸ்துக்களில் சிறந்தது எது? எது பாத்திரம்? எது அபாத்திரம்? இவைகளை எனக்குச் சொல்ல வேண்டும்" என்றுகேட்க, வியாஸர் சொல்லத்தொடங்கினர்.

"இவ்விஷயத்திலும் மனுவுக்கும் ரிஷிகளுக்கும் நடந்த ஸம்பா ஷணமான இப்பழைய இதிகாஸத்தைச் சொல்லுகிறார்கள். முன் [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஸிருக்கும் இடம், புண்ணியநதிகள், பரிசுத்தமான பர்வதங்கள், ஸு வர்ணம் நெய் இவைகளைப்புஜிப்பது, [1]ரத்நஸ்நானம், தேவாலயத் துக்குப்போவது இவைகள். மனிதனைச் சீக்கிரத்தில் சுத்தனாகச்செய் வதில் ஸந்தேகமில்லை. அறிவுள்ளமனிதன் எந்தக்காலத்திலும் அக ங்காரம் அடையக்கூடாது. அகங்காரமடைந்தவன் ஆயுளுக்குக்குறை வின்றி இருக்கவேண்டுமானால் [2]தப்தக்ருச்சிரமென்னும் தவத்தைச் செய்யவேண்டும். கொடுக்கப்படாதவஸ்துவையெடாமையும் தான மும் அத்தியயனமும் தவமும் ஹிம்ஸையில்லாமையும் ஸத்தியமும் கோபமில்லாமையும் பொறுமையும் தர்மத்திற்குரிய லக்ஷணமாகும். தேசகாலங்களின் வேற்றுமையால் தர்மம் அதர்மமாயும் அதர்மம் தர்மமாயுமுடியும். திருட்டும் பொய்யும் ஹிம்ஸையும் [3]ஒருஸமயத்தில் தர்மமென்று உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. அறிந்தவர்களுக்கு இந்த இரண்டுவிதமான தர்மாதர்மங்களும் பிரவிருத்தியென்றும் நிவி ருத்தியென்றும் இரண்டுவிதங்களாகும். பிரவிருத்தி நிவிருத்தியா கிய இவ்விரண்டும் லௌகிகமென்றும் வைதிகமென்றும் இவ்விரண்டு வகைப்படும். இவைகளுள் வைதிகமான நிவிருத்தியின்பயன் அழி வில்லாதபதவியும் அவ்விதப் பிரவிருத்தியின்பயன் அழிவுள்ள பத வியுமாகும். லௌகிகமான அவ்விரண்டுக்கும் அது சுபமானால் சுப மானபயனும் அசுபமானால் அசுபமானபயனும் உண்டாகுமெனத் தெரிந்துகொள்ளவேண்டும். செய்யுமனிதன் நீசனாயிருந்தாலும் தெய் வம், சாஸ்திரத்திற்சொல்லிய கர்மம், ஜீவனம், [4]மரணம் இவைகளைக் காரணமாகக்கொண்டு செய்யப்படும் கர்மம் குற்றமில்லாததாகும். பர லோகத்திற் சந்தேகத்துடன் கர்மத்தைச் செய்வானாகிலும் அவ்வி தமே சத்துருவதமுதலிய பயனைக்கருதி, ச்யேனமுதலிய ஆபிசார கர்மத்தைச் செய்வானாகிலும் அவைகளுக்குரிய பிராயச்சித்தம் செய் துகொள்ளவேண்டும். கோபத்தாலும் அவிவேகத்தாலும் தன்மனத் தின் பிரியத்தையும்தள்ளி அப்பிரியத்தைச்செய்த மனிதன் செய்த காரியத்திற்குத்தக்கபடி ஆகமத்திற்சொல்லிய விதியைஅனுசரித்துச்

---

1 தீர்த்தத்தில் ரத்நத்தைப்போட்டுஸ்நானம்செய்வது.

2 முதல்மூன்றுநாள் ஆறுபலம்வெந்நீரும் பின்மூன்றுநாள் மூன்றுபலம் பாலுந்தானும் பின் மூன்றுநாள் ஒருபலம் சூடுள்ளநெய்யும் புஜித்துப் பின் மூன்றுநாள் ஒன்றும்உண்ணாமலிருப்பது தப்தக்ருச்சிரவிரதத்தின் லக்ஷணம்.

3 இங்கு, 'ஆத்யந்திக:' என்பதைவிட்டு, 'ஆவஸ்திக:' என்னும் பாடம் கொள்ளப்பட்டது.

4 'ப்ராணத:' என்பது வேறுபாடம்; அதற்கு, 'ஜீவனத்தைக்கொடுக் கிறவேலை' என்பது பொருள்.

சரீரம்வாடும்படி உபவாஸம், மந்திரஜபம், சுத்தமான அன்னங்களின் போஜனம் இவைகளைச் செய்து அப்பாவத்தை விலக்கிக்கொள்ள வேண்டும். அறியாமையால் தண்டஞ்செய்யுத் தவறின அரசன் ஒரு நாள் உபாவாஸமிருந்து தன்னைச் சுத்திசெய்துகொள்ளவேண்டும். அவ்வரசனுக்குத் தர்மாதர்மத்தை உபதேசிக்கும் ஆசிரியன் மூன்று நாள் உண்ணுவிரதமிருக்கவேண்டும். தனக்குநேர்ந்த ஆபத்தால் மன வருத்தங்கொண்டு ஆயுதமுதலிய உபாயங்களால் தன்மரணத்திற் கிடந்தேடிய மனிதனும் மூன்றுநாள் உபவாஸவிரதமிருக்கவேண்டும். சாச்வதமான ஜாதி, ஆச்ரமம், கிராமம், குலம் இவைகளின் தர்மமனைத்தையும்விட்ட மனிதர்களுக்கு வேறு எவ்விதத்தர்மமு மில்லை. தர்மத்திற் சந்தேகமுண்டானால் வேதசாஸ்திரங்களையறிந்த பத்துப்பண்டிதர்களையாவது அல்லது தர்மசாஸ்திரம் நன்றுயறிந்த மூன்றுபேர்களையாவது விசாரித்து அவர்கள்சொன்னபடி தீர்மானித்துக்கொள்ளவேண்டும். [1]எருது, சிற்றெறும்புகள், நறுவிலிக்காய், வத்ஸநாபமுதலியவிஷம், சல்கமென்னும் சிறகில்லாதமீன்கள், ஆமையல்லாத நாற்கால்பிராணிகள், ஜலத்திலுண்டான தவளைகள், பாஸமென்னும் பக்ஷிகள், ஹம்ஸங்கள், கருடன், சக்ரவாகம், மீன்கொத்திக்குருவிகள், கொக்கு, காகம், நீர்க்காகம், கழுகு, பருந்து, கோட்டான், மாம்ஸம்உண்ணும் கோரப்பல்லுள்ள நாலுகால் பிராணிகள், இரண்டுவரிசை பல்லுள்ளபிராணிகள், நாலு கோரப் பல்லுள்ளவைகள், செம்மறியாடுகள் இவைகள்யாவும் பிராம்மணர்களுக்குப் புஜிக்கத்தக்கவைகளல்ல. மான், கழுதை, பன்றி, [2]பசு, ஒட்டகம், மனிதஸ்திரீ இவர்களின்பாலைப் பிராம்மணன் குடிக்கலாகாது. பிராம்மணன், மரணம் நேர்ந்தவீட்டிலும் பிரஸவித்த வீட்டிலுமுள்ள அன்னத்தைப் பத்துநாள்வரையில் புஜித்தல்கூடாது. கன்றையீன்று பத்துநாளாகாத [3]பசுவின்பாலும் உண்ணத்தக்கதன்று. க்ஷத்ரியனுடைய அன்னம் உண்டவனுடையதேஜஸையும் சூத்திரனுடைய அன்னம் பிராம்மணமஹிமையையும் தட்டானுடைய அன்னமும் புத்ரனும் பதியுமில்லாத மடந்தையருடைய அன்னமும் ஆயுளையும் அபகரிக்கும். (நீதிதவறி) வட்டிக்கிட்டுப் பிழைப்பவன் அன்னம் மலத்துக்கு ஒப்பாகும். வேசையின் அன்னமும் தன்மனைவிக்குள்ள வேறுபதியைப்

1 'அநட்வாந்' என்றபாடம் கொள்ளப்பட்டது.

2 'ஸந்திநிகாநாம் கவாம்' என்பது வேறுபாடம். கன்றுபோட்டு நாளாகாதபசு என்பது அதன்பொருள்.

3 'பாயஸமுதலியவற்றில் கலக்கப்பட்டாலும்' என்று ஒருவிசேஷணமும் பழையவுரை சேர்க்கிறது.

பொறுப்பவன் அன்னமும் ஸ்திரீயால்ஜயிக்கப்பட்டவன் அன்னமும் சுக்லத்துக்கு ஒப்பாகும். யாகத்தில் [1]தீக்ஷைபெற்றவன், யாகத்தை விற்றவன், லோபி, தச்சன், சக்கிலியன், வண்ணான், வைத்தியன், ஊர்காப்பவன், வியபிசாரமுள்ள ஸ்திரீ, கூத்தாடி, ஸ்திரீயால் ஜீவிப்பவன், அபவாதமுள்ளவன், கூட்டம், கிராமம், தம்பிக்கு விவாஹமாயிருக்க விவாஹமாகாத தமையன், ஆண்தன்மையில்லாதவன், கட்டியம் கூறுபவன், சூதாடுவோன் ஆகிய இவர்களின்அன்னம் புஜிக்கத் தக்கதன்று. இடக்கையால் கொண்டுவரப்பட்டதும் காய்ந்ததும் பழையதும் கள்ஸம்பந்தப்பட்டதும் புசித்தமிச்சமும் தனக்கென்று தனியாய் விலக்கப்பட்டதுமான அன்னம் புஜிக்கத்தக்கதன்று. மா, கரும்பு, கீரை, பால், ஸத்துமா, வறுத்த அரிசி, [2]தயிர்சேர்ந்தஸத்துமா இவைகளால் செய்யப்பட்டவைகள் நாளானவைகளானால் புஜிக்கத் தக்கவைகளல்ல. தேவதைகளுக்கல்லாமல் செய்யப்பட்டபாயஸம், எள்ளன்னம், மாம்ஸம், அப்பம், வடை இவை கிருஹஸ்தர்களான பிராம்மணர்களால் புஜிக்கத்தக்கவைகளல்ல. கிருஹஸ்தனுயிருப்பவன் தேவர்கள், ரிஷிகள், பிதிருக்கள், வீட்டிலுள்ளதேவதைகள், மனிதர்கள் யாவரையும்பூஜைசெய்து அதற்குப்பின் தான் போஜனம் செய்யவேண்டும். வீடுவிட்டு வெளிச்சென்ற ஸந்யாஸிபோலக் கிருஹஸ்தன் தன்வீட்டிலிருக்கவேண்டும். இவ்விதமிருக்கும் கிருஹஸ்தன் இஷ்டமானதாரத்துடன் கூடியிருந்து தர்மத்தையடைவான்.

பெருமைக்காகவும் (கொடாவிட்டால் என்ன சொல்லுவாரோ வென்ற) பயத்தாலும் தானஞ்செய்வது கூடாது. தனக்கு உபகாரஞ்செய்த மனிதனுக்குத் தானஞ்செய்வது கூடாது. பாடகன், நர்த்தனஞ்செய்பவன், விதூஷகன், கொழுப்புள்ளவன், பைத்தியமுள்ளவன், திருடன், நிந்திப்பவன், ஊமை, குரூபி, அங்கங்குறைந்தவன், குள்ளன், துஷ்டன், கெட்டகுலத்திற்பிறந்தவன், வைதிகஸம்ஸ்காரமில்லாதவன் இவர்கள்பொருட்டுத் தானஞ்செய்வது கூடாது. வேதாத்தியயனமில்லாத பிராம்மணனிடம் தானஞ்செய்யக்கூடாது. சரியானபடி செய்யப்படாததானம் கொடுத்தவனுக்கும் அவ்விதம் வாங்குதல் வாங்குகிறவனுக்கும் தீங்கைவிளைவிக்கும். கருங்காலிக் கட்டையையாவது கல்லையாவது பிடித்துக்கொண்டு கடலைக்கடக்க முயன்றவன் எப்படி முழுகிவிடுவானோ அப்படியே கொடுத்தவனும் பெற்றவனும் மூழ்கிவிடுவார்கள். ஈரமானகட்டைகளால் நிறைக்கப்

1 தீக்ஷிதரின் அன்னம் வபாயாகம்செய்யும்வரையில் புஜிக்கத்தக்கதன்று.

2 மூலத்தில், ‘கரம்பம்’ என்றிருக்கிறது.

பட்ட அக்நி எங்ஙனம்பிரகாசியாதோ அங்ஙனமே வேதம்ஆசாரம் தவங்களில்லாத பிராம்மணன் தானம்வாங்குவதால் பிரகாசமற்றவனுவான். மண்டையோட்டிலுள்ள ஜலமும் நாயின்தோலாற்செய்த துருத்தியிலுள்ள பாலும் இடத்தின்குற்றத்தால் குற்றமுள்ளவையாவதுபோல ஆசாரமில்லாத மனிதனிடமுள்ள சாஸ்திரமும் கெட்டதாகும். வேதசாஸ்திரங்களையறியாதிருந்தாலும் அஸூயையைமுதலிய தோஷமில்லாதவனும் நற்குணமுள்ளவனுமாயிருப்பவனிடமும் விரதமில்லாத தாழ்ந்தமனிதர்களிடமும் கருணையால் செய்யுந்தானம் யுக்தமாகும். கெட்டகுணமுள்ள பிராம்மணன் ஏழையாயிருந்தாலும் நமக்கிஷ்டத்தைச் செய்கிறனென்றெண்ணியோ தர்மமென்றெண்ணியோ தயையுடன் அவன்பொருட்டுத் தானஞ்செய்வது கூடாது. வேதமறியாத பிராம்மணனிடங்கொடுத்த தானம் பயனற்றதாகும். அது, பெற்றவன் தோஷத்தால் பயனற்றதாகுமென்பதில் ஸந்தேஹம்வேண்டாம். மாத்தால்செய்தயானை தோலால்செய்தமிருகம் வேதமோதாத பிராம்மணன் இம்மூன்றும் முறையே யானை மிருகம் பிராம்மணன் என்ற பெயரைத்தவிர வேறு அவைகளின்பயனை அடையமாட்டா. ஸ்திரீகளிடத்தில் நபும்ஸகனும் பசுவினிடத்தில்பசுவும் பயனற்றனவாயிருப்பதுபோலவும் சிறகில்லாப்பக்ஷிபோலவும் வேதமில்லாதபிராம்மணன் பயனற்றவனுவான். மனிதர்களில்லாத கிராமமும் ஜலமற்ற கிணறும் அக்னியில்லாதவிடத்திற்செய்தஹோமமும் எவ்விதமோ அவ்விதமே மூர்க்கனிடம்செய்ததானமும் பயன்படாது. தேவர்கள் பிதிருக்கள் இவர்களுக்குரிய காரியங்களைக்கெடுப்பவனும் பலவிதத்தாலும் பிராணிகளுக்குக் கெடுதிசெய்பவனுமான மூர்க்கன் நல்ல லோகங்களை அடையமாட்டான். ஓ! யுதிஷ்டிரனே! உள்ளபடி இந்தத்தர்மம்எல்லாம் உனக்குச் சுருக்கமாயுபதேசிக்கபட்டது. பாரதச்ரேஷ்டனே! இது மிகவும் விரிவாய்க்கேட்கத்தக்கது" என்று சொன்னர்.

---

## முப்பத்தாறுவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



**(வியாஸரும் கிருஷ்ணபகவானும் கூறியபடி, யுதிஷ்டிரர் மனத்தில் சாந்தியடைந்து அஸ்தினபுரத்தில் பிரவேசித்தது.)**

யுதிஷ்டிரர், "பிராம்மணச்ரேஷ்டரும் மஹாமுனிவருமான பகவானே! புஜிக்கத்தக்கவை, புஜிக்கத்தகாதவை இவைகளுடன் தாம்

உபதேசித்த பிராயச்சித்தமுறை குதூஹலத்தையுண்டுபண்ணி என் மனத்தைக் களிப்பிப்பதுபோலாயிற்று. என்மனம் எப்பொழுதும் எவ்விதமாக ஆலோசித்தும் ராஜ்யமும் தர்மமும் ஒன்றோடொன்று சேராத விரோதமுள்ளனவென்று மயங்குகிறது. ஆகையால், பிராம் மணோத்தமரே! தர்மம் விட்டுவிலகாத வழியில் சென்று இந்தப் பூமியை எங்ஙனம் ஜயிப்பேனோ அங்ஙனம் அரசர்களுக்குரிய தர்மங் களையும் நான்குஜாதிகளுக்குள்ள தர்மங்களனைத்தையும் ஆபத்துச் சமயத்தில் செலுத்தவேண்டிய நீதிமுறையையும் விரிவாகக் கேட்க விரும்புகிறேன்" என்றுசொன்னார்.

ஜனமேஜயமஹாராஜரே! வேதமறிந்தவர்களிற் சிறந்தவரும் சென்றகாலத்திலுள்ள யாவற்றையுமறிந்தவருமான வியாஸர், நாரதரைப்பார்த்துத் தர்மபுத்ரருக்குச் சொல்லத்தொடங்கினார். "ஓ! மஹா பாஹுவான ராஜனே! தர்மம்யாவற்றையும் கேட்க விருப்பமிருந் தால் கௌரவர்களின் பெரியபாட்டனும் கிழவருமான பீஷ்மரிடம் போய்ச்சேர். எல்லாமறிந்தவரும் தர்மங்களையெல்லாம் அறிந்தவரும் கங்காதேவியின்புத்ரருமான அந்தப்பீஷ்மர் உனது மனத்திலுள்ள ஸூக்ஷ்மமான தர்மத்தைப்பற்றிய ஸந்தேஹங்களைத் தெளிவிப்பர். தேவலோகத்தின் நதியாகிய கங்காதேவியால் உண்டுபண்ணப்பட்ட அந்தப்பீஷ்மர் இந்திரன்முதலிய தேவர்கள்யாவரையும் நேரில்பார்த் திருக்கிறார். பிரபுவான அவர் பிருஹஸ்பதிமுதலான தேவரிஷிக ளைப் பலமுறை உபசரித்து ஸந்தோஷப்படுத்தி அவர்களிடமிருந்து ராஜநீதியை அப்யஸித்தார். குருச்ரேஷ்டரானஅவர் தேவாஸுரர்க ளின் ஆசாரியரும் பிராம்மணருமானசுக்ரர் அறிந்த நீதிசாஸ்திரத்தை உரையுடன் அறிந்திருக்கிறார். பெரியபுத்தியுள்ள பீஷ்மர் பிருகு குலத்திலுதித்த ச்யவனரிடமிருந்தும் வஸிஷ்டரிடமிருந்தும் விதிப் படி வேதங்களையெல்லாம் வியாகரணமுதலிய அங்கங்களுடன் அப்ய ஸித்தார். புருஷச்ரேஷ்டரான அவர் ஜ்வலிக்கின்ற தேஜஸுள்ளவ ரும் ஆத்மவித்தையின் உண்மைதெரிந்தவரும் பிரம்மாவின் முதல்புத் திரருமான ஸனத்குமாரரிடமிருந்து ஆத்மவித்தையையும் மார்க்கண் டேயரிடமிருந்து ஸந்யாஸதர்மம் எல்லாவற்றையும் பரசுராமரிட மிருந்தும் இந்திரனிடமிருந்தும் அஸ்த்ரவித்தைகளையும் நன்றாக அறிந்துகொண்டார். மனிதஜன்மமாயிருந்தும் அவருக்கு மரணம் அவரிஷ்டம்போலிருக்கிறது. புத்திரனில்லாதிருந்தும் அவருக்குப் புண்யலோகமுண்டென்பது மிகப்ரஸித்தம். பரிசுத்தர்களான பிரம் மரிஷிகள் அவருக்கு எப்போதும் ஸபையோராயிருந்தார்கள். அறிய

வேண்டிய விஷயங்களில் அவர் அறியாதது எதுவுமில்லை. தர்மங்களின் ஸூக்ஷ்மத்தையும் மற்றுமுள்ள தத்வத்தையும் அறிந்தஅந்தப் பீஷ்மர் உயிரைவிடுவதற்குமுன்னமே அவரிடம்சென்றாயானால் அவர் உனக்கு உபதேசஞ்செய்வார்" என்றுசொன்னார்.

இவ்விதம் சொல்லப்பட்டவரும் பெரியபுத்தியுள்ளவரும் விசாலமான அறிவுள்ளவருமான யுதிஷ்டிரர் பேசுகிறவர்களிற் சிறந்தவரும் ஸத்யவதிபுத்ரருமான வியாஸரைநோக்கி, "பூமியை நாசமாக்கினவனும் எல்லாமனிதர்கட்கும் குற்றத்தைச்செய்தவனுமான நான் மயிர்க்கூச்சமுண்டாக்கத்தக்கதும் பெரியதுமான ஞாதிகளின் வதத்தைச் செய்து, கபடமில்லாமல் யுத்தஞ்செய்யும் அந்தப்பீஷ்மரையும் கபடமாக அடிக்கும்படிசெய்துவிட்டு எப்படி அவரிடம்சென்று கேட்பது யோக்யமாகும்?" என்றுசொன்னார்.

பிறகு இப்படிச்சொன்ன ராஜச்ரேஷ்டரான யுதிஷ்டிரரை நோக்கி, நான்குஜாதிகளுக்கும் ஹிதத்தைச்செய்ய விரும்பிச் சிறந்த கைகளையுடைய யதூத்தமரான ஸ்ரீகிருஷ்ணபகவான் திரும்பவும் சொல்லத்தொடங்கினார். "ஓ! ராஜச்ரேஷ்டரே! சோகத்தைநினைத்து நீர் அதிக நிர்ப்பந்தஞ்செய்வது இப்பொழுது உசிதமன்று. நீர் வியாஸபகவான் சொன்னபடி செய்யவேண்டும். சிறந்தகைகளையுடையவரே! மிக்கபராக்ரமசாலிகளான தம்பிகளும் பிராம்மணர்களும் யுத்தத்தில்மிஞ்சின அரசர்களும் உம்மைக் கோடைக்காலத்தின் முடிவில் மேகத்தைப்போல யாசித்துக்கொண்டு உபாஸிக்கிறார்கள். மஹாராஜரே! நான்குஜாதியுமடங்கிய குருஜாங்கலமென்னும் ராஜ்யமுழுமையும் உம்மைவேண்டி வந்துநிற்கிறது. சத்ருக்களைத் தபிக்கச் செய்து கொல்லுகிறவரே! மஹாத்மாக்களான இந்தப்பிராம்மணர்களின் பிரியத்திற்காகவும் ஒப்பற்ற மஹிமையுள்ள குருவான இந்த வியாஸருடைய கட்டளைக்காகவும் நான்முதலிய ஸ்நேஹிதர்களுக்கும் திரௌபதிக்கும் பிரியத்தையும் உலகத்திற்கு க்ஷேமத்தையும் நீர் செய்யவேண்டும்" என்றுசொன்னார். தாமரைக்கண்ணரான அந்த யுதிஷ்டிரராஜர் இவ்விதம் ஸ்ரீகிருஷ்ணனால் சொல்லப்பட்டு எல்லா உலகங்களின் க்ஷேமநிமித்தமும் பெரியமனங்கொண்டு எழுந்திருந்தார். புருஷப்புலிபோன்ற ஜனமேஜயரே! பெருங்கீர்த்தியுள்ள அந்த யுதிஷ்டிரர் ஸ்ரீகிருஷ்ணபகவான், வியாஸர், தேவஸ்தானர், அர்ஜுனன் இவர்களாலும் மற்றுமுள்ளபலராலும் நல்வார்த்தைகளால் ஸமாதானஞ்செய்யப்பட்டு மனத்திலுள்ள துக்கத்தையும் தாபத்தையும் விலக்கிக்கொண்டார். வேதத்திலும் அதன்கருத்திலும் மற்றுமுள்ள

சாஸ்திரங்களிலும் ஸமர்த்தரும் பாண்டுபுத்திருமான யுதிஷ்டிரர் தம் மனத்தால் நிச்சயஞ்செய்துகொண்டு துக்கத்திலிருந்து சாந்தரானார். நக்ஷத்திரங்களாற் சூழப்பட்ட சந்திரன்போல அவர்களால் சூழப்பட்ட அந்தஅரசர் திருதராஷ்டிரனைமுன்னிட்டுத் தம்பட்டணம்செல்லப் புறப்பட்டார். புறப்படுங்காலத்தில் தருமந்தெரிந்த குந்தியின் குமாரரான யுதிஷ்டிரர் பலஆயிரம்தேவர்களையும் பிராம்மணர்களையும் பூஜித்தார். பிறகு நல்லலக்ஷணமுள்ள பதினாறு வெள்ளைக்குதிரைகட்டியதும் கம்பளமும் தோலும்விரித்ததும் புண்யமந்திரங்களால் ஜபிக்கப்பட்டதுமான புதிய வெள்ளைரதத்தில், தேவதாமயமானரதத்தில் ஸோமதேவன்போல, யுதிஷ்டிரர் வந்திகளால் கட்டியங்கூறப்பட்டவராக ஏறினார். குந்திபுத்ரனும் பயங்கரமான பராக்ரமமுள்ளவனுமான பீமன் குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்தான். அர்ஜுனன் காந்தியுள்ள வெள்ளைக்குடையைப் பிடித்தான். ராஜாவின்சிரசில் பிடிக்கப்பட்ட அந்த வெள்ளைக்குடையானது வெண்மையான மேகமுள்ள ஆகாசத்தில் நக்ஷத்திரங்களால்சூழப்பட்டசந்திரன்போல விளங்கிற்று. வீரர்களான நகுலஸஹதேவர்களிருவரும் சந்திரகிரணங்கள்போலப் பிரகாசிப்பனவும் அலங்கரிக்கப்பட்டனவும் அழகுள்ளனவுமான இருசாமரங்களை வீசினார்கள். அரசரே! ஸஹோதரர்களான அவர்களைவரும் அலங்கரிக்கப்பட்டு ஒருரதத்திற்சேர்ந்தது ஐந்துபூதங்களும் ஓரிடத்திற்சேர்ந்ததுபோலக் காணப்பட்டது. ராஜரே! திருதராஷ்டிரனின்புத்ரனான யுயுத்ஸுஎன்பவன் மனோவேகமுள்ள (நான்கு) குதிரைகட்டிய சிறந்த ரதத்தின்மேலிருந்துகொண்டு பாண்டவர்களில்மூத்தவரான தர்மபுத்திரரைப் பின்செல்லத்தொடங்கினான். ஸ்ரீகிருஷ்ணபகவானும் ஸாத்யகியுடன்கூட, சைப்யம் ஸுக்ரீவம் என்னும் குதிரைகள்கட்டிய சுத்தமான பொற்றேரிலேறிப் பாண்டவர்களுக்குப்பின் புறப்பட்டார். பாரதரே! தர்மபுத்திரருக்குப் பெரியதகப்பனை திருதராஷ்டிரன் காந்தாரியுடன்கூட [1]நரயானத்திலேறி முந்திப் புறப்பட்டான். குந்தி, திரௌபதி, ஸுபத்ரைமுதலிய கௌரவஸ்திரீகள் யாவரும் விதுரரை முன்னிட்டுக்கொண்டு பலவிதமானவாகனங்களோடு புறப்பட்டார்கள். உடனே [2]நன்றாயலங்கரிக்கப்பட்ட பலரதங்களும் யானைகளும் குதிரைகளும் பதாதிக்கூட்டங்களும் பின்தொடர்ந்து புறப்பட்டன. பிறகு [3]வைதாளிகர்களாலும் ஸூதர்களாலும் மாகதர்களாலும் நல்லவசு

[1] பல்லக்கு. [2] இங்குவேறுபாடம்கொள்ளப்பட்டது.

[3] ஆதிபர்வம், 678 - வது பக்கம் குறிப்பிற்காண்க.

னங்களால் துதிக்கப்படும் யுதிஷ்டிரராஜர் ஹஸ்தினபுரம்நோக்கிச் சென்றார். மிகவும் ஸந்தோஷம்பூரித்த பலஜனங்களால் நிறைந்ததும் கணக்கில்லாதகூட்டத்தால் மிகவும் நெருக்கமுள்ளதுமான யுதிஷ்டிரராஜாவின் அந்தப்பிரயாணமானது உலகில் ஒப்பற்றதாயிருந்தது. பட்டணத்திலிருக்கும்ஜனங்கள் குந்திபுத்ரரான அவரை எதிர்கொண்டழைக்கவேண்டிப் பட்டணத்தையும் ராஜவீதிகளையும் வேண்டியபடி பலவிதமாக அலங்கரித்தார்கள். துவஜங்களாலும் வெளுப்பான தோரணமாலைகளாலும் அகில்முதலிய வாஸனைத்தூபங்களாலும் ராஜவீதிமுதலிய இடங்கள்யாவும் நன்றாயலங்கரிக்கப்பட்டன. அவ்விதமே அரண்மனையைச்சுற்றிலும் உயர்ந்த பலவகைப் புஷ்பங்களாலும் வாஸனைப்பொடிகளாலும் அநேகமாலைகளாலும் நன்றாயலங்கரிக்கப்பட்டது. பட்டணத்துவாயில்களில் புதியனவும் உறுதியுள்ளனவும் வெளுப்புமான பூர்ணகலசங்களும் வெண்மையானபுஷ்பங்களும் ஆங்காங்கு ஸ்தாபிக்கப்பட்டன. ஸ்நேஹிதர்களுடன்கூடின யுதிஷ்டிரராஜர் சுபவசனங்களால் துதிக்கப்பட்டு அவ்விதம்அலங்கரிக்கப்பட்ட ஹஸ்தினபட்டணத்தில் பிரவேசித்தார்.

## முப்பத்தேழாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பாண்டவர்களை நகரத்துஜனங்கள் புகழ்ந்ததும், யுதிஷ்டிரர் ராஜஸபையில்பிரவேசித்ததும், யுதிஷ்டிரரைநிந்தித்தசார்வாகனென்னும் ராக்ஷஸன் பிராம்மணர்களுடையகோபத்தால் நாசமடைந்ததும்.)

பாண்டவர்களின் பிரவேசத்தைப் பார்க்க விருப்பமுள்ளவர்களான பட்டணத்துஜனங்கள் ஆயிரமாயிரங்கூட்டமாய் வரத்தொடங்கினார்கள். அரசரே! நாலுபக்கமும் அலங்கரிக்கப்பட்டு ஜனக்கூட்டம்பெருகின அந்தராஜவீதியானது சந்திரனுதிக்குங்காலத்தில்பெருகும் பெருங்கடல்போல விளங்கிற்று. பாரதரே! பார்க்கவந்த ஸ்த்ரீகளால்நிறைந்தனவும் இரத்தினமயமும் ராஜவீதிகளிலுள்ளனவும் பெரியனவுமான வீடுகள் பாரத்தால் அந்தச்சமயம் சலிப்பனபோலாயின. அந்தஸ்திரீகள் வெட்கத்துடன் யுதிஷ்டிரர் பீமன் அர்ஜுனன் நகுலன் ஸஹதேவன் இவர்களை மெதுவாய்க் கொண்டாடினார்கள். "ஓ! பாஞ்சாலி! மஹரிஷியை அடைந்து விளங்கும் கௌதமியைப்போலப் புருஷர்களில் மிகச்சிறந்த இப்பதிகளையடைந்துவிளங்கும் நீயே பாக்கியமுள்ளவள். கல்யாணி! உன்காரியங்கள் பழுதில்

லாதவை. உன்னுடையதவமே தவம்" என்று திரௌபதியை அந்த ஸ்த்ரீகள் மிகவும் கொண்டாடினார்கள். ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளும் பெண்களின் ஸ்துதிவசனங்களாலும் ஸந்தோஷத்தாலுண்டாகும் மற்றஜனங்களின் சப்தங்களாலும் அப்பட்டணமுழுமையும் அந்தச்சமயம் கோலாகலமாயிருந்தது. யுதிஷ்டிரர் யுக்தம்போல அவ்விதமுள்ள ராஜவீதியைக்கடந்து அலங்காரங்களால் விளங்கும் அரண்மனைக்கருகில் வந்துசேர்ந்தார். அந்தச்சமயம் பட்டணங்களிலிருந்தும் கிராமங்களிலிருந்தும் அங்குவந்து கூடிய ஜனங்கள் யாவரும், "சத்துருக்களைக்கொல்லத்தக்க ஓ! ராஜேந்திரரே! பாக்கியத்தால் சத்துருக்களை ஜயித்தீர். தர்மத்துடனும் பலத்துடனும் எங்கள் பாக்கியத்தால் திரும்பவும் இந்தராஜ்யத்தையடைந்தீர். ஓ! மஹாராஜரே! இங்கு இருந்துகொண்டு ஆயிரங்காலம் நீர் எங்களுக்கரசராய் இந்திரன் ஸுவர்க்கத்தைப் பரிபாலனம்செய்வதுபோலத் தர்மப்படி பிராணிகளைப் பரிபாலனம் செய்யவேண்டும்" என்று செவிகளுக்குச் சுபமானவசனங்களைச் சொன்னார்கள். இவ்விதம் அரண்மனைவாசலில் பிராம்மணர்களால் நாலுபக்கங்களிலும் சொல்லப்படும் ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொண்டு மங்களோபசாரங்களால் பூஜிக்கப்பட்ட யுதிஷ்டிரராஜர் தேவராஜாவின் அரண்மனைக்கொப்பான ராஜகிருஹத்தில் பிரவேசித்து ஜயசப்தங்களைக் கேட்டபின் ரதத்திலிருந்து இறங்கினார். லக்ஷ்மிவிலாஸமுள்ளவரும் சோபையுள்ளவரும் பெருங்கீர்த்தியுள்ளவருமான தர்மபுத்திரர் உள்ளே பிரவேசித்து அங்குள்ள தேவதாமூர்த்திகளினருகிற்சென்று அவைகள்யாவற்றையும் சந்தனம் புஷ்பம் ரத்னமுதலிய வஸ்துக்களால் பூஜித்தவுடன் திரும்பவும் வெளியில் வந்தார். அங்கு மங்களவஸ்துக்களைக் கையிற்கொண்டு தம்மைக்காணவேண்டி வந்துநிற்கும் பிராம்மணர்களைக் கண்டார். ஆசீர்வாதஞ்செய்ய விருப்பமுள்ள அந்தணச்ரேஷ்டர்களால் சூழப்பட்ட அந்தயுதிஷ்டிரர் நக்ஷத்திரக்கூட்டங்களால் சூழப்பட்ட சந்திரன்போல அப்பொழுது பரிசுத்தராய் விளங்கினார். ராஜச்ரேஷ்டரே! குந்தியின்குமாரரான அரசர் புஷ்பங்கள் மோதகங்கள் ரத்னங்கள் அதிகமானஸுவர்ணங்கள் பசுக்கள் வஸ்திரங்கள் இவைகளாலும் மற்றுமுள்ள பலவஸ்துக்களாலும் அந்தப்பிராம்மணர்களை விதிப்படி ஆராதித்தார். ஸேவகர்களைக்கொண்டு அவர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் விசாரிக்கவுஞ்செய்தார். பிறகு குருவான தௌம்யரையும் பெரியதந்தையான திருதராஷ்டிரனையும் முன்னிட்டுக்கொண்டு இந்திரன் ஸுதர்மையென்னும் ஸபையில் பிரவேசிப்பது

போல யுதிஷ்டிரர் ராஜஸபையில் பிரவேசித்தார். பாரதரே! உடனே இஷ்டர்களுக்கு ஸந்தோஷத்தை யுண்டுபண்ணுவதும் கேட்பதற்கு மிகவும் இனிமையானதும் புண்ணியமுமான புண்ணியாஹவாசன த்வனியானது தேவலோகத்தை வியாபிக்கத்தக்கதாக உண்ட

அரசரே! ஹம்ஸத்திற்கொப்பான த்வனியுள்ள, வேதமறிந்த பிராம் மணர்களின் வாக்குகளும் பூர்ணமானபொருளடங்கிய பதங்களுள் ளனவாய்க் கேட்கப்பட்டன. ராஜரே! பின்பு துந்துபிவாத்தி யத்தின் த்வனியும் அழகானசங்கத்வனியும் அங்குள்ள கட்டியங் கூறுவோர்களின் ஜயத்வனியும் உண்டாயின. அரசச்ரேஷ்டரே! அந்தப்பிராம்மணர்முதலிய ஜனங்களின் சப்தங்கள்யாவும் ஓய்ந்த வுடன் துர்யோதனனுக்குச் சகாவான சார்வாகனென்னும் ராக்ஷ ஸன் சிகையும் மூன்றுதண்டமும் [1]ஜபமாலையுமுள்ள ஸந்யாஸிப்பிராம் மணவேஷத்துடன் ஆசீர்வாதம்சொல்ல இச்சிப்பவர்களும் பெரிய தவமுள்ளவர்களுமான அங்குள்ள பல்லாயிரம் பிராம்மணர்களுடன் கூட்டத்திலிருந்துகொண்டு தைரியத்துடன் யுதிஷ்டிரராஜரைப்பார்த் துப் பயமில்லாமல் பேசத்தொடங்கினான். அந்தத்துஷ்டன் அங் குள்ள பிராம்மணர்கள் ஒருவரையுங்கேளாமல் மஹாத்மாக்களான பாண்டவர்களைப் பாபிகளெனச் சொல்லக்கருதி, "ஏ! குந்தியின் குமாரா! இங்குள்ள பிராம்மணர்கள்யாவரும் தங்கள் அபிப்பிராயத்தை என்முகமாக உனக்குச் சொல்லுகிறார்கள். ஞாதிகளைக்கொலைசெய்த கெட்டஅரசனான நீ நிந்திக்கத்தக்கவன். இதுநிற்க, இவ்விதம் ஞாதி களைநாசஞ்செய்த உனக்கு ராஜ்யம் எதற்காக? பெரியோர்களையும் கொலைசெய்த உ...டனு மரணமேநல்லது; ஜீவனம்நன்றன்று" என்று சொன்னான். ...துள்ள பிரன அந்தராக்ஷஸனுடைய இந்தவார்த்தையைக் கேட்ட ...லகிக்கதறி...ராம்மணர்கள்யாவரும் அவன்வாக்கியத்தால் பய ந்து ...ம அந்தயுதிஷ்டிரர்கள். அரசரே! பின்பு அங்குள்ளபிராம்மணர் க...ராய்ச் சிறிதுநே...ரும் மிகவும்லஜ்ஜையடைந்து வருத்தமுற்றவர் "ஓ! பெரியோ...ரம் பேசாமலிருந்தார்கள். உடனே யுதிஷ்டிரர், என்னை ...ன ...ராகளே! நீங்கள், மிகவும் நமஸ்கரித்து யாசிக்கும் பொருட... அனுக்ரஹிக்கவேண்டும். கிட்டினபந்துக்களின் துன்பம் நீங்கள் ...ல் ராஜ்யத்திற்குவந்த என்னைத் திக்காரஞ்செய்யாமலிருக்க தயை செய்யவேண்டும்" என்றுசொன்னார்.

எச... உடனே அந்தப்பிராம்மணர்கள் யாவரும், "ஓ! ராஜரே! இவன் ...களுடன்சேர்ந்த பிராம்மணனே அல்லன். இவன்எவனோ வேறே

[1] இங்கு, 'ஸாங்க்யஃ' என்பதைவிட்டு, 'ஸாக்ஷஃ' என்னும்பாடம் கொள் ளப்பட்டது.

ஒருவன்" என்று சொல்லிவிட்டு மிக்கதவங்களால் பரிசுத்திபெற்ற வர்களும் வேதமறிந்தவர்களுமான அம்மஹாத்மாக்கள் ஞானக்கண்ணால் அவனை இன்னுனென்று தெரிந்துகொண்டு, "ஓ! ராஜரே! இவன் துர்யோதனனுக்குத் தோழனென்று பிரஸித்தனான பிரம்ம ராக்ஷஸன். அந்தத்துரியோதனனுக்கு ஹிதத்தைச்செய்ய விரும்பி இவன் ஸந்யாஸிஉருவங்கொண்டு வந்து நிற்கிறான். இந்தவார்த்தையை நாங்கள் சொல்லவில்லை. ஓ! தர்மபுத்தியுள்ளவரே! நீர் இவ்விதப்பயத்தையடையவேண்டாம். தம்பிகளுடன்கூட உமக்கு க்ஷேமமுண்டாகவேண்டுகிறோம்" என்றுசொன்னார்கள். உடனே மிகவும் கோபங்கொண்ட பரிசுத்தர்களான அந்தப்பிராம்மணர்கள் யாவரும் பாபியான அந்தராக்ஷஸனை, 'ஹூம்' என்னும்சப்தங்களால் அதட்டியடித்தார்கள். அந்தப்பிராம்மணர்களுடைய தேஜஸால் கொளுத்தப்பட்டு அந்தராக்ஷஸன் இடிவிழுந்தெரிக்கப்பட்ட தளிருள்ளமரம் போலக் கீழேவிழுந்தான். பின்பு அந்தயுதிஷ்டிரராஜரை ஸந்தோஷப்படுத்தி அவரால்பூஜிக்கப்பட்ட அந்தப்பிராம்மணர்கள் வீடுசென்றார்கள். யுதிஷ்டிரரும் ஸ்நேகிதர்களுடன்கூடிச் சந்தோஷமடைந்தார்.

---

## முப்பத்தெட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(ஸ்ரீ கிருஷ்ணபகவான் யுதிஷ்டிரருக்குச் சார்வாகனுடைய வரலாறுகூறியது.)

பிறகு தம்பிகளுடன்சேர்ந்திருக்கும் யுதிஷ்டிரராஜனைநோக்கி, தேவகியின்புத்திரரும் எல்லாமறிந்தவருமான ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லத்தொடங்கினர். "ஐயா! எப்பொழுதும் எனக்கு இவ்வுலகில் பிராம்மணர்கள் பூஜிக்கத்தக்கவர்கள். இவர்கள் விசேஷமாக அனுக்ரஹசக்தியுள்ளவர்களும் வாக்கில் விஷமுள்ளவர்களுமான பூமியில்ஸஞ்சரிக்கும் தேவர்களாவார்கள். சிறந்தகைகளையுடைய ராஜரே! முன்காலத்தில் கிருதயுகத்தில் சார்வாகனென்னும் ராக்ஷஸன் பதரீக்ஷேத்திரத்தின்கண் பலவருஷங்கள் தவஞ்செய்துகொண்டிருந்தான். ராஜரே! பிறகு வேண்டியவரத்தைக்கேளென்று பிரம்மதேவரால் பலமுறைசொல்லப்பட்ட அந்தராக்ஷஸன் எந்தப்பிராணியிடமிருந்தும் தனக்குப் பயமுண்டாகாமலிருக்கவேண்டுமெனக் கேட்டுக்கொண்

டான். உலகங்களுக்குப்பதியான பிரம்மதேவரும் பிராம்மணர்களை யவமதியாதிருக்கும்வரை எல்லாப்பிராணிகளிடமிருந்தும் பயமில்லாமையென்னும் மிகவுத்தமமான இவ்வரத்தை அவனுக்குஅளித்தனர். அந்தப்பாபியான ராக்ஷஸன் வரம்பெற்றுப் பெரியவன்மையும் கொடுஞ்செய்கையும் ஒப்பற்ற பராக்ரமமுமுள்ளவனாய்த் தேவர்களைத் தபிக்கச்செய்யத் தொடங்கினான். பின்பு அவ்வரக்கன்பலத்தால் பீடிக்கப்பட்டதேவர்கள் ஒன்றுசேர்ந்து அவனைக் கொல்லவேண்டுமென்று பிரம்மதேவரிடம் அறிவித்துக்கொண்டார்கள். பாரதரே! உடனே பிரம்மதேவர், "தாமதமின்றி இவனுக்கு மிருத்யுவுண்டாக நான் கட்டளையிட்டிருக்கிறேன். மனிதர்களில் துரியோதனனென்னும் ஓர் அரசன் இவனுக்கு நண்பனாவான். அவனிடமுள்ள அன்புக்கடங்கி இவன் அந்தணர்களை அவமதிப்பான். அப்போது இவன் அவமதித்தகாரணத்தால் வாக்கில்பலமுள்ள பிராம்மணர்கள் மிக்க கோபங்கொண்டு பாபியானஇவனைக் கோபத்தீயாலெரித்து நாசஞ் செய்யப்போகிறார்கள்" என்று தேவர்களுக்குச்சொன்னார். ஓ! பரதச்ரேஷ்டரே! அந்தச்சார்வாகனென்னும் ராக்ஷஸன் இதோ பிராம்மணர்களின் தண்டத்தாலடிக்கப்பட்டுப் படுத்திருக்கிறான். அரசச்ரேஷ்டரே! சோகப்படவேண்டாம். ஓ! ராஜரே! க்ஷத்திரியர்களுக்குள்ளதர்மப்படி உம்மாலடிக்கப்பட்ட க்ஷத்திரியச்ரேஷ்டர்களும் வீரர்களுமான ஞாதிகள் மஹாத்மாக்களாய் ஸ்வர்க்கலோகமடைந்தார்கள். இதுவிஷயத்தில் உமக்கு வேறுவிதமானஎண்ணம் வேண்டாம். வேண்டியகாரியங்களைச்செய்யத் தொடங்கும்; சத்துருக்களை வெல்லும்; பிராணிகளைக் காப்பாற்றும்; பிராம்மணர்களைப் பூஜியும்" என்றுசொன்னார்.

---

## முப்பத்தொன்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரருக்கு ராஜ்யாபிஷேகம் நடந்தது.)

பிறகு குந்திபுத்ரரான யுதிஷ்டிரர் சோகத்தையும் தாபத்தையும் விட்டுச்சந்தோஷமடைந்து, உயர்ந்தபொற்பீடத்தில் கிழக்குமுகமாக உட்கார்ந்தார். அவருக்கெதிரில் அழகாகவிளங்கும் ஒருபொற்பீடத்தில் சத்துருக்களை யடக்குகிறவர்களான ஸ்ரீகிருஷ்ணபகவானும் ஸாத்யகியும் உட்கார்ந்தார்கள். யுதிஷ்டிரராஜரை நடுவில்வைத்துக்

கொண்டு பின்புறமாயுள்ள அழகான மணிப்பீடங்களில் மஹாத்மாக்களான அர்ஜுனனும் பீமனுமாகிய இருவர்களுமிருந்தார்கள். யானைத்தந்தத்தாற் செய்யப்பட்டுத் தங்கக்கட்டுக்களுடன் விளங்கும் அழகானகட்டிலில் நகுலஸஹதேவர்களும் குந்தியும் உட்கார்ந்தார்கள். (துர்யோதனனுக்கு ஆசிரியனான) ஸுதர்மாவும் விதுரரும் தௌம்யரும் கௌரவனான திருதராஷ்டிரனும் அக்கினிபோலப்பிரகாசிக்கும் ஆஸனங்களில் தனித்தனியே உட்கார்ந்தார்கள். திருதராஷ்டிரனிருக்கும் இடத்திற்கருகில் யுயுத்ஸுவும் கீர்த்தியுள்ளகாந்தாரியும் ஸஞ்சயனும் உட்கார்ந்தார்கள். அங்கு உட்கார்ந்ததர்மபுத்திரயுள்ள யுதிஷ்டிரரானவர் வெண்மையான புஷ்பங்கள், பல அடையாளமுள்ள தேவதாபீடங்கள், அக்ஷதைகள், பூமி, பொன், வெள்ளி, ரத்தினங்கள் இவைகளை ஸ்பர்சஞ்செய்தார். பிறகு பிரஜைகள்யாவரும் பல மங்களத்திரவியங்களையெடுத்துக்கொண்டு புரோஹிதரை முன்னிட்டு யுதிஷ்டிராஜரைக் கண்டார்கள். உடனே பூமி, தங்கம், பலரத்தினங்கள், தங்கம் வெள்ளி தாமிரம் மண் இவைகளால் செய்தபூர்ணகலசங்கள், புஷ்பங்கள், பொரிகள், தருப்பங்கள், பால், தயிர், நெய், தேன், வன்னி அரசு பலாசு இவைகளின்ஸமித்துக்கள், அத்திமரத்தால் செய்தஸ்ருவம், தங்கக்கட்டுள்ளசங்கம் இவைகளும் அபிஷேகத்திற்குவேண்டிய மற்றுமுள்ள ஸர்வஸம்பாரங்களாலும் நிறைந்த பாத்திரமும் சேகரிக்கப்பட்டன. பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவான் கட்டளைப்படி புரோஹிதரும் புத்திமானுமான தௌம்யர் வடகிழக்குப் பாகத்தில் சற்றுப்பள்ளமானவிடத்தில் லக்ஷணப்படி வேதியையமைத்துப் புலித்தோல்போடப்பட்டதும் உறுதியானகால்களால் நிலைபெற்றதும் அக்கினிக்குச்சரியான காந்தியுள்ளதுமான ஸர்வதோபத்திரமென்னும் வெண்மையான ஆஸனத்தில் மஹாத்துமாவான யுதிஷ்டிராஜரையும் துருபதன்புத்திரியான கிருஷ்ணையையும் உட்காரவைத்து விதிப்படி மந்திரங்களைச்சொல்லி அக்கினியில்ஹோமஞ்செய்தார். உடனே ஸ்ரீ கிருஷ்ணபகவான் எழுந்திருந்து பூர்ணமானசங்கத்தையெடுத்துக்கொண்டு குந்தியின்புத்திரரான யுதிஷ்டிரரைப் பூமிக்குப்பதியாகப் பட்டாபிஷேகம்செய்தார். அப்படியே கிருஷ்ணனால் அனுமதிகொடுக்கப்பெற்று ராஜரிஷியான திருதராஷ்டிரனும் பிரஜைகள் யாவரும்அபிஷேகம்செய்தார்கள். பாஞ்சஜன்யமென்னும் சங்கத்தையெடுத்து ஸ்ரீ கிருஷ்ணபகவான் அபிஷேகம்செய்தவுடன் தம்பிகளுடன்கூடிய யுதிஷ்டிராஜர் அமிருதத்திற்கொப்பான அழகிய [illegible]வரானார். உடனே பணவம், ஆநகம், துந்துபிமுதலிய

வாத்தியங்கள் வாசிக்கப்பட்டன. யுதிஷ்டிரராஜாவும் அங்குச்செய்த காரியங்கள்யாவற்றையும் தர்மப்படி அங்கீகரித்தார். விசேஷமான தக்ஷிணைகளைக்கொடுத்து விதிப்படி அவர்களைப்பூஜிக்கவுஞ்செய்தார். உடனே நன்றாக வேதாத்தியயனஞ்செய்தவர்களும் நல்ல ஆசாரமும் உறுதியுமுள்ளவர்களுமான பிராம்மணர்களை ஆயிரம் [1]நிஷ்கங்களால் ஸந்தோஷப்படுத்தி ஆசீர்வதிக்கும்படி செய்துகொண்டார். அரசரே! அந்தப்பிராம்மணர்கள் ஸந்தோஷமுற்று ஹம்ஸங்கள்போல அழகான த்வனியுள்ளவர்களாய் க்ஷேமத்தையும் ஜயத்தையும் சொல்லியபின் யுதிஷ்டிரரைநோக்கி, "ஓ! மஹாபாஹுவான யுதிஷ்டிரராஜரே! பாக்கியத்தால் ஜயமுள்ளவரானீர். பெரியதேஜஸுள்ள பாண்டவரே! உமது பராக்ரமத்தால் ஸ்வதர்மத்தை நீர் அடைந்தது பாக்கியமே. பலவீரர்களையொழித்த அப்பெரியசண்டையிலிருந்து சத்துருக்களைவென்று ஒருகுறைவுமின்றி க்ஷேமமாகவே அர்ஜுனன், பீமன், நகுலன், ஸஹதேவன் இவர்களுடன் நீர் விடுபட்டு ஸுகமாயிருப்பது பெரியபாக்கியம். ஓ! பாரதரே! சீக்கிரமாக மேற்செய்யவேண்டிய எல்லாக்காரியங்களையும் செய்யும்" என்று புகழ்ச்சியுடன் தெரிவித்துக்கொண்டார்கள். பிறகு ஸாதுக்களான பிராம்மணர்களால் ஸந்தோஷத்துடன் பூஜிக்கப்பட்ட யுதிஷ்டிரராஜர் இஷ்டர்களோடுகூடப் பெரியராஜ்யத்தைப் பெற்றிருந்தார்.

## நாற்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம் (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர் பிராம்மணர்முதலியோர்களுக்கு விடைகொடுத்ததும், பீமஸேனன்முதலியோர்களை அவர்களுக்குரியவேலைகளில் அமர்த்தியதும், திருதராஷ்டிரனைக் கௌரவித்துநடத்தும்படிநியமித்ததும்.)

தேசகாலங்களுக்கொத்ததான பிரஜைகளின் அவ்வார்த்தையைக்கேட்ட யுதிஷ்டிரராஜர் மறுமொழிசொல்லத் தொடங்கினார். "ஓ! பிராம்மணச்ரேஷ்டர்களே! நீங்கள் யாவர்களுஞ்சேர்ந்து உண்மையாகவோ உண்மையில்லாமலோ இவ்விதக்குணங்களைச் சொன்ன காரணத்தாலேயே பாண்டவர்கள் பாக்கியம்பெற்றவர்களென்பதிற் சந்தேகமில்லை. மாத்ஸர்யமின்றி எங்களை இவ்விதம் பெருமையானகுணமுள்ளவர்களாகச் சொல்லும் உங்களுக்கு எங்களிடத்தில்

[1] ஒருவகைத் தங்கநாணயம்.

நிச்சயமான அநுக்ரகமிருக்கிறதென்பதுஎன்னுடையஎண்ணம். எங்களுடையபெரியதந்தையானதிருதராஷ்டிரமஹாராஜர் எங்களுக்குப் பெரியதெய்வம். என்இஷ்டத்தைவிரும்பியயாவரும் அவருத்தரவின் படியும் அவரிஷ்டப்படியுமிருக்கவேண்டும். பெரியஞாதிவதத்தைச் செய்தும் இவருக்காகவே நான் ஜீவித்திருக்கிறேன். எப்பொழுதும் சோம்பலின்றி நான் இவருக்குப்பணிவிடைசெய்ய விரும்பிக்கொண்டிருக்கிறேன். ஸ்நேஹிதர்களானஉங்களுக்கு என்னிடம் அநுக்ரஹமிருப்பது உண்மையாயிருந்தால் திருதராஷ்டிரரிடத்தில் நீங்கள் முன்போலவேயிருக்கவேண்டும். உலகத்திற்கும் உங்களுக்கும் எங்களுக்கும் இவரே அரசர். பூமியும் பாண்டவர்கள்யாவரும் இவரனுக்ரஹத்திலிருக்கிறார்கள். என்னுடைய இந்தவசனத்தை எப்பொழுதும் நீங்கள் மனத்தில்வைத்துக்கொள்ளவேண்டும்" என்று சொல்லிக் குருநந்தனரான அரசர் பட்டணத்திலுங்கிராமத்திலுமிருந்துவந்த பிரஜைகள்யாவரையும் இஷ்டப்படி போகலாமென்று உத்தரவுகொடுத்தனுப்பிவிட்டு இளவரசுப்பட்டத்தில் கௌந்தேயனை பீமஸேனனை இருக்கும்படிசெய்தார்.

அவர், விசேஷமான ஞானஸம்பத்துள்ளவிதுரரை ஆலோசனையிலும் நிச்சயத்திலும் ஸந்தி விக்கிரஹமுதலிய ராஜாங்கஆலோசனைகளிலும் இருக்கும்படி ஸந்தோஷத்துடன்நியமித்தார். எல்லாக்குணங்களுமுள்ளவனும் பெரியவனுமானஸஞ்சயனை, செய்தது செய்யாதது வரவு செலவுகளை ஆலோசிக்குமதிகாரத்திலிருக்கச்செய்தார். அரசரானயுதிஷ்டிரர் ஸேனைகளின்கணக்கையும் அவைகளின்வேலைகளையும் அவைகளின் சாப்பாடுகூலிகளையும் கவனிக்கும்படி நகுலனுக்குக் கட்டளையிட்டார். அன்னிய ராஜாங்கத்தாலுண்டாகும் இடையூறுகளையும் அகங்காரமுள்ளவர்களையும் அடக்குமதிகாரத்தில் அர்ஜுனனை ஆஜ்ஞாபித்தார். பிராம்மணர்களையும் தேவர்களையும் ஆராதிப்பதிலும் மற்றவைதிககாரியங்களிலும் எப்பொழுதுமிருக்கும்படி புரோஹிதர்களிற்சிறந்த தௌமியருக்கு அநுமதிகொடுத்தார். ஸஹதேவனை எப்பொழுதும் தம்மருகிலிருக்கும்படி கட்டளையிட்டார். ஸஹதேவன் எவ்விதஸமயத்திலும் அரசனைக்காப்பாற்றச் சக்தியுள்ளவனுவான். இன்னும்எந்தஎந்தக்காரியங்களை எவரெவர்கள் செய்யவல்லமையுள்ளவர்களோ அவரவர்களை அந்தஅந்தக்காரியங்களிலிருக்கும்படி யுதிஷ்டிரர் ஸந்தோஷத்துடன் ஆஜ்ஞாபித்தார். தர்மபுத்தியுள்ளவரும் தர்மத்திலாசையுள்ளவரும் சத்துருக்களையடக்குகிறவருமான தர்மபுத்திரரானவர் விதுரர், ஸஞ்சயன், பெரியபுத்தி

யுள்ள யுயுத்ஸு இவர்களைக்குறித்து, "நமதுபிதாவான திருதராஷ்டிராஜாவின்காரியத்தை நீங்கள் கவனித்துக்கவனித்துச் செய்ய வேண்டும். என்காரியத்தைப்போல அவர்காரியம்யாவற்றையும் ஒரு குறையுமின்றி நீங்கள் தவறாமல்செய்யவேண்டும்; பட்டணங்களிலும் கிராமங்களிலுமுள்ளஜனங்களுக்குச் செய்யுங்காரியங்கள்யாவற்றையும் எப்பொழுதும் அவரிடம்தெரிவித்துவிட்டுத் தர்மமாகச் செய்யவேண்டும்" என்றுகட்டளையிட்டார்.

## நாற்பத்தோராவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



**(யுதிஷ்டிரர் யுத்தத்திலிறந்தவர்களுக்குச் சிராத்தங்களைச் செய்வித்து அவர்களைஉத்தேசித்து அனேகதர்மகாரியங்களைச் செய்ததும், அவர்களுடையபந்துக்களை ரக்ஷித்ததும்.)**

பின்பு உதாரபுத்தியுள்ளயுதிஷ்டிரர் யுத்தத்திலடிபட்டஞாதிகள்யாவருக்கும் தனித்தனியே சிராத்தங்களைச்செய்வித்தார். திருதராஷ்டிராஜன் தன்புத்திரர்களைக் குறித்து மரணத்துக்குப்பின் கொடுக்கத்தக்க அனேகவஸ்துக்களுடன்கூடின ருசியுள்ளஅன்னம், பசுக்கள், பொருள்கள், அதிகவிலையுள்ள ஆச்சர்யமானரத்தினங்கள் இவைகளைத் தானம்செய்தான். பெரியகீர்த்தியுள்ளயுதிஷ்டிராஜர் திரௌபதியுடன்கூட மஹாத்மாவான துரோணர், கர்ணன், திருஷ்டத்யும்னன், அபிமன்யு, ஹிடிம்பிகுமாரனும்ராக்ஷஸனுமானகடோத்கசன், உபகாரம்செய்தவிராடன்முதலிய ஸுஹ்ருத்துக்கள், துருபதன், உபபாண்டவர்கள் இவர்கள்யாவரையும் உத்தேசித்துத் தனித்தனியே பசுக்கள் தனங்கள் ரத்தினங்கள் வஸ்திரங்கள் இவைகளைப் பல்லாயிரம் பிராம்மணர்களுக்குக்கொடுத்துத் திருப்திசெய்வித்தார். பின்னும் யுத்தத்திலடிபட்ட பந்துக்களல்லாதஅரசர்களை உத்தேசித்து உத்தேசித்து அவர்களுக்கு வேண்டிய பரலோகக்கிரியைகளைச் செய்தார். பாண்டவரானதர்மபுத்திரர் இறந்துபோன எல்லா ஸ்நேஹிதர்களையும்குறித்து அவர்களின் பரலோகத்திற்குவேண்டிப் பலஸபைகளையும் பலகுளங்களையும் பலதண்ணீர்ப்பந்தல்களையும் செய்வித்தார். இவ்விதமாக அந்தஅரசர்கள்விஷயத்தில் தாம் கடனில்லாதவராயும் உலகத்திலும் குற்றமானசொல்லற்றவராயும் தர்மப்படி பிராணிகளைப் பாதுகாத்துக்கொண்டு அந்தஅரசர் கிருதகிருத்தியரானார். அவர் முன்போலவே திருதராஷ்டிரன் காந்தாரி விதுரர்முதலிய பூஜிக்

கத்தக்கவுளரவர்களையும் மற்றும்போஷிக்கத்தக்கவர்களாகிய யாவ ரையும் பூஜித்தார். கௌரவரும் தயையுள்ளவருமான அரசர், யுத்தத் தில் பதியையும்புத்திரனையுமிழந்த ஸ்த்ரீகள்யாவரையும் தயையுடன் பூஜித்துப் பாதுகாத்துவந்தார். கருணைமேற்கொண்ட யுதிஷ்டிர ராஜர் ஏழை குருடன்முதலிய கஷ்டப்படும்ஜனங்களை ஆடை ஆகாரம் வீடுமுதலியவைகளைக் கொடுத்து ரக்ஷித்துவந்தார். அந்தப்பிரபுவான யுதிஷ்டிரராஜர் பூமிமுழுமையும்ஜயித்துச் சத்துருக்களிடம் கடனில் லாமையையடைந்து விரோதியற்றவராயும் ஸுகியாயும் கிரீடித்துக் கொண்டிருந்தார்.

## நாற்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(தர்மபுத்திரர் கிருஷ்ணபகவானைச் சதநாமங்களால்துதித்தது.)

ராஜ்யத்தையடைந்து அபிஷேகஞ்செய்யப்பெற்ற புத்திமானான யுதிஷ்டிரர் பரிசுத்தராய்க் கைகூப்பிக்கொண்டு செந்தாமரைக்கண்ண ரான ஸ்ரீகிருஷ்ணபகவானைநோக்கிச் சொல்லத்தொடங்கினார். "யதுக் களில் புலிபோன்றகிருஷ்ணபகவானே! உம்முடைய அனுக்கிரகத் தாலும் நீதியாலும் புத்தியாலும் அதுபோன்ற பராக்கிரமத்தாலும் தகப்பன்பாட்டன்பரம்பரையாய்வந்த இந்தராஜ்யம் திரும்பவும்அடை யப்பட்டது. சத்துருக்களையடக்கும் தாமரைக்கண்ண! உமக்குப் பலமுறை நமஸ்காரம். பரிசுத்தர்களான பிராம்மணர்கள் உம்மை ஒருவரையே [1]புருஷரென்றும் பக்தர்களைப் பாதுகாப்பவரென்றும் சொல்லுகிறார்கள்; பலவிதப் பெயர்களால் உம்மைத் துதிக்கிறார்கள். விசுவகர்மாவே! விசுவாத்மாவே! ஓ! விசுவசம்பவ! விஷ்ணுவே! ஜிஷ்ணுவே! ஹரியே! கிருஷ்ண! வைகுண்ட! புருஷோத்தம! உமக்கு நமஸ்காரம். புராணரான நீர் அதிதியினிடம் ஏழுதரம்கர்ப்பத் திலிருந்தவர். நீர் ஒருவரே ப்ருச்னிகர்ப்பராயிருந்தவர். உம்மை த்ரியுகரென்றும் சொல்லுகிறார்கள். நீர் ஒருவரே சுசிச்ரவஸ், ஹ்ருஷீ கேசர், க்ருதார்ச்சிஸ், ஹம்ஸர், த்ரிசக்ஷுஸ், சம்பு, விபு, தாமோத ரர் என்றும்சொல்லப்படுகிறீர். நீரேவராஹர்; அக்நி; ப்ருஹத்பாநு; வ்ருஷபர்; தார்க்ஷ்யலக்ஷணர்; அநீகஸாஹர்; புருஷர்; சிபிவிஷ்டர்; உருக்ரமர்; வரிஷ்டர்; உக்ரஸேநாநீ; ஸத்யர்; வாஜஸநி; குஹர்; அச்

1 எல்லாப்பிராணிகளின் ஹ்ருதயத்திலுமிருப்பவர்.

சுதர்; சத்ருக்களை நழுவச்செய்பவர்; ஸம்ஸ்கிருதர்; விக்ருதி; விருஷர்; கிருஷ்ணதர்மர்; ஆதி; விருஷதர்ப்பர்; விருஷாகபி; ஸிந்து; விதூர்மி; த்ரிககுப்; த்ரிதாமா; த்ரிவ்ருத்; அச்சுதர்; ஸம்ராட்; விராட்; ஸ்வராட்; ஸ்வாராட்; பூதமயர்; பவர்; விபு; பூ; அதிபூ; கிருஷ்ணர்; கிருஷ்ணவர்த்மா. நீரே ஸ்விஷ்டகிருத்; பிஷஜாவர்த்தர்; கபிலர். வாமனரும் நீரே. யஜ்ஞர், த்ருவர், பதங்கர், ஜயத்ஸேனர் என்றும் நீர் சொல்லப்படுகிறீர். நீரே சிகண்டி; நஹுஷர்; பப்ரு; திவிஸ்பிருக்; புநர்வஸு; ஸுபப்ரு; ருக்மயஜ்ஞர்; ஸுஷேணர்; துந்துபி. நீர் கபஸ்திநேமி, ஸ்ரீபத்மர், புஷ்கரர், சுஷ்மதாரணர், ருபு, விபு, ஸர்வஸூக்ஷ்மர், தரித்ரீ என்றும் சொல்லப்படுகிறீர். அம்போநிதியும் நீரே. பிரம்மாவும் பவித்ரதாமாவும் தாமவித்தும் ஹிரண்யகர்ப்பரும் புருஷரும் ஸ்வதாவும் ஸ்வாஹாவும் கேசவரும் நீரே. கிருஷ்ண! நீரே இவ்வுலகத்திற்கு உத்பத்திகாரணரும் லயகாரணருமாயிருக்கிறீர். நீரே முதலில் இந்த உலகத்தைப்படைக்கிறீர். உலகங்களுக்கு உத்பத்திகாரணரே! இந்தஉலகமும் உமதுவசத்திலிருக்கிறது. சார்ங்கத்தையும் சக்ரத்தையும் கத்தியையும் கையில்தரித்தவரே! உமக்கு வந்தனம்" என்று இவ்விதம் ஸபையின்நடுவில் யுதிஷ்டிரராஜரால் துதிக்கப்பட்ட யாதவச்ரேஷ்டரும் கமலலோசனருமான கிருஷ்ணபகவான் ஸந்தோஷத்துடன் பாரதரும் பாண்டவர்களில் மூத்தவருமான தர்மபுத்திரரை நிறைந்தசுபவசனங்களால் ஸந்தோஷப்படுத்தினர். யுதிஷ்டிரராஜரால் சொல்லப்பட்ட ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய இந்த நூறுபெயர்களையும் படிப்பவரும் கேட்பவரும் பாபங்களனைத்தையும்விட்டு மோக்ஷமடைகிறார்கள்.

---

## நாற்பத்துமூன்றுவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(தர்மபுத்திரர் பீமன்முதலியோருக்குத் துரியோதனதியர் அரண்மனைகளைக்கொடுத்ததும் அவர்கள் ராத்திரி அவைகளில் தங்கி மறுகாலையில் தர்மபுத்திரரிடம் வந்ததும்.)

பிறகு அங்குவந்தமனிதர்கள்யாவரும் யுதிஷ்டிரரால் அனுமதிகொடுக்கப்பெற்றுத் தம்தம் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். செல்வனானயுதிஷ்டிரராஜர் கடுமையானபராக்கிரமமுள்ள பீமனையும் அர்ஜுனனையும் நகுலஸஹதேவர்களையும் நோக்கி நல்லவார்த்தைகளால்

ஸமாதானஞ்செய்து, "ஓ! பாதச்ரேஷ்டர்களே! பெரிய யுத்தத்தில் சத்துருக்களின் பலஆயுதங்களால் உங்கள்தேகம்அடிபட்டிருக்கிறது. சோகத்தாலும் தாபத்தாலும் மிகவும் துன்பமடைந்திருக்கிறீர்கள். என்னிமித்தமாக மிகத்தாழ்ந்தமனிதர்களுக்கொப்பாகக் காடுசென்று கஷ்டமானஸ்திதி உங்களாலனுபவிக்கப்பட்டதன்றோ? ஆகையால், உங்களிஷ்டப்படி ஸுகமாக இந்தஜயத்தின்பயனை அனுபவியுங்கள். சிரமபரிகாரஞ்செய்துகொண்டு விசுவாசத்தை அடைந்த உங்களுடன் திரும்பவும் நாளைக்குச் சேருகிறேன்" என்று சொன்னார்.

உடனே இந்திரன் தன் அரண்மனையையடைந்ததுபோல, கை வன்மையுள்ள விருகோதரன் திருதராஷ்டிரனால் சம்மதிக்கப்பட்டுத் தமையனால்கொடுக்கப்பட்டதும் தாதிகளாலும் வேலைக்காரர்களாலும் சூழப்பட்டதும் பலரத்னங்கள்நிறைந்ததும் பலஉப்பரிகைகளால் விளங்குவதுமான துர்யோதனனுடைய அரண்மனையையடைந்தான். அவ்விதமே தர்மபுத்திரருடைய உத்தரவுப்படி பலமாடிகளுள்ளதும் தங்கத்தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டதும் பலதாதிகளும் வேலைக்காரர்களும்நிறைந்ததும் அளவற்றதனதான்யங்களுள்ளதுமான துச்சாஸனன் அரண்மனையைப் பெரியகைகளையுடைய அர்ஜுனன் அடைந்தான். ஜனமேஜயராஜாவே! துச்சாஸனன் அரண்மனைக்கு மேலானதும் குபேரன் அரண்மனைபோல விளங்குவதும் தங்கத்தாலும் பலரத்னங்களாலும்அலங்கரிக்கப்பட்டதுமான துர்மர்ஷணனுடைய அரண்மனையை, பெருங்காட்டிலிருந்துகஷ்டப்பட்டவனும் வரங்கொடுக்கத் தக்கவனுமான நகுலனுக்கு ஸந்தோஷமாகக் கொடுத்தார். எப்பொழுதும் பிரியத்தைச்செய்யும்ஸஹதேவன்பொருட்டுத் தாமரைமலர்போன்றகண்ணுள்ள ஸ்திரீகளாலும் படுக்கைமுதலிய பலவஸ்துக்களாலும் நிறைந்ததும் பொன்னுபரணங்களாலலங்கரிக்கப்பட்டு விளங்குவதுமான துர்முகனுடைய அரண்மனையை ஸந்தோஷமாகக் கொடுத்தார். இந்தஸஹதேவனும் குபேரன் கைலாசத்தையடைந்ததுபோல அவ்வரண்மனையை அடைந்து ஸந்தோஷித்தான். ஜனமேஜயராஜாவே! யுயுத்ஸுவும் விதுரரும் ஸஞ்சயனும் ஸுதர்மாவும் தௌம்யரும் தங்கள் தங்கள் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். புலியானது மலைக்குகையில் பிரவேசிப்பதுபோலப் புருஷப்புலியானகிருஷ்ணபகவான் ஸாத்யகியுடன் அர்ஜுனனரண்மனையில் பிரவேசித்தார். அங்கு பலவிதமானபக்ஷயங்களாலும் அன்னங்களாலும் பானங்களாலும் திருப்தியடைந்த அவர்கள் யாவரும் மிகவும் இனிதாக அன்றிரவு வாஸஞ்செய்து ஸுகமாக எழுந்திருந்து யுதிஷ்டிரராஜரிடம் வந்துசேர்ந்தார்கள்" என்றார்.

---

## நாற்பத்துநான்காவது அத்தியாயம்.

## ராஜதர்மம் (தொடர்ச்சி.)



(தருமபுத்திரர் பிரஜைகளுக்கும் பந்துக்களுக்கும் திரவியமுதலியவை கொடுத்ததும், கிருஷ்ணனைக் குசலப்ரச்னம்செய்ததும், கிருஷ்ணன் நிஷ்டையிலிருந்ததும்.)

ஜனமேஜயர், "ஓ! வைசம்பாயனரிஷியே! மஹாபாஹுவான யுதிஷ்டிரராஜர் ராஜ்யத்தைபடைந்தபின் வேறென்னசெய்தார்? மூவுலகிற்கும்பெரியகுருவும் வீரருமான ஸ்ரீகிருஷ்ணபகவான் என்ன செய்தார்? இந்தவிஷயங்களை எனக்கு நீங்கள் விரிவாகச்சொல்ல வேண்டும்" என்றுகேட்டனர்.

வைசம்பாயனர், "ஓ! குற்றமற்றராஜேந்திரரே! வாஸுதேவனைமுன்னிட்டுப் பாண்டவர்கள்செய்தகாரியத்தை நடந்தபடி சொல்லுகிறேன்; கேளும். மஹாராஜரே! ராஜ்யத்தையடைந்த குந்திபுத்ரரான யுதிஷ்டிரராஜர் எல்லாச்சாதிமனிதர்களையும் தர்மமாயும் வணக்கமாயுமிருக்கும்படி உறுதிப்படுத்தினார். பாண்டவரான யுதிஷ்டிரர் ஒவ்வொருவருக்கும் ஆயிரம்ஸுவர்ணங்கொடுத்து மஹாத்மாக்களான ஆயிரம்ஸ்நாதகப்பிராம்மணர்களைத் திருப்திசெய்வித்தார். அவ்விதமே வேலைக்காரர்களும் ஆச்ரிதர்களும் உடனிருப்பவர்களும் அதிதிகளும் ஏழைகளும் குறிசொல்லுகிறவர்களுமாகிய யாவரையும் அவர்களாசைக்குத்தக்கபடி திருப்திசெய்வித்தார். மஹாராஜாவே! அவர் பதினாலாயிரம்பசுக்கள், தனம், பொன், வெள்ளி, பலவிதவஸ்திரங்கள் இவைகளைப் புரோஹிதரானதௌமியருக்குத் தானஞ்செய்தார். விரதானுஷ்டானமுள்ளராஜாவான அந்தத்தர்மபுத்திரர், கிருபர் விதுரர்முதலியவர்களைப் பிதாவைப்போலப் பூஜித்து ஸந்தோஷிப்பித்தார். கொடுப்பவர்களிற் சிறந்ததர்மபுத்திரர் தம்மைச் சேர்ந்தஜனங்கள்யாவரையும் பலவிதமானபக்ஷியம் அன்னம் பானம் வஸ்திரம் படுக்கை ஆஸனம்இவைகளால் மிக்கசந்தோஷமடையச் செய்தார். ராஜச்ரேஷ்டரே! இவ்விதம்அடைந்தராஜ்யத்தில் சிலதிரவியங்களைத் தானஞ்செய்ததால் சாந்தியைச்செய்து பெரிய கீர்த்திபெற்ற அந்த ராஜா யுயுத்ஸுவுக்கும் திருதராஷ்டிரனுக்கும் தக்கமரியாதைசெய்தார். யுதிஷ்டிரரானவர் திருதராஷ்டிரர் காந்தாரி விதுரர்இவர்களிடம் இந்தராஜ்யத்தை ஒப்படைத்துவிட்டுத் தாம்சிந்தையின்றி ஸுகித்திருந்தார். பரதரேறே! அப்படி ராஜ்யமுழுமையும் ஸுகித்திருக்கும்படி

செய்த தர்மபுத்திரராஜர் அஞ்சலிசெய்துகொண்டு மஹாத்மாவான ஸ்ரீவாஸுதேவரிருக்குமிடஞ் சென்றார். அங்கு மேருமலையிலிருக்கும்கறுத்த நீருண்டமேகம்போல ரத்னங்களிழைத்த பெரியதங்கக் கட்டிலில்வீற்றிருக்கும்ஸ்ரீகிருஷ்ணபகவானைக் கண்டார். உக்ரஸூர்யமண்டலத்தால் உதயகிரி விளங்குவதுபோல மார்பிலுள்ளகௌஸ்துபமணியால்விளங்குகிறவரும் பீதாம்பரஉடையால் தங்கத்துடன் சேர்ந்தரத்னம்போலப் பிரகாசிப்பவரும் பலதிவ்யாபரணங்களணிந்த சரீரத்தால் மிகவும்ஜ்வலிப்பவருமான அந்த ஸ்ரீகிருஷ்ணபகவான் மூன்றுலகங்களிலும் உபமானமற்றவராயிருந்தார். மஹாத்மாவான ஸ்ரீபுருஷோத்தமரருகிற் சென்ற அந்த யுதிஷ்டிரர் புன்சிரிப்புடன் இனிய இவ்வசனத்தைச் சொல்லத்தொடங்கினர்.

"புத்தியுள்ளவர்களிற்சிறந்தவரே! இந்தராத்திரி உமக்கு ஸுகமாகவிடிந்ததா? ஓ! அச்சுதரே! உமது ஞானேந்திரியங்கள் யாவும் தெளிவடைந்தனவா? அறிவுள்ளவர்களிற்சிறந்தவரே! அவ்விதமே உம்மையடைந்த பிரகாசமுள்ள புத்தியானது தெளிவாயிருக்கிறதா? மூவுலகங்களிலும் பிரகாசிக்கும் பராக்ரமமுள்ள பகவானே! உம்முடைய அனுக்ரஹத்தால் நாங்கள் ராஜ்யத்தையடைந்தோம். பூமி எங்கள் வசமாயிற்று. தர்மம் தவறாதநாங்கள் ஜயத்தையும் உயர்ந்த கீர்த்தியையும் பெற்றோம்" என்றுசொன்னார். அப்படிச்சொன்ன சத்துருக்களையடக்கவல்லமையுள்ள தர்மபுத்திரரைப்பார்த்து யாதொன்றுஞ் சொல்லாமல் ஸ்ரீகிருஷ்ணபகவான் தியானநிஷ்டையிலிருந்தார்.

## நாற்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(தர்மபுத்திரர் கிருஷ்ணனை நிஷ்டையின்காரணங்கேட்டதும், கிருஷ்ணன் அதனைச்சொல்லித் தர்மபுத்திரரைப் பீஷ்மரிடஞ்சென்று ஸகல தர்மங்களையும் கேட்கும்படி சொல்லியதும், தர்மபுத்திரர் கிருஷ்ணதரிசனம் பீஷ்மருக்கு அவசியமென்றதும்.)

யுதிஷ்டிரர், "ஒப்பில்லாதபராக்ரமமுள்ளபகவானே! தாங்கள் தியானநிஷ்டையிலிருப்பதானது பெரியவிந்தையாயிருக்கிறது. தங்கள் இந்திரியங்களைந்தும் மனமும் புத்தியில்லயப்பட்டிருக்கின்றன. ஓ! புருஷச்ரேஷ்டரே! ஜாக்ரம் ஸ்வப்னம் ஸுஷுப்தியென்ற மூன்றுமல்லாத நான்காவதான தியானவழியையடைந்து உங்கள்ஜீவன் ஸ்தா

லம் ஸூக்ஷ்மம் காரணம்என்னும் மூன்றுசரீரங்களுக்குமப்புறமிருப் பதுபற்றி என்மனம் ஆச்சரியப்படுகிறது. சரீரத்திலிருந்துகொண்டு ஐந்துவிதவேலைகளைச்செய்யும் பிராணவாயு அடங்கியிருக்கிறது. உங் கள் இந்திரியங்கள் யாவும் மனத்தில் நிலைபெற்றிருக்கின்றன. வாக்கு முதலியஇந்திரியங்களும் மனமும் மகத்தத்துவமென்ற ஸமஷ்டிபுத்தி யில் லயப்பட்டிருக்கின்றன. சத்தமுதலியகுணங்களும் அவைகளை யறியுமிந்திரியங்களும் ஆன்மாவிலடங்கியிருக்கின்றன. யோகநிலை யடைந்தஉமதுபுத்தியும் மனமும் சரீரத்திலுள்ளரோமங்களும் அசை வற்றனவாயிருக்கின்றன. ஓ! மாதவ! கட்டையையும் சுவரையும் கல்லையும்போல யாதொருசேஷ்டையுமில்லாதவராயிருக்கிறீர். ஓ! பகவானும் தேவருமான அச்சுதரே! காற்றில்லாவிடத்திலுள்ள விள க்கு அசைவின்றிப் பிரகாசிப்பதுபோல ஸமாதியிலுறுதிபெற்றநீர் அசைவின்றிப் பிரகாசிக்கிறீர். இந்தவிஷயத்தைக்கேட்க நான் அரு கனுயிருந்தால் தங்களுக்கும் இதுவெளியிடத்தக்கதானால் தங்களை யடைந்துபிரார்த்தனைசெய்யும் என்ஸந்தேகம்நீங்க உபதேசிக்கவேண் டும். ஓ! புருஷோத்தமரே! நீர் இவ்வுலகைப்படைப்பவரும் அழிப் பவரும் நித்தியம்அநித்தியமென்னும் இருவிதப்பொருளும் ஆதி அந் தமில்லாதவரும் ஒருவருமாயிருக்கிறீர். ஓ! தர்மத்தைரக்ஷிப்பவர்களி லுத்தமரே! உம்மையடைந்து தலையால்வணங்கிப் பக்திபண்ணுமெ்மன க்கு இச்சமாதிநிலையின்உண்மையைச் சொல்லவேண்டும்” என்று சொன்னார். பிறகு உபேந்திரரான ஸ்ரீகிருஷ்ணபகவான் மனம் புத்தி இந்திரியங்களை அவைகளுக்குரியநிலையில்வைத்துக்கொண்டு புன்ன கையோடு சொல்லத்தொடங்கினார்.

“அவியுங்காலத்து அக்னிபோலச் சரதல்பத்தில் சயனித்துக் கொண்டிருக்கிற புருஷச்ரேஷ்டரான பீஷ்மர் என்னைத் தியானம் பண்ணுகிறார். ஆகையால், அவரிடம் என்மனம் சென்றது. எவ ருடைய பெரிய இடிமுழக்கம்போன்ற நாணொலியை இந்திரனும் ஸகி க்கமுடியாதவனோ அந்தப்பீஷ்மரிடம் என்மனம்சென்றது. அரசரே! முன்காலத்தில் அரசர்கூட்டம்அனைத்தையும் தம் பலத்தால் ஜயித்து மூன்றுகன்னிகைகளை மணம்புரிவித்தவரும் இருபத்து மூன்றுநாள் போர்செய்தும் பரசுராமரால் வெல்லத்தகாதவில்லாளியாயிருந்தவரும் கருப்பமுறைப்படி கங்காதேவியால் சுமக்கப்பட்டு ஜனித்தவரும் வஸி ஷ்டமகரிஷியின் சிஷ்யருமான அந்தப்பீஷ்மரிடம் என் மனம் சென் றது. ஆறங்கங்களுடன் நான்குவேதங்களையும் திவ்யாஸ்திரங்களை யும் தரித்துப் பெரியதேஜஸுள்ளவரும் அறிவுள்ளவரும் பரசுராமரு

க்குஅன்புள்ளசிஷ்யரும் எல்லாக்கல்விகட்கும் இருப்பிடமானவரும் இந்திரியக்கூட்டங்களை ஒன்றுசேர்த்து மனத்தைக்கட்டிப் புத்தியால் என்னைச் சரணமடைந்தவருமான அந்தப்பீஷ்மரிடம் என்மனம் சென்றது. பாதரேறே! இவ்வுலகத்தில் நடந்ததையும் நடக்கின்றதையும் நடப்பதையும் அறிந்தவரும் தர்மந்தெரிந்தவர்களில் உத்தமருமான அந்தப்பீஷ்மரிடம் என்மனம் சென்றது. பார்த்தரே! புருஷர்களில்சிறந்தமஹாத்மாவான அந்தப்பீஷ்மர் ஒழிவடைந்தால் பூமியானது சந்திரனில்லாத இரவுபோலாகும். ஆகையால், ஓ! யுதிஷ்டிரராஜரே! பயங்கரமான பராக்ரமமுள்ளவரும் கங்காபுத்திரருமான பீஷ்மரிடம்சென்று வணங்கிக் காலைப்பிடித்துக்கொண்டு தர்மார்த்தகாமமோக்ஷங்களையும் வைதிகதர்மத்தையும் நான்குஆச்ரமங்களையும் க்ஷத்திரியதர்மங்களெல்லாவற்றையும் மற்றும் உமதுள்ளத்திலிருப்பதையும் கேட்டுத்தெரிந்துகொள்ளும். கௌரவர்களில் முந்தினவரான அந்தப்பீஷ்மர் காலஞ்சென்றால் உலகில் கல்விகள் மிகக்குறைவடையும். ஆகையால், உம்மை அவரிடம்போகும்படி ஏவுகிறேன்" என்று சொன்னார். வாஸுதேவருடைய உண்மையான அந்த உத்தமவசனத்தைக்கேட்டுத் தர்மந்தெரிந்த அந்தயுதிஷ்டிரர் கண்ணீரால் தழுதழுத்தகுரலுடன் ஸ்ரீகிருஷ்ணபகவானிடம் சொல்லத்தொடங்கினர். "ஓ! மாதவரே! பீஷ்மரின் பெருமையைப்பற்றித் தாங்கள் சொன்னவை யாவும் உண்மையே. அதில் எனக்குச் சந்தேகமில்லை. அதிககாந்தியுள்ளமாதவரே! பீஷ்மரின்பெருமையும் அவர்பாக்கியமும் மஹாத்மாக்களான பிராம்மணர்கள்மூலமாக நான் கேட்டதுண்டு. சத்துருக்களைநிக்கிரகிக்கும் பகவானே! உலகங்களுக்குக் கர்த்தரான நீரும் இவ்விதம் சொல்லுகிறீர் யாதவர்களைச் சந்தோஷிக்கச்செய்கிறவரே! உம்முடையவாக்கியத்தை உண்மையோவென்று விசாரிக்கவும் வேண்டுமோ? மாதவரே! என்னை அனுக்கிரஹிக்கவேண்டுமென்று எண்ணம் உங்களுக்கிருக்குமானல் உங்களைமுன்னிட்டுக்கொண்டு நாங்கள் பீஷ்மரிடம்போகிறோம். ஸூர்யன் உத்தராமார்க்கத்தில்திரும்பினதும் அவர் லோகாந்தரமடையப்போகிறார். ஆகையால், ஓ! மஹாபாஹுவே! உங்களுடையதரிசனத்தை அவர் அடையத்தக்கவர். உலகத்திற்குமுதல்வரும் நித்தியம் அநித்தியமென்னும்இரண்டுஉருவமாய்விளங்குகிறவருமான உமதுதரிசனம் அவருக்குப் பெரியலாபமாகும். நீர் பிரம்மரூபியானநிதியன்றோ?" என்றுசொன்னர்.

இவ்விதம்சொன்ன தர்மராஜர்வசனத்தைக்கேட்ட மதுஸூதனர், பக்கத்திலிருக்கும் ஸாத்யகியைநோக்கி, 'எனதுரதம் ஸஜ்ஜ

மாகவேண்டும்' என்றுசொன்னார். உடனே ஸாத்யகி கிருஷ்ணனருகி லிருந்துசீக்கிரமாக வெளியில்வந்து, 'ஸ்ரீகிருஷ்ணனுடையரதம் ஸஜ்ஜமாகவேண்டும்' என்று தாருகனிடம்சொன்னான். ராஜஸிம்மமே! ஸாத்யகியின்வசனத்தைக் கேட்டதாருகன், பொன்னாலலங்கரிக்கப் பட்டஅங்கங்களையுடையதும் மாகதமணியாலும் சந்திரகாந்தம்ஸூர்ய காந்தங்களாலும் இழைக்கப்பட்டபலபாகங்களால் அலங்கரிக்கப்பெற் றதும் தங்கக்கட்டுள்ளஉருளையுள்ளதும் ஸூர்யகிரணம்போன்றகாந்தி யுள்ளதும் ஆச்சரியமானபலரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டமத்திய பாகமுள்ளதும் புதிதாயுதித்தஸூர்யமண்டலம்போலப் பிரகாசிப் பதும் அழகானகருடக்கொடிகட்டினதும் கொடிச்சீலையுள்ளதும் அதிவேகமாய்ச்செல்லக் கூடியதுமான ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய சிறந்த ரதமானது, ஸுவர்ணாபரணம்பூண்டனவும் மனோவேகமுள் ளனவுமான ஸுக்ரீவம் சைப்யம்முதலியஉத்தமமான குதிரைகளைப் பூட்டி ஸஜ்ஜமாயிருப்பதாக ஸ்ரீகிருஷ்ணபகவானிடம் வந்து கை கட்டிநின்று தெரிவித்தான்.

நாற்பத்தாறுவது அத்தியாயம்.

ராஜதர்மம் (தொடர்ச்சி.)



(பீஷ்மர் ஸ்ரீகிருஷ்ணனைப் பலவாறு துதித்ததும், கிருஷ்ணதர்ம புத்ராதியோர் பீஷ்மரிடம்வந்ததும், பீஷ்மர் கிருஷ்ணனைத் தரிசித்து முக்தியடைந்ததும்.)

ஜனமேஜயர், "பாரதர்களின்பிதாமகரானபீஷ்மர் சரதல்பத் தில்படுத்து எவ்விதமானஸமாதியடைந்தாரென்பதையும் எவ்வித மாகச் சரீரத்தைவிட்டாரென்பதையும் சொல்லவேண்டும்" என்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"ஓ! குருகுலப்புலியானராஜரே! மஹாத்மாவானபீஷ்மர் சரீ ரம்விட்டதைச் சுத்தராயும் கவனமுள்ளவராயும் கேளும்; பூபதியே! ஸூர்யன் உத்தராயணம்என்னும்வழியில்சென்றதும் மாசிமாஸம் சுக் லபக்ஷம் அஷ்டமிதிதியில் மிருகசீர்ஷநக்ஷத்திரத்தின் மத்தியபாகத் தை ஸூர்யன் அடைந்தபொழுது பீஷ்மர் ஸமாதியுள்ளவராய் மனத் தைஆத்மரூபத்திலேயேலயிக்கச்செய்தார். பலபாணங்களால்நிறைந்த சரீரமுள்ளபீஷ்மர் பரவியபலகிரணங்களுள்ள ஸூர்யமண்டலம் போலஅதிககாந்தியுள்ளவராய் விளங்கினார். வியாஸர், தேவசிரவஸ், தேவரிஷியானநாரதர், தேவஸ்தானர், வாத்ஸ்யர், ஸுமந்து, அச்ம

கர், ஜைமினி, மஹாத்மாவானபைலர், சாண்டில்யர், தேவலர், புத்திமானுனமைத்ரேயர், அஸிதர், வஸிஷ்டர், மஹாத்மாவானகௌசிகர், ஹாரீதர், லோமசர், அறிவுள்ளவரானஆத்ரேயர், பிருஹஸ்பதி, சுக்கிரர், மஹரிஷியானச்யவனர், ஸனத்குமாரர், கபிலர், வால்மீகி, தும்புரு, குரு, மௌத்கல்யர், பரசுராமர், பெரியமுனிவரான திருணபிந்து, பிப்பலாதர், வாயு, ஸம்வர்த்தர், புலகர், கசர், காச்யபர், புலஸ்தியர், கிரது, தக்ஷர், பராசரர், மரீசி, அங்கிரஸ், காச்யர், கௌதமர், காலவமுனிவர், தௌம்யர், விபாண்டர், மாண்டவ்யர், தௌம்ரர், கிருஷ்ணுநுபௌதிகர், பிராம்மணோத்தமரான உலூகர், மார்க்கண்டேயமாமுனிவர், பாஸ்கரி, பூர்ணர், கிருஷ்ணன் பெரியதர்மிஷ்டரானஸூதர் முதலியவர்களும் சிரத்தை, சமம், தமம் முதலியநற்குணங்களுள்ளவர்களும் மஹாத்மாக்களுமான பலரிஷிக் கூட்டங்களால் சூழப்பட்டபீஷ்மர் கிரகநக்ஷத்திரங்களால் சூழப் பட்டசந்திரன்போலப் பிரகாசித்தார். சாதல்பத்தையடைந்த புருஷச்ரேஷ்டரானபீஷ்மர் பரிசுத்தராகக் கைகூப்பிக்கொண்டு கர்மத்தாலும் வாக்காலும் மனத்தாலும் ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தியானஞ்செய்து உலகங்களுக்குப்பதியும் எங்கும்நிறைந்தவரும் ஜயசீலரும் யோகேசரும் மதுவைக்கொன்றவரும் பத்மநாபருமான ஸ்ரீகிருஷ்ணபகவானைக் கம்பீரமான ஆனந்தமுழக்கத்தோடு துதிக்கத்தொடங்கினார்.

வாக்கைஅறிந்தவர்களில் உத்தமரும் உத்தமமான தர்மத்தில் மனமுள்ளவரும் பிரபுவுமான பீஷ்மர் அஞ்சலிசெய்துகொண்டு ஆதியும் அந்தமுமற்றவரும் ஸனாதனரும் தமக்குத்தாமேகாரணருமான ஸ்ரீகிருஷ்ணபகவானைத் துதிக்கத்தொடங்கினார். "ஸ்ரீகிருஷ்ணனை ஆராதிக்கக்கருதி விரிவாகவும் சுருக்கமாகவும் எவ்விதமொழியைச் சொல்லவிரும்புகிறேனே அம்மொழியால் அந்தப்புருஷோத்தமர் ஸந்தோஷப்படவேண்டும். பரிசுத்தரும் பரிசுத்தமான ஸ்தானத்திலிருப்பவரும் உத்தமபதத்திலிருப்பவரும் எல்லாவற்றிற்கும் மேலானவரும் பிரம்மரூபியும் உலகங்களுக்குப்பதியுமான அந்தப்பரமாத்மாவை என்முழுஆத்மாவுடன் ஸமாதியாலொன்றுசேர்த்துச் சரணமடைகிறேன். தேவர்களும் ரிஷிகளும் ஆதியும்அந்தமுமில்லாதபரப்பிரம்மத்தை அறிந்தவர்களில்லை; உலகத்தைப்படைத்த பகவான்நாராயணர் ஒருவர்தாம்அறிந்திருக்கிறார். துன்பங்களைவிலக்கும் ஔஷதமானபரமாத்மாவைத் தேவர்களும் தேவரிஷிகளும் ஸித்தர்களும் மற்றுமுள்ளரிஷிக்கூட்டங்களும் மஹோரகர்களும் நாராயண

ரிடமிருந்துதெரிந்துகொண்டார்கள். தேவர்கள், அஸுரர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், பன்னகர்கள் ஆகியஇவர்கள்யாவரும், 'இவர்எவ்வுருவமுள்ளவர்? எக்காரணத்தாலிவருக்குப் பகவத்தன்மை?' என்று உண்மையாயறிந்துகொண்டவர்களில்லை. வலையிற்பறவைகள் அடங்கியிருப்பதுபோல இவ்வுலகங்களும் பிரஜைகளும் அவருள்ளடங்கி விளங்கும்காரணத்தால் இவ்வுலகங்களுக்கு அவர் [1] கோசமென்று சொல்லப்படுகிறார். [2]சேஷபூதங்களான இவ்வுலகங்கள்யாவும் நூலில்கோத்தமணிக்கூட்டங்கள்போலப் பிராணிகளுக்கு ஈசரான அவரிடம் நிலைபெற்றிருப்பதோடு அவரிடமே லயமடைகின்றன. இந்தச்சரீரத்திலுள்ள தத்துவங்களை விசாரித்தறிந்தவர்கள் அவரை இவ்வுலகைப்படைத்தவராயும் ஸ்தாவரஜங்கமங்களுக்குப் பதியாயும் உலகத்திற்குப் பிரத்யக்ஷமாயும் சொல்லுகிறார்கள். உலகத்திற்கு இருப்பிடமும் உலகத்தைநடைபெறச்செய்பவரும் நிலைபெற்றவருமாயிருக்கும் அவரிடம் உறுதியான நீண்டநூலில்மாலைபோலக் காரியமானஸூத்ராத்மாவாலும் காரணமான அந்தர்யாமியாலும் தரிக்கப்படும்உலகம் நிலைபெற்றிருக்கிறது. கிரீடந்தரித்த ஆயிரந்தலையுள்ளவரும் ஆயிரம் கை கால் கண்ணுள்ளவரும் ஆயிரமுகங்களால்விளங்குகிறவரும் உலகத்திற்குஉத்தமகதியும் தேவருமான ஸ்ரீநாராயணராக அவரையறிந்தோர் அறிவிக்கிறார்கள். அவர் அணுக்களில்மிகஅணுவாயும் பெரியவைகளில் அதிகப்பெரியவராயும் கனமுள்ளவைகளில் அதிக கனமுள்ளவராயும் உயர்ந்தவைகளில் மிக உயர்ந்தவராயுமிருக்கிறார். மந்திரங்களிலும் பிராம்மணங்களிலும் உபாஸனவிதிகளிலும் உபநிஷத்துக்களிலும் உண்மையைச்சொல்லும் ஸாமங்களிலும் அவர் ஸத்தியமான கர்மமுடையவராயும் எக்காலத்திலும் அழியாத தத்துவப்பொருளாயும் கூறப்படுகிறார். உள்ளத்திலிருந்து உபாஸகர்களை ரக்ஷிப்பவரான அந்தத்தேவர் பிரத்யும்னர், அனிருத்தர், ஸங்கர்ஷணர், வாஸுதேவர் என்கிற நான்கு உருவமுள்ளவராய்த் திவ்யங்களும் ரஹஸ்யங்களுமான நான்கு சிறந்தநாமங்களாலும் பூஜிக்கப்படுகிறார். அரணியில்ஜ்வலிக்கின்ற அக்னியைப்போலப் பூமியிலுள்ளவேதம், பிராம்மணர், யாகம் என்னும் பிரம்மத்தைக்காப்பாற்றவேண்டி, தேவகிதேவி வஸுதேவரிடமிருந்து அந்தத்தேவரைப் பெற்றாள். எல்லாமறிந்தவரும் எல்லாஉருவமுமுள்ளவரும் யாவற்றையும் படைத்தவருமான அந்தத்தேவருக்கு அர்ப்பணஞ்செய்து பயனைக்கருதாது செய்ததருமம் செய்தவனுள்ளத்தைப் பரி

---

[1] தனசாலை. [2] ஈச்வரருடைய சொத்துக்கள்.

சுத்திசெய்கிறது. காமங்களையெல்லாம்விட்டுக் கல்மஷமற்று மனத்தில்விளங்கும் அந்தப்பரமாத்மாவை வேற்றுமையின்றி யோகத்தால் தன்னுருவமாகக்கண்டவன். அழிவில்லாப்பதமடையத் தக்கவன். அறியத்தகாதவரும் அனுமானத்திற்கும் எட்டாதவரும் எங்குமிருப்பவரும் ஸூர்யனுக்கும் அக்னிக்கும் மேலான தேஜஸுள்ளவரும் இந்திரனுக்கும் வாயுவுக்கும்மேலான செய்கையுள்ளவரும் புத்திக்கும் இந்திரியங்களுக்கும்புலப்படாதஉருவமுடையவரும் உலகங்களுக்குப் பதியுமான அந்தநாராயணனைச் சரணமடைகிறேன். சென்றகல்பத்தில் புருஷனென்றும் யுகங்களின் துவக்கத்தில் பிரம்மாவென்றும் முடிவில் ஸங்கர்ஷணனென்றும் சொல்லப்பட்டவரும் உலகங்களுக்கு உபாஸிக்கத்தக்கவருமான அந்தத்தேவனை உபாஸிக்கிறேன். ஒருவராயும் பல உருவமுள்ளவராயும் அவதரிப்பவரும் [1]அதோக்ஷஜரும் இஷ்டங்கள் யாவற்றையும் கொடுப்பவருமான அந்தத்தேவனைக் கர்மத்தைச்செய்கிறவர்கள் வேறிடத்துப்பக்தியில்லாதவர்களாகி ஆராதிக்கிறார்கள். ஸத்யரும் ஓரெழுத்தான ஓங்காரரூபமுள்ளவரும் பிரம்மமும் காரியகாரணங்களைக்கடந்தவரும் அடிநடுமுடிவற்றவருமாயுள்ள அந்தஈசரைத் தேவர்களும் ரிஷிகளும் உண்மையாயறிந்தவர்களில்லை. தேவர்கள், அஸுரர்கள், கந்தர்வர்கள், ஸித்தர்கள், ரிஷிகள், உரகர்கள்யாவரும் பரிசுத்தியுள்ளவர்களாய் ஸுகத்திற்கு ஔஷதமான அந்தப்பகவானை எப்பொழுதும் ஆராதிக்கிறார்கள். ஆதியும் அந்தமும் இல்லாதவரும் தேவரும் எப்பொழுதுமிருப்பவரும் இந்திரியங்கள் மனம் இவைகளுக்குப் புலப்படாதவரும் தமக்குத் தாமேகாரணரும் பிரபுவும் நாராயணசப்தவாச்யருமான அந்த ஹரியை யாவரும் பூஜிக்கிறார்கள்.

## பீஷ்மஸ்தவராஜம்.

அஸுரர்களை நாசஞ்செய்யவேண்டி அதிதியிடம் பொன்னிறமான ஒருகர்ப்பமாயிருந்து பன்னிரண்டுவிதமாகவெளிவந்த ஸூர்யனாகவிளங்கும் அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். சுக்லபக்ஷத்தில் தேவர்களையும் கிருஷ்ணபக்ஷத்தில் பித்ருக்களையும் அமிர்தத்தால் திருப்திசெய்விப்பவரும் அந்தணர்களுக்கரசருமான சந்திரரூபமாய் விளங்கும் அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். அக்நிமுதலியதேவர்களால் தரிக்கப்படும் இவ்வுலகில் முதல்ஹவிஸையுண்ணும் ஹோதா என்ற உருவமுள்ள அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். அஜ்ஞானமென்னும்

[1] இந்திரியங்களாலறியமுடியாதவர்.

பெரிய இருளுக்கப்புறம் எங்கும்நிறைந்த உத்தமஒளியாய் விளங்கும் எந்தப்புருஷனைக்கண்டவன் மரணமற்றவனாகிறானோ அந்த அறியத் தக்க வஸ்துவாயிருப்பவருக்கு நமஸ்காரம். ஸாமகர்கள் பிருஹத் என்னும் ஸாமத்திலும் ரிக்வேதிகள் உக்தமென்னும்மந்திரத்திலும் யஜுர்வேதிகள் அக்நிசயனம் என்ற பெரியயாகத்திலும் உபாஸித்து வரும் பெரியஸ்வரூபமுள்ள வேதஉருவமான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். பதங்களைக் கால்முதலிய அங்கங்களாகவும் அந்தப்பதங்களின்சேர்க்கையை விரலின்கணுவாகவும் உயிர்மெய்எழுத்துக்களை அலங்காரமாகவும் கொண்ட அக்ஷரஉருவமாகவும் வாக்குஉருவமாகவும் பிராம்மணர்களால் அறியப்படும் அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். இந்த மூவுலகின் நன்மையையும்கருதி யஜ்ஞாங்கமான வராஹவேஷமெடுத்துப் பூமியைக்கொண்டுவந்த வீர்யமுள்ள அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். ரிக், யஜுஸ், ஸாமமென்னும் மூன்றுவேதங்களை ஆதாரமாக அடைந்ததும் (தானை, கரம்பம், பரிவாபம், புரோடாசம், பால்என்னும்) ஐந்து விதமான ஹவிஸுள்ளதும் காயத்திரிமுதலிய ஏழு சந்தஸுள்ளதுமாகச் செய்யப்படும் யாகரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். [1]நான்கு, [2]நான்கு, [3]இரண்டு, [4]ஐந்து, [5]இரண்டெழுத்துள்ள மந்திரங்களால் செய்யப்படும் ஹோமரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். காயத்ரிமுதலிய சந்தஸை அங்கங்களாகவும் யாகத்தைத் தலையாகவும் ரதந்தரம் பிருஹத் என்றஸாமங்களைச் சிறகாகவும் அடைந்த யஜுஸ்என்ற வேதபக்ஷிரூபியாய் விளங்கும் ஸ்தோத்ரரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். விச்வஸ்ருட் என்னும் பிரஜாபதிகளால் ஆயிரம்வருஷம் செய்யப்பட்ட ஸத்ரயாகத்தில் பொற்சிறகுள்ள கருடபக்ஷியாய் ஆவிர்ப்பவித்த ரிஷியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். தர்மமொன்றைக்கருதி முக்திக்குக்காரணமான வேதத்திலுள்ள உபாயத்தால் ஸாதுக்கள் இந்திரியங்களை அடக்கிச் செல்லத்தக்க யோகமுறைஎன்னும் கரையைக்கட்டிய ஸத்யரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். வேறுவேறான பயனைவிரும்பி வேறுவேறான ஆசாரங்களுடன் வெவ்வேறானகர்மங்களால் ஆராதிக்கப்படும்தர்மரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். பிராணிகளனைவரும் உண்டாகக்காரணமும் அவர்கள் தம்அங்கங்களில் ஆசைதளும்பப் பித்தர்களாகக் காரணமுமாயிருக்கும் அந்தக்காமரூபியான பகவானுக்கு நமஸ்காரம். இந்திரியங்களுக்குப் புலப்படும் சரீரத்திலிருந்தும் மஹரிஷி

[1] ஆச்ராவய, [2] அஸ்துச்ரௌஷட், [3] யஜ, [4] யேயஜாமஹே, [5] வஷட் என்னும் மந்திரங்கள்.

களும்தேடத்தக்க ஸூக்ஷ்மரூபியாய் இச்சரீரத்துக்குச் சாக்ஷியாய்ப் புத்தியிலிருந்துவிளங்கும்க்ஷேத்ரரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். 'ஐந்துஞானேந்திரியங்கள், ஐந்துகர்மேந்திரியங்கள், மனம், ஐந்துபூதங்கள், இப்பதினாறுகளாலும் மறைக்கப்பட்டும் தம்முருவம் மாறாமல் பதினேழாவது ஞானரூபியாய் விளங்குகிறார்' என்று ஸாங்க்யர்கள்சொல்லும் ஸாங்க்யரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். கருவிகளையடக்கிச் சுவாஸத்தைஜயித்து நித்திரையைவிட்டு ஸந்தோஷமாக யோகஞ்செய்பவர்களால் (ஞானச்) சுடராகக்காணப்படும் யோகரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். எல்லாவற்றையும்விட்ட சாந்தர்களானஸந்யாஸிகள் புண்யபாபம் இரண்டையுமொழித்து மறுபிறப்பென்னும் பயமின்றி எதையடைகிறார்களோ அந்தமோக்ஷரூபியான பகவானுக்கு நமஸ்காரம். அக்நி முகமும், ஸ்வர்க்கலோகம் தலையும், ஆகாயம் நாபியும், பூமி காலும், ஸூர்யன் கண்ணும், திக்குக்கள் செவியுமாக இவ்வுலகங்களைச் சரீரமாகக்கொண்ட அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். மாதம், ருது, அயனம், வருஷம்என்னும் பலஅம்சங்களால் யுகங்களில்சுற்றுகிறவரும் ஸ்ருஷ்டிப்பிரளயங்களைச் செய்கிறவருமான காலரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். ஆயிரம் யுகங்களின்முடிவில் அதிகமாகஜ்வலிக்கும் ஜ்வாலையுள்ள அக்நியாகி உலகங்களையெரிக்கும் கடோரரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். எல்லாப்பூதங்களையும் எரித்து உலகெல்லாம் ஒரேகடலாகச்செய்து தாம் ஒருகுழந்தைவடிவமாய் உறங்கும் மாயாரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். [1]நாலுகடலின் நடுவில் ஆயிரம்தலையுள்ள ஒப்பற்றசரீரமுள்ளபுருஷராய் யோகநித்திரை செய்யும் அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். உலகங்களுக்கிருப்பிடமான தாமரைப்பூவை நாபியிலுடைய பத்மரூபியான பிறப்பற்ற அந்தத் தாமரைக்கண்ணருக்கு நமஸ்காரம். கேசங்களில் மேகங்களும் அங்கஸந்திகளிலெல்லாம் ஆறுகளும் உதரத்தில் நான்குஸமுத்ரங்களுமுள்ள ஜலரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். உத்பத்தி, ஸ்திதி, பிரளயமுதலிய காரியங்களைஉண்டுபண்ணும் காரணரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். இரவில் தூங்குங்காலத்தில் தூங்காதவரும் பகலில் பற்றில்லாதகர்த்தாவும் இஷ்டஅநிஷ்டமிரண்டிற்கும்ஸாக்ஷியுமாயிருக்கும் ஆத்மரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். தன்பயனின்றித் தர்மம்நிலைபெறவேண்டி எல்லாக்காரியங்களி

[1] தூக்கம், முளை, மறைவு, வளர்ச்சிஎன்ற நான்குபடியுள்ள காமங்களுமற்ற யோகநித்திரையென்பது பழையஉரை.

னும் தடையில்லாதமுயற்சியென்ற ஈசத்தன்மையுள்ள கார்யரூபி யான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். முகத்தில் பிராம்மணஜாதி யும் புஜங்களில் க்ஷத்ரியஜாதியும் உதரம்துடை இவைகளில் வைசிய ஜாதியும் கால்களில் சூத்ரஜாதியுமுள்ள ஜாதிரூபியான அந்தப்பக வானுக்கு நமஸ்காரம். அன்னபானங்களைச் சாதனமாகக்கொண்டு ஸாரமான இந்திரியங்களை வளரச்செய்வதும் சரீரங்களைத்தரிப்பது மான பிராணரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். பிராணன் களைத்தரிக்கவேண்டிப் பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம், சோஷ்யம்என் னும் நான்கு விதமான உணவுகளைப்புஜித்துப் பக்குவமாகச்செய்யும் உதரத்திலுள்ள அக்நியின் பாகரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ் காரம். விஷயத்திற்பற்றுள்ள மனிதர்களுக்கு அவர்களுக்குரியவிரு ப்புவெறுப்பென்னும் குணத்துக்குத்தக்கபடி அவ்விஷயங்களைக்காக் கும்ரூபமுள்ள அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். அளவில்லாத உருவ முள்ளவரும் எங்குமிருக்கும் இந்திரியங்கள் புத்தி இவைகளையுடைய வரும் முடிவில்லாத அளவுள்ளவருமான திவ்யரூபியான அந்தப்பக வானுக்கு நமஸ்காரம். காலம், யஜ்ஞம், காரியம், காரணம் இவைக ளுக்கு மேலானவரும் காரணமற்றவரும் உலகத்திற்காதியுமான விசுவரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். இடியிலுள்ளதும் உதரத்திலுள்ளதும் [1]ஜலத்திலுள்ளதும் வெளியிலுள்ளதுமாக யா வற்றையும்பக்ஷிக்கத்தக்க அக்நிரூபமான அந்தப்பகவானுக்கு நமஸ் காரம். அணிமாமுதலிய ஐசுவரியமுள்ளவராய்ப் பாதாளத்திலிரு ந்து இப்பூமியைச்சுமக்கும் அனந்தனென்னும் ஆதிசேஷரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். திவ்யரூபம்பெற்ற அக்நி ஸூர்யன் சந்திரன் நக்ஷத்திரங்களென்னும் ஒளிகளுக்கும் பிரகாசத்தைக் கொ டுக்கும் தேஜோரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். சப்தம் முதலிய ஐந்து விஷயங்களுடன் விளங்கும் அறிவில் அவ்விஷயங் களை விலக்கிச் சுத்த அறிவான எந்த ஆத்மாவைச் சாஸ்த்ரஜ்ஞானத் தால் அறிகிறார்களோ அந்தஞானரூபியான பகவானுக்கு நமஸ்காரம். கர்மநிஷ்டையும் ஞானநிஷ்டையுமுள்ள உத்தமரிஷிகளும் தேவர்க ளும் ஸந்தேஹம்தெளியவிசாரித்து எவனதுஉண்மையை அறிகிறார்க ளோ அந்தரஹஸ்யரூபியான பகவானுக்கு நமஸ்காரம். ஜடை தடி யுள்ளவரும் தொங்கும் தொந்தியுள்ள சரீரமுள்ளவரும் கமண்டலத் தை அம்புக்கூடாகக்கொண்டவருமான அந்தப்பிரம்மரூபியான பகவா னுக்கு நமஸ்காரம். கையில்சூலமுள்ளவரும் மூன்றுகண்ணுள்ளவரும்

[1] வடவைத்தீ.

திருநீற்றுப்பூச்சுள்ள உயர்ந்தலிங்கரூபியும் தேவர்கட்கீசரும் மஹாத்மாவுமான அந்தருத்ரரூபியான பகவானுக்கு நமஸ்காரம். சந்திரகலையால்விளங்கும் முடியுள்ளவரும் அரவத்தைப் பூணூலாய்த்தரிப்பவரும் பிநாகமென்னும் வில்லையும் சூலத்தையும்கையிலெடுத்தவருமான உக்ரரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். வஸுதேவரால் தேவகியிடம் அவதரிப்பித்தவரும் கையில் சங்கமும் சக்ரமும் கதையுமுள்ளவருமான வாஸுதேவரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். தலைமாலையுடையவரும் புலித்தோல் தரிப்பவரும் திருநீறுபூசினசரீரமுள்ளவருமான ருத்ரரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். யாவற்றையும் ரக்ஷிக்கவேண்டிப் பிராணிகளைப் பலவிதப் பாசக்கட்டுகளால் மதிமயங்கச்செய்யும் மோகரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். எல்லாப் பிராணிகளினிருதயத்திலுமிருப்பதும் யாவற்றையும் விட்டுவிலகினதும் அழிவற்றதும் ஸூக்ஷ்மமுமான சைதன்யரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். குரோதம் துரோஹம் மோஹமுதலிய தோஷமில்லாததும் ஐந்துபூதங்கட்கும்ஆத்மாவும் அப்பூதங்களின் ஆதியும்முடிவுமாயிருக்கும் சாந்தரூபியுமான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். எல்லாம் எவரிடத்திலுள்ளனவோ எல்லாம் எவரிடமிருந்துண்டாகின்றனவோ எவர் எல்லாவிடத்திலுமிருந்துவிளங்குகின்றாரோ எல்லாம் எவர்உருவமோ எவர் எல்லாஉருவமுமோ அந்தஸர்வரூபியான பகவானுக்குநமஸ்காரம். ஆயிரம்படங்களுள்ள ஆதிசேஷனென்றதிவ்யநாகத்தாலலங்கரிக்கப்பட்டபாற்கடலென்னும் கட்டிலில் சயனித்திருக்கும் நித்ராரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். விசுவேதேவர்கள் மருத்துக்கள் ருத்திரர்கள் ஆதித்யர்கள் அசுவினிதேவர்கள் வஸுக்கள் ஸித்தர்கள் ஸாத்யர்கள் என்னும் தேவரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். பிரகிருதி, மஹத், அஹங்காரம், மனம், புத்தி, இந்திரியங்கள், ஐந்துபூதஸூக்ஷ்மங்கள், விசேஷங்கள் என்னும்தத்வரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். இறந்தகாலம் நிகழ்காலம் வருங்காலமென்னும் மூன்றுகாலத்திலுமிருப்பதும் பூதங்களின்ஆதியும்முடிவுமாயிருப்பதும் எல்லாப்பிராணிகளுக்கும்முந்தி இருந்ததுமான நிலைத்தவஸ்துரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். ஸூக்ஷ்மத்தையறியும் ஜனங்கள் ஸூக்ஷ்மத்திலும்ஸூக்ஷ்மமான எந்தப்ரம்மரூபத்தைத் தேடியறிகின்றார்களோ அந்தஸூக்ஷ்மரூபியான பகவானுக்கு நமஸ்காரம். பாதாளத்திற்போனவேதங்களை மிகவும்வேகமாயெடுத்துவந்து பிரம்மதேவரிடம்கொடுக்கத்தக்க மத்ஸ்யாவதாரம்செய்த அந்தப்பகவானுக்கு

நமஸ்காரம். அமுதங்கடையுங்காலத்தில் மந்தரமென்னும் மலையை வஹிக்கத்தக்க மிகக்கடினமானசரீரத்துடன் அமைந்த ஆமைஉருவம் கொண்ட அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். காடுமலைகளுடன் பூமியை ஒரேகோரப்பல்லிலெடுத்து வெளிவந்த அற்புதமான அந்தப் பன்றி உருவங்கொண்ட பகவானுக்கு நமஸ்காரம். உலகம்யாவும்நடுங்கத் தக்க நரசிங்கஉருவங்கொண்டு ஹிரண்யகசிபுவென்பவனைக் கொன்ற அந்தச்சிங்கரூபியான பகவானுக்கு நமஸ்காரம். பொன்னிறமான கண்ணும் சடையுமுள்ளதும் கோரப்பல்லும் நகங்களுமுள்ளதும் அஸுரராஜனான ஹிரண்யன்முடிவிற்குக்காரணமுமான அந்தக்கர்வரூபியான பகவானுக்கு நமஸ்காரம். தேவர்களும் கந்தர்வர்களும் தானவர்களும் தைத்யர்களும் உண்மையையறியமுடியாத ஸூக்ஷ்மரூபமுள்ள அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். மாயையால் வாமனரூபமெடுத்துப் பலிசக்ரவர்த்தியை அடக்கி மூவுலகங்களையும் காலடிகளால் கடந்த அந்தச்சூரரூபியான பகவானுக்கு நமஸ்காரம். ஆயுதமெடுப்பவர்களிற் சிறந்த ஜமதக்நிகுமாரரும் பூமியை க்ஷத்ரியரின்றிச்செய்தவருமான பரசுராமராயவதரித்த அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். தர்மத்தை மிகவும்விட்ட குற்றத்திற்காக யுத்தத்தில் ஒருவராக இருபத்தொரு முறை க்ஷத்ரியர்களைவதஞ்செய்த கோபரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். சரீரத்தில் தாம் [1]ஐந்துவிதமாய்ப் பிரிந்துகொண்டு பிராணிகளைச் சேஷ்டையுள்ளனவாகச்செய்யும் பிராணவாயுரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். தசரதகுமாரரான ராமராய் அவதரித்து, புலஸ்தியகுலத்திற்பிறந்த இராவணனை யுத்தத்திற்கொன்ற க்ஷத்ரியரூபியான அந்தப் பகவானுக்கு நமஸ்காரம். கலப்பையும் உலக்கையுந்தரித்துக் கறுத்த ஆடையுடுத்து ரோஹிணியின் புத்ரரான பலராமராயவதரித்த அந்தப்போகரூபியான பகவானுக்கு நமஸ்காரம். சார்ங்கமென்னும் வில்லும் சங்கமும் சக்கரமும் ஏந்தியவரும் பீதாம்பரந்தரித்தவரும் வனமாலையணிந்தவருமான ஸ்ரீகிருஷ்ணரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். கம்ஸனைக்கொல்லவேண்டிக் கோகுலத்தில் வஸுதேவரின்குமாரராயவதரித்துவிளையாடும் ஸ்ரீமானும் லீலாரூபியுமான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். யதுவம்சத்திலுதித்து வஸுதேவரின் புத்ரராயிருக்குந்தன்மையையடைந்து பூமியின்பாரத்தைக்குறைத்த ஸ்ரீகிருஷ்ணரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். யுத்தத்தில் அர்ஜுனனுக்கு ஸாரதியாகி மூவுலகங்களுக்கும் க்ஷேமத்திற்காகக் கீதையென்னும்

[1] பிராணன் அபானன் வியானன் உதானன் ஸமானன்.

அமிர்தத்தையளித்த அந்தப்பிரம்மரூபியானபகவானுக்கு நமஸ்காரம். திரும்பவும் உலகத்தைரக்ஷிக்கவேண்டி அஸுரர்களைத் தம்வசமாக்கிப் புத்தரூபம்பெற்ற அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். கலிவந்தபின் தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகக் குதிரைவாஹனமேறி மிலேச்சர்களைத்தொலைக்கக் கல்கிரூபமாய் அவதரிக்கப்போகிற அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். தாரவம்சத்திற்பிறந்த காலநேமியென்னும் அஸுரச்ரேஷ்டனைக்கொன்று இந்திரனுக்கு ராஜ்யத்தைக்கொடுத்த ஸாங்க்யரூபியான அந்தப்பகவானுக்கு நமஸ்காரம். நாசமுள்ள வஸ்துக்களுக்கு ஸாக்ஷியாய் ஸர்வப்பிராணிகளின் சரீரத்திலுமிருந்து நாசமற்றவராய் விளங்கும் ஸாக்ஷிரூபியான அந்தப் பகவானுக்கு நமஸ்காரம். ஓ! மஹாதேவ! உமக்கு நமஸ்காரம். அடியார்களிடத்தன்புள்ள பகவானே! உமக்கு நமஸ்காரம். பிராமணர்களுக்குஹிதஞ்செய்யும் ஓ! பரமேசுவர! எனக்கு அனுக்ரஹஞ்செய்யும். பிரபுவே! ஸ்தூலமும்ஸூக்ஷ்மமுமான இருவிதரூபமுள்ள உம்மால் உலகமனைத்தும் வியாபிக்கப்பட்டது. ஆயிரங்கண்ணுள்ளவரும் எங்குமிருக்கும்முகமுள்ளவரும் உலகங்கள்யாவுக்கும் ஈசரும் யாகங்களால் ஆராதிக்கப்பட்டவரும் நாசமற்றவரும் ஹிரண்யநாபருமான நாராயணனை நமஸ்கரிக்கின்றேன். தேவர்களுக்கீசரும் மங்களங்களுக்கிருப்பிடமுமாயிருக்கும் ஹரியை மனத்தில்பாவிக்கும் மனிதர்களுக்கு எப்பொழுதும் எக்காரியத்திலும் அமங்களம் வராது. பகவானானவிஷ்ணுவே மங்களம். மதுஸூதனனே மங்களம். தாமரைக்கண்ணனே மங்களம். கருடத்வஜனே மங்களம். உலகங்களைரக்ஷிக்கும் உமக்கு நமஸ்காரம். உலகரூபியானஉமக்கு நமஸ்காரம். உலகத்தைப் படைத்த உமக்கு நமஸ்காரம். ஐந்துபூதங்களுக்கும் அப்புறமிருக்கும் நித்யமுக்தரான உமக்கு நமஸ்காரம். மூன்றுஉலகங்களிலுமிருக்கும் உமக்கு நமஸ்காரம். இம்மூன்றுக்கும் அப்புறமிருக்கும் உமக்கு நமஸ்காரம். எல்லாத்திக்குக்களிலுமிருக்கும் உமக்கு நமஸ்காரம். உலகங்களைப்படைப்பவரும் அழிப்பவருமான விஷ்ணுபகவானே! உமக்கு நமஸ்காரம். ஒருவராலும்ஜயிக்கப்படாத நீரே உலகங்களுக்குக் கர்த்தர். நீரே [1]ஹ்ருஷீகேசர். நீரே ஸம்ஹாரஞ்செய்பவர். ஆகையால், மூன்றுகாலங்களிலும் திவ்யமாகவிளங்கும் உமதுபெருமைகளைப் பார்க்கிறேன். பழமையான உமது அந்த உருவத்தையும் உள்ளபடி பார்க்கிறேன். உமதுதலையால் தேவலோகமும் கால்களால் பூமிதேவியும் காலடியால் மூன்று உலகங்களும் வியாபிக்கப்பட்டன.

1 இந்திரியங்களுக்கு ஈசர்.

நீர் புராதனபுருஷராயிருக்கிறீர். திக்குக்கள் கைகளும் ஸூர்யன்கண்ணும் சுக்ரர்வீரியமுமாக உம்மிடம் நிலைபெற்றிருக்கின்றனர். ஒப்பற்றதேஜஸுள்ள வாயுரூபியான உம்மால் ஏழுவிதமானவாயுமார்க்கங்களும் வியாபிக்கப்பட்டன. பிரபுவே! வியக்தமானஸ்தாவரஜங்கமரூபமும் அவ்யக்தமானபிரம்மரூபமுமுள்ள உம்மால் உலகமனைத்தும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. காயாம்பூப்போன்ற காந்தியுள்ளவரும் பீதாம்பரமுடுத்தவரும் அழிவற்றவருமான ஸ்ரீகோவிந்தனைப்பணிந்தவர்களுக்கு எவ்விதப்பயமுமில்லை. ஸ்ரீகிருஷ்ணனைக்குறித்துச் செய்தநமஸ்காரம் ஒன்றானாலும் பத்துஅச்வமேத யாகங்களைச் செய்து அவபிருதஸ்நானஞ்செய்ததற்கொப்பாகும். பத்துஅசுவமேத யாகங்களைச் செய்தவனுக்கு மறுபிறப்புண்டு. பகவானைப்பணிந்தவனுக்கு மறுபிறப்பில்லை. கிருஷ்ணனைக்குறித்து விரதங்களைச்செய்பவர்களும் இரவும்பகலும்கிருஷ்ணமூர்த்தியைத்தியானஞ்செய்பவர்களும் அக்நியில்மந்திரத்தால்ஹோமஞ்செய்த நெய்போலக் கிருஷ்ணஸ்வரூபிகளாய் ஸ்ரீகிருஷ்ணனை அடைகிறார்கள். நரகமென்னும்பயத்திலிருந்து பாதுகாக்கக் கங்கணம்பூண்டவரும் ஸம்ஸாரமென்னும் ஆற்றின் சுழலைத்தாண்டுவிக்கும் [1] துடுப்புப்போன்றவருமான ஸ்ரீவிஷ்ணுவுக்கு நமஸ்காரம். வேதத்தையும் தர்மத்தையும் காப்பாற்றுந்தேவராயும் பசுக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் நன்மைபுரிபவராயும் உலகத்தை ரக்ஷிப்பவராயும் கோவிந்தராயுமுள்ள ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு அநேகநமஸ்காரம். ஹரியென்னும்இரண்டெழுத்து, பிராணவாயுக்களென்னுங்காட்டுவழிச் செல்லுகிறவனுக்குக் கையிலிருக்குங் கட்டுசோறும், ஸம்ஸாரத்தைஒழிக்கும் ஔஷதமுமாகும்; கஷ்டசோகங்களினின்றும் ரக்ஷிப்பதாகும். நாராயணரே பரப்பிரம்மம். நாராயணரே பெரியதவம். நாராயணரே உயர்ந்தஸத்யம். நாராயணரே பரத்திலும் பரம். ஸத்யமும் தர்மமும் எல்லாஉலகமும் விஷ்ணுரூபமாயிருப்பது உண்மையானால் என்பாவம் நசிக்கட்டும். அளவற்றதேஜஸுள்ள யஜ்ஞவராஹரான ஸ்ரீவிஷ்ணுபகவானை வணங்கும் அடியார்களுக்கும் நமஸ்காரம். தேவர்களில் உத்தமமானபுண்டரீகாக்ஷரே! உம்மைச் சரணமடைந்து நற்கதிபெறவிருப்பமுள்ள பக்தனான எனக்கு எது க்ஷேமமோ அதை நீரே நினைக்கவேண்டும். இவ்விதம் வித்யைக்கும் தவத்துக்கும் காரணராயும் தாம் காரணமற்றவராயுமிருக்கிற விஷ்ணுபகவான் ஸ்துதிக்கப்பட்டார். ஸ்துதியென்னும் யஜ்ஞத்தால் ஆரா

[1] மூலத்தில், 'தரிகாஷ்டாய' என்றிருக்கிறது. 'தெப்பம்' என்பது சிலர் அபிப்பிராயம்.

திக்கப்பட்ட ஸ்ரீஜனார்த்தனர் என்னிடம்அனுக்ரஹமுள்ளவராயிருக்கவேண்டும்" என்றுசொன்னார். கிருஷ்ணனிடஞ்சென்ற மனமுள்ள பீஷ்மர் இத்தனைசொற்களையும்சொல்லிவிட்டு அப்பொழுது, 'ஸ்ரீகிருஷ்ணபகவானைக் குறித்து நமஸ்காரம்' என்றுசொல்லி நமஸ்கரித்தார்.

பீஷ்மரின் அந்தவார்த்தை நின்றவுடன் அங்குள்ள வேதமறிந்த பிராம்மண சிரேஷ்டர்கள் உத்தமதேஜஸுள்ள அந்தப்பீஷ்மரைக் கண்ணில்நீர்ததும்ப வாயாரக்கொண்டாடினார்கள். பிராம்மணர்கள் யாவரும் புருஷோத்தமரான ஸ்ரீகிருஷ்ணபகவானையும் ஸ்ரீபீஷ்மரையும் திரும்பவும் திரும்பவும் கொண்டாடினார்கள். யோகமஹிமையால் பீஷ்மரின்பக்தியை அறிந்த ஸ்ரீகிருஷ்ணன் மூவுலகையுமறிவிக்கக்கூடிய திவ்யஜ்ஞானத்தை அவருக்குக் கொடுத்துவிட்டுத் தாமிருக்குமிடஞ் சென்றார். பீஷ்மரின் அந்தப்பக்தியோகத்தை அறிந்த ஸ்ரீகிருஷ்ணன் வேகமாகஎழுந்திருந்து ஸந்தோஷித்து அந்தவாஹனத்திலேறினார். கிருஷ்ணனும் ஸாத்யகியும் ஒருரதத்திலேறிச் சென்றார்கள். மஹாத்மாக்களான யுதிஷ்டிரரும் அர்ஜுனனும் ஒருரதத்திலும் பீமனும் நகுலனும் ஸஹதேவனும் ஒருரதத்திலும் கிருபரும் யுயுத்ஸுவும் ஸஞ்சயனும் ஸுதரும் மற்றொருரதத்திலும் ஏறிச்சென்றார்கள். பட்டணம்போன்ற விஸ்தாரமுள்ள தேர்களோடுபுறப்பட்ட அந்தப்புருஷசிரேஷ்டர்கள் கம்பீரமான உருளையின்ஒலியால் பூமியை நடுங்கச்செய்தார்கள். அந்தக்கிருஷ்ணன் வழியில்செல்லும்போது பிராம்மணர்களால் சொல்லப்படும் புருஷோத்தம ஸ்துதிவசனங்களை மெல்லக்கேட்டார். அவற்றைக்கேட்டு மனத்தில் ஸந்தோஷமுள்ள ஸ்ரீகிருஷ்ணன் பிறகு அங்கு கைகட்டி வணக்கத்துடனிருக்கும் பீஷ்மரைக்கண்டு ஸந்தோஷித்தார். இவ்விதம் பீஷ்மரால் சொல்லப்பட்ட ஸ்ரீகிருஷ்ணஸ்துதியைப் பக்தியுடன் படிப்பவனும் கேட்பவனும் ஸ்ரீகிருஷ்ணனுடைய அனுக்ரஹத்தால் பாபங்கள் யாவுமற்று முடிவில் ஸ்ரீகிருஷ்ணபகவானையடைகிறான். யோகிகள் உயிர்நீங்குங்காலத்தில் மிக்கபிரயத்தனத்துடன் மனத்தில் எந்தப்பகவானை நிலைக்கப் பாவனைசெய்கிறார்களோ அந்தஹரியைப் பீஷ்மர் எதிரிற்கண்டு கிருதார்த்தராய்த் தம்முயிரை விட்டார். முன்காலத்தில் ஸ்ரீபீஷ்மரால்சொல்லப்பட்டதும் மஹாபாபங்களை நாசஞ்செய்வதும் ஆச்சரியமானசெய்கையுள்ள ஸ்ரீவிஷ்ணுவைப்பற்றியதுமான இந்தஸ்தவராஜம் முடிவுபெற்றது. பரிசுத்தனாகி மோக்ஷவிருப்பமுள்ள மனிதன் நிந்திக்கப்பட்ட பாவங்களைவிலக்கும் இந்தஸ்தவராஜத்தைப்படித்து, தாமாகக்கிடைத்த அழிவுள்ள உலகங்களைக்கடந்து மஹாத்மாவினுடைய அழிவற்றபதத்தைப் பெறுகிறான்.

---

## நாற்பத்தேழாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணன், பரசுராமருடைய பராக்கிரமத்தைக்கூற, யுதிஷ்டிரர் அதனை விளக்கிக் கூறும்படி கிருஷ்ணனை வேண்டியது.)

பிறகு அந்தக் கிருஷ்ணபகவானும் யுதிஷ்டிரராஜரும் மற்ற நான்குபாண்டவர்களும் கிருபர்முதலிய யாவரும் அதிவேகமாகச் செல்லும் குதிரைகட்டியவையும் துவஜமுதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டவையும் பட்டணங்களுக்கொப்பானவையுமான இரதங்களின் மேலேறி வேகமாகக் குருக்ஷேத்திரஞ்சென்றார்கள். கேசம், மஜ்ஜை, எலும்பு இவைகளால் நிறைந்த குருக்ஷேத்திரத்திற் பிரவேசித்து மஹாரதர்களான அரசர்கள் சரீரத்தைவிட்ட இடமும் மலைகள்போன்ற யானைகுதிரைகளுடைய எலும்புக்கூட்டங்களால் நெருங்கியதும் மனிதர்களுடைய அன்னப்பறவைகள்போன்ற மண்டையோடுகளால் எங்கும் சூழப்பட்டதும் பலகவசங்களும் பலஆயுதங்களும் பல்லாயிரம்சிதைகளும் நிறைந்திருப்பதும் பூதராக்ஷஸக்கூட்டங்களால் ஸஞ்சரிக்கப்பட்டதும் புஜித்துவிடப்பட்ட அந்தகனுடைய பானசாலை போன்றதுமான குருக்ஷேத்திரத்தைப் பார்த்துக்கொண்டு மஹாரதர்களான அவர்கள் வேகமாகப்போனார்கள். போகுங்காலத்தில் மஹாபாஹுவான ஸ்ரீகிருஷ்ணன் யுதிஷ்டிரருக்குப் பரசுராமருடைய பராக்ரமமனைத்தையும் சொல்லத்தொடங்கினார்.

"ஓ! பார்த்தரே! சிறிதுதூரத்தில் இதோகாணப்படும் ஐந்து குளங்களும் பரசுராமரால் செய்யப்பட்டவைகள். க்ஷத்திரியர்களின் உதிரங்களால்நிறைந்த இக்குளங்களில் அவர் பிதிருக்களுக்குத் தர்ப்பணஞ்செய்தார். பிரபுவானபரசுராமர் பூமியை இருபத்தொருமுறை க்ஷத்திரியர்களற்றதாகச்செய்து இவ்விடத்தில் இப்பொழுது அக்காரியத்திலிருந்து ஒழிவடைந்தார்" என்று சொன்னார். யுதிஷ்டிரர், "முன்காலத்தில் பரசுராமரால் இப்பூமியானது இருபத்தொருமுறை க்ஷத்திரியர்களில்லாததாகச் செய்யப்பட்டதென்று தாங்கள்சொன்ன விஷயத்தில் எனக்குப் பெரியஸந்தேகம். ஓ! அளவற்றபராக்ரமமுள்ள யதுச்ரேஷ்டரே! ராமர் க்ஷத்திரியஜாதியின் வித்துமில்லாமல் உலகத்தைஎரித்தபின் திரும்பவும் எங்ஙனம் க்ஷத்திரியஜாதி உத்பத்தியடைந்தது? யதுச்ரேஷ்டரே! மஹாத்மாவும் பகவானுமான பரசுராமரால் க்ஷத்திரியஜாதி எப்படி அழிக்கப்பட்டது? அது திரு

ம்பவும் எப்படி வளர்ந்தது ? ஓ! பேசுகிறவர்களிற்சிறந்தவரே! பெரிய ரதயுத்தத்தால் கோடிக்கணக்காக க்ஷத்திரியர்கள் கொல்லப்பட்டார் கள். அப்படியே மறுபடியும் பூமி க்ஷத்திரியர்களால் வியாபிக்கப்பட் டது. யாதவப்புலியே! பிருகுவம்சத்திலுதித்தவரும் மஹாத்மாவு மான பரசுராமரால் முன் இந்தக்ஷத்ரியஜாதி குருக்ஷேத்திரத்தில் எத ற்காகக் கொல்லப்பட்டது? ஓ! விருஷ்ணிகுலத்திலுதித்தவரே! கரு டத்துவஜரே! எனது இந்தச்சந்தேகத்தை விலக்கவேண்டும். இந்திர னுக்கு உடன்பிறந்த ஓ! கிருஷ்ண! வேதம் உமதுவசனத்திற்கு மேலானதன்று" என்றுசொன்னார். பிறகு பிரபுவானகிருஷ்ணன், க்ஷத்திரியர்களால் அப்பூமி நிறைந்தவிஷயத்தை முழுமையும் உள்ள படி ஒப்பற்ற பராக்ரமசாலியான யுதிஷ்டிரருக்கு நடந்துகொண்டே சொல்லத்தொடங்கினார்.

## நாற்பத்தெட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணபகவான் யுதிஷ்டிரருக்குப் பரசுராமருடைய வரலாறுகூறியது.)

ஸ்ரீகிருஷ்ணன், "ஓ! கௌந்தேயரே! பரசுராமர் பிறந்தகார ணத்தையும் அவர்பெருமையையும் அவரால் கோடிக்கணக்கானக்ஷத் திரியர்கள் அடிபட்டதையும் திரும்பவும் ராஜவம்சத்தில் இப்பாரத யுத்தத்தில் அடிபடத்தக்கபடி க்ஷத்திரியர்கள்வளர்ந்ததையும் மஹ ரிஷிகள்சொல்ல நான்கேட்டபடி உமக்குச் சொல்லுகிறேன்; கேளும்" என்று சொல்லத்தொடங்கினார்.

"அரசரே! ஜஹ்நுவின்புத்திரரான அஜருக்குப் பலாகாச்வரென் னும் ஒருபுத்திரரிருந்தார். அவருக்குக் குசிகரென்று பிரஸித்தராய்த் தர்மந்தெரிந்த ஒருபுத்திரரிருந்தார். உலகத்தில் இந்திரனுக்கொப் பான அந்தக்குசிகர் மூவுலகங்களுக்கும் ஈசனும் யாவராலும் ஜயிக் கத்தகாதவனுமான ஒருபுத்திரனை அடையவிரும்பிப் பெருந்தவஞ் செய்யத்தொடங்கினார். பாரதரே! புத்திரனையுண்டுபண்ண வல்லவ ரான கடுந்தவமுள்ள அந்தக்குசிகரைக்கண்டு உலகபதிகளுக்கும்பதி யான ஆயிரங்கண்ணுள்ள இந்திரன் தானாகவேவந்து அந்தக்குசிக ருக்குக் குமாரனாகப் பிறந்தான். குசிகரானவர் குமாரனுயுதித்த இந் திரனுக்குக் காதியென்று பெயரிட்டனர். பிரபுவான அரசரே! அந்தக் காதிக்கு ஸத்யவதியென்று பெயருள்ள பெண்பிறந்தாள். பிரபுவான

காதியானவன் அந்தக்கன்னிகையைப் பிருகுவின் புத்திரரான ரிசீக ருக்கு மணம்புரிவித்தான். கௌரவர்களை ஸந்தோஷிப்பிக்கிற கௌந் தேயரே! பிறகு புத்திரனைவிரும்பி ஸத்தியவதியால்வேண்டப்பட்ட ரிசீகர் காதிக்கும் தமக்கும் புத்திரனுண்டாகக்கருதி வெவ்வேறான இரண்டுசருவைப் பக்குவஞ்செய்தார். உடனே பிருகுபுத்திரரான ரிசீகர் பாரியையையழைத்து, "இந்தச்சருவை நீயும் மற்றொன்றான இதை உன்தாயும் உபயோகித்துக்கொள்ளவேண்டும். இந்தச்சருவா னவை, அவளுக்கு உலகத்தில் க்ஷத்திரியர்களால் வெல்லத்தகாதவ னும் க்ஷத்ரியச்ரேஷ்டர்களை வெல்லத்தக்கவனும் க்ஷத்திரியச்ரேஷ் டனும் காந்தியுள்ளவனுமான புத்திரனையும், உனக்குத் தைரியம் சமம் தவமுதலிய நற்குணங்கள்பொருந்திய அந்தணர்சிகாமணியான புத்திரனையும் உண்டுபண்ணும்" என்றுசொன்னார். பிருகுநந்தன ரும் ஸ்ரீமானுமான அந்தரிசீகர் பாரியையானஸத்யவதியிடம் சரு வைக்கொடுத்து இவ்விதம்சொல்லிவிட்டுத் தவத்தைவிரும்பிக் காட் டுக்குச்சென்றார். இந்தச்சமயத்திலேயே தீர்த்தயாத்திரைசெய்யப் புறப்பட்ட அரசனானகாதியும் தன்மனைவியுடன் ரிசீகாச்ரமம்வந்து சேர்ந்தான். ராஜாவே! அப்பொழுது ஸத்யவதியானவள் அனுக்ர ஹத்துடன் பதியாலளிக்கப்பட்ட இரண்டுசருக்களையும் எடுத்துக் கொண்டு சந்தோஷத்துடன் தாயிடம்சென்று அதைத் தெரிவித்த னள். ஓ! கௌந்தேயரே! அவள்மாதாவோ தனக்கென்றசருவைப் பெண்ணிடம் கொடுத்துவிட்டு அவளுக்குரியசருவை அறியாமல் தானுபயோகித்துக்கொண்டாள். பிறகு ஸத்யவதியானவள் க்ஷத் திரியதேஜஸால்பிரகாசிக்கும் சரீரத்துடன் க்ஷத்திரியர்களைக்கொல் லத்தக்கதும் கோரமானதரிசனமுள்ளதுமான கர்ப்பத்தைத் தரித் தாள். பாரதரே! அப்ஸரஸ்திரீயைப்போல அழகுள்ள தம்மனைவி யைக்கண்டரிசீகர் தியானக்கண்ணால் உண்மையையறிந்துகொண்டு, 'மங்களம்பொருந்திய பெண்மணியே! சருவை, மாற்றியகாரணத்தால் உன்தாயால் நீ வஞ்சிக்கப்பட்டாய். அந்தக்காரணத்தால் மிக்கபொ ருமையுள்ளவனும் கொடுஞ்செய்கையுள்ளவனுமானபுத்திரன் உன்னி டம் உண்டாகப்போகிறான். உன்தாயானவள் தவத்தையேதனமாகக் கொண்ட உத்தமப்பிராம்மணனை உண்டுபண்ணப்போகிறாள். பிராம் மணஜாதிக்குரியவீரியம்யாவும் உனக்கென்றசருவில் வைக்கப்பட்டி ருந்தது. க்ஷத்திரியஜாதிக்குரிய பராக்ரமம்யாவும் உன்மாதாவின் பொருட்டுக் கொடுக்கப்பட்டது. சுபமானவளே! இதை உன்தாய் மாற்றிய காரணத்தால் இஃது இவ்விதமில்லாமல் உன்தாயிடம் பிராம்

மணனும் உன்னிடம் க்ஷத்திரியனும் உண்டாகப்போகிறார்கள்" என்றுசொன்னார். பதியான ரிசீகரால் இவ்விதம் சொல்லப்பட்ட பெரியபாக்கியமுள்ள ஸத்யவதி நடுக்கமுற்றுத் தலைவணங்கித் தண்டனிட்டு, "பிரபுவானபகவானே! 'பிராம்மணஜாதிக்கு இகழ்ச்சியான புத்திரனை அடைவாய்' என்ற இவ்வசனத்தை என்னைக்குறித்துத் தாங்கள் சொல்லத்தகாது" என்றுசொன்னாள். ரிசீகர், "பெண்ணே! உன்விஷயத்தில் நான் இவ்விதஸங்கல்பத்தைச் செய்தவனல்லேன். சருவைமாற்றியகாரணத்தால் க்ரூரமானசெய்கையுள்ளபுத்திரன் உண்டாவான்" என்றார். ஸத்யவதி, "முனிவரே! உங்களுக்குமனமிருந்தால் உலகங்களையும்படைக்க வல்லவராவீர். ஒருபுத்திரனைக்கொடுப்பது எவ்வளவு? பிரபுவே! ஆகையால், என்பொருட்டுச் சாந்தகுணமுள்ள நேரானபுத்திரனைக் கொடுக்கக்கடவீர்" என்றுசொன்னாள். ரிசீகர், "பெண்ணே! விளையாட்டுவேளையிலும் என்னால் இதுவரையில் பொய்யானவசனம் சொல்லப்பட்டதில்லை. அக்கினியைமுன்னிட்டு மந்திரஜபத்துடன் ஸாதித்தசருவில் என்வசனம் எங்ஙனம் பொய்யாகும்? சுபமுள்ளவளே! உன்தந்தையின்குலம்யாவும் பிராம்மணகுலமாகுமென்பது தவவலிமையால் முன்னமே எனக்குத் தெரிந்தது தான்" என்றுசொன்னார். ஸத்யவதி, "மந்திரசக்தியுள்ளவர்களிற் சிறந்தபிரபுவே! தங்களுடைய எண்ணப்படி இஷ்டம்போலப் பௌத்திரனுண்டாகட்டும். புத்திரன் இவ்விதம் உண்டாகவேண்டாம். சாந்தகுணமுள்ள நேரானபுத்திரனை அடையவேண்டுகிறேன்" என்று சொன்னாள். ரிசீகர், "அழகுள்ளபெண்மணியே! புத்திரனென்றும் பௌத்திரனென்றும் விசேஷம் எனக்கில்லை. நீ எங்ஙனம்சொல்லுகிறாயோ அங்ஙனம் உண்டாகட்டும்" என்றுசொன்னார். பிறகு ஸத்யவதியினிடம் தவத்தில் ஆசையுள்ளவரும் சாந்தகுணமுள்ளவரும் நல்லநியமமுள்ளவருமான ஜமதக்னியென்னும்புத்திரர் உண்டானார். குசிகரின்குமாரனானகாதியிடம் பிரம்மதேஜஸ்யாவும்நிறைந்து பிரம்மரிஷிக்கொப்பான விசுவாமித்திரனென்னும் புத்திரருதித்தார். தவங்களுக்கிருப்பிடமானவரும் ரிசீகபுத்திரருமான ஜமதக்னி கல்வியெல்லாம்கரைகண்டவரும் தனுர்வேதத்தின்கரையடைந்தவரும் க்ஷத்திரியர்களைக்கொல்லத்தக்கவரும் அக்நிபோலப்பிரகாசிப்பவரும் மிக்க பயங்கரருமான பரசுராமனைப் பெற்றார். அந்தப்பரசுராமர் கந்தமாதனமென்னும்மலையில் மஹாதேவனை ஸந்தோஷப்படுத்தி அவரிடமிருந்து அதிகதேஜஸுள்ள கோடாலியையும் அஸ்திரங்களையும் வரமாக அடைந்தார். ஜ்வாலையுள்ள அக்கினிபோலவிளங்குவதும் மழுங்

காதமுனையுள்ளதும் சொல்லமுடியாத சக்தியுள்ளதுமான அந்தக் கோடாலியால் அந்தராமர் உலகங்களில் ஒப்பற்றவராயிருந்தார்.

இவ்விதமிருக்குங்காலத்தில் ஹேஹயதேசத்திற்கரசனானகிருதவீரியனின்புத்திரனும் மிக்கபராக்ரமசாலியும் தேஜஸுள்ளவனுமான அர்ஜுனன் தத்தாத்திரேயரின் அனுக்ஹத்தால் ஆயிரங்கைகளைப் பெற்றுப் பெரியபராக்கிரமமுள்ளசக்ரவர்த்தியாயுமிருந்து அசுவமேதமென்னும் யாகஞ்செய்தான். உத்தமமான தர்மந்தெரிந்த அர்ஜுனன் (அந்தயாகத்தில்) தன்புஜபலத்தாலும் அஸ்த்ரபலத்தாலும் யுத்தத்தில்ஜயிக்கப்பட்ட பூமியாவற்றையும் மலைகளுடனும் ஏழுதீவுகளுடனும் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். ஓ! கௌந்தேயரே! பராக்ரமசாலியும் வீரனுமான ஆயிரங்கையுள்ள அவ்வர்ஜுனராஜன் தாகமுள்ள அக்னிபகவானால்யாசிக்கப்பட்டுப் பலகிராமங்களையும் பட்டணங்களையும் ராஜ்யங்களையும் இடைச்சேரிகளையும் அவர் பொருட்டுப் பிக்ஷையாகக் கொடுத்தான். மஹாபராக்ரமமுள்ள அந்த ராஜாவின் பிரபாவபலத்தால் யாவற்றையும்தகிக்க விருப்பங்கொண்டு ஜ்வலிப்பவரும் பாணத்தால் விருத்திபண்ணப்பட்டவருமான அக்கினியானவர் மலைகளையும் பூமியையுங்கூட எரிக்கத்தொடங்கினர். அவ்விதம்முயன்ற அக்கினி வாயுவால் மிகவளர்ச்சியடைந்து அர்ஜுனராஜாவின் உதவியைக்கொண்டு மஹாத்மாவான வஸிஷ்டமஹரிஷியின் ஒருவருமில்லாத ஆச்ரமமிருக்கும் அரண்யத்தையும் எரித்துவிட்டார். தளராதவிரதமுள்ளவரே! பெரியகைகளையுடையவரே! தம்ஆச்ரமம்எரிக்கப்பட்டதும் அதற்கு மூலகாரணமான அர்ஜுனராஜனிடம் மிகக்கோபங்கொண்டவரும் வீர்யமுள்ளவருமான வஸிஷ்டமஹரிஷி, 'அடா! அர்ஜுன! இந்தப்பெரியதான என்னுடைய ஆச்ரமத்தை விலக்காமலெரிக்கச்செய்த காரணம்பற்றி உன்கைகளை யுத்தத்தில் பரசுராமர் அறுக்கப்போகிறார்" என்று அர்ஜுனனைச் சபித்தார். பாரதரே! பெரியபராக்ரமமுள்ளவனும் பலசாலியும் எப்பொழுதும் பொறுமையுள்ளவனும் பிராம்மணர்களுக்குஹிதனும் அடுத்தவர்களிடம்அன்புள்ளவனும் தாதாவும் சூரனுமான அர்ஜுனராஜனோ அந்தமஹாத்மாவான வஸிஷ்டர்கொடுத்தசாபத்தைக் கவனியாமலிருந்தான். நல்லபலமுள்ளவர்களும் எப்பொழுதும் அகங்காரமுங் கொடுஞ்செய்கையுமுள்ளவர்களுமான அர்ஜுனராஜன்புத்திரர்கள் அச்சாபம்காரணமாகத் தந்தையின்வதத்திற்கு மூலமானூர்கள். தளராதவிரதமுள்ளவரே! அவர்கள் புத்திமானும் ஹேஹயராஜனுமான கார்த்தவீர்யனுக்குத்தெரியாமல் ஜமதக்னிரிஷியின் பசுவின்

கன்றை ஓட்டிவந்தார்கள். பாபமற்றவரே! அந்தக்காரணம்பற்றி மஹாத்மாவானராமருக்கும் அர்ஜுனனுக்கும் நேர்ந்தபெரியயுத்தத்தில் பரசுராமர் மிக்ககோபத்துடன் அர்ஜுனன்கைகளையறுத்துவிட்டார். ராஜச்ரேஷ்டரே! பிறகு அவர்களுடைய அந்தப்புரத்தில் சுற்றிக்கொண்டிருக்கும் கன்றுக்குட்டியைப் பிரபுவானபரசுராமர் தம் ஆச்ரமத்துக்கு ஓட்டிவந்தார். மனிதர்களுக்கதிபதியே! அப்பொழுது புத்தியில்லாத அந்தஅர்ஜுனன்புத்திரர்கள் ஒன்றுசேர்ந்து, கீர்த்திமானானபரசுராமர் ஸமித்தும் குசமும்கொண்டுவர வெளியில் போயிருக்கும் ஸமயத்தில் ஒருவருமறியாமல் மஹாத்மாவானஜமதக்னியின் ஆச்ரமம்சென்று அவ்வாச்ரமத்திலிருப்பவர்களும் ஜமதக்னியின்பாரியையும் பார்க்கும்பொழுது அர்த்தசந்திரபாணங்களின் முனைகளால் அவர்தலையையறுத்துச் சரீரத்திலிருந்து தள்ளினார்கள். தனுர்வேதத்தில்ஈடில்லாதவரும் திவ்யமான பலஅஸ்த்ரங்களைப்பெற்றவருமான பார்க்கவராமர் அந்தச்செயலைக்கேட்டு, பிரளயகாலத்தீப்போல ஜ்வலிக்கும் கோபாக்னியுள்ளவராய்த் தந்தையின்வதத்தைப் பொறுமல் மிகக்கோபங்கொண்டு பூமியை க்ஷத்திரியஜாதியற்றதாகச் செய்கிறேனென்று சபதத்துடன் அர்த்தசந்திரன்போலவிளங்கும் பரசுவென்னும் ஆயுதத்தைக் கையிலெடுத்தார். பிருகுவம்சத்துப் புலியான அந்தப்பராக்ரமமுள்ள பரசுராமர் மிகவிரைவாகச்சென்று அர்ஜுனன்பிள்ளைகளையும் பேரர்களையும் மிச்சமில்லாமல் அடித்தார். அதிகோபமுள்ள அந்தராமர் ஹேஹயதேசத்துப் பலஆயிரம் க்ஷத்திரியர்களைக்கொன்று பூமியைக் கடல்வரை உதிரவெள்ளமுள்ளதாகச் செய்தார். அதிகவீரியமுள்ள அந்தப்பரசுராமர் அப்படியே பூமியை க்ஷத்திரியஜாதியற்றதாகச்செய்து மிக்ககருணையுள்ளவராய் வனமேசென்றார். இயல்பாகவேகோபமுள்ளவரும் பிரபுவுமான அந்தப்பரசுராமர் பிறகு சில்லாயிரம்வருஷங்கள்சென்றபின் அங்கு கோபமுள்ளவரானார். மஹாராஜரே! யயாதிபதனமென்னும் க்ஷேத்திரத்தில் யாகத்திற்காகச்சேர்ந்த ஜனக்கூட்டத்தில் விசுவாமித்திரர்பேரரும் ரைப்யரின்புத்திரரும் பெரியதவமுள்ளவருமான பராவஸுஎன்பவர் ராமரைநோக்கி, "ராம! பொய்யானசபதஞ்செய்தநீர் இந்தஜனக்கூட்டத்தில் பெருமையாய் உம்மைப்புகழ்ந்து பேசுகிறீர். இந்தயாகத்திற்குவந்திருக்கும்பிரதர்த்தனன்முதலியவர்கள் உமக்கு க்ஷத்திரியர்களல்லரோ? பலநூறுக்ஷத்திரியர்களால் இந்தப்பூமிஎங்கும் திரும்பவும் நிறைந்திருக்கிறது. க்ஷத்திரியவீரர்களிடம்பயந்து ஒருமலையில் குடிபுகுந்திருக்கிறீரோ" என்றுஇகழ்ச்சியாகப்பேசினார். பராவஸு

வின்வசனத்தைக்கேட்டதும், பார்க்கவர், ஆயுதத்தைக் கையிலெடுத்தார். ராஜரே! உடனே, நூற்றுக்கணக்காக முன்கொல்லாதுவிடப்பட்டவர்களும் பின்பு பலவிதமாகவிருத்தியடைந்தவர்களும் அதிக வீரியமுள்ளவர்களுமாயிருந்த க்ஷத்திரியர்கள் அனைவரையும் பாலர்கள்முதல் வேகமாகத் திரும்பவுங்கொன்றார். ஓ! நராதிபரே! அப்பொழுது கர்ப்பத்திலிருக்கும்க்ஷத்திரியர்களால் திரும்பவும் பூமி நிறைந்ததாயிற்று. கர்ப்பங்கள் உண்டாகஉண்டாகத் திரும்பவும் ராமர் வதஞ்செய்துவந்தார். அப்பொழுது க்ஷத்திரியஸ்திரீகள் சில பிள்ளைகளை ரக்ஷித்தார்கள். இவ்விதம் இருபத்தொருமுறை பூமியை க்ஷத்திரியஜாதியற்றதாகச்செய்த பிரபுவான ராமர் பிறகுதாம்செய்த அசுவமேதயாகத்தின்முடிவில் இந்தப்பூமியைக் கச்யபருக்குத் தக்ஷிணையாகக் கொடுத்தார். ராஜாவே! அந்தக்கச்யபர் ஸ்ருக்கைஎடுத்த கையால் தக்ஷிணையைப்பெற்றுக்கொண்டு மிச்சமான க்ஷத்திரியர்களைக் காக்கவேண்டிப் பரசுராமரைநோக்கி, "ஓ! முனிகளிற்சிறந்தவரே! நீர் தென்கடலின்கரையைநோக்கிச் செல்லவேண்டும். என்னுடையதேசத்தில் எவ்விடத்திலும் நீர்வஸிப்பது நியாயமாகாது. பூமியானது உம்மால் அச்வமேதயாகத்தில் தக்ஷிணையாக எனக்குக்கொடுக்கப்பட்டது. கொடுத்தஇப்பூமியைத் திரும்பவும்பெற நீர் அதிகாரமுள்ளவரல்லர்" என்றுசொன்னார்.

உடனே அங்ஙனம்சென்ற பரசுராமரிடம்பயந்து மேற்றிசையில் ஒருபாகமான [1]சூர்ப்பாகரமென்னும் ஒருதேசத்தை ஸமுத்திரராஜன் அவருக்கு உண்டுபண்ணிக்கொடுத்தான். ஓ! மஹாராஜரே! கச்யபர் அந்தப்பூமியைத்தானமாகப்பெற்றுக்கொண்டு அதைப்பிராம்மணர்களிடம் அளித்துவிட்டுத் தாம் மிக்கபெரியவனம்போய்ச் சேர்ந்தார். பிறகு இவ்வுலகம் அராஜகமானதும், சூத்திரர்களும் வைச்யர்களும் தம்மிஷ்டப்படி மேற்குலத்தார்தாரங்களிடம் செல்லத்தொடங்கினார்கள். ஓ! பரதரேறே! பலமுள்ளவர்கள் பலங்குறைந்தவர்களை அடிக்கத்தொடங்கினார்கள். அக்காலம் பொருள்களால்பிரபுத்தன்மை எவனிடமும் நிலைத்திருக்கவில்லை. மூர்க்கர்களான சிலபிராம்மணர்கள் தாம் பண்டிதரென்னும் அகங்காரமுள்ளவராய்க் கள்ளைக்குடிக்கத் தலைப்பட்டார்கள். பிராம்மணர்கள் க்ஷத்திரியர்கள் வைசியர்கள் சூத்திரர்கள்யாவரும் கெட்டவழியிற்சென்று ஒருவரையொருவர் அடித்துக் கொலைசெய்யமுயன்றார்கள். கெட்டவழியிற்சென்ற பிராம்மணர்கள் தம்தர்மத்தைவிட்டுப் பாஷண்டர்களானார்கள். எல்லோரும்

---

[1] இவ்விடத்தில் சூர்ப்பாரகமென்பது வேறுபாடம்.

திருட்டு, பொய், மாயைகளைச் செய்தார்கள். தமது ஜாதிதர்மங்களையும் ஆச்ரமதர்மங்களையும் ஸரிவரநடத்தி நல்வழிச்செல்லும் பிராம்மணர்களையும் வைசியர்களையும் தர்மஞ்செய்யும் சூத்திரர்களையும் கெட்டநடையுள்ளசிலர் யாதொருபயமுமின்றிக் கொலைசெய்தார்கள். வேறுசிலர் யாகத்தையும் அத்தியயனத்தையும்செய்பவர்களையும், ஆச்ரமத்திலிருக்கும் தவஞ்செய்பவர்களையும், பசுக்கள், பாலர்கள், கிழவர்கள், ஸ்திரீகள் ஆகிய இவர்களையும் நாசஞ்செய்தார்கள். வேதமும் தர்மசாஸ்திரமும் ராஜநீதியும் அக்காலம் ஒளித்துப்போயின. கீழ்மேலான கெட்டசெய்கையால் பல துவிஜர்கள் பெரும்பாலும் விராத்தியர்களும் மிலேச்சர்களுமானார்கள். தர்மத்தைப்பாதுகாக்கும் க்ஷத்திரியர்களால் நீதிப்படிகாக்கப்படாத பூமிதேவியும் அக்காலத்தில் துஷ்டமனிதர்களின் தீச்செயல்களால் பீடிக்கப்பட்டுப் பாதாளஞ்செல்லத்தொடங்கினாள். அப்படிப்பயந்துஓடிப் பாதாளத்தில் முழுகக்கூடியபூமியைக்கண்டு பெரியமனமுள்ளகச்யபர் தமது துடையில் தாங்கித் தூக்கினார். ஓ! ராஜரே! அந்தக்காரணத்தால் இப்பூமி உர்வியென்னும் பெயருள்ளவளானாள். அப்பொழுது பூமிதேவியானவள் கச்யபரைஸந்தோஷப்படுத்தி, தன்னைரக்ஷிப்பதை உத்தேசித்துக் கைவன்மையுள்ள க்ஷத்திரியர்களை யாசிக்கத்தொடங்கினாள். 'ஸ்ருஷ்டிகர்த்தாகிய முனிவரே! ஹைஹயவம்சத்திலுதித்த க்ஷத்திரியச்ரேஷ்டர்கள் ஸ்திரீகளிடத்தில் என்னால் ரக்ஷிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் என்னை ரக்ஷிக்கட்டும். ஓ! பிரபுவான பிராம்மணரே! விதூரதனுடைய புத்திரனை புருவம்சத்திலுதித்த ஓர் அரசன் ரிக்ஷவானென்னும் மலையில் கரடிகளால்வளர்க்கப்பட்டவனாகி இருக்கிறான். அப்படியே ஸௌதாஸபுத்திரன் அதிகவீரியமுள்ளவரும் விதிப்படியாகஞ்செய்தவரும் தயையுள்ளவருமான பராசரமுனிவரால் பாதுகாக்கப்பட்டிருக்கிறான். அவன் க்ஷத்ரியனாயிருந்தும் அந்தப்பராசரருக்குச் சூத்திரன்போல எல்லாக்கார்யங்களையும்செய்வதால் ஸர்வகர்மாவென்று பிரஸித்தனானான். அவ்வரசன் என்னைக் காக்கட்டும். முனிவரே! சிபியின்புத்திரன் மஹா பராக்ரமசாலி. அவன் அரண்யத்தில் பசுக்களால் வளர்க்கப்பட்ட காரணத்தால் கோபதியென்னும் பெயருள்ளவனானான். அவன் என்னை ரக்ஷிக்கட்டும். பிரதர்த்தனன்புத்திரன் மாடுகட்டுமிடத்தில் கன்றுகளால்வளர்க்கப்பட்ட காரணத்தால் வத்ஸனென்று பெயர்கொண்டவன். மஹாபலசாலியான அந்த அரசன் என்னை ரக்ஷிக்கட்டும். திவிரதரின் பௌத்ரனும் ததிவாஹனனுடைய புத்திரனுமான அங்கனென்னும் அரசன் கங்கைக்கரையில்

கௌதமரால் ரக்ஷிக்கப்பட்டிருக்கிறன். க்ருத்ரகூடமென்னும் மலையில் விசேஷமானதேஜஸும் பெரியபாக்யமுமுள்ளவனும் அதிக ஸம்பத்தால் அலங்கரிக்கப்பட்டவனுமான பிருஹத்ரதனென்னும் அரசன் [1]மந்திகளால் காப்பாற்றப்பட்டிருக்கிறன். மருத்தரின்வம்சத்தினுதித்தவர்களும் [2]இந்திரனுக்கொப்பான பராக்ரமமுள்ளவர்களுமான க்ஷத்திரியகுமாரர்கள் ஸமுத்திரத்தால் ரக்ஷிக்கப்பட்டிருக்கிறர்கள். அங்கங்கே ப்ரஸித்தர்களான இந்தக்ஷத்திரியகுமாரர்கள் சிற்பி தட்டான்முதலிய ஜாதியை எப்பொழுதும் அடைந்திருக்கிறர்கள். இவர்கள் என்னை ரக்ஷிப்பார்களானல் நான் பயமின்றி நிலைபெற்றிருப்பேன். இவர்களின் பிதிர்க்களும் பிதாமஹர்களும் சளைக்காத சக்தியுள்ள பரசுராமரால் யுத்தத்தில் என்னிமித்தம் அடிக்கப்பட்டார்கள். ஓ! முனிவர்களிற்பெரியவரே! அவர்களுக்கு மரியாதை செய்யவேண்டியகடமை எனக்குண்டு. [3]காலஞ்சென்ற அரசர்களால் எனக்குஉதவியை நான் விரும்பவில்லை. இக்காலத்திலுள்ள க்ஷத்திரியர்களால் நானிருக்க விரும்புகிறேன். இதைச் சீக்கிரம் செய்துகொடுக்கவேண்டும்' என்று பிரார்த்தித்தாள். பிறகு பூமிதேவியால் குறிப்பிடப்பட்ட வீரியசாலிகளான அந்தக்ஷத்திரியர்களை வரவழைத்துக் கச்யபர் அரசர்களாக அவர்களுக்கு அபிஷேகஞ்செய்தார். அவர்களுடையவம்சங்கள் புத்திரபௌத்திரபரம்பரையாய் உலகில் நிலைபெற்றிருக்கின்றன. ஓ! பாண்டவரே! என்னைக்கேட்ட இப்பழைய கதையை உமக்குச் சொன்னேன்" என்று இவ்விதம் தர்மத்தைப் பரிபாலிப்பவர்களிற்சிறந்த யுதிஷ்டிராஜரிடம் பேசிக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஸூர்யன் தன்னொளியால் மூவுலகிலும் பிரவேசிப்பதுபோல அந்தரதத்தினுலேயே வேகமாகச் சென்றுர்.

---

## நாற்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(தர்மபுத்திரர்முதலியோர் பீஷ்மரைஅடுத்ததும், ஸ்ரீகிருஷ்ணன் பீஷ்மருக்கு உபசாரவார்த்தை சொல்லித் தர்மபுத்திரருக்குத் தர்மோபதேசஞ்செய்யும்படி வேண்டியதும்.)

பரசுராமருடைய அந்தச் செய்கையைக்கேட்ட யுதிஷ்டிராஜர் மிக்க ஆச்சரியமுள்ளவராய்க் கிருஷ்ணபகவானை நோக்கி, "ஓ! பக

---

[1] ஒருவகைக்குரங்கு. [2] இங்கு ஒருசொல் விடப்பட்டது.
[3] 'நீதியற்றமனிதரால் எனக்கு உதவியை விரும்பத்தக்கதில்லை'என்பது பழையவுரை.

வானே! கோபத்தால் பூமியை க்ஷத்திரியஜாதியற்றதாகச்செய்தவரும் இந்திரனுக்குஒப்பானவரும் மஹாத்மாவுமான பரசுராமருடைய பராக்ரமம் ஆச்சரியமாகஇருக்கிறது. அவரிடமிருந்துபயந்து நடுக்கமுற்றக்ஷத்திரியவீரர்கள் பசுக்களாலும் ஸமுத்திரத்தாலும் காடிகளாலும் மந்திகளாலும் குரங்குகளாலும் காப்பாற்றப்பட்டார்கள். ஆச்சரியம்! அச்சுதரே! பிராம்மணச்ரேஷ்டர்கள் தர்மமானஇவ்விதக்காரியத்தைச்செய்தஇடமான இம்மானிடலோகமானது பாக்யமுள்ளது. பூமியிலுள்ளமனிதர்களும் மிக்கபாக்கியம்பெற்றவர்களே" என்றுசொன்னார்.

ஐய! இவ்விதம் கதையைப்பேசிக்கொண்டே அந்தயுதிஷ்டிரராஜரும் ஸ்ரீகிருஷ்ணபகவானும் சரதல்பத்தில்படுத்திருக்கும் பிரபுவான பீஷ்மரிருக்கும்இடஞ் சென்றார்கள். அங்குசென்ற அவர்கள் புண்ணியபூமிகளிற்சிறந்த ஓகவதியென்னும்நதிக்கரையில் சரதல்பத்தில்படுத்தவரும் தேவர்களாற் சூழப்பட்ட இந்திரன்போலப் பலமுனிவர்கள்சூழ்ந்து ஆராதிக்கப்பெற்றுவிளங்குகிறவரும் தன்கிரணங்கள் ஒன்றுசேர்ந்து நிறைந்த ஸாயங்காலத்துஸூர்யன்போலப் பிரகாசிப்பவருமானபீஷ்மரைக் கண்டார்கள். ஸ்ரீகிருஷ்ணபகவானும் தர்மபுத்திரராஜரும் மற்றுமுள்ளநான்குபாண்டவர்களும் கிருபர்முதலியவர்களும் சிறிதுதூரத்திலேயே பீஷ்மரைக்கண்டவுடன் வாஹனங்களிலிருந்துஇறங்கிச் சென்றார்கள். பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவானும் ஸாத்யகியும் அந்தயுதிஷ்டிரர்முதலிய அரசர்களும் சஞ்சலமானமனத்தையடக்கி இந்திரியக்கூட்டத்தையொருவழிப்படுத்திக்கொண்டு அங்குள்ள வியாஸர்முதலிய உத்தமரிஷிகளினருகிற்சென்று வந்தனஞ் செய்தபின் பீஷ்மரிடஞ் சென்றார்கள். சென்றவுடன் ஸ்ரீகிருஷ்ணபகவான் பீஷ்மரைநோக்கி, தவத்தின்பெருமையைப் பிரச்னஞ் செய்துவிட்டு உட்கார்ந்தார். மற்றுமுள்ள புருஷவீரர்கள்யாவரும் அவரைச்சுற்றி உட்கார்ந்தார்கள். பிறகு ஸ்ரீகேசவர் அவியுங்காலத்துஅக்கினிபோலிருக்கும் பீஷ்மரைப்பார்த்துச் சற்றுமனவருத்தமுற்றுப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினார்.

"பேசுகிறவர்களிற்சிறந்தவரே! இந்திரியங்களெல்லாம் முன்போலத் தெளிந்து ஸுகமாயிருக்கின்றனவா? உமதுபுத்தியும் சோர்வின்றித் தெளிவாயிருக்கிறதா? அம்புகளின் அடிகளால் பீடிக்கப்பட்டசரீரம் தாபமின்றி இருக்கிறதா? மனத்திலிருக்கும்துன்பத்தைவிடச் சரீரத்திலுள்ள துக்கம் மிகப்பெரிதாயிற்றே. ஓ! பிரபுவே! எப்பொழுதும் தர்மத்தைஅநுஷ்டித்த தந்தையான சந்தனுவிடமிரு

ந்து வரம்பெற்றகாரணத்தால் மரணமானது உமதிஷ்டப்படியிருக்கு மென்ற பெருமையுள்ளவராயிருக்கிறீர். ஆகிலும் இந்தச்சரீரவேதனையைவிலக்க இது காரணமாகாதே. சரீரத்திலிருக்கும்சல்யம் மிக நுட்பமாயினும் பீடையையுண்டுபண்ணும். சரக்கூட்டங்களால் சரீர முழுவதும்நிறைந்த உமதுவேதனை எவ்விதமிராது? பாரதரே! தேவர்களுக்கும்வேண்டிய ஹிதத்தைஉபதேசிக்கவல்லவரானஉமக்குப் பிராணிகளின் ஜனனமரணங்களைப்பற்றிப் பிறர் சொல்லவேண்டியதில்லையே. புருஷச்ரேஷ்டரே! சென்றதும் நிகழ்கின்றதும் வருவதுமானயாவும் ஞானத்தில்பெரியவரானஉமக்குக் கையிலுள்ளகனிபோலாகும். பிராணிகளின்இல்லறவாழ்க்கையும் அதிலுண்டாகும் தர்மத்தின்பயனும் உமக்குத் தெரிந்திருக்கின்றன. பிராஜ்ஞர்களுள் சிறந்தவரே! நீர் தர்மரூபமானநிதியாகிறீர். பெரியராஜ்யத்திலிருந்து ஒருவிதமானபிணியுமின்றி நிறைந்தஅங்கங்களுடன் ஆயிரம்ஸ்திரீகளால் சூழப்பெற்றிருந்தும், நீர்ஒருவர், 'ஊர்த்வரேதஸ்' என்று நானறிகிறேன். ஸத்தியமானதர்மமுள்ளவரும் பெரியசக்தியுள்ளவரும் சூரரும் தர்மத்தைவிட்டுவிலகாதவரும் சாதல்பத்திலபடுத்தவரும் சந்தனுவின்புத்திரருமான பீஷ்மர் ஒருவரைத்தவிர மூவுலகங்களிலும் தபோபலத்தால் மிருத்யுவைஜயிக்கத்தக்கஅரசன் உண்டானதாகக் கேட்டதில்லை. ஐய! ஸத்தியத்திலும் தவத்திலும் தானத்திலும் வேதத்திலும் யாகத்திலும் தனுர்வேதத்திலும் தர்க்கசாஸ்திரத்திலும் உம்மைப்போன்ற அறம்பொருள் இன்பங்களுக்குக்காரணரான ஒருவனை நான் இதுவரையில் கேட்டதில்லை. கொடுமையற்றவரும் பரிசுத்தரும் அடக்கமுள்ளவரும் ஸர்வப்பிராணிகளுக்கும்ஹிதஞ்செய்பவரும் மஹாரதருமான உமக்குச்சரியான ஒருமனிதனையுங் கேட்டதில்லை. தேவர்கள், அஸுரர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள் ஆகியஇவர்கள்யாவரையும் ஒரேரதத்தோடு நீர்ஒருவராய்ஜயிக்கச் சக்திபெற்றவரென்பதிற் சந்தேகமில்லை. ஓ! மஹாபாஹுவான பீஷ்மரே! இந்திரனுக்கொப்பான அந்தநீர் வஸுக்களென்னும் எட்டுத்தேவர்களின் அம்சங்களும் ஒன்றுசேர்ந்து ஒன்பதாவதுவஸுவாயுண்டானவரென்றும், குணங்களால் யாவருக்கும் உத்தமரென்றும் பிராம்மணர்கள் உம்மை எப்போதும் சொல்லுகிறார்கள். ஓ! புருஷச்ரேஷ்டரே! நானும் உம்மை நேரிலே அறிந்திருக்கிறேன். புருஷோத்தமரானநீர் தேவர்களினும் சக்தியினால்பிரஸித்தரானவர். நரேந்திரரே! பூமியிலுள்ளமனிதர்களில் குணங்களால் உமக்கொப்பான புருஷனை எங்கும் நான் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. ஓ!

ராஜரே! நீர் எல்லாக்குணங்களாலும் தேவர்களுக்கும்மேலானவர். நீர் உமதுதபோபலத்தால் ஸ்தாவரஜங்கமமானஉலகங்களையும் படைக்கச் சக்தியுள்ளவர். உத்தமமான குணங்களால் உமக்குவேண்டிய உத்தமஉலகங்களை அடைவது உமக்கு மிகஎளிதாகும். ஆகையால், ஓ! பீஷ்மரே! ஞாதிகளின்நாசத்தால் பரிதபிப்பவரும் பாண்டுவின் மூத்தகுமாரருமான இந்தத்தர்மபுத்திரரின்சோகத்தை நீர் விலக்க வேண்டும். நான்குஜாதிக்குமுள்ள தர்மங்களும் நான்குஆச்ரமத்திற்குமுள்ள தர்மங்களும் தர்மார்த்தகாமமோக்ஷங்களாகிய இந்நான்கு வித்தைகளிலுமுள்ள தர்மங்களும் வைதிகர்களுக்குள்ள விசேஷதர்மங்களும் யோகம் ஸாங்கியம் இவைகளைச்சேர்ந்தபழையதர்மங்களும் ஆகியஎல்லாம் உமக்கு நன்றாகத்தெரியும். ஓ! காங்கேயரே! நான்கு ஜாதிகளுக்குரியதும் விரோதமில்லாததும் அனுஷ்டிக்கப்படுவதுமான தர்மநூல் உரையுடன் உமக்குத்தெரியும். பிரதிலோமஜாதிகளுக்கும் மிலேச்சர்களுக்குமுரியதர்மமும் தேசம்ஜாதிகுலங்களுக்குரிய தர்மலக்ஷணமும்வேதத்தில்சொல்லியதும் பெரியோர்களால் சொல்லப்பட்டதுமாகியயாவும் உமக்கு எப்போதும் நன்றாகத்தெரியும். பிரவிருத்தி நிவிருத்தியென்னும் இவ்விருவழிகளும் உமக்குத்தெரியும். இதிகாஸபுராணங்களின் தர்மமும் தர்மசாஸ்திரமும் குறைவின்றி யாவும் உமதுமனத்தில் நிலைபெற்றிருக்கின்றன. புருஷச்ரேஷ்டரே! இவ்வுலகில் சந்தேகப்படும்விஷயங்களனைத்தையும் அந்தச்சந்தேகமறத் தெளிவாகவுபதேசிக்க உம்மைவிட உலகில் ஒருவருமில்லை. அரசரே! அறிவிற்சிறந்த அந்தநீர் யுதிஷ்டிரரின்மனத்திலுதித்த சோகத்தை ஞானத்தால் விலக்கவேண்டும். சிறந்தஞானம்நிரம்பிய உம்மைப் போன்றபெரியோர்கள்தாம் மோகமுள்ளஜனங்களைச் சமாதானஞ் செய்ய வல்லவர்கள்" என்றுசொன்னார்.

---

## ஐம்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் கிருஷ்ணனைப்புகழ்ந்ததும், கிருஷ்ணன் தர்மோபதேசம்செய்யும்படி கூறியதும்.)

எல்லாமறிந்தவரான வாஸுதேவருடைய வசனத்தைக்கேட்டுப் பீஷ்மர், கைகூப்பி முகத்தைச்சிறிதுதூக்கிக்கொண்டு சொல்லத் தொடங்கினர்.

"உலகங்களுடைய பிறப்பு இறப்புக்களுக்குக் காரணமான ஸ்ரீகிருஷ்ணபகவானே! ஹ்ருஷீகேசரே! உமக்குநமஸ்காரம். ஒருவ

ராலும்ஜயிக்கப்படாதநீரே உலகத்திற்குக்கர்த்தரும் ஸம்ஹாரஞ்செய்பவருமாயிருக்கிறீர். ஐம்பெரும்பூதங்கட்கும் அப்புறத்துள்ளவரும் மோக்ஷபதத்திலிருப்பவரும் உலகங்களைப்படைப்பவரும் பரிபாலிப்பவரும் உலகரூபியாயிருப்பவருமான பகவானே! உமக்கு நமஸ்காரம். எல்லாவற்றிற்கும் இருப்பிடமும் யோகிகளுக்கு ஈசருமான பகவானே! மூன்றுலகங்களிலும் மூன்றுகாலங்களிலுமிருக்கும்உமக்கு நமஸ்காரம். மூன்றுஉலகங்களுக்கும் அப்புறமிருக்கும்உமக்கு நமஸ்காரம். புருஷச்ரேஷ்டரே! என்னைப்பற்றிய விருத்தாந்தத்தை நீர் சொல்லும்காரணத்தால், மூன்றுகாலங்களிலும் விளங்கும்திவ்யமான உமது பிரபாவங்கள் எனக்குத் தெரியவருகின்றன. புராதனமான உமதுரூபத்தை உள்ளபடி நான் பார்க்கிறேன். அளவற்றதேஜஸுள்ள [1]ஏழுவிதமான வாயுமார்க்கங்களும் உம்மால் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. உமது தலையால் தேவலோகமும் கால்களால் பூமியும் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. திக்குகள் உமதுகைகளும் ஸூர்யன் கண்ணும் சுக்ரர்வீரியமுமாக நிலைபெற்றிருக்கிறார்கள். காயாம்பூப் போன்ற அழகுள்ளதும் அழிவற்றதும் பீதாம்பரந்தரித்ததுமான உமதுசரீரத்தை மின்னலுடன்விளங்கும் மேகத்தைப்போலப் பார்க்கிறேன். தேவர்களிற்சிறந்ததாமரைக்கண்ணரே! பக்தியுடன் உம்மைச்சரணமடைந்து நற்கதியைவிரும்புமெனக்கு நீர் க்ஷேமத்தைச் சிந்திக்கவேண்டும்" என்றுசொன்னார்.

வாஸுதேவர், "புருஷர்களிற்சிறந்தராஜரே! என்னிடத்தில் உமக்குஉத்தமமான பக்தியிருப்பதால்தான் என்திவ்யரூபம் உமக்குக் காண்பிக்கப்பட்டது. ஓ! ராஜச்ரேஷ்டரே! பக்தியில்லாதவனுக்கும் பக்தியிருந்தும் நேராகச்செல்லாதவனுக்கும் பக்தியும்நேர்மையுமிருந்தும் அடக்கமற்றவனுக்கும் நான் தர்சனம்கொடுப்பதில்லை. ஓ! பாரதரானபீஷ்மரே! நீரோ என்னிடம் எப்பொழுதும் பக்தியுள்ளவரும், நேர்மையுள்ளவரும், அடக்கம், தவம், ஸத்தியம், தானம்இவைகளில் சிறந்தவரும், பரிசுத்தருமானதுபற்றி என்னைக்காணத்தக்க யோக்யதை பெற்றிருக்கிறீர். அரசரே! உமதுதவத்தால் திரும்பவும் ஸம்ஸாரத்திற்குவரத்தகாத உத்தமஉலகங்கள் உமதுவரவை எதிர்பார்க்கின்றன. ஓ! குருச்ரேஷ்டரே! உமதுஜீவகாலம் இன்றுமுதல் இன்னும் [2] முப்பதுநாட்களிருக்கின்றன. அவை நூறுநாட்களுக்குச்சமமான

---

[1] ஸபாபர்வம் ௨௭-வது பக்கத்தின் குறிப்பிற்காண்க.

[2] பீஷ்மர், தாம்படுத்ததுமுதல் ஐம்பத்தெட்டுநாளென்று சொல்லப்போகிறார். அவைகளில் இதுவரைசென்ற நாட்கள் இருபத்தெட்டு; விவரம்வரு

வை. அதன்பின் இக்தச்சரீரத்தைவிட்டு நீர் உமதுநற்கர்மங்களின்பய ஃனயடைந்து விளங்கப்போகிறீர். ஸூர்யன் வடக்குநோக்கிச்செல் லும் காலத்தை எதிர்பார்க்கும் உம்மை ஜ்வலிக்கும் அக்கினிகளுக் கொப்பான வஸுக்களென்னும் இந்தத்தேவர்கள்யாவரும் மறைந்து கொண்டு விமானத்துடன் எதிர்பார்க்கிறார்கள். ஓ! புருஷச்ரேஷ்ட ரே! காலனுக்குள்ளாகும் இவ்வுலகைக் கணக்கிடும்ஸூர்யபகவான் வடதிசைசென்றவுடன், அறிஞர்களுக்குரிய அழிவற்ற உலகங்களை அடையப்போகிறீர். ஓ! பீஷ்மரே! நீர் மேலுலகம்சென்றதும், உலகத் தில் ஞானங்களெல்லாம் மிகக்குறைவுள்ளனவாகும். அந்தக்காரணம் பற்றியே யாவரும் தருமத்தைப்பகுத்தறியக்கருதி உமக்கு அருகில் வந்திருக்கிறார்கள். ஆகையால், உண்மையான எண்ணமுள்ளவரும் ஞாதிகளிறந்தசோகத்தால் அறிவுமாறுதலுற்றவருமான யுதிஷ்டிர ருடைய சோகத்தைவிலக்கத்தக்க அறம்பொருள் ஞானங்களடங்கிய உண்மையானவசனத்தை உபதேசஞ்செய்யும்" என்றுசொன்னார்.

## ஐம்பத்தோராவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் தமக்குச்சக்தியில்லையென்றதும், அவருக்குக் கிருஷ்ணன் அனுக்ரகஞ் செய்ததும், வந்தவர்கள் தம்தம்இடஞ்சென்றதும்.)

பிறகு அறம்பொருள்களடங்கியதும் உலகத்திற்கு நன்மை விளைப்பதுமான ஸ்ரீகிருஷ்ணனுடைய அந்தவாக்கியத்தைக்கேட்டுப் பீஷ்மர் அஞ்சலிசெய்துகொண்டு கிருஷ்ணனைநோக்கி மறுமொழி சொல்லத்தொடங்கினார். "ஓ! மஹாபாஹுவான உலகநாத! அச் சுத! நாராயண! ஓ! சிவனே! உமதுவாக்கியத்தைக்கேட்டுச் சந்தோ ஷத்தில் மூழ்கினவனாகிறேன். வாக்குக்குப்பதியே! உமதுஸந்நிதி யில் நானென்ன சொல்லப்போகிறேன்? வாக்கால் சொல்லத்தகுந்த யாவும் உமதுவாக்கானவேதத்தில் அடங்கியிருக்கின்றன. இவ்வுல கிலும் புத்திமானுக்குப் பிரியமான தேவலோகத்திலும் செய்யப்பட்

---

மாறு:—பீஷ்மர்படுத்தபின் யுத்தம்நடந்தநாள் எட்டு; பிறகு துர்யோதனன் இற ந்தஆசெளசதினம் பதினாறு; இருபத்தைந்தாவது நாள் சிராத்தம்; இருபத் தாறாவது நாள் பட்டணப்ரவேசம்; இருபத்தேழாவது தினம் பட்டாபிஷே கம்; இருபத்தெட்டாவதுதினம் பிரஜைகளை ஆச்வாஸப்படுத்தியது; இருபத் தொன்பதாவது நாள் பீஷ்மரிடம்வந்தது; அன்றுமுதல்மிச்சம் முப்பதுநாள்

டதும் செய்யப்படுகிறதும் செய்யவேண்டியதுமானயாவும் உம்மிட மிருந்து வெளியாயின. உமதுமுன்னிலையில் அறம், பொருள், இன்பம் வீடுகளுடையஸ்வரூபத்தைச் சொல்லுகிறவன் தேவராஜனுன இந்திரனுக்குமுன் தேவலோகத்தைப்பற்றிச் சொல்லுகிறவனுக்கு ஒப்பாவான். ஓ! மதுஸூதனரே! என்மனமோ அம்புகளின் அடிகளால் துன்பப்பட்டிருக்கிறது. என் அங்கங்கள் கஷ்டப்படுகின்றன. புத்தியானது தெளிவடையவில்லை. எவ்விதவிஷயத்தைச்சொல்லவும் என்புத்தியில் தோன்றும்சக்தி சிறிதும் இல்லை. கோவிந்த! விஷத்தீக்கொப்பான சரங்களால் பீடிக்கப்படும் என்னுடையபலமெல்லாம் போயிற்று. பிராணங்கள் வெளியிற்செல்ல வேகத்துடனிருக்கின்றன. உயிர்நிலையான அங்கங்கள் பரிதபிக்கின்றன. என்புத்தி மயக்கமடைகிறது. பலக்குறைவால் எனதுவாக்குத்தடைப்படுகிறது. அப்படிப்பட்ட நான் எவ்விதம் பேசஉற்சாகமடைவேன்? தசார்கரின் குலத்தைவளர்த்தபிரபுவே! நீர் என்னை நன்றாக அனுக்கிரஹிக்கவேண்டும். ஓ! அச்சுதரே! நான் ஒன்றும்சொல்லாததைப்பற்றி க்ஷமிக்க வேண்டும். சிறந்தகைகளையுடையவரே! பிருகஸ்பதியும் உமது ஸந்நிதியில் பேசவல்லவரல்லர். இந்தச்சமயம் பூமியென்றும் ஆகாயமென்றும் திக்கென்றும் பகுத்தறியச் சக்தியுமில்லாத நான் உமது பலத்தால்மாத்திரம் இவ்விதமிருக்கிறேன். ஓ! மதுஸூதனரே! ஆகையால் எல்லாவேதங்களுக்கும் வேதமாய்விளங்கும் நீரே யுதிஷ்டிரனுக்கு வேண்டியஹிதத்தைச் சொல்லவேண்டுகிறேன். உலகங்களுக்குக்கர்த்தரும் சாச்வதருமான உமக்குமுன் என்போன்றவொருவன் குருவின்முன் சிஷ்யன்போல எங்ஙனம் பேசக்கூடும்?" என்று சொன்னார்.

கிருஷ்ணன், "கௌரவர்களிற் சிறந்தவரும் யாவுமறிந்தவரும் வீர்யமும் ஸத்வகுணமும் மிகமேலாக நிலைபெற்றவருமான உமக்கு இவ்விதமானவசனம் யுக்தமானதுதான். ஓ! காங்கேயரே! பிரபுவான பீஷ்மரே! அம்புகளின் அடிகளால் பீடையிருப்பதாக என்னிடம்சொன்னதற்கு, இதோ நான் அனுக்ரஹித்து உமக்கு வரம்தருகிறேன்; பெற்றுக்கொள்ளும். கங்காபுத்ரரே! உமதுசரீரத்திலுள்ள சோர்வும் நோயும் எரிச்சலும் மயக்கமும் மற்றுமுள்ளபீடைகளும் விலகுவதுடன் உமக்குப் பசிதாகமும் உண்டாகாமலிருக்கட்டும். குற்றமற்றவரே! உமதுபுத்திக்குச் சிறிதும்களைப்புண்டாகாமல் வித்தைகள்யாவும் தெளிந்துவிளங்கட்டும். பீஷ்மரே! மேகங்களால்விடுபட்டசந்திரமண்டலம்போல ரஜஸ் தமஸ் என்னும் குணங்களால்விடு

பட்டஉமதுமனம் எப்பொழுதும் ஸத்வகுணமுள்ளதாகவே இருக்கட்டும். அறம்பொருள்களைப்பற்றி எவ்விதவிஷயத்தை நீர் ஆலோசித்தாலும் அவைகளில் உம்முடையபுத்தி கூர்மையாகச்செல்லட்டும். ஒப்பில்லாதசக்தியுள்ள அரசப்புலியே! ஞானமென்னும் திவ்வியக்கண்ணையடைந்து இவ்வுலகிலுள்ள நான்குவிதப்பிராணிக்கூட்டங்களையும் பார்க்கப்போகிறீர். ஓ! பீஷ்மரே! அழுக்கின்றித்தெளிந்த ஜலத்தில் மீனைப்போல ஞானக்கண்ணுடன் கூடினநீர் நான்குவிதமான ஜனக்கூட்டங்களையும் உள்ளபடி பார்க்கப்போகிறீர்" என்றுசொன்னார். இவ்விதம் சொல்லும்காலத்தில் வியாஸர்முதலிய மஹரிஷிகளனைவரும் ரிக், யஜுஸ், ஸாமம் என்னும் வேதவாக்கியங்களால் ஸ்ரீகிருஷ்ணபகவானைப் போற்றினார்கள். எல்லாக்காலங்களிலும் உண்டாகக்கூடிய திவ்யமான புஷ்பங்களின்வர்ஷம் பாண்டவர்களும் பீஷ்மரும் ஸ்ரீகிருஷ்ணபகவானுமிருக்குமிடத்தில் ஆகாயத்திலிருந்து பொழிந்தது. வாத்தியங்கள்யாவும் வாசிக்கப்பட்டன. அப்ஸரஸுகளின் கூட்டங்கள் ஆனந்தகானம்செய்தன. நல்லமணமுள்ளதும் பரிசுத்தமும் மங்களமுமானகாற்று இனிமையாகவீசிற்று. திக்குகள் தெளிந்து அழகாயிருந்தன. மிருகங்களும் பக்ஷிகளும் சாந்தமான மங்களத்வனியை வெளியிட்டன. எவ்விதவஸ்துவும் அந்தச்சமயத்தில் விரும்பத்தகாதனவும் அமங்களமுமாகக்காணப்படவில்லை. பிறகு ஒருமுகூர்த்தத்தில் ஆபிரங்கிரணமுள்ள ஸூர்யபகவான் ஏகாந்தமானவிடத்தில் அரண்யத்தைஎரிப்பவர்போல மேற்றிசையில் காணப்பட்டார். உடனே மகரிஷிகள்யாவரும் எழுந்து ஸ்ரீகிருஷ்ணபகவானையும் பீஷ்மரையும் யுதிஷ்டிரராஜரையும் விடைகேட்டுக்கொண்டார்கள். பிறகு பாண்டவர்களோடுகூடிய ஸ்ரீகிருஷ்ணபகவானும் ஸாத்யகியும் ஸஞ்சயனும் சாரத்வதரான கிருபரும் மஹரிஷிகளை நமஸ்கரித்தார்கள். இவ்விதம் பூஜிக்கப்பட்டவர்களும் தர்மத்தில் விருப்பமுள்ளவர்களுமான மஹரிஷிகள்யாவரும் நாளை இங்கு வந்துசேருவோமென்று சொல்லிக்கொண்டு இஷ்டப்படி வேகமாகச் சென்றார்கள். அங்ஙனமே ஸ்ரீகிருஷ்ணபகவானும் பாண்டவர்களும் பீஷ்மரிடம் விடைபெற்றுக்கொண்டு பிரதக்ஷிணமாகத்திரும்பி அழகானதேர்களில் ஏறினார்கள். பிறகு ஸுவர்ணமயமாயும் அழகாயுமிருக்கிற [1]கூபரமென்னும்அங்கத்தையுடையதேர்களும் மலைகள்போன்றமதமுள்ளயானைகளும் கருடன்போலவேகமாகச்செல்லும் குதிரைகளும் கையில் வில்முதலியவற்றையேந்தியகாலாட்களும் சேர்ந்தசேனையானது ரிக்ஷ

1 நுகத்தைத்தாங்கும் ஓர்உறுப்பு.

வான் என்னும்மலைக்கு முன்னும்பின்னும்நர்மதையென்னும்நதிபோல ரதங்களுக்கு முன்னும்பின்னும் வேகமாகப் பெருகிச்சென்றது. அவ்விதம்சென்ற அச்சேனையைச்சந்தோஷப்படுத்துவதும் ஸூர்யவெப்பத்தால் ரஸம்குறைந்த ஓஷதிகளைத் திரும்பவும் அவைகளின் குணத்துடன்சேர்த்துவைப்பதுமான பெருமைதங்கிய சந்திரமண்டலம் கிழக்குத்திக்கிலுதித்தது. பிறகு அமராவதிக்குச் சமமானகாந்தியுள்ள பட்டணஞ்சென்று அந்த ஸ்ரீகிருஷ்ணபகவானும் பாண்டவர்கள் யாவரும் சிரமமுற்றசிங்கங்கள் குகைகளையடைவதுபோல்த் தந்தம் அரண்மனைகளையடைந்தார்கள்.

---

## ஐம்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணபகவான் யுதிஷ்டிரர்முதலியோர் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு பீஷ்மரிடம் சென்றது.)

பிறகு வீடுசென்று சயனித்து நித்திரைசெய்த ஸ்ரீகிருஷ்ணபகவான் பொழுதுவிடிய ஒரு ஜாமமிருக்கையில் விழித்துக்கொண்டார். அந்தமாதவர் தியானநிஷ்டையிலிருந்து அறியவேண்டியவற்றையெல்லாம் அறிந்தபின் ஸநாதனமானபிரம்மத்தைத் தியானஞ்செய்தார். நல்லகல்விமான்களும் இனிமையானகுரலுள்ளவர்களும் ஸ்தோத்திரங்களையும் புராணங்களையும் அறிந்தவர்களுமான ஸூதர்கள் உலகங்களுக்குக் கர்த்தரும் பிரஜைகளுக்கு ஈசுவரருமான வாஸுதேவரைத் துதித்தார்கள். சிலபாடகர்கள் கைத்தாளத்துடன் பாடினார்கள். சிலர் சங்கம் மிருதங்கம்முதலிய பலவாத்தியங்களை வாசித்தார்கள். வீணை வேணு பணவமுதலிய வாத்தியங்களின் மிகவினிமையானத்வனியானது மிகுதியாய் ஸ்ரீகிருஷ்ணனுடைய சிரிப்பதுபோன்றவீட்டிற் கேட்கப்பட்டது. பிறகு யுதிஷ்டிரமஹாராஜாவின் அரண்மனையிலும் மங்களமானவைகளும் வாத்தியங்களாலும் பாட்டுக்களாலும் விரிவானவைகளும் மதுரமானவைகளுமான வாக்குக்கள் ஓங்கிவிளங்கின. பிறகு எழுந்துஸ்நானஞ்செய்தவரும் தாசார்ஹரும் சிறந்தகைகளையுடையவருமான அச்சுதர் அஞ்சலியுடன் ரஹஸ்யமாக மந்திரங்களைஜபித்துப் பின்பு அக்னிகளைஆச்ரயித்துநின்றார். பிறகு நான்குவேதங்களுமறிந்த ஆயிரம்பிராம்மணர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ஆயிரம்ஆயிரம்பசுக்களளித்து மாதவர் அவர்

களின் ஆசீர்வாதங்களைப் பெற்றார். பிறகு பசுமுதலியமங்களத்திர வியங்களைத்தொட்டு அழுக்கற்ற கண்ணாடியில் தம்மையும் பார்த்த பிறகு ஸாத்யகியைநோக்கி, "ஓ! சினியின்புத்திரனே! பெரியதேஜஸுள்ளயுதிஷ்டிரராஜர் பீஷ்மரைக்காணவித்தராயிருக்கிறாரவென்று அரண்மனைசென்று அறிந்துவா" என்றார். ஸ்ரீகிருஷ்ணபகவானின் வசனத்தைக்கேட்ட ஸாத்யகி வேகமாக யுதிஷ்டிரராஜாவின் அருகிற் சென்று, "ஓ! ராஜரே! யாவுமறிந்தவாஸுதேவருடையதேர் குதிரைபூட்டி ஸஜ்ஜமாயிருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணபகவான் பீஷ்மரிடஞ் செல்ல உங்கள்வரவை எதிர்பார்த்திருக்கிறார். அதிக காந்தியுள்ள தர்மராஜரே! மேல்நடக்கத்தக்க காரியத்தை நீர் யுக்தம்போற்செய்ய வேண்டும்" என்றான். இவ்விதஞ்சொல்லப்பட்ட தர்மபுத்திரரான யுதிஷ்டிரர், "ஒப்பற்றகாந்தியுள்ள ஓ! அர்ஜுன! எனது சிறந்த ரதம் ஸஜ்ஜமாகட்டும். சேனைகள் கூடவராமல் நாம்மாத்திரம் போவோம். தர்மிஷ்டர்களிற் சிறந்தபீஷ்மருக்குப் பீடையின்றி முன் செல்லும் நமதுபரிஜனங்கள்யாவும் விலகவேண்டும். குந்திபுத்திரனை தனஞ்சய! இன்றுமுதல் பீஷ்மர் மிகவும்ரஹஸ்யமான தத்துவத்தை உபதேசிக்கப்போகிறபடியால் விவேகமற்ற ஜனங்கள் அங்கு வாராமலிருக்க விரும்புகிறேன்" என்றார். யுதிஷ்டிரருடைய அந்த வசனத்தைக்கேட்டு, நரச்ரேஷ்டனும் குந்திபுத்ரனுமான தனஞ்சயன் உடனே சிறந்த ரதம் ஸஜ்ஜமாயிருப்பதாக அவரிடம் வந்து தெரிவித்தான். பிறகு யுதிஷ்டிரர்முதலிய ஐந்துபாண்டவர்களும் ஐந்துபூதங்கள்போல ஒன்றுசேர்ந்து ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய விடுதிசென்றார்கள். மஹாத்மாக்களான பாண்டவர்கள்வருதலும் புத்திமானான ஸ்ரீகிருஷ்ணனும் ஸாத்யகியுடன் தேரிலேறினார். அந்தப் புருஷச்ரேஷ்டர்கள் ரதத்திலிருந்து இன்னஇன்னசெய்வதென்று ஸங்கேதம்செய்துகொண்டபின் இரவு இனிதாகக்கழிந்ததாவென்று வினவிக்கொண்டு மேகம்போலக்கர்ஜிக்கும் ரதங்களுடன் புறப்பட்டார்கள். ஸ்ரீவாஸுதேவரின் தேர்ப்பாகனான தாருகன் வலாஹகம், மேகபுஷ்பம், சைப்யம், ஸுக்ரீவமென்னும் குதிரைகளைத் தூண்டினான். ராஜாவே! தாருகனாலேவப்பட்டனவும் பெரிய பலமுள்ளனவுமான வாஸுதேவருடைய குதிரைகள் குளம்பின்முனைகளால் பூமியைப் பறித்துக்கொண்டு ஆகாயத்தை விழுங்குவனபோல அதிவேகமாகச் சென்றன. உடனே எல்லாத்தர்மங்களுக்கும் இருப்பிடமான குருக்ஷேத்திரம் வந்திறங்கித் தேவர்களுடன் பிரம்மதேவர் விளங்குவதுபோல மஹரிஷிகளுடன் சரதல்பத்தில் விளங்கும் பீஷ்மரிருக்கும்

இடஞ் சென்றார்கள். அங்கு சென்ற ஸ்ரீகிருஷ்ணனும் ஸாத்யகியும் யுதிஷ்டிரரும் பீமஸேனனும் அர்ஜுனனும் இரட்டையரும் ரதத்தி லிருந்து இறங்கித் தமது வலக்கரங்களைத் தூக்கி அங்குள்ள ரிஷிகளைப் பூஜித்தார்கள். நக்ஷத்திரங்களால் சூழப்பட்ட சந்திரன்போல அவர்களால்சூழப்பட்ட யுதிஷ்டிரராஜர் இந்திரன் பிரம்மதேவரிடம் வருவதுபோலப் பீஷ்மரிடம் வந்தார். ஆகாயத்திலிருந்து கீழேவிழுந்த ஆதித்யன்போலச் சரதல்பத்தில் படுத்திருக்கும் பெரியகைகளையுடைய அந்தப்பீஷ்மரை யுதிஷ்டிரராஜர் பயத்தால்நடுக்கமுற்றுக் கண்டனர்" என்றார்.

## ஐம்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(நாரதர், தர்மபுத்திரர்முதலியோரைப்பார்த்துப் பீஷ்மரிடம் தர்மத்தைப் பற்றிவினவும்படி கூறியதும், தர்மபுத்திரர்சொற்படி ஸ்ரீகிருஷ்ணன் பீஷ்மரைப்பார்த்துத் தர்மத்தைஉபதேசிக்கும்படி சொல்லியதும்.)

ஜனமேஜயர், "ஓ! மஹரிஷியே! சேனைகளெல்லாம்கொல்லப் பட்டபிறகு தர்மபுத்தியுள்ளவரும் மஹாபராக்ரமசாலியும் ஸத்யஸந்தரும் மனத்தைஜயித்தவரும் மஹாபாக்கியம்பெற்றவரும் சந்தனுகுமாரரும் அழிவற்றவரும் தேவவ்ரதரும் கங்காபுத்ரருமான பீஷ்மர் வீரசயனமான சரதல்பத்தில்படுத்திருக்கவும் புருஷப்புலியான அவரைப் பாண்டவர்கள்வந்து ஆராதிக்கவும் வீரர்களின்ஸமாஜம்சேர்ந்தவுடன் எவ்விதக்கதைகள் நடந்தனவென்பதை எனக்குச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

"ராஜாவே! கௌரவர்களின்பாட்டனாரான பீஷ்மர் சரதல்பத்தி லிருக்கும்பொழுது ஸித்திபெற்ற நாரதர்முதலிய ரிஷிகளும் யுதிஷ்டிரர்முதலிய யுத்தத்தில்மிஞ்சின அரசர்களும் திருதராஷ்டிரன், ஸ்ரீகிருஷ்ணபகவான், பீமன், அர்ஜுனன், நகுலன், ஸஹதேவன் ஆகிய இவர்களும் அவரிடம்வந்துசேர்ந்தார்கள். மஹாத்மாக்களான அவர்கள்யாவரும் பூமியில்இறங்கிய ஸூர்யபகவான்போல விளங்கும் பாரதர்களின்பிதாமஹரான பீஷ்மரைக்கண்டு சற்றுச்சோகமுள்ளவரானார்கள். பிறகு, திவ்யஞானமுள்ள நாரதர் ஒருமுகூர்த்தநேரம் ஆலோசித்துப்பின் பாண்டவர்களையும் கொல்லப்பட்டவர்களைத்தவிர மிஞ்சிய அரசர்கள்யாவரையும்நோக்கி, "அரசர்களே! காலத்திற்குத்தக்க

படி சொல்லுகிறேன். பீஷ்மரிடம் அறியவேண்டியவைகளையெல்லாம் ப்ரச்னஞ்செய்யலாம். ஓ! பாரத! பிராணனைவிடவிருப்பமுள்ள இந்தப் பீஷ்மர் ஸூர்யன்போல அஸ்தமயமடையப்போகிறார். ஆகையால் யாவரும் அவரிடம் வேண்டியதைக்கேளுங்கள். நான்குஜாதிகளுக்குமுள்ள பலவிதமான தர்மங்களனைத்தையும் இவர் அறிகிறார். கிழவரான இவர் சரீரத்தைவிட்டுப் பரலோகத்தையடையுமுன்னமே மனத்திலுள்ள ஸந்தேகங்களையெல்லாம் வேகமாகக் கேட்டுத் தெளிந்துகொள்ளுங்கள்" என்றுசொன்னார். நாரதர் இவ்விதஞ்சொன்னவுடன் அரசர்கள்யாவரும்பீஷ்மரையடைந்தார்கள். அருகில்சென்றும், அரசர்கள் பீஷ்மரிடம் ப்ரச்னம்பண்ணத் தைர்யமில்லாதவர்களாய் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டிருந்தார்கள். உடனே பாண்டு குமாரரானயுதிஷ்டிரராஜர் ஸ்ரீகிருஷ்ணபகவானைநோக்கி, "ஓ! தேவகிபுத்ரரே! பிதாமஹரிடம் பிரச்னஞ்செய்ய உம்மைத்தவிர வேறெவரும் இங்கு சக்தியுள்ளவரல்லர். மதுவைக்கொன்றவரும் யதுக்களில் சிறந்தவருமான ஐயா! இங்குள்ள எங்கள்யாவருக்கும்உத்தமரும் எல்லாத்தருமமும்தெரிந்தவருமான நீர் முதலில் பிதாமஹரிடம் பேசவேண்டும்" என்றுசொன்னார். யுதிஷ்டிரரால் இப்படிச்சொல்லப்பட்ட ஸ்ரீகிருஷ்ணபகவான் அப்போது தடுக்கத்தகாதபடி பீஷ்மரெதிரில்சென்று, "ஓ! ராஜச்ரேஷ்டரே! ராத்திரிகாலம் உமக்கு ஸுகமாகச்சென்றதா? நன்றாகத்தெளிந்துவிளங்கும்புத்திஉமக்குண்டாயிற்றா? குற்றமற்றவரே! ஞானங்கள்யாவும் உமதுமனத்தில் தோன்றுகின்றனவா? உமதுமனம் சோர்வின்றி உற்சாகமுள்ளதாயிருக்கிறதா?" என்றுவினவினார்.

பீஷ்மர் சொல்லத்தொடங்கினார். "விருஷ்ணிகுலத்திலுதித்தவரே! உமது அநுக்கிரஹத்தால் என்சரீரத்திலுள்ளஎரிச்சலும் ச்ரமமும் மயக்கமும் வாட்டமும் தளர்ச்சியும் நோயுமாகியயாவும் உடனே விலகின. உத்தமமானஒளியுள்ளவரே! சென்றது நிகழ்கின்றது வருவதுயாவற்றையும் கையிலுள்ளகனியைப்போலப் பார்க்கிறேன். அழிவற்றவரே! வேதத்திற்சொல்லிய அக்நிஹோத்ரமுதலியதருமங்களும் வேதாந்தத்தில்சொல்லிய சமம்தமமுதலியதர்மங்களும் பெரியோர்களால்சொல்லப்படும் தர்மமுமாகியயாவும் நீர் வரமளித்தபடி என் மனத்தில் பிரகாசிக்கின்றன. ஜனார்த்தனரே! கேசவரே! தேசம்ஜாதிகுலம் இவைகளின்தர்மங்களும் நான்குஆச்ரமங்களுக்குமுள்ளதர்மங்களும் ராஜதர்மங்களுமாகிய எல்லாவற்றையும் நன்றாகஅறிகிறேன். ஜனார்த்தனரே! எந்தத்தருமத்தில் எந்தப்பிரிவைக் கேட்கிறீர்

களோ அதையெல்லாம் சொல்லுகிறேன். உம்முடைய அநுக்ரஹத்தால் சுபமானபுத்தி என்மனத்தில் உண்டாயிருக்கிறது. உம்முடைய மூர்த்தியைச் சிந்தித்தபுண்ணியத்தால் நான் திரும்பவும் இளமைப்பருவத்திலிருப்பவன்போலாகிறேன். ஓ! ஜனார்த்தனரே! உம்முடைய பிரஸாதத்தால் நற்கதியைச் சொல்ல வல்லவனாயிருக்கிறேன். ஆனால் நீர் நேரில் யுதிஷ்டிரனுக்குத் தர்மோபதேசஞ்செய்யாததற்கு யாதுகாரணம்? மாதவரே! இதுவிஷயத்தில் உம்முடைய உத்தேசம்என்னவென்பதை விரைவாகச்சொல்ல வேண்டுகிறேன்" என்றுசொன்னார்.

கிருஷ்ணபகவான் சொல்லத்தொடங்கினார். "ஓ! கௌரவரே! கீர்த்திக்கும் ச்ரேயஸுக்கும் நானேமூலமென்று தெரிந்துகொள்ளும். உத்தமங்களும்அதமங்களுமான வஸ்துக்கள்யாவும் என்னால் உண்டுபண்ணப்படுகின்றன. சந்திரன் குளிர்ந்த கிரணங்களுள்ளவனென்றால் ஆச்சர்யப்படும்மனிதன் உலகத்தில் யாராவதுஉண்டா? அதுபோல எனக்குஉலகம்நிறைந்தகீர்த்தியுண்டென்பது எவனுக்கு ஆச்சர்யமாகும்? ஆகையால், பெரியசோபையுள்ளஉமக்கு (இன்னும்) அதிகமான கீர்த்தியுண்டாகக்கருதி விஸ்தாரமானபுத்தியைஉமக்குக் கொடுத்தேன். அரசச்ரேஷ்டரானபீஷ்மரே! இந்தப்பூமி நிலைபெற்றிருக்குங்காலம்வரையில் உம்முடையகீர்த்தி அழிவற்றதாகி உலகங்களில்பரவி எங்கும்ஸஞ்சரிக்கப்போகிறது. பாண்டவரின்பிரச்னங்களுக்கு நீர் அளிக்கும்விடையாவும் வேதவசனம்போலப் பூதலத்தில் உறுதியாயிருக்கப்போகிறது. உமதுவசனத்தைப் பிரமாணமாகக்கொண்டு தன்மனத்தால்தன்னையறியும்மனிதன் சரீரஞ்சென்றபின் எல்லாப் புண்ணியங்களின்பயனையும் அநுபவிப்பான். ஓ! பீஷ்மரே! இவ்வாறு உம்முடையகீர்த்தி மிகப்பெருமையாக உலகத்தில் பரவ வேண்டி நான் உமக்குத் திவ்யஜ்ஞானத்தைக் கொடுத்தேன். பூதலத்தில் மனிதன்கீர்த்தி விளங்குங்காலம்வரையில் அவன்பெருமை அழிவற்றதாயிருப்பது நிச்சயம். யுத்தத்தில்மிச்சமான அரசர்கள் யாவரும் பலதர்மங்களையும்கேட்க விருப்பத்துடன் உம்மைச்சுற்றி நான்குபுறத்திலும் உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்களுக்கு நீர் உபதேசஞ்செய்யும். நீர் பிராயத்தில்பெரியவரும் கல்வியும்நன்னடையுமுள்ளவரும் க்ஷத்ரியதர்மங்களும் மற்றுமுள்ளதர்மங்களுமாகியஎல்லாவற்றிலும் ஸமர்த்தருமாயிருக்கிறீர். உமதுபிறப்புமுதல் பாபமென்பது சிறிதும் உம்மிடம்இருந்ததைக் காணேன். அரசர்கள் அனைவரும் உம்மை எல்லாத்தர்மங்களையும் அறிந்தவரென்று அறிகிறார்கள்.

அரசரே! தகப்பன் புத்திரர்களுக்குஉபதேசிப்பதுபோல நீர் அவர்களுக்கு நல்லநீதியை உபதேசிக்கவேண்டும். மஹரிஷிகளையும் தேவர்களையும் எப்பொழுதும்உபாஸித்தநீர் இவர்களுக்கு இந்தத்தருமங்களை மிச்சமின்றி அவசியம்உபதேசிக்கவேண்டும். தருமத்தைத்தெரிந்துகொள்ளவிருப்பத்துடன் கேட்பவர்களுக்குக் கேட்கப்பட்டவனுனதெரிந்தவன் தர்மத்தை உபதேசிக்கவேண்டியது கடமையாகுமென்பது பெரியோர்களின்கருத்து. பிரபுவே! அவ்விதம்உபதேசியாவிட்டால் கொடுமையானதோஷம் உண்டாகும். ஆகையால்,வித்வானுனபாதச்ரேஷ்டரே! தெரிந்துகொள்ளும்விருப்பத்துடன் புத்திரர்களாலும் பௌத்திரர்களாலும் கேட்கப்பட்ட ஸநாதனதர்மங்களை அவர்களுக்கு உபதேசஞ்செய்யும்" என்றுசொன்னுர்.

---

## ஐம்பத்துநான்காவது அத்தியாயம்.

## ராஜ தர்மம். (தொடர்ச்சி.)



**(பீஷ்மர் தர்மபுத்திரரைக்கொண்டாடியதும், ஸ்ரீகிருஷ்ணன் தர்மபுத்திரர் நாணுவதாகக்கூற, பீஷ்மர் க்ஷத்திரியன் யுத்தத்தில்கொல்லுவது தருமமென்று ஸமாதானஞ் சொல்லியதும், தர்மபுத்திரர் பீஷ்மரைவணங்கியதும்.)**

குருவம்சத்திலுதித்த மஹாதேஜஸுள்ள பீஷ்மர் சொல்லத்தொடங்கினுர். "ஓ! கோவிந்த! நீர் ஸர்வப்பிராணிகளினுள்ளுமிருக்கும் சாச்வதமான ஆத்மாவாகிறீர். உம்முடையஅனுக்ரஹத்தால் என்வாக்கும் மனமும் உறுதியாயிருக்கின்றன. இப்போது தர்மங்களைச்சொல்லத் தொடங்குகிறேன். தருமபுத்தியுள்ள யுதிஷ்டிரன் என்னிடம்தர்மங்களைக்கேட்பானுகில் நான் மிக்கசந்தோஷத்துடன் அவைகளெல்லாவற்றையும் சொல்லுகிறேன். தருமபுத்தியுள்ளமஹாத்மாவான எவன் அரசனுயிருப்பதையறிந்து மஹரிஷிகள்யாவரும் மிகக்களிக்கிறார்களோ அந்தயுதிஷ்டிரன் என்னைக் கேட்கட்டும். தருமங்களைச்செய்து உலகத்தில் விளங்கும்கீர்த்திபெற்ற கௌரவர்கள்யாவரினும் எவனுக்குச்சமமாய் ஒருவருமில்லையோ அந்தயுதிஷ்டிரன் என்னை ப்ரச்னம்பண்ணட்டும். தைரியமும் பொறுமையும் அடக்கமும் பிரம்மசர்யமும் தர்மமும் பராக்ரமமும் பெருமையுமாகிய இக்குணங்கள் எப்பொழுதும் எவனிடம் நிலைபெற்றிருக்கின்றனவோ அந்தயுதிஷ்டிரன் என்னைக் கேட்கட்டும். அதிதிகள் அடுத்தவர்கள்

ஸம்பந்திகள் வேலைக்காரர்கள் ஆகியஇவர்களை மிகவும்பெருமையுடன் ஆதரித்துவரும்யுதிஷ்டிரன் என்னை வினவட்டும். ஸத்யம், தானம், தவம், சௌர்யம், பொறுமை, சுறுசுறுப்பு, பரபரப்பில்லாமையாகிய இவைகள்யாவும் யாரிடம் கூடிவிளங்குகின்றனவோ அந்தயுதிஷ்டிரன் என்னை ப்ரச்னஞ்செய்யட்டும். ஆசையாலும் அவஸரத்தாலும் பயத்தாலும் பொருள்கிடைக்கும்காரணத்தாலும் அதருமத்தினிடமணுகாததருமபுத்தியுள்ளயுதிஷ்டிரன் என்னைக்கேட்கட்டும். அதிதிகளிடம்அன்புள்ளவனும் ஸாதுக்களிடம்நித்தியதானமிடுபவனும் ஸத்யம், பொறுமை, ஞானம், யாகம், அத்தியயனம் மற்றுமுள்ள தருமமுமாகியஇவைகளில் க்ஷணமும்தவறாமல்நிலைத்தவனும் பொறுமையுள்ளவனும் பெரியோர்களிடமிருந்து ரஹஸ்யமானதத்துவங்களைக்கேட்டவனுமான யுதிஷ்டிரன் என்னைக் கேட்கவேண்டும்" என்றுசொன்னார். ஸ்ரீகிருஷ்ணபகவான், "ஓ! ராஜரே! யுதிஷ்டிரர் மிக்கவெட்கத்தாலும் சாபம்வருமென்றபயத்தாலும் உமது அருகில் நெருங்காமலிருக்கிறார். உலகத்திற்கரசரான யுதிஷ்டிரர் உலகத்தைநாசஞ்செய்த காரணத்தாலும், பூஜிக்கத்தக்கபெரியோர்களையும் மரியாதைசெய்யத்தக்கஸம்பந்திகளையும் பந்துக்களையும் ரக்ஷிக்கத்தக்கபக்தர்களையும் பூஜிக்கத்தக்கஆசார்யர்களையும் பாணங்களால்அடித்தகாரணத்தாலும் தமக்குச்சாபம்நேரிடுமோவெனப் பயந்து உமதுஸமீபத்தில் வாராமலிருக்கிறார்" என்றுசொன்னார்.

(அதனைக்கேட்ட) பீஷ்மர், "கிருஷ்ணா! தானமும் அத்தியயனமும் தவமும் பிராம்மணர்களுக்குத் தருமமாவதுபோல க்ஷத்திரியர்களுக்கு யுத்தத்தில் [1]சரீரத்தைவிடுவது தருமமாகும். தந்தையும் பாட்டனும் உடன்பிறந்தாரும் ஆசாரியரும் ஸம்பந்திகளும் பந்துக்களும் கெட்டஎண்ணத்துடன் யுத்தஞ்செய்யவருவார்களானால் அவர்களைக்கொல்வது தர்மந்தான். கேசவரே! ஆசையால் நெறிதவறி யுத்தத்திற்குவரும்பாபிகள் குருக்களானாலும் அவர்களைக்கொல்லும் க்ஷத்திரியன் தர்மந்தெரிந்தவனாவான். பேராசைபிடித்து ப்ராசீனமான தர்மத்தின்மரியாதையைப் பாராமல் செல்லும்மனிதனை யுத்தத்தில்கொல்லும்அரசன் தர்மந்தெரிந்தவனாகிறான். யுத்தங்களில் உதிரமென்னும்வெள்ளமுள்ளதும் கேசங்களென்னும்புல்லுகளுள்ளதும் யானைகளென்றமலையுள்ளதும் த்வஜங்களென்னும் மரங்களுள்ளதுமாகப் பூமியைச்செய்யும் க்ஷத்திரியன்தான் தர்மந்தெரிந்தவன். யுத்தத்திற்கழைக்கப்பட்ட க்ஷத்திரியன் அவச்யம் யுத்தஞ்செய்யவேண்

1 பகைவர்களின் சரீரத்தைவிழச்செய்வது என்றும் கொள்ளலாம்.

டும். க்ஷத்திரியனுக்கு இவ்விதயுத்தம் தருமமென்றும் இவ்வுலகம் விண்ணுலகம் இரண்டிலும் நற்கதிக்குக் காரணமென்றும் மனுகூறினர்" என்றுசொன்னார். பீஷ்மரால் இவ்விதஞ் சொல்லப்பட்டபின் யுதிஷ்டிரர் மிகவணக்கமாக அவர்கண்ணுக்கெதிரிற்சென்று அவர் பாதங்களைத்தொட்டு வந்தனஞ்செய்தார். வில்லாளிகளிற்சிறந்த பீஷ்மரும் ஸந்தோஷத்துடன் யுதிஷ்டிரரை உச்சிமோந்து பிரியமாக உட்காரச்சொல்லி, "குருச்ரேஷ்டனே! அப்பா! சிறிதும்அச்சமின்றி விசுவாஸத்துடன் உனக்கு வேண்டியதை என்னிடம்கேள்" என்று சொன்னார்.

---

## ஐம்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு ராஜதர்மத்தைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர் ஸ்ரீகிருஷ்ணபகவானையும் பிதாமஹரான பீஷ்மரையும் வணங்கி, அங்குள்ளபெரியோர்கள் எல்லாருடைய அனுமதியும் பெற்று ப்ரச்னஞ்செய்யத்தொடங்கினார். "ஓ! ராஜரே! தர்மமறிந்தோர்கள் க்ஷத்திரியர்களுடைய தருமமேசிறந்ததென்று கூறுகிறார்கள். இஃது எனக்குப்பெரியசுமையாகத் தோன்றுகிறது. [1]ஆகையால், ஓ! பிதாமஹரே! க்ஷத்திரியதர்மங்களை விரிவாக எனக்கு உபதேசிக்கவேண்டும். ராஜதர்மமானது உலகத்திலுள்ள பிராணிகள் யாவற்றிற்கும் முக்கியஆதாரமானது. கௌரவரே! அறமும் பொருளும் இன்பமுமாகிய மூன்றுவகைப் பயன்களும் ராஜதர்மத்தில் நிலைபெற்றிருக்கின்றன. மோக்ஷத்திற்குரியதர்மம்யாவும் மிகத்தெளிவாக இதிலடங்கியிருக்கின்றன. கடிவாளம் குதிரையை அடக்குவதுபோலவும் அங்குசம் யானையையடக்குவதுபோலவும் ராஜநீதி உலகத்தை அடக்குவதாகக் கூறப்படுகிறது. பரம்பரையாக அரசர்கள்செலுத்திவரும்இந்நீதி முறையினின்று மாறுபடுமானல் உலகம்யாவும் நிலைபெறாமல் மிகக்கஷ்டமுள்ளதாகும். உதயமடைந்தஸூர்யன் அசுபமானஇருளை விலக்குவதுபோல ராஜநீதி உலகத்திற்குக் கெடுதியையுண்டுபண்ணும்தீங்குகளை விலக்கும். ஆகையால், பாரதச்ரேஷ்டரான பிதாமஹரே! தர்மங்களைக்காப்பவர்களில் உத்தமரானநீர் எனக்காக (இவ்விதக் குணம்பொருந்திய) ராஜதர்மங்களை முதலில் உபதேசிக்க

---

[1] இங்கு ஒருசொல் விடப்பட்டது.

வேண்டும். சத்துருக்களைத் தபிக்கச்செய்கிறவரே! எங்கள்யாவருக்கும் ரகஸ்யமானசாஸ்திரங்கள் உம்மால் ஏற்படுத்தப்படட்டும். ஸ்ரீகிருஷ்ணபகவான் உம்மையே அறிவில்சிறந்தவராக அபிமானிக்கிறார்" என்றார்.

பீஷ்மர் உபதேசத்தொடக்கம்.

பீஷ்மர் சொல்லத்தொடங்கினார். "உத்தமமான தர்மத்தையும் உலகத்துக்குக்கர்த்தாவான ஸ்ரீகிருஷ்ணபகவானையும் பிராம்மணர்களையும் வணங்கிச் சாச்வதமானதர்மங்களைச்சொல்லஆரம்பிக்கிறேன். ஓ! யுதிஷ்டிர! என்னால் விவரிக்கப்படும் க்ஷத்திரியதர்மங்களனைத்தையும் உனக்கிஷ்டமான மற்றுமுள்ளதர்மத்தையும் கவனத்துடன் கேள். ஓ! குருச்ரேஷ்ட! பிரஜைகளை ஸந்தோஷிப்பிப்பதைவிரும்பும் அரசன் முதலிலேயே விதிப்படி தேவர்களையும் பிராம்மணர்களையும் ஆராதிப்பவனாயிருக்கவேண்டும். குருச்ரேஷ்ட! தேவர்களையும் பிராம்மணர்களையும் ஆராதிப்பதால் அரசன் தருமத்தைச் செய்யாமையாலுண்டாகும் தோஷத்திலிருந்து விடுபடுவதோடு உலகத்தாலும் பூஜிக்கப்படுகிறான். மகனே! யுதிஷ்டிர! எப்பொழுதும் பௌருஷத்துடன் முயற்சியுள்ளவனாயிரு. அரசர்களுக்குப் பௌருஷமின்றித் தெய்வம் எவ்விதக்கார்யத்தையும் ஸாதிக்கமாட்டாது. தெய்வமும் பௌருஷமுமாகிய இவ்விரண்டும் வண்டிக்கு உருளைகள்போல எல்லாக் கார்யங்களுக்கும் பொதுவான ஸாதனங்களாகும். (இவ்விரண்டிலும்) பௌருஷமென்பது மேலானதென்று நான் எண்ணுகிறேன். தன்முயற்சியால்செய்த கர்மத்தின்முடிவில் அதுபயனடைந்தாலும் பயனற்றதானாலும் தெய்வத்தை உறுதியாகநினைத்து, துக்கம் அல்லது ஸுகம் இவைகளிலிருந்து மனிதன் [1]விடுபடுகிறான். நீ செலுத்தியபௌருஷம் பயனற்றதானாலும் அதில் உனக்கு மனவருத்தம் வேண்டாம். எப்பொழுதும் இவ்விதம் விடாமுயற்சியுள்ளவனாயிருப்பது அரசர்களுக்குப் பெரியநீதியாகும். ஸத்தியமன்றி வேறெதுவும் அரசர்களின் காரியசித்திக்குக் காரணமாகாது. ஸத்தியத்தில் உறுதியாயிருக்கும் அரசன் இம்மையிலும் மறுமையிலும் ஸுகித்திருப்பான். ராஜச்ரேஷ்டனே! தவஞ்செய்யும் முனிவர்களுக்கும் ஸத்தியமொன்றே பெரும்பொருளாகும். அவ்விதமே அரசர்களுக்கும் ஸத்தியந்தவிர வேறெதுவும் நம்பிக்கையைக் கொடுக்கத்தக்கதில்லை. நற்குணமும் நன்னடக்கையும் அடக்கமும் கடுமையில்

[1] இங்கு, 'முஹ்யதே' என்பதைவிட்டு, 'முச்யதே' என்ற பாடம் கொள்ளப்பட்டது.

ஸ்தண்டமும் இந்திரியங்களின்ஜயமும் முகத்தில்தெளிவும் நன்கொடையுமுள்ள அரசன் எப்பொழுதும் ராஜ்யலக்ஷ்மியைவிட்டு விலகமாட்டான். ஓ! குருச்ரேஷ்டனே! நீதியை நன்றாகவிசாரித்து வெளியிடத்தகாத ராஜாங்கத்திற்குரிய ரஹஸ்யங்கள் தவிர வேறு எவ்வித கார்யங்களிலும் நேராக உண்மையைப் பேசவேண்டும். உண்மையைப்பேசுங் குணமுள்ள பலமுனிவர்கள் தேவலோகத்தில் ஸந்தோஷமாயிருக்கிறார்கள். எப்பொழுதும் சாந்தனாயிருக்கும் அரசனை எல்லாவிஷயத்திலும் உலகம் மீறிநடக்கும். அரசன் எப்பொழுதும் கடுமையுள்ளவனாயிருந்தால் உலகம் அவனிடம் நடுக்கமுள்ளதாகும். ஆகையால், அரசன் ஸமயம்போல இரண்டுவித ஸ்வபாவமுள்ளவனாயிருக்கவேண்டும். புத்திர! உனக்குப் பிராம்மணர்கள் (எப்பொழுதும்) தண்டிக்கத்தக்கவர்களல்லர். கொடுப்பவரிற் சிறந்தபாண்டவ! உலகத்தில் பிராம்மணர்கள் உத்தமதெய்வரூபியாவார்கள். ஓ! கௌரவ்ய! அரசர்களின் தர்மத்தைக்குறித்து மஹாத்மாவான மனு இரண்டுசுலோகங்களைப்பாடினர். ராஜச்ரேஷ்டனே! அவற்றை உள்ளத்தில் உறுதியாகவைத்துக்கொள். (அவற்றின் பொருளாவது:—)ஜலத்திலிருந்து அக்னியும் பிராம்மணனிடமிருந்து க்ஷத்திரியனும் கல்லிலிருந்து இரும்பும் உண்டானார்கள். அக்னிமுதலிய இம்மூன்றுகளின்சக்தி எங்கும் செல்லத்தக்கதாயினும் தம்காரணங்களில் நாசமடையும். கல்லை அடிக்கச்சென்ற இரும்பும் ஜலத்தைக்கொளுத்தச் சென்ற அக்கினியும் பிராம்மணர்களை த்வேஷிக்கமுயன்ற க்ஷத்திரியனும் அப்பொழுதே நாசமடைவார்கள்-என்பது. மஹாராஜனே! ஆகையால், இவ்விதமான தர்மத்தையறிந்த அரசன் வேதத்தையும் வைதிகதர்மத்தையும் வஹிப்பவர்களும் பொறுமையுள்ளவர்களுமான பிராம்மணர்களை எப்பொழுதும் வணங்கவேண்டும். ஓ! புருஷச்ரேஷ்டனே! இப்படிப்பொதுவிதியிருந்தாலும் உலகநடைக்கு இடையூறு செய்யும் பிராம்மணர்களை அரசன் கைகளாலேயே அடக்கவும்வேண்டும். முன்காலத்தில் மஹரிஷியான சுக்கிராசாரியர், 'யுத்தத்தில் ஆயுதமெடுத்துத் தன்னைஎதிர்த்துவரும்பிராம்மணன் வேதாந்தமறிந்தவனானாலும் தர்மத்தைவிரும்பும் அரசன் அவனை ஆயுதத்தால் அடக்கவேண்டும். தர்மத்திற்குக்குறைவுவாராமல் பாதுகாக்கும் தர்மமறிந்த அரசன் அக்காரியத்தால் தர்மத்தைக் கெடுத்தவனாகமாட்டான். ஏனெனில், அந்தப்பிராம்மணன் கோபமே அரசனுடைய கோபத்தையுண்டுபண்ணுகிறது' என்று சொன்ன இவ்விரண்டு சுலோகப் பொருள்களை நீ மிகக்கவனித்துத் தெரிந்துகொள்ளவேண்டும். ஓ! நர

ச்ரேஷ்டனே! இவ்விதமிருந்தாலும், பிராம்மணர்களை ரக்ஷிக்கவேவே ண்டும். குற்றவாளிகளும் தோஷத்தால் விலக்கப்பட்டவர்களுமான அவர்களை அரசன் அடிக்காமல் தன்தேசத்தைவிட்டு விலக்கவேண் டும். நரபதியே! பிரம்மஹத்தி, [1]ப்ரூணஹத்தி, குருதாரத்தைச் சேருதல், அரசனைப் பகைத்தல் இவ்விதக்குற்றமுள்ள பிராம்மணர் களையும் அரசன் தேசத்தைவிட்டு விலக்கவேண்டுமே தவிர அவர் களுக்குச் சரீரதண்டனைவிதிப்பது எப்பொழுதும்நீதியாகாது. பிரா ம்மணர்களிடம் பக்தியுள்ளவர்களிடத்தும் அன்புள்ளவனாக இரு க்கவேண்டும். [2]அரசர்களுக்கு மனிதர்களின் சேர்க்கையொன்றே சோகமின்றிப் பெரியஸந்தோஷத்திற்குக் காரணமாகும். மஹா ராஜனே! சாஸ்திரங்களிற்சொல்லப்பட்ட (பூமி, ஜலம், பாலைவனம், காடு, மலை, மனிதர்கள் என்னும் அரசர்களுக்குரிய) ஆறுவகை அரண் களுள் மனிதர்களென்னும் அரணனது விரோதிகள் வெல்லத்தகாத தாகும். ஆகையால், பகுத்தறிவுள்ளநரபதி நான்குஜாதிகளிலும் எப்பொழுதும் தயையுள்ளவனாயிருக்கவேண்டும். தர்மபுத்தியுள்ள வனும் ஸத்தியவாக்குள்ளவனுமான அரசன் பிரஜைகளை மகிழ்விக்கி ரான். ஓ! புருஷச்ரேஷ்டனே! அரசன் எப்பொழுதும் பொறுமை யுள்ளவனாகவேயிருப்பதும் நியாயமன்று. யானைபோலப் பொறுமை யுடன் சாந்தனாகஇருக்கும் அரசன் தர்மத்திற்கு விரோதியாவான். பிரபுவே! இவ்விஷயத்தைக்குறித்துப் பிருஹஸ்பதிபகவான் இயற் றிய நீதிநூலில் ஒருசுலோகம் நிச்சயமாகச்சொல்லப்பட்டிருக்கிறது; சொல்லுகிற என்னிடமிருந்து அதன்கருத்தைக்கேள். அதாவது:— யானையின் தலையில் மாவுத்தன் ஏறுவதுபோலத் தாழ்ந்த மனிதனும் பொறுமையுள்ள அரசனை அவமதித்துத் தலையிலேற விரும்புவான் - என்பது. ஆகையால், ஸ்ரீமானான அரசன் எப்பொழுதும் சாந்தனாக வும் எப்பொழுதும் குரூரனாகவுமிராமல் அதிகக்குளிர்ச்சியும் அதிக வெப்பமுமில்லாத வஸந்தகாலத்துஸூரியன்போல இருக்கவேண் டும். ஓ! மஹாராஜனே! தன்னைச்சேர்ந்தவர்களும் பரர்களுமான மனிதர்களை அவர்கள் செய்யுங் காரியங்களை நேரில் பார்ப்பதாலும் முகக்குறி விழிக்குறிமுதலிய அடையாளங்களாலும் வேறிடத்தி லுள்ள அவர்கள்செய்கையை உபமானமாகக் கொண்டும் புருஷலக்ஷ

---

1 ஸாங்கமான வேதத்தைக்கற்ற பிராம்மணன் ப்ரூணன் எனப்படுவான்; சிசுவென்பதும் பொருள்.

2 இங்கு வேறுபாடத்துக்கு, 'அரசர்களுக்கு இவ்விதப்புருஷர்களைச்சேர் ப்பதைவிடச் சிறந்தபொக்கசம்வேறில்லை' என்பதுபொருள்.

ணங்கூறும் ஸாமுத்ரிகாசாஸ்திரங்களாலும் எப்பொழுதும் பரீக்ஷிக்க வேண்டும். நிறைந்ததக்ஷிணைகொடுப்பவனே! காமம் கோபமுதலிய வைகளாலுண்டாகும் [1] பதினெட்டுவிதமான வ்யஸனங்களையும் முழு தும்விலக்கவேண்டும். இவ்விதமான வ்யஸனங்களில் ஆசைபற்றி இவைகளைச் செய்யமுயல்வது எந்தச்சமயத்திலும் நீதியன்று. வ்ய ஸனமுள்ள அரசன் உலகத்தில் அவமதிக்கப்படுவான். அரசன் பிற ரைப்பகைக்கும்குணமுள்ளவனானால் அவனைக்கண்டு உலகம் நடுங்கி யோடும். ஓ! மஹாராஜனே! எப்பொழுதும் அரசன் கர்ப்பிணியின் தர்மத்திலிருக்கவேண்டும். இப்படிச் சொல்வதற்குக் காரணத்தை யும் கேள். கர்ப்பிணியானவள் தன்மனத்திற்கும் நாவுக்கும் ருசி யானவஸ்துவைப் புசியாமல் அந்தக்கர்ப்பத்தைவளர்க்கத்தக்க வழியி லிருப்பதுபோல அரசனும் ஸந்தேகமின்றித் தனக்குவேண்டுமென்ற காரியத்தைத் தள்ளிவிட்டு உலகத்திற்குநன்மையான தர்மவழியில் எப்பொழுதுஞ் செல்லவேண்டும். ஓ! பாண்டவ! அரசன் தைரியத் துடன் தெளிவாகத் தண்டம்செலுத்திவருவானாயின் அவனுத்தரவு எங்கும் தடையின்றிச்செல்லும். ஆகையால், நீ எந்தச்சமயத்திலும் தைரியத்தை விடாமலிருக்கவேண்டும். பேசுகிறவர்களிற் சிறந்த வனே! வேலைக்காரருடன் அதிகமான பரிஹாஸவார்த்தை பேசக் கூடாது. புலிபோன்றஅரசனே! இதிலுண்டாகும்குற்றத்தை உன க்கு அறிவிக்கிறேன்; கேள். வேலைக்காரர்கள் எஜமானனிடம்பய மின்றி உத்ஸாஹத்துடன் அவனைஅவமதிக்கத் துணிவார்கள்; தமக் குரியநிலையிலிராமல் அரசனுத்தரவைமீறி நடப்பார்கள்; கட்டளையிட் டனுப்பினாலும் அக்காரியத்தில் ஸந்தேகப்படுவார்கள்; கேட்கத் தகாதரகஸ்யத்தையும் கேட்பார்கள்; யாசிக்கத்தகாதவஸ்துவையும் யாசிப்பார்கள்; எஜமானன்புஜிக்கத்தக்கவஸ்துக்களைத் தின்பார்கள்; அரசன் பிரபுத்தன்மையை வஹிப்பதிலும் கோபங்கொண்டு ஜ்வலிப்

---

1 வ்யஸனங்கள் பதினெட்டு. அவைகளில் வேட்டை, சொக்கட்டான், பகலிலுறக்கம், பிறரைநிந்தித்தல், பெண்மயக்கம், மதம், வீணைபாட்டு, கூத்து, வாத்தியங்கள், குடி இப்பத்தும் காமத்தாலுண்டாவன. தெரியாத குற்றத்தை வெளியிடுவது, குற்றமில்லாதவனைத்தண்டிப்பது, கபடமாகக் கொலைசெய்வது, பிறர்பெருமையில் பொறாமை, பிறர்குணங்களைத் தோஷ மாகக் கூறுதல், பிறர்பொருளையபகரித்தல், கடுஞ்சொல், கொடுமையானதண் டம் இவ்வெட்டும் கோபத்தாலுண்டாவன. இவைகளில் முதல்வகுப்பிலுள்ள குடி, சொக்கட்டான், பெண்மயக்கம், வேட்டை இந்நான்கும் இரண்டாவது வகுப்பில் பிறர்பொருளையபகரித்தல், கடுஞ்சொல், கடுமையானதண்டம் இம் மூன்றும் மிகக்கஷ்டமானவை. இவை மனுதர்மசாஸ்திரம் ஏழாவது அத்தி யாயத்தில் நாற்பத்தைந்தாவது சுலோகமுதல் விரிவாகக் கூறப்பட்டிருக்கின் றன.

பார்கள்; பரிதானம்வாங்கியும் கபடங்கள்செய்தும் ராஜகாரியங்களைக் கெடுப்பார்கள்; அரசன்உத்தரவுபோன்ற பொய்யான பத்திரிகைகளால் ராஜ்யத்தைப் பயனற்றதாகச் செய்துவிடுவார்கள்; அரசனைப் போலஆடையுடுத்து அந்தப்புரக்காவலாளர்களுடன் நேசம்பாராட்டுவார்கள்; அரசன்முன்னிலையில் அச்சமின்றி வாய்திறந்துகொட்டாவிவிடவும் தூவெனத்துப்பவுஞ் செய்வார்கள்; அரசப்புலியே! அரசனுடையவசனத்தை ரஹஸ்யமாயிருந்தாலும் வெட்கமின்றிப் பலவிடங்களிலும் சொல்லுவார்கள்; அரசன் சாந்தனுயிருந்தால் அவனை அவமதித்து அரசன்ஏறத்தக்க குதிரை யானை தேர்களில் ஸந்தோஷத்துடன் ஏறுவார்கள்; ஸபையிலிருந்துகொண்டு நண்பர்கள்போல, 'ராஜரே! இஃது உம்மால் செய்யமுடியாது; இவ்விதம்நடப்பது தீதாகும்' என்றுசொல்வார்கள், அச்சொல்லில் அரசன் கோபங்கொண்டால் தாங்கள் நகைப்பார்கள்; மரியாதைபெற்றுக்கொண்டும் ஸந்தோஷப்படமாட்டார்கள்; ஒருவருக்கொருவர் மேலாகவேண்டிமிகப் பொறாமையுள்ளவர்களாயிருப்பார்கள்; மந்திராலோசனையை மாற்றுவார்கள்; அரசாட்சியின்குறைகளை வெளியிடுவார்கள்; அரசன் உத்தரவை அவமதிப்புடன் வேடிக்கையாகச்செய்வார்கள்; புலிபோன்றஅரசனே! அச்சமின்றி அவமதிப்புடன் அரசனுடைய ஆபரணம் அன்னம் ஸ்நானத்திற்குரியவஸ்துக்கள் சந்தனம்முதலியவற்றையும் உபயோகிப்பார்கள்; பாரத! தம்மதிகாரத்தை வெறுப்புடன் விலக்கிக்கொள்வார்கள்; தமதுஜீவனத்தில் ஸந்தோஷிக்கமாட்டார்கள்; ராஜபாகமானபொருளையும் எடுத்துக்கொள்வார்கள்; கயிற்றில்கட்டிய பக்ஷியோடு விளையாடுவதுபோல அரசனுடன் விளையாடவிரும்புவார்கள்; 'அரசன், என்னிஷ்டப்படியிருப்பான்' என்று உலகத்தில்சொல்லிக்கொள்ளுவார்கள். யுதிஷ்டிர! அரசன் பரிஹாஸவார்த்தைபேசிக்கொண்டு மெதுவாயிருப்பானுகில் இவ்விதத்தோஷங்களும் மற்றும் பல தோஷங்களுமுண்டாகும்" என்றுசொன்னார்.

---

## ஐம்பத்தாறுவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு ராஜதர்மங்களைச் சொல்லியது.)

பீஷ்மர் உபதேசிக்கத்தொடங்கினர். "ஓ! யுதிஷ்டிர! அரசன் விடாமுயற்சியுள்ளவனுயிருக்கவேண்டும். ஸ்திரீபோல முயற்சியற்றவனுன அரசனை மனிதர்கள் கொண்டாடமாட்டார்கள். நரபதியே!

இதுவிஷயத்தில், 'வேதமோதவெளியேபோகாத பிராம்மணன் ராஜ்யத்தில்முயற்சியற்ற அரசன்ஆகிய இவ்விருவர்களையும் பாம்பு எலிகளைவிழுங்குவதுபோல இப்பூமி விழுங்குகிறது' என்று பெருமை தங்கிய சுக்கிராசாரியர்பாடிய இக்கவியின்பொருளைக் கவனித்துத் தெரிந்து மனத்தில் வைத்துக்கொள். நரச்ரேஷ்டனே! சேரத்தக்கவர்களுடன் சேரவேண்டும். விரோதிக்கத்தக்கவர்களை மலைமுதலிய விடங்களில் தகையவேண்டும். ராஜ்யத்திற்குரியஎஜமானன், மந்திரி, ஸ்நேஹிதன், கோசம், தேசம், கோட்டை, படைஎன்னும்எழுவகை அங்கங்களிலும் எவ்விதஅங்கத்திற்காவது தீங்குசெய்தமனிதன் நண்பனானாலும் குருவானாலும் அவனைக் கொல்லவேவேண்டும். ராஜேந்திரனே! மருத்தனென்னும்அரசன் முன்காலத்தில், "காரியாகாரியங்களையறியாமல் அகங்காரங்கொண்டு தப்புவழிச்செல்லும்மனிதனைக் குருவாயிருந்தாலும் விலக்கவேண்டும்" என்றதும் பிருஹஸ்பதிக்குஸம்மதமுமான இப்பழையகவியை ராஜ்யாதிகாரவிஷயத்தில் வெளியிட்டான். பாஹுவின்குமாரனை அறிவிற்சிறந்தஸகாராஜனும் பிரஜைகளின் ஹிதத்தைக்கருதி முதல்குமாரனை அஸமஞ்சனைத் தள்ளிவிட்டான். ராஜனே! அஸமஞ்சன் நகரிலுள்ளசிறுவர்களை ஸரயூவென்னும்நதியில் தள்ளினகாரணத்தால் தகப்பனானஸகான் அவனைப் பலவாறுஇகழ்ந்து வெளியில்துரத்தினான். உத்தாலகரென்னும் முனியும் பிராம்மணர்களுக்கு அபசாரஞ்செய்தகாரணத்தால் சுவேதகேதுவென்னும் பெரியதவமுள்ள தம்அருமைப்புத்திரனை விலக்கிவிட்டார். அரசர்களுக்கு உலகத்தைஸந்தோஷப்படுத்துவதும் உண்மையைக்காப்பதும் கபடமின்றிவ்யவகாரங்கள்செய்வதும் ஸநாதனமானதர்மமெனக் கூறப்படும். கப்பத்திற்காகத் தான்யங்களைத் தகைவதுமுதலியகாரணங்களால் பிறர்பொருளுக்குக் கேடுவரும்படி செய்வது கூடாது. கொடுக்கவேண்டியகூலிமுதலியவைகளைக் காலத்தில் கொடுக்கும்படி செய்யவேண்டும். பராக்ரமமுள்ளவனும் உண்மையான வசனஞ்சொல்பவனும் பொறுமையுள்ளவனுமான அரசன் நல்வழியினின்று தவறமாட்டான். அரசன் எப்பொழுதும்மந்திராலோசனையைப்பிறரறியாமல்மறைப்பவனும் கோபத்தைஜயிப்பவனும் நீதிசாஸ்திரத்தின் உண்மைப்பொருளில் உறுதியுள்ளவனும் பகல்முதல்பாகத்தில் தர்மத்திலும் மறுபாகத்தில் பொருளிலும் இரவின்முதற்பாதியில் காமத்திலும் பிற்பாதியில் மோக்ஷத்திலும் விசேஷமாக முயற்சியுள்ளவனுமாயிருக்கவேண்டும். அரசன் மந்திராலோசனையை நீதிசாஸ்திரப்படி மறைவாயிருக்கச் செய்துகொள்ளவேண்டும்.

ராஜாங்கத்துக்குரிய ரகஸ்யயோசனையை வெளிவராமல்காப்பதைவிட வேறெதுவும் அரசர்களுக்குக் கடினமன்று. அரசன் நான்குஜாதிகளின் தர்மங்களையும் ரக்ஷிக்கவேண்டும். தர்மங்களை ஒன்றோடொன்று சேராமல் பாதுகாப்பது அரசர்களுக்கு ஸநாதனதர்மமாகும். அரசன் ஒருவனையும் நம்பக்கூடாது. ஆனாலும் ஆப்தர்களைநம்பலாம். அவர்களிடமும் விசேஷநம்பிக்கை பாராட்டலாகாது. [1]சந்தி, விக்கிரஹம், யானம், ஆஸனம், த்வைதீபாவம், ஆச்ரயம் என்னும் ஆறுகுணங்களுக்குமுரிய குணதோஷங்களை எப்போதும் தன்புத்தியால் கவனிக்கவேண்டும். எப்பொழுதும் தன்ராஜ்யத்தில் பிறன்பிரவேசிக்க இடங்கொடாதவனும் பரராஜ்யத்தில் தனக்குண்டாகும் இடத்தைத் தேடுகிறவனுமான அரசன் கொண்டாடத்தக்கவன். ராஜ்யத்தின் குறைவு வளர்ச்சி ஸமநிலையென்னும் ராஜாங்கத்துள்ள [2]உண்மையையறிந்தவனும் [3]வெளியாகாததூதர்களைக்கொண்டு அன்யராஜ்யத்தைப் பேதிக்கத்தக்கநீதியில் முயன்றவனுமான அரசன் புகழத்தக்கவனாவான். தர்மராஜனையும் குபேரனையும்போலப் பொருளைச்சம்பாதிப்பதில் முயற்சியுள்ளவனும் மந்திரியும் ராஜ்யமும் கோட்டையும் தனசாலையும் யானைகுதிரைமுதலிய சதுரங்கமுமாகிய தன் ராஜ்யத்திலுள்ள இவ்வைந்திற்கும் பரராஜ்யத்திலுள்ள இவ்வைந்திற்கும் ஸமநிலை, குறைவு, வளர்ச்சிஎன்னும் வேற்றுமையையறிகிறவனும் சம்பளமில்லாத ஜனங்களைக் காப்பவனும் சம்பளமுள்ளவர்களைக்கவனிப்பவனும் தெளிந்தமுகமுள்ளவனும் மந்தஹாஸத்துடன் முந்திப் பேசுகிறவனும் பெரியோர்களை ஆராதிப்பவனும் சோம்பலும் சாபல்யமும்இல்லாதவனும் ஸஜ்ஜனர்களின் ஆசாரத்தையறிந்து அதில்உறுதியானமனமுள்ளவனுமாக அரசனிருக்கவேண்டும். எந்தச்சமயத்திலும் ஸாதுக்கள்கையிலுள்ளபொருள்களை அரசன் அடையக்கூடாது. கெட்டமனிதர்களிடமிருந்து பொருளைவாங்கி ஸத்புருஷர்களுக்கு அளிக்கவேண்டும். அரசன் நேரில்சிக்ஷைசெய்பவனும் கொடுப்பவனும் தன்பரிவாரங்களையும் தன்மனத்தையும் அடக்கிஆளுபவனும் ஸமயமறிந்துகொடுப்பதும் புஜிப்பதுமுள்ளவனும் குற்றமற்றநடையுள்ளவனுமாயிருக்கவேண்டும். நற்குலத்திலுதித்தவர்களும் ரோகமில்லாதவர்களும் மலைபோலசைவற்றவர்களும் பெரியோர்களிடம் சேர்க்கையுள்ளவர்களும் தன்னிடம்பக்தியுள்ளவர்களும் சூரர்களும் சத்ருக்களால்வஞ்சிக்கமுடியாதவர்களும் மானிகளும் இவ்வுலகத்தையும்சாஸ்

1 ஸபாபர்வம் 14 - வதுபக்கம் குறிப்பிற்காண்க.

2 'அறம்பொருள் காமமென்னும் மூவகைப்பயன்களின் உண்மையை' என்பது பழையஉரை.

3 ஆதிபர்வம் 578 - வது பக்கம் குறிப்பிற்காண்க.

திரத்தையும் பரலோகத்தையும் அறிந்தவர்களும் சிஷ்டர்களும் பிறருக்கு அவமானஞ்செய்யாதவர்களும் தர்மம்விட்டுவிலகாதவர்களும் ஸாதுக்களும் அதிக ஸம்பத்தாலலங்கரிக்கப்பட்டவர்களுமான தகுந்தமனிதர்களை அரசன் எப்பொழுதும் தனக்குச்சகாயமாக வைத்துக்கொள்ளவேண்டும். வெண்கொற்றக் குடையுடன் கூடின ராஜாஜ்ஞையொன்றுநீங்க மற்ற எவ்விதப்போகங்களும் நடையும் நேரிலும் மறைவிலும் எவ்விடத்திலும் தனக்கும் அவர்களுக்கும் வேற்றுமையின்றிச் சமமாயிருக்கும்படி செய்யவேண்டும். இவ்விதஞ்செய்யுமரசன் இங்கு துன்பத்தைஅடையமாட்டான். யாவரிடத்தும்சங்கையுள்ளவனும் பேராசைகொண்டு எல்லாருடையபொருளையும்அபகரிப்பவனும் பொய்யானகுற்றத்தைச்சுமத்துபவனுமான அரசன் இனத்தார்களாலேயே விரைவில்ஹிம்ஸிக்கப்படுவான். அங்ஙனமின்றிப் பரிசுத்தனும் உலகத்தைக்காப்பதில் கவனமுள்ளவனுமாயிருக்குமரசன் சத்துருக்களால் பிடிக்கப்பட்டுக் கீழேவிழமாட்டான். விழுந்தாலும் உடனே உயர்ந்து நிற்கத்தக்கவனுவான். கோபமும்வ்யஸனமுமில்லாதவனும் லகுவாகத்தண்டஞ்செலுத்துகிறவனும் இந்திரியஜயமுள்ளவனும் நீதிக்குரியகுணங்கள்பொருந்தினவனும் பரராஜ்யத்தின் [1] ரந்திரங்களைக்கவனிப்பவனும் புத்திசாலியும் எளிதில்காணக்கூடியவனும் எல்லாஜாதிகளுக்குமுள்ள நீதி அநீதிகளை நன்றாக அறிந்தவனும் செய்யவேண்டியவேலைகளை வேகமாகச்செய்யும் இயற்கைக்குணமுள்ளவனும் கோபத்தைஜயித்தவனும் தன்னைப்புகழாதவனும் பிணியற்றசரீரமுள்ளவனும் பெரியமனமுள்ளவனும் நல்லஅருளுள்ளவனும் முயற்சியுடன்வேலைசெய்பவனுமான அரசன்இமயமலைபோலப் பிராணிகளுக்கு விசுவாஸத்துடன் அடுக்கத்தக்கவனுவான். எந்த அரசனுடையகாரியங்களின்ஆரம்பமும்முடிவும் [2] நன்றாகக்காணப்படுகின்றனவோ அவன் அரசர்களில் உயர்ந்தவனுவான். எந்த அரசனுடைய ஆளுகையிலுள்ளமனிதர்கள் தகப்பன்வீட்டில் பிள்ளைகளிருப்பதுபோலப் பயமின்றி ஸுகித்திருக்கிறார்களோ அந்த அரசன் அரசர்களிற்சிறந்தவனுவான். எவனுடையராஜ்யத்தில் வஸிப்பவர்களும் நீதி அநீதிகளறிந்தவர்களுமான நகரவாஸிகள் (அரசனிடம்பயந்து) தம்பொருளையொளிக்கமுயலவில்லையோ அவ்வரசன் உத்தமனுவான். எவன்தேசத்திலுள்ளஜனங்கள் விதிப்படி பரிபாலிக்கப்பட்டு ஐம்பொறிகளுக்குவேலைசெய்யாமல் அடக்கம் வணக்கம் முயற்சிமுதலிய குணங்களுடன் அரசனுக்கு அடங்கினவர்களும் சரீரத்தில்ஆசையற்

1 ஆபத்துக்காலம். 2 இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

றவர்களுமாய்த் தமக்குரியதர்மத்தில் நிலைபெற்று ஒருவரையொருவர் அவமதிக்கும் இயல்பின்றித் தானஞ்செய்ய விருப்பமுள்ளவர்களாக விளங்குகிறார்களோ அந்தத்தேசத்தின் அரசனே அரசனாவான். எவனுடையராஜ்யத்தில் டம்பமும் பொய்யும் பிறர்பெருமையில் பொறாமையும் மாயையும் இல்லையோ அவ்வரசனுக்கு ஸநாதனமானதர்மம் ஸித்திக்கும். அறிவுடையோரான பெரியோர்களை ஆதரிப்பவனும் [1] உலகத்திற்கிதமானசாஸ்திரங்களில் மிகவிருப்பமுள்ளவனும் ஸாதுக்களின்வழிச்செல்லுகிறவனும் தியாகமுள்ளவனுமான அரசன் ஸ்வர்க்கம்பெறுவான். தூதர்களையும் ஆலோசனைகளையும் [2]செய்ததையும் செய்யப்போவதையும் எப்பொழுதும் சத்துருக்கள் அறியத்தகாவண்ணம் நடத்திவருமரசன் ராஜ்யத்திற்குரியவனாவான். பாரதனே! முன்காலத்தில் [3] ஓரரசனைக்குறித்து ராஜதர்மங்களை உபதேசித்த மஹாத்மாவானபரசுராமர் இரண்டு சுலோகங்களை உபதேசித்தார். (அவற்றின் பொருளாவது,) 'உத்தமனான அரசனை முந்தியடைந்து பிறகு பொருளையும் பெண்டிர்களையும் அடையவேண்டும். அரசன் அஸத்தாயிருப்பானாகில் இவ்வுலகில் பெண்டிரும் பொருளும் எங்ஙனமிருக்கக்கூடும்? ஆகையால், ராஜ்யத்தைவிரும்பும் அரசர்களுக்கு உலகம்நிலைபெறத்தக்கபடி பிராணிகளை நன்குபாதுகாப்பதைவிட வேறு சாச்வதமானதர்மம் எதுவுமில்லை' என்பது. ஓ! ராஜச்ரேஷ்டனே! ராஜதர்மங்களைக்கூறுமிடத்தில் பிராசேதஸமனு இரண்டு சுலோகங்களை எடுத்துக்கூறினார். அவைகளைக் கவனித்துக்கேள். (அவற்றின் பொருளாவது :—)' ஓதுவியாத ஆசிரியன், ஓதாதரித்விக்கு, பாதுகாவாத அரசன், அப்பிரியத்தைச்சொல்லும் மனைவி, கிராமத்திலிருக்க விரும்பும் இடையன், வனத்திலிருக்கவிரும்பும் நாவிதன் ஆகிய இவ்வாறுபேர்களையும் கடலிலுடைந்தகப்பலைப்போலத் தள்ளிவிடவேண்டும்' என்பது.

---

ஐம்பத்தேழாவது அத்தியாயம்.

ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் முதலானோர் யுதிஷ்டிரருக்கு ராஜதர்மங்களைச் சொல்லியதும், மாலையில் கிருஷ்ணன்முதலியோர் தந்தம் இருப்பிடஞ்சென்றதும்.)

ஓ! யுதிஷ்டிர! நீதியைவிட்டுவிலகாத இந்தரக்ஷணமென்பது ராஜதர்மங்களுள் வெண்ணெய்போல ஸாரமானதென்று பிருஹஸ்பதி

---

[1] இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.
[2] 'செய்யப்பட்டிருந்தாலும் செய்யப்படாதவைபோல' என்பது பழைய உரை.
[3] 'ராமசரிதே' என்பது வேறுபாடம்.

பகவானும் பகவான் விசாலாக்ஷரும் மஹாதவம்பொருந்திய சுக்கிரா சாரியரும் ஆயிரங்கண்ணுள்ளதேவேந்திரனும் பிராசேதஸமனுவும் பாத்வாஜரும் கௌரசிரஸ் என்கிறரிஷியும் ஆகியயாவரும் இதைப் புகழ்கிறார்கள்; வேறுதர்மத்தைக் கொண்டாடுகிறார்களில்லை. நீதி சாஸ்திரங்களைச்செய்த வேதமறிந்த பிராம்மணர்களும் இப்பாலனதர் மத்தைக் கொண்டாடுகிறார்கள். தர்மத்தைப் பரிபாலிப்பவர்களிற் சிறந்தவனும் தாமரைமலர்போன்ற சிவந்தகண்ணுள்ளவனுமான ஓ! ராஜனே! இப்பாலனம் நிறைவேறத்தக்கயுக்திகளைச் சொல்லுகிறேன்; கேள். ஓ! யுதிஷ்டிர! வெளிப்படையாகவும் மறைவாகவுமுள்ள இருவிதச்சாரர்கள், ஸமயத்தில் (அன்னம்கூலிஇவை) கொடுப்பது, பொறுமையில்லாமை, யுக்தியால்வரிவாங்குவது, உபாயமின்றிவரி வாங்காமை, யோக்கியர்களைச்சேர்ப்பது, சூரத்தனம், சுறுசுறுப்பு, ஸத்யம், பிரஜைகளின்ஹிதம், நேராகவும்கபடமாகவும் சத்துருபக்ஷம் வளராமற்செய்வது, பழுதாகியிடியும் வீடுகளைப் பழுதுபார்ப்பது, காலத்திற்குத்தக்கபடி சரீரதண்டனைபொருள்தண்டனை என்ற இரு விததண்டஞ்செலுத்துவது, ஸாதுக்களைவிடாமை, நற்குலத்திற்பிறந் தவர்களைப்போஷிப்பது, சேர்க்கவேண்டியதான்யமுதலியவைகளைச் சேர்ப்பது, அறிவிற்சிறந்தோரையடுப்பது, ஸேனைகளை எப்பொழு தும்ஸந்தோஷப்படுத்துவது, பிரஜைகளைக்கவனித்தல், கார்யங்களில் சோர்வில்லாமை, பொக்கசத்தைப்பெருகச்செய்வது, நகரைப்பாது காப்பது, காவற்காரர்களிடம் நம்பிக்கையில்லாமை, வியாபாரமுதலிய தொழில்கொண்டு சத்துருக்களால் தம்சார்பிலிழுக்கப்பட்ட பட்ட ணத்திலுள்ள ஜனக்கூட்டத்தை அவ்விதமின்றிப்பேதித்தல், நண் பன் விரோதி உதாஸீனன் என்னும் மூவகைமனிதர்களையும்உள்ளபடி பகுத்தறிதல், வேலைக்காரர்களிடம் நம்பிக்கையின்றி அவர்களைப்பகை யாளிகளுடன்சேராதிருக்கும்படி செய்வித்தல், நேரில் நகரைப்பார்ப் பது, கஷ்டப்படும்பிறருக்கு ஆறுதல்செய்வது, சத்துருக்களை அலக்ஷி யஞ்செய்யாமை, இழிவானகாரியங்களை விலக்குதல், நியாயவழியை அனுஸரித்தவிடாமுயற்சி இக்குணங்கள் ரக்ஷணதர்மத்தைச் சாதிக் கத்தக்கவைகள். இவைகளில் அரசர்களுக்கு முயற்சியே ராஜதர்மத் துக்கு மூலமென்று பிருஹஸ்பதி சொன்னார். இதைப்பற்றியசுலோ கங்களையும் என்னிடமிருந்துதெரிந்துகொள். இந்திரன் முயற்சியால் அமிருதத்தையடைந்து அஸுரர்களையும் கொன்று இவ்வுலகிலும் தேவலோகத்திலும் மிக்கபெருமையை அடைந்தான். முயற்சியில் சூரனுனமனிதன் பண்டிதர்களுக்குமேலாயிருக்கிறான். முயற்சியுள்ள

வீரர்களைப் பண்டிதர்கள் ஸந்தோஷப்படுத்திஉபாஸிக்கிறார்கள். மூய ற்சியற்ற அரசன் மிக்க புத்திசாலியாயிருந்தும் விஷமில்லாப்பாம்பு போல எப்பொழுதும்பகைவர்களால் வெல்லத்தக்கவனாவான். மிக்க பலசாலியான அரசனும் பலவீனனானசத்துருவையும் உபேக்ஷிக்கக் கூடாது. அக்கினி சிறிதானாலும்சுடுகிறது. விஷம் கொஞ்சமாயிருந் தாலும்கொல்லுகிறது. அரசன் அங்கங்கள்யாவும் நிறைந்துவிளங்கி னும் சத்துரு ஓரங்கத்துடன் கோட்டையில் புகுந்துவிட்டால் ராஜ் யத்தையே தபிக்கச்செய்வான். அரசன் ரஹஸ்யமான தன்வசன த்தையும் சத்துருஜயத்திற்குவேண்டி ஜனங்களைச் சேர்ப்பதையும் சத்துருஜயத்துக்காக மனத்தில் கருதிய கபடவழியையும் மற்று முள்ள சிறிதுபாபகாரியத்தையும் ரஹஸ்யமாக வைத்துக்கொள்ள வேண்டும். உலகம் சந்தோஷப்படத்தக்க விசேஷதர்மகாரியங்களைச் செய்யவேண்டும். ராஜ்யமென்பது மிகப்பெரிதாகையால் அதைக் குரூரபுத்தியுள்ளமனிதர்களால் வஹிக்கமுடியாது. சாந்தனானமனித னாலும்வஹிக்கமுடியாது. ராஜ்யமானது பிராணிகள்யாவரும்ஆசைப் படக்கூடியபோக்கியவஸ்துவும் பலஸங்கடங்களுக்கிருப்பிடமும் பெரி துமானது. எப்பொழுதும் ஒழுங்காயிருந்து வஹிக்கக்கூடியது. ஆகையால், ஓ! யுதிஷ்டிர! அரசன் எப்பொழுதும் குரூரமும் சாந்த முமானஸ்வபாவங்களின்சேர்க்கையுள்ளவனாயிருக்கவேண்டும். இவ் விதமிருந்து பிரஜைகளைரக்ஷித்துவருமரசனுக்கு மரணம்நேருமானால் அதுவும் அவனுக்குப் பெரியதர்மமாகும். இவ்விதநடக்கையுள்ள வர்களே அரசர்கள். ஓ! குருச்ரேஷ்டனே! இப்பொழுது ராஜதர்மங் களில் சிறிது அம்சம் உனக்குச் சொல்லப்பட்டது. உனக்குஐயமுள்ள விஷயத்தை மறுபடியும் கேள்" என்றுசொன்னார்.

இவ்விதஞ்சொன்னவுடன் வியாஸபகவான், தேவஸ்தானர், அச் மர், ஸ்ரீகிருஷ்ணன், கிருபர், ஸாத்யகி, ஸஞ்சயன்முதலியயாவரும் மிக ஆனந்தமடைந்து, கொண்டாடுவதுபோன்ற முகங்களுடன், தர் மிஷ்டர்களிற்சிறந்தவரும் புருஷப்புலியுமானபீஷ்மரை, 'நல்லது நல் லது' எனத் துதித்தார்கள். பிறகு யுதிஷ்டிரர் சற்றுமனவருத்த முற்று நீர்ததும்பும்கண்களுடன் அவர்கால்களை மெல்லப்பிடித்து வந் தனஞ்செய்து பீஷ்மரைநோக்கி, "ஓ! பிதாமஹரே! ஸூரியன் பூமி யிலுள்ள ரஸத்தையிழுத்து அஸ்தமயத்தையடைகிறான். இப்பொ ழுது எனக்குள்ளஸந்தேகத்தை நாளைக்குத் தெரிவித்துக்கொள்ளு கிறேன்' என்றுசொன்னார். உடனே கிருஷ்ணன் கிருபர் யுதிஷ் டிரர்முதலியயாவரும் அங்குள்ளபிராம்மணர்களை நமஸ்கரித்துவிட்டுப்

பீஷ்மரைவலமாகவந்து ஸந்தோஷத்துடன் ரதங்களிலேறினார்கள். நல்லநியமமுள்ளவர்களும் சத்ருக்களைத் தபிக்கச்செய்கிறவர்களு மான அவர்கள் திருஷத்வதியென்னும்நதியிலிறங்கி ஸ்நானஞ்செய்து மங்களமானமந்திரங்களைஜபித்து விதிப்படி ஸந்தியாதேவதையைஉபா ஸித்துப் பின் யானையின்பெயர்வாய்ந்தபுரம் வந்துசேர்ந்தார்கள்.

---

## ஐம்பத்தெட்டாவது அத்தியாயம்.

## ராஜ தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு அரசன்உற்பத்தியும் பிரம்மாமுதலியோராற் செய்யப்பட்ட தண்டநீதிசாஸ்திரத்தின்வரலாறும் பிருதுராஜன் சரித்திரமுதலியவையும் கூறியது.)

மறுநாள்காலையிலெழுந்து அக்காலத்திற்குரிய விதிகளை அனு ஷ்டித்தபின் பாண்டவர்களும் யாதவர்களும் பட்டணத்திற்கொப் பானரதங்களிலேறிக் குருக்ஷேத்திரஞ்சென்று கங்காபுத்திரரும் ரதிகர்களில்ச்ரேஷ்டரும் தோஷமற்றவருமான பீஷ்மரையடைந்து, 'ராத்ரி ஸுகமா?' என்றுபிரச்னம்செய்து வியாஸர்முதலியரிஷிகளை யும் வணங்கினார்கள்; பிறகு அவர்கள்யாவராலும் ஸந்தோஷிப்பிக் கப்பட்டுப் பீஷ்மரைச்சுற்றி நாற்புறமும் உட்கார்ந்தார்கள். உட்கார்ந்த பின் பெரியதேஜஸுள்ளவரும் தருமதேவதையின் புத்ரருமான யுதிஷ்டிரராஜர் விதிப்படி பீஷ்மரைப் பூஜித்துக் கைகூப்பிக்கொண்டு கேட்கத்தொடங்கினார்.

"பாதகுலத்தில்உதித்த அரசரானபிதாமஹரே! அரசனென் னும்இந்தப்பதம் எங்ஙனமுண்டாகி உலகில்நடைபெற்றுவருகிறது? அதனை எனக்குச் சொல்லும். உதிரம், மாம்ஸம், எலும்பு, மஜ்ஜை, சுக்லம், கை, தோள், கழுத்து, இந்திரியம், சித்தம், சரீரம், வயிறு, முகம், முதுகு, நிச்வாஸம், உச்சுவாஸம், பிராணன், புத்தி, ஸுகம், துக்கம், ஆத்மா, பிறப்பு, இறப்பு, ஸகலகுணங்கள்ஆகியயாவும் மனி தர்கள்யாவருக்கும்ஸமமாயிருந்தும் பெரியபுத்தியுள்ளவர்களும் சூரர் களுமானமனிதர்களுக்கு எங்ஙனம் ஒருவன் யஜமானனாயிருக்கக் கூடும்? சூரர்களும் வீரர்களும் பெரியோர்களும் நிறைந்தபூமிமுழு மையும் எப்படி ஒருவன் ஆளத்தக்கவனாவான்? ஒருமனிதன் உலகத் தாருடையஸந்தோஷத்தை எவ்விதம் அடையத்தக்கவனாவான்? ஒரு மனிதனுடைய தயையையும் கோபத்தையும் காரணமாகக்கொண்டு

முறையே உலகம்யாவும் ஸந்தோஷத்தையும் துன்பத்தையும் எங்ஙனம் அடைவதுகூடும்? உலகம்முழுமையும் ஈசுவரனிடத்திலிருப்பது போல ஒருமனிதனிடம் வணங்கியிருப்பதைப்பார்த்தால் இதன்காரணம் மிகச்சிறிதாயிருக்கமுடியாது. ஆகையால், வாக்குள்ளவர்களிற் சிறந்த அரசரானபாரதச்ரேஷ்டரே!' நான் இதை உம்மிடமிருந்துகேட்க விரும்புகிறேன். இவ்விஷயத்தினுண்மையையெல்லாம் எனக்குச் சொல்லவேண்டும்" எனக்கேட்டனர்.

பீஷ்மர் சொல்லத்தொடங்கினர். "புருஷப்புலியே! ராஜ்யம் உண்டானவிதமனைத்தையும் மிச்சமின்றிக் கவனத்துடன் நீ கேளு. ஆதியில் கிருதயுகத்தில் அரசனும் ராஜ்யமும் தண்டமும் தண்டிப்பவனுமில்லாமல் பிரஜைகளனைவரும் தர்மத்தாலேயே ஒருவரையொருவர் ரக்ஷித்துவந்தார்கள். ஏ! பாரத! அவ்விதம் தர்மத்தால் ஒருவரால்ஒருவர் ரக்ஷிக்கப்பட்டுவரும்மனிதர்கள் மிக்க தைன்யத்தையடைந்தார்கள். சிரமமடைந்த அந்தமனிதர்களை அவிவேகம் பிடித்துக் கொண்டது. அந்தமனிதர்கள் மோகத்துக்குவசப்பட்டார்கள். மனிதச்ரேஷ்டனே! அவிவேகத்தால்'அறிவுகுறைந்தவுடன் அவர்களுடைய தர்மம் நாசமடைந்தது. பாரதச்ரேஷ்டனே! தர்மக்குறைவாலும் அறிவின்குறைவாலும் மோஹத்திற்குவசப்பட்டமனிதர்கள்யாவரும் அப்பொழுது தம்மிடமில்லாத பொருளையடையவேண்டுமென்னும் லோபமுள்ளவர்களானார்கள். பிரபுவே! விருப்பமுள்ளவஸ்துக்களை அடைய முயற்சிக்கவேண்டுமென்னுங்காமம் லோபத்திற்குள்ளான மனிதர்களைத் தன்வசமாக்கிக்கொண்டது. காமத்திற்குள்ளான அந்த ஜனங்களை ராகமென்னும் போகவிடாயும் கைப்பற்றிக்கொண்டது. இவ்விதம் மேன்மேலும்ஆசைபிடித்து மனிதர்கள்யாவரும் இன்னது செய்யத்தக்கது இன்னதுசெய்யத்தகாததென்னும் பகுத்தறிவற்றவரானார்கள்; ஓ! யுதிஷ்டிர! அங்ஙனமே சேரத்தகாதமடந்தையர்களைச் சேர்ந்தார்கள்; பேசத்தக்கது பேசத்தகாதது புஜிக்கத்தக்கது புஜிக்கத்தகாதது குற்றமுள்ளது குற்றமில்லாதது ஆகியஇவையனைத்தையும் கைப்பற்றினார்கள். இம்மானிடவுலகம் இப்படித்தர்மவரம்பற்றுத் தடுமாறுதலும் வேதம் அக்காலத்தில் ஒழிவடைந்தது. ராஜனே! வேதம்நசித்தலும் அதுகொண்டு வெளியானதர்மமனைத்தும் நாசமடைந்தது. புருஷப்புலியே! வேதம் தர்மம் இரண்டும்நாசமடையவே, தேவர்கள் மிகவும்பயமடைந்து உலகங்களுக்குப்பிதாமஹரும் பகவானுமான பிரம்மதேவரைச் சரணமடைந்து மிக்கதுயரத்துடன் யாவரும்அஞ்சலிசெய்து அறிவிக்கத்தொடங்கினார்கள். "ஓ! பக

வானே! லோபம்மோஹம்முதலியதோஷங்களால் மானிடவுலகமுழுதும் ஆக்ரமிக்கப்பட்டு ஸநாதனமானவேதமும் விழுங்கப்பட்டது. அக்காரணத்தால் நாங்கள் பயமடைந்தோம். வேதமும் வைதிகதர்மமும்நாசமடைந்தகாரணத்தால் மூவுலகிற்கும் அதிபதியானபதவியடைந்ததேவர்கள்யாவரும் மனிதர்களுக்குச்சமமானகதியை அடைந்தார்கள். நாங்கள் கீழுலகத்திற்குவருஷிப்பவர்களென்றும் பூமியிலுள்ளவர்கள் மேலுலகிற்குத்தக்கயாகங்களை வருஷிப்பவர்களென்றும் விதியிருந்தும் பூமியிலுள்ளவர்களிடம் கர்மங்கள்குறைந்தகாரணத்தால் நாங்கள் ஸந்தேகமடைந்தோம். ஓ! பிதாமஹரே! நீங்கள் அருள்கூர்ந்து அநுக்ரஹித்த எங்கள்பெருமைக்குக்குறைவின்றி இந்தநாங்கள் ஸுகித்திருக்கத்தக்ககாரியத்தை நீங்கள் இந்தவேளையில் சிந்திக்க வேண்டும்'' எனத்தெரிவித்தார்கள். பின்பு பகவானன பிரம்மதேவர், ''தேவச்ரேஷ்டர்களே! உங்களுக்குப் பயம்வேண்டாம். இதுவிஷயத்தில் நான் உங்களுக்குத்தக்கக்ஷேமத்தைச் சிந்திக்கிறேன்'' என்று தேவர்களனைவருக்கும் ஆறுதல்சொல்லிவிட்டு லக்ஷம் அத்தியாயமுள்ளசாஸ்திரத்தைத் தம்புத்தியால்இயற்றினர். அதில் த்ரிவர்க்கமென்றுபிரஸித்திபெற்ற அறம்பொருளின்பங்கள் அவரால் விரிவாகவுரைக்கப்பட்டிருக்கின்றன. இந்தமூன்றைத்தவிர நான்காவதான மோக்ஷமென்பது வேறென்றும் அதன்காரணமும்பயனும் வேறென்றும் ஸத்வம், ரஜஸ், தமஸென்னும் அதைச்சேர்ந்தத்ரிவர்க்கம்வேறென்றும் அதில் சொல்லப்படும். [1]ஸமநிலை, வளர்ச்சி, குறையென்னும்த்ரிவர்க்கம் தண்டநீதிக்குரியதாகும். மனம், தேசம், காலம், ஸாதனங்கள், முயற்சியின்பயன், ஸஹாயமனிதர்கள் இவ்வாறும் குறையின்றி நன்றாகவிளங்கத் தண்டநீதி காரணமாகும். ஏ! பரதச்ரேஷ்ட! கர்மகாண்டம், ஞானகாண்டம் என்கிறஇருவகை வேதங்களும் வ்யவஸாயம் வர்த்தகமுதலியதொழில்சாஸ்திரமும் பரிபாலனமுறையும் மற்றுமுள்ளகல்விகள்யாவும் விரிவாக அந்நூலில் எடுத்துக்கூறப்பட்டிருக்கின்றன. ராஜனே! ராஜபுத்திரர்களின்லக்ஷணம், மந்திரிகளின்ஆசையைச் சோதிக்கத்தக்க பலவேஷம் பூண்ட ரஹஸ்யமானதூதர்களின்முறை, பலஉபாயங்களுள்ள வெவ்வேறான சாரர்களின்முறை, நேசம் கொடுப்பது பேதித்தல் தண்டம் உபேக்ஷையென்னும்ஐந்துவிதஉபாயங்கள், மந்திராலோசனை, ஆலோசனையை வேறுபடுத்தல், ப்ரமிக்கச்செய்வது, ஆலோசனைஸித்திப்பது ஸித்தி

[1] வர்த்தகத்தொழிலுக்கு ஸமநிலையும் முனிகளுக்குவளர்ச்சியும் திருடர்களுக்குக்குறையும் என்றறிக.

யாததன்பயன் ஆகியயாவும் அதில்நன்குவிளக்கிக் கூறப்படுகின்றன. பயத்தாலும் மரியாதையாலும் பொருளாலும்ஏற்படுவதும் முறையே அதமம் மத்தியமம் உத்தமமென்னும்மூன்றுவிதமானஸந்தியும் தன் ராஜ்யத்திற்குள்ளபொக்கசப்பெருமையும் மித்திரர்களின் வளர்ச்சியும் பாராஜ்யத்திலுள்ள இவ்விரண்டின்குறைவுமாகியநான்குயாத்திரா காலங்களும் த்ரிவர்க்கத்தின்பெருமையும் தர்மமுறைப்படியுள்ளஜயமும் பொருளுக்காகச் செய்யும்ஜயமும் ஆஸுரஜயமும்அதில்பூர்த்தியாக உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. மந்திரி, ராஜ்யம், கோட்டை, ஸேனை, கோசம் இவ்வைந்தையும்பற்றியஉத்தமம், மத்தியமம், அதமமென்கிற மூன்றுபிரிவுகளுள்ளலக்ஷணமும் வெளிப்படையும்ரஹஸ்யமுமான இருவிதத்தண்டனையும்கூறப்பட்டிருக்கின்றன. இவைகளில் வெளிப்படையானதண்டனை தேர், யானை, குதிரை, காலாள், சுமைதூக்குபவன், தூதர்கள்,உபாயஞ்சொல்லும்குருக்கள், கப்பல்கள்என்னும் இவ்வெட்டுவகையையும்பற்றியதென்றும் ரஹஸ்யமானதண்டனை ஸர்ப்பமுதலியஜங்கமவிஷம், வற்சநாபமுதலியஸ்தாவரவிஷம், மற்றும்பலவிஷப்பொடிகள், ஆடையாபரணமுதலியவஸ்துக்களிலும் அன்னமுதலியபுஜிக்கத்தக்கவைகளிலும் பிரயோகிக்கத்தக்கமுறைகள், அபிசாரங்கள்எனப்பலவிதமென்றும் விரிவாகக்கூறப்படுகின்றன. விளையாட்டுச்சண்டையிலும் சூதாட்டத்திலும் நம்பிக்கையுடன்கூடியதும் ஒன்பதாவதுஉபாயமென்று வித்வான்களால்சொல்லப்பட்டதுமானகள்ளத்தனமும்அறம்பொருளின்பங்களைக்கெடுப்பதும் இஷ்டம் அனிஷ்டமென்னும் இவ்விருவிஷயங்களிலுமுள்ளதுமான உபேக்ஷையும் இந்திரஜாலமுதலியமாயையும் [1]சுபாசுபங்களைக்குறிப்பிக்கும்பல சகுனங்களும் வேஷத்தையடைந்து பகையாளிகளிடம் உபயோகிக்கத்தக்க டம்பமும் வஞ்சகமும் சித்ததோஷத்தால்கெடுப்பதும் சேஷ்டையில்லாமல்செய்வதும்அதில்சொல்லப்படுகின்றன. சத்துருமித்ரன் உதாஸீனனென்னும் மனிதர்களின்மூன்றுபிரிவும் நவக்கிரஹநக்ஷத்திரங்களின்வழியைப்பற்றியகுணங்களும் பூமியின் குணங்களும் மந்திரம்யந்திரம்முதலியவைகளால்தன்னைரக்ஷிப்பதும் ஸமாதானஞ்செய்வதும் புதிதாகச்செய்யும்பலகாரியங்களைக்கவனிப்பதும் பலத்தையும் புஷ்டியையும்கொடுக்கத்தக்கபலகல்பஸித்திகளும் பலவிதப்பெயர்களுள்ளயானைகுதிரைதேர்காலாள்களின் வியூகங்களும் ஆச்சர்யமாக யுத்தம்செய்யும்முறையும் கொள்ளிவிழுதல்முதலிய [2]நிபாதங்களும் தூமகேது பூகம்பமுதலிய [3]உத்பாதங்களும் எதிர்க்கும்வழியும்

1 இங்கு ஒருசொல் விடப்பட்டது.
2 ஆகாயத்தில்தோன்றிக் கீழேவிழுவன.
3 ஆகாயத்தில்தோன்றிக் கீழேவிழாதன.

ஓடும்வழியும் ஆயுதங்களை அறிவதும் அவைகளைக்கூர்மையாக்குவதும் ஸேனைகளின் வ்யஸனங்களையறிவதும் அவைகளைச்சந்தோஷப்படுத்துவதும் பயம்துன்பம்கஷ்டம் இவைகளின்காலமும் அதிலுபதேசிக்கப்பட்டிருக்கின்றன. பரதச்ரேஷ்டனே! இன்னும் துந்துபிமுதலிய வாத்தியமுழக்கங்களையும் கொடிமரங்களிலுள்ள விசேஷங்களையும் அடையாளமாகக்கொண்டு தன்ஸேனைகளுக்கு அறிவிக்கவேண்டியவைகளை அறிவிக்கும்வழியும், அதுகொண்டு சத்துருக்களை மதிமயங்கச்செய்வதும், குரூரர்களான திருடர்களும் காட்டாள்களும் தீயையும் விஷத்தையும் இடுகிறவர்களும் சூதானபாவைகளைச் செய்கிறவர்களுமாகிய இவர்களைக்கொண்டு சத்துருராஜ்யத்தைப் பிடிக்கத்தக்க வழியும் கூறப்பட்டிருக்கின்றன. ஸேனைத்தலைவனைப் பேதித்தல், தான்யமுதலியவற்றை அறுத்தல், யானைகளுக்கு மந்திரமுதலியவற்றால்கெடுதியுண்டுபண்ணல், மற்றுமுள்ள தீங்குகளைச்செய்தல், அன்புள்ளவனை ஆதரித்தல், எஜமானனைக்கைப்பற்றுதல், ஏழு அங்கங்களுள்ள ராஜ்யத்தின்வளர்ச்சிகுறைஸமநிலைகளைக்கவனித்தல், தூதர்களுக்குள்ள ஸாமர்த்தியம், ராஜ்யத்தைப்பெருக்குதல், சத்துரு மித்திர உதாஸீனர்களைப்பற்றிய விரிவு, மேலானபலாவன்கள் எதிர்ப்பது, அவர்களைத் தடுப்பது, நுட்பமானவியவகாரம், துஷ்டர்களைவிலக்குதல், மல்லயுத்தம், ஆயுதப்ரயோகப்பயிற்சி, [1]தானம், பொருளீட்டுதல், கூலிக்காரர்களைக் கவனிப்பது, ஜீவனமற்றவர்களைப்போஷிப்பது, கஷ்டஸமயம் பார்த்துக்கொடுப்பது, வ்யஸனங்களில் பற்றில்லாமலிருப்பது, அரசரின்குணங்கள், ஸேனாபதியின்குணங்கள், பரிவாரங்களுடையனவும் மற்றஸாதனங்களினுடையனவுமான குணதோஷங்கள், குற்றமுள்ளபலவித இங்கிதம், அடுத்தவர்களின்ஜீவனம், எங்கும் சங்கையுடனிருத்தல், அஜாக்ரதையில்லாமை, அடையாதபொருளையடைவது, அடைந்ததை விருத்திசெய்வது, பெருகினதிரவியத்தைப் பாத்திரமறிந்து சாஸ்திரப்படிக்கொடுப்பது, முக்கியமாய்த் தர்மத்திற்கும் பொருள் போகம் துன்பநிவிருத்திகளுக்கும் உபயோகப்படுத்துவது ஆகிய இவை அந்நூலில் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. பரதச்ரேஷ்டனே! வேட்டை சொக்கட்டான் குடி பெண்டிர்கள் என்னும் நான்குவித காமவ்யஸனங்கள், கடுஞ்சொல் குரூரத்தன்மை கடுந்தண்டம் அநீதியானசரீரதண்டனை பொருளையபகரித்தல் தேசம்விட்டு விலக்குவது என்னும் ஆறுவிதமான கோபவ்யஸனங்கள், பலவிதயந்திரங்களைச்செய்தல், அவைகளைஉபயோகித்தல், பகைவர்களாலுண்

---

[1] வேறுபாடம் கொள்ளப்பட்டது.

வழிபைக்கூறுவதாலும் இக்நூ . . .
. . . முறைகளிலும் வழங்கும் . . .
. . . யும் உபதேசிப்பதும் ஸந்நிதிக்கி . . .
. . . களின் ஸாரத்தை முக்கியமாகக் . . .
. . . வருங்காலத்திலுள்ள மஹாத்ம . . .
. . . என்று சொன்னார். பிறகு ஆதியும் அந்தமுமற்றவரும் பல
. . . களுள்ளவரும் ஞானசக்திமுதலிய சக்திகளுடன் கூடினவரும்
. . . வித்தைமுதலிய எல்லாவித்தைகளுக்கும் பதியும் நித்தியமான
. . . மாமுதலிய அஷ்டைச்வரியம்பொருந்தினவரும் நித்தியரும்
. . . ப்தியும் விசாலாக்ஷரும் லோகத்தைச்செய்கிறவரும் தேவருமான
சிவபெருமான் அந்தநீதிநூலை முதலில் கிரஹித்தார். உலகங்களுக்
. . . பதியும் அழிவற்றவருமான சிவபெருமான் உலகத்தைப்படைக்
கும் வித்தையைப் பிரம்மதேவருக்களித்துப் பிரம்மாண்டத்தைஉண்டு
பண்ணின பிரபுவாயிருந்தும் பிரம்மதேவரின் ஸந்தோஷநிமித்தமா
கத் தம்புத்திரரான அவரைப் பிதாவாகவைத்துப் பிதாவானதாம்அவ
ருக்குப்புத்திரராக அவர்நெற்றியிலிருந்து வெளிவந்து குழந்தைவடி
வமாய்க் கொடுமையாகக் கூச்சலிட்டார். அவருக்குவேண்டி எல்லா
உலகங்களையும் படைத்தவரும் உலகங்களுக்குப்பிதாமஹருமான பிர
ம்மதேவர் பொன்மயமான அன்னபக்ஷியாய்த் தோன்றினர். எண்
ணற்ற ஆயிரக்கணக்கானருத்திரர்களுக்கு அழிவற்றஇடமானவரும்
எல்லாப்பிராணிகளுக்கும் தேவரும் நித்தியரும் மஹாதேவருமான
அந்தச்சிவபிரான் ஒவ்வொருயுகங்களிலும் பிராணி . . . யுளின்
குறைவையறிந்து பிரம்மதேவரியற்றியதும் பெரிய அஸ்த்ரவித்தைக
ளுள்ளதுமான அந்நீதிசாஸ்திரத்தைப் பதிஞயிரம்அத்தியாயமுள்ள
தாகச் சுருக்கினர். வைசாலாக்ஷமென்று பிரஸித்தமான அந்தச்சாஸ்
திரத்தை மிக்கதவம்பொருந்தியவனும் பிராம்மணர்களுக்கு மிகன்
மையைக்கருதுபவனுமான தேவேந்திரன் தேவரான மஹேசுவரரிட
மிருந்து கற்றான். அப்படிக்கற்ற அந்தச்சாஸ்திரத்தைச் சத்துருபட்
டணங்களைப்பிளக்கிறவனான இந்திரனும் பிராணிகளின்ஹிதத்தை
விரும்பிப் பாஹுதந்தகமென்னும்பெயருள்ளதாக ஐயாயிரம் அத்தி
யாயங்களாகச் சுருக்கிச்செய்தான . . . அ . . . அந்
. . . என்றுசொல்லத்தக்க பி . . . அ . . . மய
. . . பார்ஹஸ்பத்தியமெனப் . . .

அளவில்லாத அறிவுள்ளவரும் பெரியகீர்த்திபெற்றவரும் யோகத்திற்குக் குருவுமான சுக்ராசாரியர் அந்தச்சாஸ்திரத்தை ஆயிரம்அத்தியாயங்களாகச் சுருக்கிச்செய்தார். ஏ! பாண்டவ! இவ்விதம் உலகங்களையனுஸரித்து ஜனங்களுடைய ஆயுளின் குறைவையுமறிந்து மஹரிஷிகளால் இந்தநீதிசாஸ்திரம் சுருக்கிக்கூறப்பட்டது. பிறகு தேவர்கள் உலகங்களைப் பரிபாலிப்பவரான விஷ்ணுவிடம்சென்று மனிதர்கள்யாவரையும் ஒருவனாக அடக்கியாளத்தக்க பெருமைபொருந்திய ஒருவனை அளிக்கும்படி வேண்டினார்கள். பிறகு தேவரும் பிரபுவுமானபகவான் நாராயணரும் ஆலோசித்துத் தம்மனத்திலிருந்து மிக்கதேஜஸுள்ள விரஜஸென்னும்புத்திரனை உண்டுபண்ணினார். மஹாபாக்கியமுள்ள விரஜஸானவர் பூமியில் அரசாளவிரும்பவில்லை. சாஸ்திரப்பயிற்சியுள்ள அவர்புத்தியானது ஸந்யாஸத்திலேயே சென்றது. ஓ! பாண்டவ! அவருக்குப்புத்திரராக உதித்தவரும் மனிதர்களில் மேலானசக்தியுள்ளவருமான கீர்த்திமானென்பவரும் மோக்ஷத்தில் புத்திசென்றவரானார். கீர்த்திமானுடையபுத்திரரான கர்த்தமரும் பெருந்தவஞ்செய்யச்சென்றார். ஸ்ருஷ்டிகர்த்தரான கர்த்தமரின்புத்திரனும் மிக்கபராக்ரமமுள்ளவனும் யோக்யனுமான அனங்கனென்பவன் தண்டநீதியில் மிகச்சமர்த்தனாக ப்ரஜைகளைப் பாதுகாத்துவந்தான். அனங்கனுக்குப்புத்திரனான அதிபலனென்பவன் பெரிய ராஜ்யத்தையடைந்து நீதியுடன் சிறிதுகாலம் செங்கோல் செலுத்திவந்தான். பின்னொருகாலத்தில் நல்லஉருவமுள்ளவளும் ஒப்பில்லாதநற்குணமுள்ளவளும் பதிவ்ரதையும் நல்லபாக்யத்தால்நிறைந்தவளும் தர்மராஜரின் [1]மானஸபுத்திரியுமான ஸுநீதையென்னும் பெண்மணியை அடைந்து காமத்தால் அறிவுமயங்கி ஐம்பொறிகளுக்கு வசப்பட்டவனானான். மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற ஸுநீதையும் (அவனிடமிருந்து) வேனனைப்பெற்றனள். ராகத்வேஷங்களுக்கு வசப்பட்டுப் பிராணிகளிடம் தர்மமின்றிநடக்கும் அவ்வேனனை வேதமறிந்தரிஷிகள் மந்திரத்தால் பரிசுத்திபெற்றகுசங்களால் கொன்றார்கள். ஓ! பாரதனே! முனிவர்கள் அந்தவேனனுடைய வலத்தொடையைக்கடைய அதிலிருந்து குரூபியும் அசுத்தனும் குள்ளனும் சிவந்த கண்ணும் கறுத்தகேசமுமுள்ளவனும் தீயால்கருகின கம்பம்போன்றவனுமான ஒருபுருஷன் உண்டானான். அப்புருஷனை வேதமறிந்தமுனிவர்கள், 'நிஷீத' என்னும் பதத்தால் உட்காரென்றுசொன்னார்கள். அந்தக்காரணத்தால் அவனிடமிருந்து மலைகளிலும் காடுகளிலுமுள்ள

---

[1] இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

குரூர்களான நிஷாதர்களும் விந்தியமலையை வாஸஸ்தானமாகக்கொண்ட மிலேச்சர்களும் பலவாயிரமாக உண்டானார்கள். அம்முனிவர்கள் திரும்பவும் அவ்வேனனின் வலக்கையைக் கடைந்தார்கள். அதிலிருந்து உருவத்தால் வேறுஇந்திரன்போன்றவனும் கவசம்பூண்டவனும் கத்திகட்டினவனும் கையில் அம்பும்வில்லும் எடுத்தவனும் வேதவேதாங்கங்களறிந்தவனும் தனுர்வேதத்தில் கரைகண்டவனுமான ஒருபுருஷன் உண்டானான். ராஜனே! மனிதர்களிலுத்தமனான அவனிடம் தண்டநீதிமுழுமையும் அடைந்தது. பிறகு வேனனின் புத்திரனான அப்புருஷன் கைகட்டிக்கொண்டு அந்த மஹாரிஷிகளை நோக்கி, "ஓ! முனிவர்களே! மிகஸூக்ஷ்மமும் தர்மார்த்தங்களைக் காணத்தக்கதுமான புத்தி எனக்குண்டாயிருக்கிறது. இந்தப் புத்தியுடன் நான் செய்யவேண்டியகாரியத்தை உள்ளபடிஎனக்குச்சொல்லவேண்டும். நீங்கள் எனக்குக் கட்டளையிடும் பயனுள்ள காரியத்தை நான் தங்களுக்குச் செய்யச் சித்தனாயிருக்கிறேன். இதில் சங்கை வேண்டாம்" என்று சொன்னான். அங்ஙனஞ்சொன்ன அப்புருஷனை நோக்கி அந்தப்பெரியரிஷிகளும் தேவர்களும், "ஆசை, கோபம், லோபம், அகங்காரம் இவைகளைத் தூரத்தில்விலக்கிவிட்டுப் பிரியத்தையும் அப்பிரியத்தையும்விட்டு எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமபுத்தியுள்ளவனாக விதிப்படி தர்மகாரியத்தைச் சங்கையின்றி நீ செய்துவரவேண்டும். அடிக்கடி தர்மத்தைக்கவனித்துவரும் நீ உலகத்தில் தர்மத்தைவிட்ட எவ்விதமனிதனையும் உன்கைகளால் சிக்ஷிக்கவேண்டும். மனத்தாலும் வாக்காலும் கர்மத்தாலும் பூமியிலுள்ள (வேதமும் பிராம்மணர்களும் கர்மமுமாகிய) பிரம்மத்தை எப்பொழுதும் ரக்ஷிக்கிறேனென்னும் பிரதிஜ்ஞையுள்ளவனாயிருக்கவேண்டும். சத்ருக்களைத் தபிக்கச்செய்கிறவனே! தண்டநீதியை மூலமாகக்கொண்டதர்மத்தைச் சங்கையின்றிச்செய்வதுடன் ஒருகாலத்திலும் இந்திரியங்களுக்கு வசப்பட்டவனாயிருப்பதில்லையென்றும் பிராம்மணர்களைத் தண்டிப்பதில்லையென்றும் உலகம்யாவும் ஒன்றோடொன்று கலவாவண்ணம் ரக்ஷிப்பேனென்றும் எங்களுக்கு உறுதிமொழி சொல்லவேண்டும்" என்றுசொன்னார்கள். இங்ஙனம்சொன்ன ரிஷிகளுடன் கூடின தேவர்களைநோக்கி வேனனின்புத்திரன், "ஓ! தேவச்ரேஷ்டர்களே! பிராம்மணர்களின் ஸஹாயமெனக்கிருக்குமானால் இங்ஙனமேஆகட்டும்" என்றுசொல்ல, பிரம்மவாதிகளான அவர்கள் யாவரும், 'அப்படியேஆகட்டும்' என்று அவனை அனுக்ரஹித்தார்கள். வேதங்களின் நிதிபோலவிளங்கும் சுக்ராசாரியர் அவனுக்குப் புரோ

ஷிதரும், வாலகில்யமுனிவர்களும் ஸாரஸ்வதர்களும் மந்திரி களும், பெருமைபொருந்திய கர்க்கமஹரிஷி ஜ்யோதிஷம்சொல்லுகிற வருமானார்கள். ஸ்ரீவிஷ்ணுபகவான், விரஜஸ், கீர்த்திமான், கர்த்தமன், அனங்கன், அதிபலன், வேனன், அவன்குமாரனான பிருதுவென்னும் முறைப்படி விஷ்ணுமுதல் இவன் எட்டாமவனென்பது உலகில் மிகப் பிரஸித்தமானது. அதுமுதல் ஸூதரும் மாகதரும் இவனுக்கு வந்தி களாயிருந்தார்கள். பிரதாபமுள்ள வேனபுத்திரனானபிருதுராஜன் ஸந் தோஷத்துடன் அவர்களில் ஸூதருக்கு அநூபமென்னும் தேசத் தையும் மாகதருக்கு மகததேசத்தையும் அளித்தனன். அந்தப்பிருது வானவன் மிகவும் மேடுபள்ளமாயிருந்ததாக நாம் கேள்விப்படும் பூமியை எங்கும் ஸமமாகச்செய்தான். எல்லா மன்வந்தரங்களிலும் பூமி மேடுபள்ளமுள்ளதாகிறது. ஓ! மஹாராஜனே! பிருதுவான வன் தன்வில்லின்முனையால் மலைகளையுடைத்து நாலு பக்கங்களிலு முள்ள கற்குவியல்களையெடுத்து இப்பூமியை ஸமமாக்கினான். தேவேந் திரனும் பிரம்மாவும் மஹாவிஷ்ணுவும் மற்றத்தேவர்களும் ரிஷிக ளும் பிரஜைகளைப்பாதுகாக்கும் அதிகாரத்தில் அவனுக்கு அபிஷே கஞ்செய்தார்கள். ஏ! பாண்டவ! பூமிதேவியானவள் ரத்தினங்களை யெடுத்துக்கொண்டு பிருதுமஹாராஜனை நேரில்வந்து கண்டனள். நதிகளுக்குப்பதியான ஸமுத்திரராஜனும் மலைகளிற்சிறந்தஹிமவா னும் ரத்தினங்களுடன் அவனைவந்துகண்டார்கள். ஓ! யுதிஷ்டிர! இந்திரனும் குறைவற்றதிரவியத்தை அவனுக்கு அளித்தான். பொன் மலையான மஹாமேருவும் ஸுவர்ணத்தைக்கொடுத்தது. யக்ஷராக்ஷ ஸர்களுக்குத்தலைவனும் ஐச்வர்யமுள்ளவனுமான குபேரனும் அறம் பொருள் இன்பங்களையனுபவிக்கத்தக்க தனத்தை யளித்தான். ஓ! பாண்டவ! பிருதுமஹாராஜாவின் ஸங்கல்பத்திற்குத்தக்கபடி கோடிக் கணக்கான குதிரைகளும் ரதங்களும் யானைகளும் மனிதர்களும் உண் டானார்கள். அவன்காலத்தில் துர்ப்பிக்ஷமும் மனக்கவலைகளும் வியா திகளும் கிழத்தனமும் திருடர்பயமும் பாம்புமுதலியவைகளின் பயமும் ஜனங்களுக்கு ஒருபொழுதுமில்லை. பூமி பயிர்கள் ஓங்கிவளர் ந்து விளங்கிற்று. அவன் ஸமுத்திரத்தையெதிர்த்துச்சென்றபொழுது ஸமுத்திரஜலம் கல்லுக்கொப்பான திடமுள்ளதாயிருந்தது. மலைக ளும்விலகி அவனுக்குவழிவிட்டன. அவன்கொடி எங்கும்பங்கமுறா ந்ததில்லை. அந்த அரசனால் இப்பூமியிலிருந்து பதினேழுவிதமான பயிர்கள் கறக்கப்பட்டன. யக்ஷராக்ஷஸநாகர்களுக்குள் எவனெவ னுக்கு எதுஎது இஷ்டமோ அவன் அவனால் அது அதுவும் கறக்கப்

பட்டன. மஹாத்மாவான அவன் இம்மானிடலோகத்தில் தர்மத்தை மேன்மேல் விளங்கச்செய்து, பிரஜைகளையெல்லாம் ரஞ்சனஞ்செய்தகாரணத்தால் ராஜாவென்றும் பிராம்மணர்களுக்குள்ள [1]க்ஷதத்தைநீக்கி ரக்ஷித்தகாரணத்தால் க்ஷத்திரியனென்றும் சொல்லப்பட்டான். அவனால் பூமி தர்மம்விளங்கிச்செழித்துப் பிரஸித்திபெற்றகாரணத்தால் ஸாதுக்கள் இப்பூமிக்குப் பிருதிவியென்று பெயர்வழங்கினார்கள். ஸநாதனரான ஸ்ரீவிஷ்ணுபகவான் ராஜாவானஇவனை ஒருவரும் மீறி நடவாமலிருக்கும்படி அனுக்ரஹஞ்செய்து உலகமரியாதை நிலைபெறும்படிச்செய்து பிறகு தம்அம்சத்தால் அவனிடம் பிரவேசஞ்செய்தார். அந்தக்காரணத்தால் இவ்வுலகம் அரசர்களைத் தேவர்களுக்கொப்பாக வணங்கிவருகிறது.

சாரர்களின்ஸஞ்சாரத்தால் உலகவிருத்தாந்தத்தை எப்பொழுதும் பார்த்துச் செங்கோல்செலுத்தி ரக்ஷித்துவரும்அரசனை எவனும் மீறிநடக்கத்தக்கவனல்லன். ராஜச்ரேஷ்டனே! தன்சரீரத்தாலும் இந்திரியங்களாலும் ஸமமாயிருந்தாலும் மற்றவர்களுக்கு அரசனுடையசெய்கை மிகச்சுபமானதால் அவ்வரசனுக்குப் பெருமையைக் கொடுக்கும் தெய்வகுணமின்றி உலகம் எந்தக்காரணத்தால் அடங்கிநிற்கக்கூடும்? அப்பொழுது ஸ்ரீவிஷ்ணுபகவானுடைய நெற்றியிலிருந்து பொற்கமலமொன்றுண்டாயிற்று. ஏ! பாண்டவ! பிறகு அந்தக்கமலத்தினின்றும் தர்மதேவதையான லக்ஷ்மிதேவி தோன்றினாள். லக்ஷ்மிதேவியிடமிருந்து தர்மத்திற்குரியபொருள் உண்டாயிற்று. பிறகு அப்பொருளும் தர்மமும் லக்ஷ்மியும் ராஜ்யத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறார்கள். ஸ்வர்க்கலோகம்சென்ற உத்தமபுருஷர்கள் அவ்வுலகத்திற்குரியபுண்ணியத்தை அனுபவித்தபின் தண்டநீதியில்ஸமர்த்தரும் ஸ்ரீவிஷ்ணுபகவானுடைய மஹிமையுடன்கூடினவரும் அறிவுள்ளவருமான பூவுலகின் அரசராகப்பிறந்து மஹிமைபெற்றிருக்கிறார்கள். ஆகையால், தேவர்களால்ஸ்தாபிக்கப்பட்ட இவ்வரசனை மீறிநடப்பவன் எவனுமில்லை. ஏ! ராஜச்ரேஷ்ட! நற்கருமத்தின்பயன் மிகச்சுபமாகையால் உலகம் சரீரமுதலியவற்றில்ஸமமாயிருந்தும் அரசனென்றஒருவன்கட்டளையில் அடங்கி அவனுக்குவசப்பட்டு அனுஸரித்துச் செல்லத்தக்கதாயிற்று. அழகானஉருவமுள்ளவனும் நல்லபாக்கியமுள்ளவனும் பிரபுவுமான அரசனைக்கண்டு அவன்முகத்தைப்பார்த்த மனிதர்யாவரும் அவனுக்கு வசப்படுவார்கள். அவனுடையதண்டத்தின் பெருமையைக்கொண்டு தெளிவான நீதி

[1] துன்பம்.

யாலும் நல்லநடையாலும் சாரர்களாலும் இவ்வுலகம் எங்கும் விடு பிக்கப்பட்டது. ஓ! யுதிஷ்டிர! பிரம்மதேவரியற்றிய அப்பெரி சாஸ்திரத்தில் ஆகமமும், ஸநாதனர்களான மஹரிஷிகளின் உத்பத்தி யும், தீர்த்தங்களின் உத்பத்திமுறையும், க்ஷத்திரியர்களின் பரம்பரை யும், நான்குஜாதியும், நான்குஆச்ரமங்களும், நான்கு வேதங்களும், வைதிகதர்மமும், உபவேதங்களும், இதிஹாஸங்களும், நியாயமும், தவமும், ஞானமும், அஹிம்ஸையும், ஸத்தியமும், தானமும், மாத் ஸரியமில்லாமையும், [1]பெரியோர்களின் ஸேவையும், சுத்தியும், முயற் சியும், எல்லாப்பிராணிகளிடமும்தயையும், பூமியில்வழங்கிவரும் மற்று முள்ளயாவும் சந்தேகமற உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. ஆகை யால், பாண்டுபுத்ரனான அரசச்ரேஷ்டனே! உலகத்தில் அரசர்கள் தேவர்களுக்கொப்பானவர்களென்று எப்பொழுதும் அறிஞர்கள் அ... விக்கிறார்கள். அரசர்களின்பெருமைக்குக்காரணமான இவையாவும் உனக்கு உபதேசிக்கப்பட்டன. பாதச்ரேஷ்டனே! இதில் வேறு என்னசொல்லவேண்டியிருக்கிறது?" என்றுசொன்னார்.

## ஐம்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம் (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் ராஜதர்மத்தில் சிலஸந்தேகங்களைக்கேட்டதும், பீஷ் மர் நான்குஜாதி தர்மங்களையும் கூறியதும்.)

பிறகு, யுதிஷ்டிரமஹாராஜர் பிதாமஹரானபீஷ்மரைத் திரும் பவும்நமஸ்கரித்துக் கைகூப்பிவணங்கிநின்று கேட்கத்தொடங்கினார். "ஓ! பரதச்ரேஷ்டரானபிதாமஹரே! (அநுலோமம் பிரதிலோம முதலிய) எல்லாச்சாதிகளுக்கும் (பொதுவான) தர்மங்கள்எவை? (பிராம்மணர்முதலிய) நான்குஜாதிகளுக்கும் அவைகளுக்குரியஆச்ர மங்களுக்குமுள்ள விசேஷதர்மங்கள் எவை?. க்ஷத்திரியர்களின்தர் மங்கள் எவை? ராஜ்யமும் ராஜாவும் விருத்தியடையக்காரணமெது? ஏ! பரதச்ரேஷ்டரே! பிரஜைகளும் வேலைக்காரர்களும் எந்தக்காரண த்தால் விருத்தியடைகிறார்கள்? கோசம், கோட்டை, தண்டம், துணை வர்கள், மந்திரிகள், ரித்விக்குக்கள், புரோஹிதர்கள், ஆசாரியர்கள் ஆகியவர்களை எவ்விதமிருந்தால் அரசன்விலக்கவேண்டும்? ஆபத் துள்ளகாலத்தில் அரசன் எவர்களை நம்பவேண்டும்? அரசன் எதிலிரு ந்து தன்னை உறுதியாகக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும்? தவைதி

[1] இங்கு ஒருசொல் விடப்பட்டது.

பாவத்தில் ஊழியக்காரர்களுக்கு எவ்விதம் சபதமிருக்கவேண்டும்? அச்சபதம்மீறிய அதர்மத்தின்பயன் யாது? இவையனைத்தையும் வற்றின் வியவகாரத்தையும் எனக்குச் சுருக்கியும் விரித்தும் உள்ள படி உபதேசித்தருள்க" என்று வினவினர்.

பீஷ்மர், "பெருமையுள்ள தர்மத்தையும் கர்த்தரான ஸ்ரீகிருஷ்ணனையும் அந்தணர்களையும்பணிந்து சாச்வதமான தர்மங்களைச்சொல்லத்தொடங்குகிறேன். கோபமில்லாமையும், ஸத்யவசனமும், எல்லாவித தானமும், தன்தாரத்தினிடத்தில் பிரஜையையுண்டுபண்ணுவதும், சுத்தியும், துரோகமில்லாமையும், நேர்மையும், போஷிக்கத்தக்கவர்களைப் போஷித்தலுமாகிய இவையெல்லாம் எல்லாச்சாதிக்குமுள்ள தருமங்களாகும். ஏ! மஹாராஜ! பிராம்மணஜாதியின் தருமத்தை உனக்குச்சொல்லுகிறேன். அதில் முதல்ஆச்ரமியான [1]வடுவின் ஸனாதனமான தர்மம், அடக்கம் வேதமோதல் ஓதுவித்தல் இம்மூன்றிலும் முடிவுபெறும். அத்தகைய தன்தர்மமன்றி வேறெதிலும் அணுகாமல் கல்வியில் திருப்திகொண்டு சாந்தனாயிருக்கும் அந்தவடுவுக்குத் தன்முயற்சியின்றித் தனம்கிடைக்குமாகில், விதிப்படி தாரத்தையடைந்து ஸந்ததியடையவேண்டும். அன்றியும் தானத்தையும் யாகத்தையும் செய்வதுடன் அதிதிமுதலியவர்களுக்குப் பங்கிட்டு மிச்சமானபொருளைப் புசிக்கவேண்டுமென்று ஸாதுக்கள் அறிவிக்கிறார்கள். பிராம்மணன் மற்றதைச்செய்தாலும் செய்யாவிட்டாலும் வேதமோதலொன்றால் தர்மம்நிறைந்தவனாகிறான். அவன் [2]மைத்ரன் என்று சொல்லப்படுகிறான். வாங்கிக்கொள்ளுதலும் யாகம்செய்வித்தலும் ஓதுவித்தலுமின்றி தானம், யாகம், வேதம் இவைகளைமுறையேகொடுப்பது செய்வது ஓதுவது இம்மூன்றுமட்டும் அரசர்களின் தருமமாகும். (க்ஷத்திரியன்) பிரஜைகளைக்காப்பதுடன் திருடர்களை அடக்குவதில் விடாமுயற்சியுள்ளவனும் யுத்தத்தில் பராக்ரமமுள்ளவனுமாயிருக்கவேண்டும். கல்விகளைக்கற்று யாகங்களையும் செய்து யுத்தத்திலும் ஜயம்பெற்றுவிளங்கும் அரசர்கள் உலகத்தைஜயிக்கும் க்ஷத்திரியர்களில் உத்தமர்களாவார்கள். போரிற்சென்று சரீரத்தில் காயமின்றித் திரும்பிவரும்க்ஷத்திரியனுடைய அக்காரியத்தை மூத்தோர்கள் புகழ்கிறதில்லை. இவை க்ஷத்திரியர்களுக்குரிய முக்கிய

[1] பிரம்மசாரி.

[2] 'உலகநண்பன்' என்பதுபழையஉரை. க்ஷத்திரியனை ஐந்திரனென்று பின்கூறுதலால் மைத்ரனென்னும்பதத்திற்கு மித்திரனைத் தேவதையாகக் கொண்டவன் என்பது பொருத்தமானது.

மான தருமங்கள். இவைகளிலும் தானமும் யாகமும் வேதமும் க்ஷேமத்திற்காகவும் திருட்டையடக்குவது ஆவசியமானகடமையாக வும் விதிக்கப்படுகின்றன. ஆகையால், தருமத்தைவிரும்பும் அரசன் விசேஷமாகப் போர்செய்யவேண்டும். அரசன் பிரஜைகளையெல்லாம் தம்தம்தருமத்தில் நிலைக்கச்செய்து எந்தக்காரியத்தையும் கடுமை யின்றித் தருமப்படி நடத்திவரவேண்டும். [1]இந்திரனென்று சொல் லப்படும் அரசன் மற்றதைச்செய்தாலும் செய்யாவிடினும் பாலனமொன் றில் அவன் தர்மம்யாவும் முடிவுபெறும். சாச்வதமான வைச்யரின் தர்மத்தையும் உனக்குச்சொல்லுகிறேன். தானமும், அத்தியயன மும், யாகமும், அசுத்தமின்றிப்பொருள் சேர்ப்பதும், தந்தையான வன் மகனைப்பார்ப்பதுபோலப் பசுக்களைக்கவனித்துப் பாதுகாப்ப தும் வைசியரின் தருமமாகும். இவையன்றி வேறு எவ்விதகர்மமும் வைச்யனுக்குத் தருமமாகாது. பிரம்மதேவர் பிராணிகளையெல்லாம் படைத்துப் பாதுகாக்கும்படி பிராம்மணர்களிடத்திலும் அரசர்க ளிடத்திலும்அளித்ததுபோலப் பசுக்களையெல்லாம்படைத்துப் பாது காக்கும்படி வைச்யனிடம் ஒப்பித்தார். அவ்விதம் பசுக்களைக்காத்து வரும் வைச்யன் மிகுந்த ஸுகத்தைப்பெறுவன்; அவன் தொழிலையும் ஜீவனத்தையும் சொல்லுகிறேன். தான்மேய்த்துவரும் பசுக்களில் ஆறில் ஒன்றின்பாலையும் நூறுபசுக்களில் வருஷம் ஒருமுறை ஒருபசு காளை இரண்டையும் கூலியாக அடைவது நியாயமாகும். [2]வர்த்தகத் தில் கொள்முதல்தொகையில் ஏழிலொன்றுலாபம்பெறுதல் நியாய மாகும். வருஷம் ஒருமுறை முடிவுபெறும் பயிர்களுக்கும் மற்று முள்ளவிதைகளுக்கும் கவயசிருங்கமுதலிய வர்த்தகத்திற்கும் இவ் வேழிலொருபாகமே லாபமாகும். விலையுயர்ந்த ஒருவகை மிருகத் தின்குளம்புமுதலிய வஸ்துக்களின்வர்த்தகத்தில் பதினாறில் ஒன்று தான் லாபம்கூடும். வைச்யன் பசுக்களைக் காக்கமாட்டேனென்று நினைப்பது கூடாது. விருப்பமுள்ள வைச்யனிருக்கையில் மற்றெவ னும் எவ்வகையிலும் பசுக்களைக்காப்பது நீதியன்று. பாரதனே! சூத்ரனுடைய தர்மத்தையும் உனக்குச் சொல்லுகிறேன். பிரம்ம தேவர் மேற்சாதிகளுக்குப் பணிவிடைசெய்யக்கருதிச் சூத்திரனைப் படைத்தபடியால் மேற்குலத்தோரின் பணிவிடை அவனுக்குத் தர்ம மெனவிதிக்கப்படுகிறது. சூத்ரன் அஸூயையயின்றி மூன்றுவருணத் தாருக்கும் பணிவிடைசெய்தால் பெரியஸுகம்பெறுவான். சூத்

---

[1] இந்திரனைத்தேவதையாகக்கொண்டவன்.

[2] 'லப்தாத்' என்கிறபாடம் கொள்ளப்பட்டது.

திரன் எந்தக்காலத்திலும் எவ்விதத்திலும் பொருளைச் சேர்க்கக்கூடாது. தாழ்ந்தபிறவியான அவன் தனமடைந்தால் மேன்மக்களைத் தன்னுள்ளடக்கமுயல்வான்; ஒருஸமயம் அரசனனுமதிபெற்றுத் தர்மம்ஒன்றைக்கருதிப் பொருளைச்சேர்ப்பது அநீதியாகாது. அவன் தொழிலையும் அவன்பிழைக்கும்வழியையும் சொல்லுகிறேன். மூன்றுவருணத்தாரும் சூத்திரனை அவசியம் போஷிக்கவேண்டும். ஊழியஞ்செய்யும்சூத்திரனுக்குப் பழையகுடை விசிறி பாதுகை விலாமிச்சந்தட்டி தமக்குஉடுக்கத்தகாத கிழிந்தஆடைகள் ஆகியஇவைகளை த்விஜாதிகள் அளிக்கவேண்டும். இந்தவஸ்துக்கள் தர்மப்படி அவனுடையதனமாகும். பணிவிடைசெய்யக்கருதித் தன்னைவந்தடுத்தசூத்திரனுக்கு த்விஜாதிகளிலெவனும் ஜீவனம்கொடுக்கவேண்டுமெனத் தர்மமறிந்தோர்கள் சொல்லுகிறார்கள். [1]புத்திரனற்றசூத்திரனுக்குப் பிண்டங்கொடுக்கவேண்டும். கிழவன்பலமற்றவன் ஆகியசூத்ரர்களைப்போஷிக்கவேண்டும். சூத்திரன் எவ்விதஆபத்திலும் எஜமானனைவிட்டுவிலகாமல் அவன்பொருளிழந்தகாலத்தில் தன்குடும்பத்தில் அதிகமானபொருளால் அவனைப் போஷிக்கவேண்டும். சூத்திரர்களுடையதனம் அவர்களுக்குச்சொந்தமின்றி அவர்எஜமானனைச்சேர்ந்ததாகும். வேதத்திற்கூறியயாகமானது வேதத்தில்அதிகாரம்பெற்ற பிராம்மணர்முதலிய மூன்றுஜாதிகளின்தர்மமேதவிரச் சூத்திரனிடம் வேதமும் அதுமூலமான ஸ்வாஹாகாரவஷட்காரங்களும் இல்லை. ஆகையால், வேதத்திற்சொல்லியவிரதங்களின்றிச் சூத்திரன், [2] பூர்ணபாத்திரமென்னும்தக்ஷிணையுள்ள கிரஹசாந்திமுதலிய சிறியயாகங்களைச் செய்யவேண்டும். பைஜவனனென்னும் சூத்திரன் ஐந்திராக்னம்என்னும் யாகத்திலுள்ள விதிபோல லக்ஷக்கணக்கான பூர்ணபாத்திரங்களைத் தக்ஷிணையாகக் கொடுத்தானென்று கேள்வியுண்டு. ஓ! பாரத! பிராம்மணர்முதலிய எந்தவர்ணத்தாரின்யாகமும் அவருக்குப்பணிவிடைசெய்யும் சூத்திரனையும் சேர்ந்ததாகும். ச்ரத்தையென்னும்யாகமானது எவ்விதயாகங்களிலும் முந்தினதாகக் கூறப்படுகிறது. ச்ரத்தையென்பது யாகம்செய்பவர்களுக்கும் பரிசுத்தமான ஒருபெரிய தெய்வமாகும். பெரியதெய்வமான பிராம்மணர்கள் அந்தஅந்த விருப்பங்களுடன் கூடினவர்களாய் ஒருவருக்

---

[1] சிலசாஸ்திரங்களில் இறந்தவேலைக்காரனையும் உத்தேசித்துப் பிண்டம் கொடுப்பதுண்டு.

[2] இருநூற்றைம்பத்தாறுபிடி தான்யம் அடங்கியது ஒருபூர்ணபாத்திரமெனப் பழையஉரை கூறுகிறது.

கொருவர் தம்தமக்குரிய பலயாகங்களைச்செய்ததுமன்றி அவர்களே கீழான மூன்றுஜாதிகளிலும் ஸந்ததிகளைப்பெற்றார்கள். தேவர்களி லும்சிறந்ததேவர்களான அந்த அந்தணர்கள் சொல்லும்வசனம் பெரியநன்மையாகும். ஜாதிகள்யாவும் பிராம்மணரிடம் உண்டான காரணம்பற்றி எல்லாஜாதிகளுக்கும் எவ்விதயாகத்தின்ஸம்பந்தமும் உண்மையிலுண்டு. ரிக் யஜுஸ் ஸாமங்களை அறிந்தத்விஜன் தெய்வம் போல என்றும் பூஜிக்கத்தக்கவன். ஐய! பாரத! பிரஜாபதியைத் தெய்வமாகக்கொண்ட பணிவிடைத்தொழிலுள்ள சூத்திரன் மூன்று வேதங்களிலும் அதிகாரமற்றவனாவான். மானஸமானயாகம் ஒன்று தான் எந்தவர்ணத்தாரும் செய்யத்தக்கதாகக்கூறப்படும். இந்தமா னஸயாகத்தைச் செய்யும் மனிதனிடம் தேவர்களும் மற்றவர்களும் அன்புபாராட்டாமலிருப்பதில்லை. ஆதலின், ச்ரத்தையென்னும் யாகம் எல்லாஜாதிகளும் செய்யத்தக்கதாகக் கூறப்படுகிறது. ராஜனே! தங்களுடையதெய்வம்போன்ற பிராம்மணர்கள் கீழானமூன்றுஜாதி களுக்கும் சொந்தக்காரர்களாதலால் அவர்கள் மற்றமூன்றுஜாதியார் களும் பயன்படும்படி அவர்களைக்குறித்து முன்காலத்தில் யாகஞ் செய்யாமலிருந்தார்களென்பதில்லை. ஆயினும், அவ்விதயாகத்தில் வைதிகமான அக்கினிகளுக்குக் கீழான லௌகிகாக்நியை ஆதாரமா கச்செய்தார்கள். அந்தக்காரணத்தால் பிராம்மணன் மூன்றுஜாதிக ளுக்கும் யாகத்தைச்செய்வித்தவனாகிறான். இந்தக் காரணத்தைக் கவனிக்கையில் நான்குஜாதிகளும் தர்மத்தில்ஒற்றுமையுள்ளனவும் பிராம்மணர்களாலுண்டுபண்ணப்பட்ட பரம்பரையிலுதித்தனவுமா கின்றன. அகாரமென்றஓரெழுத்து ரிக்கு ஸாமம் யஜுஸ் என்ற மூன்றுவேதங்களாகத் தோன்றியதுபோல உண்மையைவிசாரித்தால் பிரம்மம்ஒன்றே பிராம்மணர்முதலிய நான்குஜாதிகளாய்த் தோன்றி ற்று. ராஜச்ரேஷ்டனே! இவ்விஷயத்தில் பழமையறிந்தபெரியோர் கள், யாகத்தில்விருப்பமுள்ள வைகானஸமுனிவர்கள் சொல்லும் ஸ்ரீ விஷ்ணுபகவான்பாடியகாதைகளை உதாஹரிக்கிறார்கள். (அவற்றின் பொருளாவது:) 'தர்மத்திற்கு ச்ரத்தையென்பது பெரியகாரணமாகை யால், இந்திரியங்களைவென்ற ச்ரத்தையுள்ளபுருஷன் (ஸூர்யன்) உதி த்தபின்னும் முன்னும் தர்மப்படி அக்நியில்ஹோமஞ்செய்கிறான். சித றின ஹவிஸ்முதல் விதிப்படியுள்ள ஹவிஸ்வரையில் பதினாறுதிரவ்யங் களுள்ளதும் பலபயன்களுள்ளதுமாகக்கூறப்படும் அக்நிஹோத்ரவிதி களைச் சங்கையின்றிக் கற்றுணர்ந்த மூன்றுவர்ணத்தைச்சார்ந்த புரு ஷன் ச்ரத்தையுடன் யாகஞ்செய்யத்தக்கவன். திருடனாயினும் பாபி

யாயினும் கொடியபாவியாயினும் யாகத்தால் ஸ்ரீவிஷ்ணுபகவானை ஆராதிக்கவிரும்பும்மனிதன் ஸந்தேகமின்றி ஸாதுவென முனிகள் புகழ்கிறார்கள். மூவுலகங்களிலும் யாகம்போன்ற வேறு எந்தக்காரியமுமில்லாததுபற்றி எப்பொழுதும் எவ்விதமும் எச்சாதியானும் யாகஞ்செய்யவேண்டுமென்பது திண்ணம். ஆதலால், இஷ்டம்போலச் சக்திக்குத்தக்கவிதிப்படி புருஷன் அஸூயையின்றிச் சிரத்தையுடன் சுத்தமாக யாகஞ்செய்யவேண்டும் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள்' என்பது.

## அறுபதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு நான்குஆச்ரமங்களையும்பற்றிக் கூறியது.)

ஸத்யமானபராக்ரமமும் சிறந்த கைகளுமுள்ள ஓ! யுதிஷ்டிரனே! நான்காச்ரமங்களின் பெயர்களையும் தொழில்களையும் கேள். (பிராம்மணர்களுக்கு) வானப்ரஸ்தம், ஸந்யாஸம், கார்ஹஸ்த்யம், பிரம்மசரியம்என்று பிரம்மதேவரால் சொல்லப்பட்ட சிறந்த நான்குஆச்ரமங்களுண்டு. (இவைகளில்) சௌளமென்னும் ஸம்ஸ்காரம் பெற்று (உபநயனவிதியினால்) த்விஜத்வத்தையடைந்து வேதங்களைக் கற்று ஆதானமுதலிய கர்மங்களைச்செய்து க்ருஹஸ்தாச்ரமத்தின் கடமையைமுடிவுபெறச்செய்து கருவிகளடக்கி வணக்கமுள்ளவனாகி மனைவியுடனோ மனைவியில்லாமலோ வானப்ரஸ்தாச்ரமத்தை அடையவேண்டும். தர்மந்தெரிந்த அவன் அவ்வாச்ரமத்தில் வானப்ரஸ்தர்களுக்குள்ளசாஸ்திரங்களையுணர்ந்து (அவைகளை அனுஷ்டித்தபின்) மக்கள் முதலிய இல்லறவாழ்க்கையைவிட்டு ஸந்யாஸமடைந்து பிரம்மஸாரூப்யத்தைப் பெறுவான். ஓ! அரசனே! அறிவுள்ள அந்தணன் ஆதிமுதல் ஊர்த்வரேதஸ்என்றஸந்யாஸத்திற்குக் காரணமாகச்செய்யத்தக்கவைகள் இவைகளே. அரசனே! (உத்தமாதிகாரியான) பிராம்மணன், முதல்ஆச்ரமமுடிந்தவுடன் மோக்ஷத்துக்குரிய ஸந்யாஸம்பெறுவது உயர்ந்ததாகும். நான்காவது ஆச்ரமம்பெற்ற பிராம்மணன் வீட்டையும் அக்னியையும்விட்டுக் கிடைத்ததுகொண்டு ஜீவிப்பவனும் இரவு கண்ட இடம்படுப்பவனும் மௌனியும் அடக்கமுள்ளவனும்இந்திரியங்களைஜயித்துப்போகமும் பெருமையும் ஆசையும்விகாரமும் அற்றவனுமாயிருந்தால் மோக்ஷமடைகிறான். முனிகளால் தருமப்படி லேவிக்

கப்பட்ட மிகவும் அருமையான கார்ஹஸ்தியதர்மத்திலிருக்கும் மனி தனும் வேதங்களைக்கற்று வைதிககர்மங்களைச்செய்து ஸந்ததியடைந்து அவ்வாச்ரமஸுகங்களை யனுபவித்தபின் ஸமாதிநிலையுள்ளவனுயிருந்தால் முக்திபெறுவான். ஸமாதிபெறுதகிருஹஸ்தனுனவன் கள்ளமும்கபடமுமின்றி விதிப்படி ருதுகாலத்தில் தன்தாரத்தினிடம் ஸந்தோஷிப்பவனும் மிதபோஜனம், தெய்வபக்தி, மிருதுத்தன்மை, நன்றியறிவு, ஸத்யம், கொடுமையில்லாமை,பொறுமை, இந்திரியநிக்ரஹம், குருவின் ஆணையையும் சாஸ்திரத்தின் கட்டளையையும் காப்பது ஆகியஇவையுள்ளவனும் தேவபிதிருகார்யங்களில்கருத்துள்ளவனும் மாத்ஸரியமின்றி எப்போதும் எவ்வாச்ரமிகளுக்கும் விசேஷமாகப் பிராம்மணர்களுக்கும் அன்னமளிப்பவனும் அக்நிகார்யங்களில் விடா முயற்சியுள்ளவனுமாயிருக்கவேண்டும். இவ்விஷயத்தில் பெருந்தவத்தால்வெளிவந்ததும் மஹானுபாவர்களானமுனிவர்கள்சொல்லுவதும் பெரும்பொருள் அடங்கியதும் பகவான் நாராயணன் கூறியதுமான இவ்வசனத்தைச்சொல்லுகிறேன்; தெரிந்துகொள். உலகத்தில் ஸத்யமும் ஆர்ஜவமும் அதிதிபூஜையும் தர்மமும் தனமும் தன்தாரத்துடன்கூடி இன்புறுதலுமாகிய இந்தச்சுகங்கள்யாவும் உயர்ந்தகிருஹஸ்தாச்ரமத்தில் அடையத்தக்கவையாகையால் இஃது உத்தமமென்பது என்கருத்து. மஹாரிஷிகள் இவ்வாச்ரமத்திலிருப்பவர்களுக்குப் புத்திரதாரங்களைப் போஷிப்பதும் வேதங்களைரக்ஷிப்பதும் சிறந்தவையெனச் சொல்லுகிறார்கள். இவ்விதிப்படி யாகங்களைச் செய்துகொண்டு கிருஹஸ்தாச்ரமத்திலிருக்கும் பிராம்மணன் அவ்வாச்ரமத்திற்குரிய சுத்தமான ஜீவனத்துடனிருந்து ஸுவர்க்கத்தில் நற்பயனடைகிறான். அந்தக்கிருஹஸ்தன் சரீரம்விட்டபின் அவன்விரும்பியபோகம்யாவும் எவ்விடத்திலும் எக்காலத்திலும் அழிவின்றி, ஊழியக்காரன்போல அவனைக்காத்திருக்கும். ஓ! யுதிஷ்டிர! பிரம்மசாரியானவன் தனியாயிருந்து எல்லாவேதங்களையும்ஜபித்துக்கொண்டு ஒரே ஆசாரியரிடம் பணிவிடைசெய்பவனும் சரீரத்திலும் வஸ்திரத்திலும் அழுக்குள்ளவனும் நித்யவிரதமும் நித்யதீக்ஷையுமுள்ளவனும் இந்திரியஜயமுள்ளவனும் நிழலைப்போல ஆசிரியர்பின் செல்லுகிறவனும் அவருக்குள்ளடங்கி அத்தியயனம் பண்ணுகிறவனும் மாறுதவ்ரதத்துடன் தியானம்செய்கிறவனுமாகி எப்பொழுதுமிருக்கவேண்டும். ஐய! அன்றியும் குருவை வணங்கிப் பணிவிடைசெய்பவனும் பிராணயாமம், பிரத்யாஹாரம், த்யாநம், தாரணை, தர்க்கம், ஸமாதி இவ்வாறு கர்மங்களிலும் ஓயாமுயற்சியும் ஓயாநிவிருத்தியுமில்லாதவனும் விரோதிகளிடம்

சோரதவனும் நிக்ரஹாநுக்ரஹங்கள் செய்யாதவனுமாயிருக்கவேண்டும். இவையாவும் பிரம்மசர்யமென்னும் முதலாச்ரமத்திலிருப்பவனுடைய தர்மமாகும்" என்றுசொன்னார்.

---

## அறுபத்தோராவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(தர்மபுத்ரர் வர்ணச்ரமதர்மங்களில் சிலஸந்தேஹம் கேட்டதும் பீஷ்மர் மறுமொழிசொன்னதும்.)

யுதிஷ்டிரர், "என்னைப்போன்றவர்களுக்குச் சுகத்தைத் தரத்தக்க எளியஉபாயங்களும் உலகங்கள் ஒப்பத்தக்கவைகளும் ஹிம்சையற்றவைகளும் பெரும்பயனுள்ளவைகளுமான மங்களதர்மங்களைத் திரும்பவும் சொல்லவேண்டுகிறேன்" என்றுசொல்ல, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"பாரதர்களிற்சிறந்த பிரபுவே! நான்காச்ரமங்களும் பிராம்மணனுக்கு விதிக்கப்பட்டன. அவைகளை மற்றமூன்றுவர்ணத்தார்களும் அடையத்தக்கவர்களல்லர். அரசனே! அரசர்களை முக்கியமாகக் கொண்டவைகளும் பரலோகத்தை அடைவிக்கத் தக்கவைகளுமான பலகர்மங்கள் சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றன. பிரவிருத்தி சாஸ்திரமென்பது பெரும்பாலும் க்ஷத்திரியர்களைச் சேர்ந்ததாகும். அவ்விதகர்மங்களையும் வைசியசூத்திரர்களுக்குள்ள கர்மங்களையும் புத்திக்குறைவால் செய்யும் பிராம்மணன் இவ்வுலகத்தில் இகழ்ச்சியடைந்து பரலோகத்திலும் நரகத்தையடைவான். பாண்டவனே! உலகத்தில் பசு, ஊழியஞ்செய்பவன், நாய், ஓநாய் இவைகளுக்குள்ள பெயரைத் தகாதகர்மத்தைச் செய்யும் பிராம்மணனிடம் வைக்கவேண்டும். நான்காச்ரமங்களிலும் பிராணாயாமமுதலிய ஆறு கர்மங்களைச்செய்கிறவனும், எல்லாத்தர்மங்களையும் அனுஷ்டித்துச் சித்தசுத்திபெற்றவனும், பிரதிப்ரயோஜனத்தை விரும்பாமல் தானம்செய்பவனும், தவத்தில் விசேஷமுயற்சியுள்ளவனும், சுத்தனும், [1]அடக்கமுள்ளவனுமான ப்ராம்மணன் அழிவற்றஉலகங்களைப் பெறுவான். எந்தமனிதன் எந்தப்பருவத்தில் எந்தச்சமயத்தில் எவ்விடத்தில் எந்தக்காரணம்பற்றி எவ்விதகர்மத்தைச் செய்கிறானோ அந்தமனிதன் அந்தக்காரணங்கொண்டு அந்தக் கர்மத்தைச் சிறந்ததெனை நினைக்கி

---

[1] இவ்விடத்தில் வேறுபாடம் கொள்ளப்பட்டது.

றான். ஓ! ராஜேந்திரனே! வட்டிவாங்குவதும் வர்த்தகமும் கிருஷியும் வேட்டையும் [1]வேதமோதுவதற்கொப்பாகுமெனத் தெரிந்துகொள். முன்பிறப்பிலுள்ளவாஸனையால் உறுதிபெற்றுக் காலத்தால் ஏவப்படும்மனிதன் தன்வசமின்றி ஸமயம்போல உத்தமம் மத்தியமம் அதமமென்ற காரியங்களைச் செய்கிறான். முன்பிறப்பில் செய்த கர்மங்களும் இச்சரீரத்துக்குக் காரணமான பஞ்சபூதங்களும் அநித்தியங்களாகும். உலகம் தான்விரும்பிய கர்மத்திற்செல்லுவது இயற்கையாகும். ஜீவன் எந்தக்காரியத்திலும் பிரவிருத்திக்கும் தன்மையுள்ளவனுவான்.

---

அறுபத்திரண்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் பிராம்மணருக்குத்தகாததர்மத்தையும் க்ஷத்ரியர்முதலியோருடையதர்மத்தையும் சொல்லி ராஜதர்மத்தைப் புகழ்ந்தது.)

வில்லின்நாணையிழுப்பதும் சத்துருக்களையடிப்பதும் கிருஷியும் வர்த்தகமும் பசுக்களைக்காப்பதும் பணத்துக்குப்பணிவிடைசெய்வதுமாகிய இவையாவும் பிராம்மணனுக்கு மிகவும் அகார்யமாகும். அறிவுள்ளகிருஹஸ்தனை பிராம்மணன் வேதத்தைக்கற்று யாகமுதலிய ஆறுகர்மங்களையும்செய்து அவ்வாச்ரமகர்மங்களை முடித்தபின் அரண்யவாஸஞ்செய்வது புகழத்தக்கதாகும். அரசனிடம் ஊழியமும் வர்த்தகத்தால் ஜீவிப்பதும் வியவஸாயஞ்செய்து பொருளீட்டுதலும் வஞ்சகமும் வியபிசாரஞ்செய்வதும் பிராம்மணனுக்கு மிகவும்நிந்திக்கப்பட்டன. ஓ! அரசனே! தன்தர்மத்தினின்றும் விலகிச் சூத்திரமடந்தையின்சேர்க்கையும் நட்டுவமும் கிராமஊழியமும் கோள்சொல்லுவதும் கெட்டநடையும் தகாதகாரியத்தைச் செய்வதுமுள்ள பிராம்மணன் பிராம்மணர்களுக்குச் சொந்தமான சூத்திரனுகிறான். ஓ! கௌரவேந்திரனை அரசனே! புத்திக்குறையால் நன்னடைவிட்டு விலகிக் கீழ்ச்சொல்லிய விதமிருக்கும் பிராம்மணன் வேதம்கற்றவனுயினும் கல்லாதவனுயினும் சூத்திரனுக்கொப்பாகவும் அடிமைக்கொப்பாகவும் விலகியிருந்து உண்ணத்தக்கவன். அரசனே! சூத்திரனுக்கு ஒப்பான இவ்விதப்பிராம்மணர்கள் யாவரையும் (வைதிகமான) தேவகார்யத்தில் ஸம்பந்தமின்றி விலக்கவேண்டும். அரசனே!

---

1 இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

மரியாதையற்றவனும் வஞ்சகமாகப்பேசுகிறவனும் தீயநடையுள்ளவனும் துன்பஞ்செய்ய விருப்பமுள்ளவனும் தன்ஜாதிதர்மத்தையும் நல்லநடையையும் விட்டவனுமான அந்தப்பிராம்மணனிடம் [1]ஹவ்யமும் [2]கவ்யமும் மற்ற எல்லாத்தானங்களும் கொடுக்கத்தக்கவையல்ல. அரசனே! ஆனதுபற்றியே பிராம்மணர்களுக்கு அடக்கம், சுத்தி, கபடமில்லாமையென்னும் தர்மங்களையும் நான்குஆச்ரமங்களையும் முன்னம் வேதம்விதித்திருக்கிறது. அடக்கமுள்ளவனும் நல்லநடையுள்ளவனும் ஸோமபானஞ் செய்தவனும் ஆசையற்றவனும் யாவற்றையும்ஸஹிப்பவனும் பொறுமையும்தயையுமுள்ளவனும் பிறருக்குக் கேடுநினையாதவனும் குரூரமற்றவனும் கபடமற்றவனுமாயிருப்பவன் பிராம்மணனுவனேயன்றிக் கெட்ட செய்கையுள்ளவன் பிராம்மணனாகமாட்டான். அரசனே! தர்மத்தைவிரும்பும் உலகங்கள்யாவும் பிராம்மணனையும் க்ஷத்திரியனையும் வைசியனையும் ஆச்ரயித்திருக்கின்றன. பாண்டுபுத்ரனே! ஆகையால், தம்ஜாதிக்குரிய தர்மங்களில் நிலைத்திருக்கும் ஜனங்களை ஸ்ரீவிஷ்ணுபகவான் கைவிட விரும்பார். உலகமெல்லாம்விரும்பத்தக்க ஸுவர்க்கலோகமும் நான்கு வர்ணங்களும் ஆச்ரமங்கள்யாவும் வேதபாடங்களும் எல்லாவைதிக லௌகிககர்மங்களும் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் அருளின்றி உலகில் ஒருக்ஷணமும் நிலைபெறமாட்டா. பாண்டவனே! தனது ராஜ்யத்திலுள்ள மூன்றுவர்ணத்தார்களும் தம்தம்ஆச்ரமதர்மங்களைச் சரிவர நடத்தவேண்டுமென விரும்பும் அரசன் அறியவேண்டியதர்மங்களைக் கேள். ஓ! பாண்டவராஜனே! [3]மேற்குலத்தோர்களுக்குப் பணிவிடைசெய்து தன்கடமையை நிறைவேற்றினவனும் மக்களைப் பெற்றவனும் வைதிகர்களிற்சிறிதுகுறைந்த ஆசாரமுள்ளவனும் தேசாசாரத்தை அடைந்தவனுமானசூத்திரன் அரசனிடம் அனுமதி பெற்று ஆசைகளற்ற ஸந்யாஸமென்னும் ஓர்ஆச்ரமத்தைவிலக்கி மற்றஆச்ரமங்களை அடையத்தக்கவனுவான். ஓ! ராஜேந்திரனே! அவர்களுடையதர்மத்தைச் சொல்லுகிறவர்கள் [4]அந்தச்சூத்திரனுக்கும் அப்படியே வைச்யனுக்கும் க்ஷத்திரியனுக்கும் ஸந்யாஸம்இல்லையென்று

---

[1] தேவர்களை உத்தேசித்துக்கொடுப்பது.

[2] பிதிர்க்களை உத்தேசித்துக் கொடுப்பது.

[3] இங்கு, 'வேதாந்தங்களில் அதிகாரமில்லாமையால் புராணங்களின் மூலமாக ஆத்மாவை விசாரிக்கவிரும்பியவன்' என்பது பழையஉரை.

[4] இங்கு வேறுபாடங்கொண்டு, 'இம்மூன்றுவர்ணத்தாருக்கும் நித்யகர்மங்களைத்தவிர மற்றக்கர்மங்களைவிடுவதான ஸந்யாஸம் உண்டு' என்பது பழையஉரை.

சொல்லுகிறார்கள். தன்கடமையைச் செய்தவனும் அரசனுக்குப்பணி விடைசெய்து ச்ரமமடைந்தவனும் முதுமையடைந்தவனுமான வைச்யனும் அரசன்கட்டளையின்படி, விரும்பிய ஆச்ரமம்செல்லவேண்டும். குற்றமற்றவனும் பேசுகிறவர்களிற்சிறந்தவனும் க்ஷத்ரியச்ரேஷ்டனுமான பாண்டவராஜனே! தர்மப்படி வேதங்களையும் தண்டநீதிகளையும்கற்று ஸந்தானமுதலிய நற்கர்மங்களையும் ஸோமயாகத்தையும் செய்து பிரஜைகளையெல்லாம்தர்மப்படிபரிபாலித்து ராஜஸூயம்அச்வமேதமுதலியயாகங்களைநியாயப்படிசெய்து அந்தணர்களுக்குத்தக்ஷிணையளித்துச் சிறியதானாலும் பெரியதானாலும் யுத்தத்தில் ஜயம்பெற்று அரசாளத்தக்க புத்திரனையாவது அல்லது வேறுகுலத்திலுதித்த உத்தமக்ஷத்திரியனையாவது ராஜ்யத்தில் மகுடம்சூட்டிப் பிதிர்க்களையும் தேவர்களையும் ரிஷிகளையும் முறையே பிதிர்யஜ்ஞங்களானச்ராத்தங்களாலும் யாகங்களாலும் வேதங்களாலும் விதிப்படி முயற்சியுடன் ஆராதித்து முதியபருவம் வந்தபின் வேறுஆச்ரமம்விரும்பும் க்ஷத்திரியன் கிரமமாய் ஆச்ரமங்களையடைந்து ஸித்திபெறத்தக்கவனாவான். ஓ! ராஜேந்திரனே! கிருஹஸ்தாச்ரமம் விட்டுவிலகின க்ஷத்திரியன் வயிறுவளர்ப்பதற்கல்லாமல் முனிதர்மத்திலிருந்து பிக்ஷாடனம் செய்வதுகூடாது. அதிகதக்ஷிணைகொடுப்பவனே! இந்தக்கர்மாவானது பிராம்மணனல்லாத மூன்றுவர்ணத்தார்களுக்கும் நித்யகர்மமன்று. ராஜச்ரேஷ்டனே! நான்குவித ஆச்ரமங்களிலுமிருக்கும் மனிதர்களின் தர்மமெல்லாம் உலகத்தில் மிகச்சிறந்ததர்மத்தையனுஷ்டிப்பவர்களான க்ஷத்திரியர்களின் கையிலிருப்பதாகும். மூன்றுஜாதிகளின் தர்மங்களும் உபதர்மங்களுமாகிய யாவும் அரசனைச்சார்ந்தனவென்று நீதிசாஸ்திரத்தில் கேள்விப்படுகிறேன். அரசனே! யானையின் அடியில் மற்றெல்லாப்பிராணிகளின் அடிகளும் அடங்குவதுபோல ராஜதர்மங்களில் மற்றத்தர்மங்கள் யாவும் எப்பொழுதும் அடங்கினவெனத் தெரிந்துகொள். தர்மமறிந்த பூஜ்யர்களானமனிதர்கள் க்ஷத்திரியதர்மத்தைப் பலவிடங்களிலிருப்பதாகவும் பலஸுகங்களைக் கொடுப்பதாகவும் இதரதர்மங்களைச்சிலவிடங்களிலிருப்பனவாகவும் ஸ்வல்பபலனைக் கொடுக்கக்கூடியவைகளாகவும் [1]சொல்லுகிறார்கள். எல்லாத் தர்மங்களுக்கும் ராஜதர்மம் முக்கியஆதாரமாகும். ஜாதிகள்யாவும் அரசனால்பரிபாலிக்கப்பட்டு நிலைபெறுகின்றன. ராஜதர்மங்களில் எவ்விதத்யாகமும் நிலைபெற்றிருக்கிறது. அரசனே! ஆகையால், ஸநாதனமான ராஜதர்மத்தை த்யாகமென்றும் சிறந்ததென்றும் சொல்லு

[1] ஒருசொல்விடப்பட்டது.

கிறார்கள். உலகில் தண்டநீதி குறைவடைந்தால் வேதமொழித்துப் போம்; தர்மங்கள்யாவும் விரோதமுள்ளவைகளாய் நாசமடையும். க்ஷத்திரியர்களுக்குரிய ஸநாதனமான ராஜதர்மம் நஷ்டமடைந்தால் ஆச்ரமங்களின்எல்லாத்தர்மங்களும் நாசமடைந்துவிடும். எல்லாப் போகங்களும் ராஜதர்மத்தில்காணப்படுகின்றன. எல்லாநியமங்களும் ராஜதர்மத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. எல்லாக்கல்விகளும் ராஜ தர்மத்திலேயே இருக்கின்றன. எல்லாஉலகங்களும் ராஜதர்மத்தில் அடங்கியிருக்கின்றன. தர்மங்களும் போகங்களும் யோகங்களும் ராஜதர்மத்தில் நிலைபெற்றிருக்கின்றன. ஓ! அஜாதசத்ருவே! ஆகை யால், உலகத்தில் ராஜதர்மத்தைவிடச் சிறந்ததர்மம் வேறெதுவு மில்லை. ஓ! பாதச்ரேஷ்டனே! எல்லாக்கர்மங்களும் எல்லாப்பிரா ணிகளும் ராஜதர்மத்திலிருந்து ஜீவிக்கவேண்டும். அவிவேகிகளால் கொல்லப்படும் பிராணிகள் அவர்களுடையவைதிகதர்மங்களை நசிக்கச் செய்வதுபோல ராஜதர்மத்தைவிட்ட மற்றத்தர்மங்கள் நாசமடைவ துடன் அவைகளைச்செய்யும் மனிதர்களும் பலஇடையூறுகளால் தம் தர்மத்தில் ஆதாவின்றி நாசமடைவார்கள்.

---

## அறுபத்துமூன்றாவது அத்தியாயம்

## ராஜதர்மம் (தொடர்ச்சி.)



(பீஷ்மர் ராஜதர்மத்தைப்புகழ்ந்து மாந்தாதாவுக்கும் இந்திரரூபியான விஷ்ணுவுக்கும் நடந்தசம்பாஷணத்தை யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)

பாண்டவனே! நான்கு ஆச்ரமதர்மங்களும் (விசேஷமான)யதி தர்மங்களும் வேதத்திலும் உலகத்திலும் உத்தமமெனப் புகழப்படும் தர்மங்களும் ராஜதர்மத்திலிருக்கின்றன. பாதச்ரேஷ்டனே! ராஜ தர்மம் நிலைபெற்றிருந்தால் இந்தக்கர்மங்கள்யாவும் பயன்படுவதுடன் பிராணிஸமூகங்களும் கவலையின்றிச் சுகித்திருக்கும். ஆச்ரமவாஸிக ளின் சாச்வதமான தர்மம் அப்ரத்யக்ஷமாயும் பலவிதபிரயோஜனமுள் ளதாயுமிருந்தும் அதனுண்மையை ஆகமங்களாலேயே அறிவிக்கி றார்கள். மற்றவாதிகள் புண்ணியமானவசனங்களால் உலகத்தில் உறு திப்படச் சொல்லுகிறார்கள். மற்றும்சிலர் தர்மங்களின்உண்மையை அறியாவிடினும் அழிவற்ற பெரியதர்மத்தில் விருப்பமுற்றிருக்கிறார் கள். எல்லாஉலகங்களுக்கும் ஹிதமாயும் பிரத்தியக்ஷமாயும் பிரயோ ஜனம் நிறைந்ததாயும் கபடமில்லாததாயும் தனக்குத் தெரிந்ததாயு

முள்ள(உத்தம) தர்மம் க்ஷத்திரியர்களிடம் நிலைபெற்றிருக்கிறது. ஓ! யுதிஷ்டிர! கிருஹஸ்தாச்ரமத்திலிருக்கும் பிராம்மணர்களின் தர்மத்தில் மற்றமூன்று ஆச்ரமங்களும் அவைகளின் தர்மங்களும் அடங்கியிருப்பதுபோல ராஜதர்மங்களில் உலகங்களனைத்தும், அவைகளின் புண்ணிய கர்மங்களும் அடங்கியிருக்கின்றனவென்று முன்னமே எடுத்துக்கூறியிருக்கிறேன். ராஜச்ரேஷ்டனே! சூரர்களான பலஅரசர்கள் தண்டநீதி விருத்தியடைவதற்காக ஒவ்வோர் ஆச்ரமதர்மத்தையும் ராஜதர்மத்தையும் நிறுத்துப்பார்க்கக்கருதி முன்னொருகாலத்தில் எல்லாப்பிராணிகளுக்கும் ஈசரும் வ்யாபகரும் பிரபுவும் தேவரும் எங்கும்நிறைந்தவரும் மிக்க தேஜஸுள்ளவருமாயிருக்கும் ஸ்ரீநாராயணரிடம்சென்று உண்மையையறியவிருப்பத்துடன்வணங்கி உபாஸித்தார்கள். ஆதிதேவரான அந்தப்பகவான் முன்காலத்திற் படைத்த ஸாத்யர்கள், வஸுக்கள், அச்வினிதேவர்கள், ருத்ரர்கள், விச்வேதேவர்கள், ஸித்தர்கள், மருத்கணங்கள்யாவரும் க்ஷத்திரியதர்மத்திலிருக்கிறார்கள். இவ்விஷயத்தில் உனக்கு உண்மை தெரியவேண்டி ஒருதர்மத்தைத்தெரிவிக்கிறேன். அரசர்க்கரசனே! முன்காலத்தில் இவ்வுலகம் ஒரேஅஸுரக்கடலாய் மரியாதையின்றியிருக்கும் பொழுது மாந்தாதாவென்னும் மஹாவீர்யசாலியான ஓர்அரசனிருந்தான். புலிபோன்றஅரசனே! அக்காலத்தில் இப்பூமியை ஆண்டுவரும்அவ்வரசன் ஆதியும் நடுவும் முடிவுமற்றவரும் தேவரும் பிரபுவும் ஸர்வேச்வரருமான நாராயணரை நேரில்காணக்கருதி அந்த மஹாத்மாவின்பாதங்களைத் தலையால்வணங்கி ஓர்யாகஞ்செய்யத்தொடங்கினன். விஷ்ணுபகவானும் அப்பொழுது இந்திரரூபத்துடன் அவனுக்குத்தரிசனமளித்தனர். உத்தமர்களான அரசர்களால் சூழப்பட்டமாந்தாதாவும் பிரபுவான அந்தக்கபடஇந்திரனைப் பூஜித்தான். அரசச்ரேஷ்டனான அந்தமாந்தாதாவுக்கும் மஹாத்மாவான அந்தக் கபடஇந்திரனுக்கும் பெரியகாந்தியுள்ள ஸ்ரீவிஷ்ணுவைப்பற்றி இந்தப் பெரியஸம்பாஷணை உண்டாயிற்று. இந்திரரூபியான பகவான், "தர்மம்நிறைந்த அரசர்களில்மிகஉத்தமரே! உமது விருப்பமென்ன? அளவில்லாதமாயையும் ஒப்பற்றமந்திரசக்தியுமுள்ளவரும் புராணரும் ஆதிதேவரும் அறிவிற்கெட்டாதவருமான எந்தப்பகவான் நாராயணரைத் தரிசிக்கவிரும்புகிறீரோ விச்வரூபியான அந்தப்பகவானைப் பார்க்கும்சக்தி எனக்குமில்லை; ஸாக்ஷாத் பிரம்மதேவருக்குமில்லை. ஓ! ராஜரே! உமதுஉள்ளத்திலிருக்கும் மற்றஎவ்விதக்காமங்களையும் உமக்குஅளிக்கிறேன். மானிடர்களுக்கு அரசரான நீர் ஸத்தியத்தி

னுறுதிபெற்றவரும் தர்மத்திற்சிறந்தவரும் சூரரும் இந்திரியங்களை ஜயித்தவருமாயிருப்பதுபற்றி உம்மீது தேவர்களும் இஷ்டமானநட்புடனிருக்கிறார்கள். அன்றியும், பக்தியிலும் புத்தியிலும் ச்ரத்தையிலும் நீர் உத்தமமாயிருப்பதைக்கண்டு நீர்வேண்டும்வரங்களை நான் அளிக்கிறேன்" என்றுசொன்னார். மாந்தாதா, "ஓ! பகவானே! ஆதிதேவரானஉம்மை நான் தலையால்வணங்கிச் சந்தேகமின்றித் தெரிவிக்கிறேன். நான் போகங்களைத்தள்ளித் தர்மவிருப்பமுள்ளவனாகி ஸாதுக்கள்சென்ற நல்வழியிற்செல்லக்கருதிக் கானகம்போகவிரும்புகிறேன். விஸ்தாரமானதும் அளவிடக்கூடாததுமான க்ஷத்திரியதர்மத்திலிருந்து உலகங்களையடைந்து என்கீர்த்தியும் உலகில்நாட்டப்பட்டது. ஆதிதேவரான நாராயணரிடமிருந்து வெளியானதும் உலகங்களில் மிகச்சிறந்ததுமான தர்மத்தைச்செய்ய நான் அறிகிலேன்" என்றுசொன்னான். இந்திரன், "அரசனில்லாதஜனங்கள் தர்மபுத்தியுள்ளவர்களாயினும் ஆதரவுடன் தர்மத்தாலுண்டாகும் நற்கதியை அடையவும் அடையச்செய்யவுமாட்டார்கள். ஆதிதேவரிடமிருந்து முதன்மையாகவெளியானது ராஜதர்மம் ஒன்றே. மற்றத்தர்மங்கள் யாவும் அதன் அங்கங்களாகப் பின்வெளியாயின. ஸந்யாஸத்துடன் கூடின மற்றத்தர்மங்கள் அநித்யமானபலனுள்ளனவாகவும் எண்ணிறந்தனவாகவும் ராஜதர்மமே உத்தமமாகவும் படைக்கப்பட்டிருக்கின்றன. இந்த ராஜதர்மத்தில் மற்றைத்தர்மம்யாவும் அடங்கியதுபற்றிப் பெரியோர்கள் இந்தத்தர்மத்தை மிகச்சிறந்ததெனப் புகழ்கிறார்கள். முன்காலத்தில் மஹாவிஷ்ணுவானவர் ராஜதர்மத்தால் சத்துருக்களைவென்று ஒப்பற்றபராக்ரமமுள்ள முனிவர்கள் தேவர்கள் யாவரையும் காத்தருளினர். உலகத்திற்கு விரோதிகளான அஸுரர்கள்யாவரையும் அறிவிற்கெட்டாத இந்தப்பகவான் (இங்ஙனம்) அடிக்காவிடின் [1] பிராம்மணர்களும் உலகங்களைப்படைக்கும் பிரம்மதேவரும் இந்தத்தர்மமும் ஸநாதனதர்மமும் உலகிலிருக்கமுடியா. தேவச்ரேஷ்டரும் ஆதிதேவருமான நாராயணர் அஸுரர்கள் சூழ்ந்த இப்பூமியைப் பராக்ரமத்தால்வெல்லாவிடின் வேதியர்களின் நாசத்தால் நான்குஜாதிகளும் நான்கு ஆச்ரமங்களும் அவைகளின் தர்மங்களும் எல்லாம் உலகில் ஒழிந்துபோம். ஒவ்வொருயுகத்திலும் பலவிதமாய் நாசமடைந்த பழமையான சாச்வததர்மங்கள் ராஜதர்மத்தால் திரும்பவும் நிலைபெறச்செய்யப்படுகின்றன. ஆகையால், ராஜதர்மம் உலகங்களில் மிகச்சிறந்ததெனச் சொல்லுகிறார்கள். ராஜதர்மத்திலிருக்

[1] இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது.

கும் க்ஷத்திரியர்களுக்கு யுத்தத்தில் சரீரத்தைவிடுவதும் எல்லாப் பிராணிகளிடமும் தயைசெய்வதும் உலகங்களைப் பகுத்தறிவதும் ரக்ஷிப்பதும் பீடிக்கப்பட்டுத் துக்கப்படும் ஜனங்களைக் கஷ்டத்தினின்று விடுவிப்பதும் தர்மமாகும். காமக்குரோதங்களால் இழுக்கப்பட்டு வரம்பின்றிச்செல்லும் தன்மையுள்ள மனிதர்கள் அரசனிடம் பயந்து பாவத்தில்செல்லாமலிருக்கிறார்கள். இயற்கையில் நற்குணமுள்ளமற்றப்பெரியோர்களும் விசேஷமானநல்லநடையுடன் தர்மங்கள்யாவற்றையுஞ் செய்துகொண்டு அந்தத்தர்மத்தைப் பிறருக்கும் உபதேசிப்பார்கள். உலகத்திலுள்ளபிராணிகள்யாவும் புத்திரனைப்போல அரசனால்பாதுகாக்கப்பட்டுத் தம்தம் தர்மங்களுடன் சஞ்சரிக்கின்றனவென்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆகையால், எல்லாத்தர்மங்களிலும் மேலானதும் உலகத்தில்கொண்டாடப்படுவதும் எவ்விடத்திலும்செல்லத்தக்கதும் பழமையானதும் அழிவற்றதும் முடிவில்முக்தியளிப்பதுமான ராஜதர்மம் மிகச்சிறந்ததாகும்.

---

அறுபத்துநான்காவது அத்தியாயம்.

## ராஜதர்மம் (தொடர்ச்சி.)



(பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு இந்திரரூபியானவிஷ்ணுவினால் மாந்தாதாவுக்குச் சொல்லப்பட்ட ராஜதர்மங்களைச்சொல்லியது.)

இவ்விதமானவீரியமுள்ளதும் எல்லாத்தர்மங்களும் அடங்கினதும் எல்லாத்தர்மங்களிலும் உத்தமதர்மமுமான ராஜதர்மத்தை உம்மைப்போன்ற உதாரர்களான அரசர்கள் பரிபாலித்துவரவேண்டும். இம்முறைதவறினால் பிரஜைகளுக்கு நாசமுண்டாகும். அரசன், பூமியைச்செழிக்கச்செய்வதும் ராஜஸூயமுதலிய யாகங்களைச்செய்வதும் [1] தீக்ஷைபெறுவதும் பிரஜைகளைப்பரிபாலிப்பதும் எல்லாப்பிராணிகளிடத்திலும் தயைசெய்வதும் யுத்தத்தில்சரீரத்தைவிடுவதும் தன் கடமையான சிறந்ததர்மமெனத் தெரிந்துகொள்ளவேண்டும். இவைகளிலும் யுத்தத்தில் சரீரத்தைவிடுவது மிகஉத்தமதர்மமென்று முனிவர்கள் கூறுகிறார்கள். அந்தக்காரணம்பற்றியே ராஜதர்மங்களிலுள்ள அரசர்கள்யாவரும் பெரும்பாலும் போரில் ச்ரேஷ்டமானசரீரத்தை விடுகிறார்களென்பது உமக்குப் பிரத்தியக்ஷம். பிரம்மசர்யம்பெற்ற க்ஷத்திரியன் தர்மத்தைவிரும்பியவனாகிப் பலகல்விகளைக்கற்பதும்

---

1 'ஸந்யாஸாச்ரமம் பெறுமலிருப்பது' என்பது வேறுபாடம்.

ஆசிரியருக்குப் பணிவிடைசெய்வதுமுள்ளவனுய்த் [1] தனக்குரியநித்தியதர்மத்தையும் ஆச்ரமத்தையும் தனிமையில்செய்துகொண்டிருக்க வேண்டும். (இவ்விதமிருந்து கிருஹஸ்தாச்ரமம்பெற்றக்ஷத்திரியன்) பொதுவான வியவஹாரம்வரும்போது விருப்புவெறுப்புக்களைக் கவனத்துடன்விலக்கிக்கொண்டு நான்குஜாதிகளையும் அந்த அந்த உபாயங்கள் நியமங்கள் ஔஷதங்கள்முதலிய பலவழிகளாலும் பாதுகாத்துத் தம்தம்தர்மத்தில் நிலைபெறச்செய்யவேண்டும். க்ஷத்திரியர்களின்தர்மம் எல்லாத்தர்மங்களிலும் மிகச்சிறந்ததென்றும் அதில் எந்தத்தர்மங்களும் அடங்கியிருக்கின்றனவென்றும் பெரியோர்கள் அறிவிக்கிறார்கள். தம்தம்ஜாதிதர்மப்படி நடவாதவர்களும் அந்த அந்தத்தர்மவிதிகளை மாறுபடச்சொல்லுகிறவர்களும் மரியாதையற்று எப்பொழுதும் பொருளில் பேராசைபிடித்தவர்களுமான மனிதர்களைப் பசுக்களென்று சொல்லுவார்கள். பொருளின்பெருமையால் நீதியைநிலைநிறுத்தி உலகத்தின்க்ஷேமத்தைவளர்க்கும் காரணத்தால் க்ஷத்திரியர்தர்மம் மற்றஆச்ரமதர்மத்தைக் காட்டிலும் உத்தமமாகும். மூன்றுவேதங்களையுங்கற்ற அந்தணர்களுக்குத் தக்க ஆச்ரமங்களும் அவர்களுக்குரியநற்கதியும் ஸித்திபெறத்தக்கதர்மம் க்ஷத்திரியனுக்குரியதாகையால் அது யாவற்றிற்கும்முந்தியதாகும். ஐய! அந்தத்தர்மமின்றி வேறுவிதஞ்செய்யுமரசன் சூத்திரன்போல ஆயுதத்தால் கொல்லப்படத்தக்கவன். அரசனே! நான்கு ஆச்ரமங்களின் தர்மங்களும் வேதமுபதேசிப்பதும் வேதியர்களின் தர்மமேதவிர மற்றவன் இதனை எந்தச்சமயத்திலும் அடையத்தக்கவனல்லன். கர்மத்தால்தர்மமும் தர்மத்தால்மனிதனும் பெருமையடைவதுபற்றித் தர்மத்திற்குவிரோதமாயிருக்கும் பிராம்மணன் நல்லஜீவனமடையமுடியாது. தன்தர்மத்தைச்செய்யாதபிராம்மணன் நம்பத்தகாதவனுகையால் விபரீதகர்மமுள்ள அவன் பூஜிக்கத்தக்கவனல்லன். தம்தர்மம் விட்டிழந்த எச்சாதிகளையும் மேலானபதவியை அடையச்செய்யும் பெருந்தர்மம் அரசனைச்சார்ந்ததாகையால் மற்றவையன்றி ராஜதர்மம் ஒன்றே உலகில் மிகப்புகழ்பெற்றதும் சிறந்தவீரியமுள்ளதுமென்பது என்கருத்து" என்றுசொன்னான். மாந்தாதா, "ராஜ்யத்தில்வஸிக்கும்யாவரும் தர்மத்தைச்செய்வது எங்ஙனம் பொருந்தும்? பிராம்மணக்ஷத்திரியஜாதிகளில் பிறந்தும் வைச்யர்களாயும் சூத்திரர்களாயும்போனமனிதர்களும் மற்றுமுள்ள யவனர், கிராதர், காந்தாரர், சீனர், சபரர், பர்ப்பரர், சகர், துஷாரர், கங்கர், பல்லவர், ஆந்திரர்,

---

[1] இங்கு இரண்டுசொற்கள் விடப்பட்டன.

மத்ரகர், உஷ்ட்ரர், புளிந்தர், ஆரட்டர், காசர், மிலேச்சர் ஆகியயாவரும் எங்ஙனம் தருமஞ்செய்யத் தகுதியுள்ளவர்கள்? திருட்டுப்பிழைப்புள்ள இவர்கள்போன்றயாவரும் என்போன்றஅரசர்களால்எங்ஙனம் ஆளத்தக்கவர்கள்? தேவர்களுக்குஈசரான ஓ! பகவானே! க்ஷத்திரியர்களான எங்களுக்குப் பந்துவானநீர் இதைக்கேட்கவிருப்பமுள்ள என்பொருட்டு உள்ளபடி உரைக்கவேண்டுகிறேன்" என்றுசொன்னான்.

இந்திரன் சொல்லத்தொடங்கினான்: "தாய்தந்தைகள், ஆசிரியர், குரு, ஆச்ரமவாஸிகள், அரசர்கள் இவர்களின்சுச்ரூஷை திருட்டுப்பிழைப்புள்ளவர்களாயினும் பிராணிகள் அனைவருக்கும் பொதுவான தர்மமாகும். தேசத்திற்குப் பொதுவானதர்மமும், பிதிர்கார்யமும், கிணறும், தண்ணீர்ச்சாலையும், காலத்திற்குத்தக்கபடி பிராம்மணர்களின்பொருட்டுப் படுக்கைமுதலியதானங்களும் யாவரும் செய்யத்தக்க தர்மமாகும். அஹிம்ஸையும், ஸத்தியமும், கோபமில்லாமையும், ஜீவனமும், தனமும், மக்கள்மனைவிமுதலியவர்களைப்பரிபாலிப்பதும், பரிசுத்தியும், அத்ரோஹமின்மையும் பொதுவிதியாகும். எந்தத்தொழிலிலிருந்தாலும் தர்மத்தைவிரும்பியவன் எல்லாயாகங்களுக்கும் வேண்டிய தக்ஷிணைகளையும் பாகயஜ்ஞங்களுக்குவேண்டிய அதிகப்பொருள்களையும் கொடுக்கலாம். மாசற்றவேந்தரே! இத்தகையகாரியங்கள்யாவும் உலகம்யாவும் செய்யத்தக்கவையென முன்காலத்தில்கூறப்பட்டன" என்றுசொன்னான். மாந்தாதா, "மானிடலோகத்தில் எச்சாதியிலும் எவ்வித ஆச்ரமங்களிலும் வேறுதர்மத்திலிருக்கும்திருடர்கள் காணப்படுகிறார்கள்" என்றுசொல்ல, இந்திரன் சொல்லத்தொடங்கினான்: "குற்றமற்றவரே! ராஜதர்மத்தைவிட்ட அரசர்களின் துர்ப்புத்தியால் தண்டநீதி நாசமடையும்பொழுது ஜனங்கள் மிக்க அவிவேகமடைவார்கள். இந்தக்கிருதயுகம் முடிந்தபின் எண்ணிறந்தஸந்யாஸிகளும் பிரம்மசாரிகளும் ஆச்ரமங்களின்வேற்றுமைகளும் உத்பத்தியாவார்கள்; ஸநாதனதர்மங்களைச் செவியில்வாங்காமல் பலநூற்றுக்கணக்கானமனிதர்கள் காமக்குரோதங்களால்ஏவப்பட்டுக் கெட்டவழியிற்செல்லுவார்கள். மஹாத்மாக்களான அரசர்கள் தண்டநீதிகொண்டு பாவத்தைவிலக்கமுயன்றால் சாச்வதமான பழையதர்மம்வளர்ந்து நிலைபெற்றிருக்கும். உலகமனைத்திற்கும்குருவாய் விளங்கும் அரசனை அவமதிக்கும்மனிதனுடைய கல்வியும் கர்மமும் தானமும் எங்கும் சிறிதும் பயன்படாதொழியும். மானிடர்களுக்கு அதிபதியாய்ப் பேரொளியுடன் தேவன்போலவிளங்கும் தர்மவிருப்ப

முள்ள அரசனைத் தேவர்களும் வெகுமானிக்கிறார்கள். உலகமனைத்தையும்படைத்த பகவானான பிரம்மதேவரும் பிரவிருத்திநிவிருத்தியென இருவகைத்தர்மங்களையும் ரக்ஷிக்கக்கருதி க்ஷத்திரியனை வேண்டுகிறார். உலகத்தில்நடைபெற்றுவரும் தர்மத்தின்பயனைத் தன்புத்திபால்கவனித்துவரும் அரசன் க்ஷத்திரியர்களில் உறுதிபெற்றவனும் என்னால்பூஜிக்கத்தக்கவனும் மரியாதைசெய்யத்தக்கவனும்ஆகிறான்" என்று சொன்னார்.

உலகபதியான அந்த விஷ்ணுபகவான் இங்ஙனம் உபதேசித்த பின் தேவகணங்களால்சூழப்பெற்று அழிவற்றதும் சாச்வதமும் சிறந்ததுமான தமது இருப்பிடஞ்சென்றார். குற்றமற்றஅரசனே! முன் காலத்தில் இவ்விதம் நன்னடக்கையுடன்கூடினதர்மம் ஏற்படுத்தப் பட்டிருக்கும்பொழுது அறிவுள்ளவனும் பலகல்விகள்கற்றவனுமான எவன் க்ஷத்திரியதர்மத்தை அதிக்ரமிப்பான்? வழியிற்செல்லும் குருடர்கள்போல நீதியற்றபிரவிருத்தியும் நிவிருத்தியும் இடையில் நாசமடைவனவாகும். ஆதிகாலத்தில் பிரம்மதேவரிடமிருந்து வெளிவந்ததும் முன்னோர்களுக்கு மிகமுக்கியமுமான தர்மசக்கரத்தில் நீ இருக்கவேண்டும். பாபமற்றபுருஷச்ரேஷ்டனே! நான் உன்னை அதற்குத்தகுதியுள்ளவனாக அறிகிறேன்" என்றுசொன்னார்.



## அறுபத்தைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் எல்லா ஆச்ரமதர்மங்களையும் விரிவாகச்சொல்லும்படி கேட்டதும், பீஷ்மர் ராஜதர்மத்தில் மற்றைத்தர்மங்களும் அடங்கியிருக்கின்றனவென்றதும்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! மனிதர்யாவருக்கும் நான்குஆச்ரமங்களுண்டென முன்கூறியதைக் கேட்டேன். அவைகளைத் தெளிவாக அறியவிருப்பமுள்ள எனக்கு இவைகளின்வியாக்கியானத்தைச் சொல்லவேண்டுகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"மஹாபாஹுவானயுதிஷ்டிர! ஸாதுக்கள் புகழத்தக்க தர்மங்களையெல்லாம் நான் அறிவதுபோல நீயுமறிவாய். தர்மத்தைப்பரிபாலிப்பவர்களிற்சிறந்த யுதிஷ்டிரராஜனே! நீ அறியக்கருதிய மிக்க ஸூக்ஷ்மமான தர்மத்தைத்தெரிந்துகொள். பாதர்களிற்சிறந்த கௌந்

தேய! உத்தமஆசாரம்பெற்ற நான்குஆச்ரமங்களின் இந்தக் கார்யங்கள்யாவும் ராஜதர்மத்திலிருக்கின்றன. யுதிஷ்டிர! நட்பும் பகையுமற்றவனாகி எல்லாப்பிராணிகளிடத்தும் ஸமபுத்தியுடன் தண்டஞ்செலுத்திவருமரசன் துறவிகளுக்குரிய பதவிபெறுவான். கொடுப்பதும் விடுப்பதும் சிக்ஷிப்பதும் ரக்ஷிப்பதுமாகிய இவைகளையறிந்து அதற்குத்தக்கநடையுள்ள தீரனான அரசன் கிருஹஸ்தாச்ரமத்தின் பதவியடைவான். குந்திபுத்ரனான பாண்டவ! யோக்கியர்களைப்பகுத்தறிந்து எப்பொழுதும்பூஜிப்பவன் எங்கும் பிரம்மசர்யாச்ரமத்தின் பயனையடைவான். யுதிஷ்டிர! ஞாதிகளும் ஸம்பந்திகளும் ஸ்நேஹிதர்களும் துன்பப்படும்போது அத்துன்பத்தினின்றும் அவர்களைக் காப்பாற்றும் அரசன் வானப்ரஸ்தாச்ரமத்தின் பதவியடைவான். குந்திபுத்ரனே! முக்கியமானஜனங்களிடத்திலும் முக்கியமானஆச்ரமிகளிடத்திலும் அடிக்கடி மரியாதையைச்செய்யும் அரசன் வானப்ரஸ்தாச்ரமத்தின் பதவியையடைவான். குந்திபுத்ரனானராஜச்ரேஷ்ட! பித்ருயஜ்ஞமும் பூதயஜ்ஞமும் மனுஷ்யயஜ்ஞமும் தேவயஜ்ஞமுமாகிய இவைகளை விரிவாகச்செய்வதுடன் மற்ற [1]ஆஹ்நிகத்தையும் செய்துகொண்டு அதிதிகளையும் மற்றப்பிராணிகளையும் யோக்கியதைக்குத்தக்கபடி ஆராதிக்கும்அரசன் வானப்ரஸ்தாச்ரமபதம் பெறுவான். ஸத்யமானபராக்ரமமுள்ள புருஷப்புலியே! சிஷ்டர்களைப் பாதுகாக்கவேண்டிப் பரராஜ்யங்களைப்பிடிக்கும் அரசனும் வானப்ரஸ்தாச்ரமத்திலிருப்பவனாவான். ராஜனே! பிராணிகளனைத்தையும் தன் ராஜ்யத்தையும் பரிபாலிப்பதில் பலவகைத்தீக்ஷைபெற்ற அரசன் பிரம்மலோகத்தை அடையத்தக்க ஆச்ரமத்திலிருப்பவனாவான். வேதாத்யயனத்தில் விடாமுயற்சியும் பொறுமையும் பெரியோர்களைப்பூஜிப்பதும் உபாத்தியாயரின் பணிவிடையும் பிரம்மசரியாச்ரமத்திற்குரிய தர்மமாகும். புருஷச்ரேஷ்டனே! பகலில் ஜபிக்கத்தக்கபுண்ணிய மந்திரங்களைஜபிப்பதும் எப்பொழுதும் தேவர்களைப்பூஜிப்பதுமுள்ள மனிதன் ஸந்யாஸிகளுக்குரிய தர்மமுள்ளவனாவான். உயிரைப்பந்தயமாகக்கொண்ட யுத்தமென்னும்சொக்கட்டானில் மரணமோ அல்லது ரக்ஷணமோவென்ற உறுதியுள்ளஅரசன் ஸந்யாஸிக்குநிகராவான். ஏ! பாரத! எப்பொழுதும் எவ்விதப்பிராணிகளிடமும் கள்ளம்கபடமற்றவழியில் செல்லும் அரசனும் ஸந்யாஸிக்குச் சமமாவான். ஏ! பாரத! மூன்றுவேதங்களையும்கற்ற வானப்ரஸ்தாச்ரமிகளான பிராம்மணர்களிடம் அதிகப்பொருள்களை அர்ப்பணஞ்செய்பவனும் அவ்

---

1 தினந்தோறும் செய்யத்தக்கவை.

வானப்ரஸ்தாச்ரமமுள்ளவனுவான். பாரத! எந்தப்பிராணிகளிடமும் தயைபாராட்டுவதுடன் குரூரமற்ற ஸ்வபாவத்திலிருக்கும்உனக்குப் புண்ணியம் ஓங்கிவளர்வது நிச்சயம். குந்திபுத்ரனுனயுதிஷ்டிர! இளையனுனாலும் முதியனுனாலும் எந்தப்பருவத்திலிருக்கினும் அவர்கள்விஷயத்தில் தயையென்பது பழமையானதர்மம். குருச்ரேஷ்ட! துன்பமுற்றுச் சரணமென்றடுத்தபிராணிகளைப்பாதுகாப்பது தயைகளிற்சிறந்ததயையாகும். கௌரவ்ய! ஸ்தாவரஜங்கமமான பிராணிகளை எவ்விதத்திலும்ரக்ஷிப்பதும் யோக்யதைக்குத்தக்கபடிபூஜிப்பதும் கிருகஸ்தாச்ரமத்திற்குரியதர்மமாகும். ஏ! பார்த்த! [1]இளையவளும் மூத்தவளுமானபத்னிகளையும் உடன்பிறந்தாரையும் பிள்ளைகளையும் பேரர்களையும்சிக்ஷிப்பதும் ரக்ஷிப்பதும் கிருகஸ்ததர்மங்களில்உத்தமதர்மமாகும். புருஷச்ரேஷ்டனே! ஆத்மஜ்ஞானமுள்ள பூஜிக்கத்தக்கஸாதுக்களைப்பூஜித்துப் பரிபாலிப்பது கிருஹஸ்ததர்மமாகும். ஓ! பாரத! யுதிஷ்டிர! ஒவ்வோர்ஆச்ரமத்திலுமுள்ளமனிதர்களுக்கும் தன்வீட்டில் மிகுதியாகப்போஜனம்செய்விப்பதும் உத்தமமான கிருஹஸ்ததர்மமாகும். கடவுளால்ஏற்படுத்தப்பட்ட ஸ்வதர்மத்தில் விதிப்படி உண்மையாகநிலைபெற்றமனிதன் இடையூறின்றி எல்லா ஆச்ரமங்களின்பயனையும்அடைகிறான். குந்தியின்புத்ரனுனயுதிஷ்டிர! நற்குணங்கள் எப்பொழுதும் எந்தப்புருஷனிடம் அழியாமலிருக்கின்றனவோ அவ்வுத்தமபுருஷனும் எல்லாஆச்ரமமுமுள்ளவனுவான். குந்தியின்புத்ரனும் புருஷச்ரேஷ்டனுமானயுதிஷ்டிர! குலம், பிராயம், ஸ்தானம் இவைகளின்மர்யாதையைச்செய்கிறவனும் தேசதர்மத்தையும் குலதர்மத்தையும் பாதுகாக்கிறவனுமான அரசன் எல்லா ஆச்ரமங்களின்பயனையும் அடைவான். புருஷச்ரேஷ்டனே! பிராணிகளின்ஸம்பத்தையும் லாபங்களையும் ஸமயத்தில்பெருமைப்படுத்திவரும்அரசன் ஸாதுக்களின்ஆச்ரமத்திலிருப்பவனுவான். ஏ! கௌந்தேய! தேசதர்மத்திலிருப்பதுடன் எல்லாஜனங்களின்தர்மத்தையும் கவனித்துவரும் அரசன் எல்லாஆச்ரமங்களிலும்இருப்பவனுவான். ஏ! பாரத! உலகத்தில் எந்தஅரசனுடையஆளுகையிலுள்ளஜனங்கள் தர்மத்தில்ஸமர்த்தர்களாகித் தர்மத்தைச்செய்கிறார்களோ அந்தமனிதர்களின்தர்மத்தில் நாலிலொருபாகம் அந்தஅரசனைச்சேரும். ஓ! புருஷச்ரேஷ்டனே! விசேஷஆதரவுடன் தர்மத்தைநாடிச்செல்லும் மனிதர்களை ரக்ஷியாதஅரசன் அவர்களின்பாவத்தைஅடைவான். குற்றமற்ற யுதிஷ்டிர! உலகத்தைப்பரிபாலிப்பதில் அரசனுக்குச்சகாய

[1] இங்கு, 'ஸஹோதரரின் பத்நிகளையும்' என்றும்கொள்ளலாம்.

மாயிருப்பவர்கள்யாவரும் உலகத்தார்செய்யும்தர்மத்தில் ஓரம்சத்தை அடைவார்கள். ஓ! புருஷச்ரேஷ்டனே! நாம்உபாஸித்துவரும் கிருஹஸ்தாச்ரமத்தை ஆச்ரமங்களுள்மிகச்சிறந்ததென்று தீர்மானிக்கப் பட்டதும் பரிசுத்தமானதுமெனச் சொல்லுகிறார்கள். கோபத்தை வென்று பிராணிகளிடம் தன்னை உபமானமாகக்கொண்டு தண்டஞ் செலுத்திவரும் அரசன் இங்கும் இறந்தபின்னும் ஸுகம்பெறுவான். ஸத்யமென்னும்ஜலமும் சீலமென்னும்துடுப்பும் தர்மமென்னும்கொடியுமுள்ளதும் தியாகமென்னும்வாயுவால் மார்க்கத்தில்செல்லுகிறதும் வேகமுள்ளதுமான தர்மமென்னும்கப்பலேறி யாவற்றையும்கடந்துபோகமுடியும். எந்தவிஷயத்திலும்பற்றற்றவனும் காமம்மனத்திலிருந்துவிலகினவனும் நன்னடைகளுடன்ஸத்யமுள்ளவனுமானமனிதன் பிரம்மத்தை அடைவான். ஓ! புருஷச்ரேஷ்டனான அரசனே! மனத்தை அடக்கிக் கசடற்ற நல்லெண்ணத்துடன் (உலகத்தைப்) பரிபாலனஞ்செய்யும் நீ உத்தமதர்மம் அடைவாய். குற்றமற்றவனே! எல்லாஉலகங்களையும் விசேஷமாக வேதாத்தியயனஞ்செய்பவர்களும் நற்கருமமுள்ளவர்களுமான பிராம்மணர்களையும் ரக்ஷிப்பதில் விசேஷ முயற்சியுடனிரு. பாரத! அரண்யத்திலிருந்து ஆச்ரமதர்மங்களைச் செய்யும்ஸாதுக்களை ரக்ஷிக்கும்அரசன் அவர்களின் தர்மத்தைவிட நூறுமடங்குதர்மத்தை அடைவான். பாண்டவர்களிற்சிறந்தயுதிஷ்டிர! பலவிதமான இந்தத்தர்மம் உனக்கு உரைக்கப்பட்டது. புருஷச்ரேஷ்டனானபாண்டவ! முன்காலத்தில்அறியப்பட்ட ஸநாதனமான இந்தநான்குஜாதிஆச்ரமங்களின்தர்மங்கள்யாவற்றையும் பரிபாலனதர்மத்தைநடத்திவரும்நீ அடைவாய்" என்றுசொன்னார்.



அறுபத்தாறுவது அத்தியாயம்.

ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் ராஜ்யத்துக்கு அரசனிருத்தலாலுண்டாகும் நன்மையையும் இல்லாமையாலுண்டாகும் தீமையையும் மனுசரித்திரச் சுருக்கத்தையும் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! நான்குஜாதிகளும் அவ்விதமே நான்கு ஆச்ரமங்களும் சொல்லப்பட்டன. ராஜ்யத்திலுள்ள ஜனங்களுக்கு முக்கியமானகாரியத்தை எனக்குச் சொல்லவேண்டுகிறேன்" என்றுசொல்ல, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அரசனை அபிஷேகஞ்செய்வது ஒன்றே ராஜ்யத்திற்கு மிகமுக்கியமானது. அரசனும் பலமும் இல்லாத ராஜ்யத்தைத் திருடர்கள்

பிடிப்பார்கள். அராஜகமானராஜ்யத்தில் தர்மம்நிலைபெறாது. மேலும் ஜனங்களும் ஒருவரையொருவர் பக்ஷிப்பார்கள். அராஜகமானராஜ்யம் எவ்விதத்திலும் நிந்திக்கத்தக்கது. அரசனைவணங்கும் ஜனங்கள் இந்திரனைவணங்குகிறார்களென்று வேதம் உபதேசிக்கிறது. ஸம்பத்தைவிரும்பியமனிதன் அரசனை இந்திரனைப்போல ஆராதிக்கவேண்டும். அராஜகமானராஜ்யங்களில் வஸிக்கக்கூடாதென வேதம் விதிக்கிறது. அராஜகமானராஜ்யத்தில் அக்கினியும் ஹவிஸை வஹிக்கிறதில்லை. அரசனும் வீரர்களுமில்லாத ஒருராஜ்யத்தை ஆளும்எண்ணத்துடன் மிகப்பலசாலியான ஒருவன் ஒருகால் வரத்தொடங்கினால் ராஜ்யத்திலிருப்பவர்கள் அவனை எதிர்கொண்டு ஆராதிப்பது மிக நன்று. அரசனில்லாதராஜ்யத்தைவிடப் பெரும்பாவம் வேறுஇல்லாமையால் அந்தச்சூரன் இதை நன்குகவனித்தால் நிறைந்தக்ஷேமமுண்டாகும். இங்ஙனமன்றிப் பலசாலியான அந்தச்சூரனுக்குச் சினமுண்டாகச்செய்தால் ராஜ்யத்தை மிச்சமின்றி அவன் நசிக்கச்செய்வான். கறக்கக்கஷ்டமானபசு மிக்கதுன்பத்தையடைகிறது. அரசனே! லகுவாகக்கறக்கும்பசுவை ஜனங்கள் ஹிம்ஸிக்கிறதில்லை. சூடுகாட்டாமல் வணக்கத்தக்கவஸ்துவை மனிதர்கள் சுடுகிறதில்லை; தானே வணங்கும்மரத்தை வளைக்கக் கஷ்டப்படுத்தமாட்டார்கள். இவ்வுபமானமறிந்த புத்திசாலி பலவானிடத்தில் தானே வணங்கியிருக்க வேண்டும். பலவானுக்குச்செய்யும் வணக்கம் இந்திரனுக்குச்செய்ததாகும். ஆகையால், க்ஷேமத்தைவிரும்பும் மனிதர்கள் எப்பொழுதும் அரசனை ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். அரசனில்லாத ஜனங்கள், பொருளாட்சியையும் பெண்டிர்களின்போகத்தையுமடையமுடியாது. அராஜகமானராஜ்யத்தில் பாபியானவன் பிறர்பொருளை அபகரித்து ஸந்தோஷிப்பான். இவன்பொருளையும் மற்றப்பாவிகள் கவர்ந்து கொள்வார்கள். இவ்விதமிருக்குங்கால் ராஜ்யத்திற்கு அரசனைவிரும்பாமல் பாபிகளானமனிதர்களும் க்ஷேமத்தை அடைவதென்பது எந்தச்சமயமும் முடியாது. ஒருவனுடையபொருளை இரண்டுபேர்களும் இருவர்களுடையதை வேறுபலரும் அபகரிப்பார்கள். அடிமைக்குத் தகாதவர்களை அடிமையாக்கவும் பலாத்காரமாக ஸ்திரீகளை அபகரிக்கவும் செய்வார்கள். இந்தக்காரணம்பற்றியே தேவர்கள் அரசர்களை ஏற்படுத்தினார்கள். தண்டஞ்செலுத்தும் அரசன் இவ்வுலகிலில்லாவிடில் ஜலத்தில் மீன்களைப்போலப் பலசாலிகள் பலஹீனர்களை விழுங்கிவிடுவார்கள். முன்காலத்தில் பிரஜைகள் அரசனில்லாதகாரணத்தால் ஜலத்திலுள்ளமீன்கள்இளைத்தமீன்களைப்போல ஒருவரையொரு

வர் பக்ஷித்துக்கொண்டு நாசமடைந்தார்களெனக் கேள்விப்பட்டிருக்கிறோம். பிறகு அந்தஜனங்கள் ஒன்றுசேர்ந்து, 'கடுமையாகப்பேசுகிறவனையும் கடுமையாகத்தண்டிப்பவனையும் பரதாரத்தை அபகரிப்பவனையும் விலக்குவதுடன் நம்முடைய இந்தநிபந்தனையை மீறிநடப்பவனையும் விலக்கவேண்டும்' என உறுதியானதீர்மானஞ்செய்துகொண்டார்கள். இங்ஙனம் வேற்றுமையின்றி எல்லாச்சாதிகளுக்கும் நம்பிக்கையுண்டாகக்கருதித் தாங்கள்செய்துகொண்ட சபதத்திற்குத் தக்கபடி அந்தப்ராஜைகள் நடந்துவந்தார்கள். இவ்விதமிருந்தும் துன்பமடைந்த பிரஜைகள்யாவரும் ஒன்றுகூடிப் பிரம்மதேவரிடஞ்சென்று, "பகவானே! அரசனில்லாதகாரணத்தால்நாசமடைகிறோம். எங்களைப்பரிபாலிக்கத்தக்க அரசனை அளிப்பீராகில் நாங்கள்யாவரும் அவனைப்பூஜித்துவருகிறோம்" என்றுவேண்டிக்கொள்ள, பிரம்மதேவர் மனுவை அவர்களுக்கு அரசனாயிருக்கும்படி கட்டளையிட்டார். மனு, சந்தோஷமில்லாமல், 'ராஜ்யத்தைஆண்டுவருவது மிகக்கடினம். அதிலும் எப்பொழுதும் பொய்நடக்கையுள்ள மனிதர்களிடம் இது பெருங்கஷ்டம். ஆகையால், இப்பாவகாரியத்தில் எனக்குப் பயமுண்டாகிறது" என்று அந்தப்ராஜைகளைப்பார்த்துக் கூறினர். இவ்விதஞ்சொன்ன மனுவைநோக்கிப் பிரஜைகள் சொல்லத்தொடங்கினர்கள். "ஓ! மனுவே! நீர் பயப்படவேண்டாம். நாங்கள் உமக்குவேண்டிய தனத்தை விருத்திசெய்கிறோம்; பசுக்களிலும் பொன்னிலும் ஐம்பதிலொன்றையும் தான்யத்தில் பத்திலொன்றையும் கோசத்தைப் பெருகச்செய்வதற்காகக் கொடுக்கிறோம்; விவாகங்களில்விலைப்பேச்சு வந்தால் அழகானகன்னிகையை உமக்களிக்கிறோம். இந்திரனுடன் தேவர்கள்தொடர்வதுபோல எங்களில் பிரதானமனிதர்கள் ஆயுதத்தையும் வாஹனத்தையுங்கொண்டு உம்முடன் தொடர்ந்துவருவார்கள். ராஜரே! இவ்விதம் பிறரெதிர்க்கத்தகாதபலம்பெற்று ப்ரதாபத்துடன் விளங்கும்நீர் குபேரன் ராக்ஷஸர்களைவாழ்விப்பதுபோல எங்கள்யாவரையும் ஸுகமாக வாழச்செய்யும். உம்மால் நன்குபாதுகாக்கப்பட்ட நாங்கள்செய்யும் எவ்விதத்தர்மத்திலும் நாலிலொருபாகம் உம்மைச்சேரட்டும். அரசரே! ச்ரமமின்றிச்சேரும் இவ்விதமான பெரியதர்மத்தால் பெருமையுடன்அரசராக விளங்கும்நீர் இந்திரன் தேவர்களைப் பரிபாலிப்பதுபோல எங்களை எந்தக்காரியத்திலும் பரிபாலனஞ்செய்யும்; தபிக்கச்செய்யும் ஸூர்யன்போலச் சத்துருக்களைவெல்லப் புறப்பட்டு அவர்களின்கொழுப்பையடக்கி எப்பொழுதும் எங்களுக்குத் தர்மத்தையுண்டுபண்ணும்" என்றுசொல்லினர்.

இவ்விதஞ்சொல்லப்பட்டவரும் பெரியதேஜஸுள்ளவரும் சிறந்த குலத்தில் ஜனித்தவரும் பெரியபராக்கிரமத்தால் ஜ்வலிப்பவர்போல விளங்குகிறவருமான அந்தமனு ஜனங்களின் அப்பெருஞ்சங்கத்தால் சூழப்பட்டவராய்ப்பிரயாணப்பட்டார். இந்திரனுடையபெருமையைக் கண்டதேவர்களைப்போல அம்மனுவின்பெருமையைக்கண்ட நான்கு ஜாதிகளும் ஆச்ரமிகளும் மிலேச்சர்களும் திருடர்களுமாகியயாவ ரும்நடுக்கமுற்று மனத்தை ஸ்வதர்மத்தில்அர்ப்பணஞ்செய்தார்கள். பிறகு பாவங்களைவிலக்கிப் பிராணிகளை ஸ்வதர்மத்தில் முயற்சியுள்ள வைகளாகச்செய்து, வருஷிக்கும்மேகம்போல மனு பூமியைச்சுற்றி ஸஞ்சரித்தார். க்ஷேமத்தைவிரும்பும் பூமியிலுள்ளமனிதர்கள் ஜனங்க ளின் நன்மையைவேண்டி இவ்விதம் முதலில் அரசனையே ஏற்படுத்த வேண்டும். தேவர்கள் இந்திரனைப்போலவும் சிஷ்யர்கள் ஆசிரியனைப் போலவும் அருகிலுள்ள ஜனங்கள் அரசனை எப்பொழுதும் பக்தி யுடன் வணங்கவேண்டும். இவ்வுலகில் தன்னினத்தாரால் பூஜிக்கப் படும்மனிதனைப் பிறரும் வெகுமானிப்பார்கள். தன்ஜனத்தால் அவ மதிக்கப்படும் மனிதனைப் பிறரும் அவமதிப்பார்கள். அரசனுக்குப் பகைவர்களால்நேரும் அவமதிப்பு மனிதர்யாவருக்கும் துன்பத்தை விளைவிக்கும். ஆகையால் குடை, வாஹனம், ஆடைகள், ஆபரணங் கள், போஜனம், பானம், வீடு, ஆஸனங்கள், படுக்கைகள், மற்று முள்ள உபகரணங்களெல்லாவற்றையும் அரசனுக்களிக்கவேண்டும். அரசனும் பகைவர்களால் எதிர்க்கத்தகாதவனாக உலகத்தைக்காப்பவ னும் புன்சிரிப்புடன் முந்திப்பேசுகிறவனும் பேசுகிறமனிதர்களுக்கு இனிமையாக மறுமொழிசொல்லுகிறவனுமாயிருக்கவேண்டும். அன் றியும் இந்திரியஜயமுள்ளவனும் நன்றியறிவும் உறுதியான பக்தியு முள்ளவனும் அதிதிமுதலியவர்களுக்குப் பகுத்தளிப்பவனுமாயிரு ப்பதுடன் தன்னைப்பார்க்கும்ஜனங்களை நேராகவும் அழகாகவும் தானும் மெல்லப்பார்க்கவும் வேண்டும்" என்றுசொன்னார்.

---

அறுபத்தேழாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(அரசன்ராஜ்யத்துக்கு அவசியமென்பதைப்பற்றிப் பிருஹஸ்பதி வஸுமன ஸுக்கு உபதேசித்ததைப் பீஷ்மர் யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பரதச்ரேஷ்டரான பிதாமஹரே! மனிதர்களுக் கதிபதியான அரசனை அந்தணர்கள் தெய்வமெனக்கூறும்வழியை

எனக்குஅறிவிக்கவேண்டுகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"ஓ! பாரத! இவ்விஷயத்திலும் வஸுமனஸ், பிருஹஸ்பதி முனி இவர்களின்வினவிடையான இப்பழைய இதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். புத்திமான்களிற்சிறந்த வஸுமனஸென்னும்கோஸல தேசத்தரசன் அறிவுள்ளவரான பிருஹஸ்பதிமஹரிஷியிடம் ப்ரச்னஞ்செய்யப் புறப்பட்டான். விநயந்தெரிந்த அவ்வரசன் பிருஹஸ்பதியிடஞ்சென்று பிரதக்ஷிணஞ்செய்தபின் விதிப்படி நமஸ்கரித்து அபிவாதனமுதலிய எல்லாமரியாதையையுஞ் செய்து எல்லா உலகத்திற்கும் ஹிதத்தைவிரும்பியவனாய் ராஜ்யத்தின் விதியைக் கேட்கத்தொடங்கினன். பிரஜைகளின் ஸுகத்தைத்தேடும் வஸுமனஸானவன் தர்மஸ்வபாவமுள்ள பிருஹஸ்பதிமுனியைநோக்கி, "அறிஞர்களிற் பெரியவரே! பிராணிகள்வளரவும் நசிக்கவும் காரணமாயிருப்பவர் யார்? எவரைப்பூஜிப்பவர்கள் அழிவற்றஸுகமடைவார்கள்? தேவரிஷியே! இவ்விஷயத்தை அறம் பொருள் இன்பங்களைப்பற்றியஸந்தேகம்விலகும்படி எனக்குபதேசிக்கவேண்டும்" என்றுசொன்னன். அளவற்றபராக்ரமமுள்ள கோஸலவேந்தனால் இங்ஙனம் வினவப்பட்டவரும் பேரறிவுள்ளவருமான பிருஹஸ்பதிமுனி அரசர்களின்பெருமையையும் ராஜ்யத்தை விருத்திபண்ணுமுறையையும் தண்டநீதிப்படி பரபரப்பின்றி இவன்பொருட்டுச் சொல்லத்தொடங்கினர்.

"அறிவிற்சிறந்த அரசனே! உலகத்தின் தர்மத்திற்குக்காரணம் அரசனெனத் தோன்றுகிறது. அரசனிடமுள்ளபயம் ஒன்றினலேயே பிரஜைகள் ஒருவரையொருவர் பக்ஷியாமலிருக்கிறார்கள். அரசன் தான் மரியாதையற்றதும் பிறர்பொருளில் ஆசையுள்ளதுமான உலகமனைத்தையும் தர்மத்தால் சுத்திபெறச்செய்து தானும் பரிசுத்தனாக விளங்குகிறான். ராஜனே! சந்திரனும் ஸூர்யனும் உதியாவிடில் பிராணிகள் ஒருவரையொருவர்காணமல் பேரிருளில் முழுகுவது போலவும் தண்ணீர்குறுகினவிடத்திலுள்ள மீன்களும் அச்சமில்லாவிடத்திலுள்ள பறவைகளும் இஷ்டம்போலவிளையாடுவதுடன் ஒன்றையொன்று எதிர்த்து அடித்துப் பலவிதமாக ஹிம்ஸைசெய்துகொண்டு ஸந்தேகமின்றி நாசமடைவதுபோலவும் மேய்க்கும் இடையனற்றபசுக்கள்போலவும் இப்பிரஜைகள் அரசனில்லாவிடில் இருளில் மூழ்கி நாசமடையும். அரசன் காப்பாற்றாவிடில் பலவீனர்களின் திரவியங்களைப் பலசாலிகள் அபகரிப்பதுமன்றி எதிர்த்துவருமவர்களையும் கொன்றுவிடுவார்கள். அரசன் பரிபாலியாவிடில் பிள்ளை, பெண்டிர்

பொருள், மற்றுமுள்ள திரவியங்களும் நசிப்பதுடன் இந்த உலகில், 'இஃது எனது' என்னும் எண்ணமும் நிலைபெறமாட்டாது. எங்கும் களவுநடக்கும். அரசன் பரிபாலியாவிடில் வாகனம், ஆடை, ஆபரணங்கள், பலவிதரத்தினங்கள் இவைகளையும் பாபிகள் பலாத்காரமாக அபகரிப்பார்கள்; அரசன் பரிபாலியாவிடில் தர்மத்தைச்செய்கிறவர்களைப் பலவித ஆயுதங்களாலடிப்பதுடன் அதர்மத்தையும்செய்வார்கள்; அரசன் பரிபாலியாவிடில் தாய், தந்தை, பெரியோர், ஆசிரியர், அதிதி, குருஇவர்களைக் கஷ்டப்படுத்துவார்கள்; கொலையுஞ் செய்வார்கள்; கூச்சலிடும் மற்றஜனங்களையும் அடிப்பார்கள். இந்த உலகம் திருடனுக்குச்சமமாகும். அரசன்பரிபாலியாவிடில் பொருளுள்ளஜனங்களுக்குத் துன்பமும் பந்தமும் கொலையும் எச்சமயமும் உண்டாகும். எவரும் எனதென்னும் ஸ்வதந்திரத்தை வகிக்கமுடியாது. அரசன்பரிபாலியாவிடில் ராஜ்யம் பலவிதமாகஅழியும்; இந்த உலகம் திருடர்களுக்கு ஈடுபட்டதாகும்; ஜனங்கள் அகாலத்தில்நாசமடைவார்கள். அரசன்பரிபாலியாவிடில் வர்த்தகமும் கிருஷியும் நடைபெறா; ஸ்திரீகளின்வ்யபிசாரமும் தோஷமாகாது; மூன்று வேதமும் தர்மமும் மூழ்கிப்போம். அரசன்பரிபாலியாவிடில் நிறைந்ததக்ஷிணையுள்ள யாகங்கள் விதிப்படிநடைபெறா; விவாஹங்களும் ஸபையும்நடைபெறா. அரசன்பரிபாலியாவிடில் காளைகளும் தாம்செல்லும்வழிச் செல்லா; (அறிவற்ற) தயிர்ச்சட்டிகளும் கடையஇடங்கொடா; இடைச்சேரிகளும் நாசமடையும். அரசன்பரிபாலியாவிடில் க்ஷணத்தில் உலகம்யாவும்பயந்து நடுக்கமுற்றமனமுள்ளதாகிப் பிரஜ்ஞையின்றி, 'ஆ! ஆ!' என்று அழிந்துபோம். அரசன் காவாவிடில் வருஷக்கணக்குள்ள யாகங்கள் எவ்விதப்பயமுமின்றி விதிப்படி தக்ஷிணையுள்ளனவாய் நடைபெறா. அரசன்காவாவிடில் தவஞ்செய்யத்தக்க பிராம்மணர்கள் கல்விகளிலும் விரதங்களிலும் தீக்ஷைபெற்று நான்குவேதங்களையும் விதிப்படி கற்கமாட்டார்கள். அரசன் ரக்ஷியாவிடில் ஜனங்கள் மோகம்பிடித்துத் தருமத்தைத் தள்ளிவிடுவார்கள். சங்கையின்றிப் பிறர்பொருளை அபகரிக்கப்புறப்படுவார்கள். அரசன்ரக்ஷியாவிடில் மனிதர்களின்கையிலுள்ள திரவியத்தையும் அவர்கள்கையிலிருந்து திருடர்கள் களவுசெய்வார்கள்; எவ்விதவரம்புகளும் மாறிவிடும், யாவரும் பயத்தினால்பீடிக்கப்பட்டு ஓடுவார்கள். அரசன்பரிபாலியாவிடில் நீதியின்றித் தோன்றியபடி ஜனங்கள் நடப்பார்கள்; [1]வர்ணஸங்கரம் ஏற்படும்; ராஜ்யத்தைத்

1 எல்லாஜாதிகளும் ஒன்றாய்க்கலப்பது.

துர்ப்பிக்ஷமும் பிடிக்கும். அரசனால் நன்குரக்ஷிக்கப்படும் மனிதர்கள் எங்கும் எவ்விதப்பயமுமின்றி வீட்டின்வாயிற்கதவுகளைத் திறந்து வைத்துக்கொண்டு இஷ்டப்படி படுத்துறங்குவார்கள். தர்மந்தவ றுதஅரசன் பூமியை நன்கு பரிபாலியாவிடில் எவனும் வைதலையும் பொறுக்கமாட்டான்; கையோங்குதலை எவ்விதம்ஸஹிப்பான்? அர சன்ரக்ஷித்தால் அபலைகளானபெண்களும் பயமின்றி எவ்விதஆபர ணங்களையும்பூண்டு புருஷஸஹாயமின்றித் தனியே வழியிற்செல்லு வார்கள். அரசன் ரக்ஷிக்குங்காலத்தில் ஜனங்கள் ஒருவரையொருவர் துன்பப்படுத்தாமல் ஆதரிப்பதுடன் தருமவழியேசெல்லுவார்கள். அரசன் ரக்ஷிக்குங்காலத்தில் பிராம்மணர்முதலிய மூவருணத்தார் களும் நியமமுள்ளவர்களாய் வித்தையைக்கற்பதுடன் வெவ்வேறான பெரியயாகங்களையும் செய்வார்கள். வேதத்தையும் ஜீவனத்தையும் மூலமாகக்கொண்டு ஜீவிக்கும் இவ்வுலகம்யாவும் அரசனின்ரக்ஷை யில் நிலைபெறவேண்டும். அரசன் தன்னுடைய பெரியபலத்தால் சிற ந்ததான பூபாரத்தைத்தாங்கிப் பிரஜைகளைரக்ஷிப்பானாகில் உலகம் குற்றமின்றித் தெளிந்துநிற்கும். பிராணிகளினிருப்பிற்கும் இல்லா மைக்கும் உறுதியானகாரணமான தன்னிருப்பையுமில்லாமையையு முடையவரசனைப் பூஜியாதவன்யார்? உலகமனைத்துக்கும் ஸுகம் தரத்தக்க அரசனின்பாரத்தை வஹிப்பதுடன் அவன் இதத்திலும் பிரி யத்திலும் நிலைபெற்றிருப்பவன் இவ்விரண்டுஉலகங்களையும் ஜயிப் பான். மனத்தினாலாவது அரசனுக்குக் கேடுநினைக்கும் மனிதன் ஸந்தேகமின்றி இங்கேதுன்பப்படுவதுடன் இறந்தும் நரகமடைவான். இவனும் ஒருமனிதனென்றெண்ணி அரசன் எந்தச்சமயமும் அவம திக்கத்தக்கவனல்லன். அரசனென்னும் மனிதஉருவத்துடன் ஒரு பெருந்தெய்வமிருப்பதாக அறியவேண்டும். காலத்துக்குத்தக்கபடி ஐந்துரூபங்களைச்செய்யுமரசன் முறையே அக்கினி, ஆதித்தன், மிரு த்யு, குபேரன், யமனென்றஐந்துதேவரூபியாவான்; அருகிலிருக்கும் பொய்ந்நடக்கையுள்ளபாபிகளைக் கடோரமானதேஜஸால் கொளுத் துங்கால் அக்கினியாகிறான்; சாரன்மூலமாகப் பிராணிகள் யாவரை யும்பார்த்து அவர்களின்க்ஷேமத்தைச் செய்துகொண்டு செல்லுங்கால் ஆதித்யனாகிறான். அரசன் மிகக்கோபத்துடன் கெட்டநடையுள்ள மனிதர்களைப் பிள்ளை பேரன் மந்திரிகளுடன் பலவிதமாக நசிக்கச் செய்யும்போது மிருத்யுவாகிறான். அதருமத்தில்சென்ற எல்லாமனி தர்களையும் கடுந்தண்டங்களால் சிக்ஷித்துத் தார்மிகர்களை ரக்ஷித்து வரும்போது அரசன் யமனாகிறான். எப்பொழுது அரசன் உபகாரம்

செய்யும் ஜனங்களுக்குத் தனங்களைவருஷித்துத் திருப்திசெய்தும் விரோதிகளுடைய பலவிதாத்தினங்களையும் அபகரித்தும் ஒருவனுக்கு ஸம்பத்தைக்கொடுத்தும் ஒருவனிடமிருந்து தனத்தைஅபகரித்தும்வருகிறானோ அப்பொழுது அந்தஅரசன் உலகில் குபேரனாகிறான். கடோரமற்ற நடக்கையுள்ளவனும் தருமத்தைவிரும்பியவனும் ஸமர்த்தனுமானமனிதன் உலகத்தில் அரசனிடம் அஸூயையில்லாமலும் அரசனுக்கு விரோதமில்லாமலுமிருக்கவேண்டும். பிள்ளையாயிருந்தாலும் நண்பனாயிருந்தாலும் உடன்பிறந்தவனாயிருந்தாலும் உயிர்த்தோழனாயிருந்தாலும் அரசனுக்கு விரோதங்களைச் செய்யும் மனிதன் ஸுகத்தையடையமாட்டான். காற்றுடன்சேர்ந்து ஜ்வலிக்கும் அக்நியில் அகப்பட்டதில் மிச்சமுண்டாகலாம். அரசன் கோபத்திற்காளானவன் சிறிதும் மிஞ்சமாட்டான். மனிதன் அரசனுடைகையிலுள்ள எவ்விதவஸ்துக்களையும் [1]வெகுதூரத்தில் விலக்கவேண்டும். மிருத்யுவிடம் பயப்படுவதுபோல அரசன் பொருளைக்கவர்வதிலிருந்து பயப்படவேண்டும். வஞ்சகமாகக்கொல்லும் யந்திரத்தில் சென்றமிருகம்போல ராஜத்ரவ்யத்தையெடுக்கத்தொடரும் மனிதன் உடனே கொல்லப்படுவான். இந்தஉலகத்தில் புத்தியுள்ளவன் தன் திரவியத்தைப்போல ராஜத்ரவ்யத்தைக் கவனத்துடன் காக்கவேண்டும். புத்தியின்றி அரசன்பொருளையபகரிக்கும் மனிதர்கள் பலவிதமும் கோரமுமான பெருநரகத்தில் நெடுங்காலம்விழுகிறார்கள். ராஜா, போஜன், விராட், ஸம்ராட், க்ஷத்ரியன், பூபதி, நரபதிஎன்னும் இப்பதங்களால் புகழப்படும்அரசனைப் பூஜிக்கத்தகாதவன்யார்? ஆகையால் க்ஷேமத்தைவிரும்பும்மனிதன் மனத்தையும் இந்திரியங்களையும் அடக்கிக்கொண்டு நல்லபுத்தியும் தைர்யமும் ஸாமர்த்தியமுமுள்ளவனாய் அவசியம் அரசனை ஆச்ரயிக்கவேண்டும். நல்லபுத்தியுடனே நன்றியறிவுள்ளவனும் பெருந்தன்மையும் இந்திரியஜயமும் உறுதியான பக்தியுமுள்ளவனும் தருமத்தில்நிலைபெற்றவனும் தன்நிலையிலிருப்பவனுமான மந்திரியை அரசன் பூஜிக்கவேண்டும். உறுதியானபக்தியுள்ளவனும் கல்விப்பயிற்சியுடன் தர்மந்தெரிந்தவனும் இந்திரியங்களை ஜயித்தவனும் பெருந்தன்மையுள்ளவனும் சூரனும் ப்ரஸித்தனுமானமனிதனை அரசனடையவேண்டும். அரசன் மனிதனை வல்லமையுள்ளவனும் மிகப் பெருமையுள்ளவனுமாகச் செய்யத்தக்கவன். அரசன் அடுத்தவனை ஸுகித்திருக்கச்செய்வான். அரசனை எதிர்ப்பவனுக்கு எங்கும்ஸுகமில்லை. பிரஜைகள் அரசனைத் தம்

[1] அஞ்சி அணுகாதிருக்கவேண்டும் என்பதுகருத்து.

முதல்சரீரமாகவும் அரசன் பிரஜைகளைத் தன்னுடைப்பற்றசரீரமாகவும் பாவிக்கவேண்டும். அரசனில்லாததேசமும் தேசமில்லாவரசனும் நிலை பெறுதலில்லை. அரசன் பிரஜைகளுக்கு மனமும் கற்கதியும் பிரதிஷ்டையும் உயர்ந்தஸஹாயமுமாகிறான். ராஜனே! அரசனைநன்றாயடைந்த மனிதர்கள் இவ்வுலகையும் மேலுலகையும் ஜயிப்பார்கள். தவம், ஸத்தியம், நட்புஇவைகளுடன் பூமியைப் பரிபாலித்துவருமரசனும் பெரியயாகங்களைச்செய்து பெரும்புகழ்பெற்று ஸ்வர்க்கத்தில் சாச்வதமானபதம்பெறுவான்" என்றுசொன்னார். அங்கிரஸ்என்னுமுனிவரால்இங்ஙனம் உபதேசிக்கப்பட்டவனும் அரசர்களிற்சிறந்தவனுமான அக்கோஸலவீரன் பிரஜைகளின் பரிபாலனமென்னும் உத்தமதர்மத்தை மிக்கமுயற்சியுடன் செய்துவந்தான்" என்றுசொன்னார்.

---

## அறுபத்தெட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், அரசாட்சியின்முறையை யுதிஷ்டிரருக்குக்கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! விசேஷமாக அரசன்செய்யவேண்டிய காரியமெது? கிராமத்தைரக்ஷிப்பதும் சத்துருக்களைக்கொல்லுவதும் சாரர்களைஏவுவதும் பிள்ளை, பெண்டிர், வேலைக்காரர்கள், மற்றுமுள்ளஜாதியாரனைவரையும் விச்வாஸமுள்ளவர்களாகச் செய்வதும் எங்ஙனம்?" என்றுகேட்டனர்.

பீஷ்மர் சொல்லத்தொடங்கினார். "ஓ! மஹாராஜனே! முதலில் அரசனும் அரசாட்சியைவஹிப்பவனும் செய்யத்தக்க ராஜகாரியம்யாவற்றையும் கவனத்துடன்கேள். அரசன் எப்பொழுதும் முதலில் தன்னையும் பின்புசத்துருக்களையும் ஜயிக்கவேண்டும். தன்னை ஜயிக்காதஅரசன் சத்துருக்களைஜயிப்பது எங்ஙனம்? ஐவகைப்புலன்களையுமடக்குவது தன்னைஜயிப்பதாகும். இந்திரியங்களைஜயித்தவரசனே சத்துருக்களைக்கொல்லவல்லவனாவான். ஓ! குருச்ரேஷ்டனே! கோட்டைகள், எல்லை, பட்டணத்தின்உபவனம், உத்யானவனம், ஜனங்கள்கூடுமிடங்கள், ரஹஸ்யமானபலஇடங்கள், நகரின் நடு, அரண்மனை இந்தவிடங்களில் காக்கத்தகுதியுள்ள ஆள்களைவைக்கவேண்டும். புருஷச்ரேஷ்டனே! நன்றாகப்பரீக்ஷிக்கப்பட்டவர்களும், புத்திமான்களும், பசிதாகச்ரமங்களைப்பொறுப்பவர்களும், அசடனும் குருடனும் செவிடனும்போன்ற உருவமுள்ளவர்களுமான புருஷர்களை ரஹஸ்யதூதர்களாக நியமிக்கவேண்டும். மஹாராஜனே! கவன

முள்ள அரசன் எல்லாமந்திரிகளிடத்திலும் மூவகைநண்பர்களிடத்தி லும் புத்திரர்களிடத்திலும் பட்டணத்திலும் கிராமத்திலும் ஸாமந்த ராஜர்களிடத்திலும் ஒருவரையொருவர் அறியாதவண்ணம் சாரர்களை இருக்கச்செய்யவேண்டும். ஏ! பாரதச்ரேஷ்ட! ஸமர்த்தனான அரசன் கடைகள், விளையாடுமிடங்கள், ஜனங்கள்கூடுமிடங்கள், வீதிகள், தோட்டங்கள், சிறுதோட்டம், கல்விச்சங்கம், தாஸிகளிருக்கு மிடங்கள், நியாயஸபை, வேலைக்காரர்களிருக்குமிடங்கள், தனவான் களின்வீடுகள் ஆகிய இவ்விடங்களில் பிறராலனுப்பப்படும் சாரர்களைத் தன்சாரனைக்கொண்டு தேடியறிந்து அடிக்கவேண்டும். ஓ! பாரத! தூதனைத்தடுப்பதால் யாவும் தடுக்கப்படும். அரசன் தான் குறைவுள் ளவனாகத் தனக்குத் தோன்றும்போது மந்திரிகளுடனாலோசித்துக் கொண்டு தனக்கு மேலானபலமுள்ள அரசனுடன் ஸந்திசெய்து கொள்ளவேண்டும். ராஜனே! பலசாஸ்திரங்களைக்கற்றவர்களும் வித் வான்களும் தண்டநீதியை நன்றாகக்கற்றவர்களுமான பிராம்மணர்க ளும் க்ஷத்திரியர்களும் வைசியர்களும் (அரசனுக்கு) மந்திரிகளா யிருக்கவேண்டும். (நீதியிற்சந்தேகமுள்ள) அரசன் (இவர்களில்) முதலில் நீதிசாஸ்திரத்தின் உண்மையையறிந்த பிராம்மணனையும் பிறகு நீதிநிபுணனான க்ஷத்திரியனையும் பிறகு சாஸ்திரஅறிவுடன் தன் ஹிதத்தைச்செய்யும் வைச்யசூத்ரர்களையும் கேட்கவேண்டும். தன க்கு யாதொருகுறைவும் அறியப்படாவிடினும் ஒருவிதம் பெரும்பய னைக்கருதி ஸமர்த்தனான அரசன் பிறருடன் வேகமாக ஸந்தியைச் செய்யவேண்டும். தர்மமாக ராஜ்யத்தைக்காக்கும் அரசன் நற்குண முள்ளவர்களும் மிக்க உற்சாகமுள்ளவர்களும் தர்மம்தெரிந்தவர்க ளும் ஸாதுக்களுமான அரசர்களுடனும் ஸந்திசெய்துகொள்ளவேண் டும். பெரியபுத்தியுள்ள அரசன் உலகத்திற்குவிரோதிகளும் முன்பு தனக்கு அபகாரஞ்செய்தவர்களுமான அரசர்களை அவர்கள் நசிக்கத் தக்கஸமயம்பார்த்து எவ்விதமும் கொல்லவேண்டும். உபகாரத்தை யாவது அபகாரத்தையாவது செய்யச் சக்தியற்றவனும் விலக்கத் தகாதவனுமான அரசனிடம் உதாஸீனனாயிருக்கவேண்டும். ஸமர்த் தனும் வீரனும் வித்வானும் ஸேனைவளப்பத்துடன் ஸம்பந்தித்திருப்ப வனுமான அரசன் யாத்திரையில் விருப்பமுண்டானால் முதலில் தன் பட்டணத்தை ரக்ஷிக்கத்தக்க உபாயங்களைச்செய்துவிட்டுப் பந்துக்க ளும் நண்பர்களுமற்றவனும் பிறரால்எதிர்க்கப்பட்டவனும் முயற்சி யற்றவனும் பலஹீனனுமாக [1] அறியப்பட்ட அரசனைநோக்கி யாத்திரை

[1] இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

யைச்செய்யக் கட்டளையிடவேண்டும். பலமும் வீரியமும் குறைந்த அரசன் அதிகவீரியமுள்ள அரசனுக்கு உடன்படாமல் எப்பொழுதும் அவனையிழுக்க வழிபார்க்கவேண்டும். அவனுடையராஜ்யத்தை ஆயுதங்கள், தீ, விஷம், மயக்கம்கொடுப்பது இவைகளால்பிடிக்கவேண்டும். அந்தஅரசர்களுக்கும் சிறந்தஅமைச்சர்களுக்கும் விவாதங்களையும் உண்டுபண்ணவேண்டும். ராஜனே! ராஜ்யத்தில்விருப்பமுள்ள புத்திமானான அரசன் பலவானுடன் எந்தஸமயமும் யுத்தத்தைவிலக்க வேண்டும். எப்பொழுதும் ஸாமம், தானம், பேதமென்ற மூன்று உபாயங்களால் அடையக்கூடியபொருளை அடையவேண்டுமென்றும் பண்டிதன் இவ்விதம் அடைந்தபொருளைக்கொண்டு ஸந்தோஷிக்க வேண்டுமென்றும் பிருஹஸ்பதிகூறினர். ஓ! குருநந்தன! அளவற்ற அறிவுள்ள அரசன் பிரஜைகளைக்காக்கவேண்டி அந்தப்பிரஜைகளிடமிருந்து ஆறில்ஒருபாகம் கப்பத்தையும்வாங்கவேண்டும். தண்டிக்கத்தக்க மத்தன் உன்மத்தன்முதலியவர்களிடமிருந்து சிறிதோ பெரிதோ அபராதப்பணத்தைப் பிரஜைகளைரக்ஷிக்கவேண்டியே விரைந்து [1] வாங்கவேண்டும். பிரஜைகளை ஸந்தேகமின்றித் தன்மக்களைப்போலப் பார்க்கவேண்டும். வியவகாரத்தைப்பார்க்கும்போது எந்தமனிதனிடமும் ஸ்நேகபுத்திபாராட்டக்கூடாது. அரசன் எல்லாஅர்த்தங்களையுமறிந்த அறிஞர்களை வியவகாரங்களை விசாரிப்பதற்கு ஏற்படுத்த வேண்டும். ராஜ்யம் அந்த வியவகாரங்களில் எப்பொழுதும் நிலைபெற்றிருக்கிறது. தங்கமும் ரத்தினமும் எடுக்குமிடத்திலும் உப்பளத்திலும் சுங்கச்சாவடியிலும் அல்லது தான்யங்கள்முதலியவைகள் விற்குமிடத்திலும் ஏற்றுமதிசெய்யுமிடத்திலும் யானைக்கூட்டமுள்ளவிடத்திலும் அமைச்சர்களை அல்லது நம்பிக்கையுள்ளவர்களும ஹிதர்களுமானமனிதர்களை அரசன் நியமிக்கவேண்டும். எப்பொழுதும் நன்றாகத் தண்டஞ்செலுத்திவருமரசன் தர்மத்தையடைவான். தண்டமானது அரசனுக்கு எப்பொழுதும் உத்தமதர்மமெனப் புகழப்படுகிறது. அரசன் வேதவேதாங்கங்களைக்கற்றவனும் அறிவிற்சிறந்தவனும் நல்லதவமுள்ளவனும் எப்பொழுதும் தானத்தையும் யாகத்தையும் செய்யும் தன்மையுள்ளவனுமாயிருக்கவேண்டும். ஓ! பாரத! இந்தக்குணங்கள்யாவும் அரசனிடம் எப்பொழுதும் நிலைபெற்றிருக்க வேண்டும். வியவகாரத்திற்குக் கேடுவருமாகில அரசனுக்குக் கீர்த்தியும் ஸ்வர்க்கமும எங்கிருந்துகிடைக்கும்? புத்திமானான அரசன் தன்னிலும் மேலான பலமுள்ள அரசனால் பீடிக்கப்படும்போது துர்க்

[1] இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

கத்தை அடையவேண்டும். இதிப்படி ஸ்நேஹிதர்களையடைந்து பகையாளியை வெல்லவேண்டி ஸாமமும் பேதமுமாகிய உபாயங்களையும் மற்றுமுள்ளவழிகளையும் வருமாறு செய்யவேண்டும். [1]ராஜமார்க்கங்களில் காட்டாள்களை நியமிக்கவேண்டும். கிராமத்திலுள்ள ஜனங்களை வெளிப்படுத்தி ஸமீபத்திலுள்ள கிளைப்பட்டணங்களில் வஸிக்கச் செய்யவேண்டும். தனமுள்ளவர்களையும் ஸேனைத்தலைவர்களையும் பலமுறை நல்லவசனங்களைச்சொல்லி ரக்ஷிக்கப்பட்ட கோட்டைப்ரதேசங்களில் இருக்கச்செய்யவேண்டும். பலதான்யங்களுள்ளபயிர்களை அரசன் தன்ஸமீபம்வரச்செய்து கொள்ளவேண்டும். கொண்டுவரக்கூடாத பூமியிலுள்ளபயிர்களைத் தீயால் மிகஎரித்துவிடச் செய்யவேண்டும். சத்துருவைச்சார்ந்தஜனங்களைப் (பலஉபாயங்களால்) பேதிக்கவேண்டும். அவ்விதம்பேதித்தஜனங்களாலோ அல்லது தன் ஸேனையாலோ அவையெல்லாவற்றையும் அழியச்செய்யவேண்டும். நதிமார்க்கங்களிலுள்ள (சத்துருவரத்தக்க) பாலங்களை இடித்துவிடவேண்டும். குளங்களிலுள்ள ஜலங்களையெல்லாம் வெளியோடச் செய்யவேண்டும். அவ்விதம் செய்யமுடியாத கிணறுமுதலியவைகளை விஷம்முதலியவைகளால் கெடுக்கவேண்டும். அந்தச்சமயத்திலும் வருங்காலத்திலும் [2]நேரிட்ட வேறு மித்திரகாரியத்தையும்கவனியாமல் தன்சத்துருவிடம்பகையுள்ளவனும் அவனைவெல்லத்தக்கவனுமான அரசனை நேசித்துக்கொண்டு வஸிக்கவேண்டும். கோட்டைகளுக்குச்சுற்றிலுமுள்ள சைத்யவிருக்ஷமல்லாத சிறியமரங்களையெல்லாம் வேருடன்வெட்டவேண்டும். முதிர்ந்தமரங்களின்கிளைகளை அறுக்கச்செய்யவேண்டும். சைத்யவிருக்ஷங்களின் இலையும் எவ்விதமும்கீழ்விழாமல் விலக்கவேண்டும். சைத்யவிருக்ஷங்கள் தேவர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், [3]போகிகள், பிசாசங்கள், பன்னகர்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸுகள், ருத்ரபரிவாரங்களான பூதங்கள் ஆகிய இவர்களுக்கு இருப்பிடமாகையால் அம்மரங்களைவெட்டாமல் விலக்கவேண்டும். அரசனே! வாராணஸியென்னும்தேசத்தில்ப்ரமதகணங்களின்தலைவனான நிகும்பனால் ஸௌதாஸனென்னும் அரசனுடைய ஸேனை கொல்லப்பட்டதாகக் கேள்விப்படுகிறோம். [4]ப்ரகண்டிகளென்

1 இங்கு அதிகபாடம் விடப்பட்டது.

2 இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது.

3 ஒருவகைஸர்ப்பங்கள்.

4 வெகுதூரத்தில்வரும்ஜனங்களைக் காணத்தக்கதும் வெளிப்ராகாரச் சுவரிலமைக்கப்பட்டதுமான சூரர்களிருக்குமிடம்.

னும் இடங்களையும் [1]ஆகாசஜநங்களின்னும் இடங்களையும் நன்றாகச் செய்துவைக்கவேண்டும். சூலங்களுள்ள முளைகளாலும் முதலைகளாலும் திமிங்கிலங்களாலும் அகழியை நிரப்பச்செய்யவேண்டும். பட்டணத்திலுள்ளவர்களின் ஆச்வாஸத்திற்குவேண்டிச் சிறிய துவாரங்களைச் செய்துகொள்ளவேண்டும். அவ்விதத் துவாரங்களையும் வாயில்களைப்போல மிக்ககவனத்துடன் எவ்விதத்திலும் ரக்ஷித்துவரவேண்டும். ஒவ்வொருதுவாரங்களிலும் பெரியயந்திரங்களையும் சதக்நியென்னும் ஆயுதங்களையும் ஏற்றிவைப்பதுடன் அவைகளை ஸ்வாதீனமாயிருக்கச் செய்யவும்வேண்டும். கட்டைகளைச் சேர்த்துவைக்கவேண்டும். அப்படியே கிணறுகளைவெட்டும்படி செய்யவேண்டும். தண்ணீர்விருப்பமுள்ள முன்னோர்களால் வெட்டப்பட்டகிணறுகளை அப்படியே சுத்தஞ்செய்யவேண்டும். புற்கூரையுள்ள வீடுகளைச்சேற்றினால் பூசவேண்டும். சித்திரைமாதத்தில் அக்நிபயமில்லாதிருக்க வேண்டி அப்புற்களை முன்னதாக எடுத்துவிடவேண்டும். அரசன் அக்நிஹோத்ரம் முன்னறைத்தவிரப் பகலில் வேறுதீயை வளர்க்கச்செய்யாமல் அன்ன முதலியவைகளையும் இரவிலேயே பாகம்பண்ணச்செய்ய வேண்டும். தேசத்தையும் பலாபலத்தையும் அறிந்து முடிந்தவரையில் கற்களாலும் செங்கற்களாலும் மண்களாலும் வீடுகளைக்கட்டிக்கொள்ளச் செய்யவேண்டும். கருமான் உலைகளிலும் பிரஸவ அறைகளிலும் வீடுகளின் மற்ற அறைகளிலும் அக்நியை நன்றாகப்பரிபாலித்து மறைவாயிருக்கச்செய்யவேண்டும். பகலில் அக்நியைவெளியிட்ட மனிதனுக்குக் கொலைத்தண்டம்விதிப்பதுடன் நகரைப்பாதுகாக்கவேண்டி அத்தண்டவிதியை யாவரும்அறியும்படி வெளியிடவும்வேண்டும். அரசனே! பிச்சைக்காரர்களையும் வண்டிக்காரர்களையும் நபும்ஸகர்களையும் பைத்தியக்காரர்களையும் [2]பயிர்த்தொழிலுள்ளவர்களையும் வெளியிலிருக்கச்செய்யவேண்டும். இவர்கள் இயற்கையில் கெட்டஎண்ணமுள்ளவர்களாகையால் ஏதாவது குற்றமுண்டாகச்செய்வார்கள். அரசன் ஸபைகளிலும் வீடுகளிலும் முன்கூறப்பட்ட மந்திரிமுதலிய பதினெட்டுத்தீர்த்தங்களிலும் [3]ஸர்ச்சந்திகளிலும் மற்றுமுள்ள எல்லாவிடங்களிலும் உண்மைசொல்லுஞ்சாரனை நியமிக்கவேண்டும். அரசன் ராஜமார்க்கங்களை விசாலமாகச்செய்விக்கவேண்டும். இடத்திற்குத்

---

1 சூரர்கள் தம்மை ரக்ஷித்துக்கொள்ளத்தக்கதும் வெளியிலுள்ள சத்துருக்களைநோக்கி வெடிகளைப்பிரயோகிக்கத்தக்க துவாரங்களுள்ளதுமாக [illegible]
[illegible]
[illegible]
[illegible]

தக்கபடி தண்ணீர்ச்சாலைகளையும் கடைகளையும் ஏற்படுத்தும்படி கட்டளையிடவேண்டும். ஓ! கௌரவ! ஆயுதங்களும் தான்யங்களும் பாண்டங்களும் யானைகளும் குதிரைகளும் ஸேனைகளுமிருக்குமிடங்களையும் அகழிகளையும் வீதிகளையும் ரஹஸ்யவழிகளையும் யாரும் ஒருபோதும் அறியாமல் ரஹஸ்யமாக வைத்துக்கொள்ளவேண்டும். யுதிஷ்டிர! பரஸேனையால் பீடிக்கப்படும் அரசன் திரவியங்களைத்திரட்டிச்சேர்ப்பதுடன் எண்ணெய், நெய், தேன், தான்யம், மருந்துகள், அக்நி, குசம், முஞ்சம், இலைகள், நாணல், [1]ஓலைகள், புல், விறகு, விஷந்தோய்ந்தபாணங்கள், வேல், பிராஸம், ரிஷ்டி, கேடயமுதலிய பலஆயுதங்கள் ஆகியஇவைகளையும், இவைபோன்ற பலவஸ்துக்களையும் திரட்டிச்சேர்த்து வைத்துக்கொள்ளவேண்டும். எல்லாஔஷதங்களையும், கிழங்குகளையும், கனிகளையும், (விஷம், சல்யம், வியாதிகள், மந்திரப்ரயோகங்கள் இவைகளைவிலக்கும்) நான்குவிதவைத்தியர்களையும் விசேஷமாகத் தேடிவைக்கவேண்டும். நட்டுவர்களையும் நர்த்தகர்களையும் மல்லர்களையும் மாயாவிகளையும் சேர்க்கவேண்டும். இவர்கள் பட்டணத்தை அலங்கரிப்பார்கள், எல்லாஜனங்களையும் ஸந்தோஷப்படுத்துவார்கள். எந்த மந்திரிகளிடமிருந்தும் ஸேவகர்களிடமிருந்தும் பட்டணத்து ஜனங்களிடமிருந்தும் அரசனிடமிருந்தும் சங்கைஉண்டாகிறதோ அவர்களை அரசன் தனக்குவசப்பட்டவர்களாகச் செய்யவேண்டும். அவர்கள் தம்வேலையை நிறைவேற்றினவுடன் அரசன் அவர்களை மிகுதியானபொருள்களால் ஸந்தோஷிக்கச்செய்யவேண்டும். ஏ! குருநந்தன! ஒருமனிதனைத் தக்ககாரணமின்றிச் சினங்கொண்டாவது சிக்ஷித்தாவது வெறுப்புள்ளவனாகச் செய்திருந்தால் அவனுக்குத் தகுதியானபொருளாலும் பலவித நல்மொழிகளாலும் அவனை ஸந்தோஷமுள்ளவனாகச் செய்து சாஸ்திரத்திற்சொல்லியபடி அரசன் தன்கடமையை நடத்திக்கொள்ளவேண்டும். அரசன் ரக்ஷிக்கவேண்டிய ஏழுஅங்கங்களையும் நீ தெரிந்துகொள். ஏ! குருநந்தன! அவை:—தான், அமைச்சர்கள், கோசம், தண்டம், நண்பர்கள், நகரம், கிராமம்என்பவைகளே. இவ்வேழையும் தன்னுருவமாகக்கொண்ட ராஜ்யத்தை அரசன் விசேஷமுயற்சியுடன் காத்துவரவேண்டும். ஓ! புருஷப்புலியே! ஷாட்குண்யத்தையும், த்ரிவர்க்கத்தையும், த்ரிவர்க்கத்திலும் உயர்ந்ததையும் அறிந்த அரசன் இந்தப்பூமியை அநுபவிப்பான். ஓ! யுதிஷ்டிர! பிறனுடன் ஸந்திசெய்துகொள்வது பிறனையெதிர்த்துச் செல்வது பிறனுடன்

[1] ஆழுதகிறவன் என்றும் பொருள்உண்டு.

போர்புரிவது பிறனுக்குப் பயமுண்டாகத்தக்க யாத்திரையை வெளியிடுவது பிறனிடத்திலும் தன்னைச்சேர்ந்தஇடத்திலும் ஸந்திசெய்து கொள்வது கோட்டைஅல்லது சத்ரு இவற்றிலொன்றையடுப்பது என இவ்வாறும் ஷாட்குண்யமென்று கூறப்பட்டனவாகத் தெரிந்து கொள்; த்ரிவர்க்கமென்று சொல்லப்பட்டதையும் ஸாவதானமாகக் கேள். ராஜ்யத்தின்குறை, ஸமநிலை, வளர்ச்சிஇம்மூன்றும் த்ரிவர்க்கமெனக் கூறப்படும். அறம், பொருள், இன்பம் இம்மூன்றும் ஸநாதனமான த்ரிவர்க்கமெனச் சொல்லப்படும். சாஸ்திரத்திற்சொல்லப்பட்ட மந்திரசக்தி, ப்ரபுசக்தி, உத்ஸாகசக்தி இம்மூன்றுசக்திகளும் த்ரிவர்க்கத்திற்கு மிகச்சிறந்த ஸாதனமாகச்சொல்லப்பட்டன. ஏ! பாரத! காரியம், காரணம், கர்த்தாவென்னும் மூன்றும் த்ரிவர்க்கத்திலும் மிக்கமேலானவைகள் என்றுசொல்லப்பட்டனவாக அறியவேண்டும். ஓ! அரசனே! இவைகள்யாவும் குறைந்திடினும் ஸத்வம், ரஜஸ், தமஸ்என்னும் முக்குணங்களும் சாச்வதமும் மோக்ஷத்திற்குக்காரணமுமான த்ரிவர்க்கமெனக் கூறப்படும். இந்த த்ரிவர்க்கத்திலிருந்து மிக விடுபட்டமனிதன் முக்தனென்று சொல்லப்படுகிறான். எல்லாக்காரியங்களின் நாசமும் மோக்ஷமென்று சொல்லப்படுகிறது. அதுபற்றியே மோக்ஷத்தைக்கருதிய தேவர்களின் தேவரான பிதாமஹர் எப்பொழுதும் உலகநடைநிலைபெற்றிருப்பதும் ஸந்தோஷத்திற்கு ஸாதனமுமான த்ரிவர்க்கத்தின்ரக்ஷாவிதியை உலகத்திற்கு உபதேசித்தார். அறம், பொருள், இன்பம் இம்மூன்றையும் காலத்திற்குத்தக்கபடி அனுஷ்டிக்கவேண்டும். ஓ! நரச்ரேஷ்டனே! வயதுசென்றமனிதர்கள் எப்பொழுதும் தர்மத்தை அனுஷ்டிக்க வேண்டும். காரியங்கள்யாவும் தர்மத்தை மூலமாகஉடையன. அரசன் தர்மத்தினால்தான் பூமியை நெடுநாள் ரக்ஷிக்கிறான். அர்த்தகாமங்களை இழந்தவனாயினும் துன்பமுள்ளவனாயினும் தர்மநடக்கையுள்ள அரசன் இப்பூமியை நெடுங்காலம் பரிபாலித்துவருவான். இவ்விஷயத்தில் அங்கிரஸால் இரண்டுசுலோகங்கள் கானம்பண்ணப்பட்டன. ஏ! யாதவிபுத்ர! அவைகளையும் நீ கேட்கவேண்டும். உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். (அவற்றின்பொருள்:) "அரசன் தர்மப்படி காரியங்களைச்செய்து பூமியையும் நகரிலுள்ளஜனங்களையும் நன்குபரிபாலித்துப் பரலோகத்தில் ஸுகமாகவிளங்குவான். ப்ரஜைகளை நன்குபரிபாலித்துவருமரசன் தர்மங்களையெல்லாம் செய்தவனாவான். தவத்தாலும் யாகங்களாலும் அவனுக்குயாதுபயன்?" என்பது. ஓ! யுதிஷ்டிர! சுக்ராசாரியர்கூறின இக்கவிகளைக்கேள். ராஜனே! இவைகள்

தண்டநீதிக்கும் த்ரிவர்க்கத்திற்கும் மூலமானவைகள். அரசன் தன் ஸித்திக்குக் காரணமான பதினாறு அங்கங்களுள்ள ஸேனை, விஷம், மாயை, தெய்வம், பௌருஷம், வடகிழக்குப்பாகத்தில் தாழ்ந்ததும் மூன்றுவித த்ரிவர்க்கத்தால் நிறைந்ததுமான கோட்டை. இவைகளை யடைந்து வஹிக்கவேண்டும். [1]ஆறு, [2]ஐந்து, [3]பத்து, [4]எட்டு இவைகளைஜயித்துப் பத்துவிதமான த்ரிவர்க்கங்களுடன்கூடின அரசன் தேவர்களாலும் வெல்லத்தக்கவனல்லன். அரசன், ஸ்திரீகளும் விவேகமற்றவர்களும் தெய்வக்குற்றமுள்ள புத்தியுள்ளவர்களும் வேதமோதாதவர்களுமாகிய இவர்களின்புத்தியைக் கேட்பதுகூடாது. இவர்களின்புத்தி நேராகச்செல்லும் தகுதியுள்ளதன்று. கற்றவர்களில்லாதனவும் ஸ்திரீகளை ப்ரதானமாகக்கொண்டனவும் மூர்க்கமந்திரியுள்ளனவும் அக்னிகளால் கொளுத்தப்பட்டனவுமான ராஜ்யங்கள் (கோடைக்காலத்திலுள்ள) ஜலபிந்துக்கள்போலச் சூன்யமாகப் போய்விடும். ப்ரஸித்திபெற்ற அறிஞர்களும் நம்பிக்கையுள்ளநண்பர்களும் சொல்லுகிற காரியமுள்ளனவாகக் காணப்படும் வசனங்களைத் தெரிந்த எவ்விதமானகாரியங்களிலும் அரசன் கேட்கவேண்டும். தெய்வத்தையும் பௌருஷத்தையும் த்ரிவர்க்கத்தையும் ஆச்ரயித்த அரசன் தேவர்களையும் பிராம்மணர்களையும்வணங்கி ஜயமுள்ளவனுவான்" என்று சொன்னார்.

---

## அறுபத்தோன்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் தண்டநீதியின் பெருமையால் கிருதமுதலியயுகங்களின் வேற்றுமையை உபதேசித்தது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! தண்டநீதி, அரசன், இவ்விரண்டின்சேர்க்கையென்னும் இம்மூன்றில் எதைக்காரணமாகக்கொண்டு யாருக்கு எவ்விதஸித்திஉண்டாவதென்பதை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"ஓ! பரதகுலத்திலுதித்த அரசனே! தண்டநீதியிலிருந்து அரசனுக்கும்பிரஜைகளுக்கும்உண்டாகும்பெருமையைக் காரணத்தோடு

---

1 ஸந்திமுதலியன.

2 சத்ரு, பதார்த்தம், ஸ்திரீ, வாக்கு, அபராதம் இவைகளால் உண்டான [வைரங்கள்.

3 லோபம், கோபம், ஆலஸ்யம், அஸத்யம், அஜாக்ரதை, பயம், சாஞ்சல்யம், மூடத்தனம், அநியாயம், அவமதிப்பு என்பன.

4 க்ருஷி, வ்யாபாரம், கோட்டை, அணை, யானைபிடிக்குமிடம், ரத்னமிருக்குமிடம், வரிவாங்குமிடம், நாதனற்றவிடம்.

கூடியவசனங்களால் உள்ளபடி நான்உபதேசிப்பதைக் கேள். அரச ஞல் நன்குசெலுத்தப்படும் தண்டநீதியானது நான்குஜாதிகளையும் தம்தர்மங்களில் அடக்கிவைப்பதுடன் அதர்மங்களில்செல்லாமலிருக் கவுஞ்செய்யும். பிராணிகளுக்கு எவ்விதப்பயமுமின்றித் தண்டநீதி யால்செய்யப்படும் க்ஷேமத்துடன், நான்குஜாதிகளும் தம்தம்தர்மத் திலிருக்குமாயின் மரியாதைகளுக்கு மாறுபாடின்றி முதல்மூன்று ஜாதிகளும் விதிப்படி ஸோமமுதலியயாகங்களில் முயற்சியடையும். அக்காரணம்பற்றியே மனிதர்களுக்கு ஸுகம்நிலைபெற்றிருக்குமெ ன்று தெரிந்துகொள். 'காலம் அரசனுக்குக்காரணமா, அரசன் காலத்திற்குக்காரணமா' என்றஸம்சயம் உனக்கு உண்டாகவேண் டாம். அரசன் காலத்திற்குக்காரணமாவான். அரசன் தண்டநீதியை முழுதும் நன்ருகச்செலுத்திவருவாஞகில் அந்தஸமயத்தில் மிகச்சிற ந்த க்ருதயுகமென்னுங்காலம் உலகத்தில் நடைபெறும். க்ருதயுகத் தில் எல்லாஜாதிகளின்மனமும் அதர்மத்தில்செல்லாதாகையால் எவ் விடத்திலும் அதர்மமின்றித் தர்மமேவிளங்கும்; ப்ரஜைகளின்யோக க்ஷேமங்கள் ஸந்தேகமின்றி நடைபெறும்; வைதிகமானகர்மங்கள் யாவும் சிறிதும்குறையின்றி விளங்கும்; எல்லாருதுக்களும் யாதொரு ரோகமுமின்றி ஸுகமாகஇருக்கும்; மனிதர்களுக்குக் குரலும் நிற மும் மனமும் தெளிந்துவிளங்கும்; மனிதர்கள் யாதொருநோயுமின்றி நிறைந்த ஆயுளுள்ளவர்களாயிருப்பார்கள்; அக்காலத்தில் பெண் கள் விதவைகளாவதில்லை; கொடியமனிதர் உண்டாகிறதில்லை; பூமி யும் உழவின்றிப் பலன்களைக்கொடுக்கும்; ஓஷதிகளும் உழவின்றிச் செழித்துவிளங்கும்; பட்டையும் இலையும் கனிகளும் வேரும் நல்ல வீரியமுள்ளவைகளாயிருக்கும். அக்காலத்தில் அதர்மமின்றித் தர்ம மொன்றே எங்குமிருக்கும். ஓ! யுதிஷ்டிர! இவைகள் க்ருதயுகத் தைச்சார்ந்தகுணங்களென்றறி. அரசன் தண்டநீதியின் ஒருபாகத் தைத்தள்ளிவிட்டு மற்றமூன்றுபாகங்களைத்தொடர்ந்துநிற்கும்போது திரேதையென்னும்யுகம் நடைபெறும். அக்காலத்தில் தர்மத்தின் மூன்றுபாகங்களுடன் அதர்மத்தின்ஒருபாகம் கலந்துநிற்கும்; பூமி யும் ஓஷதிகளும் உழுதுதான்பலன்கொடுக்கும். அரசன் தண்டநீதி யின்பாதிபாகத்தை விலக்கிவிட்டுப் பாதிபாகத்தைத்தொடர்ந்து நின் ருல் அப்போது த்வாபரமென்னுங்காலம் உலகில்நடைபெறும். அக் காலம் பாபம்இரண்டுபாகமும் புண்ணியம்இரண்டுபாகமும் கலந்துநிற் கும்; பூமி உழவுமுதலியமுயற்சியாலும் அரைப்பாகந்தான் பயனுள்ள தாகும். அரசன் முழுமையும் தண்டநீதியை விலக்கிவிட்டுக் கெட்ட

வழியுடன் ப்ரஜைகளைத்துன்பப்படுத்தும்போது கலியுகம் நடைபெறும். கலியுகத்தில் எங்கும் அதர்மம் ஓங்கிநிறைவதன்றித் தர்மம் எவ்விடத்திலுமிராது; எல்லாச்சாதிகளின்மனமும் தங்களுடையதர்மத்திலிருந்து நழுவிநிற்கும்; சூத்திரர்கள் பிக்ஷாவிருத்தியாலும் பிராம்மணர்கள்ஸேவாவிருத்தியாலும் ஜீவிப்பார்கள்; யோகக்ஷேமங்களின்நாசமும் ஜாதிகளின்கலப்பும் உண்டாகும்; வைதிகமானகர்மங்கள் மிகக்குறைந்துவிடும்; ருதுக்கள்யாவும் (பிராணிகளுக்குச்) சுகமின்றி வியாதிகளைக் கொடுப்பவைகளாயிருக்கும்; மனிதர்களின் குணமும் நிறமும் மனமும் மிகக்குறைந்தனவாயிருக்கும். இக்கலியில் பலவியாதிகளுண்டாவதால் மனிதர்கள் நூறுபிராயம் நிரம்பாமலே மரிப்பார்கள்; மடந்தைகள் விதவைகளாவார்கள்; கொடியபிரஜைகள் ஜனிக்கும்; மேகம்மாரிபெய்வதும் பயிர்உண்டாவதும் சிலவிடத்தில்மட்டுமிருக்கும். அரசன் நன்குதண்டநீதியைச்செலுத்தி ப்ரஜைகளைக்காக்க விரும்பாதிருக்கும்போது ரஸங்கள்யாவும் நாசமடையும். ஆனதுபற்றி அரசன்தான் க்ருதம், த்ரேதை, த்வாபரம், கலி என்னும் நான்குயுகங்களுக்கும் காரணமாவான். க்ருதயுகத்தைச் செய்துவருமரசன் அழிவற்றஸ்வர்க்கலோகம் பெறுவான். த்ரேதாயுகத்தைச் செய்துவருமரசன் சற்றுக்குறைவான ஸ்வர்க்கமடைவான். த்வாபரத்தைநடைபெறச்செய்விக்கும் அரசன் தனக்குத்தக்கதாக ஸ்வர்க்கத்தின்ஓர்பாகத்தை அடைவான். கலியைநடைபெறச் செய்விக்கும் பாபகர்மமுள்ள அரசன் மிகவும்பாபமுள்ளவனாய் அப்பாவத்திற்குரியநரகத்தில் நிலைபெற்றுப் பலவருஷங்கள் வஸித்திருப்பான்; ப்ரஜைகளின்பாபத்தில் மூழ்கினவனாகி அபகீர்த்தியையும் பாபத்தையும் அடைவான். ஏ! பாரத! ஆகையால், அறிவுள்ள அரசன் தண்டநீதியைமுன்னிட்டு அடையப்படாததை அடையவும் அடைந்ததைரக்ஷிக்கவும்வேண்டும். பிரஜைகளின்யோகக்ஷேமங்களும் ஐயமின்றி நன்குநடைபெறும். ஓ! பரதச்ரேஷ்டனே! அரசனால் நன்கு செலுத்தப்படும்தண்டநீதி தாய்தந்தைபோல உலகின்மரியாதையின் எல்லையைரக்ஷிப்பதுடன் உலகங்களையும் பரிசுத்தப்படுத்தும். பிராணிகள்யாவும் தண்டநீதியினுலிருப்பதாகத் தெரிந்துகொள்ளவேண்டும். இந்தத்தண்டநீதியொன்றே அரசனுக்கு மிகச்சிறந்ததர்மமாகும். ஓ! கௌரவ! ஆகையால், நீதிப்படி தர்மமாகப் பிரஜைகளைப்பாலனஞ்செய். இவ்விதஒழுக்கத்துடன் ப்ரஜைகளை ரக்ஷித்துவருமநீ ஜயிக்கவரிதான ஸ்வர்க்கத்தை ஜயிப்பாய்" என்றுசொன்னூர்.

---

## எழுபதாவது அத்தியாயம்.

## ராஜ தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் அரசர்களுக்குரிய முப்பத்தாறுகுணங்களைத் தர்மபுத்ரருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "நல்லநடையையறிந்தவரே! அரசன் இங்கும் மேலுலகிலும் நன்மையைத்தரத்தக்க பயன்களை எளிதில் அடையத் தக்ககுணங்கள் எவை?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அது முப்பத்தாறுகுணங்களுடன் கூடினது. அந்த முப்பத்தாறுகுணங்களையும் அனுஷ்டிக்கும் நற்குணமுள்ள அரசன் சுபத்தையடைவான். அக்குணங்களாவன: ராகத்வேஷமில்லாமல் தர்மங்களைச்செய்தல், பரலோகத்தில் விருப்பத்துடன் ஸ்நேகஞ்செய்தல், தீயவழியின்றிப் பொருளடைதல், அறம்பொருள்களுக்கு அழிவின்றிக் [1] காமத்தை அடைதல், தீனத்தனமின்றிப் பிரியமாகப்பேசுதல், தற்புகழ்ச்சியில்லாத சூரனாயிருத்தல், அபாத்திரங்களில் கொடாத தாதாவாயிருத்தல், தயையுடன்கூடிய ஸமர்த்தனாயிருத்தல், கெட்டவனல்லாதவனெனத் தெரிந்து சேர்க்கையடைதல், சத்துருவெனத் தீர்மானித்துப் போர்புரிதல், [2] ஹிதமில்லாதவர்களுடன் தூதர்களைச் சேராமலிருக்கச்செய்தல், [3] பிறருக்குத் துன்பமின்றி வேலைசெய்தல், அஸத்தல்லாதவர்களிடம் பயனையறிவித்தல், தன்னுடையவல்லாத பிறருடைய குணங்களைச் சொல்லுதல், ஸாதுக்களல்லாதவர்களிடம் கப்பம்வாங்குதல், அஸத்தல்லாத மனிதனையடுத்தல், நன்கு பரீக்ஷை செய்யாமல் தண்டம்விதியாமை, மந்திரத்தை வெளியிடாமை, லோபிகளல்லாதவர்களுக்குக் கொடுத்தல், அபகாரஞ் செய்தவர்களை நம்பாமை, அஸூயையின்றி மனைவியைக்காத்தல், அருவருப்பில்லாமல் சுத்தனாயிருத்தல், அதிகமாக ஸ்திரீகளைச்சேராமை, அஹிதமல்லாத ருசியுள்ளதைப்புஜித்தல், பூஜிக்கத்தக்கவர்களைக் கர்வமின்றிப் பூஜித்தல், கபடமில்லாமல் பெரியோர்களுக்குப் பணிவிடைசெய்தல், டம்பமின்றித் தேவதைகளைப்பூஜித்தல், இகழ்ச்சிக்கிடமில்லாதஸம்பத்தை விரும்புதல், வணக்கத்துடன் வேலைசெய்தல், காலமறிந்து ஸமர்த்

---

1 'இந்திரியப்ரீதி' என்பது பழையஉரை.

2 'பந்துவெனத்தெரிந்து யுத்தஞ்செய்யாமலிருத்தல்' என்பது வேறுபாடம்.

3 'தூதர்களுக்குச் சிறந்த உணவை அளித்தல்' என்பது வேறுபாடம்.

தனுயிருத்தல், பயனற்றதல்லாத நன்மொழியைப்பேசுதல், ஆக்ஷே பஞ்சொல்லாமல் உபகரித்தல், குற்றத்தையறியாமல் தண்டியாமை, பகைவர்களைக்கொன்றபின் துக்கியாமை, காரணமின்றிக்கோபியாமை, அபகாரஞ்செய்தவர்களிடம் மெதுவாயிராமை என்பன. நீ ராஜ்யத்தி லிருந்துகொண்டு இந்தஉலகத்தில் க்ஷேமத்தைவிரும்புவாயாகில் இவ் விதமிருக்கவேண்டும். இவ்விதக்குணங்களுக்கு மாறுபாடாயிருக் கும் நரபதி அளவில்லாதபயமடைவான். இவ்விதங்கூறப்பட்ட இக் குணங்கள்யாவற்றையும் கூறியபடி அனுஷ்டிக்கும் அரசன் இங்கு க்ஷேமங்களை அனுபவிப்பதுடன் இறந்தபின் ஸ்வர்க்கலோகத்திலும் பெருமைபெறுவான்" என்றுசொன்னார். பீஷ்மருடைய இவ்வுப தேசவசனத்தைக்கேட்ட யுதிஷ்டிரர் [1] பீமன்முதலிய பாண்டவர்க ளால் சூழப்பெற்றுப் பிதாமஹரானபீஷ்மரை அப்பொழுதுவந்தனஞ் செய்தார். அறிவுள்ள யுதிஷ்டிரர் அவருபதேசித்த இவ்விதிகளையும் அங்ஙனமே செய்தார்.

## எழுபத்தோராவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், சிந்தையில்லாமலிருக்கவும் தர்மத்தவறுதலில்லாம லிருக்கவும் உபாயத்தை உபதேசித்தது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! பிரஜைகளைப்பாதுகாத்துவரும் அரசன், மனத்தில்சிந்தையென்னும் பந்தமில்லாமலிருப்பது எங்ங னம்? தர்மத்தில்தவறுமலிருப்பது எங்ஙனம்? இவ்விரண்டையும் என க்கு உபதேசிக்கவேண்டும்" எனக்கேட்டனர்.

பீஷ்மர், "ஓ! அரசனே! சுருக்கமாகவே சாச்வதமானதர்மங் களை உனக்கு உபதேசிக்கிறேன். தர்மங்களை விரிவாகக்கூறுவது எப்பொழுதும் முடிவுபெறாது. தர்மத்தில்நிலைபெற்றவர்களும் சாஸ் திரங்களைக் கற்றவர்களும் நியமத்துடன் தேவதைகளை உபாஸிப்பவர்க ளும் நற்குணமுள்ளவர்களும் பூஜ்யர்களுமானபிராம்மணர்களை நீ உன் வீட்டில்வஸிக்கும்படி செய்துகொள்ளவேண்டும். முதலில் எதிர் கொண்டுசென்று கால்களைப்பிடித்து வணங்கினபின்பு புரோஹிதரை முன்னிட்டுக் காரியங்களையெல்லாம் செய்யவேண்டும். தர்மகாரியங் களைச்செய்து சுபகர்மங்களையும் நடத்திப் பிராம்மணர்களைக்கொண்டு

---

1 இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது

காரியஸித்தியையும் ஜயத்தையும் ஆசீர்வாதத்தையும் அனுக்கிரகிக்கச் செய்யவேண்டும். ஓ! பாரத! கபடமில்லாமையும் தைரியமும் அறிவும்பொருந்திக் காமக்குரோதங்களைவிலக்கி அறம்பொருள் இரண்டையும் அடையவேண்டும். காமக்குரோதங்களைமுன்னிட்டுப் பொருளைத்தேடவிரும்பும் அவிவேகியான அரசன் தர்மத்தைஇழப்பதுடன் பொருளையும்அடையமாட்டான். இது தர்மந்தவறாமலிருக்க உபாயமாகும். லோபிகளையும் மூர்க்கர்களையும் அர்த்தகாமங்களின்மேலவாமல் ஆசையற்றவர்களும் நல்லஅறிவுள்ளவர்களுமான யோக்யர்களை எல்லாக்காரியங்களிலும் நியமிக்கவேண்டும். காரியங்களில் ஸாமர்த்தியமில்லாத அவிவேகிக்குக் காரியங்களில் அதிகாரங்கொடுத்தால் அவன் காமக்குரோதங்களையடைந்து தனதிஷ்டத்திற்காகத் தப்புவழியிற் சென்று பிரஜைகளைத் துன்பப்படுத்துவான். சுத்தமான ஆறிலொரு பாகம்வரியும் குற்றவாளிகளுக்குவிதிக்கும் தண்டமும் சாஸ்திரத்திற்கொத்ததான மற்றுமுள்ளவரியுமாகிய இவைகளால் பொருள்வரவை விரும்பவேண்டும். (கப்பம்கொடுத்தமிச்சம் பிரஜைகளுக்குப் போதாதகாலத்தில்) நியாயமாக விதிப்படிவாங்கியதும் தர்மத்தைவிட்டு விலகாததுமானகப்பத்தை அவர்களுக்குத் திரும்பக் கொடுக்கச்செய்து அரசன் சோம்பலின்றி யோகக்ஷேமத்தை நடத்துவிக்கவேண்டும். ரக்ஷிப்பவனும் கொடுப்பவனும் தர்மத்தில் நிலைபெற்றவனும் ஆலஸ்யமும்காமமும்த்வேஷமுமில்லாதவனுமான அரசனிடம் மனிதர்கள் பிரீதியுடனிருப்பார்கள். [1]ஆகையால் தர்மமான லாபப்படி பொருள்வரவை நீ விரும்பவேண்டும். விசேஷமாகச் சாஸ்திரப்பயிற்சியில்லாத அரசனுக்கு அறம்பொருளிரண்டும் நிலைப்பதரிது. [2]பொருளைப் பெரிதாகநினைக்கும்அரசன் தர்மங்களைஅடையாததுடன் பொருளையும் அடையமாட்டான். அவன் தேடியதிரவியம்யாவும் வேண்டாவிடத்திலழிவடையும். அவிவேகத்தால் பிரஜைகளைச் சாஸ்திரங்களில் கூறப்படாதவரிகளால் துன்பப்படுத்தும் அரசன் அப்பொருள் மூலமாகவே தானே தனக்கும் துன்பத்தைச்செய்துகொள்வான். பாலைவிரும்பியமனிதன் பசுவின்மடியை அறுத்தால் பாலைஅடையமுடியாததுபோல நீதிக்குவிரோதமாகப் பீடிக்கப்படும் ராஜ்யம் வளர்ச்சியடையாது. புல்லும் தண்ணீரும் ஆதரவும் இனியசொல்லும் கொண்டு கறக்கும் பசுவைக் காத்துவரும் மனிதன் எப்பொழுதும் பாலை

---

1 'ஆகையால், நீ அதர்மத்தாலும் லோபத்தாலும் பொருள்வரவை விரும்பவேண்டாம்' என்பது பாடாந்தரம்.

2 இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

யடைவதுபோல விதிப்படி ராஜ்யத்தைப் பரிபாலித்துவரும் அரசன் பயன்பெறுவான். நியாயப்படி ரக்ஷிக்கப்பட்டு அனுபவிக்கப்படும்ராஜ்யம் எப்பொழுதும் ஒப்பற்றகோசங்களின் விருத்தியை உண்டுபண்ணும். ஓ! யுதிஷ்டிர! அரசனால் நன்குபரிபாலிக்கப்படும்பூமியானது திருப்தியுள்ளதாயார் பாலைப்பெருகச்செய்வதுபோலத் தான்யத்தையும் ஸ்வர்ணத்தையும் சேர்ந்தவர்களிடமிருந்தும் பிறரிடமிருந்தும் எப்பொழுதும் பெருகச்செய்யும். ஓ! அரசனே! [1]மாலைகட்டுபவனுக்கொப்பாக இரு; கரிகளைச்சேர்ப்பவனுக்கொப்பாக இராதே; அவ்விதமிருந்து பரிபாலித்துவந்தால் நெடுங்காலம் ராஜ்யத்தையனுபவிக்கச் சக்தியுள்ளவனாவாய். பகையாளியின்சேனையை எதிர்த்துச்செல்லுவதால் உனக்குப் பொருளழிவுநேரிடுமானால் அப்பொழுது பிராம்மணனல்லாதவர்களிடம் நன்மொழிகூறிப் பொருளைத்தேடவிரும்பவேண்டும். ஓ! பாரத! முடிவானகஷ்டதசையில்கூடப் பொருளுள்ள பிராம்மணனைக்கண்டு உன்மனம் ஆசையால்சலிக்கவேண்டாம். நீ விருத்தியடைந்திருக்கும் காலத்தில் இவ்விஷயத்தில் சொல்லவேண்டுமோ? உன்சக்திக்கும் அவர்களது தகுதிக்கும் தக்கபடி நீ அந்தணர்களுக்குப் பொருளை அளிக்கவேண்டும். இவ்விதம் நன்மொழிகூறிப் பரிபாலித்துவரும் நீ ஜயிக்க அரிதான ஸ்வர்க்கத்தையும் அடைவாய். ஓ! குருநந்தன! இவ்விதம் தர்மவழிவழுவாத ஒழுக்கத்துடன் நீ பிரஜைகளைப் பரிபாலனஞ்செய். பாண்டுவின்குமாரனான யுதிஷ்டிர! இவ்விதம் ஜாக்ரதையுள்ளவனாகத் தர்மமானவியவஹாரத்துடன் பிரஜைகளைப் பரிபாலித்துவந்தால் மனக்கவலையென்னும் பந்தத்திற்கு வசப்படாமலிருப்பதுமன்றி ஸ்வர்க்கத்தைத்தரத்தக்க புண்யத்தையும் நிலையானகீர்த்தியையும் பெறுவாய். பிரஜைகளைக்காப்பதும் பிராணிகளிடம்பெருங்கருணைபுரிவதும் அரசர்களுக்கு மிக்க உத்தமதர்மமாகும். அக்காரணம் பற்றியே தர்மமறிந்தபெரியோர்கள் பாலனத்தில்முயற்சியுள்ள அரசனுக்குப் பிராணிகளிடம் கருணைபுரிவதே பெரியதர்மமென்று கருதுகிறார்கள். அரசன் ஒருநாள் பயத்தினினும் பிரஜைகளைப்பாதுகாவாத பாபத்தைச்செய்வானாகில் ஆயிரம்வருஷங்கள் நரகத்தை அனுபவித்து அப்பாபத்தின் முடிவை அடையவேண்டும். ஒரு நாள் தர்மப்படி பிரஜாபாலனமென்னும் புண்யத்தைச் செய்த அரசன் தேவலோகஞ்சென்று பதினாயிரம்ஆண்டுகள் அந்தப் புண்ணியத்தின்பயனைப் புஜிப்பான். சிறந்தவைகளானயாகத்தையும்

[1] மாலைகட்டுகிறவன் புஷ்பத்திற்காக மரத்தைவளர்ப்பான். கரியைச் சேர்ப்பவன் கரிக்காக மரத்தைவெட்டிச் சுட்டுவிடுவான்.

அத்யயனத்தையும் தவத்தையும்செய்தவன் எத்தனை உலகங்களை ஜயிப்பானோ அவைகளைத் தர்மப்படி பிரஜைகளை ஒருக்ஷணம்பரிபாலித்த அரசன் அடைவான். ஓ! கௌந்தேய! இவ்விதமான தர்மத்தை நல்ல முயற்சியுடன் பரிபாலனஞ்செய். பாண்டவ! இவ்விதஞ்செய்வதால் புண்ணியத்தின்பயனையடைந்து [1]சிந்தையென்னும் பந்தத்திற்சேராமல் ஸ்வர்க்கலோகத்தில் மிகப்பெரிதான ஸம்பத்தையுமடைவாய். இப்படிப்பட்ட உத்தமதர்மங்கள் அரசனல்லாதவர்களுக்குச் சம்பவியாவாகையால் அரசனொருவனன்றி மற்றவன் இத்தகையபுண்ணியத்தின்பயனை அடையமுடியாது. ஆகையால், அவ்வித அரசனான நீ தைரியத்துடன் ராஜ்யத்தை அடைந்து தர்மப்படி பரிபாலனஞ்செய். ஸோமயாகத்தால் இந்திரனையும் அவரவர்களின் இஷ்டத்தைச்செய்வதால் ஸ்நேஹிதஜனங்களையும் திருப்திசெய்வி" என்றுசொன்னார்.

## எழுபத்திரண்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(புரோஹிதராயிருக்கத்தக்க பிராம்மணருடைய குணங்களும் நான்குஜாதிகளின்தாரதம்யமும் கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! அரசனுடையகாரியாகாரியங்களைவிசாரிக்கவும் செய்யவும் ஸாமர்த்தியமுள்ள பிராம்மணன் எவ்விதக்குணமுள்ளவனென்பதை எனக்குச் சொல்லவேண்டுகிறேன்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"ஓ! அரசனே! ஸாதுக்களைரக்ஷிக்கவும் அஸாதுக்களைத் தூரவிலக்கவும்செய்யத் திறமையுள்ளபிராம்மணனை அரசன் தனக்குப் புரோஹிதனாகச்செய்துகொள்ளவேண்டும். இவ்விஷயத்திலும் இளையின்புத்திரனான புரூரவஸுக்கும் வாயுவுக்கும் நடந்தஸம்பாஷணையான இப்பழையஇதிஹாஸத்தை எடுத்துச்சொல்லுகிறார்கள். புரூரவஸ், 'ஓ! வாயுபகவானே! பிராம்மணன் எங்கிருந்துண்டானான்? மற்ற மூன்றுஜாதிகளும் எங்கிருந்துஜனித்தன? எந்தக்காரணத்தால் அந்தணன் சிறந்தவனாகிறான்? அதனை எனக்கு விரித்துக்கூறவேண்டும்' எனக்கேட்டனன். வாயு, 'ஓ! அரசர்களிற்சிறந்தவனே! பிரம்மதேவரின் முகத்திலிருந்து பிராம்மணன் சிருஷ்டிக்கப்பட்டான். அவர்கைகளிலிருந்து க்ஷத்திரியனும் துடைகளிலிருந்து வைசியனும் சிருஷ்டிக்கப்பட்டார்கள். ஓ! பரதச்ரேஷ்டனே! பிறகு மூன்று

[1] இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

வர்ணத்தார்களுக்கும் பணிவிடைசெய்யவேண்டி நான்காவது ஜாதியான சூத்திரனைத் தம்கால்களிலிருந்து பிறப்பித்தார். பிராம்மணன் பூமியில்பிறக்கும்போதே எல்லாப்பிராணிகளுக்கும் ஈசனும் தர்மமென்னுங்கோசத்தை ரக்ஷிக்கச் சக்திபெற்றவனும் பிறக்கிறான். ஓ! அரசகுமாரனே! இவ்வுலகிற்காணப்படும் பொருளனைத்தும் தர்மத்துடன் சேர்ந்த நற்காரியமும் பிராமணனுக்குச்சொந்தமாகும். பிறகு பிரம்மதேவர் தண்டஞ்செலுத்திப் பூமியை ஆளவும், ப்ரஜைகளைப் பாதுகாக்கவும் சக்திபெற்றவனாக இரண்டாவதுஜாதியான க்ஷத்திரியனைப் படைத்தார். வைச்யன் திரவியத்தாலும் தான்யத்தாலும் மூன்று வர்ணத்தார்களையும் போஷிக்கவேண்டுமென்பதும் சூத்திரன் இவர்களுக்குப் பணிவிடைசெய்ய வேண்டுமென்பதும் பிரம்மதேவரின் கட்டளை' என்று சொன்னார்.

புரூரவஸ், 'ஓ! வாயுபகவானே! இப்பூமியானது தனங்களுடன் தர்மப்படி பிராம்மணனுடையதா? அல்லது க்ஷத்திரியனுடையதா? இதுயாருடையதென்பதை எனக்குத்தெளிவாயுரைக்கவேண்டுகிறேன்' என்றுசொல்ல, வாயுபகவான் சொல்லத்தொடங்கினார். 'இப்பூமியிலுள்ளபொருள், தான்யம், ஸுவர்வணம், ஸ்திரீகள், ரத்தினங்கள், வாஹனம், மற்றுமுள்ளசிறந்த மங்களத்ரவ்யங்களாகிய பொருள்கள்யாவும் முதலில்பிறந்தகாரணத்தாலும் உத்தமப்பிறவியாகையாலும் பிராம்மணனைச்சேர்ந்தனவென்று தர்மமறிந்தோர்கள் அறிவிக்கிறார்கள். பிராம்மணன்புஜிப்பதும் உடுப்பதும் கொடுப்பதும் யாவும் அவனுக்குச்சொந்தமாகும். பிராம்மணன் எல்லாஜாதிகளுக்கும் குருவாகவும் முதலிற்பிறந்தவனாகவும் உத்தமனாகவும் ஆகிறான். [1] ஸ்திரீயானவள் பதியில்லாவிட்டால் பதியினுடன்பிறந்தவனைப் பதியாகச்செய்துகொள்வதுபோலப் பூமியானது பிராம்மணனுக்கடுத்தபிறப்பாகையால் க்ஷத்திரியனைப் பதியாகச்செய்துகொள்ளுகிறது. இது முதன்மையானவிதியாகையால் ஸங்கடகாலத்தில் இதற்கு வேறானவிதியுண்டு. தர்மத்தால் ஸ்வர்க்கலோகத்தில் உத்தமபதத்தைத்தேடுவாயாகில் உன்னால்ஜயிக்கப்படும் பூமியாவையும் சாஸ்திரமறிந்தவனும் நல்லநடைபொருந்தியவனும் தர்மமறிந்தவனும் தவமுள்ளவனும் தானதர்மத்தில் த்ருப்தியுள்ளவனும் பொருளில் பேராசையில்லாதவனுமாயிருப்பதுடன் அரசனின் எல்லாவிஷயத்திலும் நிறைந்த புத்தியுள்ளவனாகச்செய்யும் பிராம்மணனிடம் அறிவிக்கவேண்டும். நற்குலத்திற் பிறந்தவனும் நல்லஅறிவுள்ளவ

1 இது கலியில் விலக்கப்பட்டது.

னும் அடக்கமுள்ளவனுமான அந்தணன் ஆச்சரியமானமொழியைக் கூறி அரசனை க்ஷேமமடையும்படிசெய்வான். மிக்கஅறிவுள்ளஅரசன் க்ஷத்ரியர்களுக்குரிய தர்மவிரதத்தில் உறுதியுள்ளவனும் அகங்காரம் பேசாமல் பெரியோர்கள்வசனத்தைக்கேட்க விருப்பமுள்ளவனுமா யிருந்துகொண்டு பிராம்மணன்உபதேசிக்குந்தர்மத்தை நடத்திவருவானனால் அதனால் உலகில்புகழ்பெற்று நெடுங்காலம்நிலைத்தகீர்த்தியும்பெறுவான். அவ்விதமுள்ள அரசனின் தர்மம்அனைத்துக்கும் அவனுடையபுரோஹிதன் பாகமுள்ளவனுவான். இப்படியே அரசனையும் ராஜநீதியில்பண்டிதரும் வித்வான்களோடுகூடினவருமான அவன் புரோஹிதரையும் ஆச்ரயித்தவர்களும் எவ்விதப்பயமுமின்றி நல்ல நடையுடன் தம்தர்மத்தில்நிலைபெற்றவர்களுமான ராஜ்யத்திலுள்ள எல்லாப்ரஜைகளும் அரசனால் நன்குபரிபாலிக்கப்பட்டு எவ்விதத்தர்மத்தைச்செய்கிறார்களோ அந்தத்தர்மத்தின் நாலிலொருபாகத்தை அரசனடைவான். தேவர்களும் ரிஷிகளும் பிதிருக்களும் கந்தர்வர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களுமாகிய இவர்களின்ஜீவனத்திற்குக் காரணமான யாகமென்பது அரசனில்லாததேசத்தில் நடைபெறாது. தேவர்களும் அங்ஙனமே பிதிருக்களும் இவ்வுலகில்கொடுக்கப்படும்ஹவிஸினால் ஜீவிக்கிறார்கள். அவர்கள் ஜீவிக்கும்தர்மத்தின் யோகக்ஷேமங்கள் அரசனிடம் நிலைபெற்றிருக்கின்றன. வெயிலில்துன்பப்பட்டவன் நிழலிலும் ஜலத்திலும் காற்றிலும் ஸுகத்தையடைகிறான். குளிரில் கஷ்டப்பட்டவன் அக்நியிலும் வஸ்திரத்திலும் வெயிலிலும் ஸுகமடைகிறான். மனமானது சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தங்களிற் சந்தோஷிக்கிறது. இவ்வாறான எல்லாப்போகங்களிலும் பயமடைந்தமனிதன் ஸுகமடைகிறதில்லை. ஆகையால், அபயமளிப்பவனுக்கே மிகவும்பெரியபயனுண்டாகும். உயிரைக்கொடுப்பதற்கொப்பானதானம் மூவுலகங்களிலுங்கிடையாது. ஆகையால், அரசன் இந்திரனும் யமனும் தர்மதேவதையுமாக ப்ராணிகளைப் பரிபாலிக்கிறான். இந்தஉலகம் யாவும் அரசனால்வஹிக்கப்படுகின்றது' என்றுசொன்னார் " என்றார்.

## எழுபத்துமூன்றாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், புரோஹிதருடைய லக்ஷணமுதலியவற்றையும் புரூரவஸுக்கும் கச்யபருக்கும் நடந்த ஸம்பாஷணையையும் யுதிஷ்டிரருக்குக்கூறியது.)

யுதிஷ்டிரர், " ஓ! பிதாமஹரே! அரசன் எவ்விதவர்ணமுள்ளவரும் குணமுள்ளவருமானபிராம்மணரைப் புரோஹிதராகச்செய்து

கொள்ளவேண்டுமென்பதை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"அரசன் அறம்பொருள்களைச்சேர்ப்பது மிக்ககடினமென்றறிந்து பொன்னிறமாவது செந்நிறமாவது கருநிறமாவது உடையவரும் நோயற்றவரும் ஸுகமுள்ளவரும் கோபமில்லாதவரும் ஆசையில்லாதவரும் எல்லாவிஷயங்களினின்றும் இந்திரியங்களைவென்றவரும் பலசாஸ்திரங்களைக்கற்றவரும் அறிவுள்ளவருமான பிராம்மணனைச் சீக்கிரம் புரோஹிதராகச் செய்துகொள்ளவேண்டும். ஓ! அரசனே! தர்மபுத்தியுள்ளவரும் மந்த்ரசக்தியுள்ளவருமானபுரோஹிதர் எந்த அரசர்களிடமிருக்கிறரோ அவர்கட்கு அறம்பொருளின்பங்கள்பயன் படுவதுதிண்ணம். ஓ! யுதிஷ்டிர! இவ்விஷயத்தில் சுக்ராசாரியர் கூறினசுலோகங்களைத் தெரிந்துகொள்.(அவற்றின்பொருள்:—)'புரோஹிதனில்லாத அரசன் எச்சிலுக்கொப்பாவான். ராக்ஷஸர்களும் அஸுரர்களும் பிசாசர்களும் ஸர்ப்பங்களும் பறவைகளும் பகையாளிகளும் புரோஹிதனில்லாதஅரசனைக்கொல்லுவார்கள்' என்பது. அதர்வவேதமறிந்தபிராம்மணன் எவ்விதயாகங்களிலும் அரசனுக்குப் பிரம்மத்வமென்னும் வேலையைச்செய்யவேண்டும். அதர்வவேதத்திற்சொல்லியபடி எல்லாக்கர்மங்களையும் செய்விக்கவேண்டும். இகழ்ச்சியான கர்மங்களையும் பெரியஉத்பாதங்களையும் தோஷங்களையும் இஷ்டமானசுபகர்மங்களையும் அந்தப்புரத்திற்குரியவேலைகளையும் எப்பொழுதும் அரசனுக்கு அறிவிக்கவேண்டும். புரோஹிதன் அரசனுக்குவிருப்பமுள்ள ஸங்கீதம்நாட்டியமுதலியகாரியங்களில் செய்யத்தக்கதை அறிவிப்பதுடன் வைசுவதேவபலியையும் பர்வகாலங்களில் செய்யத்தக்க பெரியசாந்தியையும் தனக்கும்அரசனுக்கும் ஹிதமும் பிரியமுமான ருத்ரதேவனைக்குறித்த ஸஹஸ்ரஹோமத்தையும் செய்யவேண்டும். அரசனுக்குள்ள ஏழுவிதபாபங்களென்னும் மலங்களைப் புரோஹிதன் அடைவான். அவைகளாவன: [1]அமைச்சர்கள் கெட்டகாரியம்செய்வதும், [2]மந்த்ரிகள்உதாஸீனமாயிருப்பதும்,வியவஹாரஅதிகாரிகள் தம்நீதியைவிட்டுப் பரிதானம்வாங்குவதும், குற்றமில்லாதவனைத்தண்டிப்பதும், குற்றமுள்ளவனைவிடுவதும், யுத்தமில்லாத இடத்தில்ஹிம்ஸிப்பதும், கெட்டஸேவகர்களால் பிராணிகளுக்கு நேரிடும்துன்பமுமாம். அதர்வவேதத்தின் விதிகளையறிந்த புரோஹிதன் ருத்ரஹோமங்களாலும் மஹாசாந்தியாலும் கிருதகம்

---

1 ஸமீபத்திலிருக்கும் அதிகாரிகள்.

2 மந்த்ராலோசனை செய்கிறவர்கள்.

பலமென்னும்கர்மத்தினாலும் அரசனை இவ்வேழுமலங்களினுமிருந்து விடுவிக்கவேண்டும். இவ்விதமான ஏழுமலங்களினின்றும் விடுதலையடைந்தவனும் பிரஜைகளைப்பரிபாலிப்பதில் விருப்பமுள்ளவனுமான அரசன் அமைச்சர்களுடனும் புரோஹிதர்களுடனும் தேவலோகமடைவான். ஓ! பெரியபுத்தியும் பெரியபாக்யமுமுள்ள கௌரவராஜனே! இந்தப்புரோஹிதத்தன்மையைப்பற்றியே தேவரும் குருவுமானபிருஹஸ்பதியால் இந்திரனுக்குஉபதேசிக்கப்பட்டனவும் ஹிதமும் சுபமுமானகவிகளைத் தெரிந்துகொள். (அவற்றின்பொருளாவது:—) 'அரசர்களுக்குவேண்டிய [1]சாந்திகம் [2]பௌஷ்டிகம் [3]ஆபிசாரம்என்றமூன்றுஇடங்களுக்குந்தக்கவிதிகள் ரிக்வேதத்திலும் ஸாமவேதத்திலும் சுக்லயஜுர்வேதத்திலும் கூறப்படவில்லை. யாகங்களுக்கு நன்மையை விரும்பியவரும் பிரம்மஜ்ஞானம் பெற்றவர்களுள் மிகச்சிறந்தவருமான யாஜ்ஞவல்க்யர் பிரபுவானபிரம்மதேவரின் அபிப்பிராயப்படி அம்மூன்றுவேதங்களையும் சபித்திருக்கிறார். ஆகையால், ரிக்வேதம் ஸாமவேதம் சுக்லயஜுர்வேதம் இவைகளை (தனித்தனி) கற்றமூன்றுபேர்களையும் அரசன் புரோஹிதராக வரிக்கக்கூடாது. ரிக்வேதி புரோஹிதராயிருந்தால் ராஜ்யத்திற்குநாசமும் ஸாமவேதி புரோஹிதராயிருந்தால் அரசனுக்குநாசமும் சுக்லயஜுர்வேதிபுரோஹிதராயிருந்தால் ஸேனைகளுக்குநாசமும் ஸம்பவிக்குமெனக்கூறப்பட்டிருக்கிறது. பிராம்மணனல்லாத ஜாதிகளிடமிருக்கும் சுக்லயஜுர்வேதத்திலுள்ள மந்திரங்களையும் எப்பொழுதும் அரசன் சாந்திகம் பௌஷ்டிகமென்னுங்கர்மங்களில் உபயோகப்படுத்தக்கூடாது. பிராம்மணனுக்கும் க்ஷத்ரியனுக்கும் நான்குவேதங்களையும் கற்பதில் விரோதமில்லையென்று பிராம்மணர்கள் அறிவிக்கிறார்கள். ஆகிலும் இவ்வேதங்களைக்கற்ற பிராம்மணனொருவனே அரசனுடையபுரோஹிதபதத்திலிருக்கத் தக்கவனாவான். [4]க்ஷதத்திலிருந்து ரக்ஷணத்தைச் செய்கிறவன்எவனோ அவன் நான்குஜாதியைவிட்டு விலகினவனாயிருந்தாலும் அவனே க்ஷத்ரியனெனச்சொல்லப்படுவான். ஜாதியால் க்ஷத்ரியன் க்ஷத்ரியனல்லன். அதர்வவேதத்திற்கூறிய மந்திரங்களாற்செய்யத்தக்ககர்மங்கள் புரோஹிதரைச்சேர்ந்தனவென விதிக்கப்படுகின்றன. த்ரேதாக்நிகளிலும் க்ருஹ்யாக்நியிலும் செய்யத்தக்க கர்மங்கள்யாவும் பிராம்மணர்முதலிய மூன்றுஜாதிகளுக்கும்

1 தனக்குள்ள துன்பங்களை விலக்கத்தக்ககர்மம்.

2 தன்ராஜ்யத்திற்கும் தனக்கும் வளர்ச்சியைக் கொடுக்கத்தக்ககர்மம்.

3 பகையாளிகளைக் கொல்லத்தக்ககர்மம். 4 துன்பம்.

பொதுவாக விதிக்கப்படுகின்றன. ராஜதர்மங்களில் பிரவிருத்தித்தவர்களுக்கு அவர்களின்ஹிதத்திற்குவேண்டிச் சாந்திகம் பௌஷ்டிகம் ஆபிசாரம்என்ற மூன்றுகர்மங்களையும் செய்விக்கவேண்டும். அக்நிஷ்டோமமுதலிய அரசர்கள்செய்யத்தக்க யாகங்கள் குற்றமுள்ளனவாகுமானால் யாகங்களைச் செய்விக்கும் பிராம்மணர்கள் நற்பயனைப்பெறமாட்டார்கள். அரசர்களுக்குப் புரோஹிதத்தன்மையை வஹிப்பவர்கள் இக்குற்றத்திற்குமூலமாகையால், அவர்களும் அவர்களுடன் அரசர்களின்யாகங்களைச் செய்விக்கிறகுற்றமுள்ள ரித்விக்குக்களும் நாசமடைவார்கள். அரசர்களுக்குரிய கர்மங்களைச்செய்யத்தக்க புரோஹிதபதவியைவஹிக்கப் பின்கூறப்படும் லக்ஷணமில்லாத பிராம்மணர்களும் க்ஷத்ரியர்கள் வைசியர்கள்யாவரும் யாஜ்ஞவல்க்யமஹரிஷியால் விலக்கப்பட்டவர்களென்பது மாறாது. அதர்வவேதத்தில்நல்ல ஞானமுள்ளவனும் ஆறுவேதாங்கங்களையுங்கற்றவனும் யாககர்மங்களின்விதியையும் பௌஷ்டிகமென்னும் கர்மங்களின்விதியையும் நன்றாயறிந்தவனும் பதினெட்டுவிதப் பிரிவுகளுள்ள. சாந்திககர்மங்களின் விதியையறிந்தவனும் எவ்விதநோயுமில்லாதவனும் இந்திரியங்களையடக்கினவனும் அடங்கியமனமுள்ளவனுமான பிராம்மணன் புரோஹிதனுயிருக்கவேண்டும். வெண்குஷ்டம், குஷ்டம், க்ஷயம், அபஸ்மாரம், வாதம் இந்தவியாதியுள்ளவர்களையும் பேய்பிடித்தவர்களையும் நிந்திக்கப்பட்டவர்களையும் தூரத்திலிருக்கச்செய்து அரசன் அவர்களுடன்பேசவேண்டும். நோயுள்ளவரை ரித்விக்காகவும் புரோஹிதராகவும் அரசன் வரிக்கக்கூடாது; இதரர்களுக்குப் புரோஹிதம்செய்யாதவரையும் எவர்புரோஹிதராயிருப்பதில் மரணமும் பிரஷ்டத்வமும் ஸந்யாஸமும் யுத்தத்தில் அபஜயமும் நேரிட்டிருக்கின்றனவோ அவரையும் ஒருபோதும்புரோஹிதராகச்செய்துகொள்ளக்கூடாது. அநுகூலமானநக்ஷத்திரத்தில் பிறந்தவனும் அரசாளத்தக்க அதிருஷ்டம் பொருந்தியவனும் ராஜநீதிசாஸ்திரத்தில் நல்லபயிற்சியுள்ளவனுமான புரோஹிதன் அரசனுக்குச் சிறந்தவன். அசுபங்களானசகுனங்கள் உத்பாதங்கள் இவைகளின்பயனையறிந்தவனும் பகையாளியின்பக்ஷத்தின் குறையைத்தெரிந்தவனுமான புரோஹிதன் அரசனுக்குச் சிறந்தவனுவான். இத்தகைய குணம்பொருந்தியவனில்லாவிட்டால், சுக்லயஜுர்வேதி கிருஷ்ணயஜுர்வேதி ரிக்வேதி ஸாமவேதிஇவர்களும் நீதிசாஸ்திரத்தில் நல்லபயிற்சியும் அதர்வவேதத்தில் பாண்டித்தியமும்பெற்றவர்களானால் புரோஹிதர்களாயிருக்கலாம். க்ஷத்ரியதர்மத்திற்குவிரோதமும் ஹிம்ஸையைக்கூறுவனவும் யாகத்தைச்செய்யும்

பிராம்மணர்களால் சொல்லப்படுவனவுமான மந்திரங்களைப் புத்திமானை அரசன் உச்சாரணஞ்செய்யக்கூடாது' என்பது. பிரஜைகளின் குணங்களும் புரோஹிதரின்குணங்களும் ஒன்றையொன்று அநுஸரித்துவிளங்கும். நற்குணம் பொருந்திய அரசனையடைந்தயாவரும் மிகவும்சுகித்திருப்பார்கள். அரசனும்புரோஹிதனும் ஸமபுத்தியுள்ளவர்களும் ஒருவருக்கொருவர்நல்லநேசமுள்ளவர்களும் நம்பிக்கையுள்ளவர்களும் நல்லதவமுள்ளவர்களும் தர்மத்தில்உறுதிபெற்றவர்களுமாயிருப்பார்களானால் பிரஜைகளையும் தேவர்களையும் பித்ருக்களையும் ஸந்தானங்களையும் வளரச்செய்வார்கள். பிராம்மணரான புரோஹிதரும்அரசனும் ஒருவருக்கொருவர் மர்யாதையுடனிருப்பார்களானால் பிரஜைகள் ஸுகித்திருப்பார்கள். அவர்கள் ஒருவரையொருவர் அவமதிப்பார்களானால் பிரஜைகள் நிச்சயம் நாசமடைவார்கள். எல்லாப்பிரஜைகளுக்கும் பிராம்மணனும் க்ஷத்ரியனுமே மூலமென்று சொல்லப்படுகிறார்கள். ஓ! யுதிஷ்டிர! இவ்விஷயத்திலும் [1]ஐலனுக்கும் கச்யபருக்கும்நடந்த ஸம்பாஷணையென்று எடுத்துச்சொல்லப்படும் இப்பழையஇதிஹாஸத்தைத் தெரிந்துகொள்.

ஐலன், 'க்ஷத்ரியஜாதியானது பிராம்மணனை மரியாதையின்றி விலக்குங்காலத்திலும் பிராம்மணஜாதியானது க்ஷத்ரியனைவிலக்குங் காலத்திலும் [2](இவ்விதவிரோதத்தால் எவர்கள் பலமுள்ளவர்களாவார்கள்?) இவ்விரண்டில் எந்தஒன்று மற்றொன்றின்பலத்தைத் தொடர்ந்துநிற்கும்? அவ்விதப்பலத்தை அடைந்து எவர்கள் நிலைபெற்றிருப்பார்கள்?' என்றுகேட்டான். கச்யபர், 'க்ஷத்ரியன் பிராம்மணனை விரோதிப்பானாகில் அந்தக்ஷத்ரியனின்ராஜ்யம் நாசமடையும். அவ்விதவிரோதத்தால் திருடர்கள் பலமடைவார்கள். ஸாதுக்கள் பிராம்மணர்களைவிரோதிக்கும் க்ஷத்ரியனைக் கெட்டஜாதியிலுண்டானவனென்று அறிகிறார்கள். பிராம்மணனைவிலக்கின இவ்விதக்ஷத்ரியர்களுக்கு வேதமும் ஸந்ததிகளும் வளரமாட்டா. இவர்களுடையபசுக்களும் நாசமடையும்; இவர்கள் யுத்தத்தில் ஜயம்பெறமாட்டார்கள். இவர்களுடையபுத்ரர்கள் வேதத்தை அத்யயனஞ்செய்யமாட்டார்கள். பிராம்மணர்களைவிரோதிக்கும் க்ஷத்ரியர்களுடையவீட்டில் ஒருபோதும் பொருள் விருத்தியடையாது. அவர்களின்ராஜ்யத்திலுள்ளவர்கள் அத்யயனம் யாகமுதலிய நற்கர்மங்களைச் செய்யமாட்டார்கள்;

---

1 புரூரவஸ்.

2 மறுமொழியைக் கவனித்தால் இவ்விதப்பொருள்கொள்வதுதான் பொருந்துகின்றது.

திருடர்களாகவும் ஸங்கரஜாதிகளாகவும் ஆவார்கள். க்ஷத்திரியஜாதி பிராம்மணஜாதிக்குக் காரணமாயும் பிராம்மணஜாதி க்ஷத்ரியஜாதிக்குக்காரணமாயுமிருப்பதால் இந்தஜாதிகளிரண்டும் ஒன்றையொன்று பரிபாலிப்பதில் எப்பொழுதும் சேர்க்கையுள்ளனவாகும். இந்தஜாதிகள்இரண்டும் எப்பொழுதும் சேர்க்கையுள்ளனவாயிருந்து பெரிய நிலைமையை அடைந்திருக்கின்றன. புராதனமாகஏற்பட்ட இந்தஜாதிகளின்சேர்க்கை வேறுபடுமானல் உலகமெல்லாம் மிகஅவிவேகமுள்ளதாகும். இவ்வித வேறுபாடுள்ளஸமயத்தில் பெரியகடலில் உடைந்த கப்பல்போலக் கரையைஅடையவிருப்பமுள்ளவன் கரையேற முடியாது. நான்குஜாதிகளும் மிக்கஅவிவேகத்தை அடைவதுடன் பிரஜைகள்யாவும் நாசமடையும். பிராம்மணஜாதியென்னும் விருக்ஷம் நன்குரக்ஷிக்கப்பட்டால் அது ஸுகத்தையும் ஸுவர்ணத்தையும் பொழியும். அது காக்கப்படாமற்போனல் எப்பொழுதும் துக்கத்தையும் நரகத்தையும் பொழியும். எப்போது வேதமோதும்பிராம்மணன் இடையூறுகளால் அவ்வேதத்திலிருந்து விலக்கப்பட்டுத் தன்னைக்காக்கத்தக்க க்ஷத்திரியனில்லாதகாரணத்தால் தன்னைக்காக்கக்கருதி அவ்வேதத்தையே வேண்டுகிறானே அக்காலத்தில் தெய்வம் மழைபெய்விப்பது ஆச்சர்யம். [1] பொறுக்கமுடியாத துர்ப்பிக்ஷம் மஹாமாரிமுதலிய துன்பங்கள் அப்பொழுது பிரஜைகளைப் பிடிக்கும். பாபியானவன் ஸ்திரீயையும் பிராம்மணனையும்கொன்றுவிட்டு அதை ஸபையிலும் பெருமையாகப் பேசிக்கொள்வான்; அரசன்அருகிலும் பயப்படமாட்டான். அந்தக்காரணத்தால் அரசனுக்குப்பயம் நேரும். பாபிகள் வரம்பின்றிப் பாபத்தைச்செய்யும்போது இந்த அரசனும் மிகக்கொடியனவான். பாபிகள் தமது கெட்டகாரியங்களால் அரசனைக் கொடுஞ்செய்கையுள்ளவனகச் செய்துவிடுவார்கள். பிறகு ஸாதுக்கள் அஸாதுக்கள்யாவரையும் அரசன் அடிக்கத்தொடங்குவான்' என்று சொன்னர். ஐலன், 'ஓ! கச்யபரே! (உலகில்) பிராணிகளால் பிராணிகள் அடிக்கப்படுவதாகக் காணப்படுகின்றன. அங்ஙனமிருக்க இந்த அரசன் க்ரூரச்செய்கையுள்ளவனகக் காரணம் யாது? எவ்விதமிருப்பவன் கொடியசெய்கையுள்ளவன்? இவற்றையெல்லாம் எனக்கு உரைக்கவேண்டும்' என்றுகேட்டான். கச்யபர், '(பேய்பிடித்தவன்செய்கையாவும் அப்பேயின்செய்கையாவதுபோல அரசன் அடக்காதகாரணத்தால்) மனிதர்களின் இருதயத்தில்விளங்கும் ஆத்மாவானது, காமம்கோபம்என்னும் மனத்தின்குணங்களால்

[1] இங்கு வேறுபாடம்கொள்ளப்பட்டது.

ஏவப்பட்டு ருத்திரரூபியாய் ஆகாயத்தில் வாயுவால்சூழப்பட்டமேகம் மழைபெய்வதுபோலத் தன்சரீரத்தையும் பிறர்சரீரத்தையும் ஹிம்ஸிக்கிறது. (அதுயாவும் அரசனையே சேர்ந்ததாகும்.) கேடுசெய்யும் ஆத்மா வாயுவிற்கொப்பானதாகவும் அரசன் மேகத்திற்கொப்பான உருவமுள்ளவனாகவும் அறிந்துகொள்ளவேண்டும்' என்றுசொன்னார்.

ஐலன், 'ஆகாயத்தில் வாயுசுற்றிக்கொண்டிருப்பதுபோல ஜீவாத்மா சுற்றிக்கொண்டிருப்பதாயும் அதனுடன்சேர்ந்த மேகம்வர்ஷிப்பதுபோல அரசன் கேடுசெய்வதாயும் மனிதர்களிடம் காணப்படவில்லையே. அவரவர்களின் அவிவேகத்தாலுண்டான விருப்பு வெறுப்புக்களாலன்றோ கொலை செய்யப்படுகிறது? ஆகையால், இஃது எங்ஙனம்?' என்றுகேட்க, கச்யபர், 'ஒருவீட்டைப்பிடித்துஎரியும் அக்நியானது வேகமாய் அந்த க்ராமமுழுமையும் எரிப்பதுபோல அரசனானவன் பிராணிகளுக்கு அவிவேகத்தாலுண்டாகும் காமக்குரோதங்களைச்செய்வித்து அவைகளின் புண்யபாபங்களுடன் சேர்ந்தவனாகிறான்' என்றுசொன்னார். ஐலன், '[1]விசேஷமாகப் பாபஞ்செய்யப்படும்பொழுது பாபமென்னுங்குற்றமானது புண்யபாபங்களின் ஸம்பந்தமில்லாத மனிதனையும் தொடருமானால் யாதுகாரணம்பற்றி மனிதன் புண்யத்தைச்செய்யவேண்டுமென்றும் பாபத்தைச்செய்யக்கூடாதென்றும் சாஸ்திரம்கூறுகிறது?' என்றுகேட்டான். கச்யபர், 'காய்ந்தகட்டையுடன்சேர்ந்த காரணத்தால் ஈரமானகட்டையும் தஹிக்கப்படுவதுபோல, பாபஞ்செய்துமனிதர்களை விலக்காமல் அவர்களுடன் சேரும் காரணத்தால் நேரில்பாபத்தைச்செய்யாதமனிதர்களையும் அவர்களுக்குச்சரியான பாவம் தொடர்ந்துநிற்கும். ஆகையால் எவ்விதத்துன்பமிருந்தாலும் பாபஞ்செய்பவர்களுடன் சேர்வது கூடாது' என்றுசொன்னார். ஐலன், 'இவ்வுலகில் பூமியானது நல்லவர்கள் கெட்டவர்கள்என்ற இரண்டுவிதமனிதர்களையும் தரிக்கிறது; ஸூர்யனும் இரண்டுவிதமனிதர்களையும் தபிக்கச்செய்கிறான்; காற்றும் ஸாதுக்களுக்கும் அஸாதுக்களுக்கும் வீசுகிறது; அங்ஙனமே ஜலமும் இரண்டுவிதமனிதர்களையும் பொறுக்கின்றது. இப்புண்யபாபங்களின்பயன் என்ன?' என்றுகேட்டான்.

கச்யபர், 'ஓ! ராஜகுமாரனே! இவ்வுலகில் ஸாதுக்களுக்கும் அஸாதுக்களுக்கும் இவ்விதம் வேற்றுமையின்றியிருந்தாலும் இறந்த

[1] இங்கு, 'ஆத்மாவானது புண்யம்பாவம் இரண்டுமற்றது' என்பதும், 'அவ்விதக்கர்மங்களுக்கு மூலமான மனத்தின்சேர்க்கையால் ஆத்மாவும் கர்மமுள்ளதுபோலக்காணப்படுகிறது' என்பதும் பழையஉரை.

பின் புண்யஞ்செய்தவனுக்கும் பாபஞ்செய்தவனுக்கும் மேலுலகில் மிக விசேஷமான வேற்றுமையுண்டு. ஜரையும் மரணமும் மற்று முள்ள துன்பமுமில்லாததும் நெய் தேன்முதலிய போக்யவஸ்துக் கள்நிரம்பியதும் அமிருதத்திற்கிருப்பிடமும் பொன்னொளியுள்ளது மான உலகம் புண்ணியத்திற்குரியதாகும். புண்யஞ்செய்தமனிதன் இறந்தபின் அவ்வுலகஞ்சென்று ஸந்தோஷிப்பான். எப்பொழுதும் துன்பமுள்ளதும் பலசோகங்கள் நிறைந்ததும் இருளுள்ளதுமான நரகம் பாபத்திற்குரிய லோகமாகும். பாபஞ்செய்தமனிதன் அவ்வுல கஞ்சென்று பலவருஷங்கள் அங்கு துன்பமுள்ளவனும் நிலையற்ற வனுமாகத் தன்னைப்பற்றித் துக்கமடைவான். ஆகையால் பிராம்மண னுக்கும் க்ஷத்ரியனுக்கும் ஒருவருக்கொருவர் நேரும்விரோதத்தால் பிரஜைகள் பொறுக்கமுடியாததுன்பம் நேரும். இங்ஙனம்தெரிந்து கொண்டு அரசன் பலகல்விகளைக் கற்றவரும் அறிவிற்சிறந்தவருமான பிராம்மணரைப் புரோஹிதராகச் செய்துகொள்ளவேண்டும். அவ் விதப்புரோஹிதரை அடைந்தபிறகுதான் அரசனுக்குப் பட்டாபிஷே கஞ்செய்வது தர்மமென்று விதிக்கப்படுகிறது. பிராம்மணன் தர்மப் படி மற்றயாவருக்கும் முந்தினவனென்று சொல்லப்படுகிறான். வேத மறிந்த பெரியோர்கள் முதலில் பிராம்மணஜாதி ஸ்ருஷ்டிக்கப்பட்ட தென்று அறிவிக்கிறார்கள். ஸ்ருஷ்டியில் முதலில்பிறந்த காரணத் தால் உத்தமமான முதன்மையானது பிராம்மணஜாதியால் அடையப் பட்டது. ஆகையால், அறிவிற்சிறந்த பிராம்மணனுக்கு உத்தமமான விசேஷவஸ்துக்கள் யாவையும் அளிப்பதுடன் அவனை முந்தினமரி யாதைசெய்து எல்லாவிஷயத்திலும் பூஜிக்கவும் வேண்டும். விசேஷ மாகப் பராக்கிரமம்பெற்ற அரசனுக்கும் தவறாமல் இவ்விதம்செய்ய வேண்டியது கடமையாகும். பிராம்மணனால் க்ஷத்ரியனும் க்ஷத்ரிய னால் பிராம்மணனும் பெருமையடையவேண்டும். அரசனுடைய புரோஹிதர் அரசனுக்கும் மற்றுமுள்ள எல்லாவற்றிற்கும் யஜமான ராவார்' என்றுசொன்னார்" என்றார்.

---

எழுபத்துநான்காவது அத்தியாயம்.

ராஜதர்மம் (தொடர்ச்சி.)



(பீஷ்மர், முசுகுந்தசரித்திரத்தைஎடுத்துக்காட்டிப்புரோஹிதரால்அர சருக்கு நேரும் நன்மைகளை யுதிஷ்டிரருக்குக்கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! பிராம்மணன், க்ஷத்ரியன் இவ ர்களுடைய ஸாமர்த்தியமும் புரோஹிதரின்லக்ஷணமும் அவர்பெரு

மையும் உம்மால் உபதேசிக்கப்பட்டன. இப்பொழுது பிராம்மணன் க்ஷத்ரியன் இவர்களின்நிர்ணயத்தைக் கேட்கவிரும்புகிறேன். பிராம்மணனும் க்ஷத்திரியனுமே எல்லாஉலகங்களுக்கும் முக்கியகாரணமாகிறார்கள். ராஜ்யத்தின் யோகக்ஷேமம் அவ்விருவரைக்கொண்டு நிலைபெறவேண்டுமே?" என்றுகேட்க, பீஷ்மர்சொல்லத்தொடங்கினார். "ராஜ்யத்தின் யோகக்ஷேமம் அரசனையும் அரசனுடைய யோகக்ஷேமம் புரோஹிதனையும் சார்ந்துநிற்கும். பிரஜைகளுக்குநேரிடும் துர்ப்பிக்ஷமுதலிய தெய்வக்குற்றத்தை விலக்கத்தக்க புரோஹிதப்பிராம்மணனும் மனிதர்களால்நேரிடும் துன்பத்தைவிலக்கத்தக்க புஜபலமுள்ள க்ஷத்ரியனும் எந்தத்தேசத்திலிருக்கிறார்களோ அந்தத்தேசம் ஸுகித்துவாழும். இதுவிஷயத்திலும் முசுகுந்தராஜனுக்கும் குபேரனுக்கும்நடந்த ஸம்பாஷணையான இப்பழையஇதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். முசுகுந்தனென்னுமரசன் இப்பூமியைஜயித்துவிட்டுத் தன்பலத்தையறியவிரும்பி அளகாபுரிக்குஅதிபதியான குபேரனை எதிர்த்துச்சென்றான். பிறகு விச்ரவஸின்குமாரனான குபேரன் அவனையடிக்கும்படி சிலராக்ஷஸர்களுக்குக் கட்டளையிட்டான். அந்தராக்ஷஸர்களும் அப்பொழுது முசுகுந்தராஜனுடைய ஸேனைகளையெதிர்த்துப் பீடித்தார்கள். பகைவர்களையடக்க வல்லமையுள்ள அந்தமுசுகுந்தராஜன் தன்சேனை அடிக்கப்படவும் அறிவுள்ளவரான தன்புரோஹிதரைவெறுத்து நிந்தித்துப்பேசினான். பிறகு தர்மம்தெரிந்தவர்களிற்சிறந்த வஸிஷ்டரென்னும் அவனுடையபுரோஹிதர் கொடுமையானதவஞ்செய்து அவ்வரக்கர்களைக்கொன்றதுடன் குபேரனிடம் செல்லத்தக்கவழியையும் கண்டுபிடித்தார். பிறகு முசுகுந்தராஜன் குபேரனையெதிர்த்து அவன்ஸேனையையடிக்கும்போது குபேரன் அவ்வரசனைநிந்தித்ததுடன், 'ஓ! அரசனே! பலசாலிகளும் புரோஹிதருள்ளவர்களுமாக உனக்குமுன்னிருந்தஅரசர்கள் உன்னைப்போலிருந்தவர்களில்லை. மிக்கபலசாலிகளும் மிகுதியாகச் சாஸ்திரங்களைக்கற்றவர்களுமான அவ்வரசர்களும் என்னிடம்வந்து ஸுகதுக்கங்களுக்குஈசனான என்னைப் பலவிதமாயுபாஸித்தார்கள். பிராம்மணருடையபலத்தைக் காரணமாகக்கொண்டு மிகவும் மேலானவனாக நீ ஏன்உலாவுகிறாய்? உன்னுடையகையில் பராக்கிரமமுண்டானால் அதை நீ வெளியிடலாம்' என்ற இவ்வசனத்தையும் சொன்னான். பிறகு முசுகுந்தராஜன் கோபங்கொண்டு குபேரனைநோக்கி நீதியுள்ளதும் கோபத்தைவெளியிடாததும் பரபரப்பில்லாததுமான இவ்வசனத்தைச் சொல்லத்தொடங்கினான். 'அளகாபுரியின் அதிபதியே! பிரா

ம்மணன், க்ஷத்ரியன் என்ற இவ்விரண்டு ஜாதியையும் பிரம்மதேவர் ஓரேகாரணமுள்ளனவாக உண்டுபண்ணியிருக்கிறார். வெவ்வேறான பலத்தின் அமைப்புள்ள அவ்விரண்டு ஜாதியும் உலகத்தைப் பரிபாலனஞ் செய்யவேண்டும். தவம், மந்திரம் இவைகளின்பலம் எப்பொழுதும் பிராம்மணர்களிடம் நிலைபெற்றிருக்கும். அஸ்திரபலம், புஜபலம் இவ்விரண்டும் எப்பொழுதும் க்ஷத்ரியர்களிடம் நிலைபெற்றிருக்கும். இவ்விதமுள்ள பிராம்மணனும் க்ஷத்திரியனும் ஒன்றுசேர்ந்து பிரஜைகளின் பரிபாலனத்தைச் செய்துவரவேண்டும். ஆகையால், அதேவிதிப்படி நடந்துவரும்என்னை என்னகாரணத்தினால் இகழ்ச்சியாகப்பேசுகிறீர்?' என்று வினவினான். பிறகு குபேரன், புரோஹிதருடன்கூடின முசுகுந்தராஜனைநோக்கி, 'ஓ! அரசனே! ஈசனால் உத்தரவுகொடுக்கப்படாத ராஜ்யத்தை ஒருமனிதன்பொருட்டு நான் கொடுக்கவும் மாட்டேன்; அவ்வித ராஜ்யத்தை அபகரிக்கவும் மாட்டேன் என்று தெரிந்துகொள். என்னால்கொடுக்கப்பட்ட இப்பூமி முழுமையும் மிச்சமின்றி நீ ஆண்டுவா' என்றுசொன்னான். இவ்விதஞ்சொல்லப்பட்ட முசுகுந்தராஜன், 'ஓ! யக்ஷராஜரே! உம்மாலளிக்கப்பட்ட ராஜ்யத்தை அனுபவிக்க எனக்கு விருப்பமில்லை. என் கைவன்மையால் ஸம்பாதிக்கப்பட்டராஜ்யத்தை நான் அனுபவிக்க விரும்புகிறேன்' என்றுசொன்னான். பிறகு குபேரராஜன் சத்துருக்களை அடக்கும் வல்லமையுள்ளவனும் க்ஷத்திரியதர்மத்தில் நிலைபெற்றவனுமான முசுகுந்தராஜனைக்கண்டு மிகவும் ஆச்சரியமடைந்தான். அந்த முசுகுந்தராஜனும் க்ஷத்திரியதர்மம்விட்டு விலகாதவனாய்த் தன்கைவன்மையினால் ஸம்பாதிக்கப்பட்டபூமியை ஆண்டுவந்தான். எந்த அரசன் இவ்விதமுள்ள பிராம்மணருடையபெருமையையறிந்து அவரை முன்னிட்டுச்செல்லுகிறானோ அவ்வரசன் ஜயம்பெற்று இப்பூமியை அனுபவிப்பதுடன் பெரியகீர்த்தியையும்பெறுவான். பிராம்மணன் எப்பொழுதும் தீர்த்தமுள்ளவனாயும் க்ஷத்திரியன் எப்பொழுதும் ஆயுதமுள்ளவனாயுமிருக்கவேண்டும். உலகிலுள்ளவஸ்துக்கள்யாவும் அவ்விருவர்களையும் அடுத்து நிலைபெறவேண்டும். ஓ! ராஜனே! முக்கியமான இந்தத்தர்மத்தையும் உலகிலுள்ளதர்மத்தின் நாலிலொருபாகத்தையும் கைவிடாமலிரு. ராஜனே! அவ்விதமிருப்பவன் பெரியகீர்த்தியையும் தேஜஸையும் பூமி அனைத்தையும் மேலுலகில் புகழ்ச்சியையும் அடைவான்" என்றுசொன்னார்.

---

## எழுபத்தைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம் (தொடர்ச்சி.)



(பீஷ்மர், அரசர்களின் ஒழுக்கத்தை யுதிஷ்டிரருக்குக்கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! அரசன் எவ்வித ஒழுக்கத்தால் மனிதர்களை மேன்மையடையச்செய்து புண்ணியமான உலகங்களை ஜயிப்பானென்பதை எனக்கு உபதேசிக்கவேண்டும்" எனக் கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"ஓ! பாரத! அரசன் ப்ரஜைகளைப்பரிபாலிப்பதில் உத்ஸாஹமுள்ளவனும் தானம், யாகம், உபவாஸம், தவம்இவைகளைச்செய்யும் ஸ்வபாவமுள்ளவனுமாயிருக்கவேண்டும். ஜனங்கள்யாவரையும் எப்பொழுதும் அரசன் தர்மப்படியும் விடாமுயற்சியுடனும் பரிபாலிப்பதுடன் தானத்தால் தர்மமுள்ளஜனங்களைப் பூஜிக்கவும்வேண்டும். அரசனால்செய்யப்படும் காரியங்களில் ப்ரஜைகளுக்கு ஆதரவுண்டாவது ஸ்வபாவமாகையால், தர்மீமும் அரசனால் பூஜிக்கப்படும்காரணத்தால் உலகெங்கும் பூஜிக்கப்படும். அரசன் சத்துருக்களிடம் எப்பொழுதும் யமன்போலக் கையில்தண்டமெடுத்தவனாயிருக்கவேண்டும்; திருட்டுத்தொழிலுள்ளவர்களை எல்லாவிடத்திலும் அடிக்கவேண்டும். அரசனுக்குத் திருடர்களிடம் பொறுமை ஆகாது. அரசனால் நன்குரக்ஷிக்கப்படும் ப்ரஜைகள் எந்தத்தர்மத்தைச்செய்கின்றனரோ அந்தத்தர்மத்தின் நாலிலொருபாகத்தை அரசன் அடைவான். ப்ரஜைகளைத் தர்மப்படிரக்ஷித்துவரும் அரசன் அத்தியயனம், தானம், ஹோமம், பூஜைமுதலிய அவர்களின் அந்தக்கர்மங்களின் நாலிலொருபாகத்தை அடைவான். ஓ! பாரத! ப்ரஜைகளைரக்ஷித்துவரும் அரசன் தன்ராஜ்யத்தில் சிறிதுபாபம் ஸம்பவிக்குமானாலும் அப்பாவத்திலும் நாலிலொருபாகத்தை அடைவான். ஓ! அரசனே! செய்கையில் கொடுமையுள்ளவனும் பொய்வசனம் பேசுகிறவனுமான மனிதன் எவ்விதத்திருட்டைச் செய்கிறானோ அப்பாவம்முழுவதும் அரசனைச்சேர்ந்ததென்றுசிலர்சொல்லுகிறார்கள். அப்பாவத்தில்பாதி அரசனைச்சேர்ந்ததென்பது பெரும்பாலும் (பெரியோர்களுடைய) நிச்சயம். அரசன், திருடர்களால் அபகரிக்கப்பட்ட பொருளை மீட்டுக்கொண்டுவரச் சக்தியற்றவனாயிருந்தால் அப்பொருளைத்தன்கோசத்திலிருந்து அப்பொருளையிழந்தவனுக்குக் கொடுக்கவேண்டும். இவ்விதம் கொடுப்பதால் அரசன் அப்பாவத்திலிருந்து விடுபடுகிறான். பிராம்

மணர்களைப்போல அவர்களின்பொருளையும் எப்பொழுதும் எந்தவர் ணத்தாரும் காத்துவரவேண்டும். பிராம்மணர்களுக்கு அபகாரஞ் செய்யும்மனிதன் தேசத்தில் வஸிக்கக்கூடாது. பிராம்மணர்களின் திரவியம் ரக்ஷிக்கப்பட்டால் எல்லாம் ரக்ஷிக்கப்பட்டதாகும். அவர்க ளுடைய அனுக்ரஹமடைவதால் அரசன் செய்யவேண்டியதைச் செய்தவனாகிறான். பிராணிகள் மேகத்தையும் பறவைகள் பெரிய மரத்தையும் அடுப்பதுபோல மனிதர்கள் எல்லாப்பொருள்களையும் ஸாதிக்கத்தக்க அரசனை அடுத்துப் பிழைக்கிறார்கள். எப்பொழுதும் அதிகலோபமும் கொடுமையும் கெட்டபுத்தியும் காமமுமுள்ள அரச னால் ப்ரஜைகளைப் பரிபாலிக்கமுடியாது" என்றுசொன்னார்.

யுதிஷ்டிரர், "ராஜ்யஸுகத்தில் விருப்பமில்லாதநான் தர்மத்தை வேண்டி ராஜ்யத்தில் விருப்பமுள்ளவனானேன். இதில் தர்மமில் லாததையும் அதர்மம் அதிகமாயிருப்பதையும் கவனிக்கையில் ஒரு க்ஷணமும் இதிலிருக்க எனக்குவிருப்பமில்லை. ஆகையால், தர்மமில் லாத இந்த ராஜ்யம் எனக்குவேண்டாம். தர்மத்தைச்செய்யும் விருப் பத்துடன் நான் அரண்யமேசெல்லுகிறேன். பரிசுத்தமான அரண் யங்களில் தண்டத்தைவிலக்கிவிட்டு இந்திரியங்களைஜயித்தவனும் கிழ ங்கு கனிகளைப்புஜிப்பவனுமான முனியாயிருந்துகொண்டு தர்மத்தை ஆராதிக்கப்போகிறேன்" என்றுசொல்ல, பீஷ்மர் சொல்லத்தொடங் கினார்.

"பிறர்துக்கத்தை ஸஹியாத உனதுபுத்தியை நான் அறிவேன். அவ்விதப்புத்தி குணமுள்ளதன்று. எப்பொழுதும் பிறர்துக்கம்பொ றாத அரசனால் ராஜ்யம் பரிபாலிக்கமுடியாது. ஏ! தர்மபுத்ர! எப் பொழுதும் மிருதுவான புத்தியுள்ளவனும் அதிகநன்மையுள்ளவனும் மிக்க தர்மபுத்தியுள்ளவனும் பயந்தவனும் தயையுள்ளவனுமான உன்னை உலகம் நன்குமதிக்கிறதில்லை. தகப்பனாலும் பாட்டனாலும் அனுஷ்டிக்கப்பட்டதும் உனக்கு யோக்யமுமான ராஜதர்மத்தைக் கவனித்துப்பார். நீ அனுஷ்டிக்கவிரும்பிய ஒழுக்கம் அரசர்களுக் குரியதன்று. அதைரியத்துடன்கலந்த இவ்விதமான சாந்தபுத்தியை யடைந்த நீ ப்ரஜைகளை ரக்ஷிப்பதாலுண்டான புண்ணியத்தின்பயனை அடையத்தக்கவனல்லன். ஐய! உன்புத்தியால் நடக்க நிச்சயித்த இந்நடையைப் பாண்டுவும் குந்தியும் க்ஷத்திரியர்கள்யாவராலும் பூஜி க்கப்பட்ட சந்தனுராஜரும் தர்மபுத்தியுள்ள விசித்ரவீரியனும் சித் ராங்கதராஜனும் உனக்கு அனுக்ரஹிக்கவில்லையே. உனதுதந்தை யான பாண்டு சூரத்தனம், பலம், ஸத்தியம் இவைகளையன்றோ உன

க்கு எப்பொழுதும் வேண்டிவந்தான். குந்தியும் உனக்குப்பெருமை யையும் உதாரத்தனத்தையும் பலத்தையும் வேண்டினாள். பிதிருக்க ளும் தேவதைகளும் எப்பொழுதும் ஸ்வாஹாகாரத்தையும் ஸ்வதா காரத்தையும் மானுஷம் தெய்வம் என்ற இரண்டுவிதகர்மங்களையும் புத்ரர்களிடம் விரும்புகிறார்கள். தர்மமானாலும்ஸரி, அதர்மமானா லும்ஸரி, தானமும் அத்தியயனமும் யாகமும் பிரஜைகளைப்பாலித் தலுமாகிய இவைகளைச்செய்யும் கடமையுள்ளவனாகப் பிறந்திருக்கி றாய். குந்தியின் புத்திரனே! நற்குலத்திற்பிறந்து தலைவராயிருந்து இவ்விதப்பாரத்தை வஹிப்பவர்களும் அக்காரணத்தால் துன்பப்படு கிறவர்களுமான மனிதர்களின்கீர்த்தியும் குறைவுள்ளதாகாது. நன்கு சிக்ஷைசெய்யப்பட்ட குதிரையும் எப்பொழுதும் தவறுதலின்றித் தேரிழுக்கிறது. அறிவுள்ள மனிதன் எங்ஙனமிருக்கவேண்டாம்? கர்மங்கள் குற்றமில்லையெனக் கூறும்வசனத்தால் உலகிலுள்ளஸித்தி யும் கர்மத்தாலுண்டாகிறது. க்ஷத்திரியனானாலும் பிராம்மணனானா லும் கிருஹஸ்தனானாலும் பிரம்மசாரியானாலும் ஒரேமுயற்சியுடன் கஷ்டகாலத்திலும் தர்மமொன்றையே செய்தவனாக இவ்வுலகில் ஒரு வனுமிருந்ததில்லை. சிறிதுகுற்றமுள்ளதானாலும் பெரும்பாலும் குண முள்ளகர்மம் உதாரமென்றே சொல்லத்தக்கதாகும். கர்மம்செய்யா ததைவிடக் கர்மம்செய்வதே மிகச்சிறந்ததாகும். கர்மம்செய்யாத மனிதனைக்காட்டிலும் பெரியபாவி ஒருவனுமில்லை. நற்குலத்திற் பிறந்தவனும் தர்மந்தெரிந்தவனுமான ஒருவன் உத்தமமானமந்திரி முதலிய அதிகாரத்தை அடைவானாகில் அப்பொழுது அரசனின்யோக க்ஷேமம் மிகச்செவ்வையாக நடைபெறும். தர்மபுத்தியுள்ள அரசன் ராஜ்யத்தைப்பெற்றுத் தானத்தால் சிலரையும் பலத்தால் சிலரையும் இன்சொல்லால் சிலரையும் எங்கும் தன்வசமாக்கிக்கொள்ளவேண் டும். நற்குலத்திற்பிறந்தவர்களும் ஜீவனமில்லாதபயத்தால் துன்பப் பட்டவர்களுமான வித்வான்கள் எந்த அரசனையடைந்து திருப்தி யுடன் இருக்கிறார்களோ அந்த அரசனுக்கு அக்காரியத்தைக்காட்டி லும் மேலானதர்மம் ஒன்றுமில்லை" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "இவ்விதப் புண்ணியத்தைக்காட்டிலும் சிறந்ததும் ஸ்வர்க்கத்திற் குக் காரணமுமான புண்ணியமும் உத்தமமானப்ரீதியும் உத்தமமான ஐச்வரியமுமுள்ளதாக அறிவீரானால் எனக்கு உபதேசிக்கவேண் டும்" என்றுகேட்க, பீஷ்மர், "பயத்தால் துன்பப்படும் ஸாதுஜனங் கள் எந்த அரசனிடம்ஒருக்ஷணமாவது க்ஷேமத்தை அடைகிறார்களோ அவன் ஸ்வர்க்கத்தைஜயிப்பவர்களில் மிகவுத்தமனென்பது எனது

உண்மையானகருத்தென்று உனக்கு அறிவிக்கிறேன். ஆகையால் கௌரவர்களில் மிகச்சிறந்தவனே! கௌரவர்களுள் நீயே ஸந்தோஷத்துடன் அரசனாயிருக்கவேண்டும்; நல்லோரைக்காக்கவும் தீயோரைநீக்கவும் ஸ்வர்க்கத்தைஜயிக்கவும் வேண்டும். அப்பா! பிராணிகள் மேகத்தையும் பறவைகள் நல்லமரத்தையும் அடுப்பதுபோல உனதுநண்பர்களும் ஸாதுஜனங்களும் உன்னையடுத்து இனிமையாக வாழட்டும். தைரியமுள்ளவனும் சௌரியமுள்ளவனும் பகைவர்களை அடிப்பவனும் குரூரமற்றவனும் இந்திரியங்களை ஜயித்தவனும் பிரீதியுள்ளவனும் வேண்டியவற்றைக் கொடுப்பவனுமான உன்னையடுத்துச் சுற்றத்தார்கள் இனிதுவாழட்டும்" என்றுசொன்னார்.

---

## எழுபத்தாறுவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பிராம்மணர்களுக்குரிய சிலலக்ஷணங்களைக்கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! பிராம்மணர்களுள், சிலர் தங்களுக்குரியகர்மங்களிலும் சிலர் அச்சாதிக்குத்தகாத கர்மங்களிலும் ப்ரவிருத்திக்கிறார்கள். இவ்விதமிருப்பவர்களின் விசேஷத்தை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர், "ஓ! அரசனே! வேதங்களனைத்தையும் நன்றாக அறிந்தவர்களும் மற்றக்கல்விகளும்நற்குணங்களும் பொருந்தியவர்களுமான பிராம்மணர்கள் பிரம்மத்துக்கொப்பாகச் சொல்லப்படுகிறார்கள். ராஜனே! [1]ரிக்யஜுஸ்ஸாமங்களையறிந்தவர்களும் தம்கர்மங்களிலுறுதியுள்ளவர்களுமான பிராம்மணர்கள் தேவர்களுக்கொப்பானவர்கள். ஜீவனத்திற்குவேண்டிப் பசு ஆடு செம்மறியாடு எருமை குதிரை இவைகளைப்போஷிப்பவர்களான பிராம்மணர்கள் வைசியர்களுக்கொப்பாகச் சொல்லப்படுகிறார்கள் ஏ! பாரத! தனத்திலும் போகத்திலும் விருப்பமுள்ளவர்களும் சிக்ஷை ரக்ஷைகளைச்செய்கிறவர்களுமான பிராம்மணர்களை க்ஷத்ரியர்களாக அறியவேண்டும். ராஜனே! குதிரை யானை தேர்களிலேறுகிறவர்களும் காலாட்களுமானபிராம்மணர்கள் வைசியனுக்குச் சமமாவார்கள். ராஜனே! தம்ஜாதிக்குரியகர்மங்களை விட்டவர்களும் லோபிகளும் பிராம்மணர்களுக்குப்பந்துவெனச் சொல்லத்தக்கவர்களுமான பிராம்மணர்கள் சூத்திரனுக்கொப்பானவர்களாகிறார்கள். வேதமோதாதவர்களும் அக்நியாதானமென்னுங் கர்மத்தைச்செய்யா

---

[1] இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

தவர்களுமான இந்தப்பிராம்மணர்கள்யாவர்களையும் தர்மபுத்தியுள்ள அரசன் வரிகொடுக்கும்படியும் கூலியின்றிவேலைசெய்யும்படியும் நியமிக்கலாம். தர்மாதிகாரம்செய்பவர்களும் கூலிவாங்கிக்கொண்டு தேவர்களைப் பூஜிப்பவர்களும் சோதிடம்சொல்லிப் பிழைப்பவர்களும் கிராமஸமுதாயத்திற்கு யாகம்செய்பவர்களும் [1]கப்பலேறிக் கடலில் செல்லுகிறவர்களுமான இவ்வைந்துபேர்களும் பிராம்மணர்களுள் சண்டாளரென்றுசொல்லப்படுவார்கள். அரசனே! ரித்விக்காயிருப்பவர்களும் புரோஹிதர்களும் மந்திரிகளும் தூதுபோகிறவர்களும் தண்டநீதியிற் செல்லுகிறவர்களும் பிராம்மணர்களுள் க்ஷத்திரியர்களுக்குச்சமமாகிறார்கள். மிலேச்சர்களிருக்கும்தேசங்களுக்கும் பாபிகளுக்கிருப்பிடமான தேசங்களுக்கும் பிராம்மணர்கள்செல்லுவார்களானால் அவர்கள் இம்மையிலும் மறுமையிலும்சண்டாளர்களாகிறார்கள். பிராம்மணர்களுக்குரிய ஸம்ஸ்காரம்பெறாத விராத்தியர்களுக்கும் மிலேச்சர்களுக்கும் சூத்திரர்களுக்கும் யாகஞ்செய்விக்கும் பிராம்மணாதமன் இங்கு அபகீர்த்தியடைந்துஇறந்தபின் மகாபிருந்தம்ஸமுத்திரம் என்னும் இரண்டுவிதநரகங்களை முறையே இருபத்தொருமுறை அடைகிறான். ரிக்யஜுஸ்ஸாமமென்னும் வேதங்களுக்குவிப்லவமென்னும் கெடுதிசெய்த மூடனான பிராம்மணன் ஒருபிரம்மகல்பம் நரகத்திலிருந்து பின்பு பலமலங்களிலிருக்கும்புழுவாகப்பிறக்கிறான். விராத்தியன், மிலேச்சன், சூத்திரன், திருடன், பதிதன், அசுத்தன்,கெட்டதேசத்திலிருப்பவன், ஸுராபானஞ்செய்தவன், பிரம்மஹத்திசெய்தவன், சூத்திரஸ்திரீயின் பதியாயிருப்பவன், வேதமோதாதவன், கண்டவிடங்களில் புஜிப்பவன், பாலகனையும் ஸ்திரீயையும் கிழவனையும் தாயாரையும் தந்தையையும் குருவையும் கொன்றவன், மித்திரனுக்குத்துரோகம்செய்தவன், நன்றிகெட்டவன், பசுவைக்கொன்றவன், புத்ரனைக்கொன்றவன், சத்துருஇவர்களிடம் எவ்விதமந்திரங்களையும் பிராம்மணன் உபயோகப்படுத்தக்கூடாது. அவ்விதம் வேதங்களை உபயோகிப்பதுதான் வேதவிப்லவமென்னும் தோஷமாகுமென்று மந்திரமறிந்தமுன்னோர்கள் கூறுகிறார்கள். தேசாந்தரம் சென்றவனும் தீர்த்தயாத்திரை செய்யச் சென்றவனும் பயத்தால் நல்லொழுக்கமில்லாத கெட்டதேசம்சென்றவனுமான பிராம்மணன் மிகவும் அடக்கமுள்ளவனும் பரிசுத்தனுமாயிருந்து மந்திரங்களை உச்சாரணஞ்செய்யவேண்டும். ஆபத்துள்ளவனும் துன்பமுள்ளவனை ரக்ஷி

---

1 'மஹாபதிக' என்பது மூலம்; பெரிய மார்க்கத்திலிருந்து சுங்கம் வாங்குபவர்களென்றும் கொள்ளலாம்.

க்கவேண்டியவனுமான பிராம்மணன் கெட்டமனிதர்களிடத்திலும் மந்திரத்தைப்ரயோகிப்பது விப்லவமென்னும் கீழ்ச்சொல்லியகுற்றத்திற்குக் காரணமாகாது. நற்கர்மங்களால் வஞ்சிக்கப்பட்டவனும் குரூரச்செய்கையும் தீயவொழுக்கமுமுடையவனுமானபிராம்மணன் உண்மையையறிந்து இந்திரியங்களை நன்றாக அடக்கி நல்லநடையுள்ளவனுயிருப்பானுனல் அப்பாவத்தைவிட்டு விலகுவான். பொக்கசம்குறைந்த அரசன் பிரம்மத்துக்கும் தேவர்களுக்கும் ஒப்பான பிராம்மணர்களைத்தவிர மற்றவர்களிடமிருந்து வரிவாங்கவேண்டும். பிராம்மணர்களுள் தமக்குத்தகாத கர்மங்களைச்செய்கிறவர்களுக்கும் மற்றஜாதிக்காரர்களுக்குமுள்ள பொருளுக்கு அரசனே யஜமானனென்று நமக்குரியவேதம் கூறுகிறது. [1]கெட்டகர்மங்களில் சென்ற பிராம்மணர்களையும் எவ்விதத்திலும் உதாஸீனம்பண்ணுமல் தர்மத்தைப் பாதுகாக்கவேண்டி அரசன் அவர்களை விலக்கிவைத்து அடக்கி ஆண்டுவரவேண்டும். எந்த அரசனுடைய ராஜ்யத்தில் பிராம்மணன் திருட்டுத்தொழிலுள்ளவனுயிருக்கிருனே அந்தக்குற்றம் அவ்வரசனைச்சேர்ந்ததென்றே தர்மமறிந்தவர்கள் அறிவிக்கிருர்கள். ராஜனே! ஜீவனமில்லாமையால் ஒருஸமயம் திருட்டுச்செய்த வேதாத்தியயனம் முடித்த பிராம்மணனை அரசன் ரக்ஷிக்கவேண்டுமென்று வேதம் அறிந்தவர்கள் அறிவிக்கிருர்கள். சத்துருக்களைத்தபிக்கச்செய்கிறவனே! தனக்கு ஜீவனமிருந்தும் அவ்வந்தணன் அத்திருட்டிலிருந்து விலகாவிட்டால் அவனை அவன்பந்துக்களுடன் அரசன் தன்தேசத்திலிருந்து வெளியில்துரத்தவேண்டும். ஹிம்ஸையில்லாமை, பிறர்குற்றங்கூருமை, யாகம், வேதம், அதிதிபூஜை, அடக்கம், ஸத்தியவசனம், தவம், தானம் இவை பிராம்மணர்களுக்குரிய லக்ஷணமாகும்" என்று சொன்னர்.

---

## எழுபத்தேழாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

**(பீஷ்மர், அரசர் யாரியாருடைய பொருளுக்குரியவரென்பதையும், கேகயராஜனுக்கும் ராக்ஷஸனுக்கும் நடந்தஸம்வாதத்தையும் கூறியது.)**

யுதிஷ்டிரர், "ஓ! பரதச்ரேஷ்டரான பிதாமஹரே! அரசன் எவர்களின் பொருள்களுக்கு அதிபதியாயிருக்கிருனென்பதையும் எவ்விதஒழுக்கமுள்ளவனுயிருக்கவேண்டுமென்பதையும் எனக்குஉபதேசிக்கவேண்டும்" எனக்கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

---

[1] இந்த அதிகபாடமான அரைச்லோகம் விடப்பட்டது.

"பிராம்மணர்களல்லாத மற்றவர்களின்பொருளுக்கு அரசன் தலைவனாயிருனென்று வேதம்விதிக்கிறது. தமக்குத்தகாத கர்மங்களைச்செய்கிற பிராம்மணர்களின்பொருளுக்கும் அரசன் பதியாகிறான். அவ்விதமிருக்கும் பிராம்மணர்களையும் அரசன் எவ்விதத்திலும்உபேக்ஷிக்கக்கூடாதென்பது முன்னோர்களான அரசர்களின்வழக்கமென்று ஸாதுக்கள் அறிவிக்கிறார்கள். ராஜனே! எந்த அரசனுடையராஜ்யத்திலுள்ள பிராம்மணன் திருட்டுக்குற்றமுள்ளவனாயிருக்கிறானோ அக்குற்றம் அவ்வரசனைச்சேர்ந்ததாகுமென்று பெரியோர்கள் கருதுகிறார்கள். அரசர்களும் அந்தக்கர்மத்தால் தம்மை அவதூறுள்ளவர்களாக எண்ணுகிறார்கள். ஆனதுபற்றியே அறிவுள்ள அரசர்கள் யாவரும் பிராம்மணர்களை நன்குபரிபாலித்துவந்தார்கள். இதுவிஷயத்திலும், ரக்ஷஸால்பிடிக்கப்பட்ட கேகயராஜன்கூறிய இப்பழையவிதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். அரசனே! முன்னொருகாலத்தில் வேதாத்தியயனமுள்ளவனும் மிக்ககடுமையான நியமமுள்ளவனுமான கேகயராஜனைக் குரூரமான ஒருரக்ஷஸ் அரண்யத்தில் பிடித்துக்கொண்டது.

கேகயராஜன், "ஓ! ரக்ஷஸே! என்தேசத்தில் திருடனும் லோபியும் கட்குடிப்பவனும் அக்னியாதானம்செய்யாதவனும் யாகஞ்செய்யாதவனுமில்லை; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. என்தேசத்தில் கல்வியில்லாதவனும் விரதமில்லாதவனும் ஸோமபானஞ்செய்யாதவனுமான பிராம்மணன் இல்லை; ஆகையால் நீ என்னிடம் ப்ரவேசியாதே. குறைந்ததக்ஷிணையுடன் யாகஞ்செய்கிறவனும் நியமமின்றி வேதாத்தியயனஞ்செய்கிறவனும் என்தேசத்தில் ஒருவனுமில்லை; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. என்தேசத்திலுள்ள பிராம்மணர்கள் அத்தியயனஞ்செய்தல், அத்தியயனஞ்செய்வித்தல், யாகஞ்செய்தல், யாகஞ்செய்வித்தல், தானம், ப்ரதிக்ரஹம் என்ற ஆறுகர்மங்களான ஸ்வதர்மத்தில் நிலைபெற்றவர்களும் பூஜிக்கப்பட்டவர்களும் சேரத்தகாதவர்களுடன் சேராதவர்களும் கொடுஞ்செய்கையற்றவர்களும் ஸத்தியவசனமுள்ளவர்களுமாயிருக்கிறார்கள்; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. என்தேசத்திலுள்ளக்ஷத்திரியர்கள் உண்மையானதர்மத்தில் மிக்க ஸமர்த்தர்களும் யாசியாதவர்களும் கொடுப்பவர்களும் அத்தியயனஞ்செய்கிறவர்களும் செய்வியாதவர்களும் யாகம்செய்கிறவர்களும் செய்வியாதவர்களும் பிராம்மணர்களைரக்ஷிப்பவர்களும் யுத்தங்களிற்பின்செல்லாதவர்களுமாய்த் தமக்குரிய கர்மங்களிலேயே இருக்கிறார்கள்; ஆகையால், நீ என்னி

டம்ப்ரவேசியாதே. என்தேசத்திலுள்ளவைசியர்கள் கபடமின்றிப் பயிர்செய்தல், பசுக்களைப்பாதுகாத்தல், வர்த்தகம் இவைகளை அடுத்துப் பிழைக்கிறவர்களும் தவறுதலில்லாதவர்களும் குற்றமற்றகாரியமுள்ளவர்களும் நல்லநடையுள்ளவர்களும் உண்மைபேசுகிறவர்களும் தானமும், அடக்கமும், சுத்தியும், ஸ்நேகமுமுள்ளவர்களுமாகத் தமக்குரியகர்மத்திலேயே இருக்கிறார்கள்; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. என்தேசத்திலுள்ள சூத்திரர்கள் அஸூயையின்றி விதிப்படி மூன்றுவர்ணத்தார்களையும் அடுத்துச் சேவிக்கிறவர்களாகத் தம்கர்மத்திலிருக்கிறார்கள்; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. ஏழைகள், கதியற்றவர்கள், வயதுசென்றவர்கள், பலஹீனர்கள், நோயாளிகள், ஸ்திரீகள் இவர்கள்எல்லோருக்கும் வேண்டியவற்றைக் கொடுத்துவருகிறேன்; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. வெகுகாலமாக விதிப்படி நடைபெற்றுவரும் அந்தஅந்தக் குலங்களுக்குத்தக்க தர்மங்களுக்குச் சிறிதும்பழுதின்றி யாவற்றையும் பரிபாலித்துவருகிறேன்; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. என்தேசத்திற்குவரும் தவமுள்ளபெரியோர்களை நன்குபூஜித்து ஆதரவுடன் அவர்களிஷ்டத்தைக்கொடுத்துப் பரிபாலித்துவருகிறேன்; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. நான்பிறருக்கு அன்னமளியாமல் புஜிக்கிறதில்லை; பரதாரத்தைப் பின்செல்லுகிறதில்லை; என்னிஷ்டப்படி ஸ்வதந்திரனாக எச்சமயத்திலும் விளையாடுகிறதில்லை; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. என்தேசத்தில் பிரம்மசாரியல்லாதவன் பிக்ஷையெடுப்பதில்லை; பிக்ஷையெடுப்பவன் பிரம்மசரியமில்லாமலிருப்பதில்லை; ரித்விக்கல்லாதவன் ஓமம் செய்வதில்லை; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. ராஜ்யத்திலிருக்கும் நான் விதிப்படி ராஜ்யமனைத்தையும் பரிபாலிப்பதுடன் ஸத்தியத்தைவிட்டுச் சிறிதும் விலகாமலிருக்கிறேன்; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. வித்தையுள்ளவர்களையும் முதியோர்களையும் தவமுள்ளவர்களையும் நான் அவமதிக்கிறதில்லை; ராஜ்யம் ஸுகமாக உறங்கும்படி நான் விழித்துக்கொண்டிருக்கிறேன்; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. எவ்விஷயத்திலும் சுத்தமான கர்மமுள்ளவனாக நான்இருக்கிறேன்; கெட்டகதிஎன்னும் பயம் எனக்கில்லை; கிருஹஸ்தனும் அதற்குள்ள தர்மத்தைச் செய்கிறவனுமாயிருக்கிறேன்; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. எனதுபுரோஹிதர் வேதாத்தியயனம் நிரம்பியவரும் தவமுள்ளவரும் உண்மையான தர்மங்களையறிந்தவரும் அறிவுள்ளவரும் ராஜ்யமனைத்திற்கும் அதி

பதியுமாயிருக்கிறார். தானத்தாலும் ஸத்தியத்தாலும் பிராம்மணர்க‌ளைப் பரிபாலிப்பதாலும் நல்லவுலகங்களை அடையவிரும்புகிறேன்; பணிவிடைசெய்யக்கருதிப் பெரியோர்களிடம்செல்லுகிறேன். அவ்விதமுள்ள எனக்கு ராக்ஷஸர்களிடமிருந்து பயம்கிடையாது. என் ராஜ்யத்தில் பதியிழந்தவள் இல்லை; பதிதனும் கபடமுள்ளவனும் திருடனும் யாகஞ்செய்யத்தகாதவர்களுக்கு யாகஞ்செய்விப்பவனும் பாபஞ்செய்கிறவனுமான பிராம்மணனுமில்லை; ஆகையால், ராக்ஷஸர்களிடமிருந்து எனக்குப் பயமில்லை. தர்மத்தைக்கருதி யுத்தஞ்செய்யும் எனது சரீரத்தில் இரண்டுவிரல்அளவு ஆயுதங்களால் அடிபடாத இடமும்இல்லை; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே. என்ராஜ்யத்திலுள்ள ஜனங்கள் பசுக்களுக்கும் யாகங்களுக்கும் பிராம்மணர்களுக்கும் எப்பொழுதும் க்ஷேமத்தை வேண்டிக்கொண்டிருக்கிறார்கள்; ஆகையால், நீ என்னிடம் ப்ரவேசியாதே" என்றுசொல்ல, ராக்ஷஸன் சொல்லத்தொடங்கினன்.

"ஸ்திரீகளின் வ்யபிசாரத்தாலும் அரசர்களின் அநீதியாலும் பிராம்மணர்களின் கெட்டசெய்கையாலும் பிரஜைகளுக்குப் பயமுண்டாகிறது. அப்படிப்பட்டதேசத்தில் மழையில்லாமையும் கொல்லத்தக்க கொடியநோயும் எப்பொழுதும் பசியால்பயங்களும் குரூரமான சண்டையும் எப்பொழுதுமிருக்கும். எந்தத்தேசத்தில் பிராம்மணர்கள் மிக்க அடக்கமுள்ளவர்களாயிருக்கிறார்களோ அந்தத்தேசத்தில் யக்ஷர், ராக்ஷஸர், பிசாசர், அஸுரர்ஆகிய இவர்களிடமிருந்து பிரஜைகளுக்குச் சிறிதும் பயமுண்டாகிறதில்லை. ஸ்திரீகள் பதிவ்ரதைகளாகவும் பிராம்மணர்முதலியநான்குவர்ணத்தினரும் தம்தம் தர்மத்திலிருப்பவர்களாகவுமிருக்கும் தேசத்தில் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் ஸித்தர்களும் பன்னகர்களும் ஸர்ப்பங்களும் மனிதரைக்கொல்ல விரும்பமாட்டார்கள். மழையில்லாதபயமும் துர்ப்பிக்ஷமும் ஜனங்களுக்கு மதிமயக்கமும் அந்தத்தேசத்தில்வாரா. தர்மத்தில் சிறந்தவனான அரசனுள்ளதேசத்தில் அவமதிப்பும் தெய்வம் மானுஷம்என்ற இரண்டுவித உத்பாதங்களும் காணப்படா. ஓ! கேகயதேசத்திற்கரசனே! எந்தச்சமயத்திலும் நீ தர்மம்ஒன்றையே கவனித்துவரும் காரணத்தால் க்ஷேமமாக உன்வீடுபோய்ச்சேர்; நானும் போகிறேன். ஓ! கேகய! பிரஜைகளையும் விசேஷமாகப் பசுக்களையும் பிராம்மணர்களையும் பாதுகாத்துவரும்அரசருக்கு ராக்ஷஸர்களிடமிருந்து பயமில்லை. அவர்களுக்குப் பாதகமேது? எவர்களுக்குப் பிராம்மணர்கள் முன்செல்லுகிறவர்களும் பெரியபலமுமாயிருக்கிறார்

களோ, எவர்களால் பிராம்மணர்கள் நன்கு ரக்ஷிக்கப்படுகிறார்களோ அவ்விதஅரசர்கள் தேவலோகத்தைஜயிக்கிறார்கள்" என்றான். ஆகையால், ஓ! அரசனே! பிராம்மணர்களை ரக்ஷித்துவரவேண்டும். ரக்ஷிக்கப்படும் அந்தப்பிராம்மணர்கள் அரசனை ரக்ஷிப்பார்கள். அரசர்களுக்கு இந்தப்பிராம்மணர்களின் அநுக்ரஹமுண்டாகும். ஆகையால், ப்ரஜைகளை அநுக்ரஹிக்கவேண்டி மிக்கமுயற்சியுடன் கெட்ட கர்மத்திலிருக்கும் பிராம்மணர்களையும் அரசன் அடக்கி அவர்களிஷ்டத்தைக்கொடுத்து ரக்ஷிக்கவேண்டும். இந்தவிதிப்படி பட்டணங்களிலும் கிராமங்களிலுமுள்ள ஜனங்களிடமிருந்துவரும் அரசன் இவ்வுலகங்களில் க்ஷேமங்களையனுபவித்தபின் இந்திரனுக்குரிய லோகத்தைப்பெறுவான்" என்றுசொன்னார்.

---

## எழுபத்தெட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், பிராம்மணர்கள் ஆபத்துக்காலத்தில் அநுஷ்டிக்கத்தக்க தர்மங்களைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரத! ஆபத்துள்ளஸமயங்களில் அந்தணன் ராஜதர்மத்தைமேற்கொண்டு ஜீவிக்கலாமென்று உபதேசிக்கப்பட்டது. மிகவும்கஷ்டமானஸமயத்தில் அந்தணன் வைச்யர்களின்தர்மப்படி ஜீவிப்பது நீதியா, அன்றுவென்பதை உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்டார்.

பீஷ்மர், "க்ஷத்திரியர்களின்தர்மப்படி ஜீவிக்கமுடியாமல் மிக்க துன்பத்தால் பிழைப்பில்லாதஸமயத்தில் பயிர்செய்தல் பசுக்காத்தல் என்னும் வைச்யதர்மத்தாலும் பிராம்மணன் ஜீவனஞ்செய்யலாம்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "ஓ! பரதச்ரேஷ்டரே! வைச்யதர்மப்படி ஜீவனஞ்செய்யும்பிராம்மணன் விற்கத்தக்கவஸ்துக்களில் எவைகளைவிற்பதால் ஸ்வர்க்கத்தையடையத்தகாதவனாகிறதில்லை?" என்று கேட்டார். பீஷ்மர், "ஓ! யுதிஷ்டிர! எப்படிப்பட்டஅவஸ்தைகளிலும் கள், உப்பு, எள், குதிரை, பசு, காளை, தேன், மாம்ஸம், பக்குவமான அன்னம் இவைகளைப் பிராம்மணன் விற்காமல் விலக்கவேண்டும். அப்பா! பிராம்மணன் இவைகளைவிற்பதால் நரகமடைவான். அக்னி, வருணன், ஸூர்யன், பூமி இவர்களை முறையே தேவதைகளாகக்கொண்ட ஆடு, செம்மறியாடு, குதிரை, பக்குவமான அன்னம்

இவைகளையும் பசுவையும் யாகத்தையும் க்ஷேமமென்னும் ஸுகத்தையும் எவ்விதக்கஷ்டத்திலும் விற்றல்கூடாது. பக்குவமான அன்னத்தைக்கொடுத்து அதற்குஈடாக அரிசியைமாற்றிக்கொள்வது நீதியன்றென்று ஸாதுக்கள் சொல்லுகிறார்கள். ஓ! பாரத! 'போஜனத்திற்கு வேண்டிப் பக்குவமான அன்னத்தை நாங்கள் புஜிக்கிறோம். இந்த அரிசியை நீங்கள் பாகஞ்செய்துகொள்ளுங்கள்' என்று ஒருவருக்கொருவர் ஸம்மதஞ்செய்துகொண்டு அரிசிக்குஈடாகப் பக்குவான்னத்தை மாற்றிக்கொள்வதில் சற்றும் அதர்மமில்லை. ஓ! யுதிஷ்டிர! இவ்விஷயத்தில் உலகநடையில் பிரவிருத்தித்த பெரியோர்களின்ஸநாதனமானதர்மத்தை உபதேசிக்கிறேன். அதனை நீ தெரிந்துகொள். 'நான் இதை உனக்குக்கொடுக்கிறேன்; நீ இதை எனக்குக்கொடு' என்று பலாத்காரமின்றிப் பிரீதியுடன் மாற்றிக்கொள்வது யுக்தமான தர்மந்தான். இப்படியே ரிஷிகளுக்கும் மற்றவர்களுக்கும் புராதனவ்யவகாரங்கள் நடந்துவருகின்றன. இது நல்லது; ஸம்சயமில்லை" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "ஓ! தந்தையே! தம்தர்மம்விட்டு அகன்ற பிரஜைகள்யாவரும் எந்தக்காலத்தில் ஆயுதமெடுக்கவும் அரசன்பலம் குறையவும் நேருகிறதோ அந்தக்காலத்தில் அரசன் எங்ஙனம் உலகத்தைக்காக்க வல்லவனுவான்? அந்தஸமயத்தில் எதுதர்மம்? எது முக்கியமானபலம்? பிதாமஹரே! இவ்விஷயத்தில் எனக்குள்ளஸந்தேஹத்தை விலக்கி விரிவாகஉபதேசிக்கவேண்டும்" என்று கேட்டார். பீஷ்மர், "பிராம்மணர்முதலிய ஜாதிகள் தானம், தவம், யாகம், கொல்லாமை, அடக்கம் இவைகளால் தங்களுக்கு க்ஷேமத்தை விரும்பவேண்டும். அவர்களுள் வேதபலம்பெற்ற பிராம்மணர்கள் பலவிதமான முயற்சிகளால் தேவர்கள் இந்திரனுக்குச்செய்வதுபோல அரசனுக்குப் பலத்தை விருத்திசெய்யவேண்டும். குறைவடையும் அரசனுக்குப் பிராம்மணனே பலத்தைக்கொடுக்க முக்கியமானகாரணமென்று சொல்லுகிறார்கள். ஆகையால், அறிவுள்ள அரசன் பிராம்மணர்களின் பலமொன்றாலேயே முயற்சிக்கவேண்டும். ஜயம்பெறத்தக்க அரசன் ராஜ்யத்தில் க்ஷேமத்தைச்செய்யமுயற்சிப்பானுகில் மற்ற ஜாதியார்களும் தர்மப்படி தமக்குரியகர்மங்களில் பிரவேசிப்பார்கள். ஓ! யுதிஷ்டிர! திருடர்களால் மரியாதையின்றி எல்லாஜாதிகளும் வரம்புகடந்து ஒன்றுசேரும்படி ஸாங்கர்யம்செய்யப்படும்போது எல்லாஜாதிகளும் ஆயுதமெடுப்பது குற்றமாகாது" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "ஒருஸமயம் க்ஷத்திரியன் பிராம்மணர்களிடம் எல்லாவிதத்திலும் மிகவும் துஷ்டனுயிருப்பானுயின் அப்பொழுது பிராம்

—ப்பவன்யார்? எது தர்மம்? எது முக்கியமான காரணம்?" என்று கேட்டார். பீஷ்மர், "அந்தக்காலத்தில் பிராம்மணர்கள் தம்மைப் பகைக்கும் அரசர்களைத் தவத்தாலும் பிரம்மசர்யத்தாலும் ஆயுதத்தாலும் பலத்தாலும் கபடமாயும் கபடமில்லாமலும் அடக்கவேண்டும். நல்வழியில்லாதவனும் விசேஷமாகப் பிராம்மணர்களைப் பகைப்பவனுமான அரசனைப் பிராம்மணர்களே நன்றாக அடக்கவேண்டும். க்ஷத்திரியஜாதியானது பிராம்மணஜாதியினிடமிருந்து பிறப்படைந்தது. ஜலத்திலிருந்து அக்னியும் பிராம்மணனிடமிருந்து க்ஷத்திரியனும் கல்லிலிருந்து இரும்பும் உண்டாயின. அக்னிமுதலிய இம்மூன்றுகளின்சக்தி எங்கும்செல்லத்தக்கதாயினும் தம்தம் காரணமான ஜலமுதலியவற்றில்சென்றால் நசித்துவிடும். கல்லைப்பிளக்கச்சென்ற இரும்பும் ஜலத்தைத்தஹிக்கச்சென்ற அக்னியும் பிராம்மணஜாதியைப்பகைத்த க்ஷத்திரியஜாதியும் அப்பொழுதே நசித்துவிடும். ஓ! யுதிஷ்டிர! ஆகையால், பிறரால் ஜயிக்கத்தகாததும் மிகக்கொடுமையுள்ளதுமான க்ஷத்திரியர்களுடைய தேஜஸும் பலமும் பிராம்மணர்களிடம் நாசமடையும்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! பிராம்மணர்களின் வீர்யம் குறைவடைந்தும் க்ஷத்திரியர்களின்வீர்யம் பலமற்றும் மற்றஜாதிக்காரர்கள்யாவரும் பிராம்மணர்கள்விஷயத்தில் துஷ்டர்களாயுமிருக்கும்போது தம்முயிரைவிடத்துணிந்து யுத்தஞ்செய்து பிராம்மணர்களைரக்ஷித்தவர்களுக்கு எந்த உலகங்கள் உண்டாகின்றன?" என்றுகேட்டார். பீஷ்மர், "அக்காலத்தில் பெரியமனமுள்ளவர்களும் துஷ்டர்களிடத்தில் கோபமுள்ளவர்களும் பிராம்மணர்களையும் தர்மத்தையும் தம்மையும் ரக்ஷித்தவர்களுமான ஜனங்கள் புண்ணியலோகங்களையடைகிறார்கள். பிராம்மணர்கள்நிமித்தமாக யாவரும் ஆயுதமெடுக்கலாமென்று கூறப்படுகிறது. பிராம்மணர்கள்நிமித்தம் யுத்தஞ்செய்யும் சூரர்களானமனிதர்கள் அத்தியயனம், யாகம், மிகவுத்தமமான தவம், உபவாஸம், அக்னியாதானமுதலிய புண்ணியகர்மங்களைச்செய்யும் பெரியோர்களின்கதியைக்காட்டிலும் மிகச்சிறந்தகதியை அடைவார்கள். பிராம்மணர்கீழான மூன்றுஜாதிகளையும்பற்றி ஆயுதமெடுப்பதில் தோஷமில்லை, பிராம்மணர்களை ரக்ஷிக்கவேண்டிச் சரீரத்தைவிடுவதைக்காட்டிலும் மேலானதர்மம் ஒன்றுமில்லையென்று ஜனங்கள் சொல்லுகிறார்கள், பிராம்மணத்வேஷிகளைக் கொல்லமுயன்று யுத்தத்தீயில் சரீரத்தை ஹோமஞ்செய்த பெரியோர்களுக்குநமஸ்காரம். அவர்களுக்கு க்ஷேமமுண்டாகவேண்டும். அவர்களின் உலகம் நமக்கு ஸித்திக்கவேண்

டும். அந்தவீரர்களைப் பிரம்மலோகத்தை ஜயித்தவர்களென்றும் ஸ்வ ர்க்கத்தையடையத்தக்கவர்களென்றும் மனு சொல்லியிருக்கிறார். பிராம்மணத்வேஷிகளைக் கொல்லச்சென்று யுத்தத்தில் ஆயுதத்தா லடிக்கப்பட்டவர்கள் பாபிகளானாலும் புண்யசாலிகளானாலும் அச்வ மேதயாகஞ்செய்து அவபிருதஸ்நானஞ்செய்தவர்கள்போலப் பரிசுத் தராகிறார்கள். காலதேசங்களின் காரணத்தால் அதர்மம் தர்மமாக வும் தர்மம் அதர்மமாகவும் நேரும். காலமும் தேசமும் அவ்விதக் குணமுள்ளவைகள். உதங்கர்முதலிய ரிஷிகள் க்ரூரமான ஸர்ப்ப யாகமுதலிய கர்மங்களைச்செய்தும் உத்தமமான ஸ்வர்க்கலோமடைந் தார்கள். க்ஷத்திரியதர்மம்விட்டு விலகாத அரசர்களும் பராராஜ்யத் தின் ஹிம்ஸையென்னும் பாவத்தைச்செய்தும் உத்தமகதியடைகிறார் கள். பிராம்மணன் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவேண்டியகாலம், [1]திரு டர்களால் பயமுள்ளகாலம், [2]தன்பொருளைத்துக்கும் அபாயம்நேரி டுங்காலம் இம்மூன்றுகாலங்களிலும் ஆயுதமெடுப்பது குற்றமாகாது" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "ராஜச்ரேஷ்டரே! பலமான திருட் டுப்பயமும் ஜாதிகளுக்குக்கலப்பும் உண்டாகும்பொழுதும் பிரஜை களை ரக்ஷிக்கும்விஷயத்தில் எல்லாஜாதிகளும் மிகவும் மூடமாயிருக் கும்பொழுதும் க்ஷத்திரியனல்லாத பலசாலியான பிராம்மணனவது வைசியனவது, சூத்திரனவது திருடர்களையடக்கித் தர்மப்படி தண் டஞ்செலுத்தி ப்ரஜைகளைரக்ஷிப்பானாகில் அவன் ராஜகாரியத்தைச் செய்யத்தக்கவனவானா? ஆகானா? அவன் உலகங்களுக்கு எஜமானனா யிருக்கத்தக்கவனா? அல்லனா? க்ஷத்திரியனல்லாதவன் ஆயுதமெடுப் பது கூடாதா?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"கரைகடந்தஆபத்தில் கரைபோலவும் ஸஹாயமில்லாதஸமயத் தில் ஸஹாயமாகவும் உதவிபுரிந்தமனிதன் சூத்திரனானாலும் மற்ற எந்தச்சாதியானானாலும் அவன் எவ்விதத்திலும் பூஜிக்கத்தக்கவன். ராஜனே! திருடர்களால்பிடிக்கப்பட்டு நாதனின்றித் துன்பப்படும் ஜனங்கள் எவனையடைந்து ஸுகமாகஜீவிப்பார்களோ அந்தமனித னையே அந்த ஜனங்கள் முக்கியனான தம்பந்துவாகப்பாவித்துப் பிரிய மாகப்பூஜிப்பார்கள். ஓ! கௌரவ! பெரிதான இஷ்டத்தைச்செய்தவ னன்றோ பூஜிக்கத்தக்கவனாகிறான்? சுமைதூக்கத்தகாத காளையானும் கறவாதபசுவானும் மலடியானமனைவியானும் ரக்ஷிக்கத்தகாத அரசனா லும் யாதுபயன்? மரத்தால்செய்தயானை, தோலால்செய்த மிருகம்,

---

[1] 'ஜாதிக்குக் குறைநேருங்காலம்' என்பது வேறுபாடம்.

[2] 'அடக்கக்கடினமானவனை அடக்குங்காலம்' என்பது வேறுபாடம்.

ஸாமர்த்தியமில்லாத மனிதன், வழியிலுள்ள களர்நிலம், வேதமோதாத பிராம்மணன், ரக்ஷியாத அரசன், மழைபெய்யாத மேகம் இவையெல்லாம் பிரயோஜனமற்றவைகளாகும். எப்பொழுதும் ஸாதுக்களை ரக்ஷிக்கவும் அஸாதுக்களைவிலக்கவும் சக்திபெற்றவனெவனோ அவனே அரசனாயிருக்கத்தக்கவன். அவனால் இவ்வுலகெல்லாம் ரக்ஷிக்கப்படும்" என்றுசொன்னார்.

---

## எழுபத்தோன்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் ரித்விக்குக்களின் இலக்ஷணத்தை உபதேசித்தது.)

யுதிஷ்டிரர், "பேசுகிறவர்களில்சிறந்தராஜச்ரேஷ்டரான பிதாமஹரே! ரித்விக்குக்கள் எதற்காக [1]ஏற்பட்டார்கள்? அவர்கள் எவ்விதச்சீலமும் குணமுமுள்ளவர்களாயிருக்கவேண்டுமென்பதை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்டனர்.

பீஷ்மர், "ராஜனே! ரிக்ஸாமமுதலியவேதங்களையும் அவற்றின் கருத்தைவிளக்கும் மீமாம்ஸாசாஸ்திரத்தையும் நன்றாகஅறிந்தபிராம்மணர்களான ரித்விக்குக்களுக்கு அரசனுக்குரிய சாந்திகமுதலிய கர்மங்களைப் பரிசுத்தமாகநிறைவேற்றுவது மிக்க முயற்சியுடன் செய்யத்தக்கவிருத்தியென்று விதிக்கப்படுகிறது. அவர்கள் எப்பொழுதும் ஒரேஎண்ணமும் தைரியமும் இனிமையாகப்பேசுதலும் ஒருவருக்கொருவர் நேசமும் சுற்றிலுமுள்ளகர்மங்களை ஸமமாகப்பார்க்குந்திறமையும் நல்லசீலமுமுள்ளவர்களாயிருக்கவேண்டும். குரூரமில்லாமை, ஸத்தியவசனம், அஹிம்ஸை, [2]அடக்கம், நேர்மை, அபிமானமும்துரோஹமுமில்லாமை, லஜ்ஜை, பொறுமை, இரண்டுவிதஇந்திரியங்களின் அடக்கம் [3]ஆகியஇந்தக்குணங்கள்பொருந்தியவனும் அறிவுள்ளவனும் உண்மையான தைர்யமுள்ளவனும் நல்லபழக்கமுள்ளவனும் பிராணிகளைஹிம்ஸியாதவனும் விருப்பு வெறுப்பில்லாதவனும் கல்வி, ஒழுக்கம், குலம் இம்மூன்றிலும் பரிசுத்தியுள்ளவனும் ஞானத்தில்திருப்தியுள்ளவனுமான பிராம்மணன் பிரம்மாவென்னும் பெரியரித்விக்காயிருக்கத் தகுதியுள்ளவன். அப்பா! இவ்விதக்குணமுள்ள பெரியரித்விக்குக்கள்யாவரும் யோக்யதைக்குத்

---

1 வேறுபாடம். 2 இரட்டித்திருக்கிறது.

3 இங்கு அதிகபாடமாயுள்ள அரைச்லோகம் விடப்பட்டது.

தக்கபடி பூஜிக்கத்தக்கவர்கள்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "தக்ஷி
ணைகளைக்கூறும் வேதவசனம், 'இதைக்கொடுக்கவேண்டும்,
கொடுக்கவேண்டும்' என (சிறியகாரணத்திலும் பொருளனைத்தையும்
கொடுக்கவேண்டுமென) விதிக்கிறது. இவ்வசனம் ஒருவிஷயத்திலும்
உறுதிப்படவில்லை. மனிதர்களின்சக்தியைச் சிறிதும்கவனியாமல்
வெளிவந்த இவ்வேதவசனத்தின் ஆஜ்ஞையானது மிகக்கடுமையாக
விருக்கிறது. ஆகையால், இவ்வசனம் முக்கியமானகருத்துள்ளதன்று.
விதிக்கப்பட்டதக்ஷிணையைக் கொடுக்கச் சக்திபற்றவன் தனக்குள்ள
பொருளைக் கொடுக்கவேண்டுமென்று கருத்துள்ள ஆபத்காலத்துக்
குரிய விதிபாகவேண்டும். இங்ஙனம்இல்லாவிட்டால் ச்ரத்தையொன்
றையே முக்கியகாரணமாகக்கொண்டு செய்யப்படும்யாகமும் சாஸ்தி
ரீயமென்றுகூறும் வேதவசனப்படி பொருளற்றவன்செய்த யாகம்
தக்ஷிணைக்குறைவால் விதிக்குவிரோதமாய்ப் பயன்படாததாகும். அவ்
விதயாகத்திற்குக் காரணமானச்ரத்தையும் பயனற்றதாகுமே" என்று
கேட்டார். பீஷ்மர், "வேதத்தை அவமதிப்பதாலும் கபடத்தாலும்
மாயையாலும் ஒருவன் பெருமையை அடையமுடியாது. உனக்கு
இவ்விதப்புத்திவேண்டாம், அப்பா! யாகத்திற்குஅங்கமானதக்ஷிணை
யென்பது மந்திரங்களை நல்லபயனுள்ளனவாகச்செய்யும். தக்ஷிணை
யில்லாத மந்திரங்கள் எவ்விதத்திலும் சற்றும் தாரகமாகமாட்டா.
பொருளில்லாதமனிதனுக்குப் பூர்ணபாத்திரமே குறைவின்றிப் போ
துமான (ஆயிரத்திருநூறுபசுக்களுக்கு ஸமமான) தக்ஷிணையாகும்.
அப்பா! சக்திக்குத்தக்கபடி பிராம்மணர்முதலிய மூன்றுஜாதியாரும்
அவச்யம் யாகஞ்செய்யக் கடமைப்பட்டவர்கள். அந்த ஸோமவிக்
கிரயமென்னும் இகழ்ச்சியானகார்யத்தைச்செய்தாவது யாகம்செய்ய
வேண்டும். ஸோமம் பிராம்மணர்களுக்கு அரசென்று வேதம்
சொல்லுகிறது. அதை ஜீவனத்திற்காகவன்றி விலைசெய்து தர்மப்படி
கிடைத்தபொருளால் செய்யப்படும்யாகமும் தர்மமேயாகுமென்று
தர்மமறிந்தபெரியோர்கள் உபதேசிக்கிறார்கள். புருஷனும், யாகமும்,
ஸோமலதையும் நீதிதவறாமல் உபயோகப்பட்டால் பயன்படும். அவ்
விதமின்றிக் கபடமுதலியகுற்றமுள்ளபுருஷன் தன்சரீரத்தின்ஜீவ
னத்தைக்கருதி அக்னியிற்செய்தயாகங்கள், அந்தப்பிராம்மணன்
மஹாத்மாவாயிருந்தாலும் அவனுக்கும் பிறருக்கும் நற்பயனைக்
கொடுக்கத்தக்கவையல்லவென்பது வேதத்தினால்கூறப்படுகிறது. ஓ!
அறிவுள்ளவனே! யாகத்தைக்காட்டிலும் தவம்மிகச்சிறந்ததென்று
வேதம் முக்கியமாகக்கூறுகிறது. அவ்விதமான தவத்தை உனக்கு

உபதேசிக்கிறேன் ; கேள். சரீரத்தைவற்றச்செய்வது தவமன்று. அஹிம்ஸை, ஸத்யவசனம், கொடுமையில்லாமை, அடக்கம், தயை இவைகளை தவமென்று அறிஞர்கள் அறிவிக்கிறார்கள். வேதங்கள் பிரமாணமில்லையென்றுபேசுவதும் சாஸ்திரவிதிகளைமீறுவதும் எவ் விஷயத்திலும் வ்யவஸ்தையின்றியிருப்பதும் ஆத்மநாசத்திற்குக் காரணமாகும். ஓ! பார்த்த! தசஹோதருஎன்னும் மந்திரங்களின் விதி எங்ஙனமென்பதைக் கவனித்துப்பார். 'ஞானம் ஸ்ருக்கு; புத்தி நெய்' எனக்கூறும் இம்மந்திரங்கள் மிகவுத்தமமான ஆத்ம ஞானத்தைப் பரிசுத்தமென்று கூறுகின்றன. [1]ஞானத்தைப்பற்றிய விஷயம் இவ்வளவே. கபடம்யாவும் மிருத்யுவுக்குஇடமாகும். உண் மையென்பது பிரம்மத்தின்பதமாகும். அதிகச்சொல்லால் என்ன பயன்?" என்றுசொன்னார்.

---

## எண்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், மித்ரன் சத்துரு ஞாதிமுதலியோரின் லக்ஷணத்தையும் அவர் களிடம் அரசன் நடந்துகொள்ளவேண்டியதையும் கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! மனிதன் ஸஹாயமின்றி ஒருவ னாக மிகச்சிறிதானகார்யத்தையும்செய்வது அரிதாயிருக்கிறது. ராஜ் யத்தை ஸஹாயமின்றி எவ்விதம் நடத்தமுடியும்? ஆகையால், அர சனுக்குவேண்டிய ஸஹாயமானமனிதன் எவ்விதச்சீலமும் ஆசாரமு முள்ளவனாயிருக்கவேண்டும்? அரசன் எப்படிப்பட்டமனிதனிடம் நம் பிக்கைவைக்கலாம்? எவன் நம்பத்தகாதவன்?" என்றுகேட்டார்.

பீஷ்மர், "அரசனே! அரசர்களுக்கு [2]ஸஹார்த்தன், [3]பஜமா னன், [4]ஸஹஜன், [5]கிருத்திரிமன்என்று நாலுவிதமித்திரர்களுண்டு. ஒருவரிடமும் பக்ஷபாதமில்லாத தர்மபுத்தியுள்ளபுருஷன் ஐந்தா வதுமித்திரனாவான். அவன் யாரிடமும் கபடமில்லாமல் தர்மமுள்ள பக்ஷத்தை நாடிநிற்பான். அல்லது ஒருவிதப்பற்றுமின்றி உதாஸீ னனாயிருப்பான். (தருமப்படிநடந்துவரும் அரசன் அவனையடுக்க

---

1 இங்கு அதிகபாடமான அரைச்லோகம் விடப்பட்டது.

2 'இந்தக்காரியத்தைச்செய்து இதன்பயனை இருவருமஅடைவோம்' என்றுபேசிக்கொண்டு சேர்க்கப்பட்டவன்.

3 தகப்பன் பாட்டன்பரம்பரையாய் உபகாரம்செய்பவன்.

4 பந்துவாயிருப்பவன்.

5 உபகாரம்செய்து ஏற்படுத்தப்பட்டவன்.

லாம்.) ஆனால், அவனுக்குச் சம்மதமில்லாத பொருள்விஷயத்தை அவனிடம் வெளியிடாமலிருக்கவேண்டும். தர்மாதர்மம்இரண்டை யும் கைக்கொண்டு ஜயம்பெறவிரும்புவது அரசர்களின்வழக்கம். ஓ! பாரத! மித்திரனென்றும் சத்ருவென்றும் ஒருஸ்வபாவமில்லை. மனிதன் உபகாரத்தால் மித்திரனாகவும் அபகாரத்தால் சத்துருவாகவு மிருப்பது வழக்கம். ஒருமனிதனின் மரணத்தைவேண்டுகின்ற மற் றொருமனிதனே சிறிதுகாலஞ்சென்றபின் திரும்பவும் அவன்பிழைத் திருப்பதை வேண்டுகிறான். கீழ்க்கூறிய நாலுவிதமித்ரர்களுள் இடையிற்கூறிய பஜமானன் ஸஹஜன்என்கிற இரண்டுபேர்கள் உத்த மர்கள். மற்றஸஹார்த்தன் கிருத்திரிமன்என்கிற இரண்டுபேர்களும் எப்போதும் சங்கிக்கத்தக்கவர்கள். தான் நேரில் நடத்தவேண்டிய காரியத்தைப்பற்றிக் கீழ்க்கூறிய ஐந்துபேர்களும் எப்பொழுதும் சங் கிக்கத்தக்கவர்களே. மித்திரர்களைரக்ஷிக்கும்விஷயத்தில் அரசன் எப் பொழுதும் அஜாக்ரதையாகஇருக்கக்கூடாது. இதில் அஜாக்ரதையா கவிருக்கும்அரசனை ஜனங்கள் அவமதிப்பார்கள். அஸாதுவானவன் ஸாதுவாகவும் ஸாதுஅஸாதுவாகவும் ஆகலாம். சத்துருவும் மித் திரனாவான். மித்திரனும் மிகக்குற்றமுள்ளவனாவான். மனிதனின் புத்தி நிலையற்றதாகையால் எந்தச்சமயத்திலும் அவனை நம்புவது கூடாது. ஆகையால், முக்கியமானகாரியத்தை அரசன் நேரிலேயே செய்யவேண்டும். ஒரே உறுதியான நம்பிக்கைமுழுமையும் அறம் பொருள்களை நாசமாக்கக் காரணமாகும். எல்லாவிடத்திலும் நம் பிக்கையில்லாமையும் மிருத்யுவைவிட மேலானதாகும். நம்பிக்கை யென்பது அகாலமிருத்யுவாகவும் அவநம்பிக்கையென்பது ஆபத் தாகவுமுடியும். அரசன் எந்தமனிதனிடம் நம்பிக்கைபாராட்டுகி றானோ அந்தமனிதனின் ஸ்நேகமுள்ளவரையில் ஜீவிப்பான். ஆகை யால், அப்பா! சிலமனிதர்களிடம் நம்பிக்கை சங்கையிரண்டுமிருக்க வேண்டும். இது ராஜநீதிக்குத்தக்கவழியும் ஸநாதனமான ஸம்பத்து மாகும். அரசனுக்கு அபாயம்நேர்ந்தால் தனக்கு த்ரவ்யலாபம்உண் டென்று எண்ணும்மனிதனிடம் எப்பொழுதும் சங்கையிருக்கவேண் டும். அறிந்தவர்கள் அவனைச் சத்துருவென்று அறிவிக்கிறார்கள். எந்தமனிதனுடைய கழனியின்வழியாய் மற்றொருவன்கழனிக்குத் தண்ணீர்செல்லுகிறதோ அந்தமனிதனுடைய விருப்பமின்றி [illegible] ளைகள் உடைந்துபோகமாட்டா. அவ்விதமே அதி[illegible] யைபயந்த அம்மனிதன் அந்தக்கரையை உடைக்கவிரும்புவா[illegible] வன்னுடைபோன்ற லக்ஷணமுள்ளவனும் சத்துருக்களின்[illegible]

திற்குவழியான ராஜ்யத்தின் எல்லையைக் காப்பவனுமான மனிதனிடம் எப்பொழுதும் சங்கையிருக்கவேண்டும். அறிஞர்கள் அவனைச் சத்துருவென்று அறிவிக்கிறார்கள். அரசனது பெருமையில் அஸூயையில்லாமலும் அவனது குறைவில் மிக்கதுயரத்துடனும் இருப்பது உத்தமனான மித்திரனுடைய லக்ஷணமென்று சொல்லப்படுகிறது. அரசனுக்குக் குறைவுவந்தால் தனக்கும் மிகவும் குறைவு நேருமென்று எண்ணமுள்ள மித்திரனிடம் தந்தையிடம்போல அரசன் நம்பிக்கையுடனிருக்கவேண்டும். சக்தியுள்ள அந்தமனிதனை அரசன் பலவிதத்தாலும் பெருமையுள்ளவனாகச் செய்யவேண்டும். தர்மகாரியங்களில் எப்பொழுதும் குற்றம்வாராவண்ணம் பாதுகாப்பவனும் அரசனுக்கு நேரும் துன்பத்திலிருந்து பயந்தவனுமான மனிதனையும் உத்தமமான மித்திரலக்ஷணமுள்ளவனென்று அறியவேண்டும். எவர்கள் எவனுடைய நாசத்தைவிரும்புகிறார்களோ அவர்கள் அவனுக்குச் சத்துருக்களென்று சொல்லப்படுகிறார்கள். அரசனுக்குக் குற்றம் நேரும் விஷயத்தில் எப்பொழுதும் பயமுள்ளவனும் அவனுக்குண்டாகும் ஸம்பத்தில் அஸூயையில்லாதவனுமான மித்திரன் தனக்குச் சமமென்று சொல்லப்படுகிறான். நல்ல ஆகிருதியும் அழகும் குரலுமுள்ளவனும் பொறுமையுள்ளவனும் அஸூயையில்லாதவனும் நற்குலத்தில் பிறந்தவனும் நல்லஸ்வபாவம் நிரம்பினவனுமான புருஷன் அரசனுக்கு ப்ரதானமந்திரியாயிருக்கத்தக்கவன். ரித்விக்கானாலும் குருவானாலும் மித்திரனானாலும் நல்லபுத்தியுள்ளவனும் ஞாபகசக்தியுள்ளவனும் ஸமர்த்தனும் ஸ்வபாவத்தில் கடுமையில்லாதவனும் தனக்குமரியாதைகிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் சிறிதும் மனத்தில் வேற்றுமையில்லாதவனும் மிக்கமர்யாதையுள்ளவனுமான மனிதன் உள்வீட்டில் மிகவும் பூஜிக்கப்பட்ட அமாத்தியனாயிருக்கவேண்டும். அறம்பொருளிரண்டிற்கும்[1] ப்ரகிருதியாயிருக்கும் மித்திரனை மிகஉத்தமனாக அறியவேண்டும். பிதாவினிடத்தில்போல அவனிடத்தில் விசுவாஸமிருக்கவேண்டும். ஒருகாரியத்தில் இரண்டு அல்லது மூன்றுமனிதர்களை நியமிக்கலாகாது. அவ்விதம் நியமிக்கப்பட்டமனிதர்கள் ஒருவருக்கொரு

[1] ப்ரகிருதி - மூலகாரணம். இது பொருளுக்கும் தர்மத்திற்கும் இரண்டிற்குமென மூவகைப்படும்; இவைகளில் கிருஷி, வர்த்தகம், கோட்டை, அணை, யானைபிடிக்குமிடம், தங்கம் ரத்னமுதலியவையெடுக்கும் இடம், [illegible]குதல், காதனற்றவிடம் எனஎட்டும் பொருள்ஸம்பந்தமான ப்ரகிருதியாகும். தர்மாதிகாரியென்னுமொருவர் தர்மப்ரகிருதியைச் சேர்ந்தவர். கோட்டைத்தலைவன், சேனைத்தலைவன், அரசன், புரோஹிதன், [illegible], சேரிடன் இவ்வாறுபேரும் அறம்பொருள் இரண்டிற்கும் ப்ர[illegible]

வரிடமுள்ளபொறுமையால் அக்காரியத்தில் எப்பொழுதும் நல்லசேர்க்கையுடன் இருக்கமாட்டார்கள். கீர்த்தியைப்பிரதானமாகக்கொண்டவனும் நீதியில் நிலைபெற்றவனும் ஸமர்த்தர்களானமனிதர்களைப் பகையாதவனும் கெட்டகாரியங்களைச்செய்யாதவனும் காமம், பயம், லோபம், கோபம்இக்காரணங்களால் தர்மத்தைவிடாதவனும் ஸமர்த்தனும் வேண்டிய அளவுபேசுகிறவனும் நற்குலத்திற்பிறந்தவனும் நல்லசீலமுள்ளவனும் பொறுமையுள்ளவனும் தன்னைப்புகழாதவனும் சூரனும் யோக்கியனும் அறிவுள்ளவனும் கார்யாகாரியங்களைப்பகுத்தறிவதில்ஸமர்த்தனுமாயிருப்பவன் உனக்கு முக்கியமந்திரியாயிருக்கவேண்டும். இத்தகையகுணம்பொருந்தியவர்களும் பூஜிக்கப்பட்டவர்களும் தனித்தனிவேலைகளில்நியமிக்கப்பட்டவர்களும் நல்லஸகாயமுள்ளவர்களும் வேலைகளைநடத்தத்திறமையுள்ளவர்களுமான அமாத்தியர்களை எல்லாக்காரியங்களிலும் அதிகாரிகளாயிருக்கச்செய்யவேண்டும். தங்களுக்குத்தக்கவைகளான வரவுசெலவுமுதலியகாரியங்களில் தடையின்றி முழுமையும்அதிகாரம்கொடுக்கப்பட்ட இவ்வமாத்தியர்கள் பெரியகாரியங்களில் தக்கமுயற்சிசெய்து மிக்கபெருமைகளை உண்டுபண்ணுவார்கள். இவர்கள் எப்பொழுதும் ஒருவருக்கொருவர் மேலாவதிற்கருத்துள்ளவர்களும் ஒருவர் ஒருவரிடம் தம்தம்வேலைத்திறமையைச் சொல்லிக்கொள்ளுகிறவர்களுமாக வேலைகளைச்செய்துவருவார்கள். எப்பொழுதும் ஞாதியைக்கண்டால் மிருத்யுவைப்போல நினைத்துப் பயப்படவேண்டும். ஞாதியானவன் ஸாமந்தன்போல அரசனதுபெருமையை எப்பொழுதும் பொறுக்கமாட்டான். ஓ! மஹாபாஹுவே! கபடமில்லாதவனும் கொடுமையில்லாதவனும் மிக்கதானம்செய்பவனும் அகாரியத்தில் லஜ்ஜையுள்ளவனும் உண்மைபேசுகிறவனுமான அரசனுடைய நாசத்தைப்பற்றி ஞாதியல்லாத மற்ற எவனும் ஸந்தோஷிக்கமாட்டான். ஒருஸமயம் ஞாதியல்லாதவர்களும் துன்பத்தைக்கொடுப்பார்கள். ஞாதிகளும் ஸுகத்தைக் கொடுப்பார்கள். ஞாதிஜனங்களற்றமனிதனை மற்றஜனங்களும் அவமதிப்பார்கள். பிறர்களால் அவமதிக்கப்பட்டமனிதனுக்குத் தன் ஞாதிதான் முக்கியனான ஆச்ரயனாவான். தன்ஞாதிக்குநேர்ந்த அவமதிப்பை ஞாதியொருவன்தான் பொறாதவன். மற்றவன் அவ்விதமிருக்கமாட்டான் பந்துக்களால் தன்ஞாதிக்குச்செய்யப்பட்ட அவமதிப்பையும் ஞாதி தனக்கென்றே நினைப்பான். ஆகையால், ஞாதிகளிடம் குணம்குற்றம் இரண்டும் காணப்படுகின்றன. ஞாதியில்லாத மனிதன் ஸந்தோஷத்தையும் பெருமையையும் அடையமாட்டான்.

ஞாதிவகுப்பில் நன்மைதீமையிரண்டும் காணப்படுகின்றன. ஞாதிகளை வாக்கினாலும் செய்கையாலும் எப்பொழுதும் கௌரவமாகப்பூஜிக்க வேண்டும். இவர்களுக்குப் பிரியத்தைச்செய்வதன்றி அப்பிரியத்தைச் சிறிதும்செய்யக்கூடாது. அவர்களிடம் உள்ளத்தில் நம்பிக்கையில்லாதிருந்தாலும் எப்பொழுதும் நம்பிக்கையுள்ளவன்போல இருக்க வேண்டும். குணமோ தோஷமோ உறுதியாகவொன்றை அவர்களிடம் தீர்மானிக்கமுடியாது. இவ்விதம் அஜாக்ரதையின்றி நடந்துவரும் மனிதனிடம் பகைவர்களும் நேசமுள்ள மித்திரராவார்கள். இவ்விதம் சத்துரு, மித்திரன், உதாஸீனன், ஞாதி, பந்துக்கள் இவர்களிடம் எப்பொழுதும் நடந்துவரும்மனிதன் நெடுங்காலம் நல்லகீர்த்திபெற்றிருப்பான்" என்று சொன்னார்.

---

## எண்பத்தோராவது அத்தியாயம்.

## ராஜதர்மம் (தொடர்ச்சி.)



(பீஷ்மர் ஞாதிவிஷயமாகக் கிருஷ்ணனுக்கும்நாரதருக்கும் நடந்தஸம்பாஷணத்தைக் கூறியது.)

யுதிஷ்டிரர், "ஒருவருக்கொருவர் பொறாமையுள்ளஞாதிகள், பந்துக்கள், மித்திரர்கள், சத்துருக்கள் இவர்களைத் தன்வசமாக்கிக் கொள்வது இங்ஙனம்கடினமாயிருப்பதால் அவர்கள்மனம் வசப்பட்டிருக்கத்தக்கவழியென்ன?" என்றுகேட்க, பீஷ்மர்சொல்லத்தொடங்கினார்.

"இவ்விஷயத்திலும் தேவரிஷியான நாரதருக்கும் வாஸுதேவருக்கும் நடந்தஸம்பாஷணையான இப்பழைய இதிஹாஸத்தைச் சொல்லுகிறார்கள். வாஸுதேவர், "ஓ! நாரதரே! பண்டிதனல்லாதமித்திரனும் பண்டிதனாயிருந்தும் நல்லறிவில்லாத அமித்திரனும் மிக்க ரஹஸ்யமானவிஷயத்தைத் தெரிந்துகொள்ளத் தக்கவரல்லர். ஆகையால், தேவலோகவாஸியானநாரதரே! உமதுபூர்ணமான அறிவையும் நேசத்தையும் உறுதியாகத் தெரிந்துகொண்டு சிலவிஷயத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன். நான் அரசனென்னும்பெயருள்ளவனாகி ஞாதிகளுக்கு அடிமைத்தொழிலைச் செய்துவருகிறேன்; பூஜிக்கத்தக்கவைகளில் பாதியைமட்டும் புஜிக்கிறேன்; மற்றொருபாதியை ஞாதிகளுக்கு அளிக்கிறேன். அவர்கள்வாக்கிலிருந்துவெளியாகும் கடுஞ்சொற்களையும் பொறுக்கிறேன். அக்நியைவிரும்பியவன் அரணி

யென்னும்கட்டையைக்கடைவதுபோல அக்கடுஞ்சொல் என்மனத்தைக் கடைகிறது. ஓ! தேவரிஷியே! அவர்கள் வாக்கினுற்சொல்லப்பட்டகடுஞ்சொல் எப்பொழுதும் என்னையெரிக்கிறது. நாரதரே! ஸங்கர்ஷணன் பலத்தாலும், கதன் அழகாலும், ப்ரத்யும்னன் ரூபத்தாலும் எப்பொழுதும் மதமடைந்திருக்கிறார்கள். எனக்குஸஹாயமுள்ளவன் ஒருவனுமில்லை. நாரதரே! மற்றவர்களான அந்தகர்களும் வ்ருஷ்ணிகளும், மிகப்பெருமையுள்ளவர்களும் பலசாலிகளும் அருகிற்செல்லமுடியாதவர்களும் விடாமுயற்சியுள்ளவர்களுமாயிருக்கிறார்கள். அவர்களின் சேர்க்கையுள்ளபக்ஷம்முழுமையும் பயன்படுவதல்லாமல் அவர்கள்சேர்க்கையில்லாதவகுப்பு நசிக்கவேவேண்டும். [1]ஆஹுகன் அக்ரூரர் இவ்விருவர்களாலும் (தம்மிடம்அதிகநேசமில்லையென்று பொறுமையால்) விலக்கப்பட்டநான் இவ்விருவர்களிலொருவரையும் எப்பொழுதும் அடுக்கமுடியாதவனுயிருக்கிறேன். இவ்விருவர்களுடன் சேருவதும் மிக்கதுன்பமாகவிருக்கிறது. அவர்களை விலக்குவதும் அதைக்காட்டிலும் துன்பமாகவிருக்கிறது. ஓ! மஹரிஷியே! ஒருவரோடொருவர்சூதாடுகிற இரண்டுபுத்திரர்களின் தாய்போல நான் அவர்களில் ஒருவருக்குவெற்றியையும் மற்றொருவருக்குத்தோல்வியையும் விரும்பாதவனுயிருக்கிறேன். ஓ! நாரதரே! இவ்விருவர்களையும்கவனித்து இவ்விதம்துன்பப்படும்என்பொருட்டு எனக்கும் ஞாதிகளுக்கும்க்ஷேமமாயிருக்கத்தக்கவழியை நீர் கூறவேண்டும்" என்று கேட்டனர்.

நாரதர், "ஓ! விருஷ்ணிகுலத்திலுதித்த கிருஷ்ணபகவானே! மனிதனுக்கு வெளியிலுண்டானதென்றும் உள்ளிலுண்டானதென்றும் இரண்டுவிதமான துன்பங்கள் உண்டு. இவைகளுள் ஞாதிகளால் செய்யப்படும்துன்பம் உள்ளிலுண்டானதென்றும் பிறராற்செய்யப்படும் துன்பம் வெளியிலுண்டானதென்றும் சொல்லப்படும். இவைகளில் அக்ரூரர்போஜன் இவர்களிடமிருந்துண்டானதும் ஞாதிகளின் காரியத்தாலுண்டானதும் மிகக்கொடிதுமான உள்ளிலுள்ள துன்பம் உமக்குண்டாயிருக்கிறது. ஸங்கர்ஷணர்முதலியவர்கள்யாவரும் அக்ரூரரின்குலத்திலுதித்தவர்கள். இவர்கள் பொருளின்காரணத்தாலும் காமத்தாலும் குற்றமுள்ள வசனத்தாலும் இத்துன்பத்தையுண்டுபண்ணுகிறார்கள். நீர்ஸம்பாதித்தராஜ்யத்தை ஆஹுகரிடம் கொடுத்துவிட்டீர். ஓ! [1]ஸஹாயமுள்ளவரே! இப்பொழுது ஞாதியென்னுங்காரணத்தால் வேரூன்றியதும் உம்மால்கொடுக்கப்பட்டது

---

1 வே.ஃபாடம்.

மான இந்தராஜ்யமானது கக்கப்பட்ட அன்னத்தைப்போலத் திரும்ப வும் உம்மாலெடுக்கதக்கதன்று. ஓ! கிருஷ்ணபகவானே! ஞாதிக ளுக்குவேற்றுமையுண்டாகுமென்ற விசேஷமான பயமிருந்தால் எவ் விதத்திலும் பப்ரு உக்ரஸேனன்இவர்களிடமிருந்தும் நீர் ராஜ்யத்தை அடையமுடியாது. மிக்ககடினமானகாரியத்தைச்செய்து மிக்கமுயற் சியால் அதையடையமுயலவேண்டும். அவ்விதம்செய்தாலும் திரும் பவும் பெருங்குறைவும் பொருளழிவும் விநாசமும் ஸம்பவிக்கும். ஆகையால், அவர்களனைவர்களின் கெட்டஎண்ணங்களையும்விலக்கி ஸ்நேஹகுணத்தையுண்டுபண்ணி இரும்பினால் செய்யப்படாததும் மிருதுவும் உள்ளத்தையறுப்பதுமான ஆயுதத்தால் அவர்களின்நா வையறுத்துவிடும்" என்றுசொன்னார். ஸ்ரீகிருஷ்ணபகவான், "முனி வரே! இவர்களின்குற்றத்தைவிலக்கிக் குணமுள்ளவர்களாகச்செய்து இவர்களின் நாவையறுக்கத்தக்கதாயுபதேசிக்கப்பட்டதும் இரும் பால்செய்யப்படாததும் மிருதுவுமான ஆயுதத்தை நான் எப்படிஅறி வேன்?" என்றுகேட்டார். நாரதர், "தமது சக்திக்குத்தக்கபடி அன்னமளிப்பதும், எப்போதும்பொறுமையும், நேர்மையும், மெதுவா யிருப்பதும், அவரவர்கள் யோக்கியதைக்குத்தக்கபடி மர்யாதைசெய் வதும் இரும்பினால்செய்யப்படாத ஆயுதமாகும். கொடுமையாயும்இக ழ்ச்சியாயுமுள்ள வசனங்களைப்பேசவிரும்பும் ஞாதிகளின்மனங்களை யும் வாக்கையும் எண்ணத்தையும் நீர் நன்மொழியால் அடக்கவேண் டும். மஹாபுருஷனல்லாதவனும் நல்லபுத்தியில்லாதவனும் ஸஹாய மற்றவனுமான ஒருமனிதன் தக்கபெரியபாரத்தையடைந்து முயன் றும் தன்மார்பில் சுமக்கமுடியாது. மேடுபள்ளமில்லாதவழியில் எல் லாக்காளையும் பெருஞ்சுமையைச்சுமக்கும். செல்லக்கடினமானவழி யில் பெருஞ்சுமையைப் பேர்பெற்ற நல்லகாளையொன்றே வகிக்கும். ஓ! கேசவரே! நீர் கூட்டத்தில் பிரதானராயிருக்கிறீர். இக்கூட்டங் கலைந்துபோனால் பெருநாசமுண்டாகும். ஆகையால், இக்கூட்டம் உம்மையடைந்து துன்பமில்லாமலிருக்கும்படி நீர் செய்யவேண்டும். அறிவிற்சிறந்தவனிடம் ஞானமும் பொறுமையும் இந்திரியங்களின் அடக்கமும் பொருளைக்கொடுப்பதுமின்றி [1]வேறுவிதக்குணங்கள் நிலைபெறமாட்டா. ஓ! கிருஷ்ண! எப்போதும் தன்இனத்தார்களைக் காப்பது பொருளையும் கீர்த்தியையும் ஆயுளையும் பெருகச்செய்யும். ஆகையால், ஞாதிகளுக்கு யாதொருகுறைவுமில்லாமலிருக்கும்படி நீர் செய்யவேண்டும். ஓ! பிரபுவே! சந்தி, விக்கிரகமுதலிய ஆறு

1 'பலமனிதர்கள் அடங்கியிருக்கமாட்டார்கள்' என்பதுவேறுபாடம்.

குணங்களை ப்ரயோகிப்பதும் யாத்திரைசெய்வதும் வருங்காலநிகழ் காலங்களிலுள்ளதும் உம்மால் அறியப்படாதது ஒன்றுமில்லை. ஓ! மஹாபாஹுவே! யாதவர்கள், குகுரர்கள், போஜர்கள், அந்தகர்கள், வ்ருஷ்ணிகள், உலகங்கள், உலகப்பதிகள் இவர்கள்யாவரும் உம்மையடுத்தவர்களாயிருக்கிறார்கள். ஓ! மாதவரே! ரிஷிகளும் உமது புத்தியை உபாஸிக்கிறார்கள். நீர் பிராணிகள்எல்லாவற்றிற்கும் குருவாயிருக்கிறீர். உத்தமமானகதியை நீர் அறிவீர். யதுக்களில்மிகச்சிறந்தஉம்மையடைந்து யாதவர்கள் ஸுகித்துவாழ்கிறார்கள்" என்றார்.

---

## எண்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், அமாத்யபரீக்ஷையைப்பற்றிக் காலகவ்ருக்ஷீயோபாக்யானத்தைச்சொல்லியது.)

ஓ! பாரத! அமாத்தியர்களைப்பற்றிய முதன்மையான இவ்விதி உனக்குஉபதேசிக்கப்பட்டது. இதினும்மேலான கோசத்தைப்பற்றிய இரண்டாவதுவிதியைக் கேள். கோசத்தைப்பெருகச்செய்யும்மனிதர்கள்யாவரையும் அரசன் பரிபாலிக்கவேண்டும். ஓ! யுதிஷ்டிர! அமாத்தியனால் அபஹரிக்கப்பட்டுநாசமடையும்கோசத்தைப்பற்றி அறிவிப்பவன் வேலைக்காரனோ அல்லது வேறுமனிதனோ அவன்வசனத்தை ரஹஸ்யத்தில்கேட்கவேண்டும். அவனை அமாத்யனிடமிருந்து பயமின்றி ரக்ஷிக்கவும்வேண்டும். ஓ! பாரத! அபஹரிக்கத்தொடங்கின அமாத்யர்கள் அவனுக்கு மிகப்பெருங்கேட்டைச்செய்வார்கள். அரசனின்கோசத்தைஅழிக்கத்தொடங்கினமனிதர்கள் யாவரும் ஒன்றுசேர்ந்து அக்கோசத்தைரக்ஷிக்கமுயலும்மனிதனைப் பீடிப்பார்கள். அம்மனிதன் ரக்ஷிக்கப்படாவிடில் நாசமடைவான். இவ்விஷயத்திலும் காலகவிருக்ஷீயனென்னும்முனிவர் கோஸலதேசத்தரசனுக்குக்கூறிய இப்பழையஇதிஹாஸத்தை எடுத்துச்சொல்லுகிறார்கள். காலகவ்ருக்ஷீயரென்னும்முனிவர் கோஸலதேசத்தரசத்தன்மையை அடைந்த க்ஷேமதர்சியிடம் சென்றாரென்று கேள்விப்பட்டிருக்கிறோம். அவர் ஒரு கூட்டில்ஒருகாகத்தை அடைத்துக்கொண்டு அதிகாரிகளின்குற்றங்களை அரசனுக்குஅறிவிக்கவேண்டி க்ஷேமதர்சியென்னும் அரசனுடையராஜ்யமெங்கும் அடிக்கடி ஸஞ்சரித்துக்கொண்டிருந்தார். 'காகத்தைச்சேர்ந்தகல்வியை நான் கற்றிருக்கிறேன். நடந்தது நடக்கின்றது நடப்பதுயாவற்றையும் எனக்குக் காகங்கள் அறிவிக்கின்றன'

என்று பலமனிதர்களுடன்சொல்லிக்கொண்டு அவ்விராஜ்யத்தில் சுற்றிலும்சென்றஅம்முனிவர் அவ்வரசனின் அதிகாரிகள் எல்லாருடைய [1] குற்றத்தையும் தெரிந்துகொண்டார். அந்தராஜ்யத்தின்காரியமனைத்தையும் ஆங்காங்குள்ள அதிகாரிகளின் குற்றங்களையும் மிச்சமின்றி அறிந்தவரும் மிக்ககடுமையான நியமமுள்ளவருமான அம்முனிவர், 'நான் யாவற்றையுமறிந்தவன்' என்றுசொல்லிக்கொண்டு அரசனைக் காணவேண்டிக் காகத்துடன் சென்றார். அவர் கோஸலராஜனிடஞ் சென்று, அங்கு ஆபரணங்களாலலங்கரிக்கப்பெற்றுவிளங்கும் அமாத்யனைநோக்கி, '(ஓ! அமாத்யனே!) காகத்தின்வசனப்படி, இன்னவிடத்தில் இன்னகாரியம் உன்னால் செய்யப்பட்டிருக்கிறது. இவனும் இவனும்அதனையறிவார். அரசனுடையபொக்கசம் உன்னால் அபஹரிக்கப்பட்டது. இவ்விஷயத்தை இக்காகம் எனக்குச் சொல்லுகிறது. அதைச் சீக்கிரம் ஆலோசிக்கவேண்டும்' என்று சொன்னார். அப்போது அவ்விதமே கோசத்தை அபஹரித்த அங்குள்ளமற்றவர்களையும் பார்த்துச் சொன்னார். அம்முனிவரின்வசனம் சிறிதும்பொய் யாவதில்லையென்பது எவ்விடத்திலும் பிரஸித்தமாயிற்று. ஓ! குருச்ரேஷ்டனே! இப்படி அந்தரிஷியால் குற்றஞ்சாட்டப்பட்ட அதிகாரிகள்யாவரும் ஒன்றுசேர்ந்து இராவில்நித்திரைசெய்த அவரைமீறி அக்காகத்தைக் கொன்றுவிட்டார்கள். பொழுதுவிடிந்தஸமயத்தில் கூட்டில் அம்பினாலடிபட்டுக்கிடக்கும் காகத்தைக்கண்ட அந்தப்பிராம்மணர் க்ஷேமதர்சியென்னும் அரசனிடம்சென்று, "ஓ! ராஜனே! உயிருக்கும்பொருளுக்கும் பிரபுவும் ஈசுவரனுமான உன்னிடம் அபயத்தைவேண்டுகிறேன்; உன்னால் கட்டளையிடப்பெற்று உனக்கு ஹிதமான வசனத்தைச்சொல்லவிரும்புகிறேன். சூரனான உன்னிடத்திலும் மிகுந்ததிரவியங்கள் அபஹரிக்கப்படுகின்றன. இவ்விஷயத்தில் மிகத்துயரமுற்றவனும் நண்பர்கள் காரியத்தில் பெருங்கவலையுள்ளவனுமானநான் உனக்குஹிதத்தைவேண்டி ஸாரதி நல்லகுதிரையை (மீறுவது) போல உன்னைமீறியாவது உனக்குத்தெரிவிக்கவேண்டிய விருப்பத்தோடு நிறைந்த அன்புடன் இங்கு வந்தேன். அவ்விதம் வந்தமனிதனைப்பற்றி எப்பொழுதும் தன்மேன்மையைவேண்டி ஐசுவரியத்தைவிரும்பும் அறிவுள்ளவனும் மித்ரனுமானபுருஷன் பொறுமையுடன் இருக்கவேண்டும்" என்ற வசனத்தைச்சொன்னார். அரசன், "ஓ! பிராம்மணரே! நீங்கள் எதைவேண்டுமோ அதை என்னிடம் சொல்லலாம். எனக்கு ஹிதத்தைவிரும்பியநான் உங்கள் வச

1 ஸ்வாமித்ரோஹம்.

னத்தில் பொறுமையில்லாதிருக்கக் காரணமென்ன ? இவ்விஷயத்தில் உங்களிஷ்டத்தைச் சொல்லலாமென்று நான் உங்களுக்கு உறுதி மொழிசொல்லுகிறேன். ஓ! பிராம்மணரே! நீங்கள்சொல்லும் சொற்படி நான் செய்கிறேன்" என்றுசொன்னான். ரிஷி, "[1]குணங்களையும் குற்றங்களையும் பயங்களையும் பயத்தைச்சொல்லுகிறவர்களையும் அறிந்தநான் உன்னுடைய ஒழுக்கத்தை உனக்கு அறிவிக்கவேண்டுமென்று அன்புடன் உன் அருகில்வந்தேன். அரசனையடுப்பது கெட்டதென்று ஆசாரியர்களால் முன்னமே கூறப்பட்டிருக்கிறது. அரசனையடுத்துப்பிழைப்பது வேறுகதியற்றமனிதனுக்கும் மிகவும் இகழ்ச்சியான ஜீவனமாகும். அரசர்களுடன்சேர்ந்த மனிதனைக் கொடிய ஸர்ப்பங்களுடன்சேர்ந்தவனாகவே பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அரசர்களுக்குப் பகைவர்களும் நண்பர்களும் பலராகையால் அவர்களனைவரிடமிருந்தும் அரசனையடுத்தவர்களுக்குப் பயம் உண்டென்று சொல்லுகிறார்கள். அரசனே! அவ்விதமே ஒருமுகூர்த்தகாலத்தில் அரசனிடமிருந்து இவனுக்குப் பயம்நேரும். அரசனிடம் அஜாக்ரதையின்றி ஒரே உறுதியாகஇருக்கமுடியாது. ஸம்பத்தைவிரும்பிய மனிதன் அரசனிடம் எவ்விதத்திலும் அஜாக்ரதைசெய்யக்கூடாது. அஜாக்ரதையால் மனிதனுடையபுத்தி கெடும். புத்திகெட்டுப்போனவனுக்கு உயிரும் இராது. நல்லபடிப்புள்ளமனிதன் உயிருக்கும் பொருளுக்கும் ஈசனும் பிரபுவுமான அரசனிடம் ஜ்வலிக்கும் அக்நியிடத்தும்கோபங்கொண்டஸர்ப்பத்தினிடத்தும் நெருங்குவதுபோல நெருங்கவேண்டும். மனிதன் சொல், இருப்பு, செய்கை, அருகிற் செல்லுவது, சேஷ்டை, நினைப்பு, [2]போதல் இவைகளிலுள்ளகுற்றங்களில் சங்கையுள்ளவனாய் நாமில்லையென்ற எண்ணத்துடனும் எப்போதும் முயற்சியுடனும் அரசனை உபசரித்துவரவேண்டும். ஓ! அரசனே! 'அரசன் அன்புள்ளவனாயிருந்தால் தெய்வம்போல எல்லா இஷ்டங்களையும் பூர்த்திசெய்வான். அவன் கோபங்கொண்டால் அக்நிபோல வேருடன்கொளுத்திவிடுவான்' என்று யமன் கூறினான். அவன்கூறியது உண்மையாகவேயிருக்கிறது. அடிக்கடி உனக்குப் பெரும்பொருளை நான் உண்டாக்குவேன். என்னைப்போன்ற மந்திரி ஆபத்துஸமயத்தில் அறிவைக்கொடுத்து உதவிபுரிவான். அரசனே! ஆனால் என்னுடையஇக்காகமானது அந்தகனிடம்அனுப்பப்பட்டது.

---

[1] வேறுபாடத்துக்கு, 'உன்னுடையபுண்யங்கள் பாபங்கள் வேலைக்காரரிடமிருந்து உனக்குநேர்ந்தபயங்கள்' என்பதுபொருள்.

[2] இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது.

இவ்விஷயத்தில் நான் உன்னிடம் குற்றம்பாராட்டவில்லை; உனக்குப் பிரியராயிருக்கிறவர்களிடமும் குற்றம்பாராட்டவில்லை. உன் ஹிதர்களையும் அஹிதர்களையும் நீ அறிந்துகொள். பரோக்ஷமான புத்தியுள்ளவனாக நீ இருக்கவேண்டாம். திரவியங்களைக்கவர்வதில் மிகமுயர்ச்சியுள்ளவர்களாகவே உன்வீட்டில்வஸிப்பவர்களும் பிராணிகளுக்குத் துன்பத்தைவிரும்புகிறவர்களுமான சிலமனிதர்கள் என்னிடம்பகை பாராட்டிக் காகத்தைக்கொன்றார்கள். உனக்குப்பிறகு ராஜ்யத்தை அடையலாமென்னும் ஆசையால் உள்ளிலுள்ள சமையற்காரர்முதலிய மனிதருடன் ஒத்துப்பேசிக்கொண்டு உனக்கு விநாசத்தைத்தேடுகிறவர்களின்விருப்பம் முடிவுபெறுமோ? அன்றோ? அரசனே! நான் அவர்களிடமுள்ளபயத்தால் வேறுஆச்ரமம் செல்லப்போகிறேன். பிரபுவே! கபடத்தால்அவர்கள்எய்தஅம்பு என்காகத்தின்மீதுபாய்ந்ததால் அக்காகம் யமலோகம்போய்ச் சேர்ந்தது. அரசனே! இவ்விஷயம் தவவலிமையினாலுண்டான ஞானக்கண்ணால் என்னால் காணப்பட்டது. கட்டையும் கல்லும் முள்ளுமுள்ளதும் சிங்கம்புலிகளால் மிகப்பயங்கரமானதும் செல்லமுடியாததும் பொறுக்கமுடியாததுமான இமயமலையின்குகையைக் கடப்பதுபோலப் பலமுதலைகளும் மீன்களும் நீர்யானைகளுமுள்ளதும் திமிங்கிலக்கூட்டங்களால் சூழப்பட்டதுமான (ராஜ நீதியென்னும்) இந்நதியைச் சிறியஇக்காகத்தை உபாயமாகக்கொண்டு கடந்தேன். செல்லத்தகாத இருளுள்ளவிடத்திற்குச்செல்ல விளக்கும் ஜலமுள்ளவிடத்திற்குக் கப்பலும் உபாயமாகஇருக்கின்றன. அரசர்களின் கோட்டையில்பிரவேசிப்பதில் உபாயத்தைப் பண்டிதர்களும் அறியவில்லை. உன்கபடமுள்ளராஜ்யம் இருளைப்போல அவிவேகமுள்ளதாயிருக்கிறது. இங்கு உன்னாலும் நம்பிக்கையுடனிருக்கமுடியாது. நான் எவ்விதமிருக்கக்கூடும்? ஆகையால், இவ்விடத்தில் வஸிப்பது நன்மையன்று. இங்கு நன்மையும் தீமையும் ஸமமாயிருக்கின்றன. நன்மைசெய்தவனுக்கே இங்கு கொலைநடக்கிறது; பாவஞ்செய்தவனைப்பற்றி ஸந்தேஹிப்பதில்லை. பாபத்துக்குக்கொலையும் புண்ணியத்திற்கு ஒருதுன்பமுமில்லாமலிருப்பதும் நீதியாகும். இவ்விடத்தில் தாமஸித்திருப்பது யுக்தமன்று. அறிவுள்ளவன் இவ்விடத்திலிருந்து வேகமாக வெளியிற்போகவேண்டும். அரசனே! உன்னுடையஇந்தராஜநீதியைப் பலசுழல்களுள்ளதும் தெப்பத்தைமுழுகச்செய்வதுமான ஸீதையென்னும் நதியைப் போலவும் யாவரையும் கொல்லத்தக்க வலையைப்போலவும் நினைக்கிறேன். தேன்விழுவதுபோன்றநீ விஷம்கலந்த போஜனம்போலிருக்

கிறாய். உனதுஎண்ணம் அஸத்துக்களுடையதுபோலிருக்கிறதே தவிர ஸத்துக்களுடையதுபோலில்லை. ஓ! அரசனே! நீ பாம்புகளால்சூழப்பட்ட கிணறுபோலிருக்கிறாய். அரசனே! நீ செல்லமுடியாதவழியுள்ளதும் பெரியகரையுள்ளதும் [1]மூங்கிற்காடு பிரம்புக்காடுகளால்சூழப்பட்டதும் மதுரமானஜலமுள்ளதுமான நதிபோலிருக்கிறாய்; நாய்களாலும் கழுகுகளாலும் நரிகளாலும்சூழப்பட்ட ராஜஹம்ஸம்போலிருக்கிறாய். ஒருபெரியமரத்தை அடுத்துவளர்ந்த பெரிய கொடிகளின்திரள் அம்மரத்தை மூடிக்கொண்டு அதற்குமேல் வியாபித்துவளர்ந்தபின் தன்னைப்பிடித்த கொடியகாட்டுத்தீயினால் அம்மரத்தையுமெரிப்பதுபோல உன்னையடுத்த அமாத்தியர்கள் இருக்கிறார்கள். அரசனே! அவர்களைச் சோதித்துப்பார். அரசனே! உன்னால் அதிகாரம்கொடுக்கப்பட்டவர்களும் உன்னால் பரிபாலிக்கப்பட்டவர்களுமான மனிதர்களே உன்னை அவமதித்து உனதுநண்பனைக்கொல்ல விரும்புகிறார்கள். அரசனுன உன்னுடையசீலத்தையும் உன்னை [2] அடுத்துப்பிழைப்பவர்களுடைய ஸ்வபாவத்தையும் அறியவிருப்பங்கொண்டநான் வீரனுடையமனைவியின்வீட்டில் ஜாரபுருஷன்போலவும் உள்ளே ஸர்ப்பமிருக்கிறவீட்டில் வஸிப்பதுபோலவும் மிகுந்த சங்கையுடன் அஜாக்ரதையின்றி என்னைரக்ஷித்துக்கொண்டு இங்கு வஸித்துவந்தேன். அரசர்களுள் மிகச்சிறந்தவனே! 'அரசன் இந்திரியஜயமுள்ளவனு? இவனுள்ளத்திலுள்ள காமமுதலியஉட்பகைகள் ஜயிக்கப்பட்டனவா? அரசன்பிரஜைகளிடத்தும் பிரஜைகள் அவனிடத்தும் பிரீதியுடனிருக்கிறார்களா?' என்று அறியவிருப்பமுள்ளவனுகி நான் உன்னுடையஇத்தேசத்திற்கு வந்தேன். ராஜனே! அவ்விதம்வந்தஎனக்குப் பசியுள்ளவனுக்குப்போஜனம்போல நீ பிரியமாயிருக்கிறாய். தாகமில்லாதவனுக்குத் தண்ணீர்போல உன் அமாத்தியர்கள் எனக்குப் பிரியமாயிருக்கவில்லை. அவர்கள் நான் உனதிஷ்டத்தைச்செய்கிறவனென்றகாரணத்தால் என்காகத்தைக்கொன்று எனக்குக் குற்றத்தைச்செய்தார்களேயன்றி இதில் வேறுகாரணமில்லையென்பதில் எனக்குச் சந்தேகமில்லை. அவர்களுக்கு நான் ஒருதுன்பத்தையும் செய்யவில்லை. அவர்களின்குற்றத்தைத் தெரிவித்தது அவர்களுக்குத் துன்பஞ்செய்ததுபோலாயிற்று. வாலில் அடிக்கப்பட்ட அரவினிடம்போலக் கெட்டஎண்ணமுள்ள பகைவனிடம் பயமிருக்கவேண்டும்" என்றுசொன்னர்.

---

1 'திருடர்களுக்கிடமுமானகாவேரியென்னும்நதி' என்பதுவேறுபாடம்.

2 வேறுபாடம் கொள்ளப்பட்டது.

அரசன், "ஓ! பிராம்மணர்களிற்சிறந்தவரே! இத்துன்பத்திற்கு விசேஷமானபரிஹாரத்தாலும் அதிக ஆதரவாலும் பூஜிக்கப்பெற்று என்வீட்டில் நீர் திரும்பவும் வஸிக்கவேண்டும். பிராம்மணரே! உம்மிடம் அப்ரியத்தைப்பாராட்டும்மனிதர்கள் என்வீட்டில்வஸிக்கவேண்டாம். இவர்களுக்குநடக்கும்விதியைப் பிறகு நீரே நேரில்தெரிந்துகொள்ளலாம். பகவானே! தண்டநீதி நன்குசெலுத்தப்படவும் நல்ல கர்மங்கள்செய்யப்படவும் நன்றாகஆலோசித்து க்ஷேமத்திற்குரியவழியில் நீர் என்னை ஏவுதல்செய்யவேண்டும்" என்றுசொன்னான். முனிவர் சொல்லத்தொடங்கினர். "நீ இக்குற்றத்தைவெளியிடாமல் அமாத்யர்களில் ஒவ்வொருவனையும்அதிகாரபலமில்லாதவனாகச்செய். பிறகு கொலைக்குத்தக்ககாரணத்தை அறிவித்து முறையே ஒவ்வொருமனிதனாகக் கொல்லவேண்டும். ஒரேகுற்றமுள்ள பலமனிதர்கள் ஒன்றுசேர்ந்து முட்கள்போலக் கொடியராயிருப்பவர்களையும் கொல்லுவார்கள். பொருளில்கட்டுள்ள உலகம்யாவும் பொருளாலேயே கட்டுப்படவேண்டும். மனிதர்களின் அஹங்காரம் பொருளை அடுத்திருக்கிறது. ஆகையால், அவர்களிடமிருந்து பொருளைவிலக்கவேண்டும். ஒருமனிதனின் ஒருகுற்றத்திற்காக அவனுக்குவிரோதியானமனிதனை அவனிடம் அனுப்பவேண்டும். அம்மனிதன் அவனிடம்பலகுற்றங்களை வெளியிட்டு அவனுடையபொருளைப் பிடுங்கிவிடுவான். சிலரிடம் நன்மொழிகூறியும் சிலருக்கு ஒருவருக்கொருவர்நேசத்தைக்கெடுத்தும் விரோதத்தைஉண்டுபண்ணவேண்டும். அரசனே! பிறகு தண்டிக்கவேண்டும். அரசனே! அறிவுள்ள அரசன் தன்உள்ளெண்ணத்தை வெளியாகாமல்மறைத்துக்கொண்டு பில்வக்காயைக்கொண்டேபில்வக்காயை அடிப்பதுபோல அசுத்தனானமந்திரியை அச்சுதனானமனிதனைக்கொண்டே நாசஞ்செய்யவேண்டும். ஆகையால், ராஜனே! நமதுராஹஸ்யம் மாறுமோவென்றபயத்தால் உனக்கு இப்படிஉபதேசிக்கிறேன். நாங்களோ தயையுள்ளவர்களும் மெதுவாகத்தண்டிப்பவர்களுமான பிராம்மணர்களென்பது பிரஸித்தம். நாங்கள் எங்களுக்குப்போல உனக்கும் மற்றவர்களுக்கும் க்ஷேமத்தைவிரும்புவோம். அரசனே! என்னை உனக்கறிவிக்கிறேன். காலகவ்ருக்ஷீயனென்று பெயருள்ள ரிஷியான நான் உனக்குச்சொந்தமுள்ளவன். உண்மையான சொல்லுள்ளவனும் இஷ்டனுமானநான் உனதுதந்தையின் ஸ்நேஹிதனாயிருந்தேன். ராஜனே! உன்தகப்பன் காலஞ்சென்றதும் ராஜ்யம்கஷ்டப்படும்போது நான் எல்லாஆசைகளையும்விலக்கிவிட்டுத் தவஞ்செய்யச்சென்றேன். திரும்பவும் உனக்குப் பகைவர்களிடம் மித்திரர்க

ளென்றபிரமம்வேண்டாமென்று இவ்விஷயத்தை ஸ்நேஹத்தால் உனக்குத்தெரிவிக்கிறேன். ராஜனே! ஸுகதுக்கங்களையும்பார்த்துத் தன் முயற்சியின்றி ராஜ்யத்தை அடைந்து மந்திரிகளிடம் ராஜ்யத்தைஇருக்கச்செய்து என் குற்றமுள்ளவனாகிறாய்?" என்றுசொன்னார். பிறகு பிராம்மணர்களிற்சிறந்தஅம்முனிவர் புரோஹிதவகுப்பில்சேர்ந்ததும் ராஜகுலத்தில் மிகவிசேஷமான துதிமொழிகள் உண்டாயின. கீர்த்தியுள்ள கோசலதேசத்தரசனுக்குப் பூமியை ஒரேகுடையுள்ளதாகச் செய்தபின் காலகவ்ருக்ஷீயரென்னும்முனிவர் உத்தமமானயாகங்களைச் செய்தார். கோஸலதேசத்தரசனும் அவருடைய ஹிதமானவசனத்தைக்கேட்டுப் பூமியை ஜயித்தான். ஓ! பாரத! அம்முனிவர்சொல்லியபடியே அரசன் செய்துவந்தான்" என்றுசொன்னார்.

## எண்பத்துமூன்றுவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஸபையோர் மித்ரர் ஸேனைத்தலைவர் மந்திரிகள் முதலியோரின்லக்ஷணமுரைத்தது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிரஜைகளின்பதியான பிதாமஹரே! வியவகாரஸபையின் அதிகாரிகளும், யுத்தத்தில் உதவிசெய்பவர்களும், ஸ்நேஹிதர்களும், ஸேனைத்தலைவன்முதலியவர்களும், மந்திரிகளும் எவ்விதக்குணமுள்ளவர்களாயிருக்கவேண்டும்?" என்றுகேட்டனர். பீஷ்மர், "உன்னுடைய வ்யவஹாரஸபையினதிகாரிகள் அகாரியத்தில் லஜ்ஜையுள்ளவர்களும், அடக்கமும் ஸத்தியமும் நேர்மையுமுள்ளவர்களும், நீதிஅநீதிகளைப்பகுத்துக்கூற நல்லசக்தியுள்ளவர்களுமாயிருக்கவேண்டும். ஓ! குந்தியின்குமாரனானபாரதனே! உடனிருப்பவர்களும் மிகச்சூரர்களும் பிராம்மணர்களுக்கு ஹிதர்களும் பலகல்விகளுள்ளவர்களும் மிக்க ஸந்தோஷமுள்ளவர்களும் வேலைகளில்பெரியஉத்ஸாகமுள்ளவர்களுமானமனிதர்களை நீ எல்லாஆபத்துக்களிலும் உதவிசெய்பவர்களாக அடையவிரும்பவேண்டும். நற்குலத்திற்பிறந்து பூஜிக்கப்பெற்றமனிதன் எப்பொழுதும் தன்சக்தியை மறைக்கமாட்டான். அவன் சுத்தமோ அசுத்தமோ துன்பமுள்ளதோ கொலையுள்ளதோ மிகவிசேஷமாக நன்மையையேதொடர்ந்து பரிபாலித்துவருவான் (ஸ்நேகிதன் இக்குணமுள்ளவனாயிருக்க வேண்டும்.) உன்னுடையஸேனைத்தலைவன்முதலியவர்கள் நல்லதேசத்திலும் நல்லகுலத்திலுமுண்டானவர்களும் நல்லஅறிவும்ரூபமுமுள்ள

வர்களும் பலகல்விகளுள்ளவர்களும் ஸமர்த்தர்களும் நல்லபுத்தியுள்ள வர்களுமாயிருக்கவேண்டும். அப்பா! கெட்டகுலத்தில் பிறந்தவர் களும் ஆசையுள்ளவர்களும் கொடுமையுள்ளவர்களும் லஜ்ஜையில் லாதவர்களுமான மனிதர்கள் (உண்ட) கையில் [1]ஈரமுள்ளவரையில் உன்னையனுஸரிப்பார்கள். அரசனானவன் நல்லகுலத்தில்பிறந்தவர்க ளும் நல்லஸ்வபாவம்பொருந்தியவர்களும் இங்கிதந்தெரிந்தவர்களும் கொடுமையற்றவர்களும் தேசகாலங்களையும் அவைகளுக்குத்தக்க விதிகளையும் அறிந்தவர்களும் எஜமானனுடையகாரியத்தில் நன்மை யையேவிரும்புகிறவர்களுமான மனிதர்களை எப்பொழுதும் எல்லா விஷயங்களிலும் மந்திரிகளாக நியமிக்கவேண்டும். பொருளாலும் மேலானபதவியை அடைவித்தலாலும் ஆடைஆபரணமுதலியவை கொடுப்பதாலும் பிரீதியாலும் இன்பமான பலபோகங்களாலும் எவர் களைப் பயனுள்ளவர்களாயிருக்கவிரும்புகிறாயோ உன்னுடைய அந்த மனிதர்கள் ஸுகமடைவார்கள். மாறுதநடையுள்ளவர்களும் நல்லொழு க்கமுள்ளவர்களும் விரதங்களைச்செய்தவர்களும் பெரியபுத்தியுள்ள வர்களும் உண்மைபேசுகிறவர்களும் எப்பொழுதும் ஆசையுள்ளவர் களுமானவித்வான்கள் உன்னை விடமாட்டார்கள். மந்தபுத்தியுள்ள வர்களான எந்தக்கெட்டமனிதர்கள் தர்மாதர்மத்தின்வியவஸ்தையை அறியவில்லையோ அவர்களிடத்திலும் தம்ஆசாரம்விட்டொழுகினமனி தர்களிடத்திலும் சேர்க்கையில்லாமலிருக்கவேண்டும். பலஜனங்க ளின் கூட்டத்தைவிலக்கி ஒருமனிதனைவிரும்புவது கூடாது. இரண் டில் ஒன்றை அடையவேண்டிவந்தால் பலமனிதர்களைவிட ஒருமனி தன் மிகச்சிறந்தவனாயிருப்பானாகில் அம்மனிதனுக்காகக் கூட்டத் தைவிலக்கலாம். உத்தமமனிதனின் லக்ஷணம் இவ்விதமாகும். பராக் கிரமமுள்ளவனும் கீர்த்தியைப் பெரிதாகக்கொண்டவனும் ஆசாரத் தில் நிலைபெற்றவனும் ஸமர்த்தர்களைப்பூஜிப்பவனும் பகைக்கத்தகா தவர்களைப் பகைபாதவனும் காமம், பயம், கோபம், லோபம் இவை களால் தர்மத்தைவிடாதவனும் அகங்காரமற்றவனும் ஸத்தியவசன முள்ளவனும் சக்தியுள்ளவனும் மனத்தைஜயித்தவனும் மானமுள்ள வனுமானமனிதனை எல்லாஸமயங்களிலும் பரீக்ஷைசெய்து ஆலோ சனைசெய்யும்மந்திரியாகச் செய்துகொள்ளவேண்டும். ஓ! பார்த்த! நற்குலத்தில்பிறந்தவனும் குலத்திற்குரியபெருமையுள்ளவனும் பொ றுமையுள்ளவனும் ஸமர்த்தனும் நல்லபுத்தியுள்ளவனும் சூரனும் நன்றியறிந்தவனும் ஸத்தியமுள்ளவனுமாயிருப்பது உத்தமபுருஷ

[1] பிரயோஜனத்தை அடைகிறவரையில் என்பது கருத்து.

னுடைய லக்ஷணமாகும். இவ்விதமிருப்பவனும் அறிவுள்ளவனுமான அவ்வுத்தமபுருஷனுக்குப் பகைவர்களும் மிகப்பிரீதியுள்ள மித்திரர்களாவார்கள். அடங்கியமனமுள்ளவனும் சிக்ஷிக்கப்பட்டபுத்தியுள்ளவனும் ஐசுவரியத்தைவிரும்புகிறவனுமான அரசன் இதற்குமேல் தன் தேசத்தில் நல்லகுலத்தினுதித்தவர்களும் நம்புதலுள்ளவர்களும் பிறர் வசமாகாதவர்களும் மாறுதலில்லாதவர்களும் எல்லாவிதத்திலும் பரீக்ஷிக்கப்பட்டவர்களுமான தன்னைச்சேர்ந்தமனிதர்களைக்கொண்டு மந்திரிகளின் குணதோஷங்களைப் பரீக்ஷிக்கவேண்டும். ஐசுவரியத்தை விரும்புகிறவனும் மேன்மையை விரும்புகிறவனுமானபுருஷன் நல்ல ஜாதியில்ஜனித்தவர்களும் வேதமார்க்கத்தில் செல்லுகிறவர்களும் பரம்பரையாகவந்தவர்களும் அகங்காரமில்லாதவர்களுமான மனிதர்களை மந்திரிகளாகவைக்கவேண்டும். இவர்களுக்கு வணக்கத்துடன் கூடினபுத்தியும் அழகானஸ்வபாவமும் பராக்கிரமமும் தைரியமும் பொறுமையும் சுத்தியும் ஸ்வாமிபக்தியும் நிலைமையும் காரியங்களை வகிக்குந்திறமையும் இருக்கவேண்டும். ராஜனே! அரசன் எப்பொழுதும் காரியங்களைவகிக்கத்தக்க பெருமையுள்ளநற்குணங்களைப் பரீக்ஷைசெய்து கபடமற்றவர்களும் தனத்தைப் பெருகச்செய்கிறவர்களும் அளவுக்குமிஞ்சாமல் பேசுகிறவர்களும் வீரர்களும் பகுத்தறிய ஸமர்த்தர்களும் நற்குலத்திலுதித்தவர்களும் தைரியம்பொருந்தியவர்களும் இங்கிதந்தெரிந்தவர்களும் குரூரமில்லாதவர்களும் தேசகாலங்களுக்குத்தக்கவிதிகளையறிந்தவர்களும் எஜமானனின்காரியத்தில் நன்மையைவிரும்புகிறவர்களுமான ஐந்துமந்திரிகளை எப்பொழுதும் எல்லாக்காரியங்களிலும் இருக்கச்செய்யவேண்டும். அல்பசக்தியுள்ளவர்களுடன் சேர்ந்தமனிதன் ஒருஸமயத்திலும் உறுதிபெறமாட்டான். அவன் நிச்சயமாக எல்லாக்காரியங்களிலும் ஸந்தேகத்தையே உண்டுபண்ணுவான். இவ்விதம் சுபமான நல்லவம்சத்தில்பிறந்தவனுயினும் அறம்பொருள்இன்பங்களுடன்கூடினமந்திரியானவன் கல்விக்குறைவுள்ளவனுனல் மந்திராலோசனையைச்சோதிக்க ஸமர்த்தனல்லன். அவ்விதமே பலகல்விகளுள்ளவனுயிருந்தாலும் கெட்டகுலத்தில்பிறந்தவன், அழைத்துப்போகும்மனிதனற்றகுருடன்போல ஸூக்ஷ்மமானகாரியங்களில் வழிதெரியாமலிருப்பான். நல்லபுத்தியுள்ளவனும் சாஸ்திரங்கள்தெரிந்தவனும் உபாயங்களையறிந்தவனுமாயிருந்தாலும் நிலைமையற்ற எண்ணமுள்ளமனிதன் நீண்டகாரியத்தை நிறைவேற்ற வல்லவனுகான். கல்வியில்லாததுர்ப்புத்தியுள்ளவ்லதேசத் வேலையைச்செய்ய ஆரம்பித்ததனுல்மாத்திரம் அக்காரியத்பழமுள்ள

ஷங்கள் புலப்பட நியாயமில்லை. யஜமானபக்தியில்லாதமந்திரியிடம் நம்பிக்கைவைப்பது கூடாது. ஆகையால், பக்தியில்லாதமனிதனிடம் ஆலோசனையை வெளிப்படுத்தக்கூடாது. கபடமுள்ள அவன் அக்னியானது வாயுவினால் உண்டுபண்ணப்பட்ட வழிகளால்சென்று மரத்தைக்கொளுத்துவதுபோல மந்திரிகளுடன்சேர்ந்து அரசனைத் துன்பப்படுத்துவான். ஒருஸமயம் அரசன் கோபங்கொண்டு அதிகாரத்திலிருந்தே விலக்கிவிடுவான்; கோபங்கொண்டு வாக்கால் நிந்திப்பான்; திரும்பவும் அன்புள்ளவனாயிருப்பான். அவைகள்யாவும் பக்தியுள்ளவனால் பொறுக்கத்தக்கனவாகும். மந்திரிகளுக்கும் இடியின்தொனி போன்றகோபம் உண்டாகும். எஜமானனுக்கு ஹிதத்தைச்செய்யும் விருப்பத்தால் அவைகளை எவன் அடக்கிக்கொண்டிருக்கிறானோ ஸமமானஸுகதுக்கமுள்ள அம்மனிதனிடம் காரியங்களைக் கேட்கவேண்டும். கபடமுள்ளமனிதன் எஜமானபக்தியுள்ளவனும் மற்றஎல்லாக்குணங்களும்பொருந்தியவனும் ராஜநீதியில் நல்லஅறிவுள்ளவனுமாயிருந்தாலும் அரசனின் ஆலோசனையைக் கேட்கத்தக்கவனல்லன். சத்துருக்களுடன் சேர்ந்து [1] பிறர்களை வெகுமதியாதமனிதன் சத்துருவென்று அறியத்தக்கவன். அவனும் ஆலோசனையைக்கேட்கத்தக்கவனல்லன். அறிவில்லாதவனும் அசுத்தனும் கர்வமுள்ளவனும் சத்துருக்களையடுப்பவனும் தன்னைப்புகழுகிறவனும் கோபமும் லோபமுமுள்ளவனுமான அமித்திரன் ஆலோசனைகேட்கத்தக்கவனல்லன். ஸ்வாமிபக்தியுள்ளவனும் பலகல்வியுள்ளவனும் பூஜிக்கப்பட்டவனும் பொருள் உதவி பெற்றவனுமாயிருந்தாலும் புதியமனிதன் ஆலோசனையைக் கேட்கத்தக்கவனல்லன். எந்தமனிதனின்தந்தை முன்னொருஸமயத்தில் அநீதியாகத்துன்பப்படுத்தப்பட்டானோ அவன் மர்யாதையால் அதிகாரத்தில்வைக்கப்பட்டாலும் ஆலோசனையைக் கேட்கத்தக்கவனல்லன். மித்திரனான எந்தமனிதன் சிறியகாரணத்தாலும் பொருள்தண்டம் விதிக்கப்பட்டவனோ அவன் மற்றக்குணங்களுள்ளவனானாலும் திரும்ப ஆலோசனையைக் கேட்கத்தக்கவனல்லன். [2] சிக்ஷிக்கப்பட்டபுத்தியுள்ளவனும் மேதாவியானபண்டிதனும் தன்தேசத்திலுண்டானவனும் சுத்தனும் எல்லாக்காரியங்களிலும் பரிசுத்தனுமான மனிதன் ஆலோசனைகேட்கத்தக்கவன். அறிவும் போறிவும்பொருந்தியவனும் தன்னுடையவும் சத்துருவினுடையவும் எஜமானன் மந்திரிமுதலிய பிரகிருதிகளையறிந்தவனும் அரசனுடைய

தன்றியறி ...டணத்திலுள்ள ஜனங்களை' என்பது வேறுபாடம்.

...புள்ள.

ஆத்மாவுக்குச்சமமான ஸ்நேஹிதனுமானமனிதன் ஆலோசனைகேட்கத்தக்கவன். ஸத்தியவசனமுள்ளவனும் நல்லசீலம்பொருந்தியவனும் ரகஸ்யமான ஆலோசனையைரக்ஷிக்கத்தக்க ஆழ்ந்தபுத்தியுள்ளவனும் லஜ்ஜையுள்ளவனும் கொடுமையில்லாதவனும் தகப்பன்பாட்டன்பரம்பரையாகவந்தவனுமானமனிதன் ஆலோசனைகேட்கத்தக்கவன். ஸந்தோஷமுள்ளவனும் ஸாதுக்களாலங்கீகரிக்கப்பட்டவனும் ஸமர்த்தனும் பாபங்களில்வெறுப்புள்ளவனும் ஆலோசனைதெரிந்தவனும் ஸமயமறிந்தவனும் சூரனுமானமனிதன் ஆலோசனைகேட்கத்தக்கவன். ஓ! அரசனே! தண்டஞ்செலுத்தவிருப்பமுள்ளவன் இவ்வுலகம்யாவற்றையும் நன்மொழியால் தன்வசமாக்கச் சக்தியுள்ளமனிதனிடம் ஆலோசனைசெய்யவேண்டும். பட்டணத்திலுள்ளவர்களும் கிராமத்திலுள்ளவர்களும் தர்மப்படி எந்தமனிதனிடம் நம்பிக்கையடைந்திருக்கிறார்களோ அவ்விதமிருப்பவனும் யுத்தத்தில் சக்தியுள்ளவனும் நீதியில் விசேஷமான அறிவுள்ளவனுமானமனிதன் ஆலோசனைகளுக்குத்தக்கவன். ஆகையால், இவ்விதக்குணங்கள்யாவும் பொருந்தியவர்களும் நன்குபூஜிக்கப்பட்டவர்களும் அரசன்அமாத்தியன்முதலிய பிரகிருதியை அறிந்தவர்களும் பெருமையை விரும்புகிறவர்களுமான மந்திரிகள் மூன்றுபேர்களுக்குக் குறையாமலிருக்கவேண்டும். அவர்கள் தம்பிரகிருதிகளிலும் சத்துருவின்பிரகிருதிகளிலுமுள்ள ரந்திரங்களைக் கவனிக்கவேண்டும். மந்திரிகளுடைய ஆலோசனையை மூலமாகக்கொண்டுதான் அரசனுடையராஜ்யம் பெருகவேண்டும். தன்னுடைய இடைவெளியைப் பிறன்பாராமலும் பிறனுடையஇடைவெளிகளில் தான்தொடர்ந்துசெல்லவும் வேண்டும். ஆமைபோலத் தன் அங்கங்களைமறைத்துக்கொண்டு தன்னுடையஇடைவெளியைப் பிறன்பாராவண்ணம் காக்கவேண்டும். அறிஞர்களானமந்திரிகள் ராஜ்யத்திற்குரிய ஆலோசனையை வெளியாகாமல் ரக்ஷிக்கிறவர்களும் அரசன் அவ்வாலோசனையைக் கவசமாகக்கொண்டவனும் மற்றஜனங்கள் அவ்வாலோசனைக்கு அங்கங்களும் ஆகிறார்கள். ரஹஸ்யமான தூதர்களை மூலமாகக்கொண்ட ராஜ்யத்திற்கு ஆலோசனையொன்றே ஸாரமென்று (அறிஞர்கள்) கூறுகிறார்கள். கோபத்தையும் கர்வத்தையும் அகங்காரத்தையும் அஸூயையையும் முற்றும்விலக்கிவிட்டுத் தம் ஜீவனநிமித்தம் மந்திரிகள் அரசனை அனுஸரித்திருப்பார்களானால்ஸுகித்திருப்பார்கள். எப்பொழுதும் [1]ஐவகைக்கபடங்களில்லாதமந்திரி

[1] மனத்தாலும் வாக்காலும் சரீரத்தாலும் இவைகளில் இரண்டாலும் மூன்றாலும் செய்யப்படுவன.

களுடன் அரசன் ஆலோசிக்கவேண்டும். அந்த மூன்றுமந்திரிகளின் மூன்றுவிதமான அபிப்பிராயத்தைத்தெரிந்துகொண்டு அதில் தன் மனத்தைச்செலுத்தி அவர்களுடைய அந்த அபிப்பிராயத்தையும் தன்னபிப்பிராயத்தையும் மேலான ஆலோசனைக்காலத்தில் அறம்பொருளின்பங்களையறிந்த குருவானபிராம்மணரிடஞ்சென்று தெரிவித்துக் கவனத்துடன் மேலானஅபிப்பிராயத்தைக் கேட்கவேண்டும். அவராலசெய்யப்படும்தீர்மானம் மற்றவர்களுக்கும் ஸம்மதமாகஇருந்தால் அவ்வாலோசனைவழியை அகங்காரமின்றிச் செலுத்தவேண்டும். இவ்விதம் ஆலோசனையின்உண்மையானபொருளில் நிச்சயத்தையறிந்தவர்களான ஜனங்களுடன் எப்பொழுதும் ஆலோசிக்கவேண்டுமென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஆகையால், எப்பொழுதும் இவ்விதம் பிரஜைகளைச்சேர்ப்பதில் ஸமர்த்தமான அவ்வாலோசனையை நடத்தவேண்டும். அவ்வாலோசனைநடக்குமிடத்தில் குள்ளரும் கூனரும் மெலிந்தவரும் முடவரும் குருடரும் அசடரும் நபும்ஸகரும் ஸ்திரீயும் இருத்தல்கூடாது; குறுக்காகவும் முன்னும்பின்னும் மேலுங்கீழும் எவ்விதத்திலும் ஸஞ்சரிக்கக்கூடாது. ஒருவருமில்லாத வீட்டிலிருந்தோ குசம்காணவில்லாததும் பிரகாசமுமான இடத்திலிருந்தோ வாக்கிலும் அங்கங்களிலும் எல்லாவிதமானதோஷங்களையும்விலக்கிவிட்டு ஸமயக்குறைவுநேராவண்ணம் காரியத்தை நன்றாக ஆலோசிக்கவேண்டும்.

---

## எண்பத்துநான்காவது அத்தியாயம்.

### ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், பிரியவசனம்பேசுவதைப்பற்றி இந்திரனுக்கும் பிருஹஸ்பதிக்கும்நடந்த ஸம்பாஷணத்தைச் சொல்லியது.)

ஓ! யுதிஷ்டிர! இவ்விஷயத்திலும் பிருகஸ்பதிக்கும்இந்திரனுக்கும்நடந்தஸம்பாஷணையான இப்பழையஇதிஹாஸத்தை எடுத்துச் சொல்லுகிறார்கள். இந்திரன், "ஓ! பிராம்மணரே! எந்தஒருவிஷயத்தை நன்றாகநடத்திவரும் புருஷன் எல்லாப்பிராணிகளுடைய ஸம்மதத்தையும் பெரியகீர்த்தியையும் பெறுவான்?" என்றுகேட்க, பிருஹஸ்பதி சொல்லத்தொடங்கினார்.

"ஓ! இந்திர! உண்மையான பிரியவசனமென்ற ஒருவிஷயத்தை நன்றாகநடத்திவரும்புருஷன் ஸர்வப்ராணிகளுடைய ஸம்மதத்தையும் பெறுவான். ஓ! இந்திரனே! எல்லாஉலகங்களுக்கும் ஸ—கத்தைக்

கொடுக்கும் இவ்வொருவிஷயத்தை நடத்திவரும்மனிதன் எல்லாப் பிராணிகளிடத்திலும் எப்பொழுதும் பிரியமாகஇருப்பான். இவ்வுலகில் பிரியவசனம்பேசாதஎந்தமனிதன் எப்பொழுதும் புருவக்கோணலுள்ளமுகத்துடன் ஒன்றையும்பேசாமலிருக்கிறானோ அவன் உலகங்களுக்கு வெறுக்கத்தக்கவனாகிறான். எந்தமனிதன் எவரையுங்கண்டவுடன் புன்சிரிப்புடன் முந்தியேபேசுகிறானோ அவனிடம் உலகம்அன்புள்ளதாயிருக்கும். பிரியவசனம்சொல்லாமல்கொடுக்கப்படும் தானங்கூட வியஞ்சனமில்லாதபோஜனம்போல எவ்விடத்திலும் பிராணிகளுக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணாது. ஓ! இந்திரனே! இனிய வசனத்தைப்பேசும்மனிதன் பிராணிகளுடைய திரவியத்தையெடுப்பவனானாலும் பிரியவசனத்தால் இவ்வுலகமனைத்தையும் தன்வசமாக்கிக்கொள்ளுவான். ஆகையால், தண்டம்விதிக்கவிரும்பியமனிதனும் பிரியவசனம்பேசவேண்டும். இவ்விதமிருப்பவன் பிரியஞ்செய்தவனாவான். உலகமும் இவனிடம் பயமடையாது. நன்குஉபயோகிக்கப்பட்டதும் மென்மையும் இனிமையுமானபிரியவசனம் நன்றாகச்செலுத்தப்படுவதற்குச் சமமானது எப்பொழுதுமில்லை" என்றுசொன்னார். இவ்விதஞ்சொல்லப்பட்ட இந்திரன் புரோஹிதர்சொல்லியபடி முழுமையுஞ்செய்துவந்தான். ஓ! கௌந்தேய! அப்படியே நீயும் இப்பிரியவசனத்தை நன்றாக நடத்திவா" என்றுசொன்னார்.

---

## எண்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் எந்தஎந்தவர்ணத்தாரில் எத்தனைஎத்தனைபேரைமந்திரியாக்கவேண்டுமென்பதையும் வ்யவஹாரவிசாரணை முறைமுதலியவற்றையுங் கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! ராஜசிரேஷ்டரே! பிரஜைகளை எவ்விதம்பரிபாலித்துவரும்அரசன் [1]விசேஷமானதர்மத்தால் நிலைத்ததானகீர்த்தியையும் ஸ்வர்க்கத்தையும்அடைவான்?" என்றுகேட்டனர். பீஷ்மர், "பக்ஷபாதமில்லாத [2]வ்யவகாரத்துடன் பிரஜைகளைக்காப்பதில் முயற்சியுள்ளஅரசன் பரிசுத்தனாய்த் தர்மத்தையடைந்து கீர்த்தியையும் ஸ்வர்க்கலோகங்களையும்அடைவான்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர். "அறிவிற்சிறந்தவரே! உம்மால் முன்சொல்லப்பட்ட புருஷ

---

1 வேறுபாடம் கொள்ளப்பட்டது.

2 ஒருவிஷயத்திலுள்ள இரண்டுகக்ஷிகளின் பொய்மெய்யைப் பகுத்தறிந்து தீர்மானிப்பது.

னுக்குரிய இக்குணங்கள்யாவும் ஒருபுருஷனிடமிராவென்று எனக்குத் தோற்றுகிறது; ஆகையால், அரசன்எவ்விதவ்யவகாரத்தை எந்த அதிகாரிகளுடனிருந்து நிர்ணயஞ்செய்யவேண்டும்? இந்தப்ரச்னத்திற்குத் தகுந்த உத்தரஞ்சொல்லப் பிரார்த்திக்கிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"அறிவுள்ளவர்களிற்சிறந்தபுத்திமானே! நீசொல்லியபடி ஒருபுருஷன் இந்த நல்லகுணங்களுடன்கூடியிருத்தல் அரிதென்பது உண்மையே. ஆனாலும், நீ எவ்விதக்குணமுள்ள மந்திரிகளை ஏற்படுத்திக்கொள்ளவேண்டுமோ அதற்குத்தக்கதும் மனிதனுடையமுயற்சியால் அடைய அரிதுமான ஸ்வபாவத்தைச் சுருக்கமாகக் கூறுகிறேன். வித்யைகளைக்கற்றவர்களும் ஸமர்த்தர்களும் பிரம்மசர்யத்தைமுடித்தவர்களும் பரிசுத்தர்களுமான நான்குபிராம்மணர்களையும் பலசாலிகளும் ஆயுதபாணிகளுமான பதினெட்டுக்ஷத்திரியர்களையும் நிறைந்த பொருளுள்ள இருபத்தொருவைச்யர்களையும் வணக்கமுள்ளவர்களும் முந்திய காரியங்களில் பரிசுத்தர்களாயிருந்தவர்களுமான மூன்று சூத்திரர்களையும் (கேட்கவிருப்பம், கேட்பது, அறிவது, தரிப்பது, ஊகிப்பது, புத்தியால்விலக்குவது, விஜ்ஞானம், தத்வஜ்ஞானம் என்னும்) எட்டுக்குணங்களுடன் கூடினவரும் புராணங்களைக்கற்றவரும் ஐம்பது பிராயமுள்ளவரும் ஸமர்த்தரும் அஸூயையில்லாதவரும் வேதங்களையும் தர்மசாஸ்திரங்களையும் அறிந்தவரும் வணக்கமுள்ளவரும் ஸமமாகப்பார்க்கிறவரும் விவாதமுள்ளவர்களுக்குச் செய்யவேண்டியகாரியத்தில் சக்தியுள்ளவரும் பொருள்களில்ஆசையில்லாதவரும் மிகக்கொடுமையுள்ள [1]ஏழுவிதவ்யசனங்களில்லாதவருமான ஸூதரையும் அமாத்யர்களாகச்செய்யவேண்டும். [2]எட்டுமந்திரிகளின் நடுவில் அரசன் ஆலோசனையைத்தீர்மானிக்கவேண்டும். பிறகு ராஜ்யத்திலுள்ள பிரதான அதிகாரியிடமனுப்பித் தெரிவிக்கவேண்டும். இவ்விதவ்யவகாரத்துடன் எப்பொழுதும் நீ பிரஜைகளைப் பார்த்துவரவேண்டும். ரகஸ்யமானத்ரவ்யத்தை நீ எடுக்கக்கூடாது. விவாதமுள்ளகாரியத்தில் அக்காரியத்திற்குவிரோதமாகப் பொருளை நீ எடுக்கக்கூடாது. (எடுத்தால்) [3]அந்தப்பாவம் உன்னையும் அவர்களையும் துன்பப்படுத்தும். பருந்தினிடமிருந்து பறவைக்கூட்டங்கள் விலகுவதுபோல

1 வேட்டை, சொக்கட்டான், பெண்டிர், குடியெனக் காமத்தாலுண்டானவை நான்கும்; சரீரதண்டம், கடுஞ்சொல், பொருளையபகரித்தல்எனக்கோபத்தாலுண்டானவை மூன்றும்.

2 'நான்குபிராம்மணர்கள், மூன்றுசூத்ரர்கள், ஒருஸூதர் ஆக எட்டுமந்திரிகள்' என்பது பழையவுரை. 3 இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது.

ராஜ்யமும் உன்னிடமிருந்து விலகிவிடும். பிரஜைகளை அதர்மமாக முறைதவறிப்பரிபாலிக்கும் அரசனுடையராஜ்யம் கடலில்சிதறினகப்பல்போல எப்பொழுதும் வேறிடம்செல்லத்தொடங்கும். ஓ! புருஷச்ரேஷ்ட! தர்மத்தை மூலமாகக்கொண்டராஜ்யத்தில் தர்மாஸனத்தில் அதிகாரம்பெற்றஅரசன், அமாத்தியன், அல்லதுராஜகுமாரன் எவன் தர்மமின்றிப் பரிபாலிக்கிறானோ அவனுள்ளத்தில் பயமுண்டாகும். ஸ்வர்க்கலோகமும்கெடும். [1]காரியங்களில் அதிகாரம்பெற்றவர்களும் (அக்காரியங்களை) நன்றாகநடத்தாதவர்களுமான அரசன்பின்செல்லும் மனிதர்கள் தம்மைமுன்னிட்டு அரசனுடன்கூடக் கீழேசெல்லுகிறார்கள். பலமுள்ளவர்களால் பிடிக்கப்பட்டவர்களும் துயரமுள்ள பல வசனங்களைப் பேசுகிறவர்களும் நாதனில்லாதவர்களுமான மனிதர்களுக்கு எப்பொழுதும் அரசன் நாதனாயிருக்கவேண்டும். இரண்டு விதமான வாதங்களில் உண்மையை யறியவேண்டிச் செய்யப்படும் ஸாக்ஷிகளின் பலமானது தீர்மானிக்கத்தக்ககாரணமாகும். ஸாக்ஷியில்லாததும் நாதனில்லாததுமானவ்யவகாரத்தை விசேஷமாகப் பரீக்ஷிக்கவேண்டும். (பரீக்ஷித்து) குற்றமுள்ளமனிதர்களுக்குக் குற்றத்திற்குத்தக்க தண்டத்தைச் செலுத்தவேண்டும். அதிகப்பொருளுள்ளவர்களைப் பொருளிலிருந்து விலக்கவேண்டும். பொருளற்றவர்களைச் சிறையில் அடைக்கவேண்டும். அரசன் கெட்டநடையுள்ளவர்களை அடிகளால் அடக்கவேண்டும். நன்மொழியாலும் தானத்தாலும் சிஷ்டர்களைப் பரிபாலிக்கவேண்டும். அரசனைக் கொலைசெய்ய நினைத்தமனிதனுக்கும் வீடுகளில்தீயிட்டவனுக்கும் திருடனுக்கும் ஜாதிகளின்வரம்பை விலக்கினவனுக்கும் சித்ரவதை விதிக்கவேண்டும். ஓ! அரசனே! நன்றாகத் தண்டம்செலுத்துகிறவனும் (நல்வழியில்) முயற்சியுள்ளவனுமான அரசனுக்குச் சாச்வதமானதர்மமே உண்டாகும். அதர்மமென்பதே இல்லை. அறிவில்லாத எந்த அரசன் தன்னிஷ்டப்படி தண்டம் செலுத்துகிறானோ அவன் இவ்வுலகில் அபகீர்த்திபெற்று இறந்தபின் நரகத்தையடைகிறான். ஒருவன்குற்றத்திற்காக மற்றவர்களுக்குத் தண்டம்விதிக்கக்கூடாது. குற்றவாளியை ஆழைத்துவரவேண்டி (அவனைச்சேர்ந்தவனைப்) [2]பிடிக்கவேண்டும்; விடவும்வேண்டும். அரசன் எவ்விதஆபத்திலும் எந்தச்சமயத்திலும் தூதனைக் கொல்லக்கூடாது. தூதனைக்கொன்றவன் மந்திரிக

[1] அதிகபாடமான அரைச்லோகம் விடப்பட்டது.

[2] 'குற்றவாளியை வெளியிடாமலிருந்தால் அவன் சொந்தக்காரனைப் பிடிக்கவேண்டும். வெளியிட்டானானாலும் மறைத்துவைக்காதவனானாலும் அவனை விடவேண்டும்' என்பது கருத்து.

ளுடன்கூட நரகத்தையடைவான். க்ஷத்திரியதர்மத்தில் ப்ரீதியுள்ள எந்தஅரசன் (எஜமானன்) சொல்லியபடிசொல்லுந்தூதனைக் கொல்லு கிறானோ அவனுடையபிதிருக்கள் ப்ரூணஹத்தியென்னுந் தோஷத் தையடைவார்கள். தூதனானவன் நற்குலத்திற்பிறந்தவனும் நல்லஸ்வ பாவமுள்ளவனும் நன்றாகவும் பிரியமாகவும்பேசுகிறவனும் ஸமர்த் தனும் (அரசன் சொல்லியவற்றைத் தன்னை அனுப்பியஇடங்களில்) சொன்னபடிசொல்லுகிறவனும் ஞாபகசக்தியுள்ளவனுமாக ஏழுகுண ங்களுடனிருக்கவேண்டும். வாயில்காப்பவனும் அரசனைரக்ஷிக்கிறவ னும் கோட்டைமுதலிய முக்கியஸ்தானங்களைரக்ஷிக்கிறவனும் மேலே சொன்ன குணங்களுள்ளவர்களாயிருக்கவேண்டும். அமாத்தியன் இந்தக்குணங்களுடன்கூடினவனும் தர்மசாஸ்திரங்களின்பொருளின் உண்மையைஅறிந்தவனும் ஸந்திவிக்ரஹங்களை அறிந்தவனுமாயிரு க்கவேண்டும். புத்தியுள்ளவனும் தைரியமுள்ளவனும் லஜ்ஜையுள் ளவனும் ரஹஸ்யங்களைவெளியிடாதவனும் நற்குலத்திற்பிறந்தவனும் ஸத்வகுணமுள்ளவனும் பரிசுத்தனுமான அமாத்தியன் சிறந்தவனாகி றான். அப்படியே ஸேனாதிபதியும் (அமாத்யனுக்குரிய) இக்குணங்க ளுடன் கூடினவனாயிருக்கவேண்டும். அன்றியும், ஸேனைகளின்வ்யூ கங்கள், யந்திரங்கள், ஆயுதங்கள் இவைகளின்உண்மையை அறிந்தவ னும் பராக்ரமமுள்ளவனும் குளிர் வெப்பம் மழை காற்றுக்களைப் பொறுப்பவனும் பிறருடைய [1]ரந்த்ரத்தைஅறிந்தவனுமாயிருக்கவே ண்டும். பிறரைத் தன்னிடம்நம்பிக்கையுள்ளவர்களாகச் செய்யவேண் டும்; தான் ஒருமனிதனையும் நம்பக்கூடாது. ராஜேந்திரனே! புத் திரர்களிடத்திலும் நம்பிக்கை சிறந்ததன்று. தோஷமற்றவனே! நீதி சாஸ்திரங்களின் இவ்வுண்மைப்பொருளை நான் உனக்கு உபதேசித் தேன். அரசர்களுக்கு நம்பிக்கையில்லாமை மிக்கரஹஸ்யமென்று சொல்லப்படுகிறது" என்றுசொன்னார்.

---

## எண்பத்தாறுவது அத்தியாயம்

## ராஜதர்மம் (தொடர்ச்சி.)

(பீஷ்மர்அரசன்வஸிக்கவேண்டியநகரலக்ஷணமுதலியவற்றைக்கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! அரசன் எவ்விதம்பட்டணத் தைச்செய்து அல்லது செய்வித்து அதில் தான்வஸிக்கவேண்டுமென் பதை எனக்குச்சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத் தொடங்கினார்.

---

[1] ஆபத்துக்காலம்.

"பாதகுலத்திலுதித்த கௌந்தேய! புத்திரர்கள், ஞாதிகள், பந்துக்கள் இவர்களுடன் அரசன் எவ்விடத்தில்வஸிக்கவேண்டுமோ அவ்விடத்திலுள்ளஇருப்பையும் அரண்களையும் கேட்பது நியாய மாகும். ஆகையால், விசேஷமாகக் கோட்டைகளைப்பற்றியவேலை யை உனக்குச் சொல்லுகிறேன். அதைக்கேட்டு அப்படிச்செய்வ தோடு முயற்சியுடன் நடத்திவரவும்வேண்டும். ஆறுவிதமான துர் க்கத்தையேற்படுத்தினபிறகு பட்டணங்களையேற்படுத்தவேண்டும். எல்லாவிதஸம்பத்துக்களையும் முக்கியமாகக்கொண்ட பெருமையுமிரு க்கவேண்டும். [1]மருதுர்க்கம், பூமிதுர்க்கம், கிரிதுர்க்கம், மனுஷ்ய துர்க்கம், [2]ஜலதுர்க்கம், வனதுர்க்கம்என்று துர்க்கம்ஆறுவிதம். துர்க்கங்கள்நிரம்பியதும் தான்யங்களுடனும் ஆயுதங்களுடனும்கூடி யதும் உறுதியானமதிலும் அகழுமுள்ளதும் யானைகுதிரைதேர்களால் நிறைந்ததும் வித்வான்களும் சிற்பிகளும் விசேஷமாகச்சேரப்பெற்ற தும் த்ரவ்யக்கூட்டங்களும் உத்தமமானஸாமர்த்யம்பெற்றதர்மமுள்ள மனிதர்களுமுள்ளதும் பலசாலிகளானமனிதர்களும் யானைகளும் குதி ரைகளுமுள்ளதும் (வழிப்போக்கர்கள் தங்குவதற்காகக்கட்டப்பட்ட) வீடுகளாலும் கடைகளாலும் விளங்குவதும் ப்ரஸித்தமானவ்யவகார முள்ளதும் கடோரமற்றதும் எவ்விதமானபயமுமில்லாததும் நல்ல காந்தியுள்ளதும் வாத்தியங்களின்முழக்கங்களுடன்கூடியதும் மிகச் சிறந்தவீடுகளுள்ளதும் சூரர்களாலும் அறிஞர்களாலும்நிறைந்ததும் வேதகோஷத்தால் எதிரொலியுள்ளதாகச் செய்யப்பட்டதும் ஸபைக ளாலும் உத்ஸவங்களாலும்நிறைந்ததும் எப்பொழுதும் தேவபூஜை யுள்ளதுமான பட்டணத்தில் அமாத்யர்களையும் ஸேனைகளையும் தன் வசமாக்கிக்கொண்டஅரசன் தானுகப்பிரவேசிக்கவேண்டும். அதில் கோசத்தையும் ஸேனையையும் மித்திரனையும் வியவகாரத்தையும் விரு த்திசெய்யவேண்டும். பட்டணத்திலும் கிராமத்திலுமுள்ள எல்லாத் தோஷங்களையும் விலக்கவேண்டும். பாண்டங்களிருக்குமிடத்தையும் ஆயுதசாலையையும் முயற்சியுடன் பெருகச்செய்யவேண்டும். எல்லா விதமான (தான்யங்களின்) சுமைகளையும் யந்திரசாலைகளையும் கட்டை கள், உலோகங்கள், உமிகள், கரிகள், மரங்கள், கொம்புகள், எலும்பு கள், மூங்கில்கள், மஜ்ஜை, எண்ணெய், கொழுப்பு, தேன், மருந்து வகைகள், சணல், ஸர்ஜரஸமென்னும்வாஸனைத்திரவியம், தான்யம், ஆயுதங்கள், அம்புகள், தோல், நரம்பு, பிரம்பு, [3]முஞ்சம், விழல், வாத்தியங்கள் இவைகளையும் சேர்க்கவேண்டும். அதிகமான ஜலங்க

[1] பாலைவனம். [2] வேறுபாடம். [3] ஒருவகைத்தர்ப்பம்.

ளுக்கிருப்பிடமான கிணறுகளையும் அதனருகிலுள்ளதொட்டிகளையும் பாலுள்ளமரங்களையும் அரசன் எப்பொழுதும் ரக்ஷிக்கவேண்டும். ஆசாரியர்களையும் ரித்விக்குக்களையும் புரோஹிதர்களையும் பெரிய வில்லுள்ளவர்களையும் சிற்பிகளையும் சோதிடங்கற்றவர்களையும் வைத்தியர்களையும் [1]பிராஜ்ஞர்களையும் [2]மேதாவிகளையும் அடக்கமுள்ளவர்களையும் ஸமர்த்தர்களையும் சூரர்களையும் பலசாஸ்திரங்களைக்கற்றவர்களையும் நற்குலத்திற்பிறந்தவர்களையும் ஸத்வகுணம்பொருந்தியவர்களையும் எல்லாவேலைகளிலும் முயற்சியுள்ளவர்களையும் முயற்சியுடன் மரியாதைசெய்யவேண்டும். அரசன் தர்மமுள்ளவர்களைப் பூஜிக்கவேண்டும்; அதர்மமுள்ளவர்களை அடக்கவேண்டும்; முயற்சியுடன் எல்லாஜாதிகளையும் தம்கர்மங்களில் ஏவவேண்டும்; பட்டணங்களிலும் கிராமங்களிலும் உள்ளிலும் வெளியிலுமுள்ளவிஷயத்தைச் சாரர்களால் நன்றாகத் தெரிந்துகொண்டபின் காரியத்தை நடத்தவேண்டும்; சாரர்களையும் மந்திராலோசனையையும் கோசத்தையும் தண்டத்தையும் விசேஷமாக அரசன் தானே ஆலோசிக்கவேண்டும். உலகமுழுதும் இவைகளில் நிலைபெற்றிருக்கிறது. பட்டணத்திலும் கிராமத்திலுமுள்ள உதாஸீனர்களும் சத்துருக்களும் மித்திரர்களும் செய்யவிரும்பிய யாவற்றையும் சாரனென்னுங்கண்ணால் அறிந்துகொள்ளவேண்டும். பிறகு தவறுதலின்றி அவர்களுக்குச்செய்யவேண்டிய காரியம்யாவற்றையும் செய்யவேண்டும். எப்பொழுதும் பக்தியுள்ளவர்களைப் பூஜிக்கவேண்டும்; பகைவர்களையடக்கவேண்டும். எப்பொழுதும் யாகங்களைச்செய்யவேண்டும்; பீடையின்றித் தானம்செய்யவேண்டும்; பிரஜைகளைப் பரிபாலனம் செய்யவேண்டும்; தர்மத்திற்குவிரோதமானகாரியத்தைச் செய்யக்கூடாது. ஏழைகளுக்கும் கதியற்றவர்களுக்கும் கிழவர்களுக்கும் பதியிழந்தஸ்திரீகளுக்கும் யோகக்ஷேமத்தையும் ஜீவனத்தையும் எப்பொழுதும் செய்விக்கவேண்டும். காலத்திற்குத்தக்கபடி அரசன் எப்பொழுதும் ஆதரித்தும் பூஜித்தும் அபிமானித்தும் ஆடைகளையும் பாத்திரங்களையும் போஜனங்களையும் ஆச்ரமங்களுக்கனுப்பவேண்டும். தன்னையும் எல்லாக்காரியங்களையும் ராஜ்யத்தையும் முயற்சியுடன் ரிஷிகளிடம் அறிவிக்கவேண்டும். எப்பொழுதும் அவர்களிடம் வணக்கமுள்ளவனாயிருக்கவேண்டும். ப்ரஸித்தமான வ்ரதமுள்ள அந்தத்தவத்தினர்கள், ஒருஸமயத்தில் ரக்ஷணையைவிரும்பும் அரசனுக்கு இஷ்டப்படி ரக்ஷை

1 கிரந்தங்களை க்ரஹிக்கத் திறமையுள்ளவர்கள்.

2 ஊஹிக்குந் திறமையுள்ளவர்கள்.

யைக்கொடுப்பார்கள். அரசன் நற்குலத்திற்பிறந்தவரும் பலசாஸ்திரங்களைக்கற்றவரும் பொருள்களையெல்லாம்விட்டவருமான அவ்விதத் தவத்தினரைக்கண்டு அவர்களுக்குச் சயனம் ஆஸனம் போஜனம் இவைகளைக்கொடுத்துப் பூஜிக்கவேண்டும். அரசன் ஏதாவது ஓர் ஆபத்துவந்தால் அவரிடம் நம்பிக்கையுடனிருக்கவேண்டும். திருடர்களும் தவமுள்ளவர்களிடம் நம்பிக்கைபாராட்டுகிறார்கள். அவரிடம் நிதிகளைவைக்கலாம்; திரும்பவும் பெற்றுக்கொள்ளலாம். அடிக்கடி அவர்களிடம்செல்வதும் அதிகமாகப் பூஜிப்பதும்ஆகா. தன்ராஜ்யங்களில் வேறான ஒருதாபஸரையும் பிறராஜ்யங்களில் வேறான ஒரு தாபஸரையும் அரண்யங்களில் வேறான ஒருதாபஸரையும் ஸாமந்தர்களின் ராஜ்யங்களில் வேறான ஒருதாபஸரையும் இருக்கச்செய்யவேண்டும். தன்ராஜ்யத்திலிருப்பவரிடம்போலப் பரராஜ்யத்திலும் அரண்யத்திலும் இருக்கிற அவர்களிடத்திலும் ஆதரவுடனும் அபிமானத்துடனும் இஷ்டங்களைக் கொடுக்கச்செய்யவேண்டும். கடுமையான நியமமுள்ள அத்தாபஸர்கள் ஒருஸமயத்தில் ரக்ஷையைவிரும்பும் அரசன்பொருட்டு இஷ்டப்படி ரக்ஷையைக் கொடுப்பார்கள். அரசன் எவ்விதமானநகரில் தான்வஸிக்கத்தக்கவனோ அதற்குரியலக்ஷணத்தைச் சுருக்கமாக உனக்கு உபதேசித்தேன்" என்றுசொன்னார்.

---

## எண்பத்தேழாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் ராஜ்யத்தைரக்ஷிக்கும் முறையையும் ராஜ்யத்திலிருந்து பொருளைச்சேர்க்கும் முறைமுதலியவற்றையுங் கூறியது.)

யுதிஷ்டிரர், "பரதர்களிற்சிறந்த ராஜரே! நன்றாக அறிய விருப்பமுள்ள என்பொருட்டு ராஜ்யத்தின்ரக்ஷையையும் ராஜ்யத்திலிருந்து பொருளைச்சேர்க்கும்விதியையும் உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்டார்.

பீஷ்மர், "ராஜ்யத்தின்ரக்ஷையையும் ராஜ்யத்தினின்று கிரஹிக்கும் விதியனைத்தையும் இப்பொழுது நன்றாக உனக்கு உபதேசிக்கிறேன். அதை நீ ஒரேமனமாகக் கேள். கிராமத்திற்கு ஒருதலைவனை நியமிக்கவேண்டும். அப்படியே பத்துக்கிராமங்களுக்கு ஓர் அதிபதியையும் இருபதுக்கொருவரையும் முப்பதுக்கொருவரையும் [1] நூறுகிராமங்களுக்கொருவரையும் ஆயிரம்கிராமங்களுக்கு ஓர் அதி

[1] இங்கு வேறுபாடங் கொள்ளப்பட்டது.

பதியையும் நியமிக்கவேண்டும். கிராமத்தலைவன் கிராமத்திலுள்ள விஷயங்களையும் அதிலுள்ளதோஷங்களையும் கவனிக்கவேண்டும். கவனித்தவிஷயங்களைப் பத்துக்கிராமங்களுக்கதிபதியாயிருப்பவனிடம் அறிவிக்கவேண்டும். பத்துக்கிராமங்களுக்குப்பதியாயிருப்பவன் இருபதுகிராமங்களுக்குப் பதியாயிருப்பவனிடமும் இருபதுகிராமங்களுக்குப்பதியாயிருப்பவன் அவ்விஷயங்கள்யாவற்றையும் முப்பது கிராமங்களுக்குப்பதியாயிருப்பவனிடமும்அவன் யாவற்றையும் நூறு கிராமங்களுக்குப்பதியாயிருப்பவனிடமும் அறிவிக்கவேண்டும். கிராமாதிகாரியானவன் கிராமத்திலுள்ள புஜிக்கத்தக்கவைகளைப் புஜிக்கவேண்டும். பத்துக்கிராமங்களுக்குத் தலைவனுயிருப்பவன் அந்தக் கிராமங்களிலுண்டாகும் பொருள்களால் போஷிக்கத்தக்கவன். இருபதுகிராமங்களுக்குப் பதியாயிருப்பவனும் அப்பொருளால் போஷிக்கத்தக்கவன். பாதர்களில் மிகச்சிறந்தவனே! நூறுகிராமங்களுக்குப் பதியாயிருப்பவன் ஆதரிக்கப்பட்டுப் பெரிதும் மிகவளர்ந்ததும் ஜனக்கூட்டமுள்ளதுமான ஒருகிராமத்தை அனுபவிக்கத்தக்கவன். ஓ! பாரத! ராஜ்யத்திலுள்ளகிராமமானது, அரசனுடைய அப்பெரியஅதிகாரியின் [1]அதீனமாயிருக்கும். உத்தமனுன ஆயிரங்கிராமங்களுக்குப் பதியாயிருப்பவன் ராஜ்யாதிகாரியுடன்சேர்ந்து தான்யம், ஸ்வர்ணம் இவைகளின்போகங்களுடன் சிறியபட்டணத்தை அனுபவிக்கத்தக்கவனுவான். அவ்வதிகாரிகளுடைய யுத்தவேலையையும் கிராமவேலையையும் தர்மமறிந்த ஒருமந்திரி சோம்பலின்றிக் கவனித்துவரவேண்டும். ஒவ்வொருநகரிலும் எல்லாவிஷயங்களையும் சிந்திக்கத்தக்கவனுக ஒருவனுவது இருக்கவேண்டும். அவன் நக்ஷத்திரங்களுள் க்ரஹம்போலக் கடோரரூபமுள்ளவனுக உயர்ந்த ஸ்தானத்திலிருக்கவேண்டும். அவன் ஸபையினதிகாரிகளான அவர்கள்யாவர்களையும் சுற்றிப்பார்க்கவேண்டும். அவன்தூதனுனஒருவன் ராஜ்யங்களில் அவ்வதிகாரிகளின்நடையைக் கவனிக்கச் சுற்றவேண்டும். ரக்ஷிக்கும் அதிகாரம்பெற்றவர்கள் வஞ்சகர்களும் பிறர்பொருளைக்கவர்கின்றவர்களும் பாபத்திலாசையுள்ளவர்களும் கொல்லவிருப்பமுள்ளவர்களுமாயிருப்பார்கள். அவர்களிடமிருந்துஇந்தப்பிரஜைகளைரக்ஷிக்கவேண்டும். கொள்ளுதலையும் விற்பதையும் [2] வழியையும் [3] உணவையும் செல

[1] அவ்வதிகாரியை நன்ருகச்சந்தோஷப்படுத்தாவிட்டால் அவன் அதீனமானகிராமங்களை அனுபவிக்கமுடியாதென்பது கருத்து.

[2] கொள்ளுமிடம் விற்குமிடங்களின் தூரம்.

[3] உணவிற்காகும்செலவு என்பதுபொருள்.

வையும் யோகக்ஷேமங்களையுங்கவனித்து வர்த்தகர்களுக்கு வரிகளை ஏற்படுத்தவேண்டும். உண்டாவதையும் கொடுப்பதையும் தொழிலையும் பலமுறைகவனித்துத் தொழிலாளிகளைக்குறித்துத் தொழிலுக்குத்தக்கபடி வரிகளைஏற்படுத்தவேண்டும். ஓ! யுதிஷ்டிர! அரசன் முன்னோர்களான அரசர்களுடைய பலவிதமான கப்பங்களுக்குரிய நீதிகள் மாறாதிருக்கும்படி செய்யவேண்டும். பயனையும் தொழிலையும் நன்குகவனித்து யாவற்றையுஞ்செய்யவேண்டும். தொழிலும் அதன்பயனும் காரணமின்றிச் சிறிதும்நடைபெறா. அரசனும் தொழிலாளியும் தொழிலின்பயனுள்ளவர்களாக எவ்விதமாவார்களோ அவ்விதம் அரசன்ஆலோசித்து எப்பொழுதும் வரிகளைஏற்படுத்தவேண்டும். அரசன் ஆசையால், தனக்குமூலமான ராஜ்யத்தையும் பிறர்களுக்குமூலமானகார்யத்தையும் நசிக்கச்செய்யாமலிருக்கவேண்டும். லோபத்தின்வழிகளை மறைத்துக்கொண்டு மறைவான திருஷ்டியுள்ளவனுயிருக்கவேண்டும். அதிகமாக வரிவாங்குந்தன்மையுள்ளவனென்று ப்ரஸித்திபெற்ற அரசனை ஜனங்கள் பகைப்பார்கள். (ஜனங்களால்) பகைக்கப்பட்டவனுக்கு க்ஷேமமேது? மறைவாயிருப்பவன் ஸம்பத்தையடைவான். அரசன் சோர்வில்லாதபுத்தியுள்ளவனுய்க் கன்றுக்கொப்பாக ராஜ்யத்தைக்கறக்கவேண்டும். ஓ! பாரத! போஷிக்கப்பட்டகன்றானது பலமுள்ளதாகத் துன்பங்களைப்பொறுக்கும். ஓ! யுதிஷ்டிர! மிகவும்கறக்கப்பட்ட பசுவின்கன்றானது வேலையைச் செய்யாது. ராஜ்யமும் அதிகமாகக்கறக்கப்பட்டால் பெரியகாரியத்தை உண்டுபண்ணாது. எந்தஅரசன் தானே பரிபாலித்துக்கொண்டு ராஜ்யத்தை அனுக்ரஹிக்கிறானே அவன் அதில் உண்டானதைப் புஜித்துக்கொண்டு மிகப்பெரிதான பயனை அடைகிறான். அரசர்கள் ஆபத்துநிமித்தம் திரவியக்குவியல்களைத் தேடுகிறார்கள். வீட்டிலிருக்கும்கோசம்போல ராஜ்யமும் கோசமாயிருக்கும். பட்டணத்திலுள்ளவர்களும் கிராமத்திலுள்ளவர்களும் அருகிலிருப்பவர்களும் விலகியிருப்பவர்களுமான யாவர்களிடமும் அப்படியே மிக அல்பமான பொருளுள்ள யாவர்களிடமும் சக்திக்குத்தக்கபடி தயைசெய்யவேண்டும். [1]வெளியிலுள்ளஜனத்தைப் [2]பேதப்படுத்தி நடுவிலுள்ள கிராமத்தை ஸுகமாக அனுபவிக்கவேண்டும். இவ்விதமுள்ள அரசனிடம் ஸுகமுள்ளவர்களும் துக்கமுள்ளவர்களுமான ஜனங்கள் கோபமடையமாட்டார்கள். முந்தியே பொருள்வேண்டுமென்பதைத்

---

1 காட்டிலுள்ள திருட்டுஜனங்கள்.

2 கிராமத்தினருகில் வஸிக்கச்செய்வது.

தெரிவித்துவிட்டு அதன்பிறகு தனக்குரியதான ராஜ்யத்திற்சென்று, “ இதோ துன்பமுண்டாயிருக்கிறது; பிறர்படையின்பயம் பெரிதாயிருக்கிறது ; அன்றியும், மூங்கிலே அதன்விதையின்வரவானது நாசமாக்குவதுபோலப் பலதிருடர்களுடன்கிளம்பி எனது சத்ருக்கள் நாசஞ்செய்ய முயலுகிறார்கள். தம்வதத்திற்காகவே இந்தராஜ்யத்தைப் பிடிக்கவிரும்புகிறார்கள். கொடுமையான இவ்வாபத்தும் பெரியபயமும்வந்தபடியால் உங்களைரக்ஷிக்கவேண்டி உங்களுடையபொருள்களை வேண்டுகிறேன். பயம்விலகினவுடன் உங்கள்பொருளையெல்லாம் நான் திரும்பவும் கொடுத்துவிடுகிறேன். பகைவர்கள் பலாத்காரமாக இங்கிருந்து எடுத்துப்போவார்களானால் திரும்பவும் கொடுக்கமாட்டார்கள். பெண்டிரும் மற்றயாவும் உங்களுக்கு நாசமடைந்துபோம்” என்று பயத்தைக் காண்பிக்கவேண்டும். ஸமயமறிந்த அரசன் உபாயத்தைச்செய்தபின், “ பொருளின்சேர்க்கையானது சரீரம் புத்திரர்கள் பெண்டிர் இவர்களுக்காக விரும்பப்படுகின்றது. புத்ரர்களுடைய பெருமையைப்போல உங்களுடையபெருமையைக்கண்டு ஸந்தோஷிக்கிறேன். ராஜ்யத்திற்கும் உங்களுக்கும் கஷ்டமின்றிச் சக்திக்குத் தக்கபடி பெற்றுக்கொள்ளுகிறேன். ஆபத்காலங்களில்தான் நீங்கள் ஒன்றுசேர்ந்து பொறுக்கவேண்டும். ஒருவித ஆபத்துள்ளஸமயத்தில் நீங்கள் பொருளில் அதிகஆசை பாராட்டக்கூடாது” என்று இனியதும் எளியதும் மரியாதையுள்ளதுமான சொல்லுடன் தன் கையிலுள்ள கயிறுபோன்றமனிதர்களை அனுப்பவேண்டும். [1]யாத்திரையையும் வேலைக்காரர்களின்சம்பளத்தையும் செலவையும் யுத்தத்திலிருந்து பயத்தையும் யோகக்ஷேமத்தையும் தெரிவித்து வைச்யர்களுக்கு வரியையேற்படுத்தவேண்டும். அரண்யத்தில் வஸிக்கும் வைச்யர்களைக் கவனியாமலிருந்தால் அவர்கள் நாசமடைவார்கள். ஆகையால், அவர்களிடம் விசேஷமாகக்கொடுமையில்லாமையை முன்னிட்டு நடந்துவரவேண்டும். ஓ! பார்த்த! வைச்யர்களுக்கு நன்மொழியையும் ரக்ஷையையும் தானத்தையும் அடிக்கடி அவர்களின் இருப்பிடத்தையும் நிலம்முதலியவற்றின்பிரிவையும் வேண்டியவற்றையும் செய்து கொடுக்கவேண்டும். பாரத ! வைச்யர்களிடம் எப்பொழுதும்பயனைக் கொடுத்துவரவேண்டும். அவர்கள் ராஜ்யத்தையும் தொழிலையும் அப்படியேகிருஷியையும் விருத்திசெய்வார்கள். ஆகையால், அறிவுள்ளவன் முயற்சியுடன் தயையுள்ளவனும் அஜாக்ரதையின்றி எளியவரிகளை விதிப்பவனுமாகி வைச்யர்களிடம் ப்ரீதிசெய்யவேண்டும். ஓ!

[1] ‘ ப்ராகாரத்தை ’ என்பது வேறுபாடம்.

யுதிஷ்டிர! வைச்யர்கள்விஷயத்தில் க்ஷேமத்தைச்செய்வது எவ்விடத்திலுமெளிது. அதற்கொப்பானதனம் ஒன்றுமில்லை" என்று சொன்னார்.

---

## எண்பத்தெட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் குடிகளிடம் வரிவாங்கும் முறைமுதலியவற்றைக் கூறியது.)

யுதிஷ்டிரர், "பெரியபுத்தியுள்ளபிதாமஹரே! அரசன்ஸாமர்த்தியமுள்ளவனாயிருந்தும் எப்பொழுது கோசத்தில்விருப்பமுள்ளவனாகிறானோ அப்பொழுது [1]எவ்விதம் நடக்கக்கடவனென்பதை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்டனர்.

பீஷ்மர், "தர்மத்தைவிரும்பிய அரசன் பிராணிகளின்ஹிதத்தில் ஆசையுள்ளவனாகித் தேசம், காலம், பலம், புத்தி இவைகளுக்குத்தக்கபடி பிரஜைகளைக் கட்டளையிடவேண்டும். அரசன் பிரஜைகளுக்கும் தனக்கும் எவ்விதம் க்ஷேமத்தைநினைக்கிறானோ அவ்விதம் ராஜ்யங்களில் எல்லாத்தர்மங்களையும் நடத்திவரவேண்டும்; தேனைக்கறப்பதுபோல ராஜ்யத்தைக்கறக்கவேண்டும்; வண்டுகளை விழும்படிசெய்யக்கூடாது; கன்றின்கவனமுள்ளவனாகவே கறக்கவேண்டும்; முலைகளைக் குத்தக்கூடாது. அரசன் அட்டைபோல எளியஉபாயத்தாலேயே ராஜ்யத்தைப்பானஞ்செய்யவேண்டும். பெண்புலியானது தன்குட்டிகளைஎடுப்பதுபோலப் பீடியாமல் பிடிக்கவேண்டும். சல்யகமென்ற கூர்மையான முகமுள்ள எலியானது தூங்குகிறவன்காலைக் கவ்வி எடுப்பதுபோல எப்பொழுதும் கொடுமையில்லாதஉபாயத்தால் ராஜ்யத்தையனுபவிக்கவேண்டும். கொஞ்சம்கொஞ்சமாக வரியை விருத்தியாகும்படி கொடுக்கச்செய்யவேண்டும். அதன்பிறகு, அதிகமும் அதன்பிறகு அதிகமுமாக முறையே வரியைப்பெருகச்செய்யவேண்டும். அடக்கவேண்டியகாளைகளை அடக்குகிறவன்போலக் கிரமமாகச் சுமையைவிருத்திசெய்யவேண்டும். எளிதாகத்தொடங்கி முயற்சியுடன் பூட்டும்கயிறுகளைப் பெருக்கச்செய்யவேண்டும். அடக்கக் கடினமானவைகள் ஒரேமுறையில் கயிறுகளாலிழுக்கப்பட்டால் அவைகள் நாசமடையும். யுக்தமானஉபாயத்தாலேயே முயற்சியின்றி அவைகள் அனுபவிக்கத்தக்கவைகளாகும். எல்லாஉபாயமும் ஒவ்வொருமனிதனிடமும்செய்வது அரிது. ஆகையால், தலைமையாயிரு

[1] 'எவ்விதம் வரிபோடவேண்டும்' என்பது வேறுபாடம்.

ப்பவர்களை இணங்கச்செய்தால் மற்றஜனங்கள் ஆளத்தக்கவர்களாவார்கள். ஒருவரோடொருவர்சேர்ந்து வஹிக்கவிரும்பிய அம்மனிதர்களை வேறுபடுத்தி இணங்கச்செய்துகொண்டு முயற்சியின்றிஸுகமாகஆளவேண்டும். [1]அஸ்தானத்திலும் அஸமயத்திலும் அவர்களிடம் வரிகளைவாங்கக்கூடாது. க்ரமமாகவும் நல்வார்த்தையாலும் காலத்திற்குத்தக்கபடியும் விதிப்படியும் வரிகளைவாங்கவேண்டும். இவ்வுபாயங்களை உபதேசிக்கிறேன். கபடமாகச் சொல்லவேண்டுமென்ற விருப்பம் எனக்கில்லை. உபாயத்தைமீறி அடக்கும்மனிதன் குதிரைகளை மிகக்கோபமுள்ளவைகளாகச் செய்வான். கள்ளுக்கடையிலிருக்கிறவர்களும் வேசைகளும் அவர்களைச்சேர்த்துவைக்குந்தொழிலுள்ளவர்களும் [2]நட்டுவர்களும் சூதாடுகிறவர்களும் இவர்கள்போன்றமற்றுமுள்ளசிலர்களும் ராஜ்யத்திற்கு இடையூறுசெய்கிறவர்கள். இவர்கள் யாவரும் அடக்கப்படத்தக்கவர்கள். இவர்கள் ராஜ்யத்திலிருந்தால் க்ஷேமமுள்ளப்ரஜைகளைப் பீடிப்பார்கள். 'ஆபத்தில்லாதஸமயத்தில் எவனும் எந்தமனிதனையும் [3]எதையும் யாசிப்பதுகூடாது' என்னும் வ்யவஸ்தையானது முன்காலத்தில் ப்ராணிகளுக்கு மனுவினால் செய்யப்பட்டது. யாவரும் அப்படியே ஒத்துப்பிழைக்கவேண்டும். அவ்விதம் இவ்வுலகில் செய்கையை நடத்தாவிட்டால் இவ்வுலகங்கள்யாவுமே ஸந்தேகமில்லாமல் நாசமடையும். அடக்கும்அதிகாரம்பெற்ற எந்தஅரசன் இவர்களைஅடக்கவில்லையோ அவன் அப்பாபத்தின் நாலிலொருபாகத்தை அனுபவிப்பானென்று வேதம்விதிக்கிறது. புண்ணியத்தைப் புஜிக்கிறதுபோலப் பாபத்தையும் புஜிப்பவனாவான். ஓ! ராஜனே! அரசன் எப்பொழுதும் பாபிகளையடக்கவேண்டும். அவர்களை எவன்அடக்கவில்லையோ அந்தஅரசன் பாபஞ்செய்தவனாவான். அவ்விதம்அடக்குகிறவன் அவர்கள்செய்ததர்மத்தின் நாலிலொருபாகத்தையடைகிறான். கள்ளுக்கடைமுதலிய இந்த இடங்களையடுத்துச்செல்வது செல்வத்தையழியச்செய்யும். காமத்தில்அதிகப்பற்றுள்ள மனிதன் எந்தஅகாரியத்தை விலக்குவான்? காமத்திற்கீடுபட்டவன் கள்ளையும் மாம்ஸத்தையும் பிறர்பொருளையும் அப்படியேதாரங்களையும் தனங்களையும் அபகரிப்பான்; அப்படியே ஆஜ்ஞையைவெளியிடுவான். எவர்களுக்கு எவ்விதப்பொருளுமில்லையோ அவர்கள் ஆபத்துள்ளஸமயத்தில்மாத்திரம் யாசிப்பார்

---

1 கெட்டகார்யத்தில். [உரை.

2 'குசீலவா:' என்பது மூலம்; அதற்கு, 'விடர்கள்' என்பது பழைய

3 'கொடுத்தபொருளையும் வரியையும்' என்பது பழையஉரை.

கள். தயையாலும் தர்மத்தாலும் அவர்கள்பொருட்டுத் தானஞ்செய்வதன்றிப் பயத்தால்செய்வதுகூடாது. உன்ராஜ்யத்தில் யாசிக்கிறவர்களும் திருடர்களும் இருக்கவேண்டாம். அவர்கள் பிராணிகளைத் துன்பப்படுத்துகிறவர்களேயல்லாமல் அனுகூலராயிருப்பவர்களல்லர். பிராணிகளிடம் அன்புபாராட்டுகிறவர்களும் பிரஜைகளைப் பெருகச் செய்கிறவர்களும் உன்ராஜ்யத்திலிருக்கட்டும். பிராணிகளைத் துன்பப்படுத்துகிறவர்கள் இருக்கவேண்டாம். ஓ! மஹாராஜனே! அதிகமானகப்பத்தை வாங்கச்செய்யும் அதிகாரிகளைத் தண்டிக்கவேண்டும். [1] அவர்கள் எவ்விதம் வரிகொடுப்பார்களோ அவ்விதம் நீ செய்விக்கவேண்டும். கிருஷியையும் பசுக்காத்தலையும் வர்த்தகத்தையும் மற்றுமுள்ள இவைபோன்றவேலைகளையும் பலமனிதர்களைக்கொண்டு நடத்தச்செய்யவேண்டும். இல்லாவிட்டால் காரியத்திற்குக் கேடுவரும். கிருஷியையும் பசுக்காத்தலையும் வர்த்தகத்தையும்செய்யும் மனிதன் (திருட்டுப்பயத்தாலும் அதிகாரிகளின்பயத்தாலும்) சிறிதும் ஸந்தேகத்தை அடைவானாகில் அதனால் அரசன் இகழ்ச்சியுள்ளவனாவான். தனமுள்ளமனிதர்களைப் பானமும் ஆடைகளும் போஜனமுமாகிய இவைகளால் எப்பொழுதும் பூஜிப்பதுடன், ‘என்னுடன்கூடி ப்ரஜைகளிடம் அன்புள்ளவர்களாயிருங்கள்’ என்று சொல்லவும்வேண்டும். ஓ! பாரத! தனமுள்ளவர்கள் ராஜ்யத்திற்குப் பெரிய அங்கமென்பது பிரஸித்தம். தனமுள்ளவன் எல்லாப்பிராணிகளுக்கும் தலைமையாயிருப்பவனென்பதிற் சந்தேகமில்லை. ஞானமுள்ளவனும் சூரனும் தனமுள்ளவனும் தர்மமுள்ளவனும் தவமுள்ளவனும் உண்மைபேசுகிறவனும் புத்தியுள்ளவனுமான எஜமானன் ப்ரஜைகளை ரக்ஷிக்கத் தக்கவன். ஆகையால், ஓ! அரசனே! எல்லாப்பிராணிகளிடத்திலும் பிரீதியுள்ளவனாகியிரு. ஸத்யத்தையும் நேர்மையையும் கோபமில்லாமையையும் கொடுமையில்லாமையையும் கைப்பற்று. ஓ! ராஜனே! இவ்விதம் உண்மையையும் நேர்மையையும் பெரிதாகக்கொண்டவனும் நண்பர்களையும் பொக்கசத்தையும் ஸேனையையுமுடையவனுமான நீ தண்டத்தையும் அதிகமானகோசத்தையும் மித்திரனையும் பூமியையும் பின்னும் அடைவாய்.

1 ‘அவ்விதமில்லாத அதிகாரிகளை வரிகளைவாங்கும் அதிகாரத்தில் ஏவவேண்டும்’ என்பது வேறுபாடம்

## எண்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் ராஜ்யத்தின்இயல்பையும் ரக்ஷணமுறையையுங்கூறியது.)

ஓ! ராஜனே! உன்ராஜ்யத்தில் புஜிக்கத்தக்க கனியுள்ள மரங்களை வெட்டக்கூடாது. கிழங்கும் கனியும் பிராம்மணர்களின் பொருளென்று அறிஞர்கள் தர்மத்தை உபதேசிக்கிறார்கள். பிராம்மணர்களுக்குக்கண்டு அதிகமாயிருப்பதை மற்றஜனங்கள் புஜிக்கவேண்டும். பிராம்மணனுக்குவிரோதமாக மற்றவன் எவ்விதத்திலும் அபகரிக்கக்கூடாது. ஜீவனமில்லாததால் குறைவடைந்த பிராம்மணன் தெரிவித்துவிட்டு ராஜ்யத்தைவிடமுயல்வானாகில் தாரத்துடன்சேர்ந்த அவனுக்கு ஜீவனத்தை உண்டுபண்ணவேண்டும். அந்தப் பிராம்மணன் திரும்பாமற்போனால் பிராம்மணர்களின் கூட்டத்தில், 'இப்பொழுது இவ்வுலகம் எந்த விஷயத்தில் மரியாதையைச்செய்யும்' என்று சொல்லவேண்டும். (அப்பொழுது) ஸந்தேகமின்றித் திரும்புவான். அவ்விதமில்லாமல் ஜீவனத்திற்குமேலான போகம்வேண்டுமென்று நகரைவிடுவானாகில், 'ஓ! பிராம்மண! முதன்மையான இப்போகவிருப்பத்தை மறக்கவேண்டும்' என்று தெரிவிக்கவேண்டும். ஓ! கௌந்தேய! இது சாச்வதமானதர்மமென்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். நான் இதை நம்பவில்லை. (பிராம்மணன்)' போகங்களை வேண்டினால் அவைகளாலும் உபசரிக்கத்தக்கவன். ஜீவனமில்லாமற்போனால்அதையும் அவனுக்குச்செய்துகொடுக்கவேண்டும். பிராணிகளுக்குக் கிருஷியும் பசுக்களைக்காத்தலும் வர்த்தகமும் இவ்வுலகில் ஜீவனமாகும். வேதவித்தையானது மேலுலகத்திற்கும் ஸாதனமாகும். அது பிராணிகளைப் பரிசுத்தமாகவுஞ்செய்யும். அவ்வித்தையானது கீழேவிழுங்காலத்தில் எவர்கள் அதற்குவிரோதியான திருடர்களாயிருக்கிறார்களோ அவர்களைக் கொல்லவேண்டிப் பிரம்மதேவர் இவ்வுலகில் க்ஷத்திரியனைப் படைத்தார். ஆகையால், ஓ! அரசனே! பகைவர்களை வெல்லு; பிரஜைகளைப் பாதுகா; யாகங்களைச் செய். கௌரவகுமாரனே! சூரனாயிருந்து யுத்தத்தில் போர்புரி. ரக்ஷிக்கத்தக்கவர்களை ரக்ஷிக்கும்அரசன் அரசர்களில் மிகச்சிறந்த அரசனாவான். அவர்களைரக்ஷியாத சில அரசர்களால் யாதொருபயனுமில்லை. ஓ! யுதிஷ்டிர! எல்லாஉலகங்களின் க்ஷேமத்திற்காகவும் அரசன் எப்பொழுதும் யுத்தஞ்செய்யவேண்டும். அந்தக்காரணம்பற்றியே மனிதன் மனிதர்

களையே ஆளத்தக்கவன். அருகிலுள்ளவர்களிடமிருந்து வெளியி லுள்ளவர்களையும் வெளியிலுள்ளவர்களிடமிருந்து அருகிலுள்ளவர் களையும் ரக்ஷித்துக்கொண்டு பிறர்களிடமிருந்து பிறர்களையும் இனத் தார்களிடமிருந்து எல்லா இனத்தார்களையும் எப்பொழுதும் பாலனஞ் செய். ஓ! அரசனே! எல்லாவிடத்திலிருந்தும் உன்னைரக்ஷித்துக் கொண்டு பூமியை ரக்ஷித்துக்கொள். அறிவுள்ளஜனங்கள் இவை யாவும் அரசனையே மூலமாக உடையனவென்று சொல்லுகிறார்கள். (அரசன்,) "என்ன இடைவெளியிருக்கிறது? எனக்கு எவ்விதவ்யஸன ப்பற்றுதலிருக்கிறது? எது வீழ்த்தப்படாதது? எவ்விடமிருந்து என் னைக் குற்றந்தொடரும்?" என்று எப்பொழுதும் சிந்திக்கவேண்டும். சென்றநாளில் நடத்தியதைப் புகழ்ந்துகொண்டிருக்கிறார்களா, இல் லையாவென்றும் ஆராயவேண்டும். நம்பிக்கையுள்ள ரஹஸ்யமான சாரர்களை அனுப்பி, 'எனதுநடக்கையைக் கொண்டாடுகிறார்களா இல் லையா? கிராமத்தில் என்னிடம் அன்பிருக்கிறதா? ராஜ்யத்திலும் என் னுடைய கீர்த்திஇருக்கிறதா? என்பதை அறியுங்கள்' என்று பூமி யைச்சுற்றிச் செல்லச்செய்யவேண்டும். ஓ! யுதிஷ்டிர! தர்மமறிந்த வர்களும் தைரியமுள்ளவர்களும் யுத்தங்களில் ஓடாதவர்களுமான ஜனங்களுள் ராஜ்யத்தில் எவர்கள் அடுத்துப்பிழைப்பவர்களோ எவர் கள் அரசனை அடுத்துப்பிழைப்பவர்களோ அமாத்யர்களுள்ளும் தடஸ் தர்களான எல்லாஜனங்களுள்ளும் எல்லாவிதத்திலும் எவர்கள் உன் னைக் கொண்டாடுகிறார்களோ அல்லது நிந்திக்கிறார்களோ அவர்கள் யாவர்களையும் மரியாதையுள்ளவர்களாக நீ செய்யவேண்டும். அப்பா! ஒரேஉறுதியாக அனைவர்களுக்கும் அன்புள்ளவனாயிருப்பது முடி யாது. ஓ! பாரத! எல்லாப்பிராணிகளிடமும் நட்பும் பகையும் [1]நொது மலும் உண்டு" என்றுசொன்னார்.

யுதிஷ்டிரர், "ஸமமானபுஜபலமும் குணங்களுமுடையவர்களான ஜனங்களுள் ஒருவன் எப்படிச்சிறந்தவனாயிருக்கக்கூடும்? அவன் எப் படி மனிதர்களை ஆளக்கூடும்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத் தொடங்கினார். "ஜங்கமங்கள் ஸ்தாவரங்களை ஆளத்தக்கவைகள். அப்படியே பல்லுள்ளவைகள் ஸர்ப்பங்கள்போலக் கோபமுற்றுப் பல் லில்லாதவைகளை (பெரிய) பாம்புகள் (சிறிய) பாம்புகளைப்புஜிப்பது போலப் புஜிக்கின்றன. ஓ! யுதிஷ்டிர! இவைகளிடமிருந்தும் சத்ரு விடமிருந்தும் எப்பொழுதும் அஜாக்ரதையில்லாமலிருக்கவேண்டும். அஜாக்ரதையாயிருந்தால் இவர்கள் கழுகுகள்போல விழுவார்கள்.

1 நட்பும் பகையுமில்லாமை.

மிகுதியாகவும் குறைவாகவும் பண்டங்களைவாங்குகிறவர்களும் ஆரண்யங்களில் சிரமபரிகாரஞ்செய்துகொள்ளுகிறவர்களுமான வர்த்தகர்கள் உன்ராஜ்யத்தில் வரிகளால் பீடிக்கப்பட்டுப் பயமடையாமலிருக்கிறார்களா? கிருஷிசெய்கிறவர்கள் மிகவும் துன்பப்படுத்தப்பட்டு ராஜ்யத்தை விடாமலிருக்கிறார்களா? அரசர்களின்பாரத்தை வஹிக்கும் அவர்கள் மற்றவர்களையும் போஷிக்கிறார்கள். சோம்பலால் (தர்மத்தின்) ஒருபாகம் அபகரிக்கப்படும். ஒருபாகம் பாஷண்டனை அடைந்திருக்கிறது. ஒரு பாகம் அரசனை அடுத்திருக்கிறது. ஒருபாகம் கிருஷியை அடுத்திருக்கிறது. (அரசனை அடுத்த) ஒருபாகத்தை மூன்று பாகங்கள் ஒவ்வொருநாளும் விழுங்குகின்றன. ஆகையால், 'ஓ! யுதிஷ்டிர! எல்லா முயற்சியாலும் அரசன் பாகத்தை [1]ரக்ஷித்துக்கொள். தேவர்களும் அப்படியே பிதிருக்களின் கூட்டங்களும் மானிடர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் பறவைகளும் பசுக்களும் இங்கிருந்து கொடுக்கப்படுவதால் ஜீவிக்கிறார்கள். பரதகுலத்திலுதித்த பாண்டவ! அர[illegible]ரிய இந்தராஜ்யத்தின் நிலைமையும் ரக்ஷிக்கும் முறை[illegible]பாமு[illegible]வே[illegible]க்கப்பட்டன. இவ்விஷயத்தைப் பற்றியே சி[illegible]ன் [illegible]சொல்லுகிறேன்.

## தொண்ணூறாவது அத்தியாயம்.

## ராஜ தர்மம். (தொடர்ச்சி.)



(உசத்யர் மாந்தாதாவுக்கு ராஜதர்மோபதேசஞ்செய்தது.)

ஓ! யுதிஷ்டிர! அங்கிரஸின் புத்திரரும் பிரம்மஜ்ஞானிகளிற் சிறந்தவருமான உசத்தியரானவர் பிரீதியுடன் யுவனாச்வனின்புத்திரனை மாந்தாதாவுக்கு க்ஷத்திரியர்களுக்குரிய எந்தத் தர்மங்களை உபதேசித்தாரோ, சிறந்தபிரம்மஜ்ஞானியான அந்தஉசத்தியர் அந்த மாந்தாதாவைக் குறித்து எவ்விதமுபதேசித்தாரோ அவைமுழுமையும் அவ்விதமே நான் உனக்கு நன்றாகச்சொல்லுகிறேன்.

உசத்தியர், "ஓ! மாந்தாதாவே! அரசன் தர்மத்திற்காகஇருக்கிறானேயல்லாமல் தன் இஷ்டங்களைச்செய்கிறதற்காக இருக்கவில்லை. உலகத்தை ரக்ஷிப்பவன் அரசனென்று தெரிந்துகொள். அரசன் தர்மத்தைச்செய்வானாகில் தெய்வத்தன்மைக்குத் தக்கவனாவான். அவன் அதர்மத்தைச் செய்வானாகில் நரகத்தின்பொருட்டே செல்வான். பிரா

[1] அரசனையடுத்தபாகம் நன்குரக்ஷிக்கப்படின் மற்ற மூன்றும் நன்கு ரக்ஷிக்கப்படும் என்பது கருத்து.

ணிகள் தர்மத்திலிருக்கின்றன. தர்மம் அரசனிடத்திலிருக்கிறது. அந்தத்தர்மத்தை எந்தஅரசன் நன்றாகநடத்துகிறானோ அந்தஅரசன் ஸம்பத்தையடைகிறான். ஓ! மாந்தாதாவே! அரசனுடையகுற்றத்தால் செல்வமுள்ளவன் பாபியென்றுசொல்லப்படுவான். தேவர்களும் இகழ்ச்சியை அடைகிறார்கள். தர்மம்இல்லையென்று சொல்லவும்படும். அதர்மிஷ்டர்களுக்கும் பொருளின்சித்தியானது காணப்படும். உலகம்யாவும் அதையே மங்களமென்று தொடர்ந்துநிற்கிறது. எப்பொழுது பாபம் தடுக்கப்படவில்லையோ அப்பொழுது தர்மஒழுக்கம் நாசமடைகிறது. அதர்மம் பெரிதாய்வளருகிறது. இரவும்பகலும் பயத்தைச் சொல்லுகிறார்கள். அப்பா! பாபத்தைத்தடாவிட்டால் தர்மப்படி, 'இஃது என்னுடையது; இஃது இல்லை' என்ற ஸாதுக்களின் வ்யவஸ்தையானது இராது. பாபம் பலமாகஇருக்கும்பொழுது மனிதர்களுக்குப் பெண்டிரும் பசுக்களும் நிலமும் வீடும் காணப்படா. பாபத்தைத்தடாமற்போனால் தேவர்கள் பூஜையை அறியமாட்டார்கள்; பிதிருக்கள் ச்ராத்தத்தை அறியமாட்டார்கள்; அதிதிகள் பூஜிக்கப்படமாட்டார்கள். எப்பொழுது பாபம் தடுக்கப்படவில்லையோ அப்பொழுது பிராம்மணர்கள் விரதமுள்ளவர்க[illegible]தங்களைக் கற்கமாட்டார்கள்; யாகங்களைச் செய்யமாட்டார்கள். ஓ! மஹாராஜ! பாபம் தடுக்கப்படாதபோது மனிதர்களின்மனம் கொலைசெய்யப்படும் பிராணிகளின் மனம்போலத் துயரமுற்றதாயிருக்கும். ஆகையால், முனிவர்கள் இரண்டுஉலகங்களையும் உத்தேசித்து, 'இவன் தர்மத்தைக் காப்பவனாயிருப்பான்; இவன் பெரியநிலைமையடைந்தவனாது' என்று அரசனை உண்டுபண்ணினார்கள். எவனிடம் தர்மம் விளங்குகிறதோ அவனை அரசனாகச் சொல்லுகிறார்கள். எவனிடம் தர்மம் நாசமடைகிறதோ அவனைத் தேவர்கள் சூத்திரனென்று அறிகிறார்கள். சிறந்ததான வ்ருஷமென்னுந்தர்மத்திற்கு லயத்தைச் செய்பவனைத் தேவர்கள் [1]வ்ருஷலனென்றறிவிக்கிறார்கள். ஆகையால், தர்மத்திற்கு நாசத்தைச்செய்யக்கூடாது. எல்லாப்பிராணிகளும் எப்பொழுதும் தர்மத்தின்வளர்ச்சியால் வளர்ச்சியையும் அதன்குறைவால் குறைவையும் அடைகின்றன. ஆகையால், தர்மத்தைவிருத்திசெய்யவேண்டும். தனங்களைப் பெருகச்செய்வதாலோ (உலகங்களைத்) தரிப்பதாலோ தர்மமென்றுசொல்லப்படுகிறது நிச்சயம். ஓ! ராஜனே! அந்தத்தர்மமானது மனிதர்களுக்கு (நரகத்தின்) [2]எல்லையின்

[1] வ்ருஷ=தர்மம்; லயம்=நாசம் வ்ருஷ+லய=வ்ருஷல. [த்து.
[2] 'தர்மமுள்ளவரையில் ஸ்வர்க்கம்; இல்லாவிட்டால்நரகம்' என்பதுகரு

முடிவைச்செய்வதாய்ச் சொல்லப்படுகிறது. பிரம்மதேவர் பிராணிக ளின் பெருமைக்காகத் தர்மத்தைப் படைத்தார். ஆகையால், பிரஜை களின் க்ஷேமத்திற்காகவேண்டித் தர்மத்தை விருத்திசெய்யவேண் டும். ஓ! அரசப்புலியே! ஆகையால்தான், தர்மம் மிகச்சிறந்ததாகச் சொல்லப்படுகிறது. புருஷர்களிற் சிறந்தவனே! நற்காரியங்களைச் செய்துகொண்டு எவன் பிரஜைகளை ஆளுகிறானோ அவன் அரசனாகி றான். காமத்தையும் கோபத்தையும் விலக்கிவிட்டுத் தர்மத்தையே பற்றிநின்று பரிபாலிக்கவேண்டும். பாரதர்களிற்சிறந்தவனே! அரசர் களுக்குத் தர்மமானது க்ஷேமத்தைச் செய்கிறவைகளில் உத்தமமா கும். தர்மத்திற்குப் பிராம்மணன் காரணமாகிறான். ஆகையால், அவர்களை எப்பொழுதும் பூஜிக்கவேண்டும். ஓ! மாந்தாதாவே! பொறாமையின்றிப் பிராம்மணர்களது இஷ்டங்களைச் செய்துகொடுக்க வேண்டும். அவர்களிஷ்டத்தைச்செய்யாததால் அரசர்களுக்குப் பய முண்டாகும். மித்திரர்கள் விருத்தியடையாமல் விரோதிகளுமாவார் கள். விரோசனனுடைய புத்திரனை பலியானவன் இளமைப்பருவ முதல் எப்பொழுதும் பிராம்மணர்களிடம் அஸூயையுள்ளவனா யிருந்தான். பிறகு அவனிடமிருந்த ப்ரதாபத்துடன்கூடின லக்ஷ்மி யானது விலகத்தொடங்கிற்று. பிறகு அவனிடமிருந்துவிலகி அந்த லக்ஷ்மியானது இந்திரனிடஞ்சென்றது. உடனே இந்திரனிடமிருக் கும் லக்ஷ்மியைக்கண்டு அந்தப்பலியானவன் மனவருத்தமடைந்தான். ஓ! பிரபுவான மாந்தாதாவே! அஸூயைக்கும் அபிமானத்திற்கும் பயன் இதுவே. ஆகையால், ப்ரதாபமுள்ள லக்ஷ்மியானது உன்னை விடாமலிருக்கும்படி தெரிந்துகொள். அகங்காரமென்பது லக்ஷ் மிக்கு அதர்மத்தினிடமுண்டான புத்திரனென்று சுருதி கூறுகிறது. ஓ! அரசனே! அவ்வகங்காரத்தால் பலதேவர்களும் அஸுரர்களும் நாசத்தை அடைவிக்கப்பட்டார்கள். ராஜனே! அவ்விதமே பலராஜ ரிஷிகளும் நாசமடைந்தார்களென்று தெரிந்துகொள். அவ்வகங்கார த்தைவென்றவன் அரசனாகிறான். அதனால் ஜயிக்கப்பட்டவன் தாஸ னாகிறான். ஓ! மாந்தாதாவே! நெடுங்காலமிருக்க விரும்புவாயாகில் அகங்காரத்துடன்கூடிய அதர்மத்தை அனுஸரித்துச் செல்லாதிருக் கும்படி நடந்துகொள். மதமுள்ளவன், அஜாக்ரதையுள்ளவன், அறி வில்லாத சிறுவன், பித்தன், விசேஷமாகநிந்திக்கப்பட்டவன், கெட்ட நடையுள்ளவன், சத்துருக்களையடுத்தவன், குற்றமுள்ள அமாத்தியன், பெண்கள், மலை, கடினமானகோட்டை, யானை, குதிரை, ஸர்ப்பம் இவர்களிடம் எப்பொழுதும் [1]சேர்க்கையில்லாமலிருக்கவேண்டும்.

[1] 'இவர்களின் சேர்க்கையிலிருந்தும் இவர்களுடன் சேர்ந்தவர்களின் சேர்க்கையிலிருந்தும் விலகவேண்டும்' என்பது வேறுபாடம்.

இரவில்ஸஞ்சாரத்தை விலக்கவேண்டும். அதிகமான ஆசையையும் அபிமானத்தையும் டம்பத்தையும் கோபத்தையும் விலக்கவேண்டும். ஓ! அரசனே! அறியாதஸ்திரீகள், பேடிகள், வ்யபிசாரிகள், பிறன் மனைவிகள், கன்னிகைகள் இவர்களிடம் புணர்ச்சி செய்யக்கூடாது. எப்பொழுது அரசன் அஜாக்ரதையாக இருக்கிறானோ அப்பொழுது ஜாதிஸங்கரத்தால் குலங்களில் பாவிகளான ராக்ஷஸர்கள் ஜனிக்கிறார்கள்; அலிகளும் அங்கங்குறைந்தவர்களும் ஊமைகளும் புத்தியில்லாதவர்களும் மற்றவர்களும் ஜனிக்கிறார்கள். ஆகையால், அரசன் விசேஷமாகப்ரஜைகளின் ஹிதத்திலிருக்கவேண்டும். அஜாக்ரதையாக இருக்கும் அரசனுக்குப் பெரியதோஷமுண்டாகிறது. ப்ரஜைகளுக்கு ஜாதிஸங்கரத்தைச் செய்விக்கிற அதர்மங்கள் மிகவிருத்தியாகும். குளிரில்லாதகாலத்தில் குளிரிருக்கும். குளிருள்ளஸமயத்தில் குளிரிராது. மழையில்லாமையும் அதிகமழையும் நோயும் பிரஜைகளைப் பிடிக்கும். இப்படியுள்ளஸமயத்தில் (தூமகேதுமுதலிய) நக்ஷத்திரங்களும் கொடியகிரஹங்களும் தோன்றும். அரசனின் நாசத்திற்குக்காரணமான பலஉத்பாதங்களும் இங்கு காணப்படும். தன்னையும் ரக்ஷித்துக்கொள்ளாமல் எந்த அரசன் பிரஜைகளையும் ரக்ஷிக்கவில்லையோ அவ்வரசனுடைய பிரஜைகள் நாசமடைவார்கள். பிறகு அவனும் நாசமடைவான். ஒருவனுடையபொருளை இரண்டு பேர்களும் இரண்டுபேர்களுடையபொருளை மற்றப்பலபேர்களும் அடித்துப்பிடுங்குவார்கள். ஸ்திரீகள் அபகரிக்கப்படுவார்கள். அதை அரசர்களின் குற்றமாகச் சொல்லுவார்கள். அரசன் தர்மத்தைவிட்டு அஜாக்ரதையாக நடக்கும்பொழுது மனிதர்களிடம், 'இந்து என்னுடையது' என்கிற எண்ணம் நிலைபெறாது.

## தொண்ணூற்றோராவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(உசத்யர் உபதேசத்தொடர்ச்சி.)

காலத்தில்வருஷிக்கும் மேகமும் தர்மத்தைச்செய்யும் அரசுமென்னும் ஸம்பத்து ப்ரஜைகளை ஸுகமாகப் போஷிக்கும். எந்த வண்ணான் வெள்ளை ஆடைகளின் அழுக்கை விலக்கவும் சாயமுள்ள வஸ்திரங்களைத் துலக்கவும் அறியவில்லையோ அவன் இல்லாதவனுக் கொப்பாவான். பிராம்மணச்சிரேஷ்டர்கள் க்ஷத்திரியர்கள் வைச்யர்

க்ள் ஜாதிகளில் நான்காமவனுன சூத்திரன் இவர்களிலொருவன் [1]பல தொழில்களிலிருப்பவனுனல் அப்படியே ஆவான். சூத்திரனுக்கு வேலையும் வைச்யனுக்குக் கிருஷியும் க்ஷத்திரியனுக்குத் தண்டநீதியும் பிராம்மணர்களுக்குப் பிரம்மசரியமும் தவமும் மந்திரங்களும் ஸத்தியமும் தர்மமாகும். எந்தக்ஷத்திரியன் [2]பாத்திரங்களைச் சுத்தி செய்வதுபோல அவர்களின் ஸ்வபாவத்திலுள்ள குற்றங்களை விலக்க அறிகிருனே அந்தஅரசன் ஜனங்களுக்குப்பதியும் தந்தையுமாகிறுன். பரதச்ரேஷ்டனே! கிருதம், திரேதை, த்வாபரம், கலி இவைகள்யாவும் அரசனுடைய நடக்கைகளே. அரசனே யுகமென்று சொல்லப்படுகிறுன். அரசன் அஜாக்ரதையாக இருக்கும்பொழுது நான்குஜாதிகளும் அப்படியே வேதங்களும் நான்குஆச்ரமங்களுமாகியயாவும் விசேஷமாக [3]மோகமடையும். அரசன் அஜாக்கிரதையாக இருந்தால் மூன்றுஅக்நிகளும் மூன்றுவேதங்களும் தக்ஷிணையுடன் கூடியயாகங்களும் எல்லாம் அறியப்படாமற்போம். அரசனே பிராணிகளுக்குக்கர்த்தன்; அரசனே நாசத்தைச்செய்பவன். தர்மபுத்தியுள்ளவன் கர்த்தனும் அதர்மபுத்தியுள்ளவன் நாசஞ்செய்கிறவனுமாகிறுர். அரசன் அஜாக்ரதையுள்ளவனுனல் அரசனுடையமனைவிகள், புத்திரர்கள், பந்துக்கள், நண்பர்கள்யாவர்களும் சேர்ந்து சோகமடைவார்கள். அரசன் அதர்மநடையுள்ளவனுயிருந்தால் யானைகளும் குதிரைகளும் பசுக்களும் ஒட்டகங்களும் கோவேறுகழுதைகளும் கழுதைகளும் மற்றஎல்லாஜந்துக்களும் துன்பப்படும். ஓ! மாந்தாதாவே! பலமானது துர்ப்பலர்களைரக்ஷிக்கவேண்டிப் பிரம்மதேவரால் ஸ்ருஷ்டிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. பலமில்லாதபிராணியானது பெரியது. அதனிமித்தம் யாவும் நிலைபெற்றிருக்கின்றன. ஓ! அரசனே! அரசன் அதர்மத்திலிருந்தால் அந்தப்பிராணியைப் போஷிப்பவனும் அப்போஷகன்குலத்திலுதித்தவர்களும் அனைவரும் சோகமடைவார்கள். பலமில்லாதவன், முனி, ஸர்ப்பம் இவர்களின் பார்வையைப் பொறுப்பது மிகக்கடினம். பலமில்லாதவனருகிற்செல்லாதே. அப்பா! பலமில்லாதவர்கள் எப்பொழுதும் அவமதிக்கத்தகாதவர்களென்று நினைத்துக்கொள். துர்ப்பலர்களின்கண்கள் பந்துக்களுடன்கூடின உன்னைத் தஹிக்கவேண்டாம். துர்ப்பலர்களால் எரிக்கப்பட்டவனுடையகுலத்தில் ஒன்றும் முளையாது. அவர்கள் வேருடன் கொளுத்தி

[1] 'அவிவேகத்தால் தமக்குரியகர்மங்களைச் செய்யாமலிருந்தால்' என்பது பழையவுரை.

[2] 'வஸ்திரங்களைச் சுத்திசெய்வதுபோல்' என்பது வேறுபாடம்.

3 அறியப்படாமற்போகும்.

விடுவார்கள். துர்ப்பலர்களின் அருகிற் செல்லாதே. பலத்தைவிடப் பலமில்லாமை மிகப்பெரிது. அஃது அதிகபலமுள்ளபலம். துர்ப்பலர்களால் எரிக்கப்பட்டபலத்தில் சிறிதும் மிஞ்சாது. அவமதிக்கப்பட்டவனும் அடிக்கப்பட்டவனும் துன்பமுள்ளவனும் ரக்ஷணையடையாமற்போனால் அத்தேசத்தில் தெய்வத்தால்செய்யப்படுந் தண்டம் அரசனைக் கொல்லும். அப்பா! பலத்திலிருக்கும் நீ பலமில்லாத ஜனத்தினிடம் வரிவாங்கவிரும்பாதே. அக்நியானது அடுத்ததை யெரிப்பதுபோலத் துர்ப்பலர்களின்கண்கள் உன்னைக் கொளுத்த வேண்டாம். பொய்யாகக் குற்றஞ்சாட்டப்பட்டு அழுகிறவர்களுடைய கீழேவிழும்கண்ஜலங்கள் பொய்யான அக்குற்றத்தைச் சொன்னவர்களுடைய புத்திரர்களையும் பசுக்களையும்கொல்லும். தன்னிடத்தில் பயன்படாவிட்டால் புத்திரர்களிடத்திலும் இல்லாவிட்டால் பௌத்திரர்களிடத்திலும் அவர்கள்புத்திரர்களிடத்திலும் பயன்படும். செய்யப்பட்ட பாபகர்மமானது பசுவைப்போல உடனே பயன்படுவதில்லை. எந்தத்தேசத்தில்அடிக்கப்படும் பலமில்லாதமனிதன் ரக்ஷணையடையவில்லையோ அந்தத்தேசத்தில் தெய்வத்தால்செய்யப்பட்டதும் கொடியதுமான பெரியதண்டம் விழும். தேசத்திலுள்ளவர்கள் யுக்தியுள்ளவர்களாய்ப் பிராம்மணர்களைப்போல ஸந்யாஸிஉருவத்துடன் அடிக்கடி பிச்சைஎடுக்கும்பொழுது அவர்கள் அரசனைக் கொல்லுகிறவர்களாகிறார்கள். அரசனுடையதேசத்தில் அரசனைச்சேர்ந்தபலபுருஷர்கள் எப்பொழுது நீதியின்றிநடக்கிறார்களோ அப்பொழுது அஃது அரசனுக்குப் பெரும்பாவமாகும். காமத்தாலாவது பொருளின்வசமாயிருந்தாவது எப்பொழுது யுக்தியாகப் [1]பொருள்களை (அரசன்) அபகரிக்கிறானோ அப்பொழுது (பொருளிழந்தவர்கள்) யாசிக்கிற அந்தச்சோகமானது அரசன்செய்த பெரியதீங்காகும். பெரியமரமானது பயிராகிவளரும். அதைப் பிராணிகளும் ஆச்ரயிக்கும். எப்பொழுது அந்தமரம் வெட்டப்படுகிறதும் கொளுத்தப்படுகிறதுமாகிறதோ அப்பொழுது அதை ஆச்ரயித்தவைகள் இடமற்றவைகளாகின்றன. (அதுபோல) எப்பொழுது ராஜ்யத்தில் தேசநன்மையையோ அரசனதுகுணங்களையோ சொல்லிக்கொண்டு முக்கியமானதர்மத்தைச் செய்கிறார்களோ அப்பொழுது அரசன் விருத்தியடைவான். பாபமும் விலகும். அவர்கள் தர்மத்திலுள்ளஅவிவேகத்தால் அதர்மத்தைச்செய்வார்களானால் புண்யம் விரைவில்விலகிப்போம். பாப

1 'துன்பத்துடன் பிச்சையெடுக்கும் யாசகர்களுடையபொருளை' என்றும்கொள்ளலாம்.

மும் வரும். எந்தத்தேசத்தில் பாபிகள் வெளிப்படையாக ஸஞ்சரிக்கிறார்களோ அந்தத்தேசத்தில் அரசனுடையஸபையைக் கலி அடைகிறது. எந்தஅரசனுடைய தேசத்தில் அவன் சக்தியினால் மனிதர்களை அடக்கவில்லையோ அவனுடைய அந்தத்தேசம்விருத்தியடைகிறதில்லை. எந்தஅரசன் உள்ளபடி அமாத்தியர்களை மரியாதை செய்து ஆலோசனையிலும் யுத்தத்திலும் ஏவுகிறானோ அந்த அரசனுடைய ராஜ்யம் விருத்தியடையும். அவன் பூமிமுழுமையையும் நெடுங்காலம் அனுபவிப்பான். இந்த விஷயத்திலும் நல்லநடையையும் நன்குகூறப்படும்வசனத்தையும் நன்றாகப்பார்த்துக்கொண்டு பூஜிக்கும் அரசன் ஒப்பற்றதர்மத்தை அடைகிறான். பங்கிட்டுக்கொடுத்துப் புஜிப்பதும் பிறர்களை அவமதியாமலிருப்பதும் அகங்காரமுள்ளபலவானை அடிப்பதும் அரசனுடைய தர்மமென்று சொல்லப்படும். வாக்காலும் சரீரத்தாலும் செய்கையாலும் யாவற்றையும் ரக்ஷிப்பதும் (இதற்குவிரோதியாயிருந்தால்) புத்திரனையும் பொறாமலிருப்பதும் அரசனுடைய தர்மமென்று சொல்லப்படும். அரசன் எப்பொழுது பலமில்லாதமனிதர்களுக்குத் தானங்கொடுத்துப் புஜிக்கிறானோ அப்பொழுது அவர்கள் பலமுள்ளவர்களாகிறார்கள். அஃது அரசனுடைய தர்மமென்று சொல்லப்படுகிறது. ராஜ்யங்களைரக்ஷிப்பதும் திருடர்களைத்துரத்துவதும் யுத்தத்தில் ஜயிப்பதும் அரசனுடைய தர்மமென்று சொல்லப்படும். நண்பனாயிருந்தாலும் செய்கையாலும் சொல்லாலும் பாபத்தைச்செய்பவனைப் பொறாமலிருப்பது 'அரசனுடைய தர்மமென்று' சொல்லப்படுகிறது. அரசன் புத்திரர்களைப்போல வர்த்தகர்களைரக்ஷிப்பதும் மரியாதையைவேறுபடுத்தாமலிருப்பதும் அரசனுடைய தர்மமென்று சொல்லப்படும். விருப்பு வெறுப்புக்களைவிலக்கிவிட்டு ச்ரத்தையுடன்கூடிப் போதுமான தக்ஷிணையுள்ள யாகங்களைச்செய்வது அரசனுடைய தர்மமென்றுசொல்லப்படுகிறது. ஏழைகளும் அநாதர்களும் பிராயமுதிர்ந்தவர்களுமாகிய இவர்களுடைய கண்ணீரைத்துடைப்பதும் மனிதர்களுக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணுவதும் அரசனுடைய தர்மமென்றுசொல்லப்படும். மித்திரர்களைவிருத்திசெய்வதும் அவ்விதம்சத்துருக்களை இழப்பதும் ஸாதுக்களை நன்குபூஜிப்பதும் அரசனுடையதர்மமென்று சொல்லப்படும். ஸத்தியத்தைரக்ஷிப்பதும் அன்புடன் எப்பொழுதும் பூமியைக்கொடுப்பதும் அதிதிகளையும்வேலைக்காரர்களையும் பூஜிப்பதும் அரசனுடையதர்மமென்றுசொல்லப்படும். நிக்ரஹாநுக்ரஹ இரண்டும் எவனிடம் நிலைபெற்றிருக்கின்றனவோ அந்த அரசன் இந்தஉலகத்திலும் பரலோகத்திலும் பயன

டைகிறான். ஓ! மாந்தாதாவே! அரசனானவன் தர்மமுள்ளவர்களைப் பாதுகாக்கும் ஈசனான யமனாயிருக்கிறான். [1]பிராணிகளை அடக்குகிற வன் யமன்போலாவான்; அடக்காதவன் அக்கினியாவான். [2]ரித்விக்கையும் புரோகிதரையும் ஆசாரியரையும் அவமதியாமல் பூஜைசெய்து நன்கு அங்கீகரிப்பது அரசனுடையதர்மமாகச் சொல்லப்படுகிறது. யமனானவன் எல்லாப்பிராணிகளையும் வேற்றுமையில்லாமலே அடக்குகிறான். அதுபோல அரசனும் நடக்கவேண்டும். விதிப்படி பிரஜைகளை அடக்கவேண்டும். அரசன் எல்லாவிதத்தாலும் இந்திரனோடு ஒப்பிடப்படுகிறான். ஓ! புருஷச்ரேஷ்டனே! அவன் எதைத்தர்மமாகப் பார்க்கிறானோ அது தர்மம். அஜாக்கிரதையில்லாமல் பொறுமையையும் புத்தியையும் தைரியத்தையும் அறிவையும் கற்றுக்கொள். பிராணிகளின் உண்மையை அறிய விருப்பம், நன்மை, தீமை, எல்லாப் பிராணிகளையும் சேர்த்துக்கொள்வது, தானம், இன்சொல் இவைகளையும் எப்பொழுதும் தெரிந்துகொள்ளவேண்டும். பட்டணங்களிலும் கிராமங்களிலுமுள்ள ஜனங்களைப் பந்துஜனங்களைப்போலப் பரிபாலிக்கவேண்டும். ஸாமர்த்தியமில்லாத அரசன் ஒருபொழுதும் பிரஜைகளை ரக்ஷிக்கச்சக்தியுள்ளவனல்லன். அப்பா! வஹிக்க மிகக்கடினமான ராஜ்யமென்பது மிகப்பெரிதானசுமையன்றோ? அதைத்தண்டநீதி தெரிந்தவனும் விசேஷ அறிவுள்ளவனும் சூரனுமான அரசன் பரிபாலிக்கவல்லவனாவான். தண்டமில்லாதவனும் தைரியமில்லாதவனும் புத்தியில்லாதவனுமாயிருப்பவன் பரிபாலிக்கவல்லவனல்லன். நற்குலத்திற்பிறந்தவர்களும் ஸமர்த்தர்களும் பக்தியுள்ளவர்களும் பல கல்விகளுள்ளவர்களும் யோக்யர்களுமான மந்திரிகளுடன் கூடத் [3]தாபஸர்கள், [4]ஆச்ரமிகள் இவர்களுடைய [5]யாவற்றையும் புத்தியால் பரீக்ஷிக்கவேண்டும். இதனால் நீ எல்லாப்பிராணிகளின் முக்கியமான தர்மத்தையும் அறிவாய். உன் தேசத்திலும் பிறன்தேசத்திலும் உன்னுடையதர்மம் நாசமடையாது. அறம்பொருளின்பங்களில் அறம் ஒன்றே மேலானதாகும். தர்மபுத்தியுள்ளவன் இவ்வுலகிலும் மேலுலகிலும் ஸுகித்துச்செழிப்பான். விசேஷமாகப் பூஜிக்கப்பட்டமனிதர்கள் தர்மத்திற்குக்கேடுநேர்ந்தால் பிள்ளைகளையும் பெண்டிர்களையும்

---

1 'இந்திரியங்களை' என்பது பழையவுரை.

2 'ஓ! மாந்தாதாவே! தர்மமுள்ளவர்களுக்கு ஈசனான யமனிருக்கிறான். இந்திரியங்களை அடக்கினவன் ஐச்வரியமடைவான்; அடக்காதவன் கீழே விழுவான்' என்பது வேறுபாடம்.

3 அரண்யத்திலுள்ளவர்கள். 4 கிராமத்திலுள்ளவர்கள்.

5 'எல்லா அபிப்பிராயங்களையும்' என்பது வேறுபாடம்.

விட்டுவிடுவார்கள். பிராணிகளைச்சேர்த்துக்கொள்ளலும் தானமும் இன்சொல்லும் அஜாக்ரதையில்லாமையும் சுத்தியும் அரசனுக்கு ஸம்பத்தைச்செய்யும் ஸாதனங்களில் பெரியவை. மாந்தாதாவே! இந்தக்குணங்களிலிருந்து எப்பொழுதும் தவறுதலடையாதே. அரசன் அஜாக்ரதையின்றித் தன்னுடைய இடைவெளியையும் பிறனுடைய இடைவெளியையும் பார்த்துக்கொண்டிருக்கவேண்டும். இவனுடைய இடைவெளியைப் பிறன் காணக்கூடாது. இடைவெளிகளில் பிறனைத் தொடர்ந்துசெல்லவேண்டும். இஃது இந்திரன், யமன், வருணன் இவர்களின் நடக்கையாகும். எல்லாராஜரிஷிகளின் உண்மையையும் தொடர்ந்துரக்ஷித்துக்கொள். ஓ! மஹாராஜனே! ஆகையினால், ராஜரிஷிகளால்அனுஷ்டிக்கப்பட்டநடையைச் செய். புருஷச்ரேஷ்டனே! சிறந்ததானவழியைச் சீக்கிரமாக ஒத்துக்கொள். ஓ! பாரத! தர்மநடையுள்ள அரசனை இங்கும் இறந்தபின்னும் பெரியபராக்ரமமுள்ளதேவர்களும் ரிஷிகளும் பிதிருக்களும் கந்தர்வர்களும் புகழுகிறார்கள்" என்று சொன்னார்.

ஓ! பாரத! அந்தஉசத்தியரால் இவ்விதம்சொல்லப்பட்ட அந்த மாந்தாதாவானவன் சங்கையின்றி அவ்விதம்செய்துவந்தான். ஒருவனாகப் பூமியையும் அடைந்தான். ஓ! அரசனே! மாந்தாதாவைப் போல நீயும் அப்படியே நன்றாகத்தர்மத்தைச்செய்து பூமியைப் பரிபாலனஞ்செய்; ஸ்வர்க்கத்தில் ஸ்தானத்தைஅடைவாய்" என்று சொன்னார்.

## தொண்ணூற்றிரண்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(வாமதேவர் செங்கோலின்சிறப்பையும் கொடுங்கோலின் இழிவையும் வஸுமனஸுக்குக்கூறியது.)

யுதிஷ்டிரர், "குருக்களிற்சிறந்தவரும் பாரதகுலத்திலுதித்தவருமான பிதாமஹரே! தர்மத்திலிருக்கவிருப்பமுள்ள அரசன் எவ்விதமிருக்கவேண்டுமென்பதை உம்மிடம் வினவுகிறேன். அதனை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"இவ்விஷயத்திலும் விஷயங்களினுண்மையையறிந்தவரும் அறிவுள்ளவருமான வாமதேவரால்கூறப்பட்ட இப்பழையஇதிஹாஸத்தை

உதாஹரிக்கிறார்கள். பலமுள்ளவனும் பரிசுத்தனுமான வஸுமனஸென்னும் கோஸலதேசத்தரசன் தவமுள்ளவரான வாமதேவரென்னும் மஹரிஷியைநோக்கி, "ஓ! பகவானே! எந்தநடையுடனிருந்தால் நான் ஸ்வதர்மத்திலிருந்து நழுவாமலிருப்பேனோ அந்தநடையைத் தர்மார்த்தங்களையுடைய வாக்கியங்களால் எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்டான். தவமுள்ளவர்களிற்சிறந்தவரும் தேஜஸுள்ளவருமான வாமதேவர் நகுஷனின்புத்திரனான யயாதியைப் போலப் பொன்மேனியுள்ளவனும் ஸுகமாகவீற்றிருப்பவனுமான அவ்வரசனைநோக்கிச் சொல்லத்தொடங்கினார்.

" தர்மத்தையே செய்துகொண்டிரு. தர்மத்தைவிடப் பெரியதில்லை. அரசர்கள் தர்மத்திலிருந்துகொண்டே இப்பூமியை ஜயிக்கிறார்கள். எந்தஅரசன் பொருள்ஸித்திப்பதைவிடத் தர்மத்தைப் பெரிதாகநினைத்து அதை விருத்திசெய்வதில் புத்தியைச்செலுத்துகிறானோ அவன் தர்மத்தால் விளங்குகிறான். தர்மந்தெரியாதஎந்தஅரசன் பலத்தால்மாத்திரம் ப்ரவிர்த்திக்கிறானோ அவனிடமிருந்து முந்தியதும் இடையிலுள்ளதுமான (அறம்பொருள்) இரண்டும் விரைந்து விலகி ஓடும். துஷ்டர்களும் மிக்கபாபிகளுமான மந்திரிகளுள்ளவனும் தர்மத்தைக்கெடுப்பவனுமான அரசன் உலகத்திற்குக் கொல்லத்தக்கவனாவான். அவன் சீக்கிரமாகவே பரிவாரத்துடன் நாசமடைவான். நல்லவிஷயங்களைச்செய்யாதவனும் இஷ்டம்போலஸஞ்சரிப்பவனும் தற்புகழ்ச்சியுள்ளவனுமான அரசன் பூமிமுழுமையுமடைந்தும் சீக்கிரமாகவே நாசமடைவான். அவ்விதமின்றிச் சுபத்தையங்கீகரிக்கிறவனும் அஸூயையில்லாதவனும் இந்திரியங்களைஜயித்தவனும் புத்தியுள்ளவனுமானஅரசன் பிரவாகங்களால் ஸமுத்திரமானது விருத்தியடைவதுபோல விருத்தியடைவான். பூபதியே! எப்பொழுதும் 'தர்மத்தாலும் காமத்தாலும் பொருளாலும் புத்தியாலும் ஆலோசனையாலும் பூர்ணமாயிருக்கிறேன்' என்றெண்ணக்கூடாது. உலகநடையானது இவைகளிலெல்லாவற்றிலுந்தான் நிலைபெற்றிருக்கிறது. இவைகளைக்கேட்பவன் யசஸையும் கீர்த்தியையும் ஸம்பத்தையும் பிரஜைகளையும் அடைகிறான். இவ்விதம் தர்மங்களில்முயற்சியுள்ளவனும் அறம்பொருள்களை ஆலோசிப்பவனுமான எவன் காரியங்களைப் பரீக்ஷைசெய்து தொடங்குகிறானோ அவன் உறுதியானபெருமையை நிச்சயமாக அடைகிறான். கொடாதவனும் நட்பில்லாதவனும் பிரஜைகளைத் தண்டநீதிப்படி நடத்திவாராதவனும் ஸாஹஸமானஸ்வபாவமுள்ளவனுமாயிருக்கும்அரசன் சீக்கிரமாகவேநாசமடைவான். புத்தி

யில்லாதவன், தான் செய்தபாபத்தைப் புத்தியால் பார்க்கமாட்டான். அவன் அபகீர்த்தியையடைந்து திரும்பவும் நரகமடைவான். [1]அவ்விதமின்றிப் பூஜிப்பவனும் தானஞ்செய்பவனும் பரிசுத்தனும் ஸாரத்தையறிந்தவனுமாயிருப்பவனுடைய வ்யஸனத்தை ஜனங்கள் தமக்குண்டானதைப்போல விலக்கவிரும்புவார்கள். எவனுக்குத் தர்மத்தையறிவிக்குங்குருவில்லையோ எவன் மற்றவர்களையும் கேட்கிறதில்லையோ அவன் பொருளை அடையும்போது ஸுகத்திற்கு ஈடுபட்டவனாகி நெடுங்காலம் ஸுகத்தையடையமாட்டான். தர்மங்களில் குருவை முக்கியமாகக்கொண்டவனும் நேரில் காரியங்களைப்பார்ப்பவனும் லாபஸமயங்களில் தர்மத்தை முக்கியமாகக்கொண்டவனுமாயிருப்பவன் நெடுங்காலம் ஸுகமடைவான்.

## தொண்ணூற்றுமூன்றாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(வாமதேவர் வாக்கியத்தொடர்ச்சி.)

எந்தத்தேசத்தில் அதிகபலசாலியான அரசன் பலமில்லாதவனிடம் அதர்மத்தைச் சுமத்துகிறானோ, அவன்குலத்திலுதித்தவர்களும் அந்த ஒழுக்கத்தையடுத்துப்பிழைக்கிறார்களோ, பாபத்தில்பிரவிர்த்தியுள்ள அந்தஅரசனை மற்றவர்களும் அநுசரித்திருக்கிறார்களோ கெட்டநடையுள்ள மனிதர்களிருக்கும் அந்தத்தேசமானது சீக்கிரம் நாசமடையும். ஸ்வதர்மத்திலிருக்கும் அரசனுடைய எந்த நடக்கையை மனிதர்கள் அடுத்துப்பிழைக்கிறார்களோ கெட்டவழியிலிருப்பவனுடைய அந்நடக்கையை உறவினனும் பொறுக்கமாட்டான். சாஸ்திரவிதியை அறியாதஅரசன் ஸாஹஸமானஸ்வபாவமுள்ளவனாய்ச் சிறிதுகொடுமையைச்செய்யினும் சீக்கிரமே நாசமடைகிறான். துன்பமுள்ளவர்கள்விஷயத்திலும் துன்பமில்லாதவர்கள்விஷயத்திலும் நன்னடக்கையுடன்கூடிய ஸ்திதியை அநுஸரியாதக்ஷத்திரியன் க்ஷத்திரியதர்மத்திலிருந்து விலகினவனாகிறான். முன்பு உபகாரஞ்செய்தவனும் பின்பு பகைக்கிறவனுமான அரசனை யுத்தத்தில்பிடித்தபின் எவன் பகைமையால் மரியாதைசெய்யாமலிருக்கிறானோ அவன் க்ஷத்திரியதர்மத்திலிருந்து விலகினவனாகிறான். சக்தியுள்ள அரசன் மிக்கஸுகமாயிருக்கவேண்டும். ஆபத்துள்ளஸமயத்தில் அதை விலக்கத்தக்க கர்மத்தைச் செய்யவேண்டும். அவன் பிராணிகளுக்குப்

1 இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது.

பிரியமாகஇருப்பான்; ஸம்பத்திலிருந்தும் நழுவுதலையடையமாட்டான். எவன் அப்பிரியத்தைச்செய்தானோ அவனுக்குத் திரும்பவும் பிரியத்தைச்செய்யவேண்டும். எவன் ப்ரீதியில்லாதவனிடம் ப்ரீதியைச்செய்கிறானோ அவன் தாமதமின்றிப் பிரியனாவான். பொய்பேசுவதை விலக்கவேண்டும். வேண்டப்படாமலே பிரியத்தைச்செய்யவேண்டும். காமத்தாலும் க்ரோதத்தாலும் த்வேஷத்தாலும் தர்மத்தை விடக்கூடாது. அறிவுள்ளவன் கபடமில்லாமலிருக்கவேண்டும். ஸத்தியம், அடக்கம், தர்மம், நல்லஸ்வபாவம், பிரஜைகளுக்கு ஹிதமான க்ஷத்திரியதர்மம் இவைகளை விடக்கூடாது. வினாக்களில் விடையளிக்க லஜ்ஜைப்படக்கூடாது. அவமதிப்புள்ள மொழியைப்பேசக்கூடாது. பரபரப்பில்லாமலும் அஸூயையில்லாமலுமிருக்கவேண்டும். அப்படியிருந்தால் பிறன் தன்வசமாவான். பிரியனிடத்தில் மிகவும் அதிகமாகஸந்தோஷிக்கக்கூடாது. அப்பிரியனிடத்தில் அதிகவருத்தமுங்கூடாது. பிரஜைகளின்ஹிதத்தைநினைத்துப் பொருட்செலவான கஷ்டங்களில் துன்பப்படக்கூடாது. எந்த அரசன் நற்குணங்களால் எப்பொழுதும் பிரியத்தைச்செய்கிறானோ அவனுடைய கர்மங்கள் பயன்படும். அவனிடமிருந்து செல்வமும் விலகாது. அப்பிரியங்களிலிருந்து விலகினவனும் பிரியத்திலிருப்பவனும் பக்தியுள்ளவனுமான மனிதனிடம் அரசன் அன்புள்ளவனாயிருக்கவேண்டும். இவ்வுலகில் அதுதான் ஸாதுக்களுடையநடக்கையாகும். பலவாறுசெல்லாத இந்திரியக்கூட்டங்களுள்ளவனும் மிகவும் அனுஸரித்துச்செல்லுகிறவனும் பரிசுத்தனும் சக்தியுள்ளவனும் பக்தியுள்ளவனுமாயிருப்பவனைப் பெரியகாரியத்திலேவவேண்டும். ச்ரேயஸுக்கு அடையாளமான பராக்ரமமுள்ளவனும் கீர்த்தியைமுக்கியமாகக்கொண்டவனும் நன்னெறியில்நிலைபெற்றவனும் ஸமர்த்தர்களைப்பூஜிப்பவனும் அவர்களிடம்பொறாமையில்லாதவனும் அரசனிடம்அன்புள்ளவனும் யஜமானனுடைய காரியங்களில் அஜாக்கிரதையில்லாதவனுமாயிருப்பவனைப் பொருளைப்பற்றியவேலையில் ஏவவேண்டும். அறிவில்லாதவனும் இந்திரியங்களை அனுஸரிப்பவனும் லோபமுள்ளவனும் கெட்டநடையுள்ளவனும் மறைந்துவிரோதஞ்செய்பவனும் கபடத்தைவிடாதவனும் கொடியவனும் கெட்டபுத்தியுள்ளவனும் பலகல்விகளில்லாதவனும் [1] பெருந்தன்மையில்லாதவனும் கள்விருப்பமுள்ளவனும் சூது,காமம், வேட்டைகளிற்கருத்துள்ளவனுமான மனிதனைப் பெருங்காரியத்தில் ஏவும்அரசன் லக்ஷ்மியைவிட்டுவிலகுவான். தன்னைரக்ஷித்துக்கொண்

1 இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது.

டவனும் ரக்ஷிக்கத்தக்கவர்களை ரக்ஷிக்கிறவனுமான அரசனுடையபிரஜைகள் விருத்தியடைவார்கள். அவனும் பெரியஸுகம்பெறுவான். எவர்கள் பூமிக்குப்பதிகளோ அவர்கள்யாவர்களையும் அறியப்படாத நல்லஎண்ணமுள்ளதூதர்களால் கவனித்துவரவேண்டும். அதனால் அரசனுக்குக் கேடில்லாமலிருக்கும். பலமுள்ளவனுக்குவிரோதஞ் செய்துவிட்டுத் தூரத்திலிருக்கிறேனென்று சிந்தையில்லாமலிருக்கக் கூடாது. இவர்கள் அஜாக்ரதையாகஇருப்பவனிடம் பருந்துகள்விழுவதுபோல விழுவார்கள். உறுதியானஸேனையுள்ளவனும் குற்றமில்லாதபுத்தியுள்ளவனுமாயிருப்பவன் தன்னுடையபலத்தைத்தெரிந்துகொண்டு பலமில்லாதவர்களை எதிர்க்கவேண்டும். அதிகபலசாலிகளை எதிர்க்கக்கூடாது. தர்மத்தைப்பெரிதாகக்கொண்டஅரசன் பராக்ரமத்தால்பூமியையடைந்து தர்மப்படி ப்ரஜைகளைப் பரிபாலிக்கவேண்டும். யுத்தத்தில் மரணத்தைச் செய்துகொள்ளவேண்டும். இவையாவும் முடிவில் [1]மரணமடையும். இவ்வுலகில் துன்பமில்லாதது ஒன்றுமில்லை. ஆகையால், தர்மத்திலிருக்குமரசன் தர்மப்படி பிரஜைகளைக் காக்கவேண்டும். காத்தற்குரிய (கோட்டைமுதலிய) இடமும் யுத்தமும் தர்மத்தைக்கட்டளையிடுவதும் மந்திராலோசனையும் ஸமயத்தில் ஸுகங்கொடுப்பதுமாகிய இவ்வைந்தாலும் பூமியானது விருத்தியடைகிறது. அரசர்களில்மிகஉத்தமனே! எவனால் இவ்வைந்தும்காக்கப்படுகின்றனவோ அவனே அரசன். எப்பொழுதும் இவைகளிலிருக்கும் அரசன் இப்பூமியை அனுபவிப்பான். இவைகளை எப்பொழுதும் ஒருவனே கவனித்துவரமுடியாது. நம்பிக்கையுள்ளவர்களை இவைகளில் இருக்கச்செய்துவிட்டு அரசன் பூமியை வெகுகாலம் அனுபவிக்கவேண்டும். தானஞ்செய்கிறவனும் பங்கிட்டுக்கொடுப்பவனும் கொடுமையில்லாதவனும் பரிசுத்தனும் மனுஷ்யர்களைவிடாதவனுமாயிருக்கிறவனை ஜனங்கள் அரசனாகச் செய்கிறார்கள். எவன் தன்னிஷ்டத்தைவிலக்கிவிட்டு க்ஷேமத்திற்குரிய அறிவைக்கேட்டு அதைஅடைகிறானோ அவனை உலகமானது அநுஸரித்துச்செல்லும். எவன்ஹிதத்தைச்செய்வதில் விருப்பமுள்ளவனை ஸ்நேஹிதனுடையவசனத்தை த்வேஷத்தால் பொறுக்கவில்லையோ, ப்ரதிகூலமானவசனங்களை எப்பொழுதும் மனமில்லாதவன்போல (வெளிக்காட்டிமனத்தில் பிரியத்துடன்) கேட்கிறானோ, புத்திமான்களால்செல்லப்பட்டதும் துன்பமுள்ளவர்களுக்கும் துன்பமில்லாதவர்களுக்கும் ஸமமுமான லாபவழியிலும் எப்பொழுதுஞ் செல்லவில்லையோ அவன் க்ஷத்

[1] ஆயினும்அரசருக்கு யுத்தமரணம் ஸ்வர்க்கத்தைத்தருமென்பது கருத்து.

திரியதர்மத்திலிருந்து விலகினவனாகிறான். சிக்ஷிக்கப்பட்ட அமாத்தியன், விசேஷமாக மடந்தைகள், மலை, கடினமானகோட்டை, யானை, குதிரை, ஸர்ப்பம் இவைகளிடமிருந்து எப்பொழுதும் முயற்சியுடன் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவேண்டும். எவன் முக்கியர்களானமந்திரிகளைவிட்டுக் கீழ்ப்பட்டவர்களை நண்பர்களாகச்செய்துகொள்ளுகிறானோ அவன் குடிமுதலிய வ்யஸனத்தையடைந்து நல்லவழியை அடையமாட்டான். எவன் உறுதியற்றமனமுள்ளவனும் நிலைத்தகோபமுள்ளவனுமாய்ச் சுபகுணமுள்ள ஞாதிகளிடம் மிக்கத்வேஷத்தினால் பொறாமையுள்ளவனாயிருக்கிறானோ அவனருகில் பொருள் [1]நிலைத்திராது. எவன் மனத்திற்குப் பிரியர்களாயும் நற்குணம்பொருந்தியவர்களாயுமிருக்கும் ஞாதிகளை இஷ்டத்தினால் தனக்குஈடுபட்டவர்களாகச் செய்துகொள்ளுகிறானோ அவன் வெகுகாலம் கீர்த்தியில் நிலைபெற்றிருப்பான். அஸமயத்தில் பொருளைச்செலவிடக்கூடாது. துன்பம்நேர்ந்தால் எப்பொழுதும் வருத்தப்படக்கூடாது. இன்பத்திலும் மிகவும்அதிகமாக ஸந்தோஷிக்கக்கூடாது. நோயின்மையைத்தரத்தக்கதொழிலில முயற்சிக்கவேண்டும். 'எந்த அரசர்கள் அன்புள்ளவர்கள்; எவர்கள் பயத்தினாலடித்தவர்கள்; இவர்களுள் எவர்கள் மத்தியஸ்தர்களுக்குள்ள தோஷமுள்ளவர்கள்' என்று எப்பொழுதும் விசேஷமாக ஆலோசிக்கவேண்டும். பலமுள்ளவனாயிருப்பதுபற்றிப் பலமில்லாதவனிடத்தில் எவ்விடத்திலும் எச்சமயத்திலும் நம்பிக்கையுடனிருக்கக்கூடாது. இந்தப்பலமில்லாதவர்கள் அஜாக்ரதையாக இருப்பவனிடம் பருந்துக்கொப்பாக வந்துவிழுவார்கள். எல்லாக்குணங்களுடனுங்கூடினவனும் இன்பமாகப்பேசுகிறவனுமான யஜமானனைப்பற்றிப் பாபபுத்தியுள்ளவன் கேடுநினைப்பான். ஆகையால், ஜனங்களை நம்பக்கூடாது. இவ்விதமான அரசர்களுக்குரிய ரஹஸ்ய வித்தையை நஹுஷபுத்ரனான யயாதி சொன்னான். மனிதர்கள்விஷயத்தில் முயற்சியுள்ளவன் இந்திரனுடன்கூடின சத்துருக்களையும் கொல்லுவான்.

## தொண்ணூற்றுநான்காவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(வாமதேவர் வாக்கியத்தொடர்ச்சி.)

ஓ! அரசனே! பூமியின்பதியாயிருப்பவன் யுத்தமின்றியே ஜயத்தை விருத்திசெய்யவேண்டும். யுத்தத்தால்ஜயம்பெறுவது சிறந்ததன்றென்றுகூறுகிறார்கள். மூலமானது மிக்கஉறுதிப்படாமலிருக்

1 'அவன் மிருத்யுவினருகில் வஸிக்கிறான்' என்பது வேறுபாடம்.

கும்பொழுது அடையப்படாதபொருளை அடையவிரும்புவதுகூடாது. மூலத்தில்பலமில்லாத அரசனுக்கு லாபம் விருத்தியடையாது. எந்த அரசனுடைய தேசம் செழிப்புள்ளதும் நிறைந்த ஸம்பத்துள்ளவர்களும் பிரீதியுள்ளவர்களுமான அரசர்களுள்ளதும் ஸந்தோஷமுள்ளதும் சிறப்புற்ற மந்திரிகளுள்ளதுமாயிருக்கிறதோ அந்த அரசன் உறுதியானமூலமுள்ளவன். எந்த அரசனுடையயுத்தவீரர்கள்நல்லஸந்தோஷமுள்ளவர்களும் அதிகபக்தியுள்ளவர்களும் [1]நன்கு பூஜிக்கப்பட்டவர்களுமாயிருக்கிறார்களோ அவ்வரசன் சிறிய ஸேனையாலும் பூமியை ஜயிப்பான். எவ்விடத்தில் தண்டமானது பலமுள்ளதாயிருக்கிறதோ அங்கு பிரியவசனம் பேசவேண்டும். பிரியவசனத்தை முன்னிட்டதும் [2]பேதத்தைமூலமாகக்கொண்டதுமான தானம் சிறந்ததாகும். அரசன் எப்பொழுது [3]மூன்றின்செய்கையைப் பயனற்றதாக அறிகிறானோ அப்பொழுது இடைவெளியறிந்து, விசாரியாமல் தண்டத்தைப் பிரயோகிக்கவேண்டும். எப்பொழுது சத்துருவானவன் அதிகபலமுள்ளசத்துருக்களால் அவமதிக்கப்பட்டானோ அப்பொழுது அவனிடம் உபேக்ஷைசெய்யவேண்டும். பலமுள்ளவர்களுக்கு அடிக்கத்தக்கநிலைமையானது பலமாகும். ஓ! பாரத! எப்பொழுது அரசன் பலமில்லாதவனாயிருக்கிறானோ அப்பொழுது (ஸாம தான பேததண்டங்களாகிய) நான்கினுக்கும் விரோதமில்லாத உபேக்ஷையைச் செய்யவேண்டும். ஐந்தாவது உபாயமான அவ்வுபேக்ஷையும் யாவற்றிலும் மிக்கபலமுள்ளதாகும். உண்மையையறிந்த கோஸல தேசத்தரசனே! பார்க்கவரால் பாடப்பட்ட சுலோகங்களின் உண்மையையறிந்துகொண்டு உள்ளபடி அதைச் செய்யவேண்டும். அதாவது :—'ஏதாவதோரிடத்தில் ராக்ஷஸன் பிசாசத்தால் அடிக்கப்படுவானாகில் அவ்விடத்தில் உபேக்ஷைசெய்யவேண்டும். பலமுள்ளவர்களின்பலத்தைக் கொல்லவேண்டும்' என்பது. ஓ! அரசனே! பலமில்லாதவனும் விரோதியை விரோதியாலேயே எடுக்கவேண்டும். காலில் புகுந்தமுள்ளைக் கையிலுள்ளமுள்ளாலேயே எடுக்கவேண்டும். பலமுள்ளவர்களிற்சிறந்த அரசனே! மறைந்து துன்பத்தைச்செய்யவிரும்பும் மந்திரிகளிடமும் மிலேச்சர்களிடமும் உபாயங்களுள் இவ்வுபேக்ஷையென்பது கூறப்படுகிறது. கல்லால்இரும்பையும் இரும்பால்கல்லையும் நசிக்கச்செய்யவேண்டும். வில்வக்காய்களை வேறு வில்வக்காய்

[1] 'பிறரைவஞ்சிக்கும் நிலைமையிலிருக்கிறார்களோ' என்பதுவேறுபாடம்.

[2] ஒருவருக்கொருவர் பகையை உண்டுபண்ணுவது.

[3] ஸாம தான பேதங்கள்.

களாலும் மிலேச்சர்களை வேறுமிலேச்சர்களாலும் அழியச்செய்ய வேண்டும். மிக்க அகங்காரங்கொண்ட தாஸர்களுக்கும் இதையே செய்யவேண்டும். சண்டாளஜாதியிலும் மிலேச்சஜாதியிலுமுள்ளவர்களைத் தண்டத்தாலேயே விலக்கவேண்டும். மறைவாகக் கெடுதிசெய்பவர்களுக்குக் கெட்டமனிதர்களைக்கொண்டு முன்கூறியதைச் செய்ய வேண்டும். அறம் பொருள் இன்பம் வீடென்னும் நால்வகைப்பயனுக்கும் விரோதிகளான கடைசிஜாதிக்காரர்களையும், மறைவாகக் கேடு செய்யும் மந்திரிகளையும், அவ்விதமே கெட்டபிராம்மணர்முதலியவர்களையும் ஐந்துஉபாயங்களாலும் ஸாதிக்கவேண்டும். துன்பமில்லாதவர்களும் நல்லபக்தியுள்ளவர்களும் ராஜ்யத்திற்குரிய வேலைசெய்பவர்களும் பட்டணத்திலும் கிராமத்திலுமுள்ளவர்களுமான மனிதர்களையும் அடக்கமில்லாதவர்களும் ராஜ்யத்திற்கு விரோதிகளுமான மனிதர்களையும் சண்டாள மிலேச்சஜாதியிலுள்ளவர்களையும் பாஷண்டர்களையும் விபரீதகர்மத்திலிருப்பவர்களையும் பலமுள்ளவர்களையும் ஆச்ரமிகளையும் பாடகர்களையும் நட்டுவர்களையும் வணக்கமுள்ளவர்களான யாவரையும் அவ்விதம் முயற்சியால் ஸாதிக்கவேண்டும். எவனுடைய பட்டணத்திலும் கிராமத்திலுமுள்ளவர்கள் பிராணிகளிடம் தயையுள்ளவர்களும் தனதான்யங்களுள்ளவர்களுமாயிருக்கிறார்களோ அவ்வரசன் உறுதியானமூலமுள்ளவன். புத்திமானவன் தன்னுடைய பராக்ரமத்திற்குச் சிறந்த ஸமயத்தை அறிந்து அப்பொழுது பிறனுடைய பூமியையும் பொருள்களையும் அடைய விரும்பவேண்டும். போகங்களில் முயலுகிறவனும் பிராணிகளிடம் தயையுள்ளவனும் தன்னை ரக்ஷிப்பவனும் வேகமுள்ளவனுமாயிருப்பவனுடைய தேசம் விருத்தியடையும். எவன் இனத்தார்கள் நன்றாக இருக்கும்பொழுது வஞ்சகமாகப்ரவிருத்திக்கிறானோ அவன் கோடாலியால் காட்டைவெட்டுவதுபோலத் தன்னை வெட்டிக்கொள்ளுவான். அடிக்கத்துணியாத அரசனுக்குப் பகைவர்கள் எப்பொழுதும்குறையமாட்டார்கள். எவன் கோபத்தைவிலக்கத்தெரிந்தவனோ அவனுக்குப் பகைவனிருக்கமாட்டான். பெரியோர்களால் எந்தக்கருமம் வெறுக்கப்பட்டதோ அதை அறிவுள்ளவன் செய்யக்கூடாது. எதை நன்றென்று அறிகிறானோ அதில் தன்னை ஏவவேண்டும். எந்தஅரசன் [1]காரியங்களின் மிச்சத்துடன் ஸுகங்களை அனுபவிக்கவிரும்புகிறானோ அவ்விதமிருப்பவனைப் பிறர் அவமதிக்கமாட்டார்கள். தானும் தாபமடையமாட்டான். எந்த அரசன் இந்தநடக்கையுடன் மனிதர்களிடமிருக்கிறானோ அவன் இர

[1] பிறர்காரியங்களை முழுதும் முடியாமல்.

ண்டு உலகங்களையுஞ்சயித்து அந்தஜயத்தில் நிலைபெறுகிறான்" என்று சொன்னார். வாமதேவரிஷியால் இவ்விதம் சொல்லப்பட்ட வஸுமனஸென்னும் அரசன் அதையெல்லாம் செய்துவந்தான். அவ்விதம் செய்யும்நீயும் ஐயமின்றி இவ்விரண்டு உலகங்களையும் ஜயிப்பாய்" என்றுசொன்னார்.

---

## தொண்ணூற்றைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு யுத்ததர்மமுதலியவற்றைக் கூறியது.)

யுதிஷ்டிரர், "ஒருக்ஷத்திரியன் மற்றொருக்ஷத்திரியனை யுத்தத்தில்ஜயிக்கவிரும்புவானாகில் அவனுக்கு ஜயத்திற்குரியதர்மம் யாது? இதனைக் கேட்கும்எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அரசன் ஸஹாயமுள்ளவனானாலும் ஸஹாயமில்லாதவனானாலும் ராஜ்யத்திற்குவந்து, 'நான் உங்களுக்கு அரசன்; எப்பொழுதும் உங்களைப் பாதுகாத்துவருகிறேன்; தர்மப்படி எனக்கு வரியைக் கொடுங்கள்; என்னைப்பற்றி என்னகருதுகிறீர்கள்?' என்றுசொல்லவேண்டும். அவர்களும் அங்குவந்து அவ்விதஞ்சொன்னவனை அரசனாகவரிப்பார்களானால் க்ஷேமமுண்டாகும். ஓ! அரசனே! க்ஷத்திரியர்களல்லாதவர்களானஅவர்கள் விரோதஞ்செய்வார்களானால் தமக்குத்தகாதகர்மத்திலிருக்கும்அவர்களை எவ்விதத்திலும் எல்லாஉபாயங்களாலும் அடக்கவேண்டும். ஆயுதமில்லாதக்ஷத்திரியனைக் காக்குந்திறமையில்லாதவனென்றும் அதிகமான எண்ணமுள்ளவனென்றும் அறிந்தால் தாழ்ந்தமனிதனும் ஆயுதமெடுப்பான்" என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! க்ஷத்திரியனானஓர்அரசன் மற்றொருக்ஷத்திரியனை எதிர்த்துவருவானாகில் எவ்விதம் எதிர்த்துப் போர்புரியவேண்டும்? அதனை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார். "ஸன்னாகமில்லாமலும் கவசமில்லாமலுமிருக்கும் ஒருக்ஷத்திரியன் யுத்தத்தில் எதிர்க்கத்தக்கவனல்லன். ஒருவனாயிருந்து ஒருவனாயிருப்பவனைநோக்கி, 'நீ அம்பைவிடு' என்றும், 'நானும்விடுகிறேன்' என்றும் அறிவிக்கவேண்டும். அவன் ஸன்னாகத்துடன்வருவானாகில் பிறகு தானும்

ஸன்னத்தனாகத் துடனிருக்கவேண்டும். அவன் சேனையுடன்வருவானாகில் பிறகு தானும் சேனையுடன் அவனை அழைக்கவேண்டும். அவன் கபடமாகப் போர்புரிவானாகில் தானும் கபடமாக எதிர்த்துயுத்தஞ் செய்யவேண்டும். அவ்விதமின்றித் தர்மப்படி யுத்தஞ்செய்வானானால் தர்மப்படியே தடுக்கவேண்டும். ரதமுள்ளவனைக் குதிரையால்எதிர்த்துச்செல்லக்கூடாது. ரதமுள்ளவனிடம் ரதமுள்ளவனாகவே செல்லவேண்டும். ஆபத்துஸமயத்தில் அடிக்கக்கூடாது. பயந்தவனையும் ஜயிக்கப்பட்டவனையும் அடிக்கக்கூடாது. விஷப்பூச்சுள்ள அம்பும் [1] கரணியும் போடத்தக்கனவல்ல. இவை அஸத்துக்களுக்குரிய ஆயுதமாகும். உண்மையாகவே யுத்தஞ்செய்யவேண்டும். அடிக்கவிரும்பியவனைக் கோபிக்கக்கூடாது. யுத்தத்தில் ஒருவனுக்கு யானையிருக்கையில் மற்றொருவனுக்கு யானையில்லாமலிருந்தால் காலாள் யானையுள்ளவனோடு யுத்தஞ்செய்வது கூடாது; யானையுள்ளவன் காலாளோடு யுத்தஞ்செய்வதும் கூடாது. யானையால் யானையைப் போர்புரியவேண்டும்; ஒருஸமயம் பழக்கப்பட்டகுதிரையும் யுத்தஞ்செய்யலாம். திவ்வியமான அஸ்த்ரபலம்பொருந்தியவன் இஷ்டப்படி யானையிலும் பூமியிலும் ஸமமானவிடத்திலும் தேராலும் குதிரையாலும் எப்பொழுதும் யுத்தஞ்செய்யலாம். ராஜனே! ராமனுக்கும் ராவணனுக்கும் நடந்தயுத்தத்தில் குரங்குகளும் பெரும்பாக்கியசாலியான லக்ஷ்மணனும் அவ்விதமே விபீஷணரும் காலாட்களாயிருந்தார்கள். ராவணனுடையமுடிவுக்காலத்தில் கெட்டநடக்கையுள்ளவனும் பாபத்தைச்செய்தவனுமான அவனை ராகவர் இந்திரனுடையதேரிலேறிக் [2] கொன்றார். திவ்வியமான அஸ்திரங்களின் பலம்பொருந்தியவரிடம் இவையாவும் விதிக்கப்படுகின்றன. இது தேவாஸுரர்கள் யாவரிடத்திலும் முன்னோர்களால் காணப்பட்டது. பலமில்லாதவனையும் புத்திரனில்லாதவனையும் ஆயுதம்ஒடிந்தவனையும் ஆபத்துள்ளவனையும் நாணறுந்தவனையும் வாகனமிழந்தவனையும் எவ்விதத்திலும் கொல்லக்கூடாது. அரசன் ஆபத்துள்ளவனைத் தன்தேசத்திற்கனுப்பிச் சிகித்ஸைசெய்யவேண்டும். அல்லது தன்வீட்டிற்சேரும்படிசெய்யவேண்டும். புண்கள் ஆறினபிறகு அவனை விடுவிக்கவேண்டும். இது ஸனாதனமானதர்மம்; ஆகையால், தர்மப்படி யுத்தஞ்செய்யவேண்டுமென்று ஸ்வாயம்புவமனு கூறினார். ஸாதுக்களின்தர்மமானது ஸாதுக்களிடம் நிலைபெற்றிருக்கும். அதையடைந்து நசியாமலிருக்கச்செய்ய

1 நேரானஒருகூரும் திரும்பியமறுகூருமுள்ளஓர்ஆயுதம்.

2 இங்குஅதிகபாடமானஅரைச்சுலோகம்விடப்பட்டது.

வேண்டும். தர்மத்தில் நியமமுள்ள எந்தக்ஷத்திரியன் அதர்மத்தால் ஜயம்பெறுகிறானோ பாபியும் அவமதிக்கப்பட்ட ஜீவனமுள்ளவனுமான அவன் தன்னைத் தன்னால் கொல்லுகிறான். நல்லவர்களைத் தீய வழியால் வெல்லுதலென்பது தீயோருடைய தொழில். தர்மத்தால் நேரும் மரணமும் மிகச்சிறந்தது. பாபகர்மத்தால் உண்டாகும் ஜயமும் சிறந்ததன்று. ஓ! அரசனே! செய்யப்பட்ட அதர்மமானது பசுவைப்போல உடனே பயன்தருவதில்லை. வேர்களையும் கிளைகளையும் எரித்துக்கொண்டு செல்லும் பாபியானவன் பாபகர்மத்தால் பொருளையடைந்து ஸந்தோஷிப்பான். அந்தப் பாபியானவன் அப்பொருளாலேயே வளர்ந்துகொண்டு பாபத்தில் விசேஷமாகச் செல்லுவான். அவன் தர்மமிருக்கிறதென்ற எண்ணமில்லாதவனாய்ப் பரிசுத்தர்களைப் பரிஹஸிப்பவன்போலிருந்து சிரத்தையில்லாதவனாகி நாசமடைவான். அவன் வருணனுடையபாசங்களால் கட்டப்பட்டுத் தேவர்களால் அவமதிக்கப்படுகிறான். காற்றுநிறைந்த பெரியதுருத்திபோலத் தான்செய்தகர்மத்தாலேயே வளர்ச்சியடைகிறான். பிறகு ஆற்றங்கரையிலுள்ள மரம்போல வேருடன் பறிக்கப்படுகிறான். கல்லில் உடைந்த குடத்தைப்போல அவனை ஜனங்கள் நிந்திக்கிறார்கள். ஆகையால், அரசன் தர்மத்தினால் ஜயத்தையும் கோசத்தையும் அடையவிரும்பவேண்டும்.

---

## தொண்ணூற்றாறாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் ஜயலக்ஷணங்களையும் மற்றும் சிலராஜதர்மங்களையும் கூறியது.)

அரசன் அதர்மத்தால் பூமியைஜயிக்க விரும்பக்கூடாது. எந்த அரசன் அதர்மத்தால் ஜயத்தையடைந்து புகழப்படுவான்? அதர்மத்துடன்கூடியஜயமானது ஸ்வர்க்கத்திற்குக்காரணமுமன்று; நிலைபெற்றதுமன்று. பரதச்ரேஷ்டனே! அஃது அரசனையும் பூமியையும் கீழே தள்ளும். சிதறின கவசமுள்ளவனையும் உன்னுடையவனாயிருக்கிறேனென்று சொல்லுகிறவனையும் அஞ்சலிசெய்தவனையும் ஆயுதம்விட்டவனையும் பிடித்து வருத்தக்கூடாது. எவன் பலத்தால் ஜயிக்கப்பட்டவனோ அவனிடமும் அரசன் யுத்தஞ்செய்யக்கூடாது. அவனை ஓராண்டு [1] அடக்கிவைக்கவேண்டும். அதன்பிறகு அவன் [2] மறுபிறப்

1 உனக்குத் தாஸனென்றுசொல்லும்படி செய்யவேண்டும்.

2 'அவன் அவ்விதஞ்சொல்லாவிடினும் தாஸத்தன்மையடைந்தவனாகவே ஆகிறான்; ஆகையால், ஒருவருஷத்திற்குப்பின் அவனை விடுவிக்கவேண்டும்' என்பது கருத்து.

புள்ளவனாகிறான். பாரக்ரமத்தால் அபகரிக்கப்பட்ட கன்னியை ஒரு வருஷத்திற்குமுன் [1]வினவக்கூடாது. பலாத்காரமாக அபகரிக்கப்பட்டபொருளும் [2]மற்றுமுள்ளயாவும் இவ்விதமேயாகும். கொலைசெய்யத்தக்கவர்களின்பொருளை வைத்துக்கொள்ளக்கூடாது; செலவு செய்துவிடவேண்டும். பிராம்மணர்கள் குற்றவாளிகளானால் அப்பொழுது க்ஷமிக்கவேண்டும். பசுக்களின் பாலை அவர்களே குடிக்கலாம்; காளைகளையும் உபயோகித்துக்கொள்ளலாம். க்ஷத்திரியனுடன் க்ஷத்திரியனே யுத்தம்பண்ணத்தக்கவன் என்று தர்மம் விதிக்கப்படுகிறது. க்ஷத்திரியனல்லாதமற்றவன் க்ஷத்திரியனைக்குறித்து எவ்விதத்திலும் ஆயுதத்தைப் போடக்கூடாது. இரண்டுஸேனைகள் யுத்தஞ்செய்யச் சேர்ந்துநிற்கும்பொழுது இரண்டுபக்கத்திற்கும் க்ஷேமத்தைவிரும்பிப் பிராம்மணன் இடையில்செல்லுவானாகில் அப்பொழுது யுத்தஞ்செய்யக்கூடாது. எவன் பிராம்மணனை மீறிச்செல்லுகிறானோ அவன் நிலைபெற்றதான மரியாதையைப் பேதித்தவனாவான். அதமனாக்ஷத்திரியன் மரியாதையைமீறிநடப்பானானால் அதன்பின் அவன் க்ஷத்திரியஜாதியில் கணக்கிடத்தக்கவனல்லன்; ஸமாஜத்தில் எடுத்துக்கொள்ளத்தக்கவனுமல்லன். ஜயம்பெற விரும்புமரசன் தர்மக்குறைவாலும் மரியாதையை மீறிச்செல்வதனாலும் அந்த நடக்கையை அனுசரிக்கக்கூடாது. தர்மத்தால் அடையப்பட்ட ஜயத்தைக்காட்டிலும் வேறுபெரியலாபம் என்ன இருக்கிறது? பலாத்காரமாகக் கெட்டவழியுள்ளகாரியங்களைச்செய்தவுடன் நன்மொழியாலும் போகங்களைக்கொடுத்தும் விரைவில் ஸந்தோஷப்படுத்தவேண்டும். அஃது அரசர்களுக்கு உயர்ந்தநீதியாகும். [3]உபாயமின்றி ஜயிக்கப்பட்டவர்களும் துன்பப்படுத்தப்பட்டவர்களுமான ஜனங்கள் அரசனுக்குப் பலதுன்பங்களை எதிர்பார்த்துக்கொண்டு பகைவர்களை அடுப்பார்கள். ஓ! அரசனே! எல்லாவிதத்திலும் அரசனுக்கு ஆபத்தை விரும்புகிறவர்களான அந்தமனிதர்கள் அவனுக்கு ஆபத்துள்ளஸமயத்தில் ஸந்தோஷமடைந்து அவன்விரோதிகளுக்கு அனுகூலஞ்செய்வார்கள். விரோதியை அவமதித்து வஞ்சிக்கக்கூடாது. எவ்விதத்திலும் அதிகமாக அடிக்கவுங்கூடாது. அதிகமாக அடிக்கப்பட்டமனிதன் ஒருஸம

---

1 ஒருவருஷத்திற்குப்பின், 'நீமணம்புரிய விரும்புவது என்னையா அல்லது மற்றவனையா?' என்றுகேட்டு அவளிஷ்டம்போலச் செய்யவேண்டும்.

2 சத்துருவினிடமிருந்து அபகரிக்கப்பட்ட வேலைக்காரன் முதலானவர்களையும் ஒருவருஷம்சென்றவுடன் சத்துருவுக்கே கொடுத்துவிடவேண்டும். அப்படிச்செய்வது இனாம்கொடுத்தது போலாகும் என்பது பொருள்.

3 இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

யம் உயிரையும்விட்டுவிடுவான். துன்பப்படுத்தப்பட்டவன் சிறிது திரவியத்தைப் பெற்றிருந்தும் ஸந்தோஷப்படமாட்டான். அவ்வித முள்ளவன் உயிரொன்றைமாத்திரமே பெரிதாகநினைப்பான். எந்த அரசனுடையதேசமானது நிறைந்ததும் பெருமையுள்ளதும் அரச னிடம்பிரீதியுள்ளதும் ஸந்தோஷமுள்ள வேலைக்காரர்களும் மந்திரி களுமுள்ளதுமாயிருக்கிறதோ அந்த அரசன் உறுதியானமூலமுள்ள வன். பூஜிக்கத்தக்க ரித்விக்கையும் புரோஹிதரையும் ஆசாரியரையும் மற்றுமுள்ள மிகச்சிறந்தகல்விமான்களையும் எவன் பூஜிக்கிறானோ அவனே உலகந்தெரிந்தவனென்று சொல்லப்படுகிறான். இந்தநடக் கைகொண்டே இந்திரன் பூமியையடைந்தான்; [1]மற்றுமுள்ளஅரசர் களும் ஜயமடையவிரும்புகிறார்கள். ஓ! ராஜனே! பிரதர்த்தனனென் னும்அரசன் பெரியயுத்தத்தில் ஜயமடைந்து பூமியொன்றைத்தவிரப் பொருளையும் ஆகாரத்தையும் தான்யங்களையும் பலமுறை அபகரித் துக்கொண்டான். திவோதாஸனென்பவன் அக்நிஹோத்ரஹோமத் திற்கு அங்கமான ஹவிஸையும் புஜிக்கத்தக்கஅன்னத்தையும் அப ஹரித்தான்; அந்தக்காரணத்தால் வஞ்சிக்கப்பட்டவனானான். ஓ! பாரத! நாபாகன் வேதமறிந்தவர்களின்திரவியங்களையும் ரிஷிகளின் திரவியங்களையுந்தவிர அரசர்களுடன்கூடின மற்றராஜ்யங்களைத் தக்ஷி ணையாக அளித்தான். ஓ! யுதிஷ்டிர! தர்மமறிந்தவர்களும் முன் னோர்களுமான அரசர்களுக்குப் பலவிதமானதனங்களிருந்தன. அவை யாவும் எனக்கிஷ்டமானவை. எந்தஅரசன் தனக்குஸம்பத்தைவிரு ம்புகிறானோ அவன் எல்லாவித்தைகளின்விசேஷத்தாலும் ஜயம்பெற விரும்பவேண்டும்; மாயையாலும் டம்பத்தாலும் விரும்பக்கூடாது" என்றுசொன்னார்.

---

## தொண்ணூற்றேழாவது அத்தியாயம்.

## ராஜ தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், க்ஷத்திரியர்கள்யுத்தஞ்செய்வது தர்மமென்பதைப் பலகாரணங்களால் நிரூபித்தது.)

யுதிஷ்டிரர், "பரதர்களிற்சிறந்தஅறிவுள்ளஅரசரே! க்ஷத்திரி யர்களின் தர்மத்தைவிட மிகக்கெட்டதானதர்மம் வேறில்லை; அரசன் விரோதமாகநடத்தும்பொழுதும் யுத்தத்திலும் பலஜனங்களைக்கொல்

---

[1] 'இந்தநடக்கையைக்கொண்டே பூமியிலுள்ளவர்கள் இந்திரனுடைய ராஜ்யத்தை அனுபவிக்கவிரும்புகிறார்கள்' என்பது வேறுபாடம்.

னுகிறான். அரசன் எந்தக்கர்மத்தால் அக்குற்றம்விலகி உலகங்களை ஜயிக்கிறான்? அறியவிருப்பமுள்ள எனக்கு அதனை உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"பாபிகளை அடக்குவதாலும் ஸாதுக்களைரக்ஷிப்பதாலும் யாகங்களாலும் தானங்களாலும் அரசர்கள் குற்றமற்றவர்களாகிப் பரிசுத்தர்களாகிறார்கள். ஜயத்தைவிரும்புகிற அரசர்கள் பிராணிகளைப் பீடிக்கிறார்கள். அவர்களே ஜயமடைந்தபின் திரும்பவும் பிரஜைகளை விருத்திசெய்கிறார்கள். தானம், யாகம், தவம் இவைகளின்பலன்களால் பாபங்களைத் தூரவிலக்குகிறார்கள். பிராணிகளைக்காப்பதால் இவர்களுக்குப் புண்ணியம் விருத்தியடைகிறது. நிலங்களைச்சுத்தப்படுத்துகிறவன் பயிருடன்சேர்ந்த புல்லுகளை நசிக்கச்செய்தாலும் பயிர்நசியாமல் நிலத்தை எவ்விதம் சுத்தப்படுத்துகிறானோ அவ்விதம் ஆயுதங்களை விடுகிறவர்கள் கொல்லத்தக்கவர்களைப் பலவிதமாகக் கொல்லுகிறார்கள். திரும்பவும் பிராணிகளைவிருத்திசெய்வது அந்தப்பாபத்திற்குப் பிராயச்சித்தமாகக் காணப்படுகிறது. எவன் பிராணிகளைத் துன்பத்திலிருந்தும் கொலையிலிருந்தும் கஷ்டத்திலிருந்தும் திருடர்களிடமிருந்தும் உயிரைக்கொடுத்து எப்பொழுதும் ரக்ஷிக்கிறானோ அவன் பொருளையும்ஸுகத்தையும்கொடுக்கும் பிரம்மதேவனாகிறான். அந்த அரசன் அபயமளிப்பதைத் தக்ஷிணையாகக் கொண்ட பலயாகங்களைச்செய்து இவ்வுலகில்க்ஷேமங்களையனுபவித்தபின் இந்திரனுடையலோகத்திற்கொப்பான லோகத்தையும் அடைகிறான். பிராம்மணர்களுக்குவேண்டிய காரியம்வரும்பொழுது எவன் வெளிவந்து தன்சரீரத்தை யூபமாகநாட்டிப் பயமில்லாமல் சத்துருக்களைஎதிர்த்துச் சரங்களை இறைத்துக்கொண்டு யுத்தஞ்செய்கிறானோ அவனுடைய அந்தயாகமானது அளவில்லாததக்ஷிணையுள்ளது. பூமியில்அதிலும்சிறந்ததொன்றுமில்லையென்று தேவர்கள் பார்க்கிறார்கள். யுத்தத்தில் அவனுடையதோலை எவ்வளவுஆயுதங்கள் பிளக்குமோ எல்லாஇஷ்டங்களையும்கொடுக்கும் அழிவில்லாதவையான அவ்வளவு உலகங்களை அவன் அடைகிறான். யுத்தத்தில் அவன்சரீரத்திலிருந்துபெருகுகிற உதிரப்பெருக்குடன்கூடவே பாபங்கள்யாவும் விலகுகின்றன. உயிரைவிடுங்காலத்தில் துக்கங்களைப்பொறுக்கிறதைவிடப் பெரியதவமில்லையென்றுதர்மமறிந்தோர் அறிவிக்கிறார்கள். யுத்தத்தில் பயந்தவர்கள் தர்மபுத்தியுள்ளவர்களாய் மேகத்தினிடமிருந்து ஜலத்தைவிரும்புவதுபோலச் சூரனிடமிருந்து ரக்ஷையைவிரும்பிப் பின்னேயிருப்பார்கள். [1]சூரனுகஇருப்பவன் அப்படியே பயமில்லாமலிருக்

[1] இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

கும்படி க்ஷேமமாகரக்ஷித்து அந்தமனிதர்களை யுத்தத்தில் முன்னிற்கும்படி செய்யாமலிருப்பானானால் அது புண்ணியமாகும். அவர்கள் ரக்ஷையைஒப்புக்கொண்டு அவனை எப்பொழுதும் நமஸ்கரித்து நியாயப்படி யுத்தஞ்செய்வார்களானாலும் அஃது (அவனுக்கு) அவ்விதப் புண்ணியமாகாது. யுத்தத்திற்குக்கூப்பிட்டால் ஸேனைகள் எதிர்க்குங் காலத்தில் ஸமானமான மனிதர்களிடமும் பெரியவேற்றுமை காணப் படுகிறது. [1]சிலர் எதிர்த்துச்செல்லுகிறார்கள். சிலர் எதிர்த்துச் செல்லுகிறதில்லை. சூரனாயிருப்பவன் பிறர்களை எதிர்த்துச் செல்லுகிறான். பயமுள்ளவன் கஷ்டமானஸமயத்தில் ஸ்வர்க்கத்திற்குரிய வழியைத்தெரிந்துகொண்டு நிற்கும் ஸஹாயமனிதர்களைத் தள்ளிவிட்டு ஓடுகிறான். அப்பா! ஸஹாயமனிதர்களைத்தள்ளிவிட்டு க்ஷேமமுள்ளவர்களாய் வீடுசெல்லுகிற அதர்மமானமனிதர்களை யுத்தத்தில் ஏற்படுத்தாதே. இந்திரன்முதலியதேவர்கள் அவர்களுக்குத் துன்பத்தைச் செய்கிறார்கள். எவன் ஸஹாயமான மனிதர்களைத் தள்ளிவிட்டுத் தன்உயிரைரக்ஷிக்க விரும்புகிறானோ அவனைக்கட்டைகளாலும் இருப்புத்தடிகளாலும் கொல்லவேண்டும்; [2]கடாக்னியால் எரிக்கவாவது வேண்டும். எந்தக்ஷத்திரியர்கள் இவ்விதமிருக்கிறார்களோ அவர்களைப் பசுக்களைப்போலக் கொல்லவாவது வேண்டும். படுக்கையிலிருந்து மரிப்பதென்பது க்ஷத்திரியனுக்கு அதர்மமாகும். எந்தக்ஷத்திரியன் கபபித்தங்களை விட்டுக்கொண்டும் தீனமாகஅழுதுகொண்டும் காயப்படாததேகத்துடன் மரணமடைகிறானோ அவனுடைய அக்கர்மத்தைப் பழமையையறிந்தவர்கள் கொண்டாடுவதில்லை. அப்பா! க்ஷத்திரியர்களுக்கு வீட்டிலிருந்துமரிப்பது கொண்டாடப்படுகிறதில்லை. சூரரென்னும் அபிமானமுள்ளவர்களுக்கு அது சௌரியமில்லாததும் தாழ்ந்ததும் அதர்மமுமாகும். இது கஷ்டம். அந்தோ! மிகப்பாவமானதுன்பம் என்று கூச்சலிடுகிறவனும் மரணக்குறியுள்ள முகமுள்ளவனும் நாற்றமுள்ளவனும் புத்திரர்களைப்பற்றிச் சோகப்படுகிறவனுமாய் அடிக்கடி நோயில்லாதிருப்பதையும் மரணத்தையும் விரும்புகிறான். வீரனும் அகங்காரமுள்ளவனும் பெரிய மனமுள்ளவனுமாயிருப்பவன் இவ்விதமரணத்திற்குத் தக்கவனல்லன். க்ஷத்திரியனாயிருப்பவன் நண்பர்களால் பூஜிக்கப்பெற்று யுத்தங்களில் ஹிம்ஸையைச்செய்து கூர்மையான ஆயுதங்களால் அடிக்கப்பட்டவனாகி மரணமடையத்தக்கவன். சூரனாயிருப்பவன் பலத்துக்

[1] இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.
[2] புல்லுகளால் செய்யப்பட்ட படுக்கையிற்கட்டித் தீயிடுவது.

கும் கோபத்துக்கும்வசப்பட்டவனுய் மிகவும் யுத்தஞ்செய்வான்; பிறால் அறுக்கப்படும் அங்கங்களைக் கவனிக்கவேமாட்டான். அவன் யுத்தத்தில் உலகங்களால் பூஜிக்கப்பட்டதும் சிறந்ததுமான மரணத்தையடைந்து பெரிதான தன்தர்மத்தைப்பெற்று இந்திரன்உலகத்திற்கொப்பானஉலகத்தை அடைகிறுன். புறங்காட்டாதசூரன் எல்லா உபாயங்களாலும் யுத்தமுகத்தில்நின்று உயிரைவிட்டு இந்திரன் உலகத்திற்குச்சரியான உலகத்தைஅடைகிறுன். சூரனுனவன் எங்கெங்கு பகைவர்களால் சூழப்பட்டு அடிக்கப்படுகிறுனோ அங்கங்கு அவன் பயத்தை அடையாமலிருப்பானுகில் அழிவில்லாத உலகங்களை அடைகிறுன்" என்று சொன்னுர்.

---

## தொண்ணூற்றெட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(இந்திரன், ஸுதேவன்சரித்திரத்தையும் யுத்தமென்னும் யாகத்தின் ரித்விக்குமுதலிய அங்கங்களையும் யுத்தத்தில் இறந்தவர்களுக்கு வரும் உலகங்களையும் அம்பரீஷனுக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! திரும்பாமல் யுத்தஞ் செய்யுஞ் சூரர்கள் மரணமடைந்தபின் எந்தஉலகங்களை அடைகிறுர்கள்? அதனை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத் தொடங்கினுர்.

"ஓ! யுதிஷ்டிர! இவ்விஷயத்திலும் அம்பரீஷனுக்கும் இந்திரனுக்கும் நடந்த ஸம்பாஷணையான பழைய இவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறுர்கள். நாபாகனின்புத்ரனுன அம்பரீஷன் மிக அரிதான ஸ்வர்க்கலோகஞ்சென்று, தேவலோகத்திலிருப்பவனும், இந்திரனுடனும் மந்திரிகளுடனுங்கூட முழுமையும் தேஜோரூபமாயும் திவ்யமாயுமுள்ள உத்தமவிமானத்திலிருப்பவனும், மிகவும் மேலானபதம் பெற்றவனும், மங்களரூபியுமானதன் ஸேனுபதியைக்கண்டான். உதாரபுத்தியுள்ள அவ்வம்பரீஷன் சூரர்களுக்குரியபதம்பெற்றவனும் பெயரால் ஸுதேவனென்று பிரஸித்தனும் தனக்கு மேற்சென்றவனுமான தன்ஸேனுபதியைக்கண்டு அவனுடையபெருமையைப்பார்த்து வியப்புற்று இந்திரனை நோக்கிச் சொல்லத்தொடங்கினுன். "ஏ! இந்திர! கடல்வளையிலுள்ள பூமிமுழுமையையும் விதிப்படி ஆண்டு தர்மவிருப்பத்துடன் நான்குஜாதிகளிலும் சாஸ்திரப்படிபிரவிருத்தித்தவனும்,

கடுமையான பிரம்மசரியத்துடனும் பெரியஆசாரத்துடனும் குருசுசுரூஷையுடனும் வேதங்களையும் அரசர்க்குரிய சாஸ்திரமுழுதையும் தர்மப்படிக்கற்று அன்னபானங்களால் அதிதிகளையும் அப்படியே சிராத்தத்தால் பிதிருக்களையும் அத்யயனநியமங்களால் ரிஷிகளையும் மிக்க உத்தமமானயாகங்களால் தேவர்களையும் ஸந்தோஷப்படுத்திச் சாஸ்திரத்துக்கொத்த விதிப்படி க்ஷத்ரியர்களுக்குரியதர்மத்தில் நிலைபெற்றுக் கவனித்துவந்தவனுமான நான் யுத்தத்தில் ஸேனையை ஜயித்தவனாயிருக்கிறேன். தேவர்களுக்கரசனே! அடக்கமான மனமுள்ள இந்தஸுதேவன் முன்பு எனதுஸேனைத்தலைவனான யுத்தவீரனாயிருந்தான். இவன் என்னகாரணத்தால் எனக்கு மேலானவனாயிருக்கிறான்? ஸூரியனுக்கொப்பான விமானத்திலிருந்துகொண்டு ஸ்வர்க்கலோகத்தில் களிக்கிறான். இவன் முக்கியமானயாகங்களைச் செய்தவனல்லன்; விதிப்படி பிராம்மணர்களுக்குத் திருப்திசெய்வித்தவனுமல்லன். ஓ! இந்திரனே! அப்படிப்பட்ட இவன் எந்தக்காரணத்தால் எனக்குமேலானதும் தேவர்களனைவர்களுக்கும் அடையமிகவரிதுமான இவ்விதஐசுவரியத்தைப் பெற்றான்?" என்றுகேட்க, இந்திரன் சொல்லத்தொடங்கினான்.

"அரசனே! இவனால்செய்யப்பட்டகாரியம் உனக்கு ப்ரத்யக்ஷம். ராஜனே! முந்தித் தர்மப்படி நன்றாகப் பூமியைப்பரிபாலனம் செய்தஉனக்கு விரோதத்தைச்செய்தசத்துருக்கள்யாவரும் ஜயிக்கப்பட்டார்கள். சதச்ருங்கனென்றராக்ஷஸராஜனின் புத்திரர்களும் யுத்தத்தில் அதிகக்கொழுப்புள்ளவர்களும் உலகத்தில்ஜயிக்கமுடியாதவர்களும் அதிகபலமுள்ளவர்களுமான ஸம்யமன் வியமன் ஸுயமன் என்றமூன்றுராக்ஷஸர்களும் நீ யாகஞ்செய்த சுபமானஅக்காலத்தில் ஜயிக்கப்பட்டார்கள். தேவர்களின்ஹிதத்தைவிரும்பி அச்வமேதமென்னும் பெரியயாகத்தைச்செய்யும் உனக்கு இடையூறுசெய்யவேண்டி நூறுகோடிபரிவாரமுள்ளதான பெரியராக்ஷஸஸேனையையழைத்துக்கொண்டு மூன்றுராக்ஷஸர்களும் வந்தார்கள். பிறகு உன்னுடையபிரஜைகள் யாவும் சிறையிலடைக்கப்பட்டன. பிரஜைகள் யாவும் உன்ஸேனைகள்யாவும் துன்பமடைந்தன. அரசனே! அக்காலத்தில் ஸேனைத்தலைவனாயிருந்தவனும் அமாத்தியர்களின்வசனத்தைக்கேட்டு எல்லாவேலைகளிலிருந்தும் விலக்கப்பட்டிருந்தவனுமான அந்தஸுதேவனை அவர்களுடைய கபடமுள்ளசொற்படி, ஜயிக்கமுடியாத ராக்ஷஸர்களைக் கொல்லவேண்டியதற்காக, "ராக்ஷஸர்களின்ஸேனையைஜயிக்காமல் நீ திரும்பிவரக்கூடாது; சிறையிலுள்ளவர்

களைவிடுவியாமலும் திரும்பிவரக்கூடாது" என்றுசொல்லி, எல்லா ஸேனைகளுடனும் அனுப்பினாய். அரசனே! ஸுதேவன் அவ்வசனத்தைக்கேட்டு யாத்ரையைச்செய்து பிரஜைகள் சிறையில் அடைபட்டிருக்கும் அவ்விடஞ்சென்றான். ஸேனைத்தலைவனான ஸுதேவன் மிகக் கோரமான ராக்ஷஸர்களின்பெரியஸேனையைக்கண்டு, 'இச்சேனையானது இந்திரனுடன்கூடிய தேவாஸுரர்களாலும் ஜயிக்கமுடியாதது. திவ்யமான அஸ்த்ரங்களின் பலத்தை மிக அதிகமாகப்பெற்ற அம்பரீஷன் இவர்களின் ஒருகூற்றையும் நசிக்கச்செய்ய வல்லவனல்லன். இவ்விதமானநான் எவ்விதம் வல்லவனாவேன்?' என்று மிகவுஞ் சிந்தையடைந்தான். அரசனே! பிறகு நீ கபடமுள்ள எல்லாமந்திரிகளுடனும் அமாத்தியர்களுடனுங்கூட விருக்குமிடத்திற்கு ஸேனையினைத்தையும் திருப்பியனுப்பிவிட்டான். பிறகு உலகத்திற்குப்பதியும் மயானத்திலிருப்பவரும் விருஷபக்கொடியுள்ளவரும் மஹாதேவருமான ருத்ரதேவரைச் சரணமடைந்து போற்றினான். போற்றியபின் ஆயுதத்தையெடுத்துத் தன்தலையை அறுக்கமுயன்றான். தேவர்களுக்கும் தேவரான அவரும் கருணைபுரிந்து ஆயுதத்துடன்கூடிய அவனது வலக்கரத்தைப்பிடித்துக்கொண்டு அவனைப்பார்த்து, "மகனே! ஏன் இந்தஸாஹஸத்தைச் செய்யவிரும்புகிறாய்? எனக்குச்சொல்" என்ற இவ்வசனத்தைச்சொன்னார். அந்தஸுதேவன் தலையால் பூமியில் படிந்து மஹாதேவரைநோக்கி, "ஓ! தேவேசரானபகவானே! ராக்ஷஸர்களின் இச்சேனையை யுத்தத்தில்ஜயிக்க நான் சக்தியற்றவனாயிருக்கிறேன். ஆகையால், உயிரை விடப்போகிறேன். உலகத்திற்குப்பதியான மஹாதேவரே! அன்பமுள்ள எனக்கு நீர் ரக்ஷகராயிருக்கவேண்டும். மஹாதேவரே! மந்திரிகளுடன்கூட அம்பரீஷராஜர் ஆக்ரோசத்துடன் ஜயியாமல் வரக்கூடாதென்று என்னைச் சொன்னார்" என்றுசொன்னான். முகங்கவிழ்ந்து பூதலத்தில் விழுந்தவனும் மஹாத்மாவுமான அந்தஸுதேவனைநோக்கி மஹாதேவர் பிராணிகளின் ஹிதத்தைவிரும்பிக் கூட்டத்துடன்கூடியதும் யுத்தத்துடன் கூடியதும் தேர் யானைகுதிரைகளால் சூழப்பட்டதும் திவ்யமான அஸ்த்ரங்களால்நன்றாகஅலங்கரிக்கப்பட்டதுமான தனுர்வேதத்தை அழைத்துச்சொல்லத்தொடங்கினார். முக்கண்ணரானசங்கரர் திரிபுரர்களைக் கொல்லச் சாதனமானதும் பெரியபாக்கியம்பெற்றதுமான ரதத்தையும் பினாகமென்னும்வில்லையும் சக்தியையும் எல்லாஅஸுரர்களையும் கொன்ற அந்தப்பயங்கரமான அஸ்த்ரத்தையும் அளித்து ஸேனைத்தலைவனான ஸுதேவனைநோக்கி, "ஸுதேவ! இந்த ரதத்திலிருக்கும்

நீ தேவர்களாலும் அஸுரர்களாலும் ஜயிக்கப்படமாட்டாய். நீமாயை யால் மோஹமுள்ளவனாய்ப் பூமியில் அடிவைப்பது தகுதியன்று. நீ தேரிலிருந்துகொண்டு தேவாஸுரர்களனைவரையும்ஜயிக்கப்போகி றாய். ஆயிரம் சூரியருக்கொப்பானகாந்தியுள்ள இத்தகைய ரதத்தை ராக்ஷஸர்களும் பிசாசர்களும் பார்ப்பதற்கே சக்தியுள்ளவர்களல்லர். உன்னுடன் யுத்தஞ்செய்ய எவ்விதம் சக்தியுள்ளவராவர்''? என்று சொன்னார். அந்தஸுதேவன் ராக்ஷஸர்கள் யாவரையும் ஜயித்துச் சிறையிலுள்ளமடந்தையரை விடுவித்து அந்த ராக்ஷஸர்கள் யாவ ரையுங்கொன்றபின் வியமனை அடைந்து கைச்சண்டையில் கொல்லப் பட்டான். வியமனும் வீழ்த்தப்பட்டான். அப்பா! அரசனே! பராக்ர மத்தைவெளியிடும் அந்தஸுதேவனுக்கு யுத்தமென்னும்மிகப்பெரிய யாகமுண்டாயிற்று. ஸேனாமுகத்தையடைந்து ஸன்னாஹமுள்ளவ ரும் தீக்ஷைபெற்றவருமாக யுத்தஞ்செய்யும் மற்றுமுள்ள யுத்தவீர ரான மனிதரனைவரும் யுத்தமென்னும்யாகத்தில் அதிகாரம்பெற்றிருக் கிறார்களென்பது நிச்சயம்'' என்றுசொன்னான். அம்பரீஷன், ''ஓ! இந்திர! இந்தயாகத்தில் எவை ஹவிஸுகள்? எது நெய்? எது தக்ஷிணை? இதில் எவர்கள் ரித்விக்குக்களென்று சொல்லப்படுகிறார் கள்? அவற்றை எனக்குச்சொல்லவேண்டும்'' என்றுகேட்க, இந்தி ரன் சொல்லத்தொடங்கினான். ''அந்தயாகத்தில் யானைகள் ரித்விக் குக்களாகவும் குதிரைகள் [1]அத்வர்யுக்களாகவும் அவ்விதம் பிறர்க ளின்மாம்ஸங்கள் ஹவிஸுகளாகவும் உதிரம் நெய்யாகவும் சொல் லப்படுகின்றன. நரிகளும் கழுகு காகம்என்னும் பறவைகளும் அந்த யாகத்தில் ஸதஸ்யர்கள். இவர்கள் மிச்சமானநெய்யைக் குடிக்கிறார் கள்; யாகத்திலுள்ள ஹவிஸையும் புஜிக்கிறார்கள். அந்தயாகஞ்செய் கிறவனுக்கு ஜ்வலிக்கின்றவைகளும் கூர்மையுள்ளவைகளும் துவைக் கப்பட்டவைகளுமான கத்தி வேல் கோடாலிகளும் பிராஸம் தோமர மென்னும் இவைகளின்கூட்டங்களும் ஸ்ருக்குகளாகும். வில்லிலிரு ந்து வேகமாய்நீண்டதும் கூர்மையுள்ளதும் பிறன்சரீரத்தைப் பிளப் பதும் நேரானதும் நன்றாகத்தீட்டப்பட்டதும் துவைக்கப்பட்டது மான அம்பானது பெரியஸ்ருவமாகும். புலித்தோலால்கட்டப்பட்ட தும் யானைத்தந்தத்தால் செய்தபிடியுள்ளதும் யானையின் கையை அறுப்பதுமான கத்தியானது அந்தயுத்தத்தில் [2]ஸப்யமாகும். முழு மையும் எஃகினால் செய்யப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளும் ஜ்வலிக்கின்றவைகளும் தீட்டப்பட்டவைகளுமான பிராஸம் வேல்

[1] ரித்விக்குக்களில் ஒருவகையார். [2] யாகத்தைச்சேர்ந்தஒருபொருள்.

ரிஷ்டி கோடாலி ஆகிய இவைகளால் செய்யப்படும் அடியானது (கொடுக்கப்படும்) தனமாகும். [1]யுத்தத்தில் அடிப்பதால் பூமியில்பெருகும் உதிரமானது ஹோதாக்களால்செய்யப்பட்டதும் நிறைந்ததும் எல்லா இஷ்டங்களையும் கொடுக்கத்தக்கதுமான பூர்ணஹுதியாகும். படைமுகத்தில், 'வெட்டு; பிள' என்றுகேட்கப்படும் சப்தமானது யமன்வரவுக்குக்காரணமான ஸாமகர்கள்செய்யும் ஸாமகானமாகும். பிறர்களுடைய படைமுகமானது அந்தயாகத்துக்கு [2]ஹவிர்த்தானமாகும். யானைக்கூட்டமும் குதிரைக்கூட்டமும் கவசமுள்ளவர்களின்கூட்டமும் அந்தயாகத்தில் [3]ச்யேனசிதமென்ற அக்நியாகக்கூறப்படும். இதில் ஆயிரம்பேர்கள் விழுந்தவுடன்கிளம்புகிற [4]கபந்தமானது கருங்காலிமரத்தால் செய்யப்பட்டதும் எட்டுப்பக்கமுள்ளதுமான அந்தச்சூரனுடைய யூபமென்று சொல்லப்படுகிறது. அங்குசத்தால் ஏவப்பட்டயானைகளின் சப்தங்கள் [5]இடாஹ்வானங்களாயிருக்கின்றன. ஓ! அரசனே! நாண்சப்தத்துடன்கூடிய கைத்தாளம் வஷட்காரமாகும். அந்த யுத்தத்திலுள்ள துந்துபிவாத்யமானது மூன்றுஸாமங்களையுடைய உத்காதாவாகும். பிராம்மணர்களின்பொருள் பகைவர்களால் அபஹரிக்கப்படுங்காலத்தில் யுத்தத்தில் பிரியமானசரீரத்தைவிட்டு அதனையூபமாகநாட்டிச் செய்யப்படும் அந்தயாகமானது அழிவில்லாததக்ஷிணையுள்ளதாகும். எந்தச் சூரன் பயத்துடன் திரும்பாமல் எஜமானனிமித்தம் சேனைமுகத்தினின்று வெளிப்படுகிறானோ அவனுக்கு என்னுடைய உலகங்கள்போன்ற உலகங்கள் ஸித்திக்கின்றன. எவனுடையயுத்தவேதியானது புலித்தோல் உறைகளுள்ளகத்திகளாலும் பரிகாயுதத்திற்கொப்பான கைகளாலும் பரப்பப்பட்டிருக்கிறதோ அவனுக்கு என்னுடைய லோகம்போன்ற லோகம் ஸித்திக்கும். படையின்நடுவில் புகுந்துஸங்கடத்திலிருக்கும் எவன் ஒருஸஹாயத்தையும் அபேக்ஷிக்கவில்லையோ அவனுக்கு என்னுடையலோகம்போன்றலோகங்கள் ஸித்திக்கும். ராஜனே! எந்தயுத்தவீரனுடையயுத்தத்தில் உதிரவெள்ளமுள்ளதும் பேரியாகிறதவளைகளும் ஆமைகளுமுள்ளதும் வீரர்களின்எலும்பாகிற பாறக்கல்லுகளால் செல்லமுடியாததும் மாம்ஸமும்ரக்தமுமாகிறசேறுள்ளதும் கத்திக்கூடுகளாகிறதெப்பமுள்ளதும் கடோரமும் மயிர்களாகிற பாசிகளால்

---

1 இங்கு அரைச்லோகம்விடப்பட்டது. 2 ஹவிஸ்ஸை வைக்குமிடம்.

3 யாகத்தில் அக்னியைவைப்பதற்காகப் பருந்துவடிவமாகக்கட்டப்படும் மேடை. 4 தலைபோன உடல்.

5 ஒருவிதமானஹவிஸை ஹோமம்பண்ணுங்காலத்தில் தேவதைகளை அழைப்பது.

பசுமையுள்ளதும் அறுபட்டகுதிரையாலும் யானையாலும் தோராலும் செய்யப்பட்டபாலமுள்ளதும் [1]பதாகைகளும் த்வஜங்களுமாகிறநீர் சொச்சிகளுள்ளதும் அடிபட்டவாகனங்களாகிற யானைகளுள்ளதும் ரத்தமென்னும்ஜலத்தால் நிறைந்ததும் கரைகடந்த மனிதர்களாலும் தாண்டமுடியாததும் அடிக்கப்பட்டயானைகளாகிற பெரியமுதலைகளுள்ளதும் பரலோகத்திற்குச்செல்வதும் சுபமும் ரிஷ்டி கத்திமுதலிய ஆயுதங்களாகிற பெரியமீன்களுள்ளதும் கழுகும்பருந்துமாகிறமிதப் புக்கட்டைகளுள்ளதும் ராக்ஷஸர்களால்அனுஸரிக்கப்பட்டதும் பயமுள்ளவர்களுக்குச்சங்கையைக்கொடுப்பதுமான நதி உண்டாகிறதோ அந்தது அவனுக்கு அவபிருதமாகும். எவனுடைய [2]வேதியானது பகைவர்களின்தலைகளாலும் யானைகுதிரைகளின் கழுத்துக்களாலும் பரப்பப்படுகிறதோ அவனுக்கு என்னுடைய உலகங்கள்போன்றஉலகங்கள் ஸித்திக்கும். எவனுக்குப் பிறர்களின்படைமுகமானது [3]பத்னிசாலையாகவும் தன்படையானது ஹவிர்த்தானமாகவும் ஸமர்த்தர்களானயுத்தவீரர்கள் ஸதஸ்யர்களாகவும் வடக்குத்திக்கு [4]ஆக்னீத்ரமாகவும் செய்யப்படுகின்றனவோ அவனுக்கு அறிஞர்கள் உத்தமஉலகங்களைக் கூறுகிறார்கள். சத்துருக்களின்ஸேனையைப் பத்னிசாலையாகக்கொண்ட எந்தச்சூரனுடைய இரண்டுபக்கங்களிலுமிருக்கும் வ்யூகங்களில் முன்னிருக்கும் வ்யூகமானது ஆகாசமாகிறதோ அப்பொழுது அவனுடையயுத்தபூமியானது யாகங்களால்நிரம்பியதாகும். வ்யூகங்கள் எப்பொழுதும் மூன்று அக்கினிகளாகும். எல்லாஉலகங்களும் அவனுக்கு அருகிலிருக்கும். எந்தயுத்தவீரன் பயந்துதிரும்பிப் பிறர்களால் அடிக்கப்படுகிறானோ அவன் நிலையற்றவனாய் நரகமடைகிறானென்பதில் ஸந்தேகமில்லை. எவனுடையயுத்தபூமியானது உதிரவேகத்தால்நன்றாகநனைக்கப்பட்டதும் மயிர்களாலும் மாம்ஸத்தாலும் எலும்புகளாலும்நிறைந்ததுமாகிறதோ அவன் உத்தமகதியடைவான். எவன் ஸேனைத்தலைவனைக்கொன்று அவன்வாஹனத்தின்மீது ஏறுகிறானோ அவன் விஷ்ணுவின்பராக்ரமத்திற்கொப்பான பராக்ரமமுள்ளவனும் பிருஹஸ்பதிபோன்றவனும் ப்ரபுவுமாகிறான். எவன் அரசனையோ அவன்குமாரனையோ அவனால்பூஜிக்கப்படும் மனிதனையோ உயிருடன்பிடிக்கிறானோ அவனுக்கு என்னுடையஉலகங்கள்போன்ற உலகங்கள் ஸித்திக்கும். யுத்தத்தில்அடிக்கப்பட்ட சூரனைப்பற்றி

---

1 கொடிவிசேஷங்கள். 2 யுத்தபூமி.

3 யாகஞ்செய்பவனுடைய பத்னி இருக்குமிடம்.

4 ஒருரித்விக்கு இருக்குமிடம்.

எவ்விதமும் சோகப்படக்கூடாது. அடிக்கப்பட்டசூரன் சோகப்படத் தகாதவனாகி ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். யுத்தத்தில் அடிக்கப்பட்டவனுக்கு அன்னதானத்தையும் உதகதானத்தையும் ஸ்நானத்தையும் தீட்டுக்காத்தலையும் (பெரியோர்கள்) செய்யவிரும்புகிறார்களில்லை. அவனுக்குரியஉலகங்களை என்னிடமிருந்து கேள். யுத்தத்தில் அடிக்கப்பட்ட சூரனைக்குறித்து, 'எனக்குப்பர்த்தாவாயிருக்கவேண்டும்' என்று சிறந்தபலவாயிரம்அப்ஸரஸ்திரீகள் வேகத்துடன் ஓடுகிறார்கள். யுத்தத்தில்ஓடாதவனுக்குத் தவமும் புண்ணியமும் ஸநாதனமானதர்மமும் நான்குஆச்ரமங்களும் ஸித்திக்கும். கிழவனும் சிறுவனும் ஸ்திரீயும் புல்நிறைந்தமுகமுள்ளவனும், 'உன்னுடையவனாயிருக்கிறேன்' என்றுசொல்லுகிறவனும் அடிக்கத்தக்கவர்களல்லர். புறத்திலிருந்துஅடிப்பது கூடாது. நான் விருத்திரனையும், பலனையும், பாகனையும், மஹாகாயனையும், விரோசனனையும், தடுக்கமுடியாதநமுசியையும், பலமாயைகளுள்ளசம்பரனையும், விப்ரசித்தியென்னும்அஸுரனையும், பிரஹ்லாதனையும், தனுவின்புத்திரர்கள் யாவர்களையும் யுத்தத்தில்கொன்று பிறகு தேவர்களுக்கு அரசனானேன்" என்றுசொன்னான். இவ்விதஞ்சொல்லப்பட்ட இந்திரன்வசனத்தைக்கேட்டுப் பூஜித்து அம்பரீஷராஜன் தன்போர்வீரர்களின் ஸித்தியைத் தெரிந்துகொண்டான்.

## தொண்ணூற்றேழாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஜனகர் தம்ஸேனைகளைஉத்ஸாஹப்படுத்தி யுத்தத்துக்கனுப்பியதையும் அணிவகுத்தல்முதலியயுத்தமுறைகளையும் சொல்லியது.)

இவ்விஷயத்தில் ப்ரதர்த்தனரும் ஜனகரும்செய்த யுத்தத்தைப் பற்றிய இப்பழையஇதிஹாஸத்தையும் உதாஹரிக்கிறார்கள். யுதிஷ்டிர! மிதிலையின்பதியானஜனகர் யுத்தத்தில் [1]யஜ்ஞோபவீதமுள்ளவராகிப் போர்வீரர்களைமிகஸந்தோஷிப்பித்தார்; அதனைஅறிந்துகொள். மிதிலையின்பதியும் எல்லாஉண்மையையும் அறிந்தவரும் மஹாத்மாவுமானஜனகராஜர் தம்யுத்தவீரர்களுக்கு யோகபலத்தால் ஸ்வர்க்கத்தையும் நரகத்தையும் காண்பித்து, "பயமில்லாதவர்களுக்கு எல்லா

[1] யுத்தமானது யாகமென்றுகூறப்படுவதால் யஜ்ஞோபவீதமுள்ளவரென்றுசொல்லப்படுகிறது.

இன்பங்களையும் கொடுக்கின்றவைகளும் கந்தர்வப்பெண்களால்நிறைந் தவைகளும் அழிவில்லாதவைகளும் விளங்குகின்றவைகளுமான இவ் வுலகங்கள் உண்டாகும்; ஆச்சரியம். பயந்தோடுகிறவர்களுக்கு இதோ நரகங்கள்தோன்றுகின்றன; நிலைத்ததான அபகீர்த்தியுமுண்டு; பாருங்கள். அவைகளைப்பார்த்துப் பிறகு முயற்சிக்கவேண்டும். சரீ ரத்தைவிடுவதில்கருத்துடன் சத்துருக்களை வெல்லுங்கள். நிலையற்ற தான நரகத்திற்கு ஈடுபட்டவர்களாகவேண்டாம். சூரர்களுக்கு மிக்க உத்தமமான ஸ்வர்க்கலோகத்தின் வழியானது [1]தியாகத்தைமூல மாகக்கொண்டது" என்றுசொன்னார். சத்துருக்களின்பட்டணத்தை ஜயிப்பவனே! அரசனால் இவ்விதம்சொல்லப்பட்ட அந்தப்படர்கள் அரசனை ஸந்தோஷப்படுத்தி யுத்தத்தில் பகைவர்களை ஜயித்தார் கள். ஆகையால், யுத்தத்தின்முன்னிலையில் எப்பொழுதும் தன்சரீ ரத்தைத் தியாகம்செய்பவனாயிருக்கவேண்டும். யானைகளின்நடுவில் ரதமுள்ளவர்களையும் ரதமுள்ளவர்களின் நடுவில் குதிரைக்காரர்களை யும் குதிரைக்காரர்களின் நடுவில் கவசம்பூண்டகாலாட்களின்கூட்டத் தையும் நிறுத்திவைக்கவேண்டும். எந்த அரசன் இவ்விதம்பகுத்து நிற்கச்செய்கிறானோ அவன் எப்பொழுதும் சத்துருக்களை ஜயிப்பான். யுதிஷ்டிர! ஆகையால், எப்பொழுதும் இந்த விதிப்படியே செய்ய வேண்டும். ஸ்வர்க்கலோகத்திற்குரிய புண்ணியத்தைவிரும்புகிறவர் கள் மிக்ககோபத்துடன் நல்லயுத்தத்தால் மகரங்கள்கடலைக்கலக்கு வதுபோல ஸேனைகளைக் கலக்கவேண்டும். ஒருவருக்கொருவர் உறுதியாயிருந்துகொண்டு கஷ்டமுள்ளவர்களை ஸந்தோஷப்படுத்த வேண்டும்; அவர்களின்பூமியை ரக்ஷிக்கவும் வேண்டும். பங்கமடை ந்துசெல்லுகிறவர்களை அதிகமாகத் தொடர்ந்து துரத்தக் கூடாது. உயிரில் ஆசையற்று மறுபடி திரும்பிவருவார்களாகில் அவர்களின் வேகம் மிகவும்பொறுக்கமுடியாததாயிருக்கும். ஓ! அரசனே! ஆகை யால், அதிகமாகத் துரத்தக்கூடாது. சூரர்கள் பயந்துஓடுகிறவர்களை அடிக்கவிரும்புகிறதில்லை. ஆகையால், ஓடுகிறவர்களை அதிகமாகத் துரத்தச்செய்வதுகூடாது. ஸஞ்சரிப்பவைகளுக்கு ஸஞ்சரியாமலிரு ப்பவைகளும் கோரப்பல்லுள்ளவைகளுக்குக் கோரப்பல்லில்லாதவை களும் கையுள்ளவைகளுக்குக் கையில்லாதவைகளும் சூரனுக்குப் பயந்தவர்களும் ஆகாரம். புறமும் வயிறும் கையும் காலும் ஸமான மாயிருந்தும் பயமுள்ளவர்கள் அம்பைப் [2]புறத்தில்வைத்துச் செல்லு

[1] யுத்தத்தில் சரீரத்தைவிடுவது.

[2] 'அபஜயத்தை அடைகிறார்கள்' என்பது வேறுபாடம்.

கிறார்கள். ஆகையால், பயத்தால் துன்பமுள்ளவர்கள் திரும்பவும் தண்டனிட்டு அஞ்சலிசெய்து சூரர்களைத் துதிக்கிறார்கள். சூரர்களின் கைகளில் புத்திரனைப்போல இவ்வுலகம் எப்பொழுதும் தொங்குகிறது. ஆகையால், சூரனாயிருப்பவன் எல்லாஉலகங்களிலும் ஸன்மானம்பெறத்தக்கவன். மூன்றுஉலகங்களிலும் சூரத்தன்மையிலும் பெரியதொன்றுமில்லை. சூரன் எல்லாவற்றையும் பரிபாலிக்கிறான். எல்லாம் சூரனிடம் நிலைபெற்றிருக்கிறது" என்று சொன்னார்.

---

## நூறாவது அத்தியாயம்.

## ராஜ தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், யுத்தத்திற்குத்தக்ககாலம், இடம், படை, யுத்தமுறைமுதலியவற்றைக்கூறியது.)

யுதிஷ்டிரர், "பாதர்களிற்சிறந்தபிதாமஹரே! ஜயத்தைவிரும்புகிறவர்கள் தர்மத்தைச்சிறிது துன்பப்படுத்தியும் ஸேனையை எவ்விதம் அரசனின்பயத்தைக்காண்பித்து முன் செல்லச்செய்கிறார்களென்பதை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"[1]உண்மையான க்ஷத்திரியதர்மப்படி சிலர் தர்மத்திலிருக்கிறார்கள். மற்றுஞ்சிலர் மரணமுண்டென்ற உறுதியுடன் தர்மத்திலிருக்கிறார்கள். மற்றுஞ்சிலர் பெரியோர்களின் ஆசாரமென்ற எண்ணத்தாலும் சிலர் அரசனிடம் பயத்தாலுண்டான முயற்சியென்னும் உபாயத்தாலும் தர்மத்திலிருக்கிறார்கள். உடனேபயன்படத்தக்கவைகளான உபாயதர்மங்களைப் பொருள்ஸித்திக்கவேண்டி உபதேசிக்கிறேன். மரியாதையற்றதிருடர்கள் இவைகளுக்கு விரோதிகளாயிருப்பார்கள். அவர்களைத் தடுத்தற்பொருட்டும் காரியங்கள் நிறைவேறுதற்பொருட்டும் வேதத்தில்கூறிய உபாயங்களை உபதேசிக்கிறேன். அவ்வுபாயங்களை என்னிடமிருந்து தெரிந்துகொள். பாரத! நேரானதும் கோணலானதுமான இரண்டுபுத்திகளையும் தெரிந்துகொள்ளவேண்டும். அவைகளில் கோணலாயிருப்பதை அறிந்துகொண்டு உபயோகியாமலிருக்கவேண்டும். (பிறனிடமிருந்து) வந்த கோணலானபுத்தியை (அதுகொண்டு) விலக்கிக்கொள்ளவேண்டும். பகைவர்கள்தாம் அரசனைக் கபடமாக உபசரிப்பார்கள். அறிவுள்ள அரசன்

---

[1] இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

விரோதிகளைப்போல அந்தக்கபடத்தையும் விலக்கிக்கொள்ளவேண்டும். ஓ! பார்த்த! யானைகளுக்குள்ளகவசங்களும் பசு காளை மலைப்பாம்பு இவைகளின்தோல்களும் பாணங்களும் முட்களுள்ள இரும்புகளும் சிறந்தகவசங்களும் ஆராவித்துவைந்த ஆயுதங்களும் துவைந்தவைகளும் லோகங்களால் செய்யப்பட்டவைகளுமான ஸன்னாகங்களுமிருக்கவேண்டும். கொடிகளும் கொடிமரங்களும் பலவர்ணங்கொடுக்கப்பட்டவைகளாயிருக்கவேண்டும். ரிஷ்டிகளும் தோமரங்களும் கத்திகளும் கோடாலிகளும் கூர்மையாயிருக்கவேண்டும். பலகைகளாலும்தோல்களாலும்செய்யப்பட்டகேடகங்களையும் மிகுதியாக ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். ஆயுதங்கள் நன்றாக ஆயத்தஞ்செய்யப்பட்டவைகளும் போர்வீரர்கள் உறுதிசெய்துகொண்டவர்களுமாயிருக்கவேண்டும். சித்திரைமாஸத்திலாவது மார்கழிமாஸத்திலாவது படையைக்கிளப்புவது சிறந்ததாகும். அப்பொழுது பூமியானது பலன்களுடன்கூடின பயிர்களுள்ளதும் ஜலமுள்ளதுமாயிருக்கும்; ஓ! பாரத! காலமும் மிக்ககுளிரும் அதிகவெயிலுமில்லாமலிருக்கும். ஆகையால், அக்காலத்தில் அல்லது பிறர்களுக்கு ஸங்கடமுள்ள காலத்தில் முயற்சிசெய்யவேண்டும். பிறர்களைப்பீடிப்பதில் சேனைகளுக்கு இந்தவுபாயங்கள் சிறந்தவைகளாகும். ஜலமுள்ளதும் புல்லுள்ளதும் ஸமமானதும் காட்டிலுள்ளஸமர்த்தர்களான சாரர்களால் நன்றாகப்பழகி அறியப்பட்டதுமான வழியானது செல்லத்தக்கதாகப் புகழப்படுகிறது. மிருகக்கூட்டங்கள்போலக் காடுகளில்செல்லுவது முடியாது. ஆகையால், ஜயத்தைவிரும்புகிறவர்கள் சேனைகளிடம் அந்தக்காட்டாள்களையே சேர்த்துவைக்கிறார்கள். சக்தியுள்ளதும் நற்குலத்திற்பிறந்ததுமான ஆள்கூட்டமானது முந்திச் செல்லவேண்டும். ஜலமுள்ளதும் அருகில் வெறுவெளியுள்ளதுமான வழியானது இருப்பிடமாகச்சிறந்ததாகும். அவ்விதமிருந்தால் பிறர்களின் தூதர்களைத் தடுக்கமுடியும். யுத்தத்தில்ஸமர்த்தர்களானஜனங்கள் பலவிதக்குணங்களின் மிகுதியால் ஆரண்யத்தினருகிலுள்ள வெளியைச் சிறந்ததெனநினைக்கிறார்கள். ஸேனைகளுக்கு அதிக தூரமில்லாவிடத்தில் பொக்கசமிருக்கவேண்டும். பொக்கசத்தினருகில் காலாட்களை [1]இறங்கவும் மறைந்திருக்கவும் செய்யவேண்டும். இதுவே ஆபத்காலத்தில் பகைவர்களைக்கொல்வதற்கு முக்கியகாரணமாகும். ஸப்தரிஷிநக்ஷத்திரங்களைப் புறத்தில்வைத்துக்கொண்டு மலைபோன்றவர்களாயிருந்து யுத்தஞ்செய்யவேண்டும். இந்தவிதிப்படி

---

[1] இங்குவேறுபாடம்கொள்ளப்பட்டது.

ஜயிக்கக்கடினமான பகைவர்களையும் ஜயிக்கவிரும்பலாம். வாயுவும் ஸூர்யனும் சந்திரனுமுள்ளபக்ஷத்தில் ஜயமுண்டாகும். ஓ! யுதிஷ்டிர! இரண்டுபக்ஷத்திலும் சேர்க்கையிருந்தால் இவர்களுள் முன்முன்னுள்ளவர் மிகச்சிறந்தவராவர். யுத்தத்தில்ஸமர்த்தர்களான ஜனங்கள் சேறில்லாததும் ஜலமில்லாததும் (பிராகாரமுதலிய) வரம்பில்லாததும் மண்கட்டிகளில்லாததுமானபூமியைக் குதிரைகளுக்குரியதென்று கொண்டாடுகிறார்கள். மேடுபள்ளமில்லாததும் சேறில்லாததும் வளைகளில்லாததுமானபூமியானது தேர்களுக்குச் சிறந்ததாகும். சிறியமரங்களுள்ளதும் அதிகப்புல்லுகளுள்ளதும் ஜலமுள்ளதுமானபூமியானது யானைச்சண்டைசெய்பவர்களுக்குச் சிறந்ததாகும். பலஅரண்களுள்ளதும் பெரியபுற்களுள்ளதும் மூங்கிலாலும் பிரம்பாலும் [1]மறைக்கப்பட்டதுமானபூமியும் மலைகளும் உபவனங்களும் காலாட்களுக்குத் தக்கனவாகும். ஓ! பாரத! காலாட்களை அதிகமாகக்கொண்ட சேனையானது உறுதியாயிருக்கும். மழையில்லாதனவான நல்லதினங்களில் ரதமும் குதிரையும்நிறைந்த ஸேனையானது சிறந்ததாகும். மழைக்காலத்தில் காலாட்களும் யானைகளும் நிறைந்த சேனையானது சிறந்ததாகும். இக்குணங்களையும் தேசகாலங்களையும் நன்றாகத்தெரிந்துகொண்டு ஸேனையை யுத்தத்திற்கனுப்பவேண்டும். இங்ஙனம் நன்குதெரிந்துகொண்டு நல்லதிதிநக்ஷத்திரங்களில் ஆசீர்வாதம்பெற்றவனாய்ச் சேனையை நன்றாகச்செலுத்திக்கொண்டு எவன் செல்லுகிறானோ அவன் எப்பொழுதும் ஜயம்பெறுவான். தூங்குகிறவர்களையும் தாகமுள்ளவர்களையும் ச்ரமப்பட்டவர்களையும் பொதுவாயிருப்பவர்களையும் அடிக்கக்கூடாது. யுத்தம்நிறுத்தியஸமயத்திலும் யாத்திரைக்காலத்திலும் போகும்பொழுதும் குடிக்குங்காலத்திலும் புஜிக்குங்காலத்திலும் அடிக்கக்கூடாது. நிந்திக்கப்பட்டவர்களையும் வேறுகாரியத்தில் ஏவப்பட்டவர்களையும் அடிபட்டவர்களையும் மெலிந்தவர்களையும் நம்பிக்கையில்லாதவர்களையும் வேறுமுயற்சிசெய்கிறவர்களையும் சுரங்கமுதலிய ரஹஸ்யஸ்தானத்திலிருந்து ஏவப்பட்டு வெளியிற்செல்லுகிறவர்களையும் வெளியிலிருந்து பண்டங்களுடன் ரஹஸ்யஸ்தானத்திற்குச்செல்லுகிறவர்களையும் பரம்பரையாய்வந்து அரசன்வாயிலையடுத்திருப்பவர்களையும் மந்திரியின் வாயிலில் தலைவராயிருப்பவர்களையும்அடிக்கக்கூடாது. (பிறன்) ஸேனையைப் பேதப்படுத்துகிறவர்களும் பேதப்பட்டதன்ஸேனையை நிலைநிறுத்துகிறவர்களுமாயிருப்பவர்களைத் தனக்குச்சரியான அன்னபா

---

1 'சூழப்பட்டதுமான' என்பது வேறுபாடம்.

முள்ளவர்களும் இரண்டுபங்கு சம்பளமுள்ளவர்களுமாகச் செய்ய வேண்டும். ஜாதியையும் கோத்திரத்தையும் மிக்கஉத்தமமும் சுபமுமானவேலையையும் தெரிந்துகொண்டு தனக்குச்சமமாகச் சரீரத்தை ரக்ஷிக்கவேண்டி அவர்களுக்கு இரண்டுபங்கு மூன்றுபங்கு நான்கு பங்கு சம்பளத்தைச் செய்துகொடுக்கவேண்டும். பத்துப்பேர்களுக்குத் தலைவர்களையும் நூறுபேர்களுக்குத்தலைவர்களையும் ஏற்படுத்த வேண்டும். பிறகு சோம்பலில்லாதவனும் சூரனுமானவனை ஆயிரம் பேர்களுக்கு அதிபதியாயிருக்கச்செய்யவேண்டும். அப்பா! அரசனே! தலைமையாயிருப்பவர்களை ஒன்றுசேர்த்து, "நாம் ஸந்தேகமுள்ளவர்களாயிருக்கிறோம். யுத்தத்தில் ஜயம்பெறவேண்டி ஒருவரையொருவர் விடாமலிருக்கவேண்டும். பயந்தவர்கள் இவ்விடத்திலேயே திரும்பவேண்டும். பயங்கரமாக யுத்தம் நடக்கும்பொழுது [1] எவர்கள் அடிக்கமுயலுகிறார்களோ அவர்கள் கூட்டத்தில் சொந்தக்காரனை அடிக்கவாவது கொலைசெய்யவாவது கூடாது. தன்னையும் தன் வகுப்பையும் ரக்ஷித்துக்கொண்டு யுத்தத்திலடிக்கவேண்டும். ஓடுவதில் பொருள்நாசமும் கொலையும் கெட்டசொல்லும் அபகீர்த்தியுமுண்டாகும். ஓடுகிறமனிதனுக்கு இன்பமில்லாததும் ஸுகமில்லாததுமான சொற்களுண்டாகும். சத்துருக்களால் ஆக்ரமிக்கப்பட்டு உயிருக்குச்சந்தேகமுண்டாகுங்காலத்தில் அடிபட்டு உதடும்பல்லும் கீழேவிழுந்தவனும் எல்லாஆயுதங்களையும்விட்டவனும் ஸஹாயமான மனிதர்களைத் தள்ளிவிட்டுஓடுகிறவனுமானமனிதனுக்கு உண்டாகும் இவைகள் எப்பொழுதும் நமதுபகையாளியைச்சேர்ந்த மனிதனுக்கு உண்டாகட்டும். எவர்கள் [2] திரும்பிய முகமுள்ளவர்களாயிருக்கிறார்களோ அவர்கள் மனிதர்களுள் அபசதர்களாவார்கள். கூட்டத்தைப் பெருகச்செய்வதொன்றல்லாமல் அவர்கள் இவ்வுலகிலும் இறந்தபின்னும் பயனுள்ளவர்களல்லர். ஓடுகிறமனிதனை ஜயம்பெற்றவர்களும் ஸந்தோஷமுள்ளமனமுள்ளவர்களுமான விரோதியின் மனிதர்கள் மங்களவாத்தியங்களுடனும் [3] சந்தனமுதலிய அலங்காரங்களுடனும் எதிர்த்துச் செல்வார்களென்பது பொறுக்க மிகக்கடினமான துன்பமாகும். [4] சத்துருக்கள் எவனுடையகஷ்டத்தில் ஸந்தோஷப்படு

---

1 இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது.

2 யுத்தத்தில் எதிர்த்து நில்லாமல் ஓடுகிறவர்கள்.

3 இங்கு வேறுபாடங் கொள்ளப்பட்டது.

4 'யுத்தத்திலிருக்கும் சத்துருக்களானவர்கள் எவனுடைய கீர்த்தியைக் கெடுக்கிறார்களோ அவனுக்கு அது கொலையைவிடப் பொறுக்கமிகக்கடினமானதுக்கமென்று நான் நினைக்கிறேன்' என்பது வேறுபாடம்.

கிறார்களோ அஃது அவனுக்கு மரணத்தைவிட மிகவும் பொறுக்க முடியாததுக்கமென்று நினைக்கிறார்கள். தர்மத்திற்கும் எல்லாஸௌகத்திற்கும் [1]லக்ஷ்மியை மூலமாக அறியுங்கள். பயந்தவர்களுடையதான பெரியகீர்த்தியைச் சூரனாயிருப்பவனடைவான். ஸ்வர்க்கத்தைவிரும்பியநாம் யுத்தத்தில் உயிரைவிடத்துணிந்தவர்களாய் ஜயிக்கிறவர்களாகவோ கொல்லப்படுகிறவர்களாகவோ நற்கதியைப்பெறவேண்டும்" என்று சொல்லவேண்டும். இவ்விதம் சபதஞ்செய்துகொண்டவர்களும் உயிரைவிடத்துணிந்தவர்களுமான வீரர்கள் பயமில்லாதவர்களாய்ப் பகைவர்களின்படையை எதிர்த்துப் பிரவேசிப்பார்கள். கத்தியும் கேடகமுமுள்ளவர்களான புருஷர்களின்சேனையானது முந்தி இருக்கவேண்டும். தேர்க்கூட்டமானது பிந்தி இருக்கவேண்டும். [2]பாரியைபோன்ற கூட்டமானது நடுவிலிருக்கவேண்டும். பிறர்களைத் தடுக்கவேண்டிக் காலாட்களை மறைத்துவைக்கவேண்டும். அந்தப் பட்டணத்தில் முந்திச்செல்லத்தக்கபெரியோர்களும் தைரியமுள்ளவர்களும் நல்லமனமுள்ளவர்களும் முந்திச்செல்ல ஸம்மதிப்பவர்களும் முந்தியிருக்கவேண்டும். மற்றஜனங்கள் அவர்களையே அநுஸரித்திருக்கவேண்டும். பயமுள்ளவர்களுக்கும் முயற்சியுடன் உத்ஸாஹமுண்டாகும்படி செய்யவேண்டும். (அவர்கள்) கூட்டத்தைக் காண்பிக்கவேண்டியதற்காக மாத்திரம் ஸமீபத்திலாவதிருக்கவேண்டும். தொடர்ந்துநிற்கும்சிலர்களை யுத்தஞ்செய்யும்படி செய்யவேண்டும். இஷ்டப்படி பலபேர்களை விரிவாயிருக்கச்செய்யவேண்டும். படையானது ஊசிபோன்ற முகமுள்ளதாயிருக்கவேண்டும். சில ஜனங்களுக்குப் பலஜனங்களுடன் தாழ்மையானசண்டை நேர்ந்தால் உண்மையாயிருந்தாலும் பொய்யாயிருந்தாலும் கைகளைப்பிடித்துக்கொண்டு, 'சத்துருக்கள்பங்கமடைந்தார்கள்; ஆச்சரியம்' என்று கூவவேண்டும். 'நமதுநண்பரின்படை வந்துவிட்டது; பயமின்றி அடியுங்கள்' என்று பயங்கரமானசப்தங்களைச்செய்துகொண்டு தைரியத்துடன் எதிர்த்துச்செல்லவேண்டும். ஸிம்மநாதங்களையும் கிலகிலாசப்தங்களையும் செய்யவேண்டும். கிரகசங்களையும் கொம்புகளையும் பேரிகளையும் மிருதங்கங்களையும் பணவங்களையும் முன்னால்கச்செய்யவேண்டும்" என்று சொன்னார்.

1 'ஜயத்தை' என்பதுவேறுபாடம். 2 மிக்கபராக்ரமமில்லாதவர்கள்.

## நூற்றொராவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(எந்தஎந்தத்தேசத்திலுள்ளவர்கள் எந்தஎந்தயுத்தத்தில்வல்லவர்கள் என்பதையும் யுத்தவீரர்களின்லக்ஷணங்களையும்கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! யுத்தத்தில், [1]சக்திபெற்றஜனங்கள் எவ்விதஸ்வபாவமும் முயற்சியும் ரூபமும் ஸன்னகமும் ஆயுதங்களும்உள்ளவர்களாயிருக்கவேண்டும்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"தேசாசாரகுலாசாரத்திற்குத்தக்கபடி இவ்விஷயத்தில் ஆயுதமும் வாஹனமும் விதிக்கப்படுகின்றன. தேசாசாரகுலாசாரத்தாலன்றோ இவ்வுலகில் மனிதன் அவ்விதத்தொழில்களிலிருக்கிறான்? காந்தார்தேசத்திலுள்ளவர்களும் ஸிந்துதேசத்திலும் ஸௌவீரதேசத்திலுமுள்ளவர்களும், பயமில்லாதவர்களாயும் மிக்கபலமுள்ளவர்களாயும் நகங்களாலும் ப்ராஸமென்னும்ஆயுதங்களாலும் யுத்தஞ்செய்வார்கள். அவர்களின்பலம் யாவற்றையும் கரைகடந்துநிற்கும். உசீனரதேசத்திலுள்ளவர்கள் பலமுள்ளவர்களும் எல்லாஆயுதங்களிலும் ஸமர்த்தர்களுமாயிருப்பார்கள். கிழக்குத்தேசத்திலுள்ளவர்கள் யானைச்சண்டைகளில்ஸமர்த்தர்களும் கபடயுத்தஞ்செய்கிறவர்களுமாயிருப்பார்கள். அவ்விதமே யவனர்களும் கம்போஜதேசத்திலுள்ளவர்களும் மதுரையைச்சுற்றியிருப்பவர்களும் குதிரைச்சண்டையில் ஸமர்த்தர்களாயிருப்பார்கள். தென்தேசத்திலுள்ளவர்கள் கத்தியும் கேடகமுமுள்ளவர்களும் மிக்கதைரியமுள்ளவர்களும் மிக்கபலமுள்ளவர்களும் எல்லாவிடத்திலும் சூரர்களுமாயிருப்பார்கள். அவந்தியிலுள்ளவர்கள் பெரியசூரர்களாயிருப்பார்கள். மாளவதேசத்திலுள்ளவர்கள் தேர் யானை குதிரை காலாளென்னும் நான்கு அங்கமுள்ளபடையிலும் மிக்கசூரர்களாயிருப்பார்கள். (இவர்களில்) ஒருவன் தனியாயிருந்தாலும் யுத்தத்தில் ஆயிரம்பெயரை எதிர்த்து நிற்பான். தேசங்கள் பெரும்பாலும் குறிப்பிடப்பட்டன. சூரர்களின் லக்ஷணங்களை என்னிடமிருந்து கேள். சிங்கம்புலிகளின் குரலும் கண்களும் போன்ற குரலும் கண்களுமுள்ளவர்களும் சிங்கம்புலிகள் போலநடக்கிறவர்களும் மாடப்புறு ஸர்ப்பம் இவைகளின்கண்போன்ற கண்ணுள்ளவர்களுமாகிய இவர்கள்யாவரும், சூரர்களும் சத்துருக்

1 இங்குவேறுபாடங்கொள்ளப்பட்டது.

களை வெல்லத்தக்கவர்களுமாயிருப்பார்கள். மான்களின்குரல்போன்ற குரலுள்ளவர்களும் புலிகாளைகளின்கண்போன்ற கண்ணுள்ளவர்களும், சத்துருக்களை அடிக்கத்தக்கவர்களாயும் கம்பீரர்களாயும் கோபமுள்ளவர்களாயுமிருப்பார்கள். சலங்கையின் ஒலிபோன்ற த்வனியுள்ளவர்களும் மேகத்தின்த்வனிபோன்ற த்வனியுள்ளவர்களும் கடோரமான முகமுள்ளவர்களும் இனிமையானத்வனியுள்ளசிலர்களும் கோணலானநுனிமூக்கும் நாவுமுள்ளவர்களும், தூரத்தில் போகத்தக்கவர்களாகவும் தூரத்தில்வந்து விழத்தக்கவர்களாகவுமிருப்பார்கள். பூனைபோலக்கூனர்களும் அசைவற்றகண்ணுள்ளவர்களும் சிறியமயிருள்ளவர்களும் மெல்லியதோளுள்ளவர்களும், வேகமுள்ளவர்களாயும் சஞ்சலமானசித்தமுள்ளவர்களாயும் அருகிற்செல்லக் கூடாதவர்களாயுமிருப்பார்கள். பொன்வர்ண முள்ளவர்களும் மூடியகண்ணுள்ளவர்களுமான சிலர்கள் மெல்லியதன்மையுள்ளவர்களாயிருப்பார்கள். குதிரையின் கதிபோன்றகதியும் அதன்த்வனி போன்றத்வனியுமுள்ளமனிதர்கள் யுத்தத்தின் கரைகடக்கத்தக்கவர்களாயிருப்பார்கள். மிக்ககடினமும் சிறியதுமானசரீரமும் அகன்ற மார்புமுடையவர்களாயிருப்பவர்கள் வாத்தியங்களில் கோபமுள்ளவர்களாயும் கலகங்களில் ஸந்தோஷமுள்ளவர்களாயுமிருப்பார்கள். கம்பீரமானகண்ணுள்ளவர்களும் வெளியில்பிதுங்கிய கண்ணுள்ளவர்களும் மஞ்சள்நிறமானகணணுள்ளவர்களும் கீரியின்கண்போன்ற கண்ணுள்ளவர்களும் நெரிந்தபுருவமுள்ள முகமுள்ளவர்களுமாகிய யாவரும் சூரர்களாகவும் சரீரத்தைவிடத்துணிந்தவர்களாகவுமிருப்பார்கள். கோணலானகண்ணுள்ளவர்களும் உயர்ந்தநெற்றியுள்ளவர்களும் மாம்ஸமில்லாதமோவாய்க்கட்டையையுடையவர்களும் கோணலானகையும் விரலும் துடையுமுள்ளவர்களும் இறுகினஉடம்புள்ளவர்களும் நரம்புகளால்வ்யாபிக்கப்பட்டவர்களும் யுத்தம்வரும்பொழுது பயமில்லாமல் வேகமாய்ப்ரவேசிப்பார்கள். அவர்கள் யானைகள்போலக் கொழுத்தவர்களாயும் அருகில்செல்லத் தகாதவர்களாயுமிருப்பார்கள். சிவந்ததும் பிளந்ததுமானமயிர்நுனியுள்ளவர்களும் பருத்தபக்கமும் மோவாயும் முகமுமுள்ளவர்களும் உயர்ந்ததோளுள்ளவர்களும் பருத்தகழுத்துள்ளவர்களும் பயங்கரர்களும் பருத்த முழங்காலுக்குக்கீழான பின்பக்கமுள்ளவர்களும் ஸுக்ரீவமென்னும் வாஸுதேவரின்குதிரைபோலவும் கருடபக்ஷிகள்போலவும் [1] உயரக்கிளம்புகிறவர்களும் உருண்டையான தலையுள்ளவர்களும்

---

[1] இங்குவேறுபாடம்கொள்ளப்பட்டது.

அகன்ற முகமுள்ளவர்களும் பூனையின்முகம்போன்ற முகமுள்ளவர்களும், கடோரமானத்வனியுள்ளவர்களாயும் கோபமுள்ளவர்களாயும் யுத்தங்களில் [1]சத்துருக்கூட்டத்தை வெருட்டுகிறவர்களாயும் தர்மமறியாதவர்களாயும் அஹங்காரமுள்ளவர்களாயும் கடோரர்களாயும் பயங்கரமான தோற்றமுடையவர்களாயுமிருப்பார்கள். சரீரத்தை விடத் துணிந்தவர்களும் யுத்தத்தில்திரும்பாதவர்களும் முந்திச்செல்லுகிறவர்களுமான இவர்கள்யாவர்களையும் ஸேனையில் எப்பொழுதும் மர்யாதை செய்யவேண்டும். தர்மமறியாதவர்களும் வேறானநடையுள்ளவர்களுமான அவர்கள் அடிபடுகிறவர்களும் அடிக்கிறவர்களுமாயிருப்பார்கள். நன்மொழியால் இவர்களுக்கு அவமானமுண்டாகும். இவ்விதமே இவர்கள் அரசனிடத்திலும் அடிக்கடி குற்றமுள்ளவர்களாயிருப்பார்கள்" என்றுசொன்னார்.

## நூற்றிரண்டாவது அத்யாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(ஜயம்பெறத்தக்க அடையாளங்களையும் யுத்தத்தில் அரசன் நடத்த வேண்டிய சில நீதிகளையும் கூறியது.)

யுதிஷ்டிரர், "பாதர்களிற்சிறந்தவரே! ஜயமடையத்தக்கஸேனையின் சிறந்தலக்ஷணங்கள் யாவை? அவைகளையும் அறியவிரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"பாதர்களிற் சிறந்தவனே! ஜயமடையத்தக்க சேனைக்குள்ள சிறந்தலக்ஷணங்கள் முழுமையையும் சொல்லுகிறேன். முதலில் தெய்வம் கோபமுள்ளதாகவும் மனிதன் காலத்தால் ஏவப்பட்டவனாகவுமிருக்கும்பொழுது அதனை அறிவுள்ளவர்கள் நீண்டஞானக்கண்ணாலறிகிறார்கள். அதனை அறிந்தவர்கள் இவ்விஷயத்தில் பிராயச்சித்தவிதியையும் ஜபங்களையும் ஹோமங்களையும் சுபகர்மங்களையும்செய்து அஹிதங்களுக்குச் சாந்தியைச் செய்கிறார்கள். ஓ! பாரத! எந்தச் சேனையில் யுத்தவீரர்கள் வேகமுள்ளமனமுள்ளவர்களாயிருக்கிறார்களோ, வாஹனங்களுமிருக்கின்றனவோ அந்தச்சேனைக்கு நிச்சயமாக ஜயமுண்டாகும். எப்பொழுது காற்றுக்களும் இந்திரதனுஸுகளும் மேகங்களும் ஸூர்யனுடையகிரணங்களும் சேனைக்கு அனுகூலமாயிருக்கின்றனவோ நரிகளும் கழுகுகளும் எல்லாவிதத்

[1] 'சப்தத்தைக்கேட்டு ஓடிவருகிறவர்களாயும்' என்றபொருளுமுண்டு.

தாலும் அனுகூலமானபலமுள்ளவைகளாகச் சேனையைப் பெருமைப் படுத்துகின்றனவோ அப்பொழுது மிகஉத்தமமான ஸித்தியுண்டாகும். அக்கினியானது தெளிந்தகாந்தியும் உயர்ந்தகிரணமும் வலமாய்ச்சுற்றும் ஜ்வாலையுமுள்ளதும் புகையில்லாததுமாயிருக்கும். ஆகுதிகளின்மணம் சுத்தமாயிருக்கும். இது ஜயம்வருவதற்கு அடையாளமென்று சொல்லுகிறார்கள். எந்தவிடத்தில் சங்கங்களும் பேரிகளும் கம்பீரமும் மிருதுவுமானஒலியுள்ளவைகளாய்ச் சப்திக்கின்றனவோ, யுத்தஞ்செய்ய விருப்பமுள்ளவர்களும் அனுகூலமாயிருக்கிறார்களோ அவ்விடத்தில்அது ஜயம்வருவதற்கு அடையாளமென்றுசொல்லுகிறார்கள். புறப்படுகிறவர்களுக்கும் போகிறவர்களுக்கும் பின்புறத்திலும் இடப்பக்கத்திலும் அடிக்கவிருப்பமுள்ளவர்களுக்கு வலப்பக்கத்திலுமுள்ள அனுகூலமானமிருகங்கள் காரியத்தின்ஸித்தியை அறிவிக்கின்றன. அந்த மிருகங்கள் எதிரில்வந்தால் தடைசெய்கின்றனவாகும். அன்னபக்ஷிகளும் கிரௌஞ்சங்களும் மரங்குத்திக்குருவிகளும் காடைகளும் மங்களமானசப்தங்களைச் சொல்லுவதும் யுத்தவீரர்கள் ஸந்தோஷமுள்ளவர்களும் தைரியமுள்ளவர்களுமாயிருப்பதும் ஜயமுண்டாவதற்கடையாளமென்று சொல்லுகிறார்கள். நல்லகாந்தியுள்ள ஆயுதங்களாலும் யந்திரங்களாலும் கவசங்களாலும் கொடிகளாலும் யௌவனமுள்ளபடர்களின் முககாந்திகளாலும் பிரகாசமுள்ளதாயும் எதிர்த்துப்பார்க்க முடியாததாயுமிருக்கிற சேனையையுடையவர்கள் சத்துருக்களை ஜயிப்பார்கள். எவர்களின் யுத்தவீரர்கள் அபிமானமற்றவர்களும் கேட்கவிருப்பமுள்ளவர்களும் ஒருவருக்கொருவர் ஸ்நேஹத்திலுறுதிபெற்றவர்களும் சூரத்தன்மையை அடைந்தவர்களுமாயிருக்கிறார்களோ அவர்களுக்கு ஜயமுண்டாவதற்கு இது அடையாளமென்றுசொல்லுகிறார்கள். சப்தங்களும் ஸ்பர்சங்களும் மணங்களும் மனத்துக்கு இனியவைகளாயிருப்பதும் தைரியமானது யுத்தவீரர்களை அடுத்துநிற்பதும் ஜயத்திற்குவழியாகும். யுத்தத்திற்குப்புறப்பட்டவனுக்கு இடப்பக்கத்திலுள்ளகாகத்தின்சப்தமும் ப்ரவேசிக்கவிருப்பமுள்ளவனுக்கு வலப்பக்கத்திலுள்ள காகத்தின்சப்தமும் பின்புறத்திலுள்ளகாகத்தின்சப்தமும் காரியஸித்தியை அறிவிக்கும். எதிரிலுள்ளசப்தமானது தடைசெய்கிறதாகும். யுதிஷ்டிர! நான்கு அங்கங்களையுமுடைய பெரியசேனையைச் சேர்த்தபின்முதலில் ஸாமோபாயத்துடனே இருக்கவேண்டும். பிறகு யுத்தத்தில் முயற்சிக்கவேண்டும். [1]ஓ! பாரத! யுத்தமென்பது கடைசியான

---

1 இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது.

ஜயோபாயமாகும். யுத்தத்தில் ஜயமென்பது யதிர்ச்சையாய்த் தெய்வத்தாலேற்படத்தக்கதென்று விசாரிக்கவேண்டும். அதிகவேகமுள்ளநதிபோலவும் பயமுள்ளபெரியமிருகங்கள்போலவும் அடக்கமிகக்கடினமானபெரியசேனையும் பங்கமடைகிறது. அதிகமான பலமுள்ளதும் பெரியதும் மான்கூட்டத்திற்கொப்பானதுமானசேனை காரணமன்று. அறிவுள்ளவர்களாயிருந்தாலும் சேனைகள்பங்கமடைவதாலேயே பங்கப்படுகிறார்கள். ஒருவரையொருவர் அறிந்தவர்களும் ஸந்தோஷமுள்ளவர்களும் உயிரைவிடத்துணிந்தவர்களும் நல்லஉறுதியுள்ளவர்களுமான சூரர்கள் ஐம்பதுபேர்களிருந்தாலும் பிறர்படையைக் கொல்லுவார்கள். நற்குலத்திற்பிறந்தவர்களும் பூஜிக்கப்பட்டவர்களுமானஐந்து அல்லது ஆறு அல்லதுஏழுபேர்கள் உறுதிசெய்துகொண்டு சேர்ந்து பகைவர்களைநன்றாகஜயிப்பார்கள். எவ்விதத்திலாவது முடியுமானால் யுத்தத்தை நினைக்கவேண்டாம். யுத்தமானது ஸாமதானபேதங்களுக்குப்பிறகு செய்யத்தக்கதாகச் சொல்லப்படுகிறது. மிகவும்ஜ்வலிக்கும்இடியினால்பயமுண்டாவதுபோல ஸேனையின்வரவால், ‘இதுநாசஞ்செய்துவிடுமோ’ என்றபயமானது பயந்தஸ்வபாவமுள்ளவர்களை மிகவும்துன்பப்படுத்தும். எதிர்த்துவரக்கூடிய யுத்தத்தைக்கண்டு பிறகு எவர்கள் எதிர்த்துச்செல்லுகிறார்களோ அந்தப்படர்களின்சரீரங்களும் தேசத்திலுள்ளவர்களின் அங்கங்களும் வேர்வையைப்பெருகவிடும். அரசனே! ஸ்தாவரஜங்கமங்களுடன் கூடின தேசம்யாவும்நடுங்கும். அஸ்த்ரங்களின் பிரதாபத்தால்தபிக்கப்படும் பிராணிகளுடைய[1]மஜ்ஜைகள் வெளியில்பொசியும். அவர்களுக்கு அடிக்கடி கடுமையுடன்கலந்தபிரியவசனம் பேசவேண்டும். பீடிக்கப்படுகிறவர்கள் எல்லாவிதத்தாலும் பிறர்களிடம் ஸந்தியை அடைவார்கள். சத்ருவின் ஸ்நேஹிதர்களைப் பேதிக்கவேண்டிச்சாரர்களை அனுப்பவேண்டும். அவனிலும்மேலான அரசனுடன்ஸந்திசெய்வது சிறந்ததாகும். சத்துருவுடன்சேர்ந்து எல்லாவிதத்தாலும் துன்பப்படுத்துவதுபோல அவனுக்கு வேறுவிதமாக அவ்விதத்துன்பத்தைச் செய்யமுடியாதன்றோ? பொறுமையென்பது ஸாதுவாயிருப்பவனிடமிருக்கும்; அஸாதுவினிடம் எப்பொழுதுமிராது. பார்த்த! பொறுமை பொறுமையில்லாமைகளின்பயனைத் தெரிந்துகொள். ஜயம்பெற்றபின் பொறுமையுடனிருக்கும் அரசனுக்குக் கீர்த்தி மிகவிருத்தியடையும். இவன் பேரபராதியாயிருந்தாலும் விரோதிகளும் நம்பிக்கையுடனிருப்பார்கள். சூடுகொட்டப்படாமல்நிமிர்த்த கோணலான

---

1 எலும்பின்ஸாரம்.

மூங்கில்முதலியமரங்கள் திரும்பவும் ஸ்வபாவத்தையடையுமாகையால் (சத்துருக்களைத்) துன்பப்படுத்தியபின் பொறுமைசிறந்ததென மாயாவிகளான அஸுரர்கள் கருதுகிறார்கள். இது நல்ல அறிவன்று; பெரியோர்கள் இதைப் புகழுகிறதில்லை. கோபமில்லாமலும் நாசமில்லாமலும் (பிராணிகளைத்) தன்மக்களைப்போல அடக்கவேண்டும். யுதிஷ்டிர! கொடுமையான அரசன் உலகினர்க்குப் பகைக்கத்தக்கவனுவான். மெதுவாயிருப்பவனையும் அவமதிப்பார்கள். ஆகையால், இரண்டையும் அடைந்தவனுயிருக்க வேண்டும். பாரத! அடிக்கப்போகும் பொழுதும் அடிக்கிறபொழுதும் பிரியமாகப்பேசவேண்டும். அடித்தபின்னும் சோகப்படுகிறவன்போலவும் அழுகிறவன்போலவும் பிரியமாகப் பேசவேண்டும். '[1] அடிபட்டவர்களும் மிக்கஸந்தோஷமுள்ள மற்றவர்களும் எனக்குப் பிரியர்களல்லர். மிகச்சிறப்பாக அடிக்கடி சொல்லப்படும்புகழ்ச்சியும் எனக்குப் பிரியமன்று. அந்தோ! இத்தகையமனிதன் கொலைக்குத் தக்கவனல்லன். உயிரோடிருப்பதை விரும்பவேண்டும். யுத்தங்களில் ஓடாதவர்களான சிறந்தமனிதர் கிடைப்பதுமிகவும்அரிது. ஆகையால், யுத்தத்தில் இவனை அடித்தவன் எனக்கு அப்பிரியத்தைச் செய்தவனுகிறுன்' என்னும் வசனத்தைச் சொல்லிக்கொண்டு ரஹஸ்யத்திலிருக்குங்காலத்தில் அடித்தவர்களைப் பூஜிக்கவேண்டும். உண்மையாக அடித்தவர்களுக்கும் அடிபட்டவர்களுக்கும் பூஜையைச் செய்யவேண்டும். ஜனங்களின் சேர்க்கையைச் செய்துகொள்ளவிரும்பியவன் கையைப்பிடித்துக்கொண்டு இவ்விதம் கதறவேண்டும். இவ்விதம் எல்லாஸமயங்களிலும் பிரியவசனத்தை முன்னிட்டு நடத்தவேண்டும். ஓ! பாரத! இவ்விதத்தர்மம்தெரிந்த அரசன் பிராணிகளுக்குப்பிரியனுயும் பயமற்றவனுயுமிருப்பான். எல்லாப்பிராணிகளும் இவனிடத்தில் விச்வாஸத்தையடையும். நம்பிக்கையுள்ள உலகமானது காலத்திற்குத்தக்கபடி முயற்சியுடன் அனுபவிக்கத் தகுந்ததாகும். ஆகையால், பூமியையனுபவிக்கவிருப்பமுள்ள அரசன் கபடமின்றி எல்லாப்பிராணிகளையும் விச்வாஸமுள்ளனவாயிருக்கச் செய்யவேண்டும். எல்லாவிடத்திலும் ரக்ஷிக்கவும்வேண்டும்" என்றுசொன்னுர்.

[1] 'யுத்தத்தில்என்னுடையவீரர்கள் சத்துருக்களைக்கொன்றது எனக்குப் பிரியமில்லாதகாரியம். அடிக்கடிசொல்லியும் என்னுடையவீரர்கள் என்வார்த்தையைக் கேட்கிறதில்லை' என்பதுவேறுபாடம்.

## நூற்றுமூன்றாவது அத்தியாயம்.
## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், சத்ருஜயத்தைப்பற்றி இந்திரனுக்கும் பிருஹஸ்பதிக்கும் நடந்தஸம்வாதத்தை யுதிஷ்டிரருக்குக் கூறியது.)

யுதிஷ்டிரர், "பாரதகுலத்திலுதித்தபிதாமஹரே! அரசன் மெல்லியபகைவனிடமும் பெரியஸஹாயமுள்ள கொடியனைபகைவனிடமும் எவ்விதமிருக்கவேண்டும்? அதனை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"ஓ! யுதிஷ்டிர! இவ்விஷயத்திலும் பிருஹஸ்பதிக்கும் இந்திரனுக்கும்நடந்த ஸம்பாஷணையான பழைய இவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். தேவர்களுக்கு அரசனும் சத்துருவீரர்களைக்கொல்லுகிறவனுமான இந்திரன் பிருஹஸ்பதியினருகிற்சென்று நமஸ்கரித்து அஞ்சலிசெய்துகொண்டு கேட்கத்தொடங்கினன். 'ஓ! பிராம்மணரே! சோம்பலில்லாத நான் விரோதிகளிடம் எவ்விதமிருக்கவேண்டும்? அவர்களை நாசஞ்செய்யாமலே உபாயத்தால் எவ்விதம் அடக்க முடியும்? இரண்டுபடைகளுக்கும் யுத்தமுண்டானால் ஜயமானது பொதுவாயிருக்குமே. பிரகாசிப்பதும் பராக்ரமமுள்ளதுமான லக்ஷ்மியானது எதைச்செய்தால் என்னை விடாமலிருக்கும்?' என்றுகேட்டான். பிறகு அறம்பொருளின்பங்களில் ஸமர்த்தரும் ஸமயத்தில் தோன்றுமறிவுள்ளவரும் ராஜதர்மங்களின் முறைகளை அறிந்தவருமான பிருஹஸ்பதியானவர் இந்திரனை நோக்கிச் சொல்லத் தொடங்கினர்.

'(முல) வில[illegible]ரும்பவு[illegible]லும் விரோதிகளைக் கலகத்தால் அடக்கவிரும்புவதுகூட[illegible]மயென்பதும் கோபமென்பதும் அவிவேகிகளால் அனுஸரிக்கப்பட்டனவாகும். சத்துருவின்வதத்தை விரும்புகிறவன் சத்துருவை ஜாக்ரதையுள்ளவனயிருக்கும்படி செய்யாமலிருக்கவேண்டும். கோபத்தையும் பயத்தையும் ஸந்தோஷத்தையும் தான் தன்னிடத்தில் அடக்கிக்கொண்டு விசுவாஸமுள்ளவன்போல விசுவாசமில்லாதவனய்ச் சத்துருவை அனுசரித்துக்கொண்டிருக்கவேண்டும். எப்பொழுதும் பிரியத்தையே பேசவேண்டும். அப்பிரியத்தைச் சிறிதும் செய்யக்கூடாது. பயனற்றதான வைரங்களிலிருந்து விலகவேண்டும். கோட்சொல்லுதலை விலக்கவேண்டும். இந்திர! பக்ஷிபிடிக்கும் [1]விதம்ஸமென்னும் யந்திரங்கொண்டு பிழைப்

1 கண்ணி.

பவன் முயற்சியுடன் பக்ஷிகளின் த்வனிபோன்ற த்வனியுள்ளவனாகி அப்பக்ஷிகளைத் தன்வசமாக்கிக்கொள்வதுபோல அரசன் முயற்சியுடன் சத்துருக்களைத் தன்வசம்வரும்படிசெய்துகொள்ளவேண்டும்; கொல்லவும்வேண்டும். இந்திரனே! சத்துருக்களை அவமதித்த அரசன் எப்பொழுதும் ஸுகமாகஉறங்கமாட்டான். கெட்டபுத்தியுள்ள அவன் குப்பையில்பற்றிய அக்கினி அவியாமலிருப்பதுபோல விழித்துக்கொண்டேயிருப்பான். ஜயமானது நிச்சயிக்கப்படாமலிருக்கும் பொழுது யுத்தஞ்செய்வதுகூடாது. ஓ! பிரபுவே! பெரியபுத்தியுள்ளவர்களும் ஆலோசனையை அறிந்தவர்களுமான மந்திரிகளுடன் கூடி நன்றாக ஆலோசித்துக்கொண்டு சத்துருவைநம்பிக்கையுள்ளவனாகச்செய்து தன்வசமாக்கிக்கொண்டபின் நன்றாக அடக்கவேண்டும். [1] பிறகு எந்தஸமயத்தில் இவன் விதியிலிருந்துவிலகினவனோ அந்த ஸமயத்தில் இவனை அடிக்கவேண்டும். ஹிதத்தைச்செய்யும் மனிதர்களால் இவன்ஸேனையைத் தூஷிக்கச்செய்யவேண்டும். முதல்இடைகடைகளையறிந்தவர்களை மறைவாக விசாரிக்கவேண்டும். உண்மையாகத்தெரிந்துகொண்டு இவனுடைய ஸேனைகளைப் பேதத்தாலும் சிறிதுதானத்தாலும் கெடுக்கவேண்டும். அதுபோல (விஷம்முதலிய) ஔஷதங்களைச் சேர்ப்பிக்கச்செய்யவேண்டும். பகைவர்களுடன் சேர்க்கையைவிரும்புவதுகூடாது. பகைவர்களை அடக்கவேண்டியதுதான். ஆகிலும், நெடுங்காலமும் எதிர்பார்த்திருக்கவேண்டும். ஓ! இந்திரனே! காலத்தைவிரும்பிக்கொண்டு முயற்சியுடன் ஆராதித்துவரவேண்டும். எவ்விதம் நம்பிக்கையை அடைவானோ அவ்விதம் பிரியமாகப் பேசவேண்டும். உடனே பகைவர்களைக்கொல்லுவதுகூடாது. உறுதியானஜயத்தைப் பார்க்கவேண்டும். இல்லாவிட்டால் நிருப்பாணம் சல்யத்தையுண்டாக்கும்; புதிதானகாயத்தையும் உண்டுபண்ணும். ஸமயம் வந்தவுடன் அடிக்கவும்வேண்டும். தேவர்களுக்கரசனே! சத்ருக்களைக் குறித்து அடிக்கவிருப்பமுள்ள மனிதனுக்கு அந்தக்காலம் திரும்பவும்வாராது. காலத்தைவிரும்பிய எந்தமனிதனை அந்தக்காலம் தாண்டிச்செல்லுகிறதோ காரியத்தைச்செய்யவிருப்பமுள்ள அந்தமனிதன் அக்காலத்தைத்திரும்பவும்அடையமுடியாது. ஸாதுக்களுக்குஇஷ்டமானமுறையை அடைந்து பலத்தை உண்டுபண்ணிக்கொள்ளவேண்டும். காலத்தால் காரியத்தைப் பயன்படச் செய்துகொள்ளவேண்டும். காலத்தையடையாமல் சத்ருவைப்பீடிக்கக்கூடாது. காமத்தையும் கோபத்தையும் அஹங்காரத்தையும் விட்டு அரசன் முயற்சியுடன்

[1] இங்கு அரைச்லோகம் விடப்பட்டது.

எப்பொழுதும் சத்துருக்களின் ஆபத்தைத் தேடவேண்டும். தேவர்களில் உத்தமனான இந்திரனே! மிருதுவாயிருத்தலும் தண்டித்தலும் சோம்பலும் அஜாக்ரதையும் மிகுதியானவஞ்சகமும் ஸாமர்த்யமில்லாதவனை நாசஞ்செய்யும். (மிருதுவாயிருத்தல்முதலிய) இந்நான்கையுந்தள்ளிவிட்டு மாயையையும் தடுத்தபின் ஆலோசனையின்றிப் பகைவர்களைக்கொல்ல வல்லவனாவான். எதுவொருவனாலேயே ரஹஸ்யமாகச் செய்யத்தக்கதோ அதனை அவ்விதமே செய்யவேண்டும். மந்திரிகள் ரஹஸ்யத்தைவெளியிடாமலிருப்பார்கள்; ஒருவருக்கொருவர் அறிவிக்கவுஞ்செய்வார்கள். முடியாததென்றறிந்தபின் மற்றவர்களுடன்சேர்ந்து ஆலோசனையைச் செய்யவேண்டும். (தூரத்திலிருப்பவர்களான) காணாதசத்ருக்களிடம் ஆபிசாரத்தையும் நேரிலுள்ளசத்ருக்களிடம் சதுரங்கத்துடன்கூடியபடையையும் பிரயோகஞ்செய்யவேண்டும். அவ்விதமே முதலில் பேதோபாயத்தையும் ரஹஸ்யமாகப்பிரயோகிக்கவேண்டும். அரசன் ஸமயத்தில் அந்த அந்தச்சத்ருவிடம் அந்தஅந்தக்காலத்துக்குத்தக்கபடி தண்டோபாயத்தைப் பிரயோகஞ்செய்யவேண்டும். மிக்கபலவானானசத்ருவுக்கு ஸமயத்தில் நமஸ்காரத்தையுஞ்செய்யவேண்டும். அஜாக்ரதையாயிருக்கும் இவனுடையவதத்தை அஜாக்ரதையின்றி முயற்சியுடன் தேடவேண்டும். வணக்கத்துடனும்தானத்துடனும் இனிமையானவசனத்துடனும் பேசிக்கொண்டு சத்ருவை அனுஸரித்திருக்கவேண்டும். ஒருஸமயத்திலும் ஸந்தேஹமுண்டாகும்படி செய்யக்கூடாது. சங்கைப்பட்டவர்களின் ஸ்தானங்களை எப்பொழுதுமே விலக்கவேண்டும். அரசன் அவர்களிடம் நம்பிக்கையுள்ளவனாயிருக்கக்கூடாது. (அரசனால்) விலக்கப்பட்டமனிதர்கள் ஜாக்ரதையாகஇருப்பார்கள். தேவர்களினுத்தமனே! (சத்ருக்களுக்குத்தன்னிடம் ஸந்தேகம்வாராமல் அவர்களை ஆச்ரயிப்பதான) இதைவிடச் செய்யக்கடினமானகாரியம் ஒன்றுமில்லை. அமரர்களுக்கதிபனே! நிலையற்றநடையுள்ளவர்களின் ஐசுவரியம்போல நிலையற்றஸ்வபாவமுள்ளவர்களின் நடையும் நிலையற்றதென்று சொல்லப்படுகிறது. மித்ரனையும் அமித்ரனையும் கவனியாமல் உபாயத்தைஅடைந்து முயற்சிக்கவேண்டும். சாந்தனாயிருப்பவனை அவமதிப்பார்கள். கடுமையாயிருப்பவனிடம் உலகம் நடுக்கமடையும். நீ கொடியனாகவுமிராதே; மிருதுவாகவுமிராதே; கடோரனாகவுமிரு; மிருதுவாகவுமிரு. எல்லாவிடத்திலும் நிறைந்தஜலமுள்ளதும் வேகமுள்ளதுமான பிரவாகத்தில் கரைஉடைந்துபோமென்றபயம் எப்பொழுதும் உண்டாவதுபோல அஜாக்ரதையாயிருப்பவனு

க்கு ராஜ்யமும் அவ்விதமேஇருக்கும். ஒரேஸமயத்தில் பலபகைவர்களைப்பிடிப்பது கூடாது. ஓ! புரந்தர! இவர்களில் ஒவ்வொருவனை ஸாமத்தாலும் தானத்தாலும் பேதத்தாலும்தண்டத்தாலும்நன்றாகக் கசக்கியபின் மிச்சமுள்ளவர்களிடம் ஸாமர்த்யம்போலச்செய்யவேண்டும். புத்தியுள்ளவனும் பண்டிதனுமாயிருப்பவன் சக்தியுள்ளவனாயிருந்தாலும் யாவர்களையும் எதிர்த்துச்செல்வது கூடாது. எந்தக் காலத்தில் குதிரையும் யானையும் தேர்களும்சூழ்ந்ததும் காலாட்களும் யந்திரங்களும்நிறைந்ததும் பக்தியுள்ளதும் ஆறு அங்கங்களுள்ளதுமான பெரியஸேனை இருக்கிறதோ, எப்பொழுது எதிர்ப்பதால் பலவிதமேன்மையுண்டாகுமென்று நினைக்கிறானோ அப்பொழுது விசாரியாமல் மறைவின்றி வெளிவந்து திருடர்களான சத்துருக்களை அடிக்கலாம். சத்ருக்களிடத்தில் ஸாமோபாயம் சிறந்ததன்று; ரஹஸ்யமான தண்டோபாயம் சிறந்ததாகும். மிருதுவாயிருப்பது சிறந்ததன்று. எப்பொழுதும் (யுத்தத்திற்கு) யாத்திரைசெய்வதும் சிறந்ததன்று. (அதில்நேரும்) தான்யங்களின்நாசமும் விஷமுதலியவற்றைச்சேர்த்துவைப்பதும் அடிக்கடி அமாத்யன்முதலிய பிரகிருதியைப்பற்றியவிசாரமும் இல்லாமலிருக்கும். (ஆகையால்) பலவிதமான மாயைகளையும் ஒருவரையொருவர் எதிர்க்கும்படி செய்வதையும் [1] கபடமானகொலையையும் செய்விக்கவேண்டும். தன்செய்கையால் கீர்த்திக்குக் குறைவில்லாமலிருக்கச்செய்யவேண்டும். ஆப்தர்களான மனிதர்களைக்கொண்டு பட்டணங்களிலும் ராஜ்யங்களிலுமுள்ள (சத்துருக்களின்) அதிகாரிகளை உபசரிக்கும்படி செய்யவேண்டும். பலாஸுரனையும் விருத்திராஸுரனையும் கொன்றவனே! முன்காலத்திலும் விதிக்கப்பட்ட இந்தநீதியைப் பட்டணங்களில் விதிப்படி செலுத்தினவர்களான அரசர்கள் இவர்களை அனுசரித்துப் பட்டணங்களிலுள்ள எல்லாப்போகங்களையும் ஜயித்திருக்கிறார்கள். (ஆப்தர்களை) அவர்களுடையனவானபொருள்களையும் போகங்களையும் விலக்கிவிட்டு ரகஸ்யமாகப்பொருள்களைக்கொடுத்து, 'தம்தோஷங்களால் துஷ்டர்கள் விலகினார்கள்' என்றுசொல்லும்படி செய்துவிட்டுச் சத்துருக்களின் பட்டணங்களிலும் ராஜ்யங்களிலும் சேர்த்துவைக்கவேண்டும். அவ்விதமே சாஸ்திரங்களை அறிந்தவர்களும் நல்லஅலங்காரமுள்ளவர்களும் சாஸ்திரவிதிக்குத்தக்க அடையாளமுள்ளவர்களும் நல்லசிக்ஷையுள்ளவர்களும் பாஷ்யத்தைச்சொல்வதில் ஸமர்த்தர்களுமான மற்றவர்களைக்கொண்டு சத்துருக்களைக் கொல்லத்தக்க

---

1 இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது.

தேவதையை ஆராதிக்கச்செய்யவேண்டும்" என்றுசொன்னார். 'இந்திரன், "பிராம்மணர்களில் மிக்கஉத்தமரே! துஷ்டனுக்கு என்ன அடையாளங்களிருக்கின்றன? அவனை எவ்விதம் அறியக்கூடும்? இதனைக் கேட்கும்எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்று கேட்க, பிருஹஸ்பதி சொல்லுகிறார். "பக்கத்தில் குற்றங்களைச் சொல்லுவான்; நற்குணங்களில் அஸூயைப்படுவான்; பிறர்களால் புகழப்படும்பொழுது முகத்தைத்திருப்பிக்கொண்டு பேசாமலிருப்பான்; காரணமில்லாமல் பேசாமலிருப்பதிலும் தெரிந்துகொள்ளவேண்டும்; பெருமூச்சையும் உதட்டைக்கடிப்பதையும் தலையை அசைப்பதையும் அடிக்கடி நெருங்கியிருத்தலையும் செய்வான்; ஸம்பந்தமில்லாதவனைப் போலப் பேசுவான்; காணாதவனைப்போல வேறுபாட்டையடைவான்; கண்டாலும் பேசமாட்டான்; வேறாகவந்து புசிப்பான். இஃது இப்பொழுது விதிப்படியுள்ள அடையாளமன்று. இருப்பதிலும் படுப்பதிலும் போவதிலும் விசேஷமான எண்ணங்களை அறியவேண்டும். துன்பமுள்ளஸமயத்தில் துன்பமும் பிரியமுள்ள ஸமயத்தில் பிரீதியுமாகிய இவை மித்திரர்களின்லக்ஷணமாகும். இதற்கு வேறானது எதுவோ அதைச் சத்துருக்களின்லக்ஷணமென்றே அறியவேண்டும். தேவர்களுக்கதிபனே! இவைகளைக் கூறியபடி அறிந்துகொள். மிக்க துஷ்டர்களான மனிதர்களின் ஸ்வபாவமானது மிக்க பலமுள்ளது. தேவர்களில் மிகச்சிறந்தவனே! துஷ்டர்களை அறிவிக்கும் லக்ஷணம் இவ்விதம் உனக்கு உபதேசிக்கப்பட்டது. விண்ணவர் வேந்தனே! சாஸ்திரத்தின் உண்மைப்பொருளை உள்ளபடி அறிந்துகொள்" என்று சொன்னார். பகைவர்களைக்கொல்லுவதில் முயற்சியுள்ள அந்த இந்திரன் பிருஹஸ்பதியின் அவ்வசனத்தைக்கேட்டு உண்மையாக அவ்விதமேசெய்தான். சத்துருக்களைக்கொல்லும் புரந்தரன் ஜயத்திற்காகக் காலத்தில்ஸஞ்சாரஞ்செய்தான். சத்துருக்களைத் தன்வசமாக்கியுங்கொண்டான்" என்றுசொன்னார்.

---

## நூற்றுநான்காவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(ராஜ்யமுதலியவற்றையிழந்தவனும் தர்மபுத்தியுள்ளவனுமான அரசனுடைய ஒழுக்கமுதலியவற்றைப்பற்றி க்ஷேமதர்சிக்கும் காலகவ்ருக்ஷீயருக்கும் நடந்தஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "அமாத்தியர்களால் துன்பப்படுத்தப்பட்டவனும் பொக்கசத்திலிருந்தும் தண்டநீதியிலிருந்தும் நழுவினவனும் தர்மபுத்தியுள்ளவனுமான அரசன் பொருள்கிடையாதிருக்கையில் ஸுகத்

விருப்பமுள்ளவனுல் எவ்விதமிருக்கக்கடவான்?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"யுதிஷ்டிர! இவ்விஷயத்தில் க்ஷேமதர்சியைப்பற்றிய இந்த இதிஹாஸம் கூறப்படுகிறது. அதனை நான் உனக்குச் சொல்லுகிறேன். அதைத்தெரிந்துகொள். முன்னொருகாலத்தில் பலங்குறைந்தவனுன க்ஷேமதர்சியென்னும் ராஜகுமாரன் காலகவ்ருக்ஷீயனென்னும் முனிவரிடம் வந்தானென்று நமக்குக்கேள்வியுண்டு. அவன் அவரைநமஸ்கரித்து, "மிகவும்பூஜ்யரான பிராம்மணரே! கொடுமையான ஆபத்தையடைந்தவனும் பொருளில் விருப்பமுள்ளவனும் அடிக்கடிமுயற்சிப்பவனுமான என்போன்ற புருஷன் ராஜ்யத்தை அடையாமலிருக்கும்போது மரணத்தையும் தீனத்தனத்தையும் பிறரையடுப்பதையும் இகழ்ச்சியான நடையையுமல்லாமல் வேறுஎன்ன செய்யவேண்டும்? அதனை எனக்குச்சொல்லவேண்டும். மனத்திலுள்ளதும் மற்றச்சரீரத்திலுள்ளதுமான வியாதியால் துன்பப்படும்மனிதனுக்குப் பலகல்விகளுள்ளவரும் நல்லபுத்தியுள்ளவருமான உம்மைப்போன்றவர் ரக்ஷகராயிருக்கவேண்டும். மனிதன் விஷயபோகங்களையடக்கி வைராக்கியமடைந்து பிரீதியையும் சோகத்தையும் விட்டு ஞானமென்னும்பொருளையடைந்து ஸுகமாகச்செழிப்பான். எவர்களுக்கு ஸுகமானது பொருளை ஆச்ரயித்திருக்கிறதோ அவர்களைப்பற்றி நான் துக்கிக்கிறேன். எனக்கோ பலபொருள்கள் கனவில் அடையப்பட்டவைகள்போல நாசமடைந்தன. எவர்கள் பெருத்த திரவியங்களைவிலக்குகிறார்களோ அவர்கள் செய்ய அரிதானகாரியத்தைச் செய்தவர்களாகிறார்கள். ஆச்சரியம்! நாங்களோ இல்லாத இப்பொருள்களையும் விடச்சக்தியற்றவர்களாயிருக்கிறோம். ஓ! பிராம்மணரே! இவ்வித அவஸ்தையை அடைந்தவனும் தீனனும் ஸம்பத்தையிழந்தவனும் துன்பமுள்ளவனுமான எனக்கு இங்கு வேறு எந்த ஸுகமுள்ளது? அதனை உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்டான்.

அறிவுள்ளவனும் கோஸலதேசத்தரசனுமான ராஜகுமாரனால் இவ்விதம் வினவப்பட்டவரும் பெரியதேஜஸுள்ளவருமான காலகவ்ருக்ஷீயனென்னும்முனிவர், "முந்தியே அறிவுள்ளஉனக்கு, 'நான்' 'என்னுடையது' என்னும் இவையாவுமே நிலைத்தனவல்லவென்கிற இந்தஅறிவு இருக்கவேண்டும். எந்த வஸ்துவை இருக்கிறதென்று நினைக்கிறாயோ அதெல்லாம்இல்லையென்றுதெரிந்துகொள். இங்ஙனம் அறிந்தவன் கஷ்டமான ஆபத்தைஅடைந்தாலும் துக்கப்படமாட்டான். சென்றதும் வருவதும் நிலையற்றவையென்பது நிச்சயம், நீ

இவ்விதம் அறியவேண்டியதை அறிவாயானால் துன்பங்களிலிருந்து விடப்படுவாய். முந்தியவைகளும் அதற்குமுன்னுள்ளவைகளும் வருவனவுமானமுயற்சிகளும் மற்றஉன்னுடையயாவும் இல்லையென்றே தெரிந்துகொள்ளவேண்டும். அதையறிந்தபின் எவன் துன்பப்படுவான்? இவ்வுலகம் இருந்தும் இல்லாததாகும்; இல்லாமலிருந்தும் இருப்பதாகும். சோகப்படுவதில்பயனில்லை. [1]அவ்விதமனிதன் எப்படித் துன்பப்படக்கூடும்? அரசனே! இப்பொழுது உன்னுடைய தந்தை எங்கே? உன்னுடைய பாட்டனெங்கே? நீ அவர்களை இப்பொழுது பார்க்கவில்லை. அவர்களும் உன்னைப்பார்க்கவில்லை. சரீரம் நிலையற்றிருப்பதைப்பார்க்கும் நீ அவர்களைப்பற்றி ஏன் துக்கப்படுகிறாய்? புத்தியாலேயே ஆலோசித்துப்பார். நிலைமையாயிருப்பது ஒன்றுமில்லை. அரசனே! நானும் நீயும் உன்னுடைய நண்பர்களும் பகைவர்களும் அவசியம் இல்லாமல்போவோம். யாவும்இல்லாதனவாகும். எல்லாமனிதர்களும் நூறுவயதிற்குமுந்தியே இருபது பிராயத்திலும் முப்பதுபிராயத்திலும் மரிப்பார்கள். மனிதன் பெருஞ்செல்வத்திலிருந்துவிடுபடாதவனுயிருந்தாலும், அதை, 'இஃதுஎன்னுடையதன்று' என்றுநினைத்துத் தனக்குப்பிரியத்தைச் செய்துகொள்ள வேண்டும். வரப்போகிறதை,'என்னுடையதன்று' என்றுஅறியவேண்டும். சென்றதை, 'என்னுடையதன்று' என்றுஅறியவேண்டும். தெய்வம் மிகவும்பலமுள்ளதென்றுஎண்ணுமவர்கள் பண்டிதர்கள். அதனை ஸாதுக்கள் இயல்பென்று சொல்லுகிறார்கள். பொருளில்லாதவர்களும் பிழைக்கிறார்கள். அறிவும் பராக்ரமமும் பொருந்தியவர்களும் உனக்குச் சரியானவர்களும் மேலானவர்களுமான ஜனங்கள் ராஜ்யத்தை ஆளுகிறார்கள். அவர்கள் உன்னைப்போலச் சோகப்படுகிறார்களில்லை. நீ புத்தியிலும் பௌருஷத்திலும் அந்த மனிதர்களுக்கு மேலானவனாகவாவது ஒப்பானவனாகவாவது இருக்கவில்லையா? ஆகையால், நீயும்சோகப்படாதே" என்று மறுமொழிகூறினார்.

அரசன், "ஓ! பிராம்மணரே! அந்தராஜ்யமுழுமையும் முயற்சியின்றியே கிடைத்திருந்ததாக நினைக்கிறேன். அந்தராஜ்யம்யாவுமே பெரிதானகாலத்தால் அபகரிக்கப்பட்டது. தபோதனரே! கிடைத்தது கொண்டு பிழைப்பவனாயிருந்தாலும் பிரவாகத்தால் அபகரிக்கப்பட்டவன்போல அந்தராஜ்யம் அபகரிக்கப்பட்டதன்பயன் இச்சோகமென்று அறிகிறேன்" என்றுசொன்னான். முனிவர், "கோஸல

1 'ஆகையால், எவ்விதத்திலும் துக்கப்படக்கூடாது' என்பதுவேறு பாடம்.

தேசத்தரசனே! உண்மையைநிச்சயஞ்செய்துகொண்டு, வருவதை யும் சென்றதையும்பற்றிச் சோகப்படாமலிருக்கவேண்டும். எல்லா விஷயங்களிலும் அப்படியேயிரு. அடையத்தக்கவைகளும் அடை யத்தகாதவைகளுமான பொருள்களை எப்பொழுதும் விரும்பாமல் எதிரிலுள்ளவைகளை அனுபவித்துக்கொண்டு வருபவைகளைப்பற்றி நீசோகப்படவேண்டாம். கௌஸல்ய! கிடைத்தபடியுள்ள யுக்தமான பொருள்களைக்கொண்டு சந்தோஷமுள்ளவனாயிரு. சுத்தமானஸ்வ பாவமுள்ளவனாயிருந்தால் செல்வத்தையிழந்ததற்காக நீசோகப்பட மாட்டாய். கெட்டபுத்தியுள்ளமனிதன் முதலில் அடைந்தபோகங் கள்சென்றதும் போகங்களையிழந்ததற்காகப் பிரம்மாவை எப்பொழு தும் நிந்திக்கிறான். பொருளையடைந்தவனாயிருந்தாலும் ஸந்தோஷப் படுகிறதில்லை. ஸம்பத்துள்ள மிலேச்சர்முதலிய நீசஜனங்களையும் சிறந்தவர்களாக நினைக்கிறான். இந்தக்காரணத்தால் இந்தத்துக்கம் திரும்பவும் தொடர்ந்துநிற்கிறது. அரசனே! ஈர்ஷையும் அபிமான மும் நிரம்பியவர்களும் தாமேபுருஷரென்று நினைக்கிறவர்களும் அவ் விதமிருப்பார்கள். அறிவுள்ள கோஸலதேசத்தரசனே! நீ அவ்விதம் மாத்ஸர்யமில்லாதவனாயிருக்கிறாயா? உன்னிடத்தில் ஸம்பத்தில்லாம லிருந்தாலும் மற்றவர்களின் ஸம்பத்தைக்குறித்துப் பொறுமையுட னிரு. பொறுமையில்லாதமனிதர்கள் சத்துருவினிடத்திலிருக்கும் ஸம்பத்தையும் அனுபவிப்பார்கள். உலகத்தைப்பகைப்பவனிடம் ஸம் பத்திருந்தாலும் விலகிவிடும். தர்மத்தைச்செய்கிறவர்களும் தியாக தர்மத்தையறிந்தவர்களும் தீரர்களுமான மனிதர்கள் ஸம்பத்தையும் பிள்ளைபோன்முதலியவர்களையும் தாமேவிடுகிறார்கள். ஸ்வாயம்புவ குலத்திலுதித்தவனும் பாக்கியமுள்ளவனுமான பரதனால் பலரத்னங் கள்நிறைந்த பெருத்தராஜ்யம் விடப்பட்டதென்று கேள்வி. அப்படி யே மற்ற அரசர்களாலும் பெரியபாக்யமுள்ளராஜ்யமானது விடப்பட் டிருக்கிறது. அவ்வரசர்களனைவர்களும் ராஜ்யங்களைவிட்டு ஆரண்யம் சென்று அங்குள்ளகனிகளைப் புஜித்துக்கொண்டு தவத்தின்கரையை யும் துக்கத்தின்முடிவையும் அடைந்தார்கள். அவ்விதம் மற்றுஞ் சிலர் பலவற்றைநிலையற்றனவாகக்கண்டு விடாமுயற்சியென்னும் ஸா தனத்தாலும் கிடைப்பதுமிகஅரிதென்று நினைத்து விலக்கிவிடுகிறார் கள். நீயோ சிறந்த அறிவுள்ளவனாயிருந்தும் விரும்பத்தகாதனவும் பிறனையடுத்திருப்பனவும் நிலையற்றனவுமான பொருள்களை விரும்பிக் கொண்டு தீனமாகப் பரிதபிக்கிறாய். என்னால்சொல்லப்பட்டபுத்தியை நன்றாக அறிந்து நீயே இவைகளைவிலக்கிவிடு. அனர்த்தங்கள் அர்த்

தரூபமாயும் அர்த்தங்கள் அனர்த்தரூபமாயும் தோன்றுகின்றன. சிலருக்குப் பொருளின்பொருட்டே பொருளின்நாசங்கள் உண்டாகின்றன. [1]மற்றச்சிலர் அந்தச்சுகத்தை நிலையற்றதாக நினைத்து ஸம்பத்தைவிரும்புகிறார்களில்லை. ஸம்பத்தால் ஸந்தோஷமடைகிற ஒருவன் வேறுச்ரேயஸ்உண்டென்று நினைக்கிறானில்லை. அப்படி முயற்சித்து வரும் அவனுடையமுயற்சியும் நாசமடைகிறது. ஓ! கௌஸல்ய! கஷ்டத்தால் அடையப்பட்ட அவனிஷ்டம் எப்பொழுது நசிக்கிறதோ அப்பொழுது பங்கமடைந்தமுயற்சியுள்ள அம்மனிதன் பொருளிலிருந்து வெறுப்படைகிறான். அந்த ஸம்பத்தை நிலையற்றதென்றறிந்தபின் எவன் ஸம்பத்தையடைய விரும்புவான்? நற்குலத்திற்பிறந்த சிலமனிதர்கள் மேலுலகில் ஸுகத்தைவிரும்பித் தர்மத்தையடைகிறார்கள்; இவ்வுலகவாழ்க்கையினின்றும் வெறுப்பையுமடைகிறார்கள். பொருளில்பேராசைபற்றிய சிலமனிதர்கள் உயிரையும் விடுகிறார்கள். அந்தமனிதர்கள் ஜீவித்திருப்பதின்பயன் தனத்தைத் தவிர வேறில்லையென்றுநினைக்கிறார்கள். இவர்களுடைய தீனத்தன்மையைப் பார். இவர்களுடைய புத்தியில்லாத்தன்மையையும் பார். ஜீவித்திருப்பது நிலையற்றதாயிருக்க அவிவேகத்தால் பொருளில் பேராசையடைந்திருக்கிறார்கள். கூட்டத்தின்முடிவு நசிப்பதாயிருத்தலாலும் ஜீவிப்பதின்முடிவு மரிப்பதாயிருத்தலாலும் சேர்க்கையின் முடிவு விலகுவதாயிருத்தலாலும் எவன் திரவியத்தில் மனத்தைச் செலுத்துவான்? அரசனே! புருஷனானவன் பொருளையோ பொருளானது புருஷனையோ அவச்யம்விடுகிறது நிச்சயம். அதையறிந்த எவன் தாபமடைவான்? [2] மற்றவர்களுக்கும் மித்திரர்களும் பொருள்களும் நாசமடைகின்றன. மனிதர்களுக்குத் தம்முடையபுத்தியால் உண்டாகும் ஸமானமான ஆபத்தைப்பார். ஆகையால், இந்திரியங்களையும் மனத்தையும் வாக்கையும் அடக்கிக்கொள். பலஹீனர்களும் விரோதிகளும்கூட நிகழும் இப்பொருள்களைக் காணுவதைத் தடுப்பவரில்லை. விலகியிருக்கும் பொருள்களைக்காணுவது ஒருவருக்கும் முடியாதென்று தெரிந்திருக்க அறிவில் திருப்தியுள்ளவனும் சூரனுமான உன்போன்றவன் சோகப்படத்தக்கவனல்லன். சிறியதைவிரும்புகிறவனும் சாபல்யமற்றவனும் சாந்தமாகஇருப்பவனும் அடக்கமுள்ளவனும் நல்லநிலைமையிலிருப்பவனும் பிரம்மசரியம்பொருந்தியவனு

1 'ஒருவன் ஸம்பத்தாலுண்டாகும் ஸுகத்தை அழிவற்றதாகநினைத்து ஸம்பத்தை அடையவிரும்புகிறான்' என்பதுவேறுபாடம்.

2 இங்கு அதிகபாடமான ஒருசுலோகம் விடப்பட்டது.

மான உன்போன்றவன் அவிவேகத்தையடையத் தக்கவனல்லன். கெட்டமனிதர்களுக்கு யோக்யமானதும் துன்பமுள்ளதும் மிக்க பாவமுள்ளதும் கொடுமையான விருத்தியுள்ளதும் கெட்டமனிதர்களைச்சேர்ந்ததுமான ஓடெடுக்கும்ஜீவனத்தை நீவிரும்பத்தக்கவனே யல்லன். வாக்கையும் மனத்தையும் அடக்கிக்கொண்டு எல்லாப்பிராணிகளிடத்திலும் தயையுடன் பெரியகாட்டில் தனியே கிழங்குகனிகளை ஆகாரஞ்செய்துகொண்டாவது ஸுகமாயிரு. ஏருகத்தடிபோன்ற தந்தமுள்ள யானையுடன்கூட ஆரண்யத்தில் தனியே ஸுகித்திருப்பதும் சிறிதாலும் ஸந்தோஷப்படுவதும் பண்டிதனுக்குயோக்யமாகும். நன்றாகக்கலங்கின பெரியமடுவானது தானேதெளிவடைவது போல நல்லபுத்தியுள்ளமனிதன் தன்னாலேயே தெளிவடைவான். ஓ! அரசனே! மந்திரிமுதலியவர்களையிழந்து இவ்விதம் துன்பத்தையடைந்தமனிதனுக்கு ஸம்பத்துக்கிடைக்காமல் தெய்வமும்விபரீதமாகவிருக்கும்பொழுது இவ்விதமிருப்பதை நான் ஸுகமென்று அறிகிறேன். நீ எதை ஶ்ரேயஸென்று நினைக்கிறாய்?

## நூற்றைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(க்ஷேமதர்சிக்கும் காலகவ்ருக்ஷீயருக்கும் ஸம்பாஷணைத்தொடர்ச்சியில் சத்துருக்களைஜயிக்கும் கபடோபாயங்கள்.)

க்ஷத்திரியனே! அல்லது உன்னிடத்தில் சிறிதுபராக்ரமமிருப்பதாகக்காண்பாயாகில் ராஜ்யத்தை அடையத்தக்கநீதியை நான் உனக்குச்சொல்லுகிறேன். அந்தநீதியை அநுஷ்டானஞ்செய்யவல்லவனாயிருப்பாயாகில் காரியத்தையுஞ் செய்வாய்; உண்மையாக உனக்குச்சொல்லும் யாவற்றையும் மிச்சமின்றிக்கேள். காரியத்தைச்செய்வாயாகில் ராஜ்யத்தையோ ராஜ்யத்திற்குரிய ஆலோசனையையோ அல்லது திரும்பவும்பெரியசிறப்புக்களையோ பெரியபொருள்களையோ (எவற்றையும்) அடைவாய். அரசனே! இதில்விருப்பமுண்டானால் திரும்பவும் சொல்லு. உனக்கு உபதேசிக்கிறேன்" என்றுசொன்னார். அரசன், "பூஜ்யரான நீர் நீதியைச்சொல்லும்; பராக்ரமமுள்ளவனாயிருக்கிறேன். பூஜ்யராயிருப்பவரே! உபதேசம் செய்யும். இப்பொழுது உம்முடன்சேர்க்கையானது எனக்குப் ப்ரயோஜனமுள்ளதாகவேயிருக்கவேண்டும்" என்றுகூறினன்.

முனிவர், "நீ மானத்தையும் டம்பத்தையும் கோபத்தையும் ஸந்தோஷத்தையும் அப்படியே பயத்தையும் நீக்கிவிட்டு நமஸ் கரித்து அஞ்சலிசெய்துகொண்டு சத்துருவுக்குப் பணிவிடைசெய். உத்தமமானபரிசுத்தியாலும் கர்மத்தாலும் அவனை நம்பிக்கையுள்ள வனாகச்செய். உண்மையானபராக்ரமமுள்ள வைதேகன் உனக்குப் பொருளைக்கொடுக்கத்தக்கவன். எல்லாப்பிராணிகளிடத்திலும் நம் பிக்கையையும் [1]ஆதரவையும் அடைவாய். பிறகு உத்ஸாஹமுள்ள வர்களும் வ்யஸனமில்லாதவர்களும் பரிசுத்தர்களுமான ஸஹாயமனி தர்களை அடைவாய். இந்திரியங்களைவென்று மனத்தை அடக்கி நீதி சாஸ்திரத்திலிருப்பவன் தன்னையும் மேலாக்கிக்கொள்வான். பிரஜை களையும் பிரீதியுள்ளவர்களாகச்செய்வான். தைரியமுள்ளவனும் ஸம் பத்துள்ளவனுமான அந்தவிதேகபதியாலேயே நீ பூஜிக்கப்பெற்று எல்லாப்பிராணிகளிடத்திலும் நம்பிக்கையையும் பெரியஆதரவையும் பெறுவாய். பிறகு ஸ்நேஹிதர்களின் பலத்தையடைந்து நன்றாக மந்திராலோசனைசெய்து பிரியவசனத்தால் வேற்றுமைப்படுத்தி வில் வக்காயினால் வில்வக்காயை அடிப்பதுபோலச் சத்துருக்களை நாசஞ் செய்; பிறருடன் ஸங்கேதஞ்செய்துகொண்டு இவனுடையபடையை யாவது கொல்லும்படிசெய். சத்துரு தானேநசிக்கும்படி அடைய முடியாத நல்லவஸ்துக்கள், ஸ்திரீகள், போர்வைகள், படுக்கைகள், ஆஸனங்கள், வாஹனங்கள், பெரியவிலைபெற்றவீடுகள், பக்ஷிகள், மிருகக்கூட்டங்கள், ரஸங்கள், கந்தங்கள், கனிகள் இவைகளில்பற்று ள்ளவனாக அவனைச்செய். இவ்விதம் பற்றுள்ளவனாயிருந்தால் அவ னைத்தடுக்கவேண்டியவிஷயத்தில் தடுக்கவும் வேண்டும். உபேக்ஷை யாகவிருந்தால்தான் சத்துருவென்பது வெளியாகும். ராஜச்ரேஷ் டனே! எப்பொழுதும் ஹிதத்தையும் நல்லநீதியையும்விரும்பும் அறி வுள்ளமனிதன் எந்தச்சமயத்திலும் சத்துருவென்பதை வெளியிடக் கூடாது. சத்துருவின்தேசத்தில் சத்துருவின்பட்டணத்தில் மித் திரனென்று நம்பத்தக்கவனாய் வஸித்துக்கொண்டிரு. பயனில்லாத [2]நாய்களுக்கும் மான்களுக்கும் காகங்களுக்குமுள்ள உபாயங்களு டன் மித்திரர்களுக்குரிய தர்மத்தைச்செய்துகொண்டிரு. செய்யக் கடினமான பெரிய முயற்சிகளையும் [3]நதிபோலத் தாண்டத்தகாத

---

1 'விதேகராஜனுக்குக் கைபோன்றஸ்திதியை' என்பதுபழையவுரை.

2 எப்பொழுதும்ஜாக்ரதையாயிருப்பது நாயின் தன்மை. பயந்துநடுங்கு வது மானின் தன்மை. பிறரின் இங்கிதங்களை அறிவது காகத்தின்தன்மை.

3 இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது.

விரோதங்களையும் இவனுக்குஉண்டாகும்படிசெய். பலசாலிகளுடன் விரோதமுண்டாகும்படிசெய். மிகச்சிறந்ததோட்டங்களும் படுக்கைகளும் ஆஸனங்களும்போன்ற பிரியமாயனுபவிக்கத்தக்கபொருள்களின்வழியாய் இவனுடையகோசத்தை அழியும்படிசெய். இவன் பொருட்டு யாகத்தையும் தானத்தையும் புகழ்ந்துபேசு. பிராம்மணர்களை அநுஸரிக்கும்படிசெய். அவர்கள் உனக்குப்பிரியத்தைச் செய்வார்கள். செந்நாய்கள்போல அவன் [1]கோசத்தை அறுத்துவிடுவார்கள். புண்யசீலனான மனிதன் ஸந்தேகமின்றி உத்தமகதியையடைவான். ஸ்வர்க்கலோகத்தில் மிக்கபுண்யமும் நிலைத்ததுமானபதம் பெறுவான். ஓ! கௌஸல்ய! தர்மம் அதர்மம்இரண்டிலும் ஏவப்பட்டவனுக்குக் கோசத்திற்கழிவுண்டானதும் அவன்சத்துருக்களின்வசத்தை அடைவான். ஸ்வர்க்கத்திற்கும் ஜயமுதலியவற்றிற்கும் மூலமானகோசத்தை அழிக்கவேண்டும். அதுகொண்டு சத்துருக்கள் ஸந்தோஷிப்பார்கள். இவன்பொருட்டுப் பராக்ரமமாகிய மானுஷகர்மத்தைக் கொண்டாடாதே. ஜயமுதலிய அதிர்ஷ்டமாகிய தெய்வத்தை இவனிடம்விரித்துக்கொண்டாடு. தெய்வத்தைப்பெரிதாகக்கொண்டவன் ஸந்தேகமின்றிச் சீக்கிரமே நாசமடைவான். இவனிடமிருந்து பொருள்யாவும் விலகும்படி இவனை விசுவஜித்தென்னும் யாகத்தைச்செய்யும்படி செய். பிறகு மஹாஜனத்தைத் துன்பப்படுத்திப் பொருள்ஸித்தியாமல் செல்வான். தியாகதர்மந்தெரிந்தபுண்யசாலியான ஒருவனை இவனிடம் ஸ்தோத்திரம்செய். ஒருஸமயம் தியாகத்தைச்செய்யவும் விரும்புவான். க்ஷேமமாயிருக்கவேண்டிச் செல்லுவான். எல்லாச்சத்துருக்களையும் நசிக்கச்செய்வதும் பழுதில்லாததுமான ஔஷதங்களின் சேர்க்கையாலும் கபடவழிகளாலும் சத்ருவின் யானைகளையும் குதிரைகளையும் மனிதர்களையும் கொல்லும்படிசெய். ராஜகுமாரனே! தைரியமுள்ளவன் நன்றாக ஆலோசிக்கப்பட்ட இவைகளும் மற்றும்பலவுமான கபடவழிகளைச் செய்யக்கூடியவன்; தைரியமில்லாதவனால் செய்யமுடியாது" என்று சொன்னார்.

[1] 'அவனைத்தின்றுவிடுவார்கள்' என்பது வேறுபாடம்.

## நூற்றுருவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(க்ஷேமதர்சிக்கும் காலகவ்ருக்ஷீயருக்கும் ஸம்பாஷணைத் தொடர்ச்சியும், காலகவ்ருக்ஷீயரால் க்ஷேமதர்சி விதேஹராஜனிடம் நண்புபூண்டு மேன்மைபெற்றதும்.)

அரசன், "ஓ! பிராம்மணரே! கபடத்தாலும் டம்பத்தாலும் நான் ஜீவித்திருக்கவிரும்பவில்லை. மிக்க அதிகமாயிருந்தாலும் அதர்மத்துடன்கூடியபொருள்களை நான் விரும்பமாட்டேன். பகவானே! முன்னமேயே என்னால் இது விடப்பட்டது. எதில் பாபமென்ற சங்கையில்லையோ, எது முழுமையும் ஹிதமாயிருக்குமோ அப்படிப்பட்டதும் தீங்கற்றதுமான தர்மத்தால் இவ்வுலகில் நான் ஜீவிக்கவிரும்புகிறேன். நான் உங்களால் சொல்லப்பட்டதைச் செய்யவல்லவனல்லன். இஃது எனக்கு யுக்தமன்று" என்றுசொன்னான்.

முனிவர், "ஓ! க்ஷத்திரியனே! இவ்விதம்பேசுவதால் நீ நீதியுள்ளவனாயிருக்கிறாய். ஸ்வபாவத்தாலும் புத்தியாலும் நீதியுள்ள உன்தரிசனம் ஆச்சரியம். நீ, அந்தவிதேகராஜன் ஆகியஉங்களிரண்டு பேர்களுக்குமே ஸஹாயமாயிருக்கும்விஷயத்தில் முயற்சிக்கிறேன். நிலைத்ததும் துன்பமற்றதுமான ஸ்நேஹத்தையாவது உங்களுக்குச் செய்விக்கிறேன். நற்குலத்திற்பிறந்தவனும் கொடுமையில்லாதவனும் பலகல்விகளுள்ளவனும் ராஜ்யத்தைநடத்துவதில் ஸமர்த்தனுமான உன்னைப்போன்றவனை எவன் அமாத்தியனாகச் செய்துகொள்ளமாட்டான்? ஓ! க்ஷத்திரியனே! ராஜ்யத்தைவிட்டு விலகிச்சென்றவனும் அதிகமானதுயரத்தை அடைந்தவனுமான நீ தீங்கில்லாதநடையுடன் ஜீவிக்கவிரும்புகிறாய். அப்பா! உண்மையானசொல்லுள்ள வைதேகன் எனதுவீட்டுக்கு வருவான். பிறகு நான் அவனை ஆஜ்ஞாபிப்பேன். அதை அவன் ஸந்தேஹமின்றிச்செய்வான்" என்றுசொன்னார். பிறகு முனிவர் வைதேஹனை அழைத்து, "ராஜனே! இவன் ராஜகுலத்திற்பிறந்தவன். இவனுடைய அந்தரங்கம் எனக்குத்தெரியும். கண்ணாடிபோலவும் சரத்காலத்திலுள்ள சந்திரன்போலவும் சுத்தமானஸ்வரூபமுள்ளவன். இவனிடத்தில்தோஷத்தைக்காணேன். எல்லாவிதத்தாலும் என்னால் இவன் பரீக்ஷிக்கப்பட்டவன். இவனுடன் உனக்கு ஸ்நேஹமேயிருக்கட்டும். என்னிடத்திலிருப்பதுபோல இவனிடத்திலும் நம்பிக்கையுடனிரு. பகைவரைக் கொல்லுகிறவனே!

அமாத்தியனில்லாமல் ராஜ்யம்ஆளமுடியாது. அமாத்தியன் சுத்தனுகவும் புத்திநிறைந்தவனுகவுமிருக்கவேண்டும். [1]அவ்விரண்டு குணங்களாலுமே இரண்டுஉலகமும் ஸித்திக்கும். அரசனே! ராஜ்யத்தின் பயனைப் பார். தர்மபுத்தியுள்ளவர்களுக்கு உலகில் எவ்விடத்திலும் இதுபோன்றவழி வேறில்லை. இந்தராஜகுமாரன் மஹாத்மாவும் ஸாதுக்களின் வழியையடைந்தவனுமாயிருக்கிறன். [2]தர்மத்தில் முந்திச் செல்லுகிறவனுன இவன் உன்னுல் [3]நன்றாகஅங்கீகரிக்கப்பட்டு நன்றாக ஆதரிக்கப்படுவானுனல் பெரியகூட்டங்களான உன்சத்ருக்களைப் பிடிப்பான். இவன் உன்னைஜயிக்கவிரும்பித் தகப்பன்பாட்டன்வழியாய்வந்தபதத்திலிருந்துகொண்டு யுத்தத்தில் எதிர்த்துப்போர்செய்வானுகில் க்ஷத்திரியனுயிருப்பவனுக்கு அது ஸ்வதர்மம். நீயும் ஜயிக்கவிருப்பத்துடன் நியமமுள்ளவனுயிருந்தால் எதிர்த்துயுத்தஞ் செய்யக்கூடும். ஆகிலும், யுத்தஞ்செய்யாமலே என்னுடைய உத்தரவால் ஹிதத்திலிருந்துகொண்டு இவனை வசப்படுத்திக்கொள். நீ நியாயமில்லாத லோபத்தைத்தள்ளிவிட்டுத் தர்மத்தைக்கவனித்துப்பார். காமத்தாலும் த்ரோஹத்தாலும் நீ ஸ்வதர்மத்தை விடத்தக்கவனல்லன். அப்பா! ஜயம் எப்பொழுதுமேஉண்டாகிறதில்லை. அபஜயமும் எப்பொழுதுமேஉண்டாகிறதில்லை. ஆகையால், ஜயத்தையும் அனுபவிக்க வேண்டும்; அபஜயத்தையும் அனுபவிக்க வேண்டும். ஜயம் அபஜயம்இவ்விரண்டையும் தன்னிடத்திலும்பார்த்துக்கொள்ள வேண்டும். அப்பா! சத்ருக்களை மிச்சமில்லாமல் செய்பவர்களுக்கு மிச்சமில்லாமல்செய்வதிலிருந்தே பயமுண்டு" என்று இந்தவார்த்தையைச்சொன்னர்.

இவ்விதம் சொல்லப்பட்டவைதேகன் பூஜிக்கத்தக்க பிராம்மணச்ரேஷ்டரைப்பூஜித்து மரியாதைசெய்து ஸம்மதித்து, "பிராஜ்ஞர்களில்சிறந்தநீங்கள் எவ்விதம்சொல்லுகிறீர்களோ, பெரியகல்வியைக் கற்றநீங்கள் எவ்விதம்சொல்லுகிறீர்களோ, க்ஷேமத்தைவிரும்பிய நீங்கள் எவ்விதம்சொல்லுகிறீர்களோ அஃது எங்கள்இரண்டுபேர்களுக்குமே யோக்யமானது. எந்தஎந்தவசனத்தைச் சொல்லப்பட்டவனுகிறேனே அதைஅதை அப்படிஅப்படியே செய்கிறேன். இதுவே பெரியக்ஷேமம். இவ்விஷயத்தில் எனக்கு விசாரிக்கவேண்டிய

---

1 இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

2 'தர்மத்தில் முந்திச் செல்லுகின்றஇவனை நீ அங்கீகரியாவிட்டால் இவன் உன்சத்ருக்கூட்டங்களை அடைவான்' என்பது மூலத்தின்பாடம்.

3 இங்கு வேறுபாடங்கொள்ளப்பட்டது.

தில்லை" என்று இந்தவார்த்தையைச் சொன்னன். பிறகு விதேஹ ராஜன் கோஸலராஜனையழைத்து, "அரசர்களில் மிகச்சிறந்தவனே! தர்மத்தாலும் புத்தியாலும் பலத்தாலும் நான் ஜயித்தவனாயிருக்கிறேன். ஆத்மகுணங்களால் நான் உன்னால்ஜயிக்கப்பட்டவனாயிருக்கிறேன். நீ உன்னை அவமதித்துக்கொள்ளாமல் ஜயமுள்ளவன்போலிரு. உன்புத்தியையும் உன்பௌருஷத்தையும் நான் அவமதிக்கவில்லை. நான் ஜயம்பெற்றேனென்று அவமதிக்கவில்லை. நீ ஜயமுள்ளவன் போலிரு. அரசனே! உள்ளபடி பூஜிக்கப்பெற்று என்வீட்டிலிருந்து உன்வீடுசெல்லலாம்" என்றுசொன்னன். பிறகு அவ்விருவர்களும் காலகவ்ருக்ஷீயனென்னும் பிராம்மணரைப் பூஜித்து நம்பிக்கையுள்ளவர்களாய் வீடுசென்றார்கள். பிறகு விதேஹராஜன் கோஸலராஜனை வேகமாகத் தன்வீட்டுக்கழைத்துக்கொண்டுபோய், பாத்யத்தினாலும் அர்க்கியத்தினாலும் மதுபர்க்கத்தினாலும் பூஜிக்கயோக்கியனான அவனைப் பூஜித்தான்; தன்குமாரியையும் பலவிதரத்தினங்களையும் அவனுக்குக்கொடுத்தான். இஃது அரசர்களுக்குப் பெரியதர்மம். ஜயம் அபஜயம் இவ்விரண்டும் ஸமங்கள்" என்றுசொன்னார்.

---

நூற்றேழாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், கூட்டங்கள்வளருவதுமுதலியவற்றைக்கூறியது.)

யுதிஷ்டிரர், "சத்துருக்களைத்தபிக்கச்செய்கிறவரே! பிராம்மணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் இவர்களின் தர்மநடையும் பொருளும் ஜீவனோபாயங்களும் அவற்றின்பிரயோஜனங்களும் அரசர்களின்நடையும் கோசமும் கோசத்தைப்பெருகச்செய்வதும் ஜயமும் அமாத்தியர்களின்குணங்களும் ஒழுக்கமும் பிரகிருதிகளைப்பெருகச்செய்வதும் ஸந்திவிக்ரகமுதலிய ஆறினுடைய குணங்களின்விதியும் ஸேனைகளின்நீதியும் துஷ்டர்களின்லக்ஷணமும் ஸாதுவின்லக்ஷணமும் ஸமமாயிருப்பவர்கள், கீழானவர்கள், மேலானவர்கள் இவர்களுக்குரியலக்ஷணமும் நடுத்தரத்திலுள்ளவரின்ஸந்தோஷத்திற்காக விருத்தியடைகிறவன் இருக்கவேண்டியமுறையும் குறைவடைந்தவனுக்குரியமரியாதையும் ஜீவனமும் உம்மால் தர்மப்படி எளியதும் உபதேசரூபமுமானகிரந்தத்தால் உபதேசிக்கப்பட்டன. ஓ! பாரதரே! அவ்விதமே ஜயிக்கவிருப்பமுள்ளவனுக்குரிய ஒழுக்

கமும் உம்மால் கூறப்பட்டது. புத்தியுள்ளவர்களிற் சிறந்தவரே! அவ்விதமே கூட்டங்களின்நடையையும் உம்மிடமிருந்து கேட்கவிரும்புகிறேன். ஓ! பாரதரே! கூட்டங்கள் எவ்விதம் வளருகின்றன? எவ்விதம் பேதப்படாமலிருக்கின்றன? சத்ருக்களை எவ்விதம் ஜயிக்கவிரும்புகின்றன? ஸ்நேஹிதர்களை எவ்விதம் அடைகின்றன? பேதத்தைக்காரணமாகக்கொண்டு கூட்டங்களுக்கு நாசமுண்டாவதாகக் காணப்படுகிறது. பலபேர்களுடையமந்திராலோசனை மறைவாயிருப்பது கஷ்டமென்பது என்னெண்ணம். சத்ருக்களைத்தபிக்கச்செய்யும்பாரதரே! இதை நான் முழுமையும்கேட்கவிரும்புகிறேன். அந்தக்கூட்டங்கள் எவ்விதம் வேற்றுமைப்படாமலிருக்குமோ அதையும் எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"பாதர்களில் மிகச்சிறந்தஅரசனே! கூட்டங்களுக்கும் குலங்களுக்கும் அரசர்களுக்கும் அதிகஆசையும் பொறுமையும் விரோதத்தைவ்ருத்திசெய்விப்பவைகளாகும். இவைகளில் ஓர் அரசன் லோபத்தை அடைகிறன், பிறகு கூட்டமானது உடனே பொறுமையை அடைகிறது. பிறகு பொறுமையுடன்கூடியவைகளும் ஒன்றுக்கொன்றனிடம்உண்டான ஒருவிதஎண்ணமுள்ளவைகளுமான அரசும்கூட்டமும் சாரர்கள் மந்திராலோசனை ஸேனை கொடாமலிருப்பது இவைகளாலும் ஸாமதானபேதங்களாலும் அழிவு செலவு பயமாகியஉபாயங்களாலும் ஒன்றையொன்று மேலாடிநிற்கும். அவைகளில் கூட்டங்கள் ஒரேஅபிப்பிராயத்தில் நிலையுள்ளவைகளாய்க் கொடாமையால் பேதப்படும். பேதப்பட்டவைகளும் வேறுமனமுள்ளவைகளுமான கூட்டங்கள்யாவும் பயத்தால் சத்ருக்களின் வசத்தையடையும். பேதமுண்டானல் கூட்டங்கள் நாசமடையும். பேதமடைந்தவைகள் பிறருக்கு எளிதில்ஜயிக்கத்தக்கனவாகும். ஆகையால், கூட்டங்கள் எப்பொழுதும் ஒரேஅபிப்பிராயத்தைத்தொடர்ந்தனவாய் முயற்சிக்கவேண்டும். ஒற்றுமையாலும் பலத்தாலும் பராக்ரமத்தாலும் பொருள்களும் அடையப்படும். ஒற்றுமையானநடையுள்ள அவைகளிடம் வெளியிலுள்ளவர்களும் ஸ்நேஹத்தைச் செய்வார்கள். அறிவில் முதிர்ந்தவர்கள் ஒருவரையொருவர் கேட்கவிருப்பமுள்ளவர்களாயும் வேறானஎண்ணம் விலகினவர்களாயும் எல்லாவிதத்திலும் ஸுகமாய் வளருகிறார்களென்று கூட்டங்களைக் கொண்டாடுகிறார்கள். உத்தமமானகூட்டங்கள் மிகச்சிறந்ததர்மமுள்ளவ்யவகாரங்களைச் சாஸ்திரத்தால் உள்ளபடிகண்டுகொண்டு நிலைக்கச்செய்பவைகளாய் வளர்ச்சி

யடையும். மக்களையும் உடன்பிறந்தார்களையும் ரக்ஷிப்பவைகளும் அவர்களை எப்பொழுதும் அடக்குகிறவைகளும் அடக்கமுள்ளவர்களைச் சேர்த்துக்கொள்ளுகிறவைகளும் உத்தமமுமான கூட்டங்கள் வளர்ச்சியடையும். ஓ! புஜபலமுள்ளவனே! சாரர்களையும்மந்திராலோசனைகளையும்நடத்துவதிலும் கோசங்களைப்பெருகச்செய்வதிலும் விடாமுயற்சியுள்ளவைகளானகூட்டங்கள் எல்லாவிதத்திலும் வளர்ச்சியடையும். அரசனே! அறிவுள்ளவர்களும் பெரியஉத்ஸாஹமுள்ளவர்களும் வேலைகளில்உறுதியான பராக்ரமமுள்ளவர்களுமான சாரர்களைப் பூஜிப்பவைகளும் எப்பொழுதும் முயற்சியுள்ளவைகளுமான கூட்டங்கள் வளர்ச்சியடையும். திரவியமுள்ளவைகளும் சௌர்யமுள்ளவைகளும் ஆயுதமறிந்தவைகளும் சாஸ்திரங்களின்கரைகண்டவைகளுமான அந்தக்கூட்டங்கள் மிக்கமூடர்களை க்ரூரமானதுன்பங்களிலிருந்து மீட்டுவைக்கும். பாரதச்ரேஷ்டனே! கோபமும் வேற்றுமையும் பயமும் தண்டித்தலும் [1]இழுப்பதும் அடக்குதலும் கொலையும் உடனே கூட்டங்களைச் சத்துருவசப்படுத்தும். ஆகையால், அந்தக்கூட்டத்தலைவர்களை முக்கியமாகப் பூஜிக்கவேண்டும். ஓ! அரசனே! உலகநடை பெரும்பாலும் அவர்களதீனமாயிருக்கிறது. சத்துருக்களை இழுப்பவனே! மந்திராலோசனையைக்காப்பாற்றுவதும் சாரரும் தலைமையாயிருக்கிறவர்களிடம்இருக்கவேண்டும். ஓ! பாரத! கூட்டங்கள்யாவும் மந்திராலோசனையைக் கேட்கத்தக்கவைகளல்ல. கூட்டத்தலைவர்கள் ஒன்றுசேர்ந்து கூட்டத்தின்ஹிதத்தை ரஹஸ்யமாகச்செய்யவேண்டும். அவ்விதமின்றி வேறுவிதமாயிருந்தால் கூட்டம் தனியாய்ப்பிரிந்து கலைவதுடன் அதன்பொருள்களும் நாசமடையும். அப்படியே துன்பங்களும் உண்டாகும். அவர்கள் ஒருவருக்கொருவர் வேறுபட்டுத் தம்சக்தியைச்செலுத்துவார்களானால் பண்டிதர்கள் சீக்கிரமாகவே அவர்களுக்கு முக்கியமாகச் சிக்ஷையைச் செய்யவேண்டும். குலங்களிலுண்டானகலகங்களை அக்குலத்தைச் சேர்ந்தபெரியோர்கள் உபேக்ஷைசெய்தால் அவை அக்குலத்திற்கு நாசத்தைச்செய்யும்; அக்குலத்தை வேறுபடவும்செய்யும். உள்ளிலுள்ளபயத்தை ரக்ஷித்துக்கொள்ளவேண்டும். வெளியிலுள்ளபயம் பலமானதன்று. ஓ! அரசனே! உள்ளிலுள்ளபயம் உடனேவேர்களையறுக்கும். காரணமின்றிஉண்டானகோபம்அவிவேகம் இவைகளாலோ ஸ்வபாவத்திலுண்டானலோபத்தாலோ ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளமாட்டார்கள். அஃது அவமானத்தின்லக்ஷணமாகும்.

[1] 'துன்பம்' என்றும்பொருளுண்டு.

ஜாதியாலும் குலத்தாலும் யாவரும் ஸமமாயிருப்பார்கள்; உத்யோகத்தாலும் புத்தியாலும் ரூபத்தாலும் திரவியத்தாலும் ஸமமாயிருக்க மாட்டார்கள். பேதப்படுத்துவதாலும் கொடுப்பதாலும் கூட்டங்களைச் சத்துருக்கள் தம்வசமாக்கிக்கொள்ளுவார்கள். ஆகையால், ஒற்றுமையொன்றையே கூட்டங்களுக்குப் பெரியரக்ஷணமாகச்சொல்லுகிறார்கள்" என்றுசொன்னார்.



நூற்றெட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், மாதா பிதா குருமுதலியோரின் சிறப்பைக்கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! இந்தத் தர்மவழியானது பெரிதும் பலகிளைகளுள்ளதுமாயிருக்கிறது. இதிலுள்ள தர்மங்களுள் எது அவஶ்யம் அநுஷ்டிக்கத்தக்கதென்பது உங்களுடைய அபிப்பிராயம்? எந்தக்காரியம் எல்லாப்பிராணிகளுக்கும் மிகச்சிறந்ததென்பது உங்களுடைய அபிப்பிராயம்? நான் இங்கும் இறந்தபின்னும் எப்படி உத்தமமானதர்மத்தையடைவேன்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"தாய்தந்தைகளையும் ஆசார்யர்களையும்பூஜிப்பது மிகமுக்கியமென்பது என்கருத்து. இதைச்செய்யும்மனிதன் உலகங்களையும் பெரியகீர்த்தியையும் அடைகிறான். அப்பா! யுதிஷ்டிர! நன்றாகப் பூஜிக்கப்படும் இவர்கள் எந்தவேலையைக் கட்டளையிடுகிறார்களோ அது தர்மமாயிருந்தாலும் தர்மத்திற்கு விரோதமாயிருந்தாலும் அதைச்செய்யவேண்டும். அவர்களுடைய ஸம்மதிபெறாமல் வேறு தர்மத்தைச் செய்யக்கூடாது. அவர்கள் எதைஸம்மதிக்கிறார்களோ அது தர்மமென்பது திண்ணம். அவர்களே மூன்றுஉலகங்கள்; அவர்களே மூன்றுஆச்ரமங்கள்; அவர்களே மூன்றுவேதங்கள்; அவர்களே மூன்றுஅக்நிகள். தந்தை கார்கபத்யாக்நியாகவும், தாய் தக்ஷிணாக்நியாகவும், குரு ஆஹவநீயாக்நியாகவும் கூறப்படுகிறார்கள். அந்த மூன்றுஅக்நியும் மிகப்பெரியவை. அம்மூன்றில் அஜாக்ரதையில்லாமலிருந்தால் மூன்றுஉலகங்களையும் ஜயிப்பாய். தந்தையின் பூஜையால் இவ்வுலகத்தையும் தாயின்பூஜையால் மேலுலகத்தையும் குருவின்பூஜையால் ப்ரம்மலோகத்தையும் உறுதியாகஜயிப்பாய். ஓ! பாரத! அவர்களிடம் நன்றாகஇரு. மூன்றுஉலகங்களிலும் கீர்த்தி பெறுவாய். உனக்கு க்ஷேமமும் மிகப்பெரிய பயனுள்ளதர்மமும்

உண்டு. நீ அவர்களுக்கு மேலாயிராதே; அவர்களைவிட்டுப் பூஜியாதே; அவர்களைத் தூஷியாதே; எப்பொழுதும் பணிவிடையையே செய்; அதுதான் உத்தமமானபுண்ணியம். ஓ! ஜனாதிபனே! நீ கீர்த்தியையும் புண்ணியத்தையும் யசஸையும் நல்லஉலகங்களையும் அடைவாய். எவன் அந்தமூன்றுபேர்களையும் ஆதரிக்கிறானோ அவனால் எல்லாஉலகங்களும் ஆதரிக்கப்பட்டனவாகும். அவர்களை ஆதரியாதமனிதனுடைய செய்கைகள்யாவும் பயனற்றனவாகும். ஓ! பாரத! அந்த மூன்றுகுருக்களையும் எவன் எப்பொழுதுமே பூஜியாமலிருக்கிறானோ அவனுக்கு இவ்வுலகமும் மேலுலகமும் கீர்த்தியுமில்லை. அவனுடையகீர்த்தியானது இவ்வுலகிலும் மேலுலகிலும் விளங்காது. பரலோகத்திலுள்ளதாகக் கூறப்படும் மற்றுமுள்ள க்ஷேமமும் கிடையாது. யுதிஷ்டிர! என்னால்விடப்பட்டதும் நான்செய்ததுமான எல்லாக்காரியமும் அவர்களுக்காகவே. ஆகையால், அஃது எனக்கு நூறுமடங்கும் ஆயிரமடங்குமாகவே ஆயிற்று. எனக்கு மூன்று உலகங்களும் நன்றாகப்பிரகாசிக்கின்றன. நல்ல [1]ஆசாரியர் வேதமோதிய பத்துப்பிராம்மணர்களுக்கு மேலானவர். [2]உபாத்தியாயர் பத்து ஆசாரியருக்கு மேலானவர். தகப்பன் பத்துஉபாத்தியாயர்களுக்கு மேலானவன். [illegible] ஒருத்தியோ தகப்பனிலும் பதின்மடங்குமேலானவளும் [illegible]தால் பூமிமுழுமையும் கீழாகச்செய்கிறவளுமாவாள். அன்[illegible]ச்சரியான குருவில்லை. பாரத! குருவானவர் தந்தைதாய்க[illegible]லாம் மிகமேலானவரென்பது என்னெண்ணம். ஏனெனில், தாய்தந்[illegible]ருவரும் பிறப்பில்மட்டும் உபயோகப்படுகிறார்கள். இந்தத் தந்தையும்தாயும் சரீரத்தை உண்டுபண்ணுகிறார்கள். ஆசாரியரின் உபதேசத்தாலுண்டாகும் பிறவியானது கிழத்தனமும் மரணமுமற்றதும் சிறந்ததுமாகும். தாயும் தந்தையும் ஆசாரியரும் [3]அபகாரஞ்செய்தவர்களானாலும் அடிக்கத்தக்கவர்களல்லர். அவர்களை அடியாமலிருப்பதால் அவன்குற்றமுள்ளவனாகமாட்டான். அவர்களும் அவனைக் குற்றமுள்ளவனாகச் செய்யமாட்டார்கள். அந்தத் தர்மத்தில் முயற்சியுள்ளவர்களை அநுக்ரஹிக்கத்தக்கவர்களாக ரிஷிகளும் தேவர்களும் அறிகிறார்கள். எவர் ஓதுவித்தலென்னும் உண்மையானகர்மத்தால் வேதத்தை உபதேசஞ்செய்து அழிவற்ற பதத்தையளித்து அநுக்ரஹஞ்செய்கிறாரோ அவரைத் தகப்பனென்றும், தாயென்றும் அறிந்துகொள். அவருடைய நன்றியையறிந்துகொண்டு

---

1 வேதத்தின்பொருளை உபதேசிப்பவர். 2 வேதத்தை ஓதுவிப்பவர்.
3 இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

அவருக்கு த்ரோஹஞ்செய்யாமலிருக்கவேண்டும். எவர்கள் வித்தையைக்கற்றபின் ஆசாரியரிடம் ஆதரவில்லாமலிருக்கிறார்களோ அவர்கள் மனத்தாலும் கர்மத்தாலும் [1] நாசமடைவார்கள். அவர்களின் பாபம் ப்ரூணஹத்தியைவிட மேலானது. உலகில் அவர்களைவிட வேறுபாபியில்லை. அவர்கள் எவ்விதம் குருக்களால் அனுக்ரஹிக்கத்தக்கவர்களோ அவ்விதம் அவர்களால் குருக்கள் ஆராதிக்கத்தக்கவர்கள். ஆகையால், புராதனமானதர்மத்தைவிரும்பியவன் முயற்சியுடன் குருக்களைப் பூஜிக்கவும் அவர்களுக்குக்கொடுக்கவும் அவர்களை ஆராதிக்கவும் வேண்டும். எந்தக்கர்மத்தால் பிதிருக்கள் பிரீதியடைகிறார்களோ அந்தக்கர்மத்தால் ப்ரம்மதேவர் பிரீதியடைகிறார். மாதாவின் பிரீதிக்காகச்செய்யும் கர்மத்தால் பூமிதேவி பூஜிக்கப்படுகிறாள். உபாத்தியாயரின் பிரீதியைச்செய்யும்கர்மத்தால் பரமாத்மா பூஜிக்கப்படுகிறார். ஆகையால், குருவானவர் தாய்தந்தைகளைவிட மேலாகப் பூஜிக்கத்தக்கவர். குருக்கள்பூஜிக்கப்பட்டால் பிதிருக்களுடன் ரிஷிகளும் தேவர்களும் பிரீதியடைகிறார்கள். ஆகையால், குருவானவர் மிகவும்பூஜிக்கத்தக்கவர். எவ்விதநடையாலும் குருவை அவமதிக்கக்கூடாது. குரு எவ்விதமோ தாயுந்தகப்பனும் அவ்விதமில்லையென்பதில்லை. அம்மூவர்களையும் அவமதிக்கக்கூடாது. அவர்கள்செய்ததைத் தூஷிக்கக்கூடாது. ரிஷிகளும் தேவர்களும் குருக்களின்பூஜையையே அறிவிக்கிறார்கள். உபாத்தியாயரையும் தகப்பனையும் தாயையும் மனத்தாலாவது செய்கையாலாவது எவர்கள் விரோதிக்கிறார்களோ அவர்களின்பாபம் ப்ரூணஹத்தியைவிட மேலானது. அவர்களைக்காட்டிலும் உலகில் வேறுபாபியில்லை. தம்மிடம் பிறந்தவனும் ரக்ஷிக்கப்பட்டவனுமான எந்தப்புத்திரன் தன்னைரக்ஷித்த தாயையும் தந்தையையும் ரக்ஷியாமலிருக்கிறானோ அவனுடைய பாபம் ப்ரூணஹத்தியைவிட மேலானது. உலகில்அவனைவிட வேறுபாபியில்லை. நண்பருக்கு த்ரோஹஞ்செய்தவன், நன்றிகொன்றவன், ஸ்திரீயைக்கொன்றவன், கோட்சொல்லுகிறவன் இந்நான்குபேர்களுடைய பாபத்திற்கும் பிராயச்சித்தத்தை நாம்கேட்டதில்லை. இவ்வுலகில் மனிதன் செய்யவேண்டியதெல்லாம் மனுவினுபதேசத்தில் காணப்படுகின்றது. இது சிறந்தது. இதைவிடமேலானது வேறில்லை. எல்லாத்தர்மங்களின் ஸாரங்களையும் ஒன்றுசேர்த்து இதுகூறப்பட்டது" என்றுசொன்னார்.

---

[1] வேறுபாடம்.

## நூற்றெண்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், யுதிஷ்டிரருக்கு மெய்பொய்களைப்பற்றிக் கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! தர்மத்திலிருக்க விருப்பமுள்ள மனிதன் எவ்விதமிருக்கவேண்டும்? பாதர்களிற்சிறந்தவரே! உண்மையை அறியவிருப்பமுள்ள என்பொருட்டு உபதேசிக்கவேண்டும். மெய்பொய்இரண்டும் உலகங்களைச்சூழ்ந்துகொண்டிருக்கின்றன. அரசரே! தர்மத்திலுறுதியுள்ள மனிதன் அவைகளில் எதைச்செய்ய வேண்டும்? ஸத்யமென்பது எது? அஸத்யமென்பது எது? ஸநாதனமும் தர்மம்விட்டுவிலகாததுமாயிருப்பது எது? எந்த ஸமயத்தில் ஸத்யத்தைச்சொல்லவேண்டும்? எந்தஸமயத்தில் பொய்யைச்சொல்ல வேண்டும்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"ஸத்யத்தைச்சொல்லுவது நன்று; ஸத்யத்தைவிடமேலானது இல்லை. ஓ! பாரத! உலகத்தில் எது அறியமிகஅரியதோ அதை உனக்குஉபதேசிக்கிறேன். எந்தவிஷயத்தில் உண்மை பொய்போலாகுமோ அந்தவிஷயத்தில் உண்மைசொல்லத்தகாததாகும். எந்த விஷயத்தில் பொய்யும் உண்மைபோலாகுமோ அந்தவிஷயத்தில் பொய் சொல்லத்தக்கதாகும். எவன் எந்தவிஷயத்தில் உண்மையைநிச்சயிக்கவில்லையோ அப்படிப்பட்ட [1]மூடன் அந்தவிஷயத்தில் கொல்லப்படுவன். மெய்பொய்களை நிச்சயஞ்செய்துகொண்டபின் தர்மமறிந்தவனாகிறான். கெட்டவனும் புத்தியில்லாதவனும் மிகக்குரூரனுமான புருஷனும் [2]குருட்டுமிருகத்தைக் கொலைசெய்ததால் பலாகனென்ற வேடன்போல மிகப்பெரிய புண்ணியத்தையடைவான். தருமத்தில் விருப்பமுள்ளவனாயினும் (ஸத்யவாதியென்னும்) மூடன்தர்மந்தெரிந்தவனல்லன். என்ன ஆச்சரியம்! [3]கங்கைக்கரையிலுள்ள கோட்டானைப்போல (கொலைசெய்கிறவனும்) மிகப்பெரிய புண்ணியத்தையடைவான். நீ கேட்ட விஷயத்தில் தர்மத்தைத்தெரிந்துகொள்வது மிகக் கடினம். இந்தக்கேள்வி அத்தகையதாயிருக்கிறது. இவ்விஷயத்தில் ஊகத்தால் நிர்ணயஞ்செய்வதும் கடினம். இதில் எவ்விதம் நிச்சயமடைவான்? பிராணிகளின்க்ஷேமமென்னும் பயனுக்காகத் தருமத்தின்உபதேசம் செய்யப்பட்டது. எது க்ஷேமத்துடன்கூடியதாயிருக்கிறதோ அது தர்மமென்பது நிச்சயம். குருக்களிற்சிறந்தவனே!

---

1 வேறுபாடம். 2, 3 கர்ணபர்வம், அத். 72 - பார்க்க.

கொல்லாமை, ஸத்யம், கோபமில்லாமை, தவம், தானம், அடக்கம், அறிவு, அஸூயையில்லாமை, பிறரைப்பழிப்பதில் ஸாமர்த்தியமில்லாமை, ஈர்ஷையில்லாமை, சீலம் இவைகள் தர்மமென்று தேவர்களுக்குத்தேவரும் சிறந்தபதத்திலிருப்பவருமானபிரம்மதேவரால் சொல்லப்பட்டன. இதுவும் ஸநாதனமான தருமந்தான். அரசனே! இந்தத் தருமத்திலிருக்கும்மனிதன் க்ஷேமங்களைப்பார்க்கிறான். வேதத்தில் கூறப்படும்கொலையும் உண்மையில் ஹிம்ஸையில்லாததான தர்மமாகும். உலகத்தைத் [1]தரிப்பதால் தர்மமென்றுசொல்லுகிறார்கள். ப்ரஜைகள் தர்மத்தால் தரிக்கப்படுகின்றன. எது தரிக்கும் திறமையுடன் கூடியதோ அது தர்மமென்பதுநிச்சயம். பிராணிகளுக்குத் துன்பமில்லாமையென்னும் பயனுக்காகத் தர்மோபதேசம் செய்யப்பட்டது. எது துன்பமில்லாமையுடன் கூடியதாயிருக்கிறதோ அது தர்மமென்பதுநிச்சயம். வேதத்தில்கூறியதே தர்மமென்று வேறுசிலர்சொல்லுகிறார்கள். மற்றஜனங்கள் வேறுப்ரமாணங்களையும் சொல்லுகிறார்கள். அதையும் நாங்கள் குற்றமாகக்கொள்ளவில்லை. முழுமையும் விதிக்கப்படுவதுஇல்லை. எவர்கள் அநியாயமாக அபகரிக்க விருப்பமுள்ளவர்களாய் ஓரிடத்திலுள்ளபொருளை விரும்புகிறார்களோ அவர்களுக்கு அவ்விடத்தைச் சொல்லக்கூடாது. அது தருமமென்பது நிச்சயம். சொல்லாமலிருந்துவிடநேருமானால் எவ்விதத்திலும் சொல்லக்கூடாது. அவச்யம் சொல்லவேண்டுமானாலும் சொல்லாமலிருப்பதில் அவர்கள்ஸந்தேகப்படுவார்களானாலும் [2]அப்பொழுது ஸத்யம் சொல்வதைவிடச் சபதஞ்செய்தாவதுபொய்யைச்சொல்லிப் பாவிகளின்சேர்க்கையிலிருந்துவிடுதலடைவது மிகச்சிறந்ததென்றுகூறப்படுகிறது. சக்தியிருக்குமானால் எவ்விதத்திலும் பாபிகளின்பொருட்டுப் பொருளைக் கொடுக்கக்கூடாது. ஏனெனில், பாபிகளுக்களித்த பொருள் கொடுப்பவனுக்கும் துன்பத்தையுண்டுபண்ணும். [3]தனம் பெற்றவனுடைய சரீரத்தைத்துன்பப்படுத்திப் பொருளைவாங்கவிருப்பமுள்ளவனுக்கு உண்மையை அறிவிக்கவேண்டி வந்த ஸாக்ஷிகள்

---

1 போஷிப்பதால்.

2 இங்கு அதிகபாடமான இரண்டரைச்லோகம் விடப்பட்டன.

3 லாபத்தைஇருவரும் அடையவேண்டுமென்ற ஏற்பாட்டுடன் ஒருவனிடமிருந்து பொருளைவாங்கி மற்றொருவன் வேலைசெய்யும் விஷயத்தில் அப்பொருளைத் திருடர்கள் அபகரித்தால் பொருள்கொடுத்தவன் பெற்றுக்கொண்டவனைத் துன்பப்படுத்தியாவது அப்பொருளைவாங்க விரும்புவானாகில் ஸாக்ஷிகள் கடன்வாங்கினவனிடம் பொருளிருப்பதாகச்சொலலுவது பொய்யாகவே முடியும்.

சொல்லத்தக்கவசனத்தைச் சொல்லாமல் அவ்விஷயத்தில் 'இவன் பொருளைவைத்திருக்கிறான்' என்றுசொன்னார்களாகில் அவர்கள்யாவரும் பொய்சொன்னவர்களாகிறார்கள். உயிருக்கு அபாயம்நேருங்காலத்திலும் விவாகத்திலும் தர்மப்படிப் பிறர்பொருளைரக்ஷிக்கவேண்டியும் பொய் சொல்லத்தக்கதாகும். தருமத்தைவிரும்பும்மனிதன் பிறர்பொருள்ஸித்திக்கவேண்டிக் [1]நிர்மானவேஷத்தையும் வஹிக்கலாம். பொருளைச் [2]சம்பாதிப்பவன் (திருடர்களால்) பலாத்காரமாக அபகரிக்கப்பட்டவனாயிருந்தால் (பொருளுடையவனுக்கு) பிரதிஜ்ஞைசெய்யப்பட்டபொருளைக் கொடுக்கவேண்டியதில்லை. (அவ்விதமின்றி) தருமப்படிஜீவிக்கும் எவன் தர்மமானஉடன்பாட்டிலிருந்து விலகுகிறானோ அவ்வழியையடைந்தஅவனைத் தண்டத்தாலேயே அடிக்கவேண்டும். எப்போதும் தர்மங்களிலிருந்துவிலகினவனும் அஸுரர்களுக்குரிய கபடத்தையடைந்தவனுமான துஷ்டன் ஸ்வதர்மத்தைவிட்டு அக்கபட வழியை அடுத்துப் பிழைக்கவிரும்புவானாகில் கபடமாய்ப்பிழைக்கும் (அந்தப்) பாபியை எல்லாஉபாயங்களாலும் அடக்கவேண்டும். இவ்வுலகில் பாபிகளனைவர்களுக்கும் பொருளொன்றுதான் சிறந்ததென்று நிச்சயம். கபடவழியால்நரகத்தையடையும் அந்தமனிதர்களுடன் விவாஹமும்போஜனமும்செய்யக்கூடாது. அவர்கள் தேவர்களையும் மனுஷ்யர்களையும்விட்டுவிலகினவர்களும் யாகமில்லாதவர்களும் தவமில்லாதவர்களும் பிரேதங்கள்போன்றவர்களுமாகிறார்கள். அவர்களுடன் சேரவேண்டாம். [3]பொருளுக்குநாசம்வந்தால் அவர்கள் உயிரைவிடுவதென்ற மிகப்பெரியதுக்கத்தையும் செய்துகொள்ளுவார்கள். 'இந்தத்தர்மத்தை நீ பிரியமாகச்செய்' என்று முயற்சியுடன் உபதேசிக்கத்தகுதியுள்ளவன் பாபிகளுள் ஒருவனுமில்லை. எல்லாம் தர்மமென்றே அவர்களின்நிச்சயம். அவ்விதமானமனிதனை எவன் அடிக்கிறானோ அவன் பாபத்தை அடையமாட்டான். தன்கர்மத்தால் அடிக்கப்பட்டபாபியை அவன் அடிக்கிறான். (கர்மத்தால்) அடிக்கப்பட்டுத்தான் அந்தப்பாபி அடிபடுகிறான். கெட்டபுத்தியுள்ள அந்தப் பாபிகளை அடிக்கவேண்டுமென்று ஸங்கல்பஞ்செய்கிறவன் புண்ணியமடைகிறான். கபடமாகப்பிழைப்பவர்கள் காகத்தையும் நாயையும்

---

1 வேறுபாடம்.

2 வேறுபாடம். 'லாபநஷ்டங்களில் ஸமமென்று உடன்பாடிருந்தால் வாங்கிக்கொண்டவன், கொடுத்தவனுக்குப் பாதியைக்கொடுக்கவேண்டும்; கொடுக்கச் சக்தியில்லாவிட்டால் வாங்கினவன் கொடுத்தவனுக்கு அடிமையாக இருக்கவேண்டும்' என்பது பழையஉரை.

3 வேறுபாடம்.

போன்றவர்கள்தாம். அவர்கள் சரீரத்தைவிட்டபின் இந்தயோனிகளில்பிறக்கிறார்கள். எவனிடத்தில் எந்தமனிதன் எப்படியிருக்கிறானோ அவனும் அந்தமனிதனிடத்தில் அப்படி இருக்கவேண்டும். அதுதான் தர்மம். கபடநடையுள்ளவனுக்குக் கபடமாகத் தீங்கு செய்யவேண்டும். நன்னடையுள்ளவனை நல்வழிகொண்டே அடையவேண்டும்" என்றுசொன்னார்.

## நூற்றுப்பத்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் துன்பங்களைத்தாண்டத்தகுந்த உபாயங்களைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பிதாமஹரே! பிராணிகள் வெவ்வேறான அந்த அந்தவிஷயங்களால் துன்பப்படும்போது எந்தஉபாயத்தால் கடினமான துன்பங்களையும் தாண்டக்கூடுமோ அவ்வுபாயத்தை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"எந்தத்விஜாதிகள் மிகவும் அடங்கியமனமுள்ளவர்களாய் விதிப்படியுள்ள ஆச்ரமங்களில் சாஸ்திரத்தில்சொல்லியபடி இருக்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் தர்மத்தை டம்பமாகச்செய்யவில்லையோ எவர்களின் ஜீவனம் மிக அடங்கியதோ எவர்கள் இந்திரியங்களையும் அடக்குகிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் நிந்திக்கப்பட்டாலும் மறுமொழிசொல்லாதவர்களும் துன்பஞ்செய்யப்பட்டாலும் துன்பஞ்செய்யாதவர்களும் கொடுப்பவர்களும் யாசியாதவர்களுமாயிருக்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் எப்பொழுதும் அதிதிகளை வஸிக்கச் செய்கிறவர்களும் எப்பொழுதும் அஸூயையற்றவர்களும் எப்போதும் வேதமோதும் ஸ்வபாவமுள்ளவர்களுமாயிருக்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் தர்மத்தை அறிந்து தாய்தந்தையரின்நடையை அனுஸரித்திருக்கிறவர்களும் பகலில் தூக்கத்தைவிட்டவர்களுமாயிருக்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் மனத்தாலும் வாக்காலும் செய்கையாலும் பாபத்தைச்செய்யாதவர்களும் பிராணி

களைத் தண்டியாதவர்களுமாயிருக்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எந்த அரசர்கள் ரஜோகுணத்துடன்கூடியவர்களாய் லோபத்தால் பிறர்பொருள்களை அபகரியாமல் தேசங்களை ரக்ஷிக்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள், நியாயமாக அடைந்த தம் தாரங்களிடம் ருதுகாலந்தோறும்சேருகிறவர்களும் அக்கினிஹோத்திரத்தைப் பெரிதாகக்கொண்டவர்களும் ஸாதுக்களுமாயிருக்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எந்தச்சூரர்கள் மரணத்தாலுண்டாகும் பயத்தைத்தள்ளிவிட்டு யுத்தங்களில் தருமப்படி ஜயத்தைவிரும்புகிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். இவ்வுலகில் எவர்கள் உயிரைவிடும்படி நேர்ந்தாலும் ஸத்தியங்களைச் சொல்லுகிறவர்களாயும் பிராணிகளுக்கு நம்பத்தக்கவர்களாயுமிருக்கிறார்களோ அவர்கள்கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்களின்செய்கைகள் நிந்திக்கத்தகாதவைகளும் சொற்கள் உண்மையும் பிரியமும் பொருள்கள் ஸாதுக்களுக்கு உபயோகப்படுகின்றவைகளுமாயிருக்கின்றனவோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எந்தப்பிராம்மணர்கள் அத்தியயனஞ்செய்யத்தகாதநாட்களில் அத்தியயனஞ்செய்கிறதேயில்லையோ தவத்தில் நிலைபெற்றவர்களும் நல்லதவமுள்ளவர்களுமான அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் இளமைப் பருவத்தில் பிரம்மசாரிகளாயிருந்துகொண்டு தவத்தைச்செய்கிறவர்களும் வித்தைகளிலும் வேதங்களிலும் வ்ரதங்களைச்செய்து நிறைவேற்றினவர்களுமாயிருக்கிறார்களோ அவர்கள் கடினமானதுன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் ரஜோகுணமும் தமோகுணமும் நிகவடங்கியவர்களும் ஸத்வகுணத்தில் நிலைபெற்றவர்களுமாயிருக்கிறார்களோ பெரியபாக்யசாலிகளான அவர்கள் கடினமானதுன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்களிடம் ஒருவரும் பயமடைகிறதில்லையோ எவர்களுக்கு ஒருவரிடத்திலும் பயமில்லையோ எவர்களுக்கு உலகம் தம்மைப்போலிருக்கிறதோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். புருஷர்களிற்சிறந்த எந்தஸாதுக்கள் பிறர்ஸம்பத்தைக்கண்டு தாபப்படாதவர்களும் [1] இகழ்ச்சியான ஆகாரத்திலிருந்து விலகினவர்களுமாயிருக்கிறார்களோ அவர்கள் கடினமானதுன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் எல்லாத்தேவர்களையும் நமஸ்கரிப்பவர்களும் எல்லாத்தர்மங்களையும் கேட்ப

[1] 'போகத்திலிருந்து' என்பது வேறுபாடம்.

வர்களும் ஸ்ரத்தையுள்ளவர்களும் அடக்கமுள்ளவர்களுமாயிருக்கி றார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் பெருமையைவிரும்பாதவர்களும் பிறரைப்பெருமைப்படுத்து கிறவர்களும் பெருமையுள்ளவர்களைப் பூஜிக்கிறவர்களுமாயிருக்கிறார் களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர் கள் பிரஜைகளைவிரும்பிக்கொண்டு மிகவும் சுத்தமானமனத்துடன் ஒவ்வொருதிதியிலும் சிராத்தங்களைச்செய்கிறார்களோ அவர்கள் கடி னமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் கோபத்தை மிகவும் அடக்குகிறவர்களும் கோபமுள்ளவர்களை மிக்கசாந்தர்களா க்செய்கிறவர்களும் [1]வேலைக்காரர்களிடத்திலும் கோபமில்லாதவர் களுமாயிருக்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும்தாண் டுகிறார்கள். எந்த மனிதர்கள்பிறந்ததுமுதல் மதுவையும் மாம்ஸத்தை யும் பெண்டிர்களையும் கள்ளையும் எப்பொழுதும் விலக்குகிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும்தாண்டுகிறார்கள். எவர்கள்ஜீவிப் பதற்காகப்போஜனமும் ஸந்ததியுண்டாவதற்காக ஸ்திரீகளுடன்சேர் க்கையும் உண்மையைச்சொல்லவேண்டியதற்காக வாக்குமுள்ளவர் களாயிருக்கிறார்களோ அவர்கள் கடினமானதுன்பங்களையும் தாண் டுகிறார்கள். எவர்கள் எல்லாப்பிராணிகளுக்கும்ஈஸ்வரரும் உலகத்தின் உற்பத்திலயங்களுக்குக் காரணரும் தேவருமான ஸ்ரீநாராயணரின் பக்தர்களோ அவர்கள் கடினமானதுன்பங்களையும் தாண்டுகிறார்கள். அரசனே! தாமரைமலர்போலச் சிவந்தகண்ணுள்ளவரும் பீதாம்பர ரும் நீண்டகையுள்ளவரும் உனக்குஸஹோதரரும் உடன்பிறந்தவரும் மித்திரரும் ஸம்பந்தியும் அச்சுதரும் விரும்பினால் இவ்வுலகங்கள் யாவற்றையும் ஒருதோலைப்போலச் சுருட்டச்சக்தியுள்ளவரும் பிரபு வும் சிந்திக்கமுடியாதஸ்வரூபமுள்ளவரும் புருஷோத்தமருமானஎந் தக் கோவிந்தர் எப்பொழுதும் உனக்குப்பிரியத்தையும் நன்மையை யும் செய்துகொண்டிருக்கிறாரோ அந்தப்புருஷோத்தமர் யதுக்களில் மிகச்சிறந்தவரும் வைகுண்டவாஸியுமானபுருஷஸ்ரேஷ்டராகிறார். பக் தர்களின் துக்கத்தை அபஹரிக்கும் இந்தஸ்ரீநாராயணரை இவ்வுல கில் எவர்கள் பக்தியுடன் ஆஸ்ரயிக்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும்தாண்டுகிறார்கள். இவ்விஷயத்தில் விசாரிக்கவேண்டி யதில்லை. பாரத! எவர்கள் தாமரையிதழ்போன்றகண்ணுள்ள இந்த ஸ்ரீகிருஷ்ணனிடம் எல்லா அபிப்பிராயத்துடனும் தம்கர்மங்களை அர்ப் பணஞ்செய்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டு

[1] 'பிராணிகளிடம்' என்பதுவேறுபாடம்.

கிறார்கள். எவர்கள் உலகங்களை ரக்ஷிக்கவேண்டி அதிதியிடம் கச்ய பரின்புத்திரனுயுதித்த தேவனுன இந்திரனை நமஸ்கரிக்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் உலகங்களைப்படைத்தவரும் ஸாதுக்களுக்குப்பதியும் யாகங்களால் பூஜிக்கத்தக்கவருமானபிரம்மதேவரைப் பூஜிக்கிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். இந்திரனும் விஷ்ணுவும் ருத்திரரும் உலகங்களுக்குப்பிதாமஹரானபிரம்மதேவரும் தேவர் களின்தேவரான எந்தமஹேஸ்வரரைப் பலவிதஸ்தோத்திரங்களால் துதிக்கிறார்களோ அவரை, எவர்கள்எப்பொழுதும்பூஜிக்கிறார்களோ அவர்கள்கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். எவர்கள் கடின மான துன்பத்தைத் தாண்டத்தக்க இவ்வுபாயஉபதேசத்தைப் படிக் கிறார்களோ, எவர்கள் கேட்கிறார்களோ, பிராம்மணர்கள்பொருட்டு எவர்கள் சொல்லுகிறார்களோ அவர்கள் கடினமான துன்பங்களையும் தாண்டுகிறார்கள். தோஷமில்லாதவனே! மனிதன் இவ்வுலகிலும் மேலுலகிலும் பெரியதுன்பங்களைத்தாண்டுவதற்காகச் செய்யத்தக்க காரியங்களில் சிறிது என்னல் உனக்கு இவ்விதம் உபதேசிக்கப் பட்டது" என்றுசொன்னர்.

---

## நூற்றுப்பதிஞேராவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், மனிதர்களைத் துஷ்டர்களென்றும் ஸாதுக்களென்றும் அறி வதற்குப் பரீக்ஷைஸாதனமென்பதைவிளக்கப் புலிநரிகளைப் பற்றியகதையைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "தந்தையே! அஸாதுக்கள் ஸாதுஉருவமுள்ள வர்களாகவும் ஸாதுக்கள் அஸாதுஉருவமுள்ளவர்களாகவும் காணப் படுகிறார்கள். அவ்விதப்புருஷர்களை நாங்கள் எவ்விதம்அறிவோம்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"ஓ! யுதிஷ்டிர! இவ்விஷயத்தில் புலிக்கும்நரிக்கும் நடந்த ஸம்பாஷணையான பழைய இவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். அதைத் தெரிந்துகொள். முன்காலத்தில் செல்வம்நிறைந்தபுரிகை யென்னும் பட்டணத்தில் பிறர்களுக்குத்துன்பஞ்செய்தலையே பெரி தாகக்கொண்டவனும் குரூரனும் புருஷர்களில் இழிவானவனுமான பௌரிகனென்னும் அரசனிருந்தான். அவன் ஆயுள்முடிந்ததும்

விரும்பத்தகாதகதியை அடைந்தான். முன்கர்மத்தால் தூஷிக்கப் பட்ட அவ்வரசன் நரியின்பிறப்பையடைந்தான். அந்தநரி தன்முன் பிறப்பைநினைத்து மிக்கவெறுப்பையடைந்தது. அது பிறரால்கொடுக் கப்பட்டமாம்ஸங்களையும் உண்ணுகிறதில்லை. எல்லாப்பிராணிகளிடத் திலும் ஹிம்ஸைசெய்யாததும் ஸத்தியமானவாக்குள்ளதும் மிக்க உறுதியானவிரதமுள்ளதுமாய்ச் சரியானகாலத்தில் உதிர்ந்தகனி களால் ஆஹாரஞ்செய்துகொண்டுவந்தது. அஃது ஒருஸமயத்தில் இலை களைஉணவாகக்கொண்டதும் ஒருஸமயத்தில் உறுதியானவிரதமுள்ள தும் ஒருஸமயத்தில் தண்ணீரால்ஜீவிப்பதுமாய் ஒருவரிடமும் வசப் படாமலிருந்தது. அந்தநரிக்குப் பிறந்தபூமியிலுள்ளஸ்நேஹத்தால் மயானத்தில்வஸிப்பது ஸம்மதமாகஇருந்தது; வேறிடத்தைப் பிரிய மாகக்கொள்ளவில்லை. அச்சாதியிலுள்ளமற்றவையாவும் அதனுடைய சுத்தியைப்பொறாதவைகளாய் மிகவணக்கமானவசனங்களால் அந்தப் புத்தியை வேறுபடுத்தத்தொடங்கின. 'பயங்கரமான மயானத்தில் வஸித்துக்கொண்டு பரிசுத்தியையடையவிரும்புகிறாய். இஃது உன க்கு விபரீதமானபுத்தி. நீ மாம்ஸத்தை ஆஹாரமாகக்கொண்டவனன் றோ? ஆகையால் எங்களுடன் ஸரியாகஇரு. புஜிக்கவேண்டியதை நாங்கள் கொடுக்கிறோம். சுத்தியென்பதைத்தள்ளிவிட்டுச் சாப்பிடு. எது புஜிக்கப்பட்டதோ அதுதான் உனக்குள்ளது' என்றுசொல் லின. இவ்விதம்சொல்லிய அவைகளின்வசனத்தைக்கேட்டு மனத் தில் அடக்கத்துடன் கடுமையில்லாதவைகளும் இனியவைகளும் வணக்கமுள்ளவைகளும் யுக்தியுள்ளவைகளுமான வசனங்களால் மறுமொழிசொல்லத்தொடங்கிற்று. 'பிறப்பானது எனக்குப்ரமாண மன்று. குலமானது சீலத்தால்ஆக்கப்படுகிறது. எந்தக்கர்மத்தால் புகழானது பெருகுமோ அதையே நான் விரும்புகிறேன். மயானத் தில் எனக்கு வாஸமிருந்தாலும் என்னுடைய [1]ஸமாதியைப் பார்க்க வேண்டும். வஸிக்குமிடமானது தர்மத்திற்குக் காரணமன்று. ஆத்மா வானது கர்மங்களைப் பயன்படச்செய்யும். ஆச்ரமத்தில் ஒருவன் அந் தணனைக் கொல்லுகிறான். ஆச்ரமமில்லாவிடத்தில் ஒருவன் தானஞ் செய்கிறான். அக்கொலை பாதகமாகாதோ? அந்தத்தானம் பயனற்ற தாய்விடுமோ? நீங்கள் உங்களுக்குவேண்டியவிஷயத்தில் லோபத் தால் ஆஹாரம்ஒன்றில்மாத்திரம் ஆசையுள்ளவர்களாயிருக்கிறீர்கள். விவேகமில்லாதவர்கள் முடிவிலுண்டாகும்தோஷங்களைப் பார்க்கிற தில்லை. ஆகையால், ஸந்தோஷமில்லாமல் செய்யப்படுவதும் நிந்திக்கத்

[1] புத்தியின்நிலை.

தக்கதும் தர்மக்குறைவால் தூஷிக்கப்பட்டதும் இவ்வுலகிலும்மேலு லகிலும் துன்பமுள்ளதுமானஜீவனத்தில் நான் பிரியமுள்ளவனல் லன்' என்றுசொல்லிற்று. ப்ரஸித்தமானபராக்ரமமுள்ள ஒருபுலியா னது அந்தநரியைப் பரிசுத்தனுனபண்டிதனுகஎண்ணித் தனக்குச்சரி யான மரியாதையைச்செய்து தானுகமந்திரிபதத்தில்வரித்துக்கொண் டது. புலியானது, 'அழகுள்ளநண்பனே! உன்ஸ்வரூபம் தெரிந்தது. என்னுடன்கூட ராஜகாரியத்தைப் பெற்றுக்கொள். உனக்கிஷ்டமான போகங்களைப் பூர்ணமாய்வரித்துக்கொள். வேண்டாதவைகளைவிலக்கி விடு. எங்கள்ஜாதி குரூரமானதென்றுபிரஸித்தமாயிருப்பதை உனக்கு அறிவிக்கிறேன். எளியவசனத்தைமுன்னிட்டு நீ ஆளவேண்டும். நீயும் க்ஷேமத்தை அடைவாய்' என்றுசொல்லிற்று. பிறகு நரியானது மிக்கதைர்யமுள்ளதும் மிருகங்களுக்குப்பதியுமான புலியின்அவ்வச னத்தை மிகவும்ஆதரித்துக் கொஞ்சம்வணங்கி வணக்கமுள்ளவச னத்தைச் சொல்லத்தொடங்கிற்று. 'மிருகராஜனே! எனக்காக நீசொன்னஇந்தவசனம் ஸரியானது. அறம்பொருள்களில்ஸமர்த்தர் களும் பரிசுத்தர்களுமானஸஹாயமனிதர்களை நீதேடுவது நியாயமே. ஓ! வீரனே! அமாத்யனில்லாதஅரசனும் சரீரத்துக்குவிரோதியும் துஷ்டனுமானஅமாத்யனுடன்கூடின அரசனும் (ராஜ்யத்தின்) பெருமையை ஆளமுடியாது. பெரியபாக்யம்பெற்றவனே! அன்புள்ள வர்களும் நீதியறிந்தவர்களும் ஆலோசனையுள்ளவர்களும் ஒருவருக் கொருவர் [1]சேர்க்கையில்லாதவர்களும் ஜயத்தைவிரும்புகிறவர்களும் ஆசையற்றவர்களும் மரியாதையைவிட்டுவிலகாதவர்களும் சிறந்தஅறி வுள்ளவர்களும் ஹிதத்தில்முயற்சியுள்ளவர்களும் பெரியமனமுள்ள வர்களுமான ஸஹாயமனிதர்களை ஸஹோதரர்களைப்போலும் தந்தை களைப்போலும் மரியாதைசெய். மிருகாதிபனே! ஸந்தோஷமாயிருப் பதைவிட வேறொன்றும் எனக்குப் பிரியமேயில்லை. ஸுகங்களிலும் போகங்களிலும் உன்னிடத்திலுள்ளஐசுவரியத்திலும் எனக்கு விருப் பமில்லை. எனது ஸ்வபாவமானது உன்னுடையபழையவேலைக்காரர் களுடன் சேர்க்கையடையாது. என்னிமித்தமாகத்துன்பமடையுமவர் கள் உன்னைப்பேதப்படுத்துவார்கள். நீ சிறந்தவர்களான மற்றவர் களுக்கும் கொண்டாடத்தக்கவனும் அடுக்கத்தக்கவனும் நல்லமன முள்ளவனும் மிகப்பெரியபாக்யம்பெற்றவனும் பாபிகளிடத்திலும் கடோரமற்றவனும் நீண்டஆலோசனையுள்ளவனும் பெரியஉத்ஸாஹ முள்ளவனும் பெருங்கொடையுள்ளவனும் பெரியபலமுள்ளவனும்

[1] வேறுபாடம்.

உபகாரத்திற்குப் பழுதில்லாத பிரதிஉபகாரம்செய்கிறவனும் பாக்யங்களால் நன்றாகஅலங்கரிக்கப்பட்டவனுமாயிருக்கிறாய். ஆனால், நான் என்னிலைமையிலே மிக்கஸந்தோஷமுள்ளவனாயிருக்கிறேன். என்னிஷ்டம்போல வனத்தில் ஸஞ்சரிக்கும்நான் (பிறரிடம்) ஸேவைசெய்தலையறிந்தவனல்லன். கஷ்டமானஸேவகவிருத்தியானது செய்யப்படவுமில்லை. ஸேவையிலிருப்பவர்களுக்கு [1]அரசனருகிலுள்ள நிந்தைகளால்வரும் எல்லாத் தோஷங்களும் உண்டாகும். வனத்திலிருப்பதோ அபிமானமும் பயமும் இடையூறுமில்லாததாயிருக்கிறது. அரசனால் [2]இழுக்கப்படும்மனிதனுக்கு உள்ளத்திலுண்டாகும் பயமானது கானகத்திலிருந்து கிழங்குகனிகளைப் புஜித்துக்கொண்டு ஸந்தோஷமாயிருப்பவர்களுக்கு இராது. ஆயாஸமின்றித் தண்ணீரோ சிறந்தகுணமுள்ள இனியஅன்னமோ ஆலோசித்துப்பார்த்தால் எவ்விடத்தில் ஸுகமானஸ்திதி இருக்கிறதோ அது ஸ்வர்க்கம். ஸேவையிலுள்ள துன்பங்களால் தூஷிக்கப்பட்டு எவ்வளவுவேலைக்காரர்கள் நாசமடைகிறார்களோ குற்றங்களுக்காக அரசர்களால்தண்டிக்கப்படும் வேலைக்காரர்கள் அவ்வளவில்லை. ஓ! மிருகேந்திரனே! அந்தமந்திரிகாரியத்தை நான்செய்யவேண்டுமென்று நீவிரும்பினால் இருக்கவேண்டியவிதிக்குத்தக்க ஓர் உடன்பாட்டைச் செய்துகொள்ள விரும்புகிறேன். என்னைச்சேர்ந்தவர்களை நீ மரியாதைசெய்யவேண்டும்; ஹிதமானவசனத்தைக்கேட்கவேண்டும். எனக்குக்கொடுக்கப்பட்ட வ்ருத்தியானது உன்னிடம் நல்லஉறுதியுள்ளதாயிருக்கவேண்டும். ஒருகாலத்திலும் உனதுமற்றமந்திரிகளுடன் ஆலோசிக்கக்கூடாது. நீதியுள்ளவர்களும் பெருமையுற்றிருக்கவிருப்பமுள்ளவர்களுமான வேறுமந்திரிகள் என்விஷயத்தில் வீணாகப் பேசுவார்கள். ரஹஸ்யத்தில் தனிமையாக உன்னுடன்சேர்ந்து ஒருவனாக ஹிதவசனத்தைச் சொல்லுவேன். உனதுஇனத்தார்களைப்பற்றியகாரியங்களில் நன்மைதீமைகளை நான் கேட்கத்தக்கவனல்லன். நீ என்னுடன்ஆலோசனைசெய்தபின் மந்திரிகளைத் துன்பஞ்செய்யக்கூடாது. நீ கோபமுள்ளவனாய் என்னைச்சேர்ந்தவர்களுக்கும் தண்டனையைவிதிக்கக்கூடாது' என்று சொல்லிற்று. பிறகு அந்தமிருகேந்திரனைபுலியால் 'இவ்விதமாகட்டும்' என்றுசொல்லிப் பூஜிக்கப்பட்டநரியானது, அந்தப் புலியாலேவப்பட்டுப் புத்திசொல்லத்தக்க மந்திரிபதத்தையடைந்தது. அவ்விதம் பூஜிக்கப்பட்டதும் வேலைகளில்முயற்சியுள்ளதுமான அந்தநரியைக்கண்டு முன்பரிவாரங்கள் ஒன்றுசேர்ந்துகொண்டு அடிக்கடி

1 வேறுபாடம். 2 'அழைக்கப்பட்டவனுக்கு' என்பது வேறுபாடம்.

பகைத்துவந்தன. கெட்டபுத்தியுள்ள அவைகள் வெளிக்கு மித்திர னென்கிறபுத்தியுடன் நன்மொழியுரைத்து நரியைத்தோஷங்களில் பிரவேசிக்கச்செய்து ஸமயங்களைப் போக்கவிரும்பின. பிறர்பொருளை அபகரிப்பவைகளும் முன் வேறுவிதமாயிருந்தவைகளுமான அவை கள் நரியாலடக்கப்பட்டு ஒருபொருளையும் அபகரிக்கச் சக்தியற்ற வைகளாயினவன்றோ? (அதிகாரத்திலிருந்து) விலக்கவிருப்பமுள்ள அவைகள் கதைகளாலும் பெருந்தனத்தாலும் இந்தநரியின்புத்திக் குப் பெரிய ஆசையை உண்டுபண்ணத்தொடங்கின. ஆகிலும், சிறந்த அறிவுள்ள அந்தநரியானது அந்தத்தீரத்தன்மையிலிருந்து சலிக்க வில்லை. பிறகு மற்றப்பரிவாரங்கள் இதற்கு நாசத்தைச்செய்யவேண்டு மென்று ஸங்கேதஞ்செய்துகொண்டிருந்தன. அவைகள் மிருகராஜ னை புலிக்கு விருப்பமுள்ளதும் அதன்வீட்டில் பாகஞ்செய்யப்பட்ட டதுமானமாம்ஸத்தைத் தாங்களே எடுத்து அந்தநரியின்வீட்டில் கொண்டுவந்துவைத்தன. அந்தமாம்ஸமானது எதனால் ஆலோசிக் கப்பட்டு எதற்காக அபகரித்துவைக்கப்பட்டதோ அதெல்லாம் அந்த நரிக்குத்தெரிந்திருந்தும் ('இதன்மூலமாய் இந்தப்பந்தம் நமக்கு வில கட்டும்' என்னும்) ஒருகாரணத்துக்காகப் பொறுத்துக்கொண்டிருந் தது. மந்திரிபதத்தை அடையுங்காலம், அந்தநரியானது, 'ஓ! அர சனே! என்னிடத்தில் ஸ்நேகத்தைவிரும்பும் நீ துன்பத்தைச்செய் யக்கூடாது' என்றஇந்தப்பிரதிஜ்ஞையைச் செய்துகொண்டது. அந்த ஆலோசனையின்நிலைமையை அறியவேண்டியும் அவ்விஷயத்தில் உபே க்ஷையாயிருந்தது. (பிறகு) பசியுடன் புஜிக்கக்கிளம்பிவந்த மிரு கேந்திரனுக்குப் போஜனம்கொண்டுவரவேண்டிய ஸமயத்தில் அந்த மாம்ஸம் காணப்படவில்லை. மிருகராஜனும் திருடனைத்தேடவேண்டு மென்று கட்டளையிட்டது. கபடமுள்ள அந்தநரிகளும், 'அந்தமாம்ஸ மானது வித்வானும் தன்னைப்பெரியஅறிவுள்ளவனென்று எண்ணு கிறவனுமான உமதுமந்திரியால் அபகரிக்கப்பட்டது' என்று மிருகேந் திரனிடம் அறிவித்தன. உடனே நரியின் [1]சாபல்யத்தைக்கேட்டுக் கோபங்கொண்டபுலியானது பொறுமையுள்ளதாயிற்று. அரசனை புலியானது இந்தநரியைக் கொலைசெய்யவேண்டுமென்றும் கருத்துக் கொண்டது. அப்புலியின் அந்தஇடைவெளியைக்கண்டு அந்தமுன் மந்திரிகள் சொல்லத்தொடங்கின. 'அந்தநரியானது எங்களனைவர் களின் ஜீவனத்தையும்கெடுக்க யத்தனப்படுகிறது' என்று இவ்விதம் சொல்ல நிச்சயஞ்செய்தபின் அவை திரும்பவும் அந்தநரியின்செய்

[1] தனக்குத்தகாதவிஷயத்தில் ஆசை.

கைகளை விரிவாகச்சொல்ல ஆரம்பித்தன. 'அந்தநரியினுடைய இந்தக்காரியம் இப்படியிருக்கிறது. எதுதான் அதனால் செய்யப்படாததாகும். அந்தநரியை எவ்விதக்குணமுள்ளதாக முந்தித் தேவரீர் கேள்விப்பட்டிருக்கிறீரோ அது அவ்விதக்குணமுள்ளதன்று; வார்த்தையினால்மட்டும் தர்மமுள்ளதும் ஸ்வபாவத்தில் குரூரமுள்ளதுமாயிருக்கிறது. கபடதர்மமுள்ள இந்தப்பாபி பொய்யான ஆசாரமுள்ளதாயிருக்கிறது. காரியத்துக்குவேண்டிப் போஜனமுதலியவிரதங்களில் ஶ்ரமப்படுகிறது. இதில் உமக்கு நம்பிக்கையில்லாதிருந்தால் அந்தமாம்ஸத்தை இதோ உங்களுக்குக் காண்பிக்கிறோம்' என்று சொல்லி அதேக்ஷணத்தில் வேகமாக அவைகள் அந்தநரியின்வீட்டிலிருந்து அந்தமாம்ஸத்தைக் கொண்டுவந்தன. மாம்ஸம்கொண்டுபோனதையும் அவைகளின் அந்தவசனத்தையும் கேட்டபொழுது புலியானது நரியைக்கொல்லவேண்டுமென்று கட்டளையிட்டது. பிறகு நரிக்குநேர்ந்த துன்பத்தைக்கேட்டுப் புலியின் தாயானது ஹிதமான வசனங்களால் நல்லஅறிவையுண்டுபண்ணவேண்டி மிருகராஜனிடம் வந்தது. 'மகனே! கபடமானமுயற்சியுடன்கூடின இந்தவார்த்தையை நீ ஏற்றுக்கொள்ளக்கூடாது. அசுத்தர்களால் வேலையிலுள்ள பொறுமையாலுண்டான குற்றங்களால் பரிசுத்தனும் குற்றமுள்ளவனாகச்செய்யப்படுவான். உயர்ந்தவனை ஒருவனும் ஸஹிக்கமாட்டான். உயர்ந்தவேலையானது விரோதத்தையுண்டுபண்ணும். பரிசுத்தனாக வேலைசெய்யும்மனிதனிடமும் குற்றமே சுமத்தப்படும். வனத்திலிருந்துகொண்டு தம்கர்மங்களைச்செய்யும் முனிவர்களுக்கும் நட்பு பகை நொதுமலென மூன்றுபக்ஷங்களுமுண்டாகும். லோபிகளுக்குப் பரிசுத்தர்களிடமும் பயமுள்ளவர்களுக்குப் பலசாலிகளிடமும் மூர்க்கர்களுக்குப் பண்டிதர்களிடமும் தரித்திரர்களுக்குப் பெருந்தனமுள்ளவர்களிடமும் அதர்மமுள்ளவர்களுக்குத் தர்மமுள்ளவர்களிடமும் குரூபிக்கு அழகுள்ளவனிடமும் பகையுண்டாவது வழக்கம். மூர்க்கர்களும் லோபிகளும் கபடமாகஜீவிப்பவர்களும் அறிவில்லாதவர்களுமானபலர், பிருகஸ்பதியின்புத்திபோன்ற புத்தியுள்ளவனும் குற்றமில்லாதவனுமாயிருப்பவனுக்கும் குற்றத்தைச் சொல்லுவார்கள். [1]ஒருவருமில்லாத உன்வீட்டிலிருந்து அந்தமாம்ஸமானது இப்பொழுது அபகரிக்கப்பட்டதாயிருக்கட்டும். அந்தநரி கொடுக்கப்படுவதையும் விரும்புகிறதில்லை. முதலில் இதை நன்றாக ஆலோசிக்கவேண்டும். பொய்யாயிருந்தும் உண்மைபோலவிளங்குகின்றனவும்

1 வேறுபாடம்.

உண்மையாயிருந்தும் பொய்போலவிளங்குகின்றனவுமாகப் பலவஸ்துக்கள் காணப்படுகின்றன. அவைகளைப் பரீக்ஷைசெய்யவேண்டியது யுக்தமாகும். ஆகாயமானது கவிழ்ந்தகறுத்தமிடாவைப்போலவும் மின்மினிப்பூச்சியானது அக்கினியைப்போலவும் காணப்படுகின்றன, ஆகாயத்தில் அவ்விதமிடாவினுருவமும் மின்மினிப்பூச்சியில் அக்கினியும் உண்மையில்லை. ஆகையால், பிரத்யக்ஷமாகக்காணப்படும் பொருளையும் பரீக்ஷிக்கவேண்டுவது நியாயம். பொருள்களைப்பரீக்ஷை செய்துதெரிந்துகொண்டவன் பின்பு பரிதாபமடையமாட்டான். மகனே! பிரபுவாயிருப்பவன் பிறனைக்கொல்லுவதென்பது செய்யஅரிதன்று. பிரபுக்களுக்குப் பொறுமையானது கொண்டாடத்தக்கதும் உலகில் புகழைக்கொடுப்பதுமாகும். மகனே! இந்தநரியானது உன்னால்ஸ்தாபிக்கப்பட்டதென்பது ஸாமந்தர்களிடத்திலும் பிரஸித்தமாக இருக்கிறது. நல்லபாத்திரம் கிடைப்பதுகஷ்டம். ஆகையால், இந்த உன்ஸ்நேஹிதனை வைத்துக்கொள். பிறரின்குற்றங்களால்குற்றமுள்ளவனாகச்செய்யப்பட்டவனும் உண்மையில்பரிசுத்தனுமாயிருப்பவனை எவன் வேறாகக்கருதுகிறானோ அவன் குற்றமுள்ளவனாகச்செய்யப்பட்டமந்திரியுடையவனாகி வேகமாகவே தான் நாசமடைவான். நரியின் இந்தச் சத்துருக்கூட்டத்திலிருந்து தர்மபுத்தியுள்ளஒன்றுவந்தது. அதுவும், 'இது கபடமாகச்செய்யப்பட்டது' என்றுசொல்லிற்று' என்றது. பிறகு மிருகேந்திரனால் நல்லநடையுள்ளதாகஅறியப்பட்ட அந்தநரியானது மரியாதைசெய்து விடுவிக்கப்பட்டது; ஸ்நேஹத்துடன் பலமுறை கட்டியணைக்கவும்பெற்றது. நீதிசாஸ்திரமறிந்த நரியானது மிருகேந்திரனிடம்அனுமதிபெற்றுக்கொண்டு அந்தஅவமானத்தால் மிகவும் தாபமடைந்து [1]ப்ராயோபவேசஞ்செய்யவிரும்பிற்று. அந்தப்புலியானது ஸ்நேஹத்தால் ஜலம்பெருகியகண்களுடன் தர்மமுள்ள அந்தநரியை மரியாதைசெய்து (ப்ராயோபவேசத்திலிருந்து) தடுத்தது. அந்தநரியானது ஸ்நேஹத்தால்பரபரப்பையடைந்து அந்தப்புலியைப்பார்த்து வணங்கிக் கண்ணீரால்தழுதழுத்தவார்த்தையுடன் சொல்லத்தொடங்கிற்று. 'முதலில் உன்னால் நான் பூஜிக்கப்பட்டேன்; பிறகு அவமதிக்கப்பட்டேன். சத்துருக்களின் நிலைமையையடையும்படி செய்யப்பட்டநான் உன்னிடத்தில்வஸிப்பதற்குத் தகுதியுள்ளவனல்லன். ஸந்தோஷமில்லாதவர்களும் அதிகாரத்திலிருந்துநழுவினவர்களும் மானக்குறைவையடைவிக்கப்பட்டவர்களும் தாமேதுன்பஞ்செய்துகொண்டவர்களும் பிறரால்வஞ்சிக்கப்

---

1 மரணத்துக்காகப்படுப்பது.

பட்டவர்களும் மிகக்குறைவடைந்தவர்களும் லோபிகளும் கோப முள்ளவர்களும் பயமுள்ளவர்களும் இகழ்ச்சியாகப்பேசப்பட்டவர் களும் பொருளை அபகரிக்கப்பட்டவர்களும் கர்விகளும் விலக்கினபின் சேர்த்துக்கொள்ளப்பட்டவர்களும் பேராசையுள்ளவர்களும் மிக்க லாலனைசெய்யப்பட்டவர்களும் யஜமானனுக்குப்பல துன்பங்களை எதிர் பார்ப்பவர்களும் கபடமுள்ளவர்களும் பரிதானம்வாங்குகிறவர்களு மானவேலைக்காரர்கள்யாவரும், யஜமானனிடம் பிரீதியற்றவர்களும் பொருளற்றவர்களுமாயிருப்பார்கள். அவமானத்துடன்கூடியஎன் னைத் திரும்பவும் அதிகாரத்தில்வைத்தால் நீ எவ்விதம் என்னிடத்தில் நம்பிக்கையடைவாய்? நான்தான் எப்படி உன்னிடம் நம்பிக்கையடைய முடியும்? பரீக்ஷைசெய்து ஸாமர்த்தியமுள்ளவனென்று அங்கீகரித்து அதிகாரத்தில்வைத்தபின் செய்தபிரதிஜ்ஞையையும்மாற்றிவிட்டு உன் னால் நான் அவமதிக்கப்பட்டேன். தன்சொல்லைக்காப்பாற்றுகிறவன் முதலில் ஒருவனைச்சீலமுள்ளவனென்று ஸபையில் சொல்லிவிட்டுப் பிறகு அவனைக் குணமில்லாதவனென்று சொல்லக்கூடாது. இப் பொழுது இவ்விதம்அவமதிக்கப்பட்டஎன்னிடத்தில் நீயும் நம்பிக் கையடையமாட்டாய். நம்பிக்கையில்லாதஉன்னிடத்தில் எனக்கும் பயமுண்டாகும். நீ சங்கையுள்ளவன்; நான் பயமுள்ளவன். பகை வர்கள் இடைவெளியைத்தேடுகிறவர்களும் ஸ்நேஹமில்லாதவர்களும் ஸந்தோஷப்படுத்தமுடியாதவர்களுமாயிருக்கிறார்கள். இந்தக்காரிய மும் மிக்ககபடமுள்ளதாயிருக்கிறது. வேற்றுமைப்பட்டது சேருவது கஷ்டம். சேர்ந்தது வேறுவதுகஷ்டம். வேற்றுமைப்பட்டுச்சேர்ந்த விடத்திலுள்ளபிரீதியானது ஸ்நேகத்தால் வளர்ச்சியடைகிறதில்லை. ஒருவனும் எஜமானனுன உன்னுடைய ஹிதத்தில்இருப்பவனாய்க் காணப்படவில்லை. (எவர்களும்) [1]தான், பான்இருவர்களின்காரி யத்தை அபேக்ஷிக்கிறவர்களாகவேயிருக்கிறார்கள். உள்எண்ணத்தில் ஸ்நேஹமுள்ளவர்கள்கிடைப்பது மிக்கஅரிது. அரசர்கள் மனிதர் களின் (ஸ்வபாவத்தைத்) தெரிந்துகொள்வது மிக்ககஷ்டம். ஏனெ னில், இவர்களின்மனம் நிலையற்றது. ஸாமர்த்தியமுள்ளவனும் ஸந்தே கப்படத்தகாதவனுமாயிருப்பவன் பலநூற்றிலொருவன் காணப்படு கிறான். மனிதர்களுக்குத் திடீரென்றுபெருமையும் திடீரென்று குறை வும்நேரும். சுபத்தையும் அசுபத்தையும் பெருமையையும் [2]கெடுக்

[1] வேறுபாடம்.

[2] 'ப்ரகர்த்தும்' என்றுபாடங்கொண்டு 'மனிதர்களுக்குத்திடீரென்று அதிகாரத்தைக்கொடுப்பதும், குறைப்பதும், சுபாசுபங்களையும்பெருமையை யும் செய்வதும் புத்திக்குறைவினாலேயே' என்பதுபழையஉரை.

கப்புத்தியின்சிறுமைகாரணமாகும்' என்றுசொல்லிற்று. அறமும் பொருளும் இன்பமும் யுக்தியுமுள்ள இவ்விதானன்மொழியைச்சொல்லி அரசாகியபுலியைத் தெளிவுள்ளதாகச்செய்துவிட்டு நரி வனம் சென்றது. புத்தியுள்ளநரியானது மிருகேந்திரனை அந்தப்புலியின் உபசாரவார்த்தையைக்கேளாமல் பிராயோபவேசஞ்செய்து சரீரத்தைவிட்டு ஸ்வர்க்கத்தையடைந்தது" என்றுசொன்னார்.

## நூற்றுப்பன்னிரண்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், சோம்பல் அனர்த்தத்திற்குக்காரணமாதமென்பதை விளங்கச்செய்யும் ஒட்டகத்தின்கதையைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஸகலதர்மங்களையும் ரக்ஷிப்பவர்களுள் சிறந்தவரே! அரசன் எதைச் செய்யவேண்டும்? எதைச்செய்து ஸுகமுள்ளவனாயிருப்பன்? அதனை உண்மையாக எனக்குச்சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"இவ்வுலகில் அரசன் எதைச்செய்யவேண்டுமோ எதைச்செய்தால் ஸுகமுள்ளவனாயிருப்பனோ அந்தக்காரியத்தைப்பற்றிய முக்கியமான நிர்ணயத்தை இப்பொழுது நான் உனக்கு உபதேசிக்கின்றேன்; கேள். யுதிஷ்டிர! ஒட்டகத்தைப்பற்றிய பெரியஇந்தக் கதையை நாங்கள் கேள்விப்பட்டிருக்கிறோம். அவ்விதம் இருப்பது கூடாது; அதை அறிந்துகொள். பிரஜாபதியின் குலத்திலுதித்ததும் முற்பிறப்பின் அறிவுள்ளதுமான ஒருபெரியஒட்டகம் மிகக்கடுமையான நியமமுள்ளதாக அரண்யத்தில் மிக்கபெருந்தவஞ்செய்துகொண்டிருந்தது. பிறகு அந்தத்தவத்தின்முடிவில் பிரபுவானபிரம்மதேவர் பிரீதியுள்ளவரானார். பிறகு பிரம்மதேவர் அவ்வொட்டகம் விரும்பியவரத்தை வினவினார். ஒட்டகம் 'ஓ! பகவானே! உம்முடைய அனுக்ரஹத்தால் என்னுடைய இக்கழுத்தானது நூறு யோஜனைக்குமேல் நீண்டதாயிருக்கவேண்டும். பிரபுவே! அப்படி ஸஞ்சரிக்க விரும்புகிறேன்' என்றுகூறிற்று. வரத்தைஅளிக்கும் மஹாத்மாவான பிரம்மதேவரால், 'அப்படியேஇருக்கட்டும்' என்று சொல்லப்பட்ட அந்தஒட்டகமானது மிகச்சிறந்தவரத்தைப்பெற்றுக் கொண்டு தன்காடுபோய்ச்சேர்ந்தது. அப்பொழுது மிகக்கெட்ட புத்தியுள்ள அவ்வொட்டகமானது பிரம்மதேவர்வரமளித்தகாரணத்

விலகுகின்றன. நீர்நொச்சியானது இருப்பிடத்தைவிட்டு விலகுகிற தில்லை. அது வேகம்வருவதைக்கண்டு வணங்குகிறது. மற்றமரங் கள் வணங்குகிறதில்லை. வேகமானதுசென்றவுடன் அந்தநீர்நொச்சி யானது திரும்பவும் தன்னிடத்தைஅடைகிறது. அது காலத்தை யும் ஸமயத்தையும்அறிந்ததும் எப்பொழுதும் எங்களுக்குஅடங்கின தும் அநுகூலமானநடக்கையுள்ளதும் விறைப்பில்லாததுமாயிருக் கிறது. ஆகையால், அஃது உன்னை அடைகிறதில்லை. எந்தஓஷதி களும் மரங்களும் செடிகளும், காற்று ஜலம்இவைகளின் வேகத்தால் வணங்குகின்றவைகளும் கிளம்புகின்றவைகளுமாயிருக்கின்றனவோ அவைகள் அவமானத்தையடைகிறதில்லை' என்றுசொல்லிற்று. ஏ! யுதிஷ்டிர! ஆகையால், எவன் மிகவளர்ச்சியுள்ள பகையரசனுடைய பந்தத்தை நாசஞ்செய்யும்விஷயத்தில் முதலிலுள்ளவேகத்தைஸஹி க்கவில்லையோ அவன் சீக்கிரமாகவே நாசமடைவான். நல்லறிவுள்ள எந்த அரசன் தனக்கும்சத்ருவுக்குமுள்ள பலாபலத்தையும் ஸேனை யையும் பராக்ரமத்தையும் அறிந்துநடக்கிறானோ அவன் அவமான த்தைஅடையமாட்டான். இவ்விதமே அறிவுள்ளவன் எப்பொழுது சத்ருவுக்கு அதிகமானபலமிருக்கிறதென்று அறிகிறானோ அப்பொ ழுது நீர்நொச்சியின்நடையை ஆச்ரயிக்கவேண்டும். இஃது அறி வின்லக்ஷணமாகும்" என்றுசொன்னார்.

## நூற்றுப்பத்தொன்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஸபையில் துஷ்டன் கெட்டவார்த்தையைச்சொன்னாலும் அதைப்பொறுப்பதுகுணமென்று கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! சத்ருக்களைஅடக்கும் பாரதரே! சாந்தனும் அறிவுள்ளவனுமாயிருப்பவன் மூடனும் தைரியமுள்ளவனும் குரூர னுமானமனிதனால் ஸதஸில்நிந்திக்கப்பட்டால் என்னசெய்யவேண் டும்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அரசனே! இப்பொருள் தெரியத்தக்கபடி கேட்டுக்கொள். எப்பொழுதும் அறிவுள்ளவன் அல்பபுத்தியான மனிதனுடையசொல் லைப் பொறுக்கவேண்டும். ஆக்ரோசத்துடன் தூஷிக்கப்படும்பொறு மையுள்ளமனிதன் தூஷிக்கும்மனிதனுடைய புண்ணியத்தைத் தான் அடைந்து தன்னுடையபாபத்தை அவனிடத்திலேயேகொடுத்துத்

தன்னைச் சுத்தஞ்செய்துகொள்ளுகிறான். கத்தும் நோயாளியிடம் போல இகழ்ச்சியுள்ள அந்தமனிதனிடம் உதாஸீனனாயிருக்கவேண்டும். அவன் உலகத்தில் பகையையடைந்து பயனற்றகதியையடைவான். அவன் எல்லாஜனங்களுமுள்ள கூட்டத்தில், 'ஒருவன் என்றால் இவ்விதம்சொல்லப்பட்டான். அவன் அவ்விடத்தில் வெட்கமடைந்து காய்ந்து செத்தவனைப்போலிருக்கிறான்' என்று அந்தப் பாபகர்மத்தால் எப்பொழுதும் தன்னைக் கொண்டாடிக்கொள்வான். வெட்கமில்லாமல் கொண்டாடத்தகாதகர்மத்தால் தன்னைக்கொண்டாடிக்கொள்ளும் அவ்விதப் புருஷாதமனை அடக்கமுள்ளமனிதன் உபேக்ஷைசெய்யவேண்டும். அல்பபுத்தியுள்ளவன் எந்தஎந்தவார்த்தையைச் சொல்லுகிறானோ அவனுடைய அந்தஅந்தச்சொல்லை அப்பொழுது ஸஹிக்கவேண்டும். அவன் அரண்யத்தில் பயனில்லாமல் கத்துகிற புத்தியற்றகாகம்போல ஸ்வபாவத்தால்கொண்டாடியும் நிந்தித்தும் என்னசெய்யக்கூடும்? கெட்டவார்த்தைகளை ப்ரயோகிப்பதால் அந்தக்கெட்டகர்மத்துடன் ஸம்பந்தம் வருமாகில் வாக்கினால் சொன்னதே பொருளாகமுடியும். அடிக்கவிருப்பமுள்ளவனுக்கு (அவ்விதச்சொல்லைவிட) வேறுமுயற்சி வேண்டாததாகுமன்றோ? நிந்தைசெய்யும்மனிதன் தன்செய்கையாலும் சொல்லாலும் தன்தாயிடம் பிறன்புணர்ச்சிசெய்ததைச் சொல்லிக்கொள்ளுகிறவனாகிறான். ரஹஸ்யாங்கத்தை வெளியிட்டுக்கொண்டு கூத்தாடும் [1]மயில்போல அவன் ஸந்தோஷப்படுகிறான். இவ்வுலகில் எந்தமனிதனுக்குச்சொல்லத்தகாததும் செய்யத்தகாததும் ஒன்றுமில்லையோ எல்லாம்கலந்த செய்கையுள்ள அந்தமனிதனிடம் பரிசுத்தனாயிருப்பவன் வார்த்தையைக்கொடுக்கக்கூடாது. எவன் நேரில் குணத்தைப் பேசுகிறவனும் மறைவில்நிந்திக்கிறவனுமாயிருக்கிறானோ அந்தமனிதன் உலகில் நாய்போன்றவனும், நல்லஉலகமும் தர்மமும் ஞானமும்நசித்தவனுமாகிறான். அவ்விதமனிதன் பலநாட்களில் தான்செய்ததானத்தையும் ஹோமத்தையும் மறைவில்செய்யும்நிந்தாவசனத்தால் அந்தக்ஷணமே நாசமடையச்செய்கிறான். ஆகையால், நல்லறிவுள்ள புத்திசாலியான மனிதன் பாபபுத்தியுள்ளவனும் விலக்கத்தக்கவனுமான அவ்வித மனிதனை நாயின்மாம்ஸத்தைப்போல உடனே விலக்கவேண்டும். பலஜனங்களுள்ளகூட்டத்தில் பிறர்குற்றத்தைச்சொல்லும் துராத்மா

---

[1] வெளியிடத்தகாத தன் அங்கம் வெளியாகிறதென்கிற லஜ்ஜையை விட்டுக் கூத்தாடுவதில் மயில் ஸந்தோஷப்படுவதுபோலப் பிறரைநிந்திப்பதில் தன்தாயின்தோஷம் வெளியாகிறதென்கிற லஜ்ஜையின்றி நிந்தாவசனத்தால் மூர்க்கன் சந்தோஷப்படுகிறான்' என்பது பொருள்.

வானவன் ஸர்ப்பமானது உயர்ந்தபடத்தை வெளியிடுவதுபோலத் தன்குற்றங்களை வெளியிடுகிறான். தனக்குரியசெய்கைகளைச்செய்யும் அந்தத்துஷ்டனுக்கு எவன் ப்ரதிசெய்யவிரும்புகிறானோ புத்தியில்லாதஅவன் சாம்பல்முட்டில் கழுதையிருப்பதுபோலத் துக்கத்தில் முழுகுகிறான். அடக்கமில்லாதவனும் எப்பொழுதும் ஜனங்களைத் தூஷிப்பதில் ஊக்கமுள்ளவனுமான மனிதனென்னும் செந்நாயை மதங்கொண்டு ஓங்கிக்கத்தும் யானையைப்போலவும் மிகப்பயங்கரமானநாயைப்போலவும் விலக்கவேண்டும். கெட்டமனிதர்கள்செல்லும்வழியிலிருப்பவனும் அடக்கத்திலிருந்தும் வணக்கத்திலிருந்தும்விலகினவனும் பாபியும் சத்துருவின்செய்கைபோன்ற செய்கையுள்ளவனும் எப்பொழுதும் துன்பத்தைவிரும்புகிறவனும் பாபபுத்தியுள்ளவனுமான அந்தமனிதனை வெறுக்கவேண்டும். மேலும் அவர்களால் மிகவும் நிந்திக்கப்படுகிறவனான நீ (அவர்களைக்) கண்டு வருத்தமுள்ளவனாகாதே. உறுதியானபுத்தியுள்ளவர்கள் உயர்ந்தவனுக்குத் தாழ்ந்தவனோடு சேர்க்கையை நிந்திக்கிறார்கள். அவன் கோபங்கொண்டால் கடிக்கவும் அடிக்கவுஞ்செய்வான்; புழுதிகளையும் உமிகளையும் இறைப்பான்; பற்களைக்காட்டிப் பயத்தை உண்டுபண்ணுவான். இவையெல்லாம் கோபமுள்ளவனும் க்ரூரனுமானமூடனிடம் ப்ரஸித்தம். கெட்டபுத்தியுள்ளமனிதனால் ஸதஸில்செய்யப்படும் நிந்தையையும் கெட்டமனிதர்களையும் எவன் பொறுக்கிறானோ, எப்பொழுதும் இந்தஉதாஹரணத்தையும் படிக்கிறானோ அவன் வாக்கால்உண்டாகும் ஒருவிதஅப்ரியத்தையும் அடையமாட்டான்" என்று சொன்னார்.

---

## நூற்றுப்பதினைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், அரசர்கள் துணைவர்களைச்சேர்த்துக்கொள்வது அவச்யமென்பதைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், " அறிவுள்ளவர்களில் சிறந்தவரான பிதாமஹரே! எனக்கு ஒருபெரியஸந்தேஹமிருக்கிறது. இஃது உம்மால்தான் நிவிருத்தியாகக்கூடியது. அரசரே! நீர் நம்குலத்தை வ்ருத்திசெய்தவரன்றோ? தந்தையே! கெட்டநடையுள்ளவர்களும் கெட்டமனமுள்ளவர்களுமான மனிதர்கள்நிந்தித்துப் பேசுவதைப்பற்றிய இம்முறை

யானது உம்மால் சொல்லப்பட்டது. அதன்பிறகு, உமக்கு அறிவித்துக்கொள்ளுகிறேன். ராஜ்யதந்திரத்திற்கு நன்மையையும் குலத்திற்கு ஸுகத்தையும் செய்வதும் வருங்காலத்திலும் நிகழ்காலத்திலும் க்ஷேமத்தைப்பெருகச்செய்வதும் புத்திரர்களுக்கும்பேரர்களுக்கும் ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதும் ராஜ்யத்தைப் பெருகச்செய்வதும் அன்னத்துக்கும் பானத்துக்கும் சரீரத்துக்கும் ஹிதமுமாயிருப்பதை எனக்குச் சொல்லவேண்டும். முடிசூட்டப்பட்டு ராஜ்யத்திலிருப்பவனும் [1]மித்திரர்களுடனும் [2]ஸுஹ்ருத்துக்களுடனும் பராக்ரமத்துடனும்கூடினவனுமான அரசன் எப்படியிருந்தால் ப்ரஜைகளை ஸந்தோஷப்படுத்துவான்? எந்த அரசன் இந்திரியங்களுக்கு ஈசனுயில்லாமையால் அவைகளை அடக்குந் தன்மையில்லாதவனும் ஸ்நேஹத்திற்கும் ஆசைக்கும் ஈடுபட்டவனும் அஸத்துக்களானஜனங்களைப் பரிபாலிக்க விருப்பமுள்ளவனுமாயிருக்கிறானோ அவனுடைய வேலைக்காரர்களும் அவன்குலத்திலுதித்தயாவர்களும் வெறுப்படைவார்கள். அந்த அரசன் வேலைக்காரர்களின்பலத்தால் அடையத்தக்க பொருள்களை அடையமாட்டான். இரவும்பகலும் ராஜதர்மங்களைச்சிந்திக்கும் எனக்கு இவ்விஷயத்தைப் பிருஹஸ்பதிக்கொப்பான புத்தியுள்ள நீர் சொல்லவேண்டும். புருஷப்புலியே! நமதுகுலத்திற்கு நன்மையைச்செய்யவிருப்பமுள்ளநீர் எங்களுக்கு உபதேசஞ்செய்யத்தக்கவர். அறிஞர்களில் பெரியவரானவிதுரர் ஒருவரும் எப்பொழுதும் எங்களுக்கு உபதேசஞ்செய்கிறவர். நான் உம்மிடமிருந்து ராஜ்யத்திற்கு நன்மையைஉண்டுபண்ணுவதும் குலத்திற்கு ஹிதமுமானவாக்கியத்தைக்கேட்டு அழிவற்ற அமிர்தத்தை அடைந்ததுபோலத் திருப்தியுள்ளவனுகி ஸுகமாகத்தூங்குவேன். எல்லாக்குணங்களும்நிரம்பினவர்களும் அருகிலிருப்பவர்களுமான வேலைக்காரர்கள் எவ்விதமிருக்கவேண்டும்? எவ்விதக் குணமுள்ளவர்களும் எந்தக்குலத்திலுதித்தவர்களுமான மனிதர்களுடன் யாத்திரைசெய்யவேண்டும்? அரசன் வேலைக்காரர்களில்லாமல் ஒருவனுய்ப் பரிபாலிக்கமுடியாதவனன்றோ? ராஜவம்சத்திலுதித்த மனிதரனைவரும் இந்த ராஜ்யத்தை ஆளுகிறாரா?" என்று கேட்டனர்.

பீஷ்மர் சொல்லத்தொடங்கினர். "பாரத! ராஜ்யமானது ஸஹாயமில்லாதவனுல் ஆளமுடியாது. அப்பா! பரதர்களில்சிறந்தவனே! ஸஹாயமில்லாதவனுல் எவ்விதப்பொருள்களும் அடையமுடியா; எப்

---

1 உபகாரத்தைஎதிர்பார்த்துவேலைசெய்கிறவன்.

2 உபகாரத்தைஎதிர்பாராமல்செய்கிறவன்.

பொழுதும் அடைந்தபொருள்களை ரக்ஷிக்கவுமுடியாது. எந்த அரச னுடைய வேலைக்காரர்கள்யாவரும் [1]ஞானமும் விஞ்ஞானமுமுள்ளவர் களும் நன்மையை விரும்புகிறவர்களும் நற்குலத்திற்பிறந்தவர்களும் ஸ்நேஹமுள்ளவர்களுமாயிருக்கிறார்களோ அந்த அரசன் ராஜ்யத் தின்பயனை அடைவான். எந்த அரசனுடைய மந்திரிகள் நற்குலத் திற்பிறந்தவர்களும் (பிறரால்) பேதிக்கத்தகாதவர்களும் இணங்கி வஸிப்பவர்களும் நல்வழியை அறிவதில் ஸமர்த்தர்களும் வருங்காரி யத்தைச்செய்கிறவர்களும் காலத்தை அறிவதில்ஸமர்த்தர்களும் சென் றதைப்பற்றித் துக்கியாதவர்களுமாயிருந்துகொண்டு அரசனுடைய இஷ்டத்தை அனுஸரிக்கிறார்களோ அந்த அரசன் ராஜ்யத்தின்பயனை யடைவான். எந்த அரசனுடைய துணைவர்கள் ஸமமானஸுகதுக்க முள்ளவர்களும் பிரியத்தைச்செய்கிறவர்களும் பொருளைச்சிந்திப்ப தில் முயற்சியுள்ளவர்களும் ஸபைக்குத்தக்கவர்களுமாயிருக்கிறார்க ளோ அந்தஅரசன் ராஜ்யத்தின்பயனையடைவான். எந்தஅரசனுடைய அருகிலுள்ளதேசமானது எப்பொழுதும் துன்பமில்லாததும் பெரு மையுள்ளதும் நல்வழியில் பிடிப்புள்ளதுமாயிருக்கிறதோ அந்த அர சன் ராஜ்யத்தின்பயனையடைவான். எந்த அரசனுடைய [2]பொக்கச மானது பொக்கசத்தைப் பெருகச்செய்கிறவர்களும் நம்பிக்கையுள்ள வர்களும் ஸந்தோஷமுள்ளவர்களும் புஷ்டியுள்ளவர்களுமான மனி தர்களால் பாதுகாக்கப்படுகிறதோ அவன் அரசர்களில் உத்தமனு வான். தான்யமுதலிய பொருள்களுள்ளகிருஹமானது பேதிக்கத் தகாதவர்களும் நம்பிக்கையுள்ளவர்களும் (பண்டங்களைச்)சேர்ப்பதில் கருத்துள்ளவர்களும் நல்லபாத்திரர்களும் ஆசையில்லாதவர்களுமான மனிதர்களால் பாதுகாக்கப்பட்டால் மிகப்பெருகுவதாம். எந்த அர சனுடைய நகரிலுள்ள வ்யவகாரமானது [3]சங்கலிகிதர்களுடையது போலத் தர்மப்படி பயனைஉண்டுபண்ணுவதாகக் காணப்படுகிறதோ அந்தஅரசன் தர்மங்களின்பயனை அடைகிறான். எந்த அரசன் அரசர் களுக்குரிய தர்மங்களைத்தெரிந்து வேண்டியமனிதர்களையும்சேர்த்து ஆறிலொருபாகம் வரிபெற்றுக்கொள்ளுகிறானோ அவன் தர்மத்தின் பயனை அடைவான்" என்றுசொன்னார்.

---

1 ஞானம் = மோக்ஷத்துக்குரிய அறிவு; விஞ்ஞானம் = சாஸ்த்ரங்களிலும் சில்பங்களிலுமுள்ள அறிவு. முறையே அறிவும்அனுபவஞானமும் என்றும் கொள்ளலாம்.

2 ஒருசொல் விடப்பட்டது.

3 சாந்திபர்வம் 68-வது 69-வது பக்கங்களிற் காண்க.

## நூற்றுப்பதினாறுவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஒருமுனிவர் சிறுத்தைப்புலிமுதலியவற்றினிடமிருந்துபயந்த நாயை அந்தஅந்தமிருகமாகச்செய்ததைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பரதர்களில்மிக்கபூஜ்யரே! எந்தச்சமயத்தில் அரசனுக்கு நற்குலத்திற்பிறந்த துணைவர்களில்லையோ அப்பொழுது கீழானகுலத்தில்பிறந்தவர்களை ஸஹாயர்களாக ஏற்படுத்திக்கொள்ள லாமா? கூடாதா?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"இவ்விஷயத்திலும் எப்பொழுதும் ஸாதுக்களால் அனுஷ்டிக் கப்பட்டதும் உலகத்தில்பெரியதிருஷ்டாந்தமுமான பழையஇவ்விதி ஹாஸத்தை உதாகரிக்கிறார்கள். இவ்விஷயத்திற்கேற்றதான அவ் விதிஹாஸமானது ஜமதக்நியின்குமாரரானபரசுராமருக்குத் தபோ வனத்தில் ரிஷிகளில்மிகச்சிறந்தவர்களால்சொல்லப்பட்டு என்னால் கேட்கப்பட்டது. மனிதர்களில்லாத ஒருபெரியஅரண்யத்தில் கிழங்கு கனிகளை ஆகாரமாகக்கொண்டவரும் அடங்கியவரும் இந்திரியங்களை அடக்கினவரும் வ்ரதங்களிலடங்கி ஶ்ரமப்பட்டவரும் வேதமோது தலைப் பெரிதாகக்கொண்டவரும் பரிசுத்தரும் உபவாஸங்களால்பரி சுத்தமானஆத்மாவுள்ளவரும் எப்பொழுதும்நல்லவழியிலிருப்பவரு மானஒருரிஷி இருந்தார். நல்லஅறிவுள்ளஅந்தரிஷிஉட்கார்ந்திருப் பதைக்கண்டு அவ்வனத்தில்ஸஞ்சரிக்கும்ஸிம்மங்களும் பெரும்புலி களும் [1]சரபங்களும் கொழுத்தபெரியயானைகளும் சிறுத்தைப்புலி களும் காண்டாமிருகங்களும் கரடிகளும் பயங்கரமாகக்காணப்படும் மற்றுமுள்ளபிராணிகளும் யாவும் அவரருகிலிருந்துகொண்டிருக்கும். உதிரத்தைஆகாரமாகக்கொண்ட அந்தமிருகங்கள்யாவும் சிஷ்யர்கள் போல அந்தரிஷியினுடையமனத்தையறிந்து பிரியத்தைச்செய்கின்ற வைகளும், 'ஸ்வாகமா' என்கிறப்ரஶ்னத்துக்குமறுமொழிகூறுபவை களுமாயிருக்கும். 'ஸ்வாகமா' என்கிறகேள்விக்கு விடையளித்தபின் அவைகள்யாவும் ஸ்வாகமாகச்செல்லும். கிராமத்திலுள்ளமிருகமான ஒருநாய்மாத்திரம் அவ்விடத்தில் அப்பெரியமுனிவரைவிட்டுவிலகாம லிருந்தது. அஃது எப்பொழுதும் பக்தியுள்ளதும் ஆசையுள்ளதும் உபவாஸங்களால்மெலிந்ததும் பலமில்லாததும் கனிகிழங்குகளைச்

---

[1] எண்காலுள்ளதும் ஸிம்மத்தைக்கொல்லக்கூடியதுமான ஒருமிருகம்; இதைப்பக்ஷியென்றுசொல்வதும்உண்டு.

சிறந்த ஆகாரமாகக்கொண்டதும் ஸாதுவானமனிதனைப்போலப்பெர்றுமையுள்ளதுமாகி, ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கும் பெரியபுத்தியுள்ள அந்தரிஷியினுடையகாலடியில் மனிதன்போல மனத்தைவைத்து ஸ்நேஹத்தில் மிகவும்கட்டுப்பட்டதாயிருந்தது. பிறகு உதிரத்தை ஆகாரமாகக்கொண்டதும் குரூரமும் மிகப்பயங்கரமும் பசியினால் துன்பப்படுத்தப்பட்டதும் தாகமுள்ளதுமான ஒருசிறுத்தைப்புலியானது அந்தநாயின்நிமித்தம் மிகக்கூச்சலிட்டுக்கொண்டும் அடிக்கடி நாவால் நக்கிக்கொண்டும் அந்தநாயின்மாம்ஸத்தைவிரும்பி வாலைச்சுழற்றியடிப்பதுடன் வாயைத்திறந்துகொண்டும் காலாந்தகன்போல அந்த நாயையெதிர்த்துவந்தது. மனிதர்களுக்குப்பதியானஅரசனே! அங்ஙனம்வரும் குரூரமானஅந்தப்புலியைக்கண்டு நாயானது அந்தச்சமயத்தில் உயிரைவிரும்பிக்கொண்டு முனியிடம்சொன்னதைக்கேள். 'பகவானே! நாய்களுக்குச்சத்துருவான இச்சிறுத்தைப்புலியானது என்னைக்கொல்லவிரும்புகிறது. பெரியமுனிவரே! உமதனுக்ரஹத்தால் இப்புலியிடமிருந்து எனக்குப்பயமில்லாமலிருக்கவேண்டும். ஓ! மஹாபாஹுவே! அவ்விதம்செய்யவேண்டும். நீர் யாவற்றையும்அறிந்தவரென்பதில் ஸந்தேகமில்லை' என்றுசொல்லிற்று. எல்லாப்பிராணிகளின்சப்தங்களையும்அறிந்தவரும் அணிமாமுதலியஸித்தியுடன் கூடினவருமான அம்முனிவர் அந்தநாயின்பயத்துக்குக் காரணத்தையறிந்து அதன் அபிப்பிராயத்தையுமறிந்து, அந்தநாயைநோக்கி, 'புத்திரன்போன்றவனே! அந்தகன்போன்ற சிறுத்தைப்புலியிடமிருந்து எவ்விதத்திலும் உனக்குப் பயமுண்டாகவேண்டாம்; இதோ நாயின் உருவத்தைவிட்டுவிலகி நீ சிறுத்தைப்புலியாயிருப்பாய்' என்று சொன்னார். உடனே நாயானது புலியுருவத்தையடைந்து பொன்போன்ற உருவமுள்ளதும் ஆச்சரியமான அங்கங்களுள்ளதும் மிகப்ரகாசிக்கும்கோரப்பல்லுள்ளதும் பயமற்றதுமாகி வனத்தில் வஸித்தது. தனக்குச்சரியானமிருகமாக எதிரிலிருக்கும் அந்தநாயைக் கண்டவுடன் சிறுத்தைப்புலியானது அந்தக்ஷணத்தில் அதற்கு விரோதியல்லாததாயிற்று. பிறகு மிக்கபயங்கரமானதும் திறந்த வாயுள்ளதும் பசியுடன்கூடியதும் அடிக்கடிவாயைநக்குகிறதும் உதிரத்தில்ஆசையுள்ளதுமான பெரியபுலியானது இச்சிறுத்தைப்புலியை எதிர்த்துவந்தது. பசியால்துன்பப்பட்டதும் கோரப்பல்லுள்ளதும் வனத்தில்ஸஞ்சரிப்பதுமான பெரியபுலியைக்கண்டு சிறுத்தைப்புலியானது உயிரைக்காப்பாற்றவேண்டி முனிவரைச் சரணமடைந்தது. பிறகு சேர்ந்திருந்ததாலுண்டானஸ்நேஹத்தைப்பாராட்டும் முனிவ

ரால் அப்பொழுது அந்தச்சிறுத்தைப்புலியானது பெரியபுலியாகச் செய்யப்பட்டுச் சத்துருக்களைவிட அதிகபலமுள்ளதாயிற்று. அரசனே! பிறகு அப்பெரும்புலியானது அதைக்கண்டு அடிக்கவில்லை. அப்பொழுது அந்தநாயோவென்றால் பெரும்புலியின் தன்மையை யடைந்து பலமுள்ளதும் மாம்ஸத்தை ஆகாரமாகக்கொண்டதுமாகிக் கிழங்குகனிகளைப்புஜிக்க விரும்பவேயில்லை. ஓ! மஹாராஜனே! மிருகங்களுக்குப் பதியானஸிம்மமானது வனத்திலிருக்கும்பிராணிகளை எப்பொழுதும் (புஜிக்க) விரும்புவதுபோலவே அந்தப்புலியும் அப்பொழுது அவ்விதமேயிருந்தது.

## நூற்றுப்பதினேழாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், முனிச்ரேஷ்டர் நாயைப் பற்பலமிருகமாகச்செய்ததையும் பிறகு தம்மைக்கொல்லவிரும்பியஅதை மறுபடியும் முன்போல நாயாகச்செய்ததையும் சொல்லியது.)

பர்ணசாலையின் அடியிலிருக்கும்புலியும் மிருகங்களைக்கொன்று திருப்தியடைந்து உறங்கிக்கொண்டிருந்தது. மேகம்போல்கிளம்பியதும் மதஜலம்பெருகியகன்னப்ரதேசமுள்ளதும் உயர்ந்ததும் பத்மமென்றசுழியுள்ளதும் அகன்றமஸ்தகமுள்ளதும் நல்லதந்தங்களுள்ளதும் பெரியசரீரமுள்ளதும் மேகத்தின்முழக்கம்போலக் கம்பீரமான முழக்கமுள்ளதுமான கொழுத்தயானையானது அவ்விடத்திற்குவந்தது. அவ்விதம்வருவதும் கொழுத்ததும் பலத்தால்கர்வங்கொண்டதுமான அந்தயானையைக்கண்டு புலியானது யானையினிடமிருந்து பயந்துநடுங்கி அந்தரிஷியைச்சரணமடைந்தது. உடனே ரிஷிச்ரேஷ்டரானவர் அந்தப்புலியை யானையாகச்செய்தார். பெரியமேகம்போன்ற அதைக்கண்டு அந்தயானையானது பயமுள்ளதாயிற்று. பிறகு யானையாயிருக்கும் அந்தநாயானது ஸந்தோஷமடைந்து தாமரைக்கூட்டங்களிலும் ஸல்லகீமரக்காடுகளிலும் தாமரைப்பூவிலுள்ள தூளிகளால் அலங்கரிக்கப்பட்டதாய்ச் சஞ்சரித்துக்கொண்டிருந்தது. அப்பொழுது, ஒருஸமயம்வெளியிற்சுற்றுவதும் ஒருஸமயம்நேரில்வருவதுமான அந்தயானைக்கு இரவும்பகலும் அந்தரிஷியின் பர்ணசாலையிலிருந்துகொண்டே காலங்கழிந்தது. பிறகு மலையின்குகையிலுண்டானதும் பயங்கரமும் யானைக்கூட்டங்களுக்கு யமன்போன்றதும்

சிவந்தசடைகளுள்ளதுமான ஸிம்மமானது அவ்விடத்திற்குவந்தது. வந்த அந்தச்சிங்கத்தைக்கண்டு சிங்கத்தினிடமுள்ளபயத்தினால் துன்புற்றதும் நடுக்கமுள்ளதுமான அந்தயானையானது பயந்து முனிவரைச் சரணமடைந்தது. பிறகு முனிவரால் அப்பொழுது அந்தச் சிறந்த யானையானது சிங்கமாகச்செய்யப்பட்டது. அஃது ஒரே ஜாதியாயிருக்கும்காரணத்தால் வந்தஅந்தச்சிங்கத்தை லக்ஷ்யமாக நினைக்கவில்லை. வனத்திலுண்டான அந்தச்சிங்கமும் இதைக்கண்டு துன்பஞ்செய்யாமல் குறைந்தபலமுள்ளதாயிற்று. அந்தப்புதியஸிம்மமானது அந்த ஆரண்யத்தில் அந்தஆச்ரமத்திலேயே ஸுகமாக வஸித்துக்கொண்டிருந்தது. அப்பொழுது பயமுள்ளவைகளும் உயிரில்விருப்பமுள்ளவைகளுமான மற்றச்சிறியமிருகங்கள் தபோவனத்தினருகில் காணப்படவில்லை. அவ்விதமிருக்குங்காலத்தில் ஒரு ஸமயத்தில் எல்லாப்பிராணிகளையும்கொல்லத்தக்கதும் பலமுள்ளதும் உதிரத்தை ஆகாரமாகக்கொண்டதும் பலபிராணிகளுக்கும் பயத்தையுண்டுபண்ணுவதும் எட்டுக்கால்களுள்ளதும் உயர்ந்தகண்ணுள்ளதுமான வனத்திலுள்ள சரபமிருகமானது அந்தமுனியினிருப்பிடத்தில் அந்தச்சிங்கத்தைக் கொல்லுவதற்குவந்தது. அவ்விதஞ்சென்ற அந்தச் சரபத்தைக்கண்டு சத்துருவென்றபயத்துடன்கூடிய சிங்கமானது நடுக்கமுற்று அஞ்சலிசெய்துகொண்டு முனியைச் சரணமடைந்தது. பகைவர்களை அடக்குகிறவனே! முனிவர் அதை அதிக பலமுள்ளசரபமாகச்செய்தார். உடனே வனத்திலிருக்கும் அந்தச் சரபமானது எதிரிலுள்ளதும் பலமுள்ளதும் மிகக்கொடிதுமான முனிவருடைய சரபத்தைக்கண்டு வேகமாக வனத்திற்கோடிற்று. அப்பொழுது இவ்விதம் முனிவரால் சரபமிருகத்தின் நிலைமையில் வைக்கப்பட்ட அந்தச்சரபமானது எப்பொழுதும் முனிவரின்பக்கத்திலிருந்துகொண்டு ஸுகத்தையடைந்தது. அரசனே! பிறகு சரபத்தினிடமிருந்துபயந்த மிருகக்கூட்டங்கள்யாவும் பயத்தால் உயிரைவிரும்பிக்கொண்டு வனத்திலிருந்து திக்குகள்தோறும் ஓடின. மாம்ஸத்தைஆகாரமாகக்கொண்ட அந்தச்சரபமிருகமும் மிக்கஸந்தோஷமடைந்து எப்பொழுதும் பிராணிகளைக்கொல்லுவதில் ஆசையுள்ளதாகிக் கனிகிழங்குகளை ஆகாரஞ்செய்ய விரும்பாததாயிற்று. பிறகு அல்பமான நடக்கையுள்ளதும் பலத்துடன்கூடியதும் உயர்ந்த குலத்தில் சேர்க்கப்பட்டதுமான அந்தச்சரபமானது நன்றியறிவில்லாததாய் அம்முனிவரைக் கொல்லவிரும்பிற்று. அப்பொழுது முந்தி நாயாயிருந்த அந்தச்சரபமானது, "நான் இம்முனிவரின்மஹிமை

பால் வாக்குஒன்றால்மட்டில் எல்லாப்பிராணிகளுக்கும்பயத்தையுண்டு பண்ணுவதும் அடையமிக்கவரிதுமான சாபப்பிறவியை அடைந்தேன். இம்முனிவரை அடுத்துப்பிழைக்கும் மிருகங்களும் அப்படியே பறவைக்கூட்டங்களும் இங்குள்ள மற்றப்பிராணிகளும் பயத்தால் நடுக்கமும் துன்பமுமுள்ளவைகளாயிருக்கின்றன. உலகில் எல்லாப்பிராணிகளையும்விட உத்தமமானபலம் நிலைபெற்றிருப்பதான அத்தகையசாபத்தன்மையை ஒருஸமயம் அவைகளுக்கும் இவர் கொடுப்பார். இவர் ஒருஸமயம் பக்ஷிகளுக்கும் கருடனுடையபலத்தை யளிப்பர். கருணையை அடைந்து மிக்கப்ரீதியுடன் ஸந்தோஷமுள்ளவராய் வேறொருபிராணிக்குப் பலத்தைக் கொடாமலிருக்குங்காலத்திலேயே சீக்கிரம் நான் இந்தப்பிராம்மணனைக் கொல்லவேண்டும். முனிவரைக்கொன்றபின் ஸந்தேஹமின்றி நான் இங்கிருக்கமுடியும்' என்று ஆலோசித்தது. உடனே அம்முனிவரால் தவவலிமையால் ஞானக்கண்ணால் (அஃது) அறியப்பட்டது. அறிந்தவுடன் அறிவுள்ளமுனிவர் சாபமளிக்கத் தொடங்கினர். 'பிருகுவின்குலத்தில் உதித்தவனும் அக்நிப்ரபனென்னும் பெயர்வாய்ந்தவனும் முனியுமானநான் மனத்தால் உலகத்தையெரிக்கவும் தரிக்கவும் சக்திபெற்றவன். தேவர்களும் சராசரமானஎல்லாஉலகமும் எனக்குவசப்பட்டிருக்கின்றன. தேவர்களும் என்னிடம்பயந்துகொண்டு தம்தர்மத்தை விடாதவர்களாயிருக்கிறார்கள். தம்தர்மத்தைவிட்டகன்ற எவர்களையும் வாக்குஒன்றால்மட்டில் எரித்துவிடுவேன். அடா! துன்பமில்லாதசாபத்தன்மையை என்னால் அடைவிக்கப்பட்ட நீ எவ்வளவு? எல்லாப்பிராணிகளுள்ளும் கொடியதும் தாழ்ந்ததும் அசுத்தியுள்ளதும் நாயுமானநீ சிறுபுலியாயிருப்பதை அடைந்தாய். சிறுபுலியாயிருந்து வேங்கைத்தன்மையை அடைந்தாய். அதிலிருந்து கொழுத்தயானையாயும் யானையாயிருந்து ஸிம்மமாயும்வந்தாய். சிங்கமாயிருந்து பலமடைந்தநீ திரும்பவும் சரபத்தன்மையை அடைந்தாய். இவ்விதம் நீ ஸ்நேஹத்தால்சூழப்பட்ட என்னால் பலவிதமாயுண்டு பண்ணப்பட்டவனேயல்லாமல் அந்தஅந்தக்குலத்தில் சேர்ந்தவனல்லன். ஏ! பாபி! இவ்விதம் பாபமில்லாதஎன்னை நீ கொல்லவிரும்பிய காரணத்தால் திரும்பவும் உன்பிறப்பையடைந்து நாயாயிருக்கக்கடவாய்' என்றுசபித்தார். பிறகு முனிவரைப்பகைத்ததும் துஷ்டஸ்வபாவமுள்ளதும் அவிவேகமுள்ளதும் அறிவற்றதுமானசரபமானது ரிஷியால்சபிக்கப்பட்டுத் திரும்பவும் அந்தநாயுருவத்தையடைந்தது.

## நூற்றுப்பதினெட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் மந்திரிமுதலானவர்களின்குணங்களைச் சொல்லியது.)

ரிஷியால்ஹுங்காரஞ் செய்யப்பட்டுத் தபோவனத்திலிருந்து வெளியில்விலக்கப்பட்டதும் பாபமுள்ளதும் தன்னிலைமையை அடைந்ததுமான அந்தநாயானது பெருந்துன்பத்தையடைந்தது. இவ்விதமிருப்பதால், புத்தியுள்ள அரசன் சீலம், சுத்தி, நேர்மை, ஸ்வபாவம், புத்தி, கல்வி, நடை, குலம், அடக்கம், கருணை, பலம், வீரியம், பெருமை, மனவடக்கம், க்ஷமைஇவைகளை அறிந்துகொண்டு யோக்யர்களாயிருப்பவர்களை மந்திரிகளாகவும் வேலைக்காரர்களாகவும் அந்த அந்த அதிகாரங்களில் நிலைக்கச்செய்து நன்றாக ரக்ஷிக்கவேண்டும். அரசன் பரீக்ஷைசெய்யாமல் வேலைக்காரனை நியமிக்கக்கூடாது. கெட்டகுலத்திலுதித்தமனிதர்களால் சூழப்பட்ட அரசன் ஸுகமாக வளரமாட்டான். அரசனே! நற்குலத்திற்பிறந்தவன் அவிவேகியாயிருந்தாலும் குற்றமில்லாமல்நிந்திக்கப்பட்டாலும் அக்குலத்திற்பிறந்தகாரணத்தால் எப்பொழுதும் பாபத்தில் புத்தியைச்செலுத்தப டான். கெட்டகுலத்திலுதித்த அவிவேகியானமனிதனோ ஸ களை அடுத்து அடையமுடியாத ஐஶ்வர்யத்தைஅடைந்தாலும் நிந் கப்பட்டால் பகைத்தன்மையை அடைவான். காக்கையும் நாயும் பூனையும் பாம்பும் கெட்டகுலத்திலுதித்தமனிதனும் அவ்விதமானஸ்திரீயும் ஸமமாகச்சொல்லப்படுகிறார்கள். ஸ்திரீயானாலும் அல்லதுபுருஷனானாலும் கெட்டகுலத்திற்பிறந்தவர்களை லோகபாலர்களும் எப்பொழுதும் பயத்துடன் பார்க்கிறார்கள். அவர்களிடத்திலும் சீலமானது பெருமைக்குக்காரணமாகும். மனிதனும் ஸ்திரீயும் கெட்டகுலத்திற்பிறந்தவர்களாயினும் கொல்லாமையும் சீலமுமுடையவர்களாயிருந்தால், தர்மம் [1]வ்ருத்தியடையும். மஹாராஜனே! ப்ருஹஸ்பதி, தர்மத்தைப்பற்றி ஶ்லோகங்களைச் சொல்லுகிறார். ராஜனே! அவைகள் யாவற்றையுங்கேட்டு மனத்தில் வைத்துக்கொள். அவைகளின்பொருளாவது, 'அடக்கமுள்ளரிஷிபோலச் சுத்தமானசெய்கையுள்ளவனும் நன்னடையிலிருப்பவனுமானவன் கறுத்தசண்டாளனாயினும் அவனைத் தேவர்கள் பிராம்மணனுக்கொப்பாக அறிகிறார்கள்.

[1] முன்பின் பொருத்தத்திற்குவேண்டி இவ்விதம்எழுதப்பட்டது. மூலத்தில் 'கலக்கமடையும்' என்றிருக்கிறது.

பிரஜைகளுக்குஹிதனுன ஒருவன் எல்லாப்பிராணிகளின் நன்மையையும் வேண்டிப் பாபியான ஒருபிராணியைக்கொல்லுவானுகில் அந்தக் காரியத்தால் அவன் தீங்குசெய்தவனுகமாட்டான். பசுக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் ஹிதத்திற்காகவும் குழந்தைகளையும் ஸ்திரீகளையும் கிழவர்களையும் நோயாளிகளையும் ரக்ஷிக்கவேண்டியதற்காகவும் எவன் சிறுத்தைப்புலியையும் சரபத்தையும் சிங்கத்தையும் வேங்கைப்புலியையும் யானையையும் எருமைக்கடாவையும் காட்டுப்பன்றியையும் பன்றியையும் நாயையும் பாம்பையும் கொல்லுகிறுனே அவன் தர்மம்தெரிந்தவன். பிராம்மணனுயிருந்தும் பாபத்தைச்செய்கிறவனும் மிலேச்சனுயிருந்தும் பரிசுத்தனும் தர்மத்தைச்செய்கிறவனுமாயிருந்தால் அவர்களுள் மிலேச்சன் சிறந்தவனும் பிராம்மணன் மிக்கபாபியுமாவார். கெட்டகுலத்தில் பிறந்தவனுனுலும் நற்குலத்தில்பிறந்தவனுனுலும் ஒருமனிதன் நல்ல சீலமுள்ளவனுயிருந்தால் அவனுடைய ஸ்வபாவத்தையும் நிலைத்ததென்றே நிலையற்றதென்றே தெரிந்துகொண்டு அரசன் திருப்தியுள்ளவனுகி உயர்ந்த தானவேலையைக் கொடுக்கவேண்டும். அரசன் கெட்டநடையுள்ள மனிதனைக் கெட்டகாரியங்களில் ஏவவேண்டும்' என்பது. நற்குலத்தில்பிறந்தவனும் கல்வியில்சிக்ஷிக்கப்பட்டவனும் பண்டிதனும் ஞானவிஜ்ஞானங்களில் தேர்ந்தவனும் எல்லாச்சாஸ்திரங்களுடைய பொருளின்உண்மையையும் அறிந்தவனும் பொறுக்குந்திறமையுள்ளவனும் நல்லதேசத்திலுண்டானவனும் நன்றியறிவுள்ளவனும் பலமுள்ளவனும் பொறுமையுள்ளவனும் மனத்தையடக்கினவனும் இந்திரியங்களைஜயித்தவனும் பேராசையற்றவனும் கிடைத்ததுகொண்டுஸந்தோஷிப்பவனும் எஜமானனுக்கும் மித்திரனுக்கும் க்ஷேமத்தை விரும்புகிறவனும் சேர்ந்திருப்பவனும் தேசகாலங்களை அறிந்தவனும் யாவற்றையும்சேர்ப்பதில்விருப்பமுள்ளவனும் பரிசுத்தியுள்ளவனும் நியாயமாகப்பேசுகிறவனும் நன்மையைவிரும்புகிறவனும் சோம்பலில்லாதவனும் நியாயமான ஆசாரமுள்ளவனும் தன்தேசத்திற்கு வேண்டிய ஸந்திவிக்ரஹங்களில் பண்டிதனும் பிரஸித்தியுள்ளவனும் (அறம், பொருள், இன்பமாகிய) மூவகைப்பயனையும் அறிந்தவனும் நகரியுள்ளவர்களுக்கும் தேசத்திலுள்ளவர்களுக்கும் பிரியனும் படைகளைப்பகுத்துவைப்பதென்னும் வ்யூகத்தின் உண்மையையறிந்தவனும் ஸேனைகளைஉத்ஸாஹப்படுத்துவதில்ஸமர்த்தனும் [1] இங்கிதத்தையும் எண்ணத்தைவெளியிடும் முகக்குறிகளின்உண்மையையும் அறிந்

[1] அபிப்பிராயத்தைவிளங்கச்செய்யும் சேஷ்டை.

தவனும் ஸேனைகளின் பிரயாணத்தில் ஸமர்த்தனும் யானைகுதிரை களைப்பழக்குவதின் உண்மையில்அறிவுள்ளவனும் அகங்காரமற்றவனும் சுறுசுறுப்புள்ளவனும் தைரியமுள்ளவனும் அடக்கமுள்ளவனும் பலமுள்ளவனும் நியாயமாகஆலோசிக்குந் திறமையுள்ளவனும் பரிசுத்தனும் பரிசுத்தமானஜனங்களால் சூழப்பட்டவனும் நல்ல வேஷமுள்ளவனும் ஸுகமாகப்பார்க்கத்தக்கவனும் காரியங்களை நிர்வஹிப்பவனும் நீதியில் ஸமர்த்தனும் ஆறு குணங்களுடையவனும் புத்தியில் தடையற்றவனும் வணக்கமுள்ளவனும் குரூரமற்றவனும் மிருதுவாகப்பேசுகிறவனும் தீரனும் சூரனும் பெரியஸம்பத்துள்ளவனும் தேசகாலங்களுக்குத்தக்கபடி செய்கிறவனுமாயிருப்பவனை மந்த்ரியதிகாரத்தில்வைத்து எந்த அரசன் அவனை அவமதியாமலுமிருக்கிறானோ அந்த அரசனுடையராஜ்யமானது சந்திரனுடையசந்திரிகை போலப்பெருகும். இப்படிப்பட்ட குணங்களுடன்கூடியவனும் [1]சாஸ்திரங்களில்ஸமர்த்தனும் தர்மத்தைமுக்கியமாகக்கொண்டவனும் பிரஜைகளைப்பாதுகாப்பதில் மிகப்பிரீதியுள்ளவனும் தீரனும் பொறுமையுள்ளவனும் பரிசுத்தனும் வேகமுள்ளவனும் ஸமயத்திற்குத் தக்க முயற்சியையறிந்தவனும் கேட்கவிருப்பமுள்ளவனும் கேட்டவனும் கேட்கிறவனும் [2]ஊஹத்திலும் [3]அபோஹத்திலும்ஸமர்த்தனும் சிறந்தபுத்தியுள்ளவனும் ஞாபகசக்தியுள்ளவனும் நியாயமாகக்காரியங்களைச்செய்கிறவனும் அடக்கமுள்ளவனும் எப்பொழுதும் பிரியமாகப் பேசுகிறவனும் விரோதியிடத்திலும் பொறுமையுள்ளவனும் [4]கொடுப்பது நில்லாமலிருக்கும்படி தான் செய்கிறவனும் ஶ்ரத்தையுள்ளவனும் காட்சிக்குஇனியவனும் எப்பொழுதும்துன்பமுள்ளவர்களுக்குக் கை கொடுப்பவனும் ஹிதத்தைச்செய்யும் மந்திரிகளுள்ளவனும் நீதியில் விருப்பமுள்ளவனும் தானென்னும்அஹங்காரம்பேசாதவனும் ஸுகதுக்கமுதலிய த்வந்த்வங்களைவிலக்காதவனும் (தனக்குத்தோற்றியபடி)ஏதாவதொன்றைச்செய்யாதவனும் வேலைசெய்தால் [5]அமாத்தியர்களுக்கு உபகாரஞ்செய்கிறவனும் வேலைக்காரர்களிடம் பிரீதியுள்ளவனும் ஜனங்களைச்சேர்க்கிறவனும் புத்தியில்தடைப்படாதவனும் எப்பொழுதும் தெளிந்தமுகமுள்ளவனும் ரக்ஷிக்கிறவனும் வேலைக்காரர்களை அபேக்ஷிக்கிறவனும் கோபமில்லாதவனும் மிகப்பெரியமனமுள்

---

1 இரண்டுசொற்கள் விடப்பட்டன.

2, 3, ஸபாபர்வம் 14 - ம் பக்கம் 1, 2, குறிப்புக்களிற்காண்க.

4 வேறுபாடங்கொள்ளப்பட்டது. ' அதிகமாகக்கெடுக்காதவனும் கார்யங்களைத் தானே நேரில்செய்கிறவனும்' என்பதுமூலத்துக்குப்பொருள்.

5 வேறுபாடங்கொள்ளப்பட்டது.

ளிவனும் நியாயமாகத்தண்டிப்பவனும் தண்டமில்லாமலிராதவனும் தர்மகார்யங்களைக் கட்டளையிடுகிறவனும் சாரர்களைக் கண்ணுகக் கொண்டவனும் பிரஜைகளைக்கவனிக்கிறவனும் எப்பொழுதும் அறம் பொருள்களில்ஸமர்த்தனுமாக நூறுகுணங்கள்நிறைந்த அத்தகைய அரசன் விரும்பத்தக்கவனுவான். அரசனே! ராஜ்யத்தைத்தரிக்கும் விஷயத்தில் துணைவர்களும் நல்லமனிதர்களும் எல்லாக்குணங்களின் கூட்டங்களுடனும்கூடியவர்களுமான யுத்தவீரர்களையும் தேட வேண்டும். ராஜ்யத்தின் வளர்ச்சியைவிரும்பும் அரசன் அவர்களை அவமானஞ்செய்யக்கூடாது. யுத்தத்தில் ஸாமர்த்தியமுள்ளவர்களும் நன்றியறிவுள்ளவர்களும் சாஸ்திரங்களில்ஸமர்த்தர்களும் தர்மசாஸ்திரங்களை நன்குகற்றவர்களும் காலாட்களால் சூழப்பட்டவர்களும் பொருளிலும் மானத்திலும் பெருமையுள்ளவர்களும் ரதத்தைநடத்துவதில் ஸமர்த்தர்களும் அம்புகளிலும்அஸ்த்ரங்களிலும் ஸமர்த்தர்களுமானயுத்தவீரர்கள் எந்தஅரசனுக்கு இருக்கிறார்களோ இந்தப்பூமியானது அந்தஅரசனுடையதாகும். ஞாதிகளை அவமதியாமலிருப்பதும் வேலைக்காரர்களிடம் வஞ்சகமில்லாதிருப்பதும் பொருள் சம்பாதிப்பதில் ஸாமர்த்தியமுமுள்ள அரசனிடம் இப்பூமி நிலைபெற்றிருக்கும். எந்தஅரசனிடம் சோம்பலும் தூக்கமும் குடிமுதலிய வ்யஸனங்களும் விசேஷமாகப்பரிஹஸிக்கக்கூடிய தன்மையும் இல்லையோ அவனிடந்தான் இப்பூமி நெடுங்காலமிருக்கும். பெரியோர்களைஸேவிப்பவனும் பெரியஉத்ஸாஹமுள்ளவனும் எல்லாஜாதிகளையும்ரக்ஷிப்பவனும் எப்பொழுதும்தர்மத்தைச்செய்கிறவனுமான அரசனிடம் இப்பூமி நெடுங்காலமிருக்கும். நியாயவழியை அநுஸரித்தலும் விடாமுயற்சியும் சத்துருக்களை அலக்ஷியஞ்செய்யாமையுமுள்ள அரசனிடம் இப்பூமி நெடுங்காலமிருக்கும். பௌருஷமும் தெய்வமும் அவைகளின்வேற்றுமையும் முன்னிருந்தமனுவால் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. அவைகளையே சொல்லுகிறேன்; கேள். அரசர்களுக்குப் பௌருஷத்தையே பிருஹஸ்பதி கூறுகிறார். குருக்களிற்சிறந்தவனே! நீ எப்பொழுதும் நீதிஅநீதிகளின்விதியைத் தெரிந்தவனுயிரு. விரோதிகளின்இடைவெளியைக் கண்டுகொள்ளுகிறவனும் மித்திரர்களுக்குஉபகாரஞ்செய்கிறவனும் வேலைக்காரர்களின் விசேஷங்களை அறிகிறவனுமான அரசன் ராஜ்யத்தின்பயனை அடைகிறான். எந்தஅரசன் எப்பொழுதும்முயற்சிசெய்யும்தன்மையுள்ளவனும் நிறைந்தஆலோசனையுள்ளவனும் யாவற்றையும்சேர்ப்பதில் முயற்சியுள்ளவனுமாயிருக்கிறானே அந்தஅரசன் அரசர்களில்

மிகச்சிறந்தவனாவான். ஓ! பாரத! வீரர்கள்ஏறிய ஆயிரம்குதிரைக ளுள்ளவனும் பலமனிதர்களைச்சேர்த்தவனுமான அரசனால் பூமிமுழு மையும் ஜயிக்கக்கூடும்.

---

## நூற்றுப்பத்தொன்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், வேலைக்காரர்களைநியமிக்கவேண்டியதையும் அவர் களின்லக்ஷணங்களையும் சொல்லியது.)

இவ்விதம் குணங்களுடன்கூடியவேலைக்காரர்களைத் தம்தம் ஸ்தானத்திலும் வேலைகளிலும் எந்தஅரசன் ஏவுகிறானோ அந்தஅர சன் ராஜ்யத்தின்பயனை அடைகிறான். [1]நாயானது தனக்குரியநிலை மையையும் அளவையும்மீறிப் பூஜித்து மேலாகவைக்கத்தக்கதன்று. தன்னிலைமையிலிருந்துதூக்கி வேறுஸ்தானத்தில் வைக்கப்படும்நா யானது தவறுதலை அடையும். தம்ஜாதிக்குரியகுணங்கள் நிரம்பிய வர்களும் தமக்குள்ளதர்மங்களில் நிலைபெற்றவர்களுமானவர்களை அமாத்தியாதிகாரத்தில் வைக்கவேண்டும். தகாதவிடத்தில் அதி காரம்கொடுப்பது யுக்தமன்று. எந்தஅரசன் வேலைக்காரர்களுக்குத் தக்கவேலைகளைக் கொடுக்கிறானோ அவன் வேலைக்காரர்களின் குணங் களாலுண்டாகும்பயனை அடைகிறான். சரபம் சரபஸ்தானத்திலும் சிங் கம் சிங்கஸ்தானத்திலும் வேங்கை வேங்கைஸ்தானத்திலும் சிறுத் தை சிறுத்தைஸ்தானத்திலும் எவ்விதமிருக்கத்தக்கவையோ அவ்வி தமே வேலைக்காரர்களையும் விதிப்படி அவரவர்களுக்குத்தக்கவேலை களில் வைக்கவேண்டும். வேலைகளின்பயனை அடையவிரும்பும்அர சன் அந்தவேலைக்காரர்களை விபரீதமாயிருக்கும்படி செய்யக்கூடாது. அளவைமீறி விபரீதமாக வேலைக்காரர்களைஸ்தாபிக்கிற புத்தியில்லாத அரசன் பிரஜைகளுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணமாட்டான். குணத்தைவிரும்பும் அரசன் சிறுவர்களையும் நீசர்களையும் அறிவற்ற வர்களையும் இந்திரியங்களை அடக்காதவர்களையும் கெட்டகுலத்தில் பிறந்தஜனங்களையும் தன்அருகில் வைத்துக்கொள்ளக்கூடாது. ஸா துக்களும் நல்லகுலத்தில்பிறந்தவர்களும் சூரர்களும் அறிவுள்ளவர் களும் அஸூயையற்றவர்களும் பெருந்தன்மையுள்ளவர்களும் பரி சுத்தர்களும் ஸமர்த்தர்களுமானமனிதர்கள் அரசனுக்கு அருகிலிருக் கத்தக்கவர்களாவார்கள். [2]கீழ்ப்படிந்தவர்களும் அரசனைமேன்மை

---

1 வேறுபாடம். 2 வேறுபாடம்.

யாகக்கொண்டாடுகிறவர்களும் அடக்கமுள்ளவர்களும் பரிசுத்தர்களும் இயற்கையிலமைந்த சுபகுணமுள்ளவர்களும் தம்தம்நிலைமையிலிருந்து தவருதவர்களுமாயிருப்பவர்கள் அரசனுக்கு வெளியில் ஸஞ்சரிக்கும்பிராணனுவார்கள்.

சிங்கத்தின்பக்கத்தில் எப்பொழுதும் சிங்கமே பரிவாரமாயிருக்கவேண்டும். சிங்கமல்லாதது சிங்கத்துடன்கூடினல் அது சிங்கம்போலப் பயனை அடையும். சிங்கத்தின் செய்கைகளின் பயனில்விருப்பமுள்ளசிங்கமானது நாய்களால் சூழப்பட்டதாயிருந்தால், அது நாய்களால் சூழப்பட்டகாரணத்தால், சிங்கத்தின்பயனை அனுபவிக்கத் திறமையுள்ளதாகாது. அரசனே! இவ்விதம் சூரர்களும் அறிவுள்ளவர்களும் பலகல்விகளுள்ளவர்களும் நற்குலத்தில்பிறந்தவர்களுமான மனிதர்களுடன்கூடியிருந்தால் பூமிமுழுமையையும் ஜயிக்கக்கூடும். ஸேவகர்களுள்ளவர்களிற் சிறந்தவனே! கல்வியில்லாதவனும் நேராக இல்லாதவனும் அறிவில்லாதவனும் பெரியகீர்த்தியில்லாதவனுமான வேலைக்காரனை அரசர்கள் பக்கத்தில்வைத்துக்கொள்ளக்கூடாது. அரசனுக்குஹிதர்களான எந்தவேலைக்காரமனிதர்கள் எஜமானன் காரியத்தைப்பெரிதாகக்கொண்டு அம்புபோலத் திரும்பாமற்செல்லுகிறார்களோ அவர்களிடத்தில் எப்பொழுதும் நன்மொழியைப் பேசவேண்டும். அரசர்கள் முயற்சியெடுத்துக்கொண்டு எப்பொழுதும் பொக்கசத்தை ரக்ஷிக்கவேண்டும். அரசர்கள் பொக்கசத்தையே மூலமாகக்கொண்டவர்களாகையால் பொக்கசத்தைப் பெருகச்செய்கிறவனுயிருக்கவேண்டும். எப்பொழுதும் உன்னுடைய தான்யமிருக்கும்வீடானது நன்ருகச்சேர்க்கப்பட்டதான்யங்களால் நிரம்பியிருக்கவேண்டும். நீ ஸாதுக்கள்விஷயத்தில் எப்பொழுதும் பொருள்களையும் தான்யங்களையும் கொடுப்பதைப் பெரிதாகக்கொண்டிரு. உன்னுடையவேலைக்காரர்கள் விடாமுயற்சியுள்ளவர்களும் யுத்தத்தில் ஸமர்த்தர்களுமாயிருக்கவேண்டும். குதிரைகளைப்பற்றிய பிரயோகங்களிலும் ஸாமர்த்தியமிருக்கவேண்டும். பாண்டுவின்குமாரனே! ஞாதிகளையும் பந்துக்களையும் கவனிக்கிறவனும் மித்திரர்களாலும் ஸம்பந்திகளாலும் பூஜிக்கப்படுகிறவனும் பட்டணத்திற்குவேண்டிய காரியத்தின் ஹிதத்தைக்கவனிக்கிறவனுமாயிரு. அப்பா! உறுதியைக் கொடுக்கத்தக்க இந்தப்புத்தியும் விசேஷஅறிவும் என்னுல் உனக்கு உபதேசிக்கப்பட்டன. இதுவிஷயத்தில் நாயின்கதையை உதாரணம் கூறினேன். திரும்ப எதைக்கேட்கவிரும்புகிறுய்?" என்றுகேட்டார்.

## நூற்றிருபதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், பிரஜைகளைப்பாலனஞ்செய்யுமுறை முதலியவற்றைக் கூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! ராஜதர்மத்தின்பயனை அறிந்த முன்னோர்களால் முன்காலத்தில் உபதேசிக்கப்பட்ட பலராஜதர்மங்கள் உம்மால் கூறப்பட்டன. பரதர்களிற்சிறந்தவரே! ராஜதர்மங்களை அறிந்தஸாதுக்களுக்குஸம்மதமும் முன்னடந்தவைகளும் விரிவாகச் சொல்லப்பட்டவைகளுமான அவற்றையே சுருக்கமாகஉபதேசிக்க வேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"எல்லாப்பிராணிகளையும் ரக்ஷிப்பது க்ஷத்திரியர்களுக்குரிய உத்தமதர்மமென்று சொல்லப்படுகிறது. அரசனே! அந்தரக்ஷணத்தைச்செய்யும்முறையைக் கேள். மயிலானது பலவர்ணங்களுள்ள தோகைகளை எவ்விதம் தரிக்கிறதோ அவ்விதம் தர்மமறிந்தஅரசன் பலவிதமானரூபத்தைக்கொள்ளவேண்டும். கடுமையையும் கபடத்தையும் (வரி) வாங்குகின்றதையும் ஸத்தியத்தையும் நேர்மையையும் அதுபோலத்தைரியத்தையும்அடைந்து நடுநிலைமையாயிருக்கும்அரசன் ஸுகமடைவான்; [1]எந்தவிஷயத்தில் எவ்விதஉருவம் இருக்க வேண்டுமோ அந்தவிஷயத்தில் அந்தஉருவத்தைக் காட்டவேண்டும். பலஉருவமுடையஅரசனுக்கு ஸூக்ஷ்மமானவிஷயமும் நாசமடையாது. மயிலானது சரத்காலத்தில் சப்தியாமலிருப்பதுபோல அரசன் எப்பொழுதும் மந்த்ராலோசனையை (வெளிவிடாமல்)காக்கவேண்டும். (மயில் இனிமையானகுரலும் உடம்பின்அழகும் தன்செய்கையில் ஸாமர்த்தியமும்பொருந்தியிருப்பதுபோல) அரசனும் அழகானசொற்களுள்ளவனும் ஸம்பத்துள்ளவனும் சாஸ்திரங்களில்ஸமர்த்தனுமாயிருக்கவேண்டும். நீரருவிகளில் (மயிலானது நாட்டமுள்ளதாயிருப்பதுபோல) வரவுசெலவுகளில் ஜாக்ரதையுள்ளவனாயிருக்கவேண்டும். மயிலானது மலையிலுள்ளமழைஜலங்களை ஆச்ரயிப்பதுபோல ஸித்திபெற்றபிராம்மணர்களை ஆச்ரயிக்கவேண்டும். [2]பொருளில்விருப்பமுள்ள அரசன் (மயில் தன்தலையிலுள்ளசிகையை எப்போதும்தூக்கிவைத்துக்கொண்டிருப்பதுபோல இயற்கையில் தர்மிஷ்டனென்று

[1] 'சிக்ஷயில்குரூரனாகவும் ரக்ஷயில்சாந்தனாகவும் இருக்கவேண்டும்' என்பது பழையவுரை. [2] வேறுபாடம்.

9றர்நிலைக்கும்படி) தர்மத்துக்குக்கொடிகட்டுவதுபோல அடையா ளங்களைக் காண்பிக்கவேண்டும். (மயிலானது தன்னைப்பாதுகாத்துக் கொண்டு பாம்புமுதலியவற்றை அடிக்க எப்போதும்ஜாக்ரதையாயிரு ப்பதுபோல) அரசன் எப்பொழுதும் தண்டத்தைமேற்கொண்டவ னும் ஆசாரத்தில் அஜாக்ரதையில்லாதவனுமாயிருக்கவேண்டும். மயி லானது இருக்கிற [1]மரத்திலிருந்து அதிகச் செழுமையுள்ளமரத்துக் குச்செல்வதுபோல உலகிலுள்ளவரவுசெலவைக்கண்டு வரவு அதிக மும் செலவுகுறைவுமாகவுள்ள கார்யங்களில் செல்லவேண்டும். [2]தன் கூட்டத்தார்களில் தான் உத்தரவுசெய்கிறவனும் சத்துருவினுடைய பூமியிலுள்ள தான்யங்களைக் குதிரைமுதலியவற்றின் நடைகளால் அழிக்கிறவனுமாயிருக்கவேண்டும். தன்பக்ஷம் விருத்தியடைந்த பிறகு ஸஞ்சரிக்கவேண்டும். தன்குறையைக் கவனிக்கவேண்டும். மயில் தன் தோற்றத்தினாலேயே காக்கைமுதலியவற்றின் குறைதோ ன்றும்படியிருத்தல்போலத் தன்நேர்மையினாலேயே சத்துருவின் குற்றங்கள்வெளியாகும்படி இருத்தல்வேண்டும். [3]வேட்டைமுதலிய வ்யாஜத்தால் வெளியில்ஸஞ்சரித்துக்கொண்டு எதிரிகளின் பக்ஷங் களை அழிக்கவேண்டும். காட்டிலுள்ளமலர்களைப்போலச் சப்தாதி விஷயங்களை நேருங்காலத்து விருப்புவெறுப்பின்றி அனுபவிக்க வேண்டும். (மயில் உயர்ந்த செழிப்புள்ளமலைகளை அடுப்பதுபோல) உயர்ந்தவர்களும் வ்ருத்தியடைந்தவர்களும் மலைபோன்றவர்களுமான அரசர்களை அடுக்கவேண்டும். மயில் களைத்தகாலத்து நிழலையடுப் பதுபோல இளைத்தகாலத்தில் ஞாதியை ஆச்ரயிக்கவேண்டும். மயில் வேனிற்காலத்தில் மரத்தில்மறைந்து ஒன்றுவதுபோல ரஹஸ்யமாய் ரக்ஷகனை அடையவேண்டும். [4]மயில்வருஷாகாலத்தில்களிப்பதுபோல இரவில் ஜனமில்லாவிடத்தில்களிக்கவேண்டும். மயிலினுடையகுணம் போலவே ஸ்திரீகளால் ரக்ஷிக்கப்பட்டவனாக ஸஞ்சரிக்கவேண்டும். கவசத்தை விடக்கூடாது. தானே தன்னை ரக்ஷித்துக்கொள்ளவேண் டும். (மயில் தான் ஸஞ்சரிக்கும்இடங்களில்போடப்பட்டவலைகளைவில

---

[1] 'மதுரஸத்தைப்பெருகவிடும்பனைமரத்தில் ஒருபக்கத்தில் மதுவைஎடுப் பதுபோலஜனங்களுக்குஹிம்ஸையில்லாமல் உலகத்திலுள்ளவரவுசெலவுகளு க்குத்தக்கபடிவரியைவாங்கவேண்டும்' என்பதுவேறுபாடம்.

[2] தன்கூட்டத்தார்கள்விஷயத்தில்சுத்தனும்' என்பதுவேறுபாடம்.

[3] 'ஸஞ்சரங்' என்றபாடம் கொள்ளப்பட்டது.

[4] 'மஜ்ஜேத' என்று பாடங்கொண்டு, 'மயில் ராத்திரியில்வெளிப்படா தபோல அரசன் மழைக்காலத்தில்வெளிப்படாமல் அந்தப்புரத்தில் ஸஞ் சரிக்கவேண்டும்' என்பது பழையஉரை.

க்கிக்கொள்வதுபோலச்) சாரர்களால் காண்பிக்கப்பட்டவிடங்களில் கபடமாகவைக்கப்பட்ட [1]பாசங்களை விலக்கவேண்டும். தெரிந்திருந்தும் அவ்விடத்திற்செல்லுவானாகில் நாசமடைவான். இவ்விதம் மயிலின் தர்மப்படி எப்பொழுதும்நடந்துவரும்மனிதன் (மயிலானது விஷமும் கோபமும் கோணலானநடையுமுள்ள பாம்புகளைக்கொல்லுவது போல) அதிகவிஷமுள்ளவர்களும் கோபமுள்ளவர்களும் கோணலானநடையுள்ளவர்களுமான சத்துருக்களைக் கொல்லுவான். மயில் புழுமுதலியவற்றை வெறுக்காததுபோல இகழ்ச்சியாயிருப்பவைகளிடத்தில் அஸூயைப்படக்கூடாது. (மயில் உறுதியான பக்ஷங்களை அடைந்திருப்பதுபோல்) உறுதியானமூலமுள்ள மந்திரிமுதலிய தன் பக்ஷங்களை நிலைக்கவைத்துக்கொள்ளவேண்டும். எப்பொழுதும் மயிலானது தன்இஷ்டப்படி தன்பக்ஷங்களை விரிவாகச்செய்வதுபோலத் தன்பக்ஷத்தார்களைப் பரவச்செய்கிறதென்கிற சிறந்தகாரியத்தைச்செய்யவேண்டும். எல்லா இடங்களிலிருந்தும் நல்லறிவைப் பெற்றுக்கொள்ளவேண்டும். விட்டிற்பூச்சியின்கூட்டமானது காடுகளில் விழுந்து இலையில்லாமற்செய்வதுபோல ஒன்றுசேர்ந்து சத்துருராஜ்யங்களில்செல்லவேண்டும். அரசன் இப்படி மயில்போலத் தன் ராஜ்யத்தைப் பரிபாலிக்கவேண்டும். ஸமர்த்தனான அரசன் தனக்கு அறிவை உண்டுபண்ணும் நீதியைச் செலுத்தவேண்டும். தன்புத்தியால்தன்னை அடக்கிக்கொண்டு பிறர்புத்தியாலும் விசாரித்து உறுதிசெய்துகொள்ளவேண்டும். இவ்விதமான ஆத்மகுணமானது சாஸ்திரத்தாலுண்டாகும் அறிவால் அடையப்படும். இது சாஸ்திரப்பயிற்சியின் பயனாகும். ஸாமோபாயத்தால் சத்துருவுக்குத் தன்னிடம் விஸ்வாஸம் உண்டாகும்படி செய்யவேண்டும். தன் சக்தியையும் அறிந்துகொள்ளவேண்டும். தன்னுடைய ஆலோசனையால் காரியத்தின் நிச்சயத்தையும் தன்புத்தியால் அதற்குத்தக்கஆலோசனையையும் செய்யவேண்டும். ஸாமோபாயத்தில் புத்தியுள்ள சிறந்த அறிவுள்ளவன் காரியாகாரியங்களைப்பகுத்து நடக்கத்தக்கவன், ஆழ்ந்தபுத்தியுள்ள தீரனுக்கு [2]உபதேசிக்கவேண்டியதில்லை. சிறந்த அறிவுள்ள அந்த மனிதன் புத்தியில் பிருஹஸ்பதிபோன்றவனாயினும் இழிந்தகதையாகிற புத்தியில்லாதவாதத்தைப்பேசுவானாகில் பிறனுடைய யுக்திவாதத்தால் காய்ச்சப்பட்ட இரும்பு ஜலத்தையடைந்து சீதலமாவதுபோலத் தன்ஸ்வபாவத்தையடைவான். அரசன் சாஸ்திரங்களால் கூறப்பட்

[1] தன்னைக் கொல்வதற்காகவைக்கப்பட்ட விஷம்முதலியவைகள்.
[2] வேறுபாடம்.

டனவும் தனக்கும்பிறருக்கும்உள்ளனவுமான [1]காரியங்களைத்தையுமே கேட்டுத்தெரிந்துகொள்ளவேண்டும். காரியங்களின்விதியையறிந்தஅரசன் சாந்தனும் குரூரனும் அறிவுள்ளவனும் சூரனுமாயிருப்பவனையும் [2]நன்றாகப்பேசும்மற்றவர்களையும் தன்காரியத்தில்ஏவவேண்டும். நேரில்பார்க்கப்படாவிட்டாலும் தமக்குத்தக்கவேலைகளில் நியாயமாகஇருப்பவர்களையும் நீண்ட (வீணையின்) தந்தியானது ஸ்வரங்களை அனுஸரிப்பதுபோல அனுஸரிக்கவேண்டும். தர்மங்களுக்குவிரோதமில்லாமல் அனைவர்களுக்கும் பிரியத்தைச்செய்யவேண்டும். 'இவ்வுலகம் என்னுடையது' என்று எண்ணும்அரசன் வ்யவஹாரத்தைஉண்மையாக அறிந்துகொண்டு ஸூர்யன் கிரணங்களைப்போல விருப்புவெறுப்புக்களை ஸமமாகச்செய்து மலைபோலஉறுதியாய்நின்று தர்மத்தையே ரக்ஷிக்கவேண்டும். தேசம், ப்ரக்ருதி, குலம்இவைகளின்தர்மங்களை அறிந்தவர்களும் ம்ருதுவாகப்பேசுகிறவர்களும் நடுவயதிலிருப்பவர்களும் தோஷமற்றவர்களும் நன்மையில்முயற்சியுள்ளவர்களும் ச்ரமத்தைஜயித்தவர்களும் பேராசையில்லாதவர்களும் படிப்புள்ளவர்களும் அடக்கமுள்ளவர்களும் தர்மங்களில்நிலையுள்ளவர்களும் [3]எல்லாவிஷயங்களையும் ரக்ஷிக்கிறவர்களுமாயிருக்கிறவர்களை அரசன் எல்லாக்காரியங்களிலும் நியமிக்கவேண்டும். சாரர்களால்பூஜிக்கப்பட்டு ஸந்தோஷமுள்ளவனாகி இந்தப்ரகாரம் வருவதும் போவதுமாகியகாரியங்களை யுக்தியாக நன்றாநடத்தவேண்டும். பழுதில்லாதகோபமும் ஸந்தோஷமுமுள்ளவனும் நேரில்காரியங்களைக்கவனிக்கிறவனும் தானேபொக்கசத்தைப்பார்க்கிறவனுமான அரசனுக்குப் பூமியானது பொருளைக் கொடுப்பதாகவேயிருக்கும். எந்த அரசனுடையரக்ஷையும் சிக்ஷையும் சாஸ்திரத்தில்சொல்லியபடி வெளியாகுமோ தன்னையும்ராஜ்யத்தையும் ரக்ஷித்துவரும்அந்தஅரசன் ராஜதர்மங்களை அறிந்தவனாகிறான். கிரணங்களால்ப்ரகாசிக்கும்ஸூர்யன்போல எப்பொழுதும் ராஜ்யத்தைப் பார்க்கவேண்டும். சாரர்கள் நன்றாகச்செல்லுகிறார்களாவென்று அறியவேண்டும். அவ்விதமே தானும் தன்புத்தியால் காரியங்களை நடத்தவேண்டும். அரசன் ஸமயத்தில் கிடைத்ததை எடுத்துக்கொள்ளவேண்டும். பொருளை வெளியிடக்கூடாது. புத்தியுள்ளவன் பசுவைக்கறப்பதுபோல ஒவ்வொருநாளும் பூமியைக் கறக்கவேண்டும். வண்டானது கிரமமாகப்

---

1 வேறுபாடம்.

2 'அதிகபலமுள்ளவர்களையும்' என்பது வேறுபாடம்.

3 'அறம்பொருள்களை ரக்ஷிக்கிறவர்களும்' என்பது வேறுபாடம்.

பூக்களிலிருந்து தேனைச்சேர்ப்பதுபோல அரசன் பொருளையெடுத்துக் குவியலாகச்செய்யவேண்டும். ஜனங்களைரக்ஷித்து மிச்சமாயிருக்கும்பொருளைத் தர்மவிஷயத்திலும் காமவிஷயத்திலும் உபயோகிக்கவேண்டும். சாஸ்திரமறிந்தவனும் அறிவுள்ளவனுமான அரசன் பொக்கசத்திலிருந்து செலவுசெய்யக்கூடாது. சிறியபொருளையும் அவமதிக்கக்கூடாது. சத்ருக்களை அலக்ஷியஞ்செய்யக்கூடாது. தன்னறிவால் தன்னைத் [1]தெரிந்துகொள்ளவேண்டும். அறியாதவர்களிடம் நம்பிக்கைகூடாது. சிறிதோ பெரிதோ பொருளைப்பெருகச்செய்வதில், உத்ஸாஹம், ஸாமர்த்தியம், அடக்கம், அறிவு, தேகம், தைரியம், சௌரியம், தேசகாலங்களில் ஜாக்ரதையாயிருப்பது இவை எட்டும் ஸாதனங்களாகும். நெருப்புச் சிறியதாயிருந்தாலும் நெய்யில்நனைக்கப்பட்டு வளர்ச்சியடைகிறது. ஒருவிதையும் பலவாயிரமாகிறது. ஆகையால், விஸ்தாரமானவரவுசெலவுகளை நன்றாகக்கவனித்துச் சிறியபொருளையும் அவமதிக்கக்கூடாது. பகைவன் தான் இளைஞனாயினும் யௌவனமுள்ளவனாயினும் கிழவனாயினும் எப்பொழுதும் அஜாக்ரதையாயிருக்கும்மனிதனைக் கொல்லுவான். காலத்தால் மற்றொருவன் அவனுடையமூலத்தை அழிப்பான். காலத்தைத்தெரிந்துகொள்வது அரசர்களுக்கு மிகஉத்தமமாகும். பலமில்லாதவனானாலும் பலமுள்ளவனானாலும் பகையாளியானசத்துருவானவன் கீர்த்தியை அபகரிப்பான்; இவனுடையதர்மத்தைக் கெடுப்பான்; பொருளுக்கு இடையூறு செய்வான்; இவன்பராக்ரமத்தைத் தடுப்பான். ஆகையால், முயற்சியுள்ளமனமுடையவனாயிருந்து சத்ருவினிடம் [2] அஜாக்ரதையில்லாதவனாயிருக்கவேண்டும். புத்தியுள்ளவன் சத்துருவின் குறையையும் பொக்கசத்தையும் ரக்ஷையையும் சேர்ந்திருக்கும் அறம்பொருள் என்னும் இரண்டுபயன்களையும் (புத்தியால்) தெரிந்துகொண்டு பிறகு ஸந்தியைச்செய்துகொள்ளவேண்டும்; அல்லது யுத்தமுதலியவைகளைச் செய்யவேண்டும். ஆகையால், அரசன் புத்தியுள்ளவனை ஆச்ரயிக்கவேண்டும். நன்றாகப்பிரகாசிக்கும் புத்தியானது பலமுள்ளசத்ருவையும் கொல்லும். குறைவடையும்பலமானது புத்தியால் ரக்ஷிக்கப்படுகிறது. சத்துருவானவன் புத்தியால்பீடிக்கப்பட்டு நாசமடைகிறான். புத்தியைமுன்னிட்டுச்செய்யும் காரியமானது மிகச்சிறந்ததாகும். ஆசையுள்ளமனிதன் குற்றமில்லாதவனும் புத்தியுள்ளவனுமாயிருந்தால் அல்பபலத்தாலும் எல்லாப்போகங்களையும் அடைவான். பிறரால்விரும்பப்படும் பொருள்களையெல்லாம் தானே அடையவிரும்

[1] வேறுபாடம். [2] வேறுபாடம்.

புகிறவன் சிறியதானக்ஷேமத்தையும் பூர்த்திசெய்துகொள்ளமாட்டான். ஆகையால், அரசன் ப்ராணிகளிடம் ஸ்நேஹமுள்ளவனுயிருந்துகொண்டு எல்லாப்ரஜைகளிடமிருந்தும் ஸம்பத்துக்குமூலமானபொருளை வாங்கவேண்டும். நீண்டகாலம் [1]துன்பமுள்ளவனுயினும் சக்திக்குத்தக்கபடி பொருளைத்தேடும் முயற்சியுடனிருக்கவேண்டும். கல்வியும் தவமும் பெருத்தபொருளுமாகியயாவும் முயற்சியால் அடையத்தக்கனவாகும். அது தேகமுள்ளவர்களிடம் புத்தியைப்பொறுத்ததாயிருக்கிறது ஆகையால், முயற்சியைப்பெரிதென்று தெரிந்துகொள்ளவேண்டும். இந்தத்தேகத்தில் புத்தியுள்ளவர்களும் பெரியமனமுள்ளவர்களுமான இந்திரனும் விஷ்ணுவும் ஸரஸ்வதியும் பூதங்களும் எப்பொழுதும்வஸிக்கிறார்கள். ஆகையால், அறிவுள்ளவன் (முயற்சிசெய்யாமல்) சரீரத்தை அவமதிக்கக்கூடாது. பேராசையுள்ளவனை எப்பொழுதும் [2]தானம்பெறுமல்செய்யவேண்டும். பேராசையுள்ளவன் பிறர்பொருளை அடைவதில் போதுமென்றுதிருப்தியடையமாட்டான். [3]புண்யத்தின்பயனைபோகத்தில் யாவரும் ஆசையுள்ளவர்கள். எவன் பொருளில்லாதவனே அவன் தர்மகாமங்களை அடையமாட்டான். பேராசையுள்ளவன் ஐச்வர்யத்தைப்பெற்றிருந்தாலும் பிறர்களுடையபொருள் போகம் பிள்ளை பெண்டிரையெல்லாம் விரும்புவான். ஆசையுள்ளவனிடம் எல்லாத்தோஷங்களும் இருக்கும். ஆகையால், அரசன் ஆசையுள்ளவனைச் சேர்த்துக்கொள்ளக்கூடாது. தாழ்ந்தமனிதனையும் நேரில்கண்டு வேலையில்ஏவவேண்டும். அறிவுள்ளவன் சத்துருக்களுடையமுயற்சிகளையும் எல்லாவிஷயங்களையும் நாசஞ்செய்யவேண்டும். பாண்டுகுமாரனை அரசனே! தர்மத்துடன் கூடியபிராம்மணர்களிடம் தத்வத்தை அறிந்தவனும் மந்த்ராலோசனையைக்காப்பாற்றுகிறவனும் உண்மையுள்ளவனும் நற்குலத்திற்பிறந்தவனுமாயிருப்பவன் ராஜ்யத்தைச்சேர்ப்பதில் ஸமர்த்தனுவான். சாஸ்த்ரவிதிகளால்சொல்லப்பட்டவைகளும் சுருக்கமாகச்சொல்லப்பட்டவைகளுமானராஜதர்மங்களைப் புத்தியாலறிந்துகொள். எந்தஅரசன் இந்தத்தர்மங்களை அனுஸரித்துக் காரியங்களைச்செய்கிறானே அவன் பூமியைப்பரிபாலிக்கச் சக்தியுள்ளவன். எவனுக்கு நல்லநீதியால் உண்டானதும் விதிப்படிஉண்டானதும் தர்மத்தால்உண்டுபண்ணப்பட்டதுமான ஸுகமானது ஸித்திக்கிறதோ அவனுடையநடை

[1] 'நீண்டகாலம் துன்பப்படுத்தியாவது' என்பது பழையஉரை.
[2] 'தானம்கொடுத்தலால்வெல்லவேண்டும்' என்றும் பொருளுண்டு.
[3] வேறுபாடம்.

யானது நிந்திக்கப்படுகிறதில்லை. அரசனே! அவன் மிகஉத்தமமான ராஜ்யஸுகத்தை அடைவான். பொருள்களையுடையவர்களும் புத்தியிலும்சீலத்திலும் பூஜிக்கப்பட்டவர்களும் சௌர்யமுதலியகுணங்களுள்ளவர்களும் யுத்தத்தில்காணப்படும் பராக்ரமமுள்ளவர்களும் ஸந்திவிக்ரஹமுதலிய ஆறுகுணங்களில் ஜாக்ரதையுள்ளவர்களும் முயற்சியுள்ளவர்களுமானசத்ருக்களையும் அஜாக்ரதையில்லாதிருப்பவன் லக்ஷ்யம்வைத்துக்கொண்டு சீக்கிரத்தில் கொல்லுவான். பலவிதமானகாரியங்களிலும் உபாயங்களைப் பார்க்கவேண்டும். உபாயமின்றிப் புத்தியைச் செலுத்தக்கூடாது. தோஷமில்லாதவர்களிடத்திலும் தோஷத்தைப்பார்க்கும்மனிதன் உத்தமமானஸம்பத்தையும் பெரிய கீர்த்தியையும் பொருளையும் அடையமாட்டான். ஸ்நேஹிதர்களுள் இரண்டுபேர்களுக்குள்ளபிரியத்தையும் ஒருவேலையில் அவர்கள் செய்ததையும் விசாரித்துத்தெரிந்து அவர்களில் எந்தமித்திரன் பெரிய பாரத்தை வஹிக்கத்தக்கவனோ அவனையே உத்தமஸ்நேஹிதனாக அறிவுள்ளவன் சொல்லவேண்டும். என்றால்சொல்லப்பட்ட இந்த ராஜதர்மங்களைச் செய். மனிதர்களைரக்ஷிப்பதில்புத்தியைச் செலுத்து. ஸுகமாகப் புண்யகர்மங்களின்பயனை அடைவாய். அரசனே! உலகம்யாவுமே தர்மத்தை மூலமாகக்கொண்டவை" என்றுசொன்னார்.

---

நூற்றிருபத்தோராவது அத்தியாயம்.

ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் தண்டத்தின்ஸ்வரூபமுதலியவற்றைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஸநாதனமான இந்தராஜதர்மமானது பிதாமஹரான உம்மால் சொல்லப்பட்டது. சிறந்ததண்டமானது எவ்விதமாயிருக்கிறது; தண்டத்தில் யாவும் நிலைபெற்றிருக்கின்றன. பிரபுவே! தேவர்கள் ரிஷிகள் மஹாத்மாக்களானபித்ருக்கள் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் பிசாசர்கள் விசேஷமாக மனிதர்கள் உலகில்பசுபக்ஷிமுதலிய தாழ்ந்தபிறப்பில்வஸிக்கும் எல்லாப்பிராணிகள் இவைகளுக்கும் மற்ற எல்லாவற்றிற்கும் பெரியதேஜஸுள்ளதண்டமானது மிகச்சிறந்ததென்னும்விஷயம் உம்மால் சொல்லப்பட்டது. பார்ப்பவர்களுக்கு, ஸ்தாவரஜங்கமங்களுடன்கூடியவைகளும் தேவர்களுடனும் அஸுரர்களுடனும் மனிதர்களுடனும்கூடியவைகளுமான உலகிலுள்ளயாவும் தண்டத்தின் அதீனமாயிருக்கின்றன. பரதர்களிற்சிறந்தவரே! ஆகை

யால், நான் இதைஉண்மையாகக்கேட்கவிரும்புகிறேன். தண்டமென்பது எது? தண்டம் எவ்விதமாயிருக்கிறது? எந்த உருவமுள்ளது? எதை முக்யமாகக்கொண்டது? எதை ஆத்மாவாகக்கொண்டது? எவ்விதச்செய்கையுள்ளது? எவ்வளவுமூர்த்திகளுள்ளது? எப்படி ப்ரபுவாகிறது? விசேஷமான ஹிதத்தைச்செய்யும்ஸ்வரூபமுள்ள தண்டமானது பிரஜைகளிடத்தில் எப்படி ஜாக்ரதையாயிருக்கிறது? எது இந்தஉலகத்தை முன்னும்பின்னும் ஜாக்ரதையுடன் பரிபாலிக்கிறது? எது முந்தினதாக அறியப்படுகிறது? தண்டமென்றுபெயருள்ளதும் சிறந்ததுமாயிருப்பது எது? தண்டம் எதிலிருக்கிறது? இந்தத்தண்டத்திற்கு எது கதியாகஇருக்கிறது?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"கௌரவ்ய! தண்டமென்னும் வ்யவகாரம் எதுஎன்பதையும் அது எவ்விதமானதென்பதையும் கேள். இவ்வுலகில் எல்லாம் எதில் அடங்கியிருக்கிறதோ அதுதான் [1]தண்டமென்பது. மஹாராஜனே! தர்மத்தைநன்றாக வெளியிடுவது தண்டமென்றும் வ்யவகாரமென்றும் சொல்லப்படுகிறது. உலகங்களில் அஜாக்ரதையில்லாதபுத்தியுள்ளவர் தர்மத்திற்குலோபம்வராதிருக்கும்படி செய்யும் முறைஎதுவோ அதுதான் [2]வ்யவஹாரமென்னும் சொல்லுக்குரிய முக்கியப்பொருளாகக் கொள்ளப்படுகிறது. அரசனே! இது முன் ஆதிகாலத்தில் மனுவாலும் நன்றாகச்சொல்லப்பட்டிருக்கிறது. [3]பிரியனிடத்திலும் அப்ரியனிடத்திலும்ஸமமானஉருவமுள்ளதும் நன்கு செலுத்தப்பட்டதுமான தண்டத்தால் எவன் பிரஜைகளை நன்கு பாதுகாக்கிறானோ அவன் கேவலம் தர்மஉருவமுள்ளவன்தான். முன்காலத்திலேயே மனுவால் இது கூறப்பட்டதென்று நான் முன்னமே சொல்லியவசனமானது வஸிஷ்டரால்சொல்லப்பட்ட பிரம்மதேவருடைய பெரியவசனமாகும். முந்தியே இவ்விதவசனம்சொல்லப்பட்டிருப்பதால் தண்டமானது முன்சொல்லப்பட்ட தர்மமென்றும் வ்யவகாரமென்றும் இவ்வுலகில்சொல்லப்படுகிறது. நன்குசெலுத்தப்படும் தண்டத்திலிருந்து எப்பொழுதும் மூவகைப்பயனுமுண்டாகும். உருவத்தால்ஜ்வலிக்கும்அக்நிபோலுள்ள தண்டமானதுபெரியதெய்வமாகும். எப்பொழுதும் அருகில்செல்லத்தகாததண்டமானது நீலோத்பலத்

1 வேறுபாடம்.

2 வ்யவஹார = திருட்டுமுதலியவற்றைவிலக்கும்தண்டம்; வி = இல்லை; அவஹார = கெட்டமார்க்கமாகப் பிறர்பொருளைத்திருடுவது.

3 'ப்ரஜைகளை ரக்ஷிப்பதால் வ்யவஹாரத்திற்கே தர்மமென்ற பெயர்' என்பது பழையவுரை.

தின் இதழ்போலக்கறுத்ததும் [1]நான்குகோரப்பற்களும் [2]நான்குகைகளுமுள்ளதும் [3]எட்டுக்கால்களும் [4]அநேகங்கண்களும் முளைபோன்றதும் உயர்ந்தமயிரும் [5]ஜடையும் [6]இரண்டுநாவும் சிவந்தவாயுமுள்ளதும் மிருகத்தின்தோலை ஆடையாகக்கொண்டதும் கடோரமுமானஉருவத்தைத் தரிக்கிறது. கத்தி, வில், கதை, வேல், த்ரிசூலம், இருப்புத்தடி, அம்பு, உலக்கை, கோடாலி, சக்கரம், ப்ராஸம், தடி, ரிஷ்டி, தோமரம், மற்றுமுள்ள அடிக்கஸாதனமான ஆயுதங்களையும் ஆத்மாவாகக்கொண்டு அந்தத்தண்டந்தான் வடிவமுள்ளதாய் உலகில் ஸஞ்சரிக்கிறது.

உடைப்பதும் துளைப்பதும் துன்பப்படுத்துவதும் அறுப்பதும் பிளப்பதும் கிழிப்பதும் கொல்லுவதும் ஓடுவதுமாகத் தண்டந்தான் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறது.

---

1 பிராணிகளைத்துன்பப்படுத்துவதற்கு ஸாதனமாயிருப்பவை. அவை மானபங்கம், பொருளை அபகரித்தல், சரீரதண்டம், கொலையென நான்குமாம். இந்நான்கும் தண்டத்திற்குக் கோரப்பல்லைப்போன்றவை.

2 பொருளெடுக்க ஸாதனமானவை. அவை பிரஜைகளிடமும் ஸாமந்தராஜர்களிடமும்வரிவாங்குதலும், பொய்சொல்லும்வாதிக்கு அவன் சொல்லும் பொருளுக்குஇரண்டுமடங்கு அபராதம் விதிப்பதும் பொய்சொல்லும் ப்ரதிவாதிக்கு ஸமமானபொருளை அபராதம் விதிப்பதும் பொருளுள்ளவனும் லோபியுமான பிராம்மணனிடமிருந்து பொருளையெல்லாம் கவர்வதுமென நான்குமாம். இவை தண்டத்திற்குக் கைபோன்றவை.

3 ஸஞ்சரிப்பதற்கு ஸாதனமாயிருப்பவை; அவை, 1 ஆவேதனம்(=கையொப்பமிட்டு வழக்கிடுவது) 2 பாஷா (=ப்ரதிவாதியையழைத்து அவன் முன்னிலையில் அவ்விதமேஎழுதிவைப்பது) 3 ஸம்ப்ரதிபத்தி (=வாதியின் வழக்கை ப்ரதிவாதிஒத்துக்கொண்டால் ஒருவனுக்கும் அபராதமின்றி ஸமாதானஞ்செய்வது) 4 மித்யோத்தரம் (=வாதியின்வழக்குப் பொய்யென்று சொல்வது) 5 காரணோத்தரம் (=வாதிசொல்லுகிறபடி நடந்ததுண்டு; ஆனால் அது திரும்பவும்கொடுத்தாய்விட்டதென்று ப்ரதிவாதிசொல்வது) 6 ப்ராங்நியாயம் (=இதேவிஷயத்தை முன்னொருஸமயம் இவன் என்னைக்கேட்டு அபஜயமடைந்தவனென்று ப்ரதிவாதிசொல்வது) 7 ப்ரதிபூ(=இம்மூன்று உத்தரங்களுக்கும் வாதிப்ரதிவாதிகள் செய்துகொடுக்கவேண்டிய பிணைச்சீட்டு) 8 க்ரியா (=அவரவர்கள் பக்ஷத்துக்குவேண்டிய ஸாக்ஷி, பத்திரம், அனுபோகம், ப்ரமாணம்முதலியவற்றைக் காண்பிப்பது) 9 பலஸித்தி(=அதிலிருந்து தவறாமலிருப்பவனுக்குஜயம்) இவைகளில் ஸம்ப்ரதிபத்தியென்னும் மூன்றாவதில் தண்டம்விதிக்கக் காரணமில்லாமையால் மற்றஎட்டும் தண்டத்திற்குக் கால்களென்று சொல்லப்படுகின்றன.

4 அரசன், அமாத்தியன், புரோஹிதன், பரிஷத்என்ற நான்கும் தண்டத்திற்குக் கண்களாகும்.

5 பலஸந்தேகமுண்டாவதால் ஜடையுள்ளதுபோலிருக்கிறது.

6 ஒன்றோடொன்று சேராத வாதிப்ரதிவாதிகளின் இரண்டுவித வசனங்களால் இரண்டுவிதநாக்குள்ளதுபோலிருக்கிறது.

ஓ! யுதிஷ்டிர! அஸி, விசஸனம், தர்மம், தீக்ஷ்ணவர்மா, துரா ஸதம், ஸ்ரீகர்ப்பம், விஜயம், [1]சாஸ்தா, வ்யவகாரம், ப்ரஜாகரம், சாஸ் திரம், பிராம்மணமந்த்ரம், ப்ரவசனம், பரம், தர்மபாலம், அக்ஷரம், தேவம், ஸத்யகம், நித்யகம், கிருஹம், அஸங்கம், ருத்ரதனயம், மனு, ஜ்யேஷ்டம், சிவங்கரம் என்ற இந்தப்பெயர்கள் தண்டத்திற் குச் சொல்லப்படுகின்றன. தண்டமென்பது வ்யாபகரும் யஜ்ஞ ரூபியும் அடிக்கடி பெரியஉருவத்தைத்தரிப்பவரும் மஹாபுருஷரு மானபகவான் நாராயணனென்னும்ப்ரபுவாகச் சொல்லப்படுகிறது. அவ் விதமே உலகத்தைப்பரிபாலிக்கும் தண்டநீதியானது பிரம்மதேவரின் புத்ரியென்றும் லக்ஷ்மியென்றும் நீதியென்றும் ஸரஸ்வதியென்றும் சொல்லப்படுகிறது. தண்டமானது பலசரீரங்களுள்ளது. குருவம்சத் தில் பிறந்தவனே! பயன், பயனற்றது, ஸுகம், துக்கம், [2]தர்மம்[3] அத ர்மம், [4]பலம், [5]அபலம், பாக்கியம், பாக்கியமில்லாமை, புண்யம், பாவம், குணம், தோஷம், காமம், காமமில்லாமை, க்ஷணம், பகல், இரவு, மாஸம், ருது, ஜாக்ரதை, அஜாக்ரதை, ஸந்தோஷம், சோகம், அடக் கம், அடக்கமில்லாமை, தெய்வம், பௌருஷம், மோக்ஷம், பந்தம், பயம், பயமில்லாமை, ஹிம்ஸை, அஹிம்ஸை, தவம், யஜ்ஞம், ஸமாதி, விஷம், அமிருதம், ஆதி, நடு, முடிவு, செய்த கார்யங்களின் விஸ்தா ரம், கொழுப்பு, ஸந்தோஷம், கர்வம், டம்பம், தைரியம், அதைரி யம், நீதி, அநீதி, சக்தி, அசக்தி, மானம், தடை, செலவு, செல வின்மை, வணக்கம், கொடுப்பது, காலம், அகாலம், பொய், அறி யாமை, உண்மை, ச்ரத்தை, அச்ரத்தை, முயற்சி, லாபம், நஷ்டம், ஜயம், அபஜயம், குரூரத்தனம், மிருதுத்தனம், அதிகக்கொடுமை, வரவு, வாராமை, விரோதம், விரோதமில்லாமை, காரியம், அகாரி யம், பலம், அபலம், அஸூயை, அஸூயையில்லாமை, தர்மம், அதர்மம், லஜ்ஜை, லஜ்ஜையில்லாமை, ஸம்பத்து, ஆபத்து, தேஜஸ், வேலைகள், பாண்டித்யம், பேசுந்திறமை, இவைகளைஉண்மையாகஅறி ந்துகொள்வதுஎனஇவ்விதம் தண்டத்திற்குப் பலஉருவங்கள் இவ்வுல கில்விளங்குகின்றன. இவ்வுலகில் தண்டம்இல்லாவிட்டால் ஒருவரோ டொருவர் அடித்துக்கொள்வார்கள். யுதிஷ்டிர! தண்டத்தின்பயத் தாலேயே ஒருவரையொருவர் அடியாமலிருக்கிறார்கள். அரசனே! இவ்வுலகில் பிரஜைகள் ஒவ்வொருநாளும் தண்டத்தால்ரக்ஷிக்கப்பட் டன்றோ அரசனைப் பெருகச்செய்கின்றன. ஆகையால் தண்டமென்

---

1 இரட்டித்துவருதலால் இங்கு ஒருசொல் விடப்பட்டது.
2 - 3 - 4 - 5 இவை இரட்டித்துவருகின்றன.

பதுமுக்கியஸ்தானமாகும். அரசனே! தண்டமானது இவ்வுலகத்தை எப்பொழுதும் அடங்கியிருக்கச்செய்கிறது. ஸத்யத்தில்நிலைபெற்றதர்மமென்னும் தண்டமானது பிராம்மணர்களிடமிருக்கிறது. தர்மத்துடன் கூடியபிராம்மணச்ரேஷ்டர்கள்தேவதைகளுடன்சேர்ந்தவர்களாயிருக்கிறார்கள். தேவர்களிடமிருந்து யாகமுண்டாயிற்று. யாகமானது தேவர்களை ஸந்தோஷப்படுத்துகிறது. ஸந்தோஷமுள்ள தேவர்களும் உலகத்தை இந்திரனிடம் ஒப்பிக்கிறார்கள். இந்திரனும் இந்தப்பிரஜைகளுக்கு அருள்கூர்ந்து அன்னமளிக்கிறான். எல்லாப்பிராணிகளின்பிராணன்களும் எப்பொழுதும் அன்னத்தில் நிலைபெற்றிருக்கின்றன. அதனால் ப்ரஜைகள் நிலைபெறுகின்றன. அந்தப்ரஜைகளிடம் தண்டம் விழித்துக்கொண்டிருக்கிறது. இவ்விதப்ரயோஜனமுள்ளதண்டமானது க்ஷத்திரியஉருவமடைந்து ப்ரஜைகளை ரக்ஷித்துக்கொண்டு எப்பொழுதும் மிக்கஜாக்ரதையுள்ளதாயும் அழிவற்றதாயும் விழித்துக்கொண்டிருக்கிறது. அஃது ஈசுவரன், புருஷன், பிராம்மணன், ஸத்வம், வ்ருத்தம், ப்ரஜாபதி, பூதாத்மா, ஜீவன்என்ற இந்த எட்டுப்பெயர்களால் கூறப்படுகிறது. ஈச்வரர் அரசனுக்கு வ்யவஸ்தையுள்ளதண்டநீதியையும் ஐச்வரியத்தையும் அளித்தார். அந்த அரசன் எப்பொழுதும் பலத்துடன்கூடியவனும் தர்மம், வ்யவகாரம், தண்டநீதி, ஈச்வரன், ஜீவன் என்று ஐந்துவித உருவமுள்ளவனுமாயிருக்கிறான். யுதிஷ்டிர! அவனுக்குக் குலமும் பலபொருள்களுடன்கூடிய அமாத்தியர்களும் நல்லஅறிவும் சரீரம்இந்திரியம்புத்தி இவைகளுடையஸாமர்த்தியங்களும் எட்டுவஸ்துக்களால் உண்டுபண்ணக்கூடியவேறானபலமும் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்தப்பலமானது யானைகள், குதிரைகள், தேர்கள், காலாட்கள், கப்பல்கள், சுமைதூக்குகிறவர்கள், நாட்டிலுள்ளவர்கள், (அரண்யத்திலுள்ள) இடையர்களென்னும் எட்டு அங்கங்களுமுள்ளதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் ஸந்நாகத்துடன்கூடியஸேனைக்குத் தேருள்ளவர்களும் யானையேறிச்செல்லுகிறவர்களும் குதிரையேறுகிறவர்களும் காலாட்களும் மந்திரிகளும் வைத்தியர்களும் பிக்ஷுகர்களும் நியாயாதிபதிகளும் சோதிடங்கற்றவர்களும் தெய்வங்களைஉபாஸிக்கிறவர்களும் பொக்கசமும் மித்ரர்களும் தான்யமும் எல்லாஉபகரணங்களுமிருக்கின்றன. அமாத்தியன்முதலிய ஏழுப்ரக்ருதிகளும் முன்கூறிய எட்டுஅங்கங்களும் சரீரமென்று அறிவிக்கிறார்கள். ராஜ்யத்திற்கு ஸேனையே அங்கமாகவும் தண்டநீதியே காரணமாகவும் இருக்கின்றன. அக்காரணத்தால் ஈச்வரர் அனுக்ரஹஞ்செய்து எப்

பொழுதும் உலகத்தை ரக்ஷிக்கும்தண்டத்தை அரசனுக்குக் கொடுத் தார். ஸநாதனமானஇந்தத்தர்மமானது தண்டத்தை அடுத்திருக் கிறது. உலகத்தைரக்ஷிக்கவேண்டியும் தம்தர்மத்தைநிலைக்கச்செய்ய வேண்டியும் பிரம்மதேவரால்காண்பிக்கப்பட்ட தர்மமென்னும்தண் டம்போலமிகவும்பூஜிக்கத்தக்கது [1]அரசர்களுக்கு வேறில்லை. வாதிப் ரதிவாதிகளிருவரையும் காரணமாகக்கொண்டுஉண்டாகும் வ்யவஹா ரம் [2]வேறொன்றிருக்கிறது; அதில் ஒருவன்மற்றொருவன்சொல்லு வதைஒத்துக்கொள்ளும் காரணத்தாலுண்டாகும்ஜயமானது ஹிதமுள்ளதாகக் காணப்படுகிறது. வ்யவஹாரமானது வேதத்தைக்கார ணமாகவுடையதும் வேதரூபமுடையதுமாகக் கூறப்படுகிறது. புரு ஷப்புலியே! குலபாரம்பரையில்வருவதென்றும் அப்படியே சாஸ்திரத் தில்கூறப்படுவதென்றும் வேறுஇரண்டுதண்டமிருக்கின்றன. இவை களில் வாதிப்ரதிவாதிகளைக்காரணமாகக்கொண்டதாக எந்தத்தண் டம் சொல்லப்பட்டதோ அந்தத் தண்டமானது அரசர்களிடமிருப்ப தாக நாமறிந்துகொள்ளவேண்டும்; அதன்காரணத்தையும் அறிந்து கொள்ளவேண்டும். காரணமுள்ளதாகக்காணப்படும்வ்யவஹாரமென் னுந்தண்டமும் ஸ்மிருதிகளில் கூறப்பட்டிருக்கிறது. ஸ்மிருதிகளிற் சொல்லிய அந்தவ்யவஹாரமும் வேதத்தில்சொல்லப்படும் விஷயந் தான். வேதத்திலிருந்துவெளியானவிஷயம் எதுவோ அது நல்லகுண முள்ளதாகக் காணப்படுந்தர்மந்தான். யுதிஷ்டிர! பரிசுத்தமானபுத்தி யுள்ளவர்களால்விதிக்கப்படுகிறதும் தர்மத்தைக்காரணமாகக்கொண் டதுமான பிராயச்சித்ததர்மமானது பிரஜைகளைரக்ஷிப்பதும் வேதத் தில் காணப்பட்டதுமான வ்யவஹாரமாகும். ஸம்பத்தைவ்ருத்திசெய் வதும் ஸத்யரூபியுமாயிருந்து மூன்றுலகங்களையும்ரக்ஷிக்கிறதண்டமா னது ஸநாதனமானவ்யவஹாரமாக நமக்குக் காணப்படுகிறது. வ்யவ ஹாரமென்றுகாணப்படுவது எதுவோ அது வேதமென்று எங்களுக் குக் கேள்வியுண்டு. வேதமானது தர்மமென்றும் தர்மமானது ஸன் மார்க்கமென்றும் ஸன்மார்க்கமானது முதலில்பிரஜைகளுக்குப்பதியும் பிதாமஹருமான பகவான்பிரம்மதேவரென்றும் அறியவேண்டும். அந்தப்பிரம்மதேவர்தாம் தேவர்கள், அஸுரர்கள், ராக்ஷஸர்கள், மனுஷ்யர்கள், உரகர்கள்இவர்களுடன்கூடிய எல்லாஉலகங்களுக்கும் கர்த்தரும் ப்ராணிகளைப்படைத்தவருமாகிறார். வாதிப்ரதிவாதிகளைக் காரணமாகக்கொண்டதாகக்காணப்படும் நம்முடையஇந்தவ்யவஹார மானது அவரிடமிருந்துவெளியானது. ஆகையால், இந்தவ்யவஹார

1 வேறுபாடம். 2 வேறுபாடம்.

ரத்தைப்பற்றிய உதாஹரணத்தை உபதேசித்தோம். ஸ்வதர்மத்தி லிருக்கும் அரசனுக்குத் தாயாலும் தந்தையாலும் உடன்பிறந்த வனாலும் பாரியையாலும் புரோஹிதராலும் தண்டிக்கத்தகாத வர் ஒருவருமில்லை.

---

## நூற்றிருபத்திரண்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், வஸுஹோமனுக்கும்மாந்தாதாவுக்கும்நடந்த ஸம்வாதத்தைச் சொல்லித் தண்டத்தின் உத்பத்திமுதலியவற்றைச் சொல்லியது.)

இந்தத்தண்டநீதியின் உத்பத்திவிஷயத்திலும் பழையஇவ்விதி ஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். அங்கதேசத்தில் வஸுஹோம னென்றுப்ரஸித்திபெற்றவனும் தேஜஸுள்ளவனுமான ஓர்அரசனிரு ந்தான். தர்மமறிந்தவனும் எப்பொழுதும்பெரியதவஞ்செய்கிறவனு மான அந்தஅரசன் பத்நியுடன் தேவக்கூட்டங்களாலும்ரிஷிக்கூட்டங் களாலும்ஸேவிக்கப்பட்ட முஞ்சபிருஷ்டஞ்சென்றான். அவ்விடத் தில் இமயமலையின்சிகரத்தில் வாஸஞ்செய்துவந்தான். அங்குள்ள முஞ்சமென்னும்ஆலமரத்தினடியில்ஜடையைத்தரிக்கும்படி ஸ்ரீராமர் ஆஜ்ஞாபித்தார். அறிவுள்ளவர்களிற்சிறந்தவனே! அதுமுதல் ருத்ர ரால்ஸேவிக்கப்படும் அந்தத்தேசமானது கடுமையானவ்ரதமுள்ளரிஷி களால் முஞ்சபிருஷ்டமென்றுசொல்லப்பட்டது. வேதங்களிற்சொல் லியபலகுணங்களுடன்கூடியஅந்தஅரசன் அந்தமுஞ்சபிருஷ்டத்தில் பிராம்மணர்களுக்குஇஷ்டனும் தேவரிஷிக்கொப்பானவனுமாயிருந் தான். ஒருஸமயத்தில் கம்பீரஸ்வபாவமுள்ளவனும் இந்திரனுக்கு நண்பனும் பூஜிக்கப்பட்டவனும் சத்துருக்களைத் துன்பப்படுத்து கிறவனுமான மாந்தாதாவென்னும்அரசன் அவனிடம்சென்றான். அந்தமாந்தாதாவானவன் வஸுஹோமனென்னும் அரசனருகிற் சென்று சிறந்ததவமுள்ள அவனைக்கண்டு வணக்கத்துடன் நின்றான். வஸுஹோமனும் மாந்தாதாவுக்கு அர்க்கியத்தையும் [1]பசுவை யும் அளித்து ஏழுஅங்கங்களுடன்கூடியராஜ்யத்தின்மேன்மையை யும் க்ஷேமத்தையும் ப்ரஸ்னஞ்செய்தான். மேலும் வஸுஹோம ராஜன் ஸாதுக்களால்முந்தி ஆசரிக்கப்பட்டதை விதிப்படி அநுஸரி க்கும் அந்தமாந்தாதாவைநோக்கி, 'அரசரே! உமக்கு என்னசெய்

---

[1] மதுபர்க்கமென்னும் உபசாரம்.

யவேண்டும்?' என்றும்கேட்டான். ஏ! குருநந்தன! அரசர்களில் மிகச்சிறந்த அந்தமாந்தாதாவும் அதிகஸந்தோஷமுள்ளவனுகி, உட்கார்ந்திருக்கும்மிகப்ராஜ்ஞனைவஸுஹோமராஜனைநோக்கி, 'வேந்தரே! உம்மால் ப்ருஹஸ்பதியின்மதம்முழுமையும் கற்கப்பட்டிருக்கிறது. மனிதர்களில்உத்தமரே! அப்படியே சுக்ராசாரியர்இயற்றியசாஸ்திரமும் உமக்குத் தெரிந்திருக்கிறது. ஆகையால், அதை நான் கேட்கவிரும்புகிறேன். தண்டமானது எவ்விதம் உண்டாகிறது? இதற்குமுன் எது விழித்துக்கொண்டிருக்கிறது? எது முக்கியமென்றுசொல்லப்படுகிறது? க்ஷத்திரியர்களிடம்நிலைபெற்றிருக்கும்தண்டமானது இப்பொழுது எவ்விதமிருக்கிறது? நீர் அதை எனக்கு உள்ளபடி உபதேசிக்கவேண்டும். நான் குருதக்ஷிணை கொடுக்கிறேன்' என்றுசொன்னுன்.

வஸுஹோமன் சொல்லத்தொடங்கினுன். "அரசரே! ஸநாதனமும் தர்மஸ்வரூபமுள்ளதும் உலகங்களைச்சேர்க்கஸாதனமுமான தண்டமானது ப்ரஜைகளை அடக்கிக்காக்கவேண்டியதற்காக எவ்விதமுண்டாயிற்றென்பதைக் கேளும். எல்லாஉலகங்களுக்கும்பிதாமஹரும் பகவானுமானபிரம்மதேவர் யாகஞ்செய்யவிருப்பங்கொண்டு தமக்குச்சமமான ரித்விக்கைக்காணவில்லையென்று நாம் கேள்விப்பட்டதுண்டு. பகவானை அந்தப்பிரம்மதேவர் பலவருஷங்கள் கர்ப்பத்தைத் தரித்துக்கொண்டிருந்தார். பிறகு ஆயிரம்வருஷம்நிறைந்தவுடன் அந்தக்கர்ப்பமானது அவர் தும்முங்காலத்தில் கீழேவிழுந்தது. அது பகைவர்களை அடக்குந்திறமையுள்ளவரும் க்ஷுபரென்னும்பெயருள்ளவருமான ஸ்ருஷ்டிகர்த்தாவாயுண்டாயிற்று. மஹாராஜரே! அந்தப்ப்ரஜாபதியானவர் மஹாத்மாவான அந்தப்பிரம்மதேவரின்யாகத்தில் ரித்விக்காயிருந்தார். ராஜச்ரேஷ்டரே! பிரம்மதேவரின் அந்த ஸத்ரயாகமானது நடக்கும்பொழுது ப்ரஜைகளை அடக்கும் பிரம்மதேவர் தீக்ஷைபெற்றிருக்கிருரென்று இஷ்டமானரூபத்துடன்செல்லத்தக்கதாயிருந்தபடியால் அந்தத்தண்டமானது மறைந்துவிட்டது. அந்தத்தண்டமானதுமறைந்ததும் பிராணிகளுக்கு [1]ஸாங்கர்யமுண்டாயிற்று. அப்பொழுது செய்யத்தக்கது செய்யத்தகாதது புஜிக்கத்தக்கது புஜிக்கத்தகாதது குடிக்கத்தக்கது குடிக்கத்தகாதது என்னும்வேற்றுமையேஇல்லை. ஹிம்ஸையென்பது ஏது? ஜனங்கள் ஒருவரையொருவர் ஹிம்ஸித்தார்கள். செல்லத்தக்கது செல்லத்தகாததுஎன்பதில்லை. தன்திரவியமும் பிறன்திரவியமும் ஸமமாயிருந்

[1] ஜாதிவேற்றுமையில்லாமை.

தன. நாய்கள்மாம்ஸத்தைக்கவர்வதுபோல ஜனங்கள் ஒருவருக்கொருவர் பொருளை அபஹரித்தார்கள். பலமுள்ளவர்கள் பலமற்றவர்களைக் கொன்றார்கள். (உலகம்) மர்யாதையில்லாததாயிற்று. பிறகு பிதாமஹர் ஸநாதனரானவிஷ்ணுபகவானைப்பூஜித்து (அவருடன்) வரமளிப்பவரும் தேவருமானமஹாதேவரைநோக்கி, 'ஓ! [1]சங்கரரே! இவ்விஷயத்தில் நீர் தயைசெய்யத்தக்கவராகிறீர். தர்மத்தைரக்ஷிக்கும்விஷயத்தில் இந்தவிஷ்ணுவானவர் உமக்குஸகாவாயிருக்கிறார். எல்லாவிதிகளையும் நீர் அறிந்தவர். நீர் பிராணிகளுக்கு உயர்ந்த கதியாயிருக்கிறீர். இந்தஸமயத்தில் ஸாங்கர்யமில்லாமலிருக்கும்படி செய்யவேண்டும்' என்றுசொன்னார். பிறகு உத்தமமானசூலத்தை ஆயுதமாகக்கொண்டவரும் தேவர்களுக்குந்தேவரும் உலகத்திற்குப் பெரியகாரணரும் பிரம்மாவிஷ்ணுஇந்திரன்இவர்களுடன்கூடியவரும் எல்லாத்தேவாஸுரர்களுடனும்கூடியவரும் தேவர்களுள்மிக உத்தமருமான பகவான்அந்தமஹாதேவர் அப்பொழுது தியானஞ்செய்து உலகத்தைநன்றாகரக்ஷிக்கவேண்டியதற்காக உலகத்தின் ஸங்கரத்தைநாசஞ்செய்வதும் தம்உருவமுள்ளதுமானதண்டத்தை ஸ்ருஷ்டித்தார். [2] அந்தத்தண்டமென்னும்தர்மத்திலிருந்து நீதியென்னும் ஸரஸ்வதிதேவியையும் மூன்றுலகங்களிலும் ப்ரஸித்தமானதண்டநீதியையும் உண்டாக்கினார். பாபத்தைச்செய்கிறவர்களிடம் இந்தத் தண்டமானது எப்பொழுதும் நீதியால் செலுத்தப்படுகிறது. தண்டத்தைச்செலுத்துங்காரணத்தால் அது தண்டநீதியென்று இவ்வுலகில் சொல்லப்படுகிறது. சூலத்தைத்தரிக்கும்ப்ரபுவும் மஹேஶ்வரரும் மஹாதேவருமானஅந்தப்பகவான் மறுபடியும் வெகுகாலம்த்யானஞ்செய்து தண்டநீதியைப்ரயோகஞ்செய்யவேண்டியதற்காக எல்லாவிதத்திலும் பிரமாணங்களும் சாஶ்வதமுமான நான்குவித்யைகளையும் அவைகளின் பலவிதமானபிரிவுகளையும் எல்லாச்சாஸ்திரங்களையும் உண்டுபண்ணினார். நான்குவேதங்களும் ஆறுஅங்கங்களும் மீமாம்ஸையும் விரிவானநியாயசாஸ்திரமும் புராணமும் தர்மசாஸ்திரமுமாகியஇந்தப்பதினான்குவித்யைகளும் ஆயுள்வேதம் தனுர்வேதம் காந்தர்வம்என்னும்மூன்றும் நான்காவதானஅர்த்தசாஸ்திரமும் ஆக

---

1 நீலகண்டவ்யாக்யானத்தோடுகூடின பதிப்புப்படி, 'கேசவ' என்பது பாடம்.

2 'அந்தத்தண்டமென்னும்தர்மத்தைஅனுஷ்டிப்பதற்காக, நீதிஸ்வரூபமுள்ளவளும் மூன்றுஉலகங்களிலும்பிரஸித்திபெற்றவளுமான அந்தஸரஸ்வதிதேவியானவள் தண்டநீதியை ஸ்ருஷ்டித்தாள்' என்பது வேறுபாடத்தின்பொருள்.

வித்தைகள்பதினெட்டுக்களேயாம். ப்ரஸித்தமான இப்பதினெட்டுவித்யைகளும் தர்மத்தைச்சேர்ந்தஸம்ஹிதைகளாகும். மஹேஸ்வரர் இந்தப் பதினெட்டுவித்யைகளின்பிரிவையுங் கூறினர். முந்நூறுசாஸ்திரங்களும் எழுபது மஹாதந்திரங்களும் மஹாதேவரால் கூறப்பட்ட இந்தவித்யைகளின்பிரிவுகள்தாம். ப்ரஸித்தமானபாசுபததந்த்ரமும் ப்ரஸித்தமானபாஞ்சராத்ரமும் யோகசாஸ்த்ரமும் ஸாங்க்யமும் லோகாயததந்த்ரமும் பிரம்மதூலையென்னும் ப்ரஸித்தமானதந்த்ரமும் தேவர்களுக்குரியதர்க்கவித்யையும் ஸுகதுக்கங்களைத் தெரிந்துகொள்ளக்காரணமென்றுப்ரஸித்திபெற்றசாஸ்திரமும் எட்டுவிதத்தர்க்கவித்யைகளும் விரிவானநியாயசாஸ்திரமும் அவரால் சொல்லப்பட்டன. புராணத்திலுள்ளவைகளும் யாகத்தைப்பற்றியவைகளுமான ஸம்ஹிதைகள் பதினெட்டுக்களென்றறியவேண்டும். இவ்வுலகிலுள்ள அவ்வளவுபுராணங்களும் ஸம்ஹிதைகளும் அவரால் இயற்றப்பட்டன. தர்மசாஸ்திரங்களும் அவ்விதமே புராணங்களும் வேதங்களும் ஒரேகருத்துள்ளவைகளேயல்லாமல் வேறுவிதமில்லை. ஆகையால், தேவரானசங்கரபகவான் பலபொருள்களுள்ள எல்லாச்சாஸ்திரங்களையும் காலத்தை அறிவிக்கும் சாஸ்திரங்களையும் அறுபத்துநான்குகலைகளையும் உத்தரபாகத்துடன்கூடிய ஆயுர்வேதத்தையும் பதினெட்டுப்பிரிவுகளுள்ளதும் நிலைபெற்றதுமான தண்டநீதியையும் காந்தர்வசாஸ்திரத்தையும் பலவிதவிஸ்தாரமுள்ள இதிஹாஸத்தையும் கூறினர். இவ்விதம் சப்தார்த்தங்களடங்கிய இந்தவித்யைகளும் திரும்பவும் அவைகளின்விஸ்தாரமான ஆயிரம்பிரிவுகளும் சங்கரரால் சொல்லப்பட்டன. ரிஷிகளாலும் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் உட்பிரிவுகளுடையதும் விஸ்தாரமுள்ளதுமானவேதம்ஒன்றே முழுமையும் உலகில் அடிக்கடி கற்கப்படுகிறது. சுருக்கமானநான்குவேதங்களும் பெரியோர்களால் இயற்றப்பட்ட ப்ரஸித்திபெற்றவேதவாதங்களுமான இவைகளின் கரையையடைந்தவன்தான் வேதபாரகனென்று சொல்லப்படுகிறான். ருத்திரரும் விஷ்ணுவும் இந்திரனும் ப்ருஹஸ்பதியும் சுக்கிரரும் உத்தமமானதர்மங்களையறிந்தஸ்வாயம்புவமனுவும் எப்பொழுதும் எல்லாத்தேவாஸுரர்களுடனுங்கூடினவரும் உத்தமருமானபிரம்மதேவரும் வேதபாரகர்களாகிறார்கள். (இவர்கள்) யாவருடையஅனுக்ரஹத்தாலும் வ்யாஸரும் வேதபாரகராகிறார். குருஸ்ரேஷ்டனே! சந்தனுவின்குமாரன் பீஷ்மனானநான், விஷ்ணு சங்கரர் பிரம்மா இவர்களுடைய அனுக்ரஹத்தால் வேதபாரகனென்று சொல்லப்படுகிறேன். யாஜ்ஞவல்க்யரும்

எல்லாவிதத்திலும் வேதபாரகராகிறார். [1]ஆதிகல்பத்தில் பிரம்மாவினு லும் விஷ்ணுவினுலும் சிவனுலும்ஸ்ருஷ்டிக்கப்பட்ட வித்யைகளும் ஒவ்வொருகல்பத்திலும் பெரியபாக்யம்பெற்றவர்களும் உண்மையைக் கண்டவர்களுமான ரிஷிகளாலும் ரிஷிகுமாரர்களாலும் பலபேர்கள் கூடிய ரிஷிக்கூட்டங்களாலும் திரும்பவும் பிரிக்கப்படுகின்றன. மறு படி ஸாதுக்களாலும் பிரிக்கப்படுகின்றன. இப்பொழுதும் பிரிக்கும் திறமையுள்ளவித்வான்களால் பிரிக்கப்படுகின்றன. இந்தஸரஸ்வதி யானது [2]முன்ஜன்மத்தை அனுஸரித்துப் பலவிதமாயிருக்கிறது. உத் தமமானசூலத்தை ஆயுதமாகக்கொண்ட அந்தப்பகவான் மறுபடியும் வெகுகாலம் தியானம்செய்து அந்தந்தவகுப்பிற்கு ஒவ்வொருவரைத் தலைவராகச் செய்தார். ஆயிரங்கண்ணுள்ள தேவனை இந்திரனைத் தேவர்களுக்கு ஈசனாகச்செய்தார். ஸூர்யனின்புத்திரனையமனைப் பிதிருக்களுக்குப் பதியாகச்செய்தார். தேவர்களின்ராஜ்யத்தில் வரு ணனை ஜலங்களுக்குப்ரபுவாகச்செய்தார். குபேரனைத் தனங்களுக் கும் ராக்ஷஸர்களுக்கும்பதியாகவும் மேருவை மலைகளுக்குப் பதி யாகவும் ஸமுத்திரத்தை நதிகளுக்குப்பதியாகவும் மிருத்யுவை உயிர் களுக்குப்பதியாகவும் அக்நியைத் தேஜஸுகளுக்குப்பதியாகவும் செய்தார். மஹாத்மாவும் தேவர்களிற்பெரியவரும் ஸநாதனருமான விசாலாக்ஷரை ப்ரபுவானவர் ருத்திரர்களுக்குஈசரும் ரக்ஷகருமாகச் செய்தார். இந்தப்பதினொருருத்திரரும் இவர்சரீரத்திலிருந்து உண் டானவர்கள். பலரூபங்களைத்தரிப்பவரும் தேவரும் அந்தப்பகவானு மானசிவனே வஸிஷ்டரைப் பிராம்மணர்களுக்கு ஈசராகவும் அக்னி யை வஸுக்களுக்குப்பதியாகவும் ஸூர்யனைத் தேஜஸுகளுக்குப் பதியாகவும் சந்திரனை நக்ஷத்திரங்களுக்குப் பதியாகவும்செய்தார். ஸூர்யனைக் [3]கொடிகளுக்கு அரசனாகவும் சிறந்தப்ரபுவும் பன்னி ரண்டுகைகளுள்ளவருமான குமாரரென்னும் ஸ்கந்தரைப் பிராணிக ளுக்குஅரசராகவும் ஆஜ்ஞாபித்தார். நாசத்திற்கும் வ்ருத்திக்கும் காரணமும் எல்லாவற்றிற்கும் ப்ரபுவுமானகாலத்தை ஆயுதம், சத் துரு, யமன், கர்மம்என்றுவது ரோகம், துன்பத்தைவிளைவிக்கும் உணவைப்புஜிக்கச்செய்யும்ஆசை, யமன், கர்மம்என்றுவது நாலு பிரிவுகளுள்ளமிருத்யுவுக்கும் துக்கத்திற்கும் ஸுகத்திற்கும்ப்ரபு வாகச்செய்தார். தேவர்களுக்குத்தேவரும் அரசர்களுக்கு அரச

1 பிரம்மாவினுடைய முதல்நாள்.

2 'முன்கல்பத்தை' என்றும்பொருளுண்டு.

3 இங்குஅதிகபாடமான இரண்டுஸ்லோகம் விடப்பட்டன.

ரும் புருஷஸ்ரேஷ்டருமான சூலபாணியானவர் எல்லாருத்ரர்களுக்கும்ஈச்வரரென்று வேதம் கூறுகிறது. பிறகு மஹாதேவரானவர் பிரம்மதேவரின்புத்திரராய்ஜனித்தவரும் எல்லாத்தர்மங்களையும் பரிபாலிப்பவர்களுள் மிகச்சிறந்தவருமான அந்தக்ஷுபரென்பவரை ப்ரஜைகளுக்குப் பதியாகக்கொடுத்தார். பிறகு அந்தயாகம் முடிவு பெற்றவுடன் மஹாதேவர் ஸமாதானமுள்ளவராய்த் தர்மத்தைரக்ஷிக்கும்தண்டத்தை மர்யாதைசெய்து விஷ்ணுவினிடம் கொடுத்தனர். விஷ்ணுவானவர் அதை அங்கிரஸினிடம் கொடுத்தனர். ரிஷிகளில் சிறந்தஅங்கிரஸானவர் இந்திரன் மரீசிஇவ்விருவர்களிடமும் கொடுத்தார். மரீசியானவர் ப்ருகுவினிடம் கொடுத்தார். ப்ருகுவானவர் தர்மத்துடன்கூடியதண்டத்தை ரிஷிகளிடம் கொடுத்தார். ரிஷிகள் லோகபாலர்களிடமும் லோகபாலர்கள் க்ஷுபர்பொருட்டும் க்ஷுபர் ஸூர்யபுத்திரனானமனுவின்பொருட்டும் கொடுத்தார்கள். ஸ்ராத்ததேவர் ஸூக்ஷ்மமான அறம்பொருள்களை அடையவேண்டியகாரணத்திற்காகத் தம்புத்திரர்களிடம் கொடுத்தார். தண்டத்தில்நீதியை விரும்புகிறவன் நீதி அநீதிகளைப்பகுத்தறிந்து தண்டஞ்செலுத்த வேண்டும். துஷ்டர்களைச்சிக்ஷிப்பதுதான் தண்டமாகும். பொருளபராதமென்பது (ஜனங்களின்) பயத்திற்குவேண்டிய வெளிப்படையானசெய்கையாகும். சரீரத்தை அங்கஹீனமாகச் செய்வதையும் கொலையையும் சரீரத்துன்பத்தையும் ஸ்வதேசத்தைவிட்டு விலக்கலையும் பெரியகாரணங்கொண்டு விதிக்கவேண்டும். உலகத்தைரக்ஷிக்கும் உருவமுள்ள அந்தத்தண்டத்தை ஸூர்யகுமாரனானமனுவின்பொருட்டு அளித்தார். இந்தத்தண்டமானது தொடர்ந்து பிரஜைகளைரக்ஷித்துக்கொண்டுவிளங்குகிறது. இந்தத்தண்டத்தால் பகவானானஇந்திரனும் இந்திரனிடமிருந்து காந்தியைப் பொருளாகக்கொண்டஅக்னியும் அக்னியிடமிருந்து வருணனும் வருணனிடமிருந்து ப்ரஜாபதியும் அந்தப்ரஜாபதியிடமிருந்து உலகத்தைஅடங்கியிருக்கச்செய்யும் தர்மமும் விளங்குகின்றனர். தர்மத்தினிடமிருந்து பிரம்மதேவரின் பிள்ளையும் ஸநாதனமுமானமுயற்சியும் விளங்குகிறது. அந்தமுயற்சியினிடமிருந்து உலகத்தைரக்ஷிக்கும்தேஜஸும் விளங்குகிறது. அந்தத்தேஜஸினிடமிருந்து ஓஷதிகளும் ஓஷதிகளிடமிருந்து மலைகளும் மலைகளிடமிருந்து ரஸமும் விளங்குகின்றன. ரஸத்தின்குணத்திலிருந்து நிருருதிதேவியும் நிருருதிதேவியினிடமிருந்து ஜ்யோதிஸுகளும் விளங்குகின்றன. ஜ்யோதிஸுகளிலிருந்து நிலைமையானவேதங்களும் அந்தவேதங்களிலிருந்து ப்ரபுவான ஹயக்ரீவரும் அந்தஹய

க்ரீவரிடமிருந்து பிதாமஹரும் ப்ரபுவும் அழிவற்றவருமானபிரம்ம தேவரும் விளங்குகிறார்கள். பிரம்மதேவரிடமிருந்து பெரியதேவரும் பகவானுமானசிவன் விளங்குகிறார். சிவனிடமிருந்து விஸ்வேதேவர்களும் விஸ்வேதேவர்களிடமிருந்து ரிஷிகளும் ரிஷிகளிடமிருந்து பகவானானஸோமனும் ஸோமனிடமிருந்து ஸநாதனர்களானதேவர்களும் தேவர்களிடமிருந்து பிராம்மணர்களும் உலகில் விளங்குகிறார்களென்று அறிந்துகொள். பிராம்மணர்களிடமிருந்து க்ஷத்திரியர்கள் தர்மப்படி உலகங்களை ரக்ஷிக்கிறார்கள். க்ஷத்திரியர்களிடமிருந்து ஸநாதனமானஸ்தாவரமும் ஜங்கமமும் பிரஜைகளும் இவ்வுலகில் விளங்குகின்றன. அந்தப்ரஜைகளிடம் தண்டமானது விளங்குகிறது. [1] யாவற்றையும் அடக்கிவைக்கும் தண்டமானது பிதாமஹரின் பிள்ளையானப்ரபுவாகும். ஓ! பாரத! முதலிலும் நடுவிலும் முடிவிலும் காலமானது விளங்குகிறது. யாவருக்குமீசனுனகாலமானது ப்ரஜைகளின் பதியானசிவன்தான். தேவர்களின்தேவரும் கபர்த்தமென்னும்ஜடையுள்ளவரும் சங்கரர், ருத்திரர், பவர், ஸ்தாணு, உமாபதி என்றுசொல்லப்பட்டவருமான சிவபெருமான் எல்லாஉருவமாகவும் எப்பொழுதும் ப்ரபுவாகவும் விளங்குகிறார். இவ்விதம் இந்தத்தண்டமும் ஓஷதிகளும் அவ்விதமேமற்றவைகளும் உபதேசிக்கப்பட்டன. தர்மமறிந்தஅரசன் இந்தத்தண்டத்துடன் நியாயமாயிருக்கவேண்டும்" என்றுசொன்னான். இவ்விதம்வஸுமஹாமாராஜன்கூறிய இந்த மதத்தை எவன் மனத்துடன்கேட்கிறானோ, கேட்டு நன்றாகநடக்கிறானோ, அந்தஅரசன் [2] நல்லஉலகங்களை அடைவான். மனிதர்களிற்சிறந்த பாரதனே! தர்மத்தால்ஆக்ரமிக்கப்பட்ட எல்லாஉலகங்களையும் அடக்கியாளும் தண்டமென்பதுஎதுவோ அதுயாவும் உனக்கு இவ்விதம் உபதேசிக்கப்பட்டது. அரசனே! பூமியைஆளும் மாந்தாதாவென்னும்அரசனால் முன்காலத்தில் வஸுமஹாமாராஜனிடமிருந்து கேட்கப்பட்டதும் உலகில்ப்ரஸித்திபெற்றதுமான [3] கதையானது என்னாலும்சொல்லப்பட்டது" என்றுசொன்னார்.

---

[1] 'பிரம்மதேவருக்கு ஸமமானதேஜஸுள்ளதண்டமானது எல்லாவற்றையும் அடக்குகிறது' என்பதுவேறுபாடம்.

[2] 'எல்லா இஷ்டங்களையும் பெறுவான்' என்பது வேறுபாடம்.

[3] ஒருசொல் விடப்பட்டது.

## நூற்றிருபத்துமூன்றாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் தர்மார்த்தகாமங்களின்பிரயோஜனமுதலியவற்றைச்சொல்லித் தர்மத்தைவிட்டவன் செய்யத்தகுந்தபிராயச்சித்தத்தின் முறை யையும் ஆங்கரிஷ்டனென்னும் அரசனுக்குக் காமந்தகனென் னும்ரிஷிஉபதேசித்ததையும் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "தந்தையே! அறம்பொருள் இன்பங்களைப் பற்றிய நிச்சயத்தைக் கேட்கவிரும்புகிறேன். உலகநடையானது முழுமை யும் இம்மூன்றிலும் நிலைபெற்றதன்றோ? அறம்பொருள் இன்பங்கள் ஏதற்காகச் செய்யப்படுகின்றன? [1]இம்மூன்றும்உண்டாவதற்குக்கார ணம்என்ன? இவைகள் ஒன்றோடொன்றுசேர்ந்திருப்பது எவ்விதம்? வெவ்வேறாகப்பிரிந்திருப்பதும் எவ்விதம்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

[2] "உலகத்தில் மனிதர்கள் பரிசுத்தமான மனமுள்ளவர்களாயி ருக்கும்பொழுது தர்மத்தைமுன்னிட்டுப் புத்திரனென்னும்பொருளை அடையவேண்டுமென்ற நிச்சயமுண்டாகி அதற்குரியகாலமும் அதற் கிடமான பத்நியும் நியாயமானகாரியமும் நேர்ந்தால் (அறம்பொரு ளின்பங்களாகிற) மூன்றும் சேர்க்கையடைகின்றன. விண்ணுலகில் [3] தெய்வத்தன்மைபெறுவதும் பொருள்களை அடைவதும் தர்மத் தைக்காரணமாகக்கொண்டன. (பொருளானது போகத்திற்கென் பது வெளிப்படை.) காமமென்பது விஷயங்களாலுண்டாகும் இந்தி ரியங்களின் திருப்தியைப் பயனாகக்கொண்டதென்று சொல்லப்படு கிறது. அவைகள்யாவும் ஸங்கல்பத்தாலுண்டாகின்றன. ஸங்கல்ப மென்பது விஷயத்தைநாடிநிற்கிறது. விஷயங்கள்யாவும் மிச்சமின் றிப் போகத்தைஉண்டுபண்ணுவதற்குக் காரணமாகும். இந்த ஸங்கல் பந்தான் மூவகைப்பயனுக்குங் காரணமாகிறது. இதிலிருந்துவிலகு வது மோக்ஷமென்று சொல்லப்படுகிறது. சரீரரக்ஷைக்காகச்செய்யப் படும் காம்யதர்மமும் அந்தத்தர்மத்திற்காகவிரும்பப்படும் பொருளும் இந்திரியங்களின் திருப்தியைப் பயனாகக்கொண்டகாமமுமாகிய யா வும் [4]ராஜஸங்களென்று கூறப்படுகின்றன. ஆகையால், இவைகளை வேண்டும். தர்மமுதல் காமம்வரையிலுள்ளயாவும் அவைகளின் பற்றிய ஆலோசனையால்விடப்பட்டு ஆத்மஞானத்திற்கு உப

1, 2, 3, 4 வேறுபாடம்.

யோகப்படுவனவாகச் செய்யப்படவேண்டும். இவைகளை மனத்தாலும் விடக்கூடாது. மிகச்சிறந்தபுத்தியுள்ளவன் அறம்பொருள்இன்பங்களின் பயனை க்ஷணத்தில் அடைவான். பயனைவிரும்பிச்செய்யும் கர்மத்தால் பயன் ஒருஸமயம் உண்டாகிறது; ஒருஸமயம் உண்டாகிறதில்லை. பொருளை அடையவேண்டியதற்குத் தர்மத்தைவிட வேறு ஸேவை கிருஷிமுதலிய உபாயமுமுண்டு. இதில் விபரீதமான வேறு [1] அபிப்பிராயமுமுண்டு. முதன்மையானதர்மத்திற்கும் பொருளைவிட உபவாஸமுதலியவேறுகாரணமும் உண்டு. [2]பொருளை அடைந்தும் உலகம் துன்பத்தைச்செய்கிறது. இந்தவிஷயத்தில் அறிவற்றவன் (பொருளாலேயேதர்மம் தர்மத்தாலேயேபொருள்) என்ற தாழ்ந்த புத்தியுள்ளவனும் அவைகளின் [3]பயனை அடையமாட்டான். தர்மத்திற்கு அதன்பயனில் ஆசைவைப்பது தோஷமாகும். பொருளுக்குத்தானத்தையும் போகத்தையும் செய்யாமல்மறைத்துவைப்பது தோஷமாகும். காமத்திற்கு இந்திரியங்களின்ஸந்தோஷமென்பது தோஷமாகும். இவ்விதத்தோஷமின்றி நற்குணங்கள்நிறைந்த இம்மூன்றும் சித்தசுத்தியை உண்டுபண்ணி மோக்ஷமென்னும் பெரியபயனைக் கொடுக்கும். ஓ! பாரத! இவ்விஷயத்திலும் ஆங்கரிஷ்டனென்னும் அரசனுக்கும் காமந்தகரென்ற முனிவருக்கும்நடந்த ஸம்பாஷணையான பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். ஆஸனத்திலுட்கார்ந்திருக்கும் காமந்தகரிஷியை ஆங்கரிஷ்டனென்னும்அரசன் நமஸ்கரித்து, 'ரிஷியே! எந்தஅரசன் [4]மர்யாதையைவிட்டுக் காமத்தாலுண்டான அவிவேகத்திற்கு ஈடுபட்டவனாகிப் பாபத்தைச்செய்கிறானோ அவன் பின்பு அதில் பச்சாத்தாபமுள்ளவனாயிருந்தால் அவனுடையபாபத்தை விலக்கத்தக்கது எது? எந்தமனிதன் அவிவேகத்தால் அதர்மத்தைத் தர்மமென்றெண்ணிச் செய்கிறானோ உலகில் ப்ரஸித்திபெற்றஅந்தமனிதனை அரசன் எவ்விதம் விலக்கவேண்டும்?' என்று வினவினான். காமந்தகர் சொல்லத்தொடங்கினார்.

'இவ்வுலகில் எவன் அறம்பொருள்களைத்தள்ளிவிட்டுக் காமத்தையே தொடர்ந்துகொண்டிருக்கிறானோ அவன் அறம்பொருள்களை விட்டகாரணத்தால் அறிவின்நாசத்தை அடைவான். அறிவின் நாச

---

1 பொருளென்பது ஸ்வபாவத்தாலும் அதிர்ஷ்டத்தாலும் பலமானமுயற்சியாலும் அடையப்படுமென்பதும் அதற்குத் தர்மம்வேண்டாமென்பதும் பலர்களின் அபிப்பிராயம்.

2 'தனமுள்ளவன் மதங்கொண்டு எல்லாப்பாபத்தையும் செய்வதால் தர்மத்திற்குத் தனம்காரணமன்று' என்பதுபழையவுரை.

3 ஒருசொல் விடப்பட்டது. 4 வேறுபாடம்.

மென்னும்மோகமானது அறம்பொருள்களை நசிக்கச்செய்யும். அதி லிருந்து நாஸ்திகத்தனமும் கெட்டநடையுமுண்டாகும். மிகவும் தோஷமுள்ளகெட்டநடைகளை எப்பொழுது அரசன் அடக்கவில் லையோ அப்பொழுது உலகமானது வீட்டிலுள்ளபாம்பினிடம் நடுங் குவதுபோல அந்தஅரசனிடம் நடுக்கமடையும். பிரஜைகளும் பிராம் மணர்களும் ஸாதுக்களும் அவனிடம் பிரீதியுள்ளவர்களாயிருக்க மாட்டார்கள். அதனால் அவன் மிக்ககுறைவையும் கொல்லத்தக்க நிலைமையையும் அடைவான். துன்பப்பட்டவனும் அவமதிக்கப்பட் டவனுமாகி அவன் துக்கத்துடன் ஜீவிப்பான். அவ்விதம்துன்பமுள் ளவனுஜீவிப்பதென்பது முற்றும்மரணந்தான். அவன்விஷயத்தில் ஆசாரியர்கள் பாபத்தைவிலக்கத்தக்கஇவ்வுபாயத்தை உபதேசிக்கி றார்கள். அவ்விதமனிதன் வேதவித்யைகளைக் கற்கவேண்டும்; பிரா ம்மணர்களைப் பூஜிக்கவேண்டும்; தர்மத்தில் பெரியமனமுள்ளவனு யிருக்கவேண்டும்; உயர்ந்தகுலத்தில் விவாஹஞ்செய்யவேண்டும்; பொறுமையுள்ளவர்களும் பெரியமனமுள்ளவர்களுமானபிராம்மணர்க ளுக்குப்பணிவிடைசெய்யவேண்டும்; [1]தீர்த்தத்துடன்கூடினஸ்வபாவ முள்ளவனும் ஜபம் செய்யவேண்டும்; ஸந்தோஷமடைந்தமுகமுள்ள வனும் நாஸ்திகனல்லாதவனுமாயிருக்கவேண்டும்; கெட்டசெய்கை யுள்ளவனை வெளியில்விலக்கிவிட்டுத் தர்மமுள்ளவர்களிடம் அடுக்க வேண்டும்; இனிமையானசொல்லாலும் செய்கையாலும் அவர்களை அருளுள்ளவர்களாகச் செய்துகொள்ளவேண்டும்; எப்பொழுதும் பிறர்களின்குணங்களைச் சொல்லிக்கொண்டு [2]நான்உன்னுடையவனு யிருக்கிறேனென்று சொல்லவேண்டும். இவ்விதநடையுள்ளவன் பாப மில்லாதவனும் சீக்கிரத்தில் வெகுமானமுள்ளவனுமாயிருப்பான்; கடு மையானபாபங்களையும் விலக்கிக்கொள்வானென்பதில் ஸந்தேஹ மில்லை. சிறந்ததான எந்தத்தர்மத்தைக் குருக்கள் உபதேசிக்கிறார் களோ அதை அவ்விதஞ்செய். குருக்களின் அனுக்ரஹத்தாலேயே பெரியபுகழை அடைவாய்' என்றுசொன்னார்." என்றுகூறினர்.

1 'உதகசீலஃ' என்பதுமூலம்; 'ஸ்நானம்செய்து' என்றுசிலர்பொருள் கொள்வர்.

2 வேறுபாடம்

நூற்றிருபத்துநான்காவது அத்தியாயம்.

ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், தர்மத்திற்குமுதல்காரணமான சீலத்தையும் துர்யோதனனைப் பார்த்துத்திருதராஷ்டிரன்சொன்ன இந்திரனுக்கும் ப்ரஹ்லாத னுக்கும்நடந்தவ்ருத்தாந்தத்தையும் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ராஜரே! பூமியிலுள்ள இந்தஜனங்கள் தர்மத் திற்குச் சீலத்தையே முதல்காரணமாகக் கொண்டாடுகிறார்கள். அத னால் எனக்குப் பெரியஸம்சயம் உண்டாகிறது. தர்மத்தைமேற்கொண் டவர்களிற்சிறந்தவரே! அது என்னால்தெரிந்துகொள்ளக்கூடுமாயின் அதனைத்தையும் அது எவ்விதமிருக்கிறதோ அவ்விதம் கேட்க விரும்புகிறேன். பேசுகிறவர்களிற்சிறந்தபாரதரே! அந்தச்சீலமானது எவ்விதம்அடையப்படுகிறதென்பதைக் கேட்கவிரும்புகிறேன். அது என்னலக்ஷணமுள்ளதாகக் கூறப்படுகிறது? எனக்கு உபதேசிக்க வேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"வெகுமானங்கொடுக்கிறமஹாராஜனே! முந்தி உனக்குவந்த ஸம்பத்தைக்கண்டு தாபப்பட்ட துரியோதனன் த்ருதராஷ்டிரனுக்குச் சொல்லியதையும் இந்திரப்ரஸ்தத்தில் தம்பிகளுடன்கூடினஉன்னை ஸபையில் பரிஹஸித்ததையும்பற்றிய அவையாவற்றையுங்கேள். ஓ! பாரத! உன்னுடைய அந்தஸபையையும் மிகஉத்தமமானஸம்பத்தை யுங்கண்டு அப்பொழுது துரியோதனன் சோகமுற்றவனாகி யாவற் றையும் தந்தையிடம் அறிவித்தான். அப்பொழுது த்ருதராஷ்டிர னும் துர்யோதனன்சொல்லைக்கேட்டுக் கர்ணனுடன்கூடிய துரியோ தனனைநோக்கி இந்தவசனத்தைச் சொல்லத்தொடங்கினான். 'மக னே! எதற்காகச் சோகப்படுகிறாயென்பதை உண்மையாகக் கேட்க விரும்புகிறேன். கேட்டபின் நன்றாகஇருந்தால் உன்னை ஸமாதானஞ் செய்கிறேன். பிறருடையபட்டணத்தை ஜயிப்பவனே! பெருத்த ஐசுவரியம் உன்னையடைந்திருக்கிறது. வேலைக்காரர்களும் ஸஹோ தரர்களும் மித்திரர்களும் ஸம்பந்திகளும் பந்துக்களும் யாவரும் உன்னை அடுத்திருக்கிறார்கள். நல்லஆடைகளை உடுக்கிறாய்; மாம்ஸத் துடன்கூடின அன்னத்தைப் புஜிக்கிறாய். உயர்ந்தகுதிரைகள் உன்னை வஹிக்கின்றன. மகனே! ஏன் சோகப்படுகிறாய்?' என்றுகேட்டான்.

துரியோதனன், 'தந்தையே! யுதிஷ்டிரன்வீட்டில் மஹாத்மாக் களும் வித்தையில்தேர்ச்சிபெற்றவர்களுமான பதினாயிரம்பேர்கள்

ஸ்வர்ணபாத்திரங்களில்புஜிக்கிறார்கள். வெகுமானத்தைக்கொடுக்கிற வரே! சத்துருக்களானபாண்டுகுமாரர்களுடைய சிறந்ததும் தேவ லோகத்திலுள்ளபூக்களுடனும் கனிகளுடனும்கூடியதுமான அந்த ஸபையைக்கண்டும் தித்திரிப்பக்ஷிபோலப் பலவர்ணங்களுள்ளகுதிரை களையும் பலவிதரத்தினங்களையும் மிகப்பெரிதும் அழகுள்ளதும் இந் திரனுடைய ஸம்பத்திற்குஒத்ததுமான அந்தஸம்பத்தையும் கண்டும் சோகப்படுகிறேன்' என்றுசொன்னான். திருதராஷ்டிரன், 'அப் பா! மனிதர்களில்மிகச்சிறந்தமகனே! யுதிஷ்டிரனிடத்தில் எவ்வித ஸம்பத்துள்ளதோ அவ்விதஸம்பத்தையோ அதற்குமேலானதையோ விரும்புவாயாகில் சீலமுள்ளவனாயிரு. சீலத்தால் மூன்றுலகங்களும் ஜயிக்கக்கூடியவையாகுமென்பதில் ஸந்தேஹமில்லை. சீலமுள்ளஸாது க்களுக்கு உலகத்தில் ஸாதிக்கக்கூடாதது ஒன்றுமில்லை. மாந்தாதா ஒரேஇரவிலும் ஜனமேஜயர்மூன்றுநாளிலும் நாபாகர்ஏழுநாளிலும் பூமியை அடைந்தார்கள். இந்தஅரசர்கள்யாவரும் சீலமுள்ளவர் களும் புகழுள்ளவர்களுமாயிருந்தார்கள். ஆகையால், அவர்களுக் குக் குணத்தால்விலைக்குவாங்கப்பட்டதுபோலப் பூமி தானேவந்தது' என்றுசொன்னான். துரியோதனன், 'ஓ! பாரதரே! எந்தச்சீலத் தால் (அந்தஅரசர்கள்) சீக்கிரமாகவே பூமியை அடைந்தார்களோ அந்தச்சீலமானது எவ்விதம்அடையப்படுமென்பதைக் கேட்கவிரும் புகிறேன்' என்றுசொன்னான். திருதராஷ்டிரன், 'பாரதனே! இந்த விஷயத்திலும் பழைய இவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். பாரத! முன்காலத்தில் [1]நாரதரால்சொல்லப்பட்டசீலத்தைஅடைந்து பிரஹ்லாதனால் மஹாத்மாவானஇந்திரனுடையராஜ்யமானது அப ஹரிக்கப்பட்டது. சீலத்தைஅடைந்து அஸுரனைப்ரஹ்லாதனால் மூன்றுலகமும் தன்வசமாக்கிக்கொள்ளப்பட்டது. பிறகு அறிவில் சிறந்தஇந்திரன் பிருஹஸ்பதியைஅடைந்து கைகூப்பிக்கொண்டு பிரு ஹஸ்பதியைநோக்கி, 'ஶ்ரேயஸைத்தெரிந்துகொள்ளவிரும்புகிறேன்' என்றுகேட்க, பிறகு பிருஹஸ்பதிபகவான் மோக்ஷத்திற்குக்காரண மும் சிறந்ததுமானஞானத்தை அந்தத்தேவேந்திரனுக்கு உபதேசித் தார். குருக்களிற்சிறந்தவனே! பிருஹஸ்பதியானவர் ஶ்ரேயஸென் பது இவ்வளவுதானென்றுசொன்னார். இந்திரனோ, '(இதைவிட) விசேஷமானதுஇருக்கிறது?' என்று திரும்பவும் கேட்க, பிருஹஸ் பதியானவர், 'அப்பா! தேவர்களில்உத்தமனே! மஹாத்மாவானசுக் ராசாரியரிடம் இதைவிடவிசேஷமிருக்கிறது; அவரிடம்போய்த்தெரி

1 வேறுபாடம்.

ந்துகொள்; உனக்குத் திரும்பவும் க்ஷேமமுண்டாகும்' என்று சொன்னார். பிறகு மிகப்பெரியகீர்த்தியுள்ளசுக்ராசாரியர் மோக்ஷத் திற்குஸாதனமான ஆத்மஞானத்தை ப்ரியமாகஉபதேசித்தார். பிறகு மஹாத்மாவான அந்தச்சுக்ராசாரியராலும் அனுமதிகொடுக்கப்பட்ட வனும் உத்தமமானகாந்தியுள்ளவனுமான அந்தஇந்திரன் சுக்ராசாரி யரை, 'இதற்குமேலானஸ்ரேயஸுண்டா?' என்று திரும்பவுங்கேட் டான். எல்லாமறிந்தவரானசுக்ராசாரியரோ, 'மஹாத்மாவானபிரஹ் லாதனுக்கு, இதைவிடவிசேஷமான அறிவுண்டு' என்றுசொன்னார். இவ்விதஞ்சொல்லப்பட்ட அந்தஇந்திரன் ஸந்தோஷமுள்ளவனானான். மேதாவியான அந்த இந்திரன் ப்ராம்மணரூபத்துடன் ப்ரஹ்லாதனைத் துதிசெய்து, 'ஸ்ரேயஸை அறியவிரும்புகிறேன்' என்றுசொன்னான். ப்ரஹ்லாதனோ, பிராம்மணனைநோக்கி, 'பிராம்மணோத்தமரே! மூவுல கென்னும் ராஜ்யத்தில்ப்ரவிருத்தியுள்ள எனக்கு ஒழிவுள்ளஸமய மில்லை. ஆகையால், நான் உமக்குஉபதேசஞ்செய்யமுடியாது' என்றுசொன்னான். பிராம்மணனோ, 'ராஜரே! எந்தஸமயத்தில் ஒழிவிருக்குமோ அப்பொழுது [1]மிகஉத்தமமாகச்செய்யத்தக்கதை உபதேசிக்கவேண்டுகிறேன்' என்றுசொன்னான். பிறகு ராஜாவான ப்ரஹ்லாதன் பிரியமுள்ளவனாகி வேதமோதும்அந்தப்பிராம்மணனுக் கு, 'அப்படியேஆகட்டும்' என்றுசொல்லி அப்பொழுது நல்லகாலத் தில் ப்ராம்மணனுக்கு உண்மையானஅறிவை அளித்தனன். ப்ராம்மண னும் அவன் எதைஎதை மனத்தால்விரும்புகிறானோ அதைஅதைமுழு அபிப்பிராயத்துடனுஞ்செய்துகொண்டு நியாயப்படி குருவினிடத்தி லிருக்கத்தக்க மிகஉத்தமமான ஒழுக்கத்துடனிருந்துவந்தான். அந்த ப்ராம்மணன், 'சத்ருக்களை அடக்கத்தக்கவரே! மூன்றுலகங்களென் னும்ராஜ்யமானது எவ்விதம் அடையப்பட்டது? தர்மமறிந்தவரே! அந்தக்காரணத்தை எனக்குஉபதேசிக்கவேண்டும்' என்றுப்ரஸ்னஞ் செய்தான். பெரியஅரசனே! ப்ரஹ்லாதனும் ப்ராம்மணனைநோக்கி இந்தவசனத்தைச் சொல்லத்தொடங்கினான்.

'பிராம்மணரே! ராஜாவாயிருக்கிறேனென்றெண்ணி எவ்விதத் திலும் பிராம்மணர்களிடம் நான் அஸூயைப்படுகிறதில்லை. 'உம்மை நாங்கள் அடக்குகிறோம்' என்றும், 'தாங்குகிறோம்' என்றும்சொல் லும் அந்தப்ராம்மணர்களுடைய [2]நீதிவசனங்களிலும் நான் அஸூ யைப்படுகிறதில்லை. அவர்கள் நம்பிக்கையுள்ளவர்களாய் என்னிடம் பேசுவார்கள். எப்பொழுதும் என்னை அடக்குவார்கள். சாஸ்திர

1, 2 வேறுபாடம்.

மறிந்த அந்தப்பிராம்மணர்கள் அவர்களுக்குச்செய்யவேண்டிய வழியில் முயற்சியுள்ளவனும் கேட்கவிருப்பமுள்ளவனும் அகங்காரமற்றவனும் தர்மபுத்தியுள்ளவனும் கோபத்தைஜயித்தவனும் அடக்கமுள்ளவனும் இந்திரியங்களை அடக்கினவனுமான என்னைத் தேனீக்கள் தேன் கூட்டைத் தேனினால்நிரப்புவதுபோலச் சாஸ்திரத்தால் நன்றாகநிரம்பச்செய்கிறார்கள். வாக்கின் நுனியில் கல்விகளைக்கொண்ட அவர்களுடையரஸங்களை அனுபவிக்கும்நான் நக்ஷத்திரங்களுக்குச்சந்திரன் போல என்ஜாதியிலுள்ளவர்களுக்குப் பதியாயிருக்கிறேன். பிராம்மணர்களின் வாக்கிலுள்ள [1]நீதிவசனத்தைக்கேட்டு அவ்விதம்நடப்பதென்பது பூமியிலுள்ள அமிருதமும் மிகஉத்தமமானகண்ணுமாகும். சிரேயஸென்பது இவ்வளவுதான்' என்று பிராம்மணனைநோக்கிப் பிரஹ்லாதன் சொன்னான். அந்தப்பிராம்மணனால் பணிவிடைசெய்யப்பட்டவனும் அஸுரர்களுக்கு அரசனுமானபிரஹ்லாதன் அப்பொழுது, 'பிராம்மணர்களில்மிகச்சிறந்தவரே! விதிப்படியுள்ளதும் குருவினிடம் செய்யத்தக்கதுமான உம்முடையஒழுக்கத்தால் ஸந்தோஷமுள்ளவனாகிறேன். உமக்கு க்ஷேமம்உண்டாகட்டும். உமக்கு வேண்டியவரத்தைக் கேளும். ஸந்தேகமின்றிக் கொடுக்கிறேன்' என்றவசனத்தைச் சொன்னான். அந்தப்பிராம்மணசிரேஷ்டனும் செய்ததேபோதுமென்று பிரஹ்லாதனிடம் சொன்னான். ப்ரஹ்லாதனோ ஸந்தோஷமுள்ளவனாகி, 'வரத்தைப்பெற்றுக் கொள்ளும்' என்று திரும்பவும்சொன்னான். பிராம்மணன், 'ராஜரே! நீர் அனுக்கிரகமுள்ளவராய் எனக்குப்பிரியத்தைச் செய்யவிரும்புவீராகில் உமது சீலத்தை நானடையவிரும்புகிறேன். இதுதான் எனக்குவேண்டிய வரம்' என்றுசொன்னான். பிறகு பிரஹ்லாதன் பிரியமுள்ளவனானான். பிராம்மணனால் வரம்கேட்கப்பட்டவுடன், 'இப்பிராம்மணன் சிறிய மனமுள்ளவனல்லன்' என்று அவனுக்குப் பெரியபயமுண்டாயிற்று. அப்பொழுது அந்தப்பிரஹ்லாதன் ஆச்சரியமடைந்து,'இவ்விதமாகட்டும்' என்றுசொன்னான். பிராம்மணனுக்கு வரத்தைக்கொடுத்த பின் துக்கத்தையடைந்தான். வரம்கொடுத்தபின் பிராம்மணன்சென்றதும் பிரஹ்லாதனுக்கு அப்பொழுது பெரியசிந்தையுண்டாயிற்று. மஹாராஜனே! அவன் நிச்சயத்தையடையவில்லை. அப்பா! அப்பொழுது பெரியதேஜஸுள்ளவனும் சிந்தையுள்ளவனுமான அந்தப் பிரஹ்லாதனுடைய சாயைபோன்றதும் தேஜோமயமானசரீரமுள்ளதுமான ஒன்று அவன்சரீரத்தைவிட்டு வெளிவந்தது. மஹாராஜ

[1] வேறுபாடம்.

ஞனபிரஹ்லாதன் அதை, 'நீயார்?' என்றுகேட்டனன். அது, 'நான் சீலமாகிறேன்; உன்னால்விடப்பட்டுச் செல்லுகிறேன். பகைவர்களை அடக்கும்அரசனே! எவன் உன்னிடத்தில் சிஷ்யத்தன்மையையடைந்து எப்பொழுதும் ஜாக்ரதையுள்ளவனாயிருந்தானோ அந்தப்பிராம்மணோத்தமனிடத்தில் வஸிக்கப்போகிறேன்' என்று விடைசொல்லிற்று. அந்தத்தேஜஸானது இவ்விதஞ்சொல்லிவிட்டு மறைந்து இந்திரனையடைந்தது. பிரபுவே! அந்தத்தேஜஸானது சென்றதும், பிறகு அவ்விதஉருவமுள்ளமற்றொருவன் அந்தப்பிரஹ்லாதனுடைய சரீரத்திலிருந்து வெளிவந்தான். அந்தப்பிரஹ்லாதன், 'நீயார்?' என்று கேட்டான். 'அஸுரர்களுக்குஇந்திரனானபிரஹ்லாத! என்னைத்தர்மமென்றறி. அந்தப்பிராம்மணசிரேஷ்டன் எவ்விடத்திலிருக்கிறானோ அவ்விடத்திற்குச் செல்லுகிறேன். எவ்விடத்தில் சீலமிருக்கிறதோ அவ்விடத்திலன்றோ நானிருப்பவன்?' என்று அவன் சொன்னான். மஹாராஜனே! பிறகு மஹாத்மாவான அந்தப்பிரஹ்லாதனுடைய சரீரத்திலிருந்து ஒளியால் மிகஜ்வலிப்பவன்போல வேறுஒருவன் வெளிவந்தான். பிரஹ்லாதன், 'நீ யார்?' என்றுகேட்டவுடன் பெரிய காந்தியுள்ள அந்தப்புருஷன், 'அஸுரேந்திர! என்னை ஸத்தியமென்றறி. இப்பொழுது வெளியில்போகிறேன். நான் தர்மத்தைத்தொடர்ந்து இருப்பவன்' என்று, அந்தப்பிரஹ்லாதனைக் குறித்துச்சொன்னான். அந்தப்புருஷன் தர்மத்தைத்தொடர்ந்து சென்றவுடன் அந்தப் பிரஹ்லாதனிடமிருந்து வேறுஒரு புருஷன் வெளிவந்தான். பெரிய தவமுள்ள அந்தப்புருஷன் (நீயாரென்று பிரஹ்லாதனால்) கேட்கப்பட்டவுடன், 'பிரஹ்லாத! என்னை ஒழுக்கமென்றறிந்துகொள். ஸத்தியமிருக்குமிடத்திலன்றோ நானிருப்பவன்?' என்றுசொன்னான். அந்தப்புருஷன்சென்றவுடன் அந்தப்பிரஹ்லாதனுடைய சரீரத்திலிருந்து பெரிய [1]சப்தம் வெளிவந்தது. (பிரஹ்லாதன்,) 'நீயார்?' என்று கேட்டவுடன், 'என்னைப்பலம்என்றறி. ஒழுக்கமுள்ளவிடத்தில் நானிருப்பவன்' என்றுசொல்லிற்று. அரசனே! இவ்விதம்சொல்லிவிட்டு ஒழுக்கம் எவ்விடத்திலிருக்கிறதோ அவ்விடத்திற்குச் சென்றது. பிறகு அந்தப்பிரஹ்லாதனுடையசரீரத்திலிருந்து தேஜோமயமான ஒருதேவஸ்திரீ வெளிவந்தாள். அஸுரராஜனான அந்தப்பிரஹ்லாதன் அந்தத்தேவியை, 'நீயார்?' என்றுகேட்டான். அந்தத்தேவி '(நான்) லக்ஷ்மி. உண்மையானபராக்கிரமமுள்ளவனே! நான் உன்னிடத்தில் எப்போதும் ஸுகமாக வஸித்துக்கொண்டிருந்தேன். [illegible]

[1] வேதபாடம்.

னுல்விடப்பட்டுச் செல்லுகிறேன். நான் பலத்தையனுஸரித்திருப்பவளன்றோ?' என்று அந்தப்பிரஹ்லாதனுக்கு மறுமொழிசொன்னுள். உடனே மஹாத்மாவானபிரஹ்லாதனுக்குப் பயமுண்டாயிற்று. அவன் 'தாமரைப்புஷ்பத்தை வீடாகக்கொண்டவளே! நீ உலகத்திற்கு உத்தமமானஈஸ்வரியும் ஸத்யமானவிரதமுள்ளவளுமானதேவியன்றோ? எவ்விடத்திற்குச் செல்லுகிறுய்? இந்தப்பிராம்மணசிரேஷ்டர் யார்? உண்மையைஅறியவிரும்புகிறேன்' என்று திரும்பவும் அந்தத்தேவியைக்கேட்க, லக்ஷ்மிதேவியானவள், 'பிரபுவே! எவன் பிரம்மசாரியாக உன்னிடமிருந்து கல்வியைக்கற்றுனே அவன் இந்திரன். மூன்றுஉலகங்களிலும் உனக்குள்ளஐசுவரியம் எதுவோ அஃது அவனுலபகரிக்கப்பட்டது. தர்மமறிந்தவனே! சீலத்தாலன்றோ மூன்றுஉலகங்களும் உன்னுல் ஜயிக்கப்பட்டன? பிரபுவே! அதனைஅறிந்து தேவேந்திரனுல் உன்னுடையசீலம் அபகரிக்கப்பட்டது. பிராஜ்ஞர்களிற்பெரியவனே! தர்மமும் ஸத்தியமும் அவ்விதமே ஒழுக்கமும் பலமும் அவ்விதமே நானும் எப்பொழுதும் சீலத்தைக்காரணமாகக்கொண்டவர்கள். இதிற்சந்தேகமில்லை' என்று சொன்னுள். லக்ஷ்மியானவள் இவ்விதஞ்சொல்லிவிட்டுச் சென்றுள். அவர்கள்யாவர்களுஞ் சென்றூர்கள்' என்றுன். யுதிஷ்டிர! துரியோதனனே அப்பொழுது திரும்பவும் தந்தையைநோக்கி, 'கௌரவர்களின்குமாரரே! சீலத்தின்உண்மையை அறியவிரும்புகிறேன். சீலமானது எவ்விதமடையப்படுமோ அந்தஉபாயத்தையும் எனக்கு உபதேசிக்கவேண்டும்' என்றுகேட்டான். திருதராஷ்டிரன் சொல்லத்தொடங்கினுன். 'அரசனே! மஹாத்மாவான பிரஹ்லாதனுல் முந்தி உபாயத்துடன் சீலம் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. சுருக்கமாகச் சீலத்தையடையும்வழியைக் கேள். செய்கையாலும் மனத்தாலும் வாக்காலும் எல்லாப்பிராணிகளிடத்திலும் துரோகமில்லாமலிருப்பதும் அனுக்கிரகமும் தானமுமாகியமூன்றும் சீலமென்று கொண்டாடப்படுகின்றன. எது மற்றவர்களுக்கு ஹிதமாகஇராதோ, எது வெட்கப்படக்காரணமோ, அவ்விதமானசெய்கையையும் பராக்கிரமத்தையும் எவ்விதத்திலும் செய்யக்கூடாது. எதைச்செய்தால் ஸபையில் கொண்டாடப்படுமோ அந்தக்காரியத்தைச் செய்யவேண்டும். குருக்களில்மிகச்சிறந்தவனே! சுருக்கமாக இந்தச்சீலம் உனக்கு உபதேசிக்கப்பட்டது. அரசனே! சீலமில்லாதவர்களும் சிலசமயத்தில் ஸம்பத்தையடைகிருர்கள்; ஆகிலும், அப்பா! நெடுங்காலம் அனுபவிக்கமாட்டார்கள். அவர்கள் வேருடன்கூடவிழுவார்கள்.

கள். அருமைமகனே! இதை உண்மையாய்த் தெரிந்துகொண்டு சீலமுள்ளவனாயிரு. அப்பா! அரசர்களிற்சிறந்தவனே! நீ யுதிஷ்டிரனைவிட மிகமேலானஸம்பத்தையோ அதிலும்அதிகத்தையோ விரும்புவாயாகில் சீலமுள்ளவனாயிரு' என்று இவ்விதம் திருதராஷ்டிர மகாராஜன் புத்திரனிடம் சொன்னான். குந்தியின் குமாரனே! இதைச் செய். இதன்பயனையடைவாய்" என்றுசொன்னார்.

---

## நூற்றிருபத்தைந்தாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஆசையைவிளக்க ஸுமித்திரனென்னும்ராஜனுக்கும் ரிஷபரென்னும்முனிவருக்கும்நடந்தசரித்திரத்தைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! மனிதனுக்குமுக்கியமான சீலம் உம்மால்உபதேசிக்கப்பட்டது. ஆசை எவ்விதமுண்டாயிற்று? அஃது எது? அதனை எனக்குச் சொல்லவேண்டும். பிதாமஹரே! எனக்கு இந்தப்பெரிய ஸந்தேஹமுண்டாயிருக்கிறது. பகைவர்களின் பட்டணங்களைஜயிப்பவரே! அந்தச்சந்தேகத்தை அறுப்பவர் உம்மைவிட வேறொருவருமில்லை. பிரபுவான பிதாமஹரே! யுத்தம்நேருங்காலத்தில் யுத்தமின்றியே பாதிராஜ்யம்கொடுப்பது யுக்தம். அதைத்துரியோதனன் செய்வானென்று அவனிடத்தில் எனக்குப் பெரியஆசையிருந்தது. எல்லாமனிதனுக்கும் மிகப்பெரியஆசை உண்டாகிறது. அவ்வாசை பயனற்றதாகச் செய்யப்பட்டால் துக்கம்என்னும்மிருத்தியுஉண்டாவதிற்சந்தேகமில்லை. ராஜசிரேஷ்டரே! கெட்டபுத்தியுள்ளநான் துராத்மாவான அந்தத்திருதராஷ்டிரகுமாரனால் பயனற்ற ஆசையுள்ளவனாகச் செய்யப்பட்டேன். என்னுடைய அல்பபுத்தியைப் பாரும். மரங்களையுடையமலையைக்காட்டிலும்ஆசைமிகப்பெரிதென்று நினைக்கிறேன். அரசரே! மேலும்ஆகாயத்தைக்காட்டிலும் ஆசையென்பது அளவிடக்கூடாதது. குருக்களில்மிகச்சிறந்தவரே! அந்த ஆசையென்பதுதான் ஆலோசிக்கமுடியாததும் ஜயிக்கமிக அரிதுமாயிருக்கிறது. ஜயிக்கமிகக்கடினமாயிருப்பதால் அதைவிட வேறு எதுஜயிக்கமுடியாததென்று பார்க்கிறேன்" என்றுசொன்னார்.

பீஷ்மர் சொல்லத்தொடங்கினார். "யுதிஷ்டிர! இந்தவிஷயத்தில் ஸுமித்திரனென்னும்அரசனுக்கும் ரிஷபரென்னும்முனிவருக்கும்நடந்தகதையை உனக்கு உதாகரிக்கிறேன். என்னிடமிருந்து

தெரிந்துகொள். ஹேஹயதேசத்திற்குஅரசனான ஸுமித்திரனென் னும்ராஜரிஷியானவன் வேட்டைக்குச்சென்று வணங்கியகணுவுள்ள அம்பால் ஒருமிருகத்தையடித்துத் தூக்கினன். அதிகபராக்கிரம முள்ள அந்தமிருகமானது அம்பைத்தூக்கிக்கொண்டு ஓடிற்று. பல முள்ள அந்தஅரசனும் அருகில்ஓடும் மிருகத்தைத்தொடர்ந்து வேக மாகச்சென்றான். பிறகு வேகமாகச்செல்லும் அந்தமிருகமானது பள்ளத்திலும் மேட்டிலும் ஓடிற்று. ராஜேந்திரனே! முகூர்த்த நேரம்போல் அந்தமிருகமானது ஸரியானவழியிற்சென்றது. பிறகு அந்தஅரசன் யௌவனத்தாலும் சரீரத்திலுள்ளவலிமையாலும் வில் லைப்பிடித்தவனும் வாளேந்தியவனுமாய் அப்போது [1]அன்னபக்ஷி போல ஸஞ்சரிக்கத்தொடங்கினன். பிறகு நதங்களையும் நதிகளையும் குளங்களையும் காடுகளையும் தாண்டித்தாண்டி ஒருவனாய் வனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு ஓடினன். அரசனே! அந்தமிருகமோ, அப் பொழுது அரசனருகில்வந்துவந்து வேகத்துடனேடுவதும் திரும்ப வும்நெருங்குவதும் பிறகுமிகுந்தவேகத்துடன்செல்வதுமாயிருந்தது. ராஜசிரேஷ்டனே! அந்தஅரசனுடையபலஅம்புகளால் அடிக்கப்பட் டுக் கானகத்தில்ஓடும்அந்தமிருகமானது விளையாடுவதுபோலத் திரு ம்பவும் அவனருகில்வரும். வேகமுள்ளசிறந்தமிருகமானது திரும்ப வும்வேகத்தையடைந்து தாண்டித்தாண்டிச்சென்று திரும்பவும் ஸமீ பத்தில்செல்லும். சத்துருக்களைத்துன்பப்படுத்தும் ஸுமித்திரனென வன் அந்தமிருகத்தின்உயிர்நிலையையறுப்பதும் குரூரமானதும் மிகச் சிறந்ததுமான ஓர் அம்பைஎடுத்து வில்லிலிருந்து எய்தான். பிறகு [2] யூதபதிகளுட்சிறந்த அந்தமிருகமானது அந்தஅரசனுடைய அம்பின் வழியைவிட்டு இரண்டுகுரோசதூரத்தில் பரிஹஸிப்பதுபோல் நின் றது. விளங்கும்காந்தியுள்ள அந்தஅம்பானது பூமியில்விழுந்ததும் மிருகமானது அரண்யத்தில் பிரவேசித்தது. அரசனும் மிருகத்தை யடுத்துச்சென்றான்.

---

1 'கவசமுள்ளவனாய்' என்பது வேறுபாடம்.

2 யூதபதி = மிருகக்கூட்டங்களில்தலைமையானது.

## நூற்றிருபத்தாறுவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஸுமித்திரராஜன் ரிஷிகளின்ஆச்ரமம்சென்றதையும் அவர்களைப்பார்த்து, 'ஆசைபெரிதா ஆகாசம்பெரிதா' என்றுகேட்டதையும் சொல்லியது.)

பிறகு, ஸுமித்திரராஜன் பெரிய அரண்யத்தில் பிரவேசித்து ரிஷிகளின்ஆச்ரமத்தையடைந்து அப்பொழுது களைத்து அங்குஉட்கார்ந்தான். அப்பொழுது வில்லையேந்தியவனும் சிரமத்தால்துன்பமடைந்தவனும் பசியுள்ளவனுமான அவனைக்கண்டு ரிஷிகள்வந்து அவனுக்கு விதிப்படிஉபசாரத்தைச் செய்தார்கள். அந்தஅரசனும் ரிஷிகளால் கொடுக்கப்பட்டபூஜையைப்பெற்றுக்கொண்டு ரிஷிகள் யாவர்களையும் மிகஉத்தமமானதவத்தின் விருத்தியைப்பற்றிப் பிரஸ்னஞ்செய்தான். தவத்தையே பொருளாகக்கொண்ட அந்தரிஷிகள் அந்தஅரசனுடையவசனத்தை அங்கீகரித்துக்கொண்டு அரசப்புலியானஅவனை அங்குவந்ததின்பயனைக் கேட்கத்தொடங்கினார்கள். 'அழகியமுகமுள்ள அரசனே! என்னபயனைக்கருதிப் பாதசாரியாகக் கட்டியகத்தியும் வில்லும் அம்புமுள்ளவனாகித் தபோவனத்திற்கு வந்தாயென்பதைக் கேட்கவிரும்புகிறோம். வெகுமதியளிப்பவனே! எங்கிருந்துவருகிறாய்? நீ எந்தக்குலத்தில் பிறந்தவன்? என்னபெயருள்ளவன்? எங்களுக்குச் சொல்லவேண்டும்' என்றுகேட்டார்கள். புருஷர்களிற்சிறந்தபாரதனே! பிறகு அந்தஅரசன் எல்லாப்பிராம்மணர்களுக்கும் நடந்தபடி தன்விருத்தாந்தத்தையும் தன்வரவையும் சொல்லத்தொடங்கினான். 'பிராம்மணர்களே! நான் ஹேஹயதேசத்தின் அரசர்களின் குலத்தில்பிறந்தவனும் பகைவர்களைக்குறைக்கிறவனுமானஸுமித்திரன்; பெரியஸேனையுடனும் அமாத்யர்களுடனும் அந்தப்புரஸ்திரீகளுடனும் அம்புகளால் மிருகக்கூட்டங்களை ஆயிரக்கணக்காக அடித்துக்கொண்டு ஸஞ்சரித்தேன். ஒருமிருகமானது என்னால் அம்பாலடிக்கப்பட்டுத் தைத்தஅம்புடன் ஓடிற்று. ஓடும் அம்மிருகத்தைத்தொடர்ந்து யதிர்ச்சையாக இவ்வனம்வந்துசேர்ந்தேன்; லக்ஷ்மியைஇழந்தவனும் ஆசைஅழிந்தவனும் சிரமத்தால் இளைப்புற்றவனுமாகி உங்களருகில்வந்தேன். இதைவிட வேறுஎன்ன துக்கமிருக்கிறது? சிரமத்தால்இளைப்புற்றவனும் பயனற்றஆசையுள்ளவனும் ராஜலக்ஷணம்விலகியவனுமாக நான் உங்களுடையஆச்ரமத்

ந்து அடைந்தேனே! தபோதனர்களே! பயனற்றஎன்னாசை எனக்குக் கடுமையானதுக்கத்தைஉண்டுபண்ணுவதுபோல ராஜலக்ஷ்மணங் களைவிட்டது எனக்குத் துக்கத்தையுண்டுபண்ணவில்லை. தவத்தில் மிகச்சிறந்தவர்களே! ஹிமவானென்னும்பெரியமலை உயரத்தாலும் மஹோததியென்னும்கடல் விஸ்தாரத்தாலும் ஆகாயத்தின்முடிவை எவ்விதம் அடையவில்லையோ அவ்விதம் நான் ஆசையின்முடிவை யடையவில்லை. யாவும் உங்களுக்குத் தெரிந்திருக்கும். தவத்தைப் பொருளாகக்கொண்டரிஷிகள் யாவற்றையும் அறிந்தவர்களன்றோ? நீங்கள் மிகப்பெரியபாக்கியம்பெற்றவர்கள். ஆகையால்,ஒருஸந்தேகம் கேட்கிறேன். ஒருமனிதனுக்கு ஆசையிருக்கிறது, ஆகாயமுமிருக்கிறது. இவைகளில் உலகத்தில் எதுமிகப்பெரிதென்று உங்களுக்குத் தோற்றுகிறது? இதை உண்மையாகக்கேட்கவிரும்புகிறேன். இவ்வுலகில்எது கிடைப்பதரிது? இந்த உங்களுக்கு எப்போதும் ரஹஸ்யமல்லாமலிருக்குமானால் தாமதமின்றிச் சொல்லுங்கள். பிராம்மண சிரேஷ்டர்களே! மிக்கரஹஸ்யமானவிஷயத்தை நான்கேட்க விரும்பவில்லை. உங்கள்தவத்திற்கு இடையூறானகாரியம் எதுவோ அதிலிருந்து நான் விலகுகிறேன். கதைபேசஇடமிருக்குமானால் என்னால்சொல்லப்பட்டகேள்வி எதுவோ அதைப்பற்றியகாரணத்தையும் ஸாமர்த்தியத்தையும் உண்மையாகக்கேட்கவிரும்புகிறேன். எப்பொழுதும்தவமுள்ளவர்களும் ஸமாதியுள்ளவர்களுமானநீங்களும் இதைச் சொல்லத்தக்கவர்கள்' என்றுசொன்னான்.

## நூற்றிருபத்தேழாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(ரிஷபரென்னும்ரிஷி ஸுமித்ரராஜனுக்குத் தாம் தீர்த்தயாத்ரை செய்ததுமுதலியவற்றைச் சொல்லியது.)

பிறகு அங்குகூடியஅந்தரிஷிகளுள் மிகச்சிறந்தவரான ரிஷபரென்னும்பிராம்மரிஷியானவர் சிரித்துக்கொண்டு இவ்வசனத்தைச் சொல்லத்தொடங்கினார்.

'அரசப்புலியானபிரபுவே! முன்னொருகாலத்தில் தீர்த்தயாத்திரைக்குச்சென்ற நான் திவ்யமானநரநாராயணர்களின் ஆச்ரமத்தை அடைந்தேன். அவ்விடத்தில் அழகான அந்தப் [1]பதரீவிருக்ஷ

1 இலந்தைமரம்.

மும் அவ்விதமே கங்காநதியைச்சேர்ந்ததடாகமும் இருக்கின்றன. அரசனே! அவ்விடத்தில் ஹயக்ரீவர் சாச்வதமானவேதங்களைப் படிக்கிறார். நான் முந்தி அந்தத்தடாகத்தில் தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் விதிப்படி தர்ப்பணத்தைச்செய்து பிறகு நரநாராயணர்களென்றஅந்தரிஷிகள் எப்பொழுதும் எந்தஆசிரமத்தில் விளையாடுகிறார்களோ அந்தஆஸ்ரமத்திற்குச் சென்றேன். அப்பொழுது ஆச்ரமத்திற்குச்சிறிதுஸமீபத்தில் வஸிக்கவேண்டிச் சென்றேன். சிறந்தகைகளுள்ளவனே! அப்பொழுது அவ்விடத்தில் மரவுரியையும் மான்தோலையுமுடுத்தவரும் இளைத்தவரும் மிகஉயர்ந்தவரும் தவத்துக்கு நிதியும் சரீரத்தில் மற்றமனிதர்களுடன் ஒப்பிடத்தகாதவருமான தனுவென்னும்ரிஷி வருகிறதைக்கண்டேன். ராஜரிஷியே! அவ்விதமானசரீரமெலிவை நான் கண்டதில்லை. ராஜேந்திரனே! மெலிந்த அவர்சரீரமும் சிறுவிரலுக்கொப்பானது. கழுத்தும் கைகளும் கால்களும் மயிர்களும் ஆச்சரியமாகக்காணப்பட்டன. தலையும் காதுகளும் கண்களும் அவர்சரீரத்திற்கொத்தனவாயிருந்தன. அரசர்களில்மிகச்சிறந்தவனே! அவருடையவாக்கும் செய்கையும் ஒத்திருந்தன. நரசிரேஷ்டனே! நான் இளைத்தவரான அந்தப்ராம்மணரைக்கண்டு பயந்து மிகவும்துன்பமுற்றமனமுள்ளவனாகி அவர்கால்களில்நமஸ்கரித்துப் பிறகு என்பெயரையும் கோத்திரத்தையும் அவ்விதமே காரியத்தையும் அறிவித்துவிட்டுக் கைகூப்பிக்கொண்டு எதிரில் நின்றேன். நான் அவரால் அளிக்கப்பட்ட ஆஸனத்தில் மெள்ளஉட்கார்ந்தேன். மஹாராஜனே! பிறகு தர்மத்தைச்செய்கிறவர்களிற்சிறந்த அந்தரிஷியானவர் அவ்விடத்தில் ரிஷிகளின்மத்தியில் அறம்பொருள்களுடன் கூடியகதைகளைச்சொன்னார். பாரத! அவர்சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே தாமரைமலர்போன்றகண்களுள்ளவனும் சேனையுடனும் அந்தப்புரஸ்திரீகளுடனும்கூடியவனும் பெரியகீர்த்தியுள்ளவனும் ஸம்பத்துள்ளவனும் பூரித்யும்னனுடையதகப்பனுமான வீரத்யும்னராஜன் அரண்யத்தில் காணாமற்போனபுத்ரனைநினைத்து மிகவும்சோகமுள்ளவனாகி அந்தப்புத்ரனை, 'இவ்விடத்தில் பார்ப்பேன், இவ்விடத்தில் பார்ப்பேன்' என்றுவேகமானகுதிரைகளுடன்வந்தான். தர்மஞ்செய்பவனே! இவ்விதம்ஆசையால்இளைத்தஅந்தஅரசன் இந்தவனத்தில்ஸஞ்சரித்துக்கொண்டு, 'அந்தப்புத்ரன் திரும்பவும் என்னால் காணக்கிடைக்கமாட்டான்; ஒரேபுத்ரன்; பெரியஅரண்யத்தில் முந்திக் காணாமற்போய்விட்டான். அவனை நான் காணமுடியவில்லையே. எனக்கு ஆசை பெரிதாயிருக்கிறது. அந்தஆசையால்சூழப்பட்ட சரீ

முள்ளநான் மரணத்தையடையத்தக்கவனென்பதிற் சந்தேகமில்லை' என்று அப்பொழுது அடிக்கடி சொன்னான். சிறந்தரிஷிகளுள் உத்தமரும் பூஜ்யருமானதனுவானவர் இதைக்கேட்டவுடன் தலைகுனிந்து ஒருமுகூர்த்தநேரம்போலத் தியானத்தில் பற்றுதலுள்ளவராயிருந்தார். மிகவுஞ்சோகமுள்ள அரசன் அந்தமுனிவர் தியானஞ்செய்தலைக்கண்டு தீனபுத்தியுள்ளவனாய், 'தேவரிஷியே! எது கிடைப்பது அரிது? ஆசையைவிட எது பெரிது? இது ரஹஸ்யமாயில்லாமலிருக்குமானால் அப்பொழுது பூஜ்யரானநீர் இதை உபதேசிக்கவேண்டும்' என்னும்வாக்கியத்தைப் பலமுறை மிகவும்மெதுவாகச் சொன்னான். தனுவானவர், 'ஓ! அரசனே! நான் அல்பபாக்யனாயிருப்பதால் அவிவேகமுள்ளபுத்தியை அடைந்து [1]க்ஷேமத்தையும் பொன்னையும் மரவுரிகளையும்யாசிப்பவரும் பூஜ்யருமானமஹரிஷியானவர் உன்புத்ரனை அவனால் முந்தி அவமதிக்கப்பட்டவரானார். அவமதிப்பைமுன்னிட்டுக்கூட அவைகளைக்கொடுக்கவில்லை. அக்காரணத்தால்வெறுப்புற்ற அந்தப்பிரம்மரிஷியானவர் ஆசையற்றவரானார்' என்றுசொன்னார். மனிதர்களில்மிகச்சிறந்தவனே! இவ்விதம்சொல்லியதைக்கேட்டவனும் தர்மபுத்தியுள்ளவனுமான அரசன் உலகங்களால் பூஜிக்கப்படும் அந்தரிஷியைநமஸ்கரித்து, சிரமமுள்ளவனாய் உன்னைப்போல மிகத்துன்பமடைந்தான். பிறகு பெரியகீர்த்தியுள்ளரிஷியானவர் அர்க்கியத்தையும் பாத்தியத்தையும்வருவித்து அரசன் பொருட்டு யாவற்றையும் வனிகளுக்குள்ளவிதிப்படி அளிக்கச்செய்தார். பிறகு எல்லாரிஷிகளும் ஸப்தரிஷிகள் துருவனைச்சூழ்வதுபோல அந்த அரசனைமுன்னிட்டுச் சுற்றிஉட்கார்ந்தார்கள்; அப்பொழுது தோல்வியடையாத அந்தஅரசனைநோக்கி ஆஸ்ரமத்துக்குவந்ததின் பயன்யாவற்றையும் கேட்டார்கள்.

## நூற்றிருபத்தேட்டாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)



(வீரத்யும்னன் புத்ரனைத்தேடிவந்ததாகச்சொல்லி, மறுபடியும், 'கிடைத்தற்கரியபொருள் எது, மிகஅற்பமானது எது' என்றுவினவ, தனுரிஷி உத்தரம்சொல்லியது.)

அரசன், 'நான் வீரத்யும்னனென்றுசொல்லப்பட்டவனும் திக்குகளில்பிரஸித்திபெற்றவனுமானராஜன்; காணமற்போன பூரித்யும்

[1] 'பொற்கலசத்தை' என்பது வேறுபாடத்தின்பொருள்.

னனென்னும்புத்திரனைத்தேடவேண்டி வனத்துக்குவந்தேன். பிராம்மணசிரேஷ்டரே! அவன் ஒரேபுத்ரன். அவன் பாலகன்; குற்றமில்லாதவன்; இந்தவனத்தில் காணப்படவில்லை. அவனைத்தேடவேண்டி நான் ஸஞ்சரிக்கிறேன்' என்றுசொன்னான். அந்த அரசன்இவ்விதவசனத்தைச்சொன்னவுடன் முனியானவர் முகம்குனிந்தவராய்ப் பேசாமலேஇருந்தார்; அந்தஸமயத்தில் அரசனைநோக்கி மறுமொழிசொல்லவில்லை. அரசசிரேஷ்டனே! ஏனெனில், அந்தப்ராம்மணர் அந்த அரசனால் முந்தி மிகவும்பூஜிக்கப்படாதவராய் அவாரசைஅடிக்கப்பட்டு நீண்டதவத்தை அடைந்தார். அவர் அப்பொழுது, 'நான் எவ்விதத்திலும் அரசர்களிடமிருந்தும் மற்றஜாதிகளிடமிருந்தும் பிரதிக்ரஹத்தைச்செய்கிறதில்லை' என்று புத்தியைவைத்துக்கொண்டும், 'ஆசையன்றோ நிலைபெற்றதாகி அவிவேகமுள்ளபுருஷனைப் பேசச்செய்கிறது? அதை நான்விலக்குகிறேன்' என்றுஎண்ணிக்கொண்டும் உறுதியாகஇருந்தார். வீரத்யும்னனோ அந்தமுனிசிரேஷ்டரைநோக்கி, 'ஆசையின்நிலைமை எது? இப்பூமியில் எது ஜயிக்கக்கடினமானது? பூஜ்யரானநீர் இதைச் சொல்லவேண்டும். நீர் அறம்பொருள்களை அறிந்தவரன்றோ?' என்று திரும்பவும்கேட்டான். பிறகு பூஜ்யரும் மெலிந்தசரீரமுள்ளவருமான அந்தப்ராம்மணர் அப்பொழுது அது முழுமையையும் நினைத்துக்கொண்டு, அரசனை நினைக்கும்படிசெய்கிறவர்போல, 'அரசனே! மெலிந்ததில் ஆசைக்குச்சரியானது ஒன்றுமில்லை. ராஜனே! அந்தஆசையைஜயிப்பதுகடினமாகையால்தான் என்னால் அரசன் பிரார்த்திக்கப்பட்டான்' என்றுசொன்னார்.

அரசன், 'பிராம்மணரே! உமதுவசனத்தால் [1]கிருசத்தன்மையும் கிருசமில்லாமையும் என்னால் அறியப்பட்டன. த்விஜனல்லாதவனிடத்தில் வேதவாக்யம்போல அந்தஆசையில்தோன்றும்வஸ்துவே கிடைப்பதரிதென்றும் அறியப்பட்டது. ப்ராஜ்ஞர்களிற்பெரியவரே! ஆனால், என்மனத்தில் ஒருஸந்தேஹமுண்டாயிருக்கிறது. முனிவரே! கேட்கும்எனக்கு அதை உண்மையாக நீர் சொல்லவேண்டும். உம்மைவிடமிகவும்கிருசமாயிருப்பது எது? இவ்வுலகில் எது கிடைப்பதரிது? பிராம்மணரே! பூஜ்யரான நீர் உமக்குரஹஸ்யமாகஇல்லாவிட்டால் இதைச் சொல்லவேண்டும்' என்றுகேட்டான். தனுரிஷி சொல்லத்தொடங்கினார். 'யாசிக்கும் எந்தமனிதன் தைரியத்தை அடைகிறானோ அவன் துர்லபன்; அல்லது இல்லையென்றேசொல்ல

[1] 'ஆசையுள்ளவன் கிருசன்' ஆசையில்லாதவன் புஷ்டன்' என்பது பழையவுரை.

லாம். அப்பா! யாசிப்பவனை எவன் அவமதியாமலிருக்கிறானோ அவன் மிகவும்துர்லபன். யாசகனுக்கு மரியாதையுடன் ஆசைகாட்டி எவன் உண்மையாகச் சக்திக்குத்தக்கபடி உபகாரஞ்செய்யாமலிருக்கிறானோ அவனிடத்தில்வைக்கப்பட்ட எல்லாப்ராணிகளுடையஆசையும் என்னைவிடமிகவும்கிருசமானது. நன்றிகெட்டவர்களிடத்திலும் க்ரூரர்களிடத்திலும் சோம்பர்களிடத்திலும் அபகாரிகளிடத்திலும் வைக்கப்பட்டஆசையானது என்னைவிட மிகவும்கிருசமானது. ஒரே புத்ரனுள்ளஎந்தத்தகப்பனானவன் அந்தப்புத்ரன்காணாமற்போனதும் அல்லது தேசாந்தரஞ்சென்றதும் அவன்பிரவிருத்தியை அறியாமலிருக்கிறானோ அவனுடையஆசை என்னைவிட மிகக்கிருசமானது. ராஜனே! கிழவிகளானஸ்திரீகளுக்குப் புத்ரன்வேண்டுமென்றகாரணத்தால் பிரஸவத்திலுண்டாகும்ஆசையும் அவ்விதமே தனமுள்ளவர்களுக்குஉண்டாகும்ஆசையும் என்னைவிட மிகவும் கிருசமானவை. ஸரியானபிராயமிருக்கும்பொழுது விவாகத்தைவிரும்பும் கன்னிகைகளுக்கு அந்தவிவாகத்தைப்பற்றியகதைகளைக் கேட்டுண்டாகும் ஆசையானது என்னைவிட மிகவும்கிருசமானது' என்றுசொன்னார். அரசனே! பிறகு அதைக்கேட்டு அந்தப்புரத்துடன்கூடிய அந்தஅரசன் தலையால்அவர்கால்களைத்தொட்டு ப்ராம்மணச்ரேஷ்டரான அவரை விழுந்துவணங்கினான். தாமரைமலர்போன்ற கண்ணுள்ள அரசன், 'பூஜ்யரானபிராம்மணோத்தமரே! உமதனுக்ரஹத்தை வேண்டுகின்றேன். புத்ரனுடன்சேர்க்கையை விரும்புகிறேன். இப்பொழுது உம்மால்சொல்லப்பட்டது எதுவோ அந்தவிஷயத்தில் நீர்விரும்புகிற வரங்களை விதிப்படி பெற்றுக்கொள்ளும். ஓ! பிராம்மணரே! உம்மால்சொல்லப்பட்டஇஃது உண்மையே; வேறுவிதமானபொய்யன்று' என்றவசனத்தைச் சொன்னான். பிறகு தர்மத்தைரக்ஷிப்பவர்களுள் சிறந்தவரும் பூஜ்யருமானதனுவானவர் நகைத்துத் தவத்தாலும்கல்வியாலும் இந்தஅரசனுடையபுத்ரனை வேகமாகவருவித்தார். தர்மத்தை ரக்ஷிப்பவர்களுள்சிறந்தஅந்தமுனிவர் அவன்புத்ரனைவருவித்து அந்த அரசனைக்குற்றமுள்ளவனென்று தெரிவித்தபின் தர்மரூபியானதம்மைக் காண்பித்தார். அவர் ஆச்சரியமாகக்காணப்படும் திவ்யமான தம்உருவத்தைக்காண்பித்தபின் பாபமில்லாதவரும் கோபமில்லாதவருமாய் அரண்யத்தினருகிற் சஞ்சரித்துக்கொண்டிருந்தார். அரசனே! இஃது என்னால் காணப்பட்டது. அவ்விதமே இந்தவசனமும் கேட்கப்பட்டது. ஆகையால், மிகவுங்கிருசமானஇந்தஆசையை விரைவாகவிலக்கிக்கொள்'' என்றுசொன்னார். அரசனே! அப்பொழுது

மஹாத்மாவான ரிஷபரால் அவ்விதஞ்சொல்லப்பட்ட அந்தஸுமித்ரன் உடனே மிகவும்கிருசமான ஆசையை விலக்கிக்கொண்டான். மஹாராஜனான கௌந்தேய! நீயும் இவ்விதம் என்னுடைய இந்தவசனத்தைக்கேட்டு இமயமலைபோல அசைவற்றவனாகவும் உறுதியாகவுமிரு. மஹாராஜனே! இவ்வுலகில் நீதான் கஷ்டமான அவ்வித [1]விஷயங்களைப்பற்றி ப்ரச்னஞ்செய்கிறவனும் கேட்கிறவனுமாயிருக்கிறாய். என்னிடமிருந்துகேட்டபின் இந்தவிஷயங்களில் நீ துன்பப்படத்தக்கவனல்லன்" என்றுசொன்னார்.



## நூற்றிருபத்தோன்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(யமன், பெற்றோர்க்குப்பணிவிடைசெய்வது அவர்களின்கடனை நிவ்ருத்தி செய்வதற்குரியஉபாயமென்று கௌதமருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! அமிருதத்தில் திருப்தியுண்டாகாமைபோல நீர்பேசுவதில் எனக்குப் போதுமென்றஎண்ணமுண்டாகவில்லை. ஆத்மஞானஸமாதியிலிருப்பவன் எவ்விதம்திருப்தியுள்ளவனாயிருப்பனோ அவ்விதம் திருப்தியுள்ளவனாயிருக்கிறேன். பிதாமஹரே! ஆகையால், திரும்பவும் நீர் இந்தத்தர்மவிஷயத்தில் எனக்கு உபதேசிக்கவேண்டும். நான் உம்முடையதர்மோபதேசமென்னும் அமிருதத்தைப்பானஞ்செய்து திருப்தியடையவில்லை" என்று சொன்னார்.

பீஷ்மர் சொல்லத்தொடங்கினார். "இந்தவிஷயத்திலும் கௌதமருக்கும் மஹாத்மாவானயமனுக்கும்நடந்த ஸம்பாஷணையானபழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். பாரியாத்ரமென்னும் மலையில் கௌதமருக்குப் பெரியதோர்ஆச்ரமமிருந்தது. தவத்தால் பாவங்களையெரித்தகௌதமர் அதில் வஸித்துவந்தார். அந்தக்கௌதமர் அறுபதினாயிரம்வருஷம் தவஞ்செய்தார். புருஷப்புலியே! அப்பொழுது கடுமையானதவத்தையுடையவரும் தியானஞ்செய்கிறவரும் மிகப்பெரியரிஷியுமான அந்தக்கௌதமரிடம் லோகபாலனானயமன் வந்தான். வந்தபொழுது நல்லதவமுள்ள அந்தக்கௌதமரிஷியைக் கண்டான். தவத்தைப்பொருளாகக்கொண்ட அந்தப்பிரம்மரிஷியும் வந்த அவனைத் தேஜஸால் யமனென்றறிந்துகொண்டு கைகட்டி வணக்

1 வேறுபாடம்.

க்குள்ளவராய் அருகிற்சென்றார். தர்மராஜனானவன் பிராம்மணர்களிலுத்தமமான அந்தக்கௌதமரைக்கண்டதும் நமஸ்கரித்து, 'தர்மனானான் உமக்கு என்னசெய்யவேண்டும்?' என்றுசொல்லிக்கொண்டு எதிரிலழைத்தான். கௌதமர், 'புருஷன் எதைச்செய்து தாய்தந்தைகளிடம் கடனில்லாதிருக்கும்தன்மையை அடைவான்? அடையமுடியாதபுண்யலோகங்களையும் எவ்விதம் அடைவான்?' என்றுகேட்டார். யமன், 'எப்பொழுதும் தவமும்பரிசுத்தியுமுள்ளவனும் ஸத்யத்திலும் தர்மத்திலும் விருப்பமுள்ளவனுமாயிருந்துகொண்டு ஒவ்வொருநாளும் தாய்தந்தைகளின்பூஜையை நேராகச்செய்யவேண்டும். நிறைந்ததக்ஷிணையுள்ளபல அசுவமேதயாகங்களைச் செய்யவேண்டும். அதனால், புருஷன் ஆச்சரியமாகக்காணப்படும் உலகங்களை அடைவான்' என்றுசொன்னான்" என்றார்.

நூற்றுமுப்பதாவது அத்தியாயம்.

## ராஜதர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், அரசன் ஆபத்காலத்தில் பிரஜைகளைத் துன்புறுத்தியாவது பொக்கிஷத்தை விருத்திசெய்யவேண்டுமென்று சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! மித்ரர்களால் விடப்பட்டவனும் பலசத்துருக்களுள்ளவனும் பொக்கசமழிந்தவனும் சேனையிழந்தவனும் துஷ்டர்களானமந்திரிகளைத் துணையாகக்கொண்டவனும் யாவர்களாலும் கேட்கப்பட்டமந்த்ராலோசனையுள்ளவனும் ராஜ்யத்திலிருந்துநழுவுகிறவனும் வேறுகதியைக்காணாதவனும் சத்ருவின்ராஜ்யத்தைஎதிர்த்துச்சென்றவனும் சத்ருவின்ராஜ்யங்களை அடிக்கமுயன்றவனும் மிக்கபலசாலியானசத்துருவுடன் போர்செய்யப்ராவிருத்தித்தவனும் பலமில்லாதவனும் ராஜ்யத்தைநன்குரக்ஷியாதவனும் தேசகாலங்களை அறியாதவனுமான அரசனுக்கு என்ன கதி? அவனுக்கு ஸாமோபாயம் செல்லத்தக்கதாயிராது. மிகவும்துன்பமிருப்பதால் சத்துருவின்ஜனங்களிடம் பேதோபாயமுஞ்செல்லாது. அப்பொழுது அவன் எவ்விதத்திலாவது பொருளைஸம்பாதித்து அதைக்கொண்டு பிழைப்பதுநலமா? அல்லது மரிப்பதுநலமா? அவைகளில் எது நல்லதாகும்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"பரதர்களிற்சிறந்தவனே! மிக்கரஹஸ்யமானதர்மத்தைப்பற்றி என்னைக் கேட்கிறாய். யுதிஷ்டிர! இந்தத்தர்மத்தைக் கேளாமல்

சொல்ல எனக்கு விருப்பமில்லை. பாதர்களிற்சிறந்தவனே! தர்ம மென்பது மிக்கஸூக்ஷ்மமன்றோ? அதைச் சாஸ்திரத்திலிருந்து அறி வுடன்கேட்டுத்தெரிந்துகொண்டு [1]அனுஷ்டித்து யாராவதொருவன் ஓரிடத்தில் நல்லஆசாரங்களுடன் ஸாதுவாயிருப்பான். அறிந்துசெய் யப்படும் (பிரஜைகளைத்துன்பப்படுத்தும்) செய்கையால் ஒருவன் பொருளுள்ளவனுவதும் ஆகாமலிருப்பதுமுண்டு. அதைச்சொந்தப் புத்தியால் ஆலோசித்துப்பார். இந்தக்கேள்வி அவ்விதம் நிச்சயிக்கத் தக்கதாயிருக்கிறது. பாரத! அரசர்களின்வ்யவஹாரம் நடைபெறக்கார ணமான ஆபத்காலத்திற்குரியதர்மங்களைப்பற்றிய பலஉபாயங்களைக் கேள். தர்மத்தின்காரணத்தால் பிரஜைகளைத்துன்பப்படுத்திப்பொரு ளடைவதென்னும் இவ்விதத்தர்மத்தை நானடையவிரும்பவில்லை. இந்தஉபாயமானது இவ்வுலகிலுள்ளபிராணிகளால் துக்கத்துடன் அங் கீகரிக்கத்தக்கதாகும்; முடிவில் [2]மரணத்திற்குஒத்ததாகும். இதுவே நல்லறிவுள்ளவர்களைவரின்நிச்சயமும். மனிதன் எப்பொழுதும் சாஸ் திரத்தை எப்படிஎப்படிப் பார்க்கிறானே அப்படிஅப்படி அறிவுள்ள வனுவான். அறிவில் இவனுக்குவிருப்பமுமுண்டாகும். மனிதனுக்கு அறிவில்லாமையால் உபாயக்கேடும் அறிவால் உபாயமுமுண்டாகும். உபாயமானது ஸம்பத்தைச்செய்யும் உயர்ந்தஸாதனமாகும். ஸந் தேகமில்லாதவனும் அஸூயையில்லாதவனுமாய் இந்தவசனத்தைக் கேள். பொக்கசமழிவதாலேயே அரசனுக்கு மிகப்பலக்குறைவுண்டா கும். அரசன் எப்பொழுதும் இந்தப்பிராணிகளிடமிருந்து சக்திக்கு த்தக்கபடி பொக்கசத்தையுண்டுபண்ணிக்கொள்ளவேண்டும். முன் னோர்களானமனிதர்களால் ஆசரிக்கப்பட்ட இந்த [3]உபதர்மத்தை அடைந்தபின் நல்லகாலத்தைஅடைந்து (முன்துன்பப்படுத்தப்பட்ட பிராணிகளை) ஸந்தோஷப்படுத்தவேண்டும். இந்தத்தர்மம் ஆபத்கால த்தில் நியாயமாகும். ஓ! பாரத! சக்தியுள்ளவர்களுக்குத் தர்மம் வேறு. ஆபத்காலங்களில் தர்மம் [4]வேறு. [5]பொக்கசமில்லாமலும் தர்மம் அடையப்படும். தர்மத்தைவிட ஜீவனம் மிகப்பெரியதாகும். நியாயப்படியுள்ள தர்மத்தைஅடைவதால் பலசாலியாயிருக்கமுடி யாது. யாதொருகாரணத்தால் ஒரேஉறுதியாகத் தர்மத்திற்கு வ்ருத் தியுண்டாவதில்லையோ அக்காரணத்தால் ஆபத்காலத்தில் அதர்ம மும் தர்மலக்ஷணமுள்ளதாகக் கேட்கப்படுகிறது. அந்தச்சமயத்தில் அதர்மமும்தர்மமாகுமென்று அறிஞர்கள் அறிவிக்கிறார்கள். அவ் விஷயத்தில் ஆபத்துவிலகியபின் க்ஷத்திரியனுக்குத் தோஷத்தை

1, 2 வேறுபாடம். 3 ஆபத்காலத்திற்குரியதர்மம். 4, 5, வேறுபாடம்.

விலக்கத்தக்கபிராயச்சித்தம் விதிக்கப்படுகிறது. இந்த அரசனுக்கு எவ்விதம் தர்மம் குறையாமலிருக்குமோ, இவன் எவ்விதம் சத்துருவின்வசமடையாதிருப்பனோ அதைச் செய்யவேண்டும். தன்னைக் குறையில்லாதவனாகச் செய்துகொள்ளவேண்டுமென்றுசொல்லுகிறார்கள். எல்லாவிதத்தாலும் எல்லாஉபாயங்களாலும் தன்னைத் துன்பத்திலிருந்து விடுவித்துக்கொள்ளவேண்டும். தன்னுடையதர்மத்தையும் பிறனுடையதர்மத்தையும் (ஆபத்காலத்தில்) கவனிக்கவேண்டியதில்லையென்பது நிச்சயம். அப்பா! தர்மமறிந்தவனுக்கு ஆபத்காலத்திலுள்ளதர்மத்தைப்பற்றிய நிச்சயம் தர்மத்தில் [1] ஸாமர்த்தியமாகும். க்ஷத்திரியனுக்குக் கைவன்மையால்முயற்சிசெய்வது [2]ஜீவனமென்று வேதங்கூறுகிறது. பாரத! க்ஷத்திரியன் ஜீவனத்திற்குத் தடையுள்ளஸமயத்தில் ரிஷிகளின்பொருளையும் வேதமோதுபவர்களின்பொருளையும்விட்டு வேறுஎவனுடையபொருளை எடுக்கத்தகுதியுள்ளவனல்லன்? இது, துன்பமுள்ளபிராம்மணன் யாகஞ்செய்வியாதவனுக்கும் எப்படியாகஞ்செய்விப்பானோ, புஜிக்கத்தகாததையும்எப்படிப்புஜிப்பானோ அப்படியே; இதில்ஸந்தேஹமில்லை. துன்பமுள்ளவனுக்கு எந்தவழி செல்லத்தகாதது? [3]தடுக்கப்பட்டவனுக்குக்கெட்டவழியென்பதில்லை. துன்பப்படுத்தப்படுகிறவன் எவ்விதம் வழியைவிட்டோடுவனோ இதுவும் அவ்விதமாகும். எவனுடையபொக்கசமும் சேனையும் குறைவடைவதால் எல்லாப்பிராணிகளுக்கும்துன்பம்நேருமோ எவனுக்குப் பிக்ஷையெடுப்பதும் வைஸ்யசூத்ரர்களின்ஜீவனமும் விதிக்கப்படவில்லையோ அந்தக்ஷத்திரியன் முக்கியமானதர்மத்தைவிடத்தக்க ஆபத்துள்ளபொழுது [4]தன்ஜாதியாரை அடுத்துப் பிழையாமல் தன்தர்மத்திற்கடுத்தபடியான (பிரஜைகளைத்துன்பப்படுத்தியாவது பொருளை அடைவதென்னும்) இரண்டாவதுவிதிப்படி ஜீவிப்பது நியாயமாகும். ஆபத்தைஅடைந்தவன் தர்மத்திற்குரிய நியாயத்தைவிட்டுப் பிழைக்கலாம். இது ஜீவனத்திற்குக்குறைநேரும்பொழுது பிராம்மணர்களிடத்திலும் காணப்பட்டது. க்ஷத்திரியனிடத்தில் ஸந்தேஹமில்லாமல் எப்பொழுதும் இது நிச்சயிக்கப்பட்டது. க்ஷத்ரியன் பொருளுள்ளவர்களிடமிருந்து பொருளைஎடுத்துக்கொள்ளலாம். எவ்விதத்திலும் (தான்) துன்பமில்லாதிருக்கவேண்டும். க்ஷத்ரியன் துன்பமுள்ளபிரஜைகளை ரக்ஷிப்பவனென்று அறிவிக்கிறார்கள். ஆகையால், ரக்ஷையைச்செய்கிறவனை அரசன் பொருளைஎடுத்துக்கொள்ளவேண்டும். இவ்வுலகில் க்ஷத்திரியனல்லா

---

1 வேறுபாடம். 2 'ஸாமர்த்தியம்' என்பது வேறுபாடம். 3, 4 வேறுபாடம்.

தவர்களிலும் எவ்விதமனிதனுக்கும் ஹிம்ஸையில்லாததான ஜீவனமில்லை. ஒருவராய் ஆரண்யத்திலிருந்து ஸஞ்சரிக்கும்முனிவருக்கும் லலாடத்தில்எழுதியபடிநடக்குமென்று நம்பிக்கொண்டிருந்து ஜீவிக்கமுடியாது. குருக்களிற்சிறந்தவனே! பிரஜைகளின் ரக்ஷையைச் செய்யவிரும்பும் க்ஷத்திரியனுக்கு அது மிகவும்முடியாதது. ஆபத்காலத்தில் எப்பொழுதுமே அரசும் ராஜ்யமும் ஒன்றையொன்று அடுத்திருக்கும்படிசெய்யவேண்டும். இது ஸநாதனமான தர்மம். அரசன் ஆபத்காலங்களில் திரவியக்குவியல்களைக்கொண்டு ராஜ்யத்தை எவ்விதம் ரக்ஷிக்கிறானோ அவ்விதம் ராஜ்யமும் அரசனை ஆபத்காலத்தில் ரக்ஷிக்கத்தக்கதாயிருக்கவேண்டும். பசியால்பீடிக்கப்பட்ட அரசன், ராஜ்யத்தில்சேர்த்துவைக்கப்பட்டகோசம் தண்டம் ஸேனை மித்திரன் இவைகளையும் மற்றவற்றையும் விலகிஇருக்கச்செய்யக்கூடாது. தர்மமறிந்தவர்கள் [1] அன்னத்தால் விதையைஸம்பாதிக்கவேண்டுமென்றறிவிக்கிறார்கள். இந்தஆபத்கால தர்மத்தைப்பற்றிய விஷயம்பெரியமாயையுள்ளசம்பராஸுரனுடையமதமென்று சொல்லுகிறார்கள். எந்தஅரசனுடைய ராஜ்யமானது ஜீவனமின்றிக்கஷ்டப்படுகிறதோ, எவன் வேறுமனிதனையிருக்கிறானோ, எவன் விதேசத்திற்குச் செல்லுகிறானோ அந்தஅரசனுடையஜீவனம் நிந்திக்கப்பட்டதாகும். அரசனுக்குக் கோசமும் ஸேனையும் மூலமாகும். ஸேனையோ கோசத்தை மூலமாகக்கொண்டது. அந்தஸேனை எல்லாத்தர்மங்களுக்கும் மூலம். ப்ரஜைகள்அந்தத்தர்மத்தை மூலமாகக்கொண்டவைகள். இவ்வுலகில் கோசமானது பிறரைத்துன்பப்படுத்தாமல் சேர்க்கப்படமுடியாதது. (கோசமில்லாவிட்டால்) ஸேனையேது? அவ்விதக்கோசத்திற்காகத்துன்பப்படுத்துவதால் தோஷத்தை அடையமாட்டான். செய்யத்தகாததும் கார்யத்திற்குவேண்டி யாகங்களில் செய்யப்படுகிறது. ஆபத்காலத்தில் பொக்கசத்தைச் சேர்க்கத்துன்பப்படுத்துகிறதென்னும் இந்தக்காரணத்திற்காகஅரசன் தோஷத்தை அடையமாட்டான். ஆபத்காலத்தில் பிரஜைகளைக்கஷ்டப்படுத்துவது அவைகளின்க்ஷேமத்திற்குக் காரணமாகும். அப்போது வேறுவிதமாயிருப்பது துன்பத்திற்குக் காரணமாகும். யானைகுதிரைமுதலிய

[1] 'விதைக்குமிச்சமின்றிப் புஜித்துவிட்டால் பிறகு போஜனம் அரிதாய்விடும். புஜிப்பதைக்குறைத்தாவது விதையைஸம்பாதித்தால் பிறகு நன்றாகப்புஜிக்கலாம். அதுபோலத் தனம்குறைந்தஅரசனை ப்ரஜைகள் பெருகச்செய்தால் பிறகு அவனால் அவை ரக்ஷிக்கப்படும். அவ்விதமின்றி அரசனுக்குமோசம்வந்தால் ப்ரஜைகளும் அழிந்துபோம்' என்பதுபழையவுரை.

வைகளைரக்ஷிப்பது பயனற்றதானாலும் அதுமுழுவதும் பொருளைச் சேர்க்கக்காரணமாகும். புத்தியுள்ளவன் கார்யங்களின்நிச்சயத்தை இவ்விதம் புத்தியால் நன்ருகப்பார்த்துக்கொள்ளவேண்டும். [1]யாகத்திற்கு வேறொன்று ஸாதனமாகிறது. யாகம் வேறொன்றுக்கு ஸாதனமாகிறது. மற்றொன்று யாகத்தின்ஸாதனத்திற்கு ஸாதனமாகிறது. அதுயாவும் யாகத்திற்குஸாதனந்தான். இதுவிஷயத்தில் தர்மத்தின்உண்மையைவெளியிடத்தக்க உபமானத்தைச்சொல்லுகிறேன். யாகத்திற்காக யூபத்திற்குரியமரத்தை வெட்டுகிருர்கள். அவ்விடத்தில் அருகிலுள்ள எந்தச்சிலமரங்கள் (அதற்கு) விரோதமாயிருக்கின்றனவோ அந்தமரங்களையும் நிச்சயமாக வெட்டுகிருர்கள். அந்தமரங்கள் விழும்பொழுது மற்றமரங்களையும் முறிக்கின்றன. சத்துருக்களைத்தபிக்கச்செய்கிறவனே! இவ்விதம் எந்த மனிதர்கள் பெரியபொக்கசத்திற்கு விரோதிகளாயிருக்கிருர்களோ அவர்களைக்கொல்லாமல் இந்தப்பொக்கசம் ஸித்திப்பதைக்காணேன். பாரத! தனத்தால் இவ்வுலகையும் மேலுலகையும் ஸத்தியத்தையும் தர்மத்தையும் ஜயிக்கலாம். பொருளில்லாதவன் பிணமே ஆவான். எல்லாஉபாயங்களாலும் யாகத்தில்பயன்படத்தக்கபொருளை ஸம்பாதிக்கவேண்டும். ஓ! பாரத! இவ்விதம் ஆபத்காலத்தில்செய்யத்தக்கதும் மற்றஸமயத்தில்செய்யத்தகாததுமான இந்தவிஷயங்களில் ஸமமானதோஷமுள்ளவனுகக்கூடாது. பரதகுலத்திலுதித்த அரசனே! பொருளை அடைவது விடுவது இவ்விரண்டும் ஒருவனிடத்தில் எவ்விதமும் இருக்கமுடியா. காடுகளில் செல்வமிக்கவர்களை ஓரிடத்திலும் நான் காணேன். இந்தப்பூமியில் பொருளென்று யாதொருவஸ்துகாணப்படுகிறதோ அதை, 'இது, எனக்குவேண்டும், எனக்கு வேண்டும்' என்று உலகம் நினைக்கிறது. எவ்விதத்திலும் அரசனுடையதர்மத்திற்குச்சரியானதொன்றுமில்லை. அரசர்களுக்குஆபத்காலத்திற்காக வேறுவிதமானதர்மம்சொல்லப்பட்டிருக்கிறது. அது மற்றஸமயத்தில் தர்மமாகாது. சிலர் ஞானத்தாலும் கர்மத்தாலும் தவமுள்ளசிலர் [2] தவத்தாலும் மற்றுஞ்சிலர் புத்தியாலும் ஸாமர்த்தியத்தாலும் பொருளைச்சேர்க்கிருர்கள். பொருளில்லாதவனைப் பல

---

[1] 'பசுமுதலியவை யாகத்திற்குஸாதனம். யாகம் சித்தசுத்திக்குஸாதனம். பசு, யாகம், சித்தசுத்திமூன்றும் மோக்ஷத்திற்குஸாதனம். இப்படியே தண்டம் பொக்கசத்திற்குஸாதனம். பொக்கசம் ஸேனைக்குஸாதனம். ஸேனை சத்துருவைஜயிப்பதற்குஸாதனம். பொக்கசம், ஸேனை, ஜயம் மூன்றும் ராஜ்யத்தின்விருத்திக்குஸாதனம்' என்பது பழையஉரை.

[2] வேறுபாடம்.

மில்லாதவனென்று சொல்லுகிறார்கள். மனிதன் பொருளால் பலமுள்ளவனாவான். [1] பலமுள்ளவனுக்கு யாவும் அடையத்தக்கனவாகும். பொக்கசமுள்ளவன் யாவற்றையும் ஜயிப்பான். [2] கோசமும், தர்மமும், காமமும், பரலோகமும், இவ்வுலகமுமாகிய அனைத்தையும் தர்மப்படி அடையவிரும்பவேண்டும். ஒருஸமயத்திலும் அதர்மத்தாலடையவிரும்பக்கூடாது" என்றுசொன்னார்.

ராஜதர்மம் முற்றிற்று.

நூற்றுமுப்பத்தோராவது அத்தியாயம்.

# ஆபத்தர்மம்.



(பீஷ்மர், அரசன் ஆபத்காலத்தில் எல்லாப்பொருளையுங்கொடுத்தாவது தன்னை ரக்ஷித்துக்கொள்ளவேண்டுமென்றுகூறியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! குறைவடைந்தவனும் சோம்பலுள்ளவனும் பந்துக்களின்நாசத்தில்பயத்தால் வெளியில்வந்துயுத்தஞ்செய்யமுடியாதவனும் முக்யமானஜனங்களிடம் ஸந்தேஹமுள்ளவனும் கெட்டஆலோசனையுள்ளவனும் ராஜ்யத்திலுள்ளவர்களாலும் பட்டணத்திலுள்ளவர்களாலும்வெறுக்கப்பட்டவனும் செல்வப்பெருக்கமில்லாதவனும் மித்திரர்களைமர்யாதைசெய்யமுடியாதவனும் எல்லாவிதத்தாலும்வேறுபட்டமந்திரிகளுள்ளவனும் சத்துருசேனையால் எதிர்க்கப்பட்டவனும் பலமில்லாதவனும் அதிகபலமுள்ளவிரோதியால் துன்பப்படுத்தப்பட்டமனமுள்ளவனுமாயிருப்பவனுக்கு எது செய்யத்தக்கதென்றுகூறப்படுகிறது? அதைச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"ஜயிக்கவிருப்பமுள்ளசத்துருவானவன் தர்மப்படிபொருளை ஸம்பாதிப்பதில்ஸமர்த்தனும் பரிசுத்தனுமாயிருப்பானாகில் விரைவில் அவனுடன் ஸந்திசெய்துகொள்ளவேண்டும். 3 முன்னோர்களால் அனு

1 'தனமுள்ளவன்' என்பது வேறுபாடம்.

2 'தர்மமும், காமமும், பரலோகமும், இவ்வுலகமும் கோசத்தால்ஸித்திக்கும். அந்தக்கோசத்தைத் தர்மத்தால் அடையவிரும்பவேண்டும்' என்பது வேறுபாடம்.

3 'தன்முன்னோர்களால் அனுபவிக்கப்பட்டவைகளும் அந்தச்சத்துருவினால்ஆக்ரமிக்கப்பட்டவைகளுமான கிராமம்நகரமுதலியவைகளை அவனிடமிருந்து ஸாமோபாயத்தினாலேயே விடுவித்துக்கொள்ளவேண்டும்' என்பது பழையவுரை.

பகிக்கப்பட்டவைகளை விடுவித்துக்கொள்ளவேண்டும். எவன் அதர்ம மாகஜயிக்கவிருப்பமுள்ளவனும் பலமுள்ளவனும் பாபத்தில்உறுதி யுள்ளவனுமாயிருக்கிறானோ அவனுடனும் தன்னுடையசிலகிராமங் களைக்கொடுத்தாவது ஸந்திசெய்துகொள்ளவிரும்பவேண்டும். ராஜ தானியைவிட்டாவது [1]வேறுஉபாயத்தாலாவது ஆபத்தை விலக்கிக் கொள்ளவேண்டும். அரசத்தன்மைக்குத்தகுதியுள்ளவன் உயிரோ டிருந்தால் திரும்பவும் திரவியங்களைத் தேடிக்கொள்ளலாம். எந்த ஆபத்துக்கள் பொக்கசத்தையும் ஸேனையையும்இழந்து விலக்கிக் கொள்ளத்தக்கவைகளோ அவைகள்விஷயத்தில் அறம்பொருள்களை யறிந்தஎவன் மேலானதன்னையிழப்பான்? [2]விரோதிசெய்யுங்குற்றங் களை வெறுக்கவேண்டும். சத்துருவுக்குவசப்பட்டபொருளில் ஸ்நே ஹம்வைப்பது கூடாது. எவ்விதமாவதுகூடுமானால் தன்னை (சத் துருவிடம்) கொடுக்கக்கூடாது" என்றுசொன்னார்.

யுதிஷ்டிரர், "உள்ளிலுள்ளமந்திரிமுதலியவர் கோபங்கொண் டும் வெளியிலுள்ளராஜ்யமுதலியவை சத்துருவால்பிடிக்கப்பட்டும் பொக்கசம்குறைவடைந்தும் மந்த்ராலோசனை (யாவராலும்) கேட்கப் பட்டுமிருக்கும்பொழுது எது செய்யத்தக்கதென்றுகூறப்படுகிறது?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"(சத்துரு தர்மபுத்தியுள்ளவனானால்) விரைந்து ஸந்திசெய்து கொள்ளவிரும்பவேண்டும்; (அதர்மபுத்தியுள்ளவனானால்) வேகமாகக் கடுமையானபராக்ரமத்தைச் செலுத்தவேண்டும். பராக்ரமத்தைச் செலுத்தினால் வேகமாகச் சத்துரு ஓடுவான். அல்லது (யுத்தத்தில் நேரும்) மரணத்தால் பரலோகமுண்டு. பூமிக்குப்பதியானஅரசன் அல்பமாயிருந்தாலும் பக்தியுள்ளதும் ஸந்தோஷமுள்ளதும் புஷ்டி யுள்ளதுமான தன்சேனையால் பூமியை ஜயிப்பான்; கொல்லப்பட்டா வது ஸ்வர்க்கத்தை அடைவான்; சத்துருக்களைக் கொன்றாவது [3]லோகத்தை அடைவான். யுத்தத்தில்உயிரைவிடுகிறவன் இந்திரனு டையஉலகத்தை அடைகிறானல்லனோ? யுத்தமின்றிச் சாந்தனாயிருப் பதைஅடைவதற்காக எல்லாஜனங்களும் [4]அறியும்படியானவழியைச் செய்து நம்பிக்கையைஉண்டுபண்ணி அடக்கமாயிருக்கவேண்டும். அடக்கத்தைத் தெரிவிக்கும்படி [5]பாதாரக்ஷைகளையுமாவது விலக்கிக்

---

1 'பொருளைக்கொடுத்தாவது' என்பது வேறுபாடம்.

2 '(ஆபத்காலத்தில்) அந்தப்புரஸ்திரீகளையும் வெறுக்கவேண்டும்' என்பது வேறுபாடம். 3 'பூமியை' என்பது வேறுபாடம். 4 வேறுபாடம்.

5 'உபாயத்தினால் (சத்துருக்களிடத்தில்) நம்பிக்கையுள்ளவனாகவும் இருக்கவேண்டும்' என்பது வேறுபாடம்.

கொள்ளவேண்டும். வேகமாகவெளியிற்போகவிருப்பமுள்ளவன் தன் சேனையை இன்சொல்லால் ஸமாதானஞ்செய்துகொண்டு தேசாந்தரம் சென்றபின் [1]ஆலோசனைசெய்து பிறகு தான்முயற்சிசெய்யவேண்டும்" என்றுசொன்னார்.

---

நூற்றுமுப்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், அரசன் துஷ்டஜனங்களிடமிருந்து பொருளைக் கவர்ந்தாவது, ஆபத்தையடைந்தப்ராம்மணர்களை ரக்ஷிக்க வேண்டுமென்பதைச்சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! எல்லாஜனங்களாலும் விரும்பப்படும் அரசர்களுக்குரிய முக்யமானதர்மம் குறைவடைந்தும் பூமியிலுள்ளஜீவனமெல்லாம் திருடர்களால்ஆக்ரமிக்கப்பட்டும் மிக்கஆபத்தானகாலம்வந்திருக்கையில் பிராம்மணன் ஸ்நேஹத்தால் புத்ரபௌத்ரர்களைவிடாமல் எதைக்கொண்டு ஜீவிப்பான்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர். "அவ்விதமான ஸமயம்வரும்பொழுது அறிவின்வலிமையை அடைந்து ஜீவிக்கவேண்டும். உலகில் காணப்படும் பொருள்கள்யாவும் ஸஜ்ஜனங்களுக்காகவே. அஸாதுக்களுக்கொன்றுமில்லை. எவன் அஸாதுக்களிடமுள்ளபொருளையெடுத்து ஸாதுக்களுக்குக்கொடுக்கிறானோ அவன்தான் தன்னைப் பாலமாகச்செய்துகொண்டு ஆபத்காலத்திற்குரிய தர்மத்தைச்செய்தவனாகிறான். அரசனே! தன்னுடையராஜ்யத்தில் கோபமில்லாமலும் ரக்ஷிக்கும்தர்மத்தை விரோதப்படுத்தாமலும் கொடாதபொருளையும் ஸமேஹாதானுடையபொருளென்றாவது தன்னுடையதென்றாவதுசொல்லி எடுத்துக்கொள்ளவேண்டும். அறிவின்பலத்தால் பரிசுத்தியுள்ளவனும் ஜீவனத்திற்குத்தக்க அறிவுள்ளவனும் தைரியமுள்ளவனுமானவன் நிந்திக்கப்படுங்கார்யங்களிலும் ப்ரவிருத்திக்கிறானே அவனைப்பற்றி இவ்வுலகில் எவன் நிந்திக்கத்தக்கவனாவான்? யுதிஷ்டிர! எவர்களின் [2]ஜீவனமானது பலத்தால்செய்யப்பட்டதாயிருக்கிறதோ அவர்களுக்கு வேறுஜீவனம் ருசியாது. பலமுள்ளஅவர்கள் பராக்ரமத்தால் ப்ரவிருத்திப்பார்கள். ஆபத்காலத்திற்குரிய சாஸ்திரமானது இவ்விதம் [3]பொதுவாயிருப்பதால் புத்தியுள்ளவன் ஆபத்துள்ளஸமயத்

---

1, 2, 3 வேறுபாடம்.

தில் இவ்விதமும் இதற்குமேலும் நடத்திக்கொள்ளலாம். மரியாதை செய்யப்பட்டவர்களும் பூஜிக்கப்பட்டவர்களுமான ரித்விக்கும் புரோஹிதரும் ஆசாரியருமாகிய ப்ராம்மணர்கள் (மிகுதியானபொருளுள்ளவர்களாயிருந்தாலும் பொருளுக்காக) அவர்களைப்பீடிக்கக்கூடாது; பீடிப்பவன் தோஷங்களை அடைவான். இந்தச்சாஸ்திரம் உலகத்திற்குப்பிரமாணம். இது ஸநாதனமானகண். இதைப் பிரமாணமாகக்கொண்டு நல்லதோகெட்டதோ இதின்படி நடக்கவேண்டும். கிராமத்திலிருக்கும் பலமனிதர்கள் ஒருவரையொருவர் குற்றங்களைச் சொல்லுவார்கள். அரசன் அவர்களின்வசனத்தைக்கேட்டு மர்யாதை செய்வதும் அல்லது துன்பப்படுத்துவதும் கூடாது. எவ்விதத்திலும் அபவாதவசனம் பேசத்தக்கதன்று; கேட்கத்தக்கதுமன்று. அபவாதம்பேசுகிறவிடத்தில் காதுகளைமூடிக்கொள்ளவேண்டும். அவ்விடம்விட்டு வேறிடத்திற்காவது செல்லவேண்டும். அபவாதம்பேசுவதும் கோட்சொல்லுவதும் ஸாதுக்களின்ஸ்வபாவமல்ல. யுதிஷ்டிர! ஸாதுக்கள் எப்பொழுதும் குணங்களையேகூறுவார்கள். அடக்கத்தக்கவைகளும் நன்குசிக்ஷிக்கப்பட்டவைகளும் நன்றாகஇழுக்கத்தக்கவைகளுமானகாளைகள் எவ்விதம் ஸமமானபாரமுள்ளவைகளாகிச் சுமையைத்தூக்கிக்கொண்டு செல்லுகின்றனவோ அவ்விதம் அரசனிருக்கவேண்டும். இந்தஅரசனுக்கு எப்படியிருந்தால் பலபேர்கள் துணைவர்களாவார்களோ அவ்விதஆசாரமுள்ளவனாக இவன் இருக்கவேண்டும். ஆசாரத்தையே தர்மத்திற்குரிய மிகப்பெரிய லக்ஷணமென்றறிகிறார்கள். சங்கலிகிதர்களின்தர்மத்தில் ப்ரீதியுள்ள மற்றச்சிலர்கள் (ரித்விக்குமுதலியவர்கள் குற்றஞ்செய்தாலும் பொருளைஎடுத்தலாகியதண்டனை கூடாதென்ற) இந்தத்தர்மத்தை விரும்புகிறார்களில்லை. அவர்கள் [1]மத்ஸரத்தாலும் பேராசையாலும் எடுப்பதுமட்டில் கூடாதென்றுசொல்லுகிறார்கள். இந்தவிஷயத்தில் குருவாயிருந்தாலும் தர்மவிரோதமாகச்சென்றவனைச் சிக்ஷிக்கவேண்டுமென்றுகூறும் ரிஷிகளின்வசனத்தையும் அறிவிக்கிறார்கள். ரிஷிகளின் வசனத்திற்கு ஒத்ததானப்ரமாணம்ஒன்றும் ஓரிடத்திலும் காணப்படவில்லை. விபரீததர்மத்திலிருக்கும் அதமனானமனிதனைத் தேவர்களும் சிக்ஷிக்கிறார்கள். கபடமாகப்பொருளைஸம்பாதிப்பவன் தர்மத்தை இழக்கிறவனாகிறான். [2]எல்லாவிதத்தாலும் ஆதரிக்கப்படுவதும்[3] மனுமுதலியஸத்புருஷர்களால் ஆதரிக்கப்படுவதும் [4]மஹிமை

---

1 வேறுபாடம். 2 வேதத்தில்கூறியதர்மம்.
3 ஸ்மிருதியில்கூறியதர்மம். 4 ஆசாரத்தால்வரும் தேசதர்மம்.

பிற்சிறந்த பெரியோர்களைக் காரணமாகக்கொண்டு ஆதரிக்கப்படு வதும் [1]தன்மனத்திற்குத் திருப்தியுள்ளதுமாயிருப்பது எதுவோ அதைத் தர்மமென்றுநிச்சயிக்கவேண்டும். எவன் [2]நான்குகுணங்க ளுக்கும் ஒத்ததானதர்மத்தை அறிகிறானோ அவன் தர்மத்தைஅறிந் தவன். ஸர்ப்பத்தினுடைய அடியைப்போலவே தர்மத்தின் அடியைத் தேடிக்காணுவது கஷ்டம். மிருகங்களை அடிக்கும்வேடன் அடிபட்ட மிருகத்தின் [3]காலடியை உதிரம்விழுந்திருப்பதால் கண்டுபிடித்துப் பிறனுக்கு எவ்விதம்அறிவிப்பனோ அவ்விதம் தர்மத்தின் அடியை அறிவிக்கவேண்டும். யுதிஷ்டிர! எவ்விதம் நன்றாகச்செய்யப்பட்ட வழியால் செல்லவேண்டுமோ இந்தராஜரிஷிகளின்நடையும் அவ்வித மே. நீ இவ்விதம்நட" என்றுசொன்னார்.

## நூற்றுமுப்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், அரசன் எவ்விதத்திலும் பொக்கசத்தைவ்ருத்திசெய்யவேண்டு மென்பதையும் திருடர்களும் மிச்சமின்றித்திருடாமல் மர்யாதையுட னிருக்கவேண்டுமென்பதையும் சொல்லியது.)

பீஷ்மர், "அரசன் தன்ராஜ்யத்திலிருந்தும் பிறர்ராஜ்யத்தி லிருந்தும் பொக்கசத்தை உண்டுபண்ணிக்கொள்ளவேண்டும். கௌந் தேய! ராஜ்யத்திற்குமூலமான தர்மமானது பொக்கசத்திலிருந்தன் றோ பெருகுகிறது? ஆகையால், பொக்கசத்தை உண்டுபண்ணிக் கொள்ளவேண்டும், அதனை ஆதரித்து ரக்ஷிக்கவேண்டும். ரக்ஷித்துக் கொண்டு உலகத்திற்கு உபகாரஞ்செய்யவேண்டும். இது ஸநாதன மானதர்மம். அவ்விதப்பொருளாதாரமானது சுத்தமான ஒரேஎண்ண முள்ளவனாலும் க்ரூரனாலும் உண்டுபண்ணமுடியாது. இவைகளின் நடுநிலைமையையடைந்து கோசத்தைச்சேர்க்கவேண்டும். பலமில்லாத வனுக்குப் பொருள்எது? பொருளில்லாதவனுக்குப் பலம்எது? பல மில்லாதவனுக்கு ராஜ்யம்எது? ராஜ்யமில்லாதவனுக்கு ஸம்பத்து எப்படிஉண்டாகும்? பெருமையைஅடைந்தவனுக்குச் செல்வத்தை

[1] இவைகள்வேறுபடுமிடத்தில் தன்மனத்திற்குத்திருப்தியானதர்மம்.

[2] முன்கூறியசுருதி, ஸ்மிருதி, ஆசாரம், தன்மனம்என்னும்நான்கு; அல் லது வேதம், தர்க்கசாஸ்திரம், கிருஷிசாஸ்திரம், தண்டநீதி இந்நான்குமாம்.

[3] 'இடத்தை' என்பது பழையஉரை.

இழப்பது மரணம்போன்றதாகும். ஆகையால், அரசன் பொக்கசத்தையும் பலத்தையும் மித்திரனையும் பெருகச்செய்யவேண்டும். கோசமில்லாத அரசனைச் [1]சத்துருக்கள் அவமதிப்பார்கள்; அவன் செய்யும்வேலையால் சிறிதும்ஸந்தோஷப்படமாட்டார்கள்; உத்ஸாஹத்தையும்அடையமாட்டார்கள். ஸம்பத்தென்னும்காரணத்தால்தான் அரசன் பெரியமர்யாதையைப் பெறுகிறான். ஸ்திரீயின்ரஹஸ்யாங்கத்தை வஸ்திரமானது மறைப்பதுபோல அந்தஸம்பத்தானது அந்த அரசனுடையபாபங்களை மறைக்கிறது. முன் துன்பப்படுத்தப்பட்ட மனிதர்கள் அவனுடையஸம்பத்தைக்கண்டு தாபத்தை அடைவார்கள். அவர்கள் செந்நாய்களுக்கொப்பாக எப்பொழுதும் அடிக்கவிருப்பமுள்ளவர்களையே அடைவார்கள். பாரதர்களில்மிகச்சிறந்தவனே! இவ்விதமான அரசனுக்கு ஸுகமேது? அரசன் முயற்சியுள்ளவனாகவேயிருக்கவேண்டும்; சோர்வடையக்கூடாது. முயற்சியென்பதுதான் ஆண்மை. கணுவல்லாதவிடத்தில் பங்கத்தையும்அடையலாம். இவ்வுலகில் ஒருவனுக்கும்வணங்கக்கூடாது. அரண்யஞ்சென்று மிருகக்கூட்டங்களுடன்சேர்ந்து ஸஞ்சரித்துக்கொண்டிருக்கலாம். மர்யாதையைவிட்டவர்களும் திருடர்கள்போன்றவர்களுமான மந்திரிகளுடன்சேர்ந்து ஸஞ்சரிக்கவேகூடாது. ஓ! பாரத! திருடர்களுக்குக் கொடுமையான கார்யங்களைச்செய்ய ஸேனைகிடைப்பதுஎளிது. மர்யாதையற்றமனிதனிடமிருந்து எல்லாஜனங்களும் நிச்சயமாக நடுக்கமடைவார்கள். தயையின்றிச்செய்யும்திருடர்களும் மர்யாதையற்றவனிடம் ஸந்தேஹப்படுவார்கள். ஆகையால், ஜனங்களின் மனத்தைத் தெளியச்செய்யும் மர்யாதையை உறுதியாகச்செய்யவேண்டும். சிறிதாயிருப்பினும் கார்யங்களிலுள்ளமர்யாதை உலகத்தில் பூஜிக்கப்படுவதாகும். இவ்வுலகமுமில்லை மேலுலகமுமில்லையென்றஎண்ணமுள்ள விவேகமில்லாதஉலகமானது நாஸ்திக்யத்தாலும் பயத்தாலும் ஸந்தேஹத்தாலும் நம்பிக்கையடையத்தக்கதாயிராது. ஸாதுக்களானதிருடர்கள் பிறர்பொருளையெடுப்பதும் ஹிம்ஸையாகாது. மர்யாதையுள்ள திருடர்களிடம் ப்ராணிகள் ஸ்நேஹமுள்ளவைகளாயிருக்கும். யுத்தத்திற்குவாராதவனைக்கொல்லுவதும் பதிவ்ரதைகளைத்தொடுவதும் நன்றிகொன்றவனாயிருப்பதும் பிராம்மணன்பொருளைஎடுப்பதும் மிச்சமின்றிஎடுப்பதும் ஸ்திரீகளை அபஹரிப்பதும் கிராமத்திற்சென்று அதன்தலைமையாயிருப்பதும் [2] திருடர்களுக்கு நிந்திக்கப்பட்டனவாகும். இதைச்செய்பவன்

1 'மனிதர்கள்' என்பதுவேறுபாடம். 2 வேறுபாடம்.

தோஷமுள்ளவனாகவே ஆவான். ஆகையால், திருடன் இவைகளை விலக்கவேண்டும். ஓ! பாரத! மிச்சமின்றித்திருடினால் இந்தத்திருடனை அடித்துக்கொல்லவேண்டி (இவனுக்குஸ்நேஹமுண்டாகும்படி செய்துகொள்ளக்) கருதுகிறார்கள். பிறகு இவனுடையஇடமுதலியவற்றைத்தெரிந்துகொண்டு இவனுடையபொருளையும் [1]மிச்சமில்லாமல்செய்துவிடுவார்களென்பது நிச்சயம். ஆகையால், திருடர்கள் தம்மிஷ்டப்படி செய்யத்தக்கபொருளையும் மிச்சமுள்ளதாகச்செய்ய வேண்டும். 'நான் பலமுள்ளவனாயிருக்கிறேன்' என்று தீங்குகளைச் செய்யக்கூடாது. மிச்சமுள்ளதாகச்செய்யும் திருடர்கள் எல்லாவிதத்தாலும் (தமக்கும்) மிச்சமிருப்பதைக்காண்பார்கள். மிச்சமின்றிச் செய்பவனுக்கு எப்பொழுதும் மிச்சமின்றிச்செய்வதால் பயமுண்டு.

## நூற்றுமுப்பத்துநான்காவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், பலத்தைப்புகழ்ந்துபாபத்தைச்செய்தவர்களுக்குப்பாபத்தைப்போக்கத்தக்கஉபாயத்தைச் சொல்லியது.)

இவ்விஷயத்திலும் பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். இவ்விஷயத்தில் முன்னுள்ளதைஅறிந்தவர்கள் காமந்தகரிஷியின்வசனத்தைச் சொல்லுகிறார்கள். அறிவுள்ளக்ஷத்திரியனுக்கு அறம்பொருள்இவ்விரண்டும் ப்ரத்யக்ஷமே. ஆகையால், (தர்மாதர்மத்தைப்பற்றிய ஆலோசனையைச் செய்துகொண்டு) அவைகளைத் தடைப்படச்செய்யாமலிருக்கவேண்டும். தர்மத்தைப்பற்றியஉபதேசம் [2]பரோக்ஷமாகும். இது தர்மம் இதுஅதர்மமென்று மாத்திலுள்ளகனியைப்போலத் தர்மாதர்மங்களின்பயன்களை எவனும் எக்காலத்திலும் இவ்வுலகில் கண்டதில்லை. ஆகையால், (கல்வி, குலம், மித்திரன், புத்தி, தைரியம், பொருள், தவம், துணைவர், வீர்யம், தெய்வம்என்னும்) பத்துவிதமானபலத்தையே அடையவிரும்பவேண்டும். உலகிலுள்ளவையாவும் பலமுள்ளவனுக்கு அதீனமாகும். ஸம்பத்தையும் பலத்தையும் அமாத்தியர்களையும் இவ்வுலகில் பலமுள்ளவன் அடைவான். எவன் பொருளில்லாதவனோ அவன் பதிதன். அவன் எச்சிலுக்கொப்பானவன். அவன் அல்பன். பலமுள்ளவன் பலஅகார்யமுள்ளவனானாலும் அவனிடம் பயத்தால் ஒன்றுஞ்செய்ய

1 வேறுபாடம். 2 நேரிற்காணக்கூடாதது.

முடியாது. உண்மையாகநடத்தப்படும் தர்மம் வலிமை இவ்விரண்டும் பெரியபயத்திலிருந்துரக்ஷிக்கும். இவைகளில் தர்மத்தைவிடப் பலம் மேலானதென்று நினைக்கிறேன். தர்மம் பலத்தாலுண்டாகிறது. ஸஞ்சரிக்கும்பிராணியானது பூமியில்போல் தர்மம் பலத்தில்நிலை பெற்றிருக்கிறது. புகையானதுகாற்றின் அதீனத்திலிருப்பதுபோலத் தர்மமானது பலத்தைஅடுத்திருக்கிறது. கொடியானது மரத்தை அடுத்திருப்பதுபோல நாயகனற்றதர்மமானது பலத்தைஅடுத்துநிற்கிறது. ஸுகமானது போகமுள்ளவர்கள்வசத்திலிருப்பதுபோலத் தர்மமானது பலமுள்ளவர்களின்வசத்திலிருக்கிறது. பலமுள்ளவர்களுக்கு ஸாதிக்கத்தகாதது ஒன்றுமில்லை. பலமுள்ளவனால் யாவும் ஜயிக்கப்பட்டனவாகும். கெட்டஒழுக்கமுள்ளவனும் பலம்குறைந்தவனுமாயிருப்பவன் [1]ரக்ஷையை அடையமாட்டான். செந்நாயிடம் நடுங்குவதுபோல அவனிடமிருந்து எல்லாஉலகமும் நடுக்கமடையும். பொருளிழந்தவன் அவமதிப்படைந்து கஷ்டப்பட்டுஜீவிப்பான். அவமதிக்கப்பட்டஜீவனமானது மரணம்போன்றதே. கெட்டநடையுடன்கூடினவன் பந்துக்களால் [2]விலக்கப்பட்டும் அம்புபோன்றசொல்லால்மிகவும்தபிக்கச்செய்யப்பட்டும் துன்பமுள்ளவனாகச்செய்யப்படுகிறானென்று இவ்விதம்சொல்லுகிறார்கள். அதர்மத்தால் பொருளை ஸம்பாதிக்கும்விஷயத்தில்பாபத்தைவிலக்கிக்கொள்ளவேண்டி ஆசார்யர்கள் இவ்விதம்உபதேசிக்கிறார்கள். வேதவித்யையை ஆதரவுடன் கற்கவேண்டும்; அவ்விதமே ப்ராம்மணர்களை உபாஸிக்கவேண்டும்; அவர்களை இனிமையானசொல்லாலும் செய்கையாலும் அநுக்ரஹிக்கச்செய்யவேண்டும்; பெரியமனமுள்ளவனாயிருக்கவேண்டும்; பெரிய குலத்தில் மணம்புரியவேண்டும்; 'இவ்விதம் [3]இருக்கிறேன்' என்று சொல்லவேண்டும்; பிறர்களின்குணங்களைச் சொல்லவேண்டும்; [4] தீர்த்தமுள்ளவனாய் ஜீவிக்கவேண்டும்; அதிகமாகப்பேசாமல் மிருதுவாயிருக்கவேண்டும்; ப்ராம்மணனும் க்ஷத்திரியனும் செய்யமிகக் கடினமான பலகார்யத்தைச்செய்து மேன்மையடையவேண்டும். உலகத்தால் பலவிதமாகச்சொல்லப்பட்டவனானாலும் அதையெல்லாம் கவனியாமல் இவ்விதஆசாரத்தையடைந்தால் வேகமாக வெகுமானம் பெற்றவனாவான். ஸுகமாகப்பொருளையனுபவிக்கலாம். நல்லநடக்கையொன்றால் ரக்ஷித்துக்கொள்ளவேண்டும். [5]உலகத்தில் பூஜையையும் இவ்வுலகிலும்மேலுலகிலும்பெரியபயனையும் அடைவான்.

1, 2, 3 வேறுபாடம்.
4 'உதகசீல:' என்பது மூலம்; 'ஸ்நானம்செய்து' என்றுமாம்.
5 இங்கு அதிகபாடமானஒருச்லோகம் விடப்பட்டது.

நூற்றுமுப்பத்தைந்தாவது அத்யாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், திருடனாயிருந்தாலும் சாஸ்திரமர்யாதையைஅனுஸரித்திருப்பவன் பரலோகத்தைஅடைவானென்னும்விஷயத்தில் காபச்யனென்பவனுடைய சரித்திரத்தைக்கூறியது.)

திருடனானவன் மர்யாதையுள்ளவனாயிருந்துகொண்டு திருட்டுத்தனத்தாலும் ஸித்தியை அடைவானென்ற இவ்விஷயத்திலும் பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். அடிக்கவல்லவனும் புத்தியுள்ளவனும் சூரனும் கல்வியுள்ளவனும் மிகக்கொடியவனும் ஆச்ரமத்திலுள்ளவர்களின் தர்மத்தைக்காப்பவனும் ப்ராம்மணர்களுக்குஹிதனும் பெரியோர்களைப்பூஜிப்பவனும் வேடஸ்திரீயினிடம் க்ஷத்திரியனுக்குப்பிறந்தவனும் க்ஷத்ரியர்களின் தர்மத்தைக்காப்பவனும் [1]காபச்யனென்று பெயருள்ளவனுமான வேடன் திருட்டுத்தனத்தாலும் ஸித்தியைப்பெற்றான். காலையிலும் மாலையிலும் அரண்யத்திலுள்ள மிருகக்கூட்டங்களை அடிக்கிறவனும், மிருகஜாதிகளுக்குரிய விதிகளை அறிந்தவனும், நிஷாதஜாதியில் பிறந்தவர்களுள் ஸமர்த்தனும், [2]வனத்திலுள்ளஎல்லாத்தேசங்களையும் அறிந்தவனும், எப்பொழுதும் பாரியாத்ரமென்னும் மலையில் ஸஞ்சரிப்பவனும், எல்லா ஜாதிகளின்தர்மத்தையும் அறிந்தவனும், பழுதற்றபாணமுள்ளவனும், உறுதியான ஆயுதங்களுள்ளவனுமான அந்தக்காபச்யன் ஒருவனாகவே பலநூறுஸேனைகளையும் ஜயித்தான். அவன் பெரியகாட்டில் கிழவர்களான தன்தாய்தந்தைகளைப்பூஜித்தும் மதுமாம்ஸங்களாலும் கிழங்குகனிகளாலும் பலவிதஅன்னங்களாலும் மர்யாதையுடன் போஜனம்செய்வித்தும் நன்றாகப்பணிவிடைசெய்தும்வந்தான். அரண்யத்திலுள்ள ஸந்யாஸம்பெற்ற பிராம்மணர்களை ரக்ஷித்துக்கொண்டு எப்பொழுதும் வனத்திலுள்ளமிருகங்களை அடித்து அவர்கள்பொருட்டு அனுப்பிவந்தான். திருடனுடையபோஜனமென்ற சங்கையால் அவனிடமிருந்து எவர்கள்பெற்றுக்கொள்ளவில்லையோ அவர்களுடையவீடுகளில் அவன் காலையிலேயே (மாம்ஸங்களை) வைத்துவிட்டுச் செல்லுவான். தயையில்லாமல்நடக்கும் திருடர்களில் மர்யாதையில்லாத பல்லாயிரம்பேர்கள் அவனைக் கிராமத்தலைவனாக

1 'காயவ்யன்' என்பது வேறுபாடம்.

2 'எல்லாக்காலதேசங்களையும்அறிந்தவன்' என்பது வேறுபாடம்.

வரித்துக்கொண்டார்கள். திருடர்கள், 'தேசகாலங்களையும் முகூர்த்தத்தையும் அறிந்தவனும் நல்லறிவுள்ளவனும் சூரனும் உறுதியான வ்ரதமுள்ளவனுமான நீ எங்களனைவர்க்கும் ஸம்மதனாக முக்யமான க்ராமத்தலைவனாயிரு. நீ எப்படிஎப்படி எங்களைச்சொல்லுகிறாயோ அப்படிஅப்படி நாங்கள்செய்கிறோம். தாயும் தந்தையும் எவ்விதம் ரக்ஷிப்பார்களோ அவ்விதம் நியாயப்படி நீ எங்களைரக்ஷி' என்று

காபச்யன் சொல்லத்தொடங்கினான். 'நீங்கள் ஸ்திரீகளையும் பயந்தவனையும் குழந்தையையும் தவஞ்செய்கிறவரையும்கொல்லக்கூடாது. யுத்தத்திற்குவாராதவனைக் கொல்லக்கூடாது. ஸ்திரீகளைப் பலாத்காரமாக அபஹரிக்கக்கூடாது. எல்லாப்ராணிகளிலும் ஸ்திரீயை எவ்விதத்திலும் கொல்லக்கூடாதென்பதைத் தெரிந்துகொள்ளுங்கள். பசுக்களுக்கும் ப்ராம்மணர்களுக்கும் எப்பொழுதும்க்ஷேமத்தைச்சிந்திக்கவேண்டும். அதற்காக யுத்தத்தைச்செய்யவும்வேண்டும். பயிரை அழிக்கக்கூடாது. தேவர்களும் பிதிருக்களும் அதிதிகளும் பூஜிக்கப்படுகிற விவாஹமுதலிய நல்லகார்யங்களுக்கு இடையூறு செய்யக்கூடாது. எல்லாப்ராணிகளிலும் சிறந்தப்ராம்மணன் விடுபடத்தக்கவன். அந்தப்ராம்மணர்களுக்குப் பூஜைசெய்யவேண்டும். அவர்களை எல்லாப்பொருள்களாலும் மர்யாதைசெய்யவேண்டும். இந்தப்ராம்மணர்கள் எவனிடம் மிகக்கோபமுள்ளவர்களோ அவனுக்கு அவமானம் வருமென்றறியவேண்டும். மூன்றுலகங்களிலும் அவனைரக்ஷிப்பவன் ஒருவனுமில்லை. எவன் பிராம்மணர்களை [1]அவமதிக்கிறானோ, அவர்களுக்கு நாசத்தையும்விரும்புகிறானோ அவனுக்கு ஸூர்யன்உதயமாகும் காலத்திலுள்ள இருளுக்குப்போல அவமானம்நிச்சயம். இவ்விடத்திலேயேயிருந்துகொண்டு எல்லாவிதத்தாலும் பயனைஎதிர்பார்க்கவேண்டும். எந்தஎந்தவர்த்தகர்கள் நமக்குக்கொடுக்கவில்லையோ அவ்வவர்களை அந்தக்காரணத்திற்காக எதிர்க்கவேண்டும். தண்டமென்பது துஷ்டர்களையடக்குவதற்காக விதிக்கப்படுகிறது; கொலைசெய்யவேண்டி விதிக்கப்படுகிறதில்லை. எவர்கள் ஸாதுக்களைத் துன்பப்படுத்துகிறார்களோ அவர்களைக் கொலைசெய்வது தர்மமென்று கூறப்படுகிறது. எந்தச்சிலர்கள் ராஜ்யத்தைத் துன்பஞ்செய்து தமக்குப் பெருமையைச்செய்துகொள்ளுகிறார்களோ அவர்கள் பிணத்தையடைந்த புழுக்கள்போல அந்தராஜ்யத்திலுள்ளவர்களுடன்கூடவே மரிப்பார்கள். எந்தத்திருடர்கள் இவ்வுல

1 'நிந்திக்கிறானோ' என்பது வேறுபாடம்.

இல் தர்மசாஸ்திரப்படியிருப்பார்களோ அவர்கள் திருடர்களாயிருந்தாலும் சீக்கிரம் ஸித்தியடைவார்கள்' என்றுசொன்னான். அந்தத் திருடர்கள் காபச்யனுடையகட்டளையாவற்றையும் செய்துவந்தார்கள். யாவர்களும், பெருமையையும் அடைந்தார்கள்; பாவங்களிலிருந்து ஒழிவையும்அடைந்தார்கள். திருடர்களைப் பாவத்திலிருந்துவிலக்கியவனும் ஸாதுக்களுக்கு க்ஷேமத்தைச்செய்தவனுமான காபச்யன் அந்தக்கர்மத்தால் பெரியஸித்தியைப்பெற்றான். எவன் காபச்யனுடைய இந்தக்கதையை எப்பொழுதும் சிந்திக்கிறானோ அவன் அரண்யத்திலுள்ளபிராணிகளிடமிருந்தும் எவ்விதத்திலும் பயமடையமாட்டான். அவனுக்கு மனுஷ்யர்களிடமிருந்தும் பயமில்லை; எவ்விதத்திலும் தேவர்களிடமிருந்துமில்லை. ஸாதுக்களிடமிருந்துமில்லை; அஸாதுக்களிடமிருந்துமில்லை. அரசனே! அவன் காடுகளில் பசுக்களுக்குப் பதியாயிருப்பான்.

---

## நூற்றுமுப்பத்தாறுவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், பொக்கசத்தைப்பெருகச்செய்வதற்காக அபஹரிக்கத்தகுந்த பொருளையும் அபஹரிக்கத்தகாதபொருளையும் பகுத்துக்கூறியது.)

முன்னுள்ளதை அறிந்தவர்கள், அரசர்கள் எந்தவழியாகப்பொக்கசத்தை உண்டுபண்ணிக்கொள்ளவேண்டுமோ அந்தவிஷயத்தில் பிரம்மதேவர்பாடியகாதைகளைச் சொல்லுகிறார்கள்.

"யாகஞ்செய்யும்ஸ்வபாவமுள்ளவர்களின்பொருளையும் தேவாலயத்தைச்சேர்ந்தபொருளையும்அபஹரிக்கக்கூடாது. க்ஷத்திரியனானவன் திருடர்களின்பொருளையும் நல்லகார்யங்களில்லாதவர்களின்பொருளையும் அபஹரித்துக்கொள்ளத்தக்கவன். ஓ! பாரத! க்ஷத்திரியர்களுக்கு இவ்வுலகிலுள்ளப்ரஜைகள் ரக்ஷிக்கத்தக்கவைகளும் கொல்லத்தக்கவைகளுமாகும். இவ்வுலகிலுள்ளபொருளானது க்ஷத்திரியனுடையதுதான்; மற்றவனுடையதன்று. அந்தப்பொருளானது இந்த க்ஷத்திரியனுக்குப் பலத்திற்காவது யாகத்திற்காவது ஆகும். பூஜிக்கத்தகாதசெடிகளையறுத்து (அவைகளை விறகாகக்கொண்டு) பூஜிக்கத்தக்கவைகளையே பாகம்செய்கிறார்கள். எவன் தேவர்களையும் பித்ருக்களையும் மனிதர்களையும் ஹவிஸால் ஆராதிக்கவில்லையோ அவனிடத்திலுள்ளபொருளானது பயனற்றதென்று தர்மமறிந்தஜனங்

கள் சொல்லுகிறார்கள். அரசனே! தர்மமுள்ள அரசனானவன் அவன் பொருளை அபஹரித்துக்கொள்ளலாம். அதனால் அரசன் ஜனங்களை ஸந்தோஷப்படுத்தமாட்டானென்பதில்லை. ஜனங்களும் அரசனை நிந்திக்கமாட்டார்கள். எந்தஅரசன் அஸாதுக்களிடமிருந்து பொருளையெடுத்து ஸாதுக்களிடம்அளிக்கிறானோ அவன் தன்னைப்பாலமாகச் செய்து தர்மத்தையடைந்தவனென்றே நினைக்கிறேன். பூமியைப் பிளந்துகொண்டு உண்டாகும்பிராணிகளும் [1]வஜ்ரியென்னும்புழுக்களும் எப்படி (மெள்ள வெகுதூரம்போகின்றனவோ) அவ்விதம் அரசன் இயன்றவரையில் பரலோகங்களை ஜயிக்கவேண்டும். அவைகள் எவ்விதம் காரணமின்றி உண்டாகுமோ அவ்விதம் யாகமில்லாதவனுண்டாவான். ஈக்களையும் கொசுகுகளையும் எறும்புகளையும் புழுக்களையும் எவ்விதம் பசுக்களிடமிருந்து வெருட்டுவார்களோ அவ்விதமானசெய்கையே [2]யாகமில்லாதவர்களிடம் [3]இருக்கவேண்டும். தர்மம் அவ்விதம்விதிக்கப்படுகிறது. பூமியில் புழுதியும் புல்லும் பூண்டும் காரணமின்றி (ஸூக்ஷ்மமாயும் அதிலும்ஸூக்ஷ்மமாயும்) இருப்பதுபோல இவ்வுலகில் தர்மமும் ஸூக்ஷ்மமாயும் அதிகஸூக்ஷ்மமாயுமிருக்குமென்று சொல்லப்படுகிறது.

## நூற்றுமுப்பத்தேழாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், வரப்போகிறஆபத்தைப்போக்கத்தக்கஉபாயத்தை முந்தியே செய்துகொள்ளவேண்டுமென்கிற விஷயத்தில் மீனைப்பற்றியகதையைச் சொல்லியது.)

வரப்போகிறதை அறிந்துசெய்பவன் ஸமயத்தில்தோற்றும் திறமைவாய்ந்த புத்தியுள்ளவன் இவ்விரண்டுபேர்களும் ஸுகமாகச் செழிப்பார்கள். தாமஸஸ்வபாவமுள்ளவன் நாசமடைவான். இந்த விஷயத்திலேயே செய்யத்தக்கது செய்யத்தகாதது இவைகளின் நிர்ணயத்திற்காகத் தாமஸஸ்வபாவமுள்ளவனைப்பற்றிய மிகஉத்தமமான இக்கதையைப் பரபரப்பின்றிக் கேள். ஓ! கௌந்தேய! அதிக மேடில்லாததும் அதிகமீன்களுள்ளதுமான ஒருகுட்டையில் ஸ்நேஹமுள்ளவையும் ஸாமர்த்தியமுள்ளவையுமான மூன்றுமீன்களும் அவை

1, 2 வேறுபாடம்.

3 அவர்களைத் தேசத்தைவிட்டுத் துரத்தவேண்டும் என்பது பொருள்.

களுடன்சேர்ந்து ஸஞ்சரிப்பவைகளும் இருந்தன. அந்தமூன்று மீன்களுள் ஒன்று காலத்திற்குத்தக்கஅறிவுள்ளது. மற்றொன்று நீண்டஆலோசனையுள்ளது. மற்றது தாமஸஸ்வபாவமுள்ளது. பிறகு ஒருகால் மீன்பிடிப்பவர்கள் நான்குபுறத்திலும் பலவழிகளாலும் குட்டையைப் பள்ளங்களில்வடியவைத்தார்கள். அப்பொழுது அக் குட்டை குறைவடைவதைக்கண்டு பயம்நேர்ந்தபொழுது நீண்ட ஆலோசனையுள்ளமீனானது நண்பர்களான அந்தஇரண்டுமீன்களையும் நோக்கி, 'நீரில்வஸிப்பவைகளுக்கெல்லாம் இந்தத்துன்பம் உண்டா யிருக்கிறது. வழிகாய்வதற்குமுன்னமே விரைந்து வேறிடத்திற்குச் செல்லுவோம். எவன் வரப்போகிறதுன்பத்தை நல்லநீதிகளால் நன்கு தடுக்கிறானோ அவன் ஸந்தேஹமடையமாட்டான். ஆகையால், அவ் விதம் வேறிடத்திற்குச்செல்லுவோம்' என்றுசொல்லிற்று. அவ் விரண்டுகளில் தாமஸஸ்வபாவமுள்ள அந்தமீனானது, 'இங்கு நன்கு வஸிக்கலாம். அதற்குள் அவசரப்படவேண்டாமென்று எனக்கு நிச் சயமாகத் தோற்றமிருக்கிறது' என்றுசொல்லிற்று. பிறகு ஸமயத் திற்குத்தக்க அறிவுள்ளமீனானது நீண்டஆலோசனையுள்ளமீனை நோக்கி, 'ஸமயம்வரும்பொழுது எனக்கு ஒன்றும் நீதியைவிட்டுத்தவ றாது' என்றுசொல்லிற்று. இவ்விதம்சொல்லப்பட்டதும் பெரிய புத்தியுள்ளதுமான தீர்க்கதர்சிஎன்னும்மீனானது வெளியிற்சென்று ஒருவாய்க்கால்வழியாக ஆழமான மற்றொருகுளத்தை அடைந்தது. பிறகு மீனைக்கொண்டுபிழைப்பவர்கள் அக்குட்டைத்தண்ணீர் வடிந் திருப்பதை நன்றாகக்கண்டு பலஉபாயங்களால் மீன்களைப் பிடிக்கத் தொடங்கினார்கள். ஜலம்வடிந்த அக்குட்டையானது கலக்கப்பட்ட பொழுது அதிலிருந்த தாமஸஸ்வபாவமுள்ளமீனானது மற்றவைக ளுடன்கூட அவர்களால்பிடிக்கப்பட்டது. கயிறுகளால் மீன்களைக் கட்டி உயரத்தூக்குவதைக்கண்டு, ஸமயத்தில்தோன்றும் திறமை யுள்ளமீனானது மற்றமீன்களின் இடையிற்புகுந்து மீன்கள் கோக்கப் பட்டு உயரத்தூக்கும்அந்தக்கயிற்றை அப்படியேபிடித்துக்கொண்டு அதுவும் கோக்கப்பட்டதுபோலவேயிருந்தது. அந்தமீன்பிடிப்ப வர்கள் அந்த மீன்கள்யாவையுமே அந்தக்கயிற்றில்கட்டுப்பட்டன வென்று நினைத்தார்கள். பிறகு விஸ்தாரமான ஜலத்தில் மீன்கள் அலம்பப்படும்பொழுது ஸமயத்தில்தோற்றமுள்ள அந்தமீனானது கயிற்றைவிட்டு விடுபட்டுச் சீக்கிரம்சென்றது. மந்தஸ்வபாவமுள்ள தும் தாழ்ந்தபுத்தியுள்ளதும் அறிவில்லாததும் தெளிவில்லாதது மான தாமஸஸ்வபாவமுள்ளமீனானது ஐம்பொறிகளுமற்றவனைப்போல

நாசமடைந்தது. இவ்விதம் எவன் அவிவேகத்தால் முக்கியமாக நேர்ந்தஸமயத்தை அறியவில்லையோ அவன் தாமஸஸ்வபாவமுள்ள மீனைப்போலச் சீக்கிரம் நாசமடைவான். எந்தமனிதன் ஸமர்த்தனுயிருக்கிறேனென்ற எண்ணத்தால் முதலில் க்ஷேமத்தைச்செய்து கொள்ளவில்லையோ அவன் ஸமயத்திற்குத்தக்க அறிவுள்ளமீனைப் போல ஸந்தேஹத்தைஅடைவான். ஆகையால், வரப்போகிறதைத் தெரிந்துசெய்கிறவன் ஸமயத்தில்தோன்றும்புத்தியுள்ளவன் இவ்விரண்டுபேர்களும் ஸுகமாகச் செழிப்பார்கள். தாமஸஸ்வபாவமுள்ளவன் நாசமடைவான். காலமென்பது லவம், க்ஷணம், காஷ்டை, கலை, முகூர்த்தம், பகல், இரவு, பக்ஷம், மாஸம், ஆறுருதுக்கள், வருஷங்களென்றும், தேசமென்பது பூமியென்றும் சொல்லப்படுகின்றன. அந்தக்காலமோ காணப்படுகிறதில்லை. இஷ்டமானகார்யங்கள் ஸித்திக்கவேண்டி [1]எதை எவ்விதம் த்யானஞ்செய்கிருனே அது அவ்விதமேயாகும். தர்மசாஸ்திரங்களிலும் அர்த்தசாஸ்திரங்களிலும் மோக்ஷசாஸ்திரங்களிலும் தேசம், காலம்இவ்விரண்டும் முக்கியமானவையென்று ரிஷிகளால்கூறப்பட்டிருக்கின்றன. இவைகள் காமசாஸ்திரத்திலும் மனிதர்களால் அங்கீகரிக்கப்பட்டன. பரீக்ஷித்துச் செய்கிறவனும் யுக்தியுள்ளவனுமானமனிதன் வேண்டியதேசகாலங்களை நன்றாகத்தெரிந்துகொள்ளுவான்; அவைகளால் பயனையடைவான்" என்றுசொன்னார்.

---

## நூற்றுமுப்பத்தேட்டாவது அத்தியாயம்.

### ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், ஆபத்காலத்தில் சத்துருவுடனும் ஸந்திசெய்துகொள்ள வேண்டுமென்கிறவிஷயத்தில் பூனையையும் எலியையும் பற்றியகதையைக் கூறியது.)

யுதிஷ்டிரர், "பாதர்களிற்சிறந்தவரே! வரப்போவதை அறிவதும் அப்படியே ஸமயத்திற்குத்தக்கபடி உண்டாவதுமான புத்தியானது எல்லாவிஷயத்திலும் மிகச்சிறந்ததென்றும் தாமஸஸ்வபாவத்தைத்தரும்புத்தியானது நாசத்தைச்செய்யுமென்றும் உம்மால்சொல்லப்பட்டன. பாதச்ரேஷ்டரே! ஆகையால், பகைவர்களால் துன்ப[illegible]மவர்தன் எவ்விதம் அவிவேகத்தையடையாமலிருப்பனே

---

1 வேறுபாடம்.

அவ்விதமான உயர்ந்தபுத்தியை உம்மிடமிருந்து கேட்கவிரும்புகிறேன். குருக்களில்மிகச்சிறந்தவரே! அறம்பொருள்களில் ஸமர்த்தரும் அறிவிற்சிறந்தவரும் எல்லாச்சாஸ்திரங்களிலும் ஸமர்த்தருமான உம்மிடம் ப்ரச்னஞ்செய்கிறேன். நீர் அதனை எனக்கு உரைக்கத்தக்கவர். பலபகைவர்களால் விழுங்கப்பட்டஅரசன் எவ்விதம்விடுபடுவனென்று அம்ஸத்தனைத்தையுமே விதிப்படி நான் கேட்கவிரும்புகிறேன். ஸங்கடத்திலிருக்கும் அரசன் ஒருவனையோவென்றால் முன்துன்பப்படுத்தப்பட்ட விரோதிகளான பலசத்துருக்களும் வேருடன்பெயர்க்க முயல்வார்கள். ஆகையால் நாலுபக்கத்திலுமுள்ள பெரியபலசாலிகளால்விழுங்கக்கருதப்படும்பலமில்லாதவொருவன் ஸஹாயமின்றி எவ்விதம் இருக்கக்கூடியதாகும்? பாதச்ரேஷ்டரே! மித்திரனையும் சத்துருவையும் எவ்விதம் அடையவேண்டும்? சத்துருவுக்கும் மித்திரனுக்கும் நடுவில் எவ்விதம் நடக்கவேண்டும்? அரசனே! மித்திரலக்ஷணமுள்ளவனாக [1]அறியப்பட்டவனிடத்திலும் மித்திரபாவத்தையடைந்தவிரோதியிடத்திலும் மனிதன் எவ்விதஞ்செய்யவேண்டும்? எதைச்செய்து ஸுகமுள்ளவனாவான்? எவனுடன் யுத்தத்தைச் செய்யவேண்டும்? எவனுடன் ஸந்தியைச்செய்துகொள்ளவேண்டும்? பலமுள்ளவனாயிருந்தாலும் சத்துருக்களின்நடுவிலிருப்பவன் எவ்விதமிருக்கவேண்டும்? அரசரே! இதுதான் எல்லாக்கார்யங்களையும்விட உத்தமமானகாரியம். இந்திரியங்களைஜயித்தவரும் ஸத்தியஸந்தரும் பிதாமஹருமான பீஷ்மரைவிட இதைச்சொல்லத்தக்கவர் ஒருவருமில்லை. கேட்பவனும் மிகவருமை. ஓ! மிக்கபாக்யமுள்ளவரே! அதைக்கண்டு, இவையாவற்றையும் நீர் எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"யுதிஷ்டிர! உன்னால்கேட்கப்பட்ட இந்தக்கேள்வியானது நற்குணங்களை உண்டுபண்ணத்தக்கது. மகனே! பாரத! ஆபத்காலங்களுக்குரிய ரஹஸ்யத்தை முழுமையும் என்னிடமிருந்து கேள். விரோதியாயிருப்பவன் மித்ரபாவத்தையடைவான். மித்திரனும்மிகக் குற்றமுள்ளவனாவான். (மனிதர்களின்) ஸாமர்த்யமென்னும் உபாயத்தால் கார்யங்களின்ஸ்திதி எப்பொழுதும் ஒரேவிதமாயிருப்பதன்று. ஆகையால், நம்பவும்வேண்டும்; யுத்தஞ்செய்யவும்வேண்டும். தேசத்தையும் காலத்தையும் அறிந்துகொண்டு செய்யத்தக்கது செய்யத்தகாதது இவைகளின்நிச்சயத்தையும் நன்றாகஅறிந்துகொண்டு ஹிதத்தை விரும்பும்அறிவுள்ளமனிதர்களுடன் எப்பொழுதும் ஸந்திசெய்து

[1] வேறுபாடம்.

கொள்ளவேண்டும். ஓ! பாரத! பிராணன்களைரக்ஷிக்கவேண்டியதற்காகப் பகைவர்களுடனும் ஸந்திசெய்துகொள்ளவேண்டும். பாரத! அறிவில்லாதவன் பகைவர்களானமனிதர்களுடன்கூட எப்பொழுதும் ஸந்தியைச்செய்யாதவனாயிருக்கிறானோ அவன் ஒருகார்யத்தையும் பயன்களையும் அடையமாட்டான். எவன் கார்யத்தின்உபாயத்தைத்தெரிந்துகொண்டு அமித்ரனுடன் ஸந்தியையும் மித்திரனுடன்விரோதத்தையும்செய்கிறானோ அவன் மிகப்பெரியபயனை அடைகிறான். இவ்விஷயத்திலும் ஓர் ஆலமரத்திலுள்ள பூனைக்கும் எலிக்கும் நடந்த ஸம்பாஷணையான பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள்.

ஒருபெரியகாட்டில் மிகப்பெரியஓர்ஆலமரமிருந்தது. அந்தமரமானது கொடிக்கூட்டங்களால் படர்ந்துசுற்றப்பட்டதும் பலவிதப்பறவைக்கூட்டங்களுடன்கூடியதும் கவைகளுள்ளதும் மேகம்போன்றதும் குளிர்ந்தநிழலுள்ளதும் அழகானதும் துஷ்டமிருகங்களுடன்கூடியதும் அரண்யத்திற்கு நான்குபுறத்திலும் வளர்ந்ததுமாயிருந்தது. பெரியஅறிவுள்ள பலிதமென்னும்ஓர்எலியானது அந்தஆலமரத்தின் அடியை அடைந்து நூறுதுவாரமுள்ளவளையைச்செய்துகொண்டு வஸித்துக்கொண்டிருந்தது. அப்பொழுது எல்லாப்பிராணிகளையும்கொல்லத்தக்க லோமசமென்னும்பூனையானது அந்தமரத்தின்கிளையையடைந்து ஸுகமாகவஸித்துவந்தது. அரண்யத்தில்குடிகொண்ட ஒருசண்டாளன் ஒவ்வொருநாளும் ஸூர்யன்அஸ்தமித்தபின் அவ்விடத்திற்குவந்து மிருகமுதலியவற்றைப் பிடித்தற்குரியபொறியை வைத்துவந்தான். அவன் நரம்புகளால்செய்யப்பட்ட சுருக்குக்கயிறுகளை அவ்விடத்தில் வைக்குமுறைப்படி வைத்துவிட்டு வீடுசென்று ஸுகமாகஉறங்குவான்; இரவுவிடிந்ததும் வருவான். அதில் ஒவ்வொருநாளும் இரவில் பலவிதமிருகங்கள் கட்டுப்பட்டிருக்கும். ஒருஸமயம் அப்பூனையானது அந்தஎந்திரத்திற்சென்று உறுதியாகக்கட்டப்பட்டது. அதிகபலமுள்ளதும் சத்துருவும் எப்பொழுதும்தன்னைக்கொல்லவருவதுமான அந்தப்பூனை கட்டுப்பட்டவுடன் அந்தஸமயத்தைஅறிந்துகொண்டு பலிதமென்னும்எலியானது சிறிதும்பயமின்றி ஸஞ்சரிக்கத்தொடங்கிற்று. அந்தவனத்திற்சென்று பயமின்றி ஸஞ்சரிப்பதும் ஆகாரத்தைத்தேடுவதுமான அந்தப்பலிதமென்னும் எலியானது சடிதியில் (எந்திரத்திற்குள்ளிருக்கும்) மாம்ஸத்தைக்கண்டது. அஃது அந்தஎந்திரத்திலேறி அதனுள்கட்டப்பட்டதன்விரோதியான அந்தப்பூனைக்குமேலே உயரத்திலிருந்து மன

த்தில்களிப்புடன் எந்திரத்திலுள்ளிருக்கும்மாம்ஸத்தைத் தின்னத் தொடங்கிற்று. மாம்ஸத்திற்சென்ற அந்தஎலியானது ஒருஸமயத் தில் பார்க்கையில் நாணற்பூப்போன்றதும் பூமியிலுள்ளவளையில்படுத் திருப்பதும் சிவந்தகண்ணுள்ளதும் சாபல்யமுள்ளதும் [1]ஹரிக மென்று பெயருள்ளதும் பயங்கரமும் சத்ருவுமான ஒருகீரிப்பிள்ளை வருவதைக்கண்டது. அந்தக்கீரிப்பிள்ளையானது அந்தஎலியின்வாடை யைக்கண்டு வேகத்துடன்வந்தது. அந்தக்கீரிப்பிள்ளையானது ஆகா ரத்திற்காக வாயைநக்கிக்கொண்டும் முகத்தைஉயரத்தூக்கிக்கொண் டும் பூமியில்நின்றது. கிளையிலிருப்பதும் பொந்தில்குடிகொண்ட தும் வளைந்தமூக்குள்ளதும் அருகில்செல்லமுடியாததும் சந்திரக னென்றுபெயருள்ளதுமான கோட்டானாகிய வேறொருசத்துருவை யும் கண்டது. அவ்விதம்கீரிப்பிள்ளையும் கோட்டானுமாகிய இவை களின்பார்வையைஅடைந்ததும் பெரியபயங்கொண்டதுமான அந்த எலிக்கு மிகக்கஷ்டமானஇவ்வாபத்தில் மரணங்கிட்டி நான்குபுறத் திலும் பயமுண்டாயிருக்கும்பொழுது, 'புத்தியுள்ளவன் எவ்விதம் செய்யவேண்டும்?' என்ற இவ்விதஆலோசனை உண்டாயிற்று. அப் படி நாற்புறத்திலும் தகையப்பட்டதும் எல்லாவிடத்திலும் பயத் தால்ஒடுங்கினதுமான அந்தஎலி பயத்தால்நடுக்கமுற்றுப் பெரிய ஆலோசனையைச் செய்யத்தொடங்கிற்று.

'உயிரானது துன்பங்களால் அனேகமாகநாசமடையத்தக்கதும் ஸந்தேஹிக்கக்கூடியதுமானது. இதோ நான்குபுறத்திலும் அவ்வித ஸந்தேஹமிருக்கிறது. ஆகையால், ஆபத்துண்டாயிற்று. வேகமாகப் பூமியிற்சென்றால் கீரிப்பிள்ளை என்னைப்பிடிக்கும்; இங்கிருந்தால் கோட்டானும், கயிறுகளறுபட்டால் பூனையும் என்னைப்பிடிக்கும். அறிவிற்சிறந்த நம்மைப்போன்றவன் அவிவேகத்தையடைவது நியா யமேயன்று. மூச்சு அடங்குகிறவரையில் ஜீவிக்கும்விஷயத்தில் முய ற்சியைச்செய்வேன். புத்தியுள்ளவனும் நீதிசாஸ்திரங்களில்ஸமர்த் தனுமான அறிவுள்ளவன் [2]குரூரமும் பெரிதுமான ஆபத்தையடைந் தும் முழுகமாட்டானன்றோ? இப்பொழுது இந்தஆபத்தில் பூனையை விட வேறுகதியைக்காணேன். சத்துருவான இந்தப்பூனையானது ஸங்கடத்திலிருக்கிறது. இதற்கும் என்னால்செய்யவேண்டியது பெ ரிதாயிருக்கிறது. மூன்றுபகைவர்களால் கொல்லவிரும்பப்படும்நான் இப்பொழுது எவ்விதம் உயிரை ரக்ஷிக்கவிரும்புவேன்? உயிருக்கு வேண்டி இந்தப்பூனையையே மித்திரனாகஅடுக்கிறேன். இந்தச்சத்

---

1 'ஹரிணம்' என்பதுவேறுபாடம். 2 வேறுபாடம்.

துருக்கூட்டத்தை அறிவைமுன்னிட்டு எவ்விதம்வஞ்சிக்கத்தகுமோ அவ்விதம் நீதிசாஸ்திரத்தை ஆதாரமாகக்கொண்டு இந்தப்பூனைக்கு ஹிதத்தைச்சொல்லுவேன். எனக்கு அதிகவிரோதியான இந்தப் பூனையானது மிகவும்துன்பத்தைஅடைந்திருக்கிறது. அறிவில்லாத வனுடன்சேர்ந்து அவனுக்குவேண்டியபொருளை அறிவிக்கமுடியுமா னால் ஒருஸமயம் துன்பத்தைஅடைந்திருப்பதால் (அவன்) நம்மு டன் ஸந்தியைச்செய்துகொள்ளுவான். ஸங்கடகாலத்தில் உயிரை விரும்பும் பலசாலியானவன் மிகத்தாழ்ந்தசத்துருவையும் ஆஸ்ரயிக் கலாமென்று ஆசார்யர்கள் கூறுகிறார்கள். சத்துருவாயிருந்தாலும் அறிவுள்ளவன் மிகச்சிறந்தவனாவான். மித்திரனாயினும் பண்டிதனல் லாதவன் சிறந்தவனல்லன். அமித்ரனான பூனையிடமன்றோ உயிர் நிலை பெற்றிருக்கிறது. ஆகையால், தன்னைக்காப்பதற்குரிய காரணத்தை இதற்கு உபதேசிப்பேன். சத்துருவாயிருந்தாலும் இந்தப்பூனை இப் பொழுது (நம்முடைய) சேர்க்கையால் அறிவுள்ளதாகும்' என்று இவ்விதம் எலியானது சத்துருவின்நடையைப்பற்றி ஆலோசித்தது. பிறகு கார்யங்களின்வழியின்உண்மையை அறிந்ததும் ஸந்தியையும் விக்ரஹத்தையும் ஸமயத்தையும்அறிந்ததுமானஎலியானது பூனையை நோக்கி இனிமையாக இவ்வசனத்தைச் சொல்லத்தொடங்கிற்று.

'பூனையே! ஸ்நேஹத்தால் உன்னைநோக்கிச் சொல்லுகிறேன். நீ உயிரோடிருக்கிறாயா? நீ ஜீவித்திருப்பதைத்தான் நான் விரும்பு கிறேன். க்ஷேமமென்பது நம்மிருவர்களுக்கும் பொதுவன்றோ? அழகுள்ளவனே! உனக்குப் பயம் வேண்டாம்; முன்போல் ஜீவித் திருப்பாய்; நான் உன்னை ஆபத்திலிருந்து விடுவிக்கிறேன். [1]உன் னிமித்தம் உயிரையும்இழப்பேன். இவ்விஷயத்தில் ஓர் உபாயமிருக் கிறது. அஃது எனக்கு நல்லதென்றுதோன்றுகிறது. எந்தஉபாயத் தால் நீ விடுதலை அடையமுடியுமோ எப்படி நானும் க்ஷேமத்தை அடையக்கூடுமோ அந்தஉபாயமானது எனக்காகவும் உனக்காகவும் என்புத்தியில் விசாரித்து என்னால் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. க்ஷேமமானது நம்மிருவர்களுக்கும் பொதுவன்றோ? இதோ கெட்ட எண்ணத்துடனிருக்கும் கீரிப்பிள்ளையும் கோட்டானும் பயப்படுத் தத்தொடங்கவில்லை. பூனையே! ஆகையால், இப்பொழுது [2]உனக்கு க்ஷேமம். இதோ மரத்தின்கிளையின் நுனியிலிருப்பதும் பாபியுமான

---

1 'நீ என்னைக்கொல்லவிரும்பாமலிருந்தால் நான் உன்னை ஆபத்திலிரு ந்துவிடுவிக்கிறேன்' என்பதுவேறுபாடம்.

2 எனக்கு' என்பதுவேறுபாடம்.

கோட்டான் சஞ்சலமானகண்ணுடன்கத்திக்கொண்டு என்னைப்பார்க்கிறது. அதைக்கண்டு நான் மிகவும் நடுக்கமடைகிறேன். ஸ்நேஹமானது ஸாதுக்களுக்கு ஏழுசொற்களாலுண்டாகிறது. ஆகையால், அவ்விதம் பண்டிதனானநீ எனக்கு ஸ்நேஹிதனாகிறாய். உனக்கு ஸஹாயஞ்செய்கிறேன். உன்உயிருக்குப்பயமில்லை. பூனையே! நானில்லாமல் நீகயிற்றை அறுக்கச் சக்தியுள்ளவனல்லன். என்னை நீ துன்பப்படுத்தாமலிருந்தால் உன்னுடையகயிறுகளை நான் அறுத்துவிடுகிறேன். நீ மரத்தின் நுனியை அடைந்தவன். நானோ மரத்தின் அடியை அடைந்தவன். நாமிருவரும் இந்தமரத்தில் வெகுகாலமாக வஸிக்கிறோமென்பது உனக்கும் தெரிந்தது. எவனிடத்தில் ஒருவன் நம்பிக்கையுள்ளவனாயிருக்கிறானோ, எவன் அந்த ஒருவனிடத்தில் நம்பிக்கையில்லாதவனாயிருக்கிறானோ, அந்தஇருவர்களையும் அறிவுடையோர்கள் கொண்டாடுகிறார்களில்லை. அவர்கள் எப்பொழுதும் பயந்தமனமுள்ளவர்களாயிருப்பார்கள். ஆகையால், நம்மிருவர்களுக்கும் ப்ரீதிவளரட்டும். எப்பொழுதும் ஸ்நேஹமிருக்கட்டும். இவ்வுலகில் காலந்தவறிச்செய்யப்படும்காரியத்தைப் பண்டிதர்கள்கொண்டாடுகிறதில்லை. அந்தவிஷயத்தில் காரியத்திற்குத்தக்க உண்மையான இந்தயுக்தியைப்பார். நீ உயிருடனிருப்பதை நான் விரும்புகிறேன். நான்உயிருடனிருப்பதை நீ விரும்புகிறாய். ஒருவன் கட்டையைக்கொண்டு மிகஆழமான பெரியநதியைக்கடக்கிறான். அவன் அக்கட்டையைக் கடக்கச்செய்கிறான். கட்டையும் அவனைக் கடக்கும்படி செய்கிறது. நம்மிருவர்களுடையகார்யங்களின் சேர்க்கையும் அவ்விதம் மிகப்பெரிதாயிருக்கிறது. நான் உன்னைத் துன்பத்திலிருந்து விடுவிப்பேன். நீயும் என்னைவிடுவிப்பாய்' என்றுசொல்லிற்று. இவ்விதம் பலிதமென்னும் எலியானது இரண்டுபேர்களுக்கும் ஹிதமும் யுக்தியுள்ளதும் அங்கீகரிக்கத்தக்கதுமான அவ்விஷயத்தைச் சொல்லிவிட்டு ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தது.

பிறகு சத்துருவான அந்தஎலியின் நன்மொழியைக்கேட்டு ஸாமர்த்தியமுள்ள பூனையானது அங்கீகரிக்கத்தக்கபொருளுள்ளதும் யுக்தியுள்ளதுமான வசனத்தைச் சொல்லத்தொடங்கிற்று. புத்தியுள்ளதும் பேசுந்திறமையுள்ளதுமான பூனையானது தன்னுடைய கஷ்டதசையைக்கண்டு அந்த எலியின்வசனத்தை அநுசரித்துக்கொண்டு நன்மொழியால் அதை மர்யாதைசெய்தது. பிறகு கூர்மையான நுனிப்பற்களுள்ளதும் வைடூர்யமணிபோன்ற கண்களுள்ளதுமான லோமசமென்னும்பூனையானது எலியை மெல்லநிமிர்ந்துபார்த்

துச் சொல்லத்தொடங்கிற்று. 'அழகுள்ளவனே! ஸந்தோஷப்படு கிறேன். என்னை ஜீவிக்கச்செய்யவிரும்பும் உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். அறிவாயாகில் க்ஷேமத்தைச்செய்யவேண்டும். சிந்தித்துக் கொண்டிருக்கவேண்டாம். நானே மிகவும் துன்பமுள்ளவன். நீ என்னைவிடத் துன்பமுள்ளவன். துன்பமுள்ள இருவர்களும் ஸந்திசெய்து கொள்ளவேண்டும்; தாமதிக்கவேண்டாம். ஸமயத்திற்குத்தக்கது எதுவோ அதைச்செய். நம்மிருவர்களின் கார்யமும் ஸித்திக்கட்டும். நான் கஷ்டத்திலிருந்து விடுபட்டேனாகில் உன்னுடையஉபகாரம் பயனற்றதாகாது. உன்னிடத்தில் கௌரவத்தைவைத்தவனாகிறேன்; பக்தனாகிறேன்; சிஷ்யனாகிறேன்; உனக்கு ஹிதத்தைச்செய்கிறவனாகிறேன்; அப்படியே உன்கட்டளையிலிருக்கிறவனுமாகிறேன்; உன்னைச்சரணமடைந்தேன்' என்றுசொல்லிற்று. இவ்விதஞ்சொல்லியதைக்கேட்டு, காரியங்களை அறிந்ததான பலிதமானது தன்வசமாகவிருந்த பூனையைநோக்கி நல்லபொருளுள்ளதும் ஹிதமுள்ளதுமான இவ்வசனத்தைச் சொல்லத்தொடங்கிற்று.

'நீ சொல்லுகிறது உத்தமமானது. இஃது உன்போன்றவனிடம் ஆச்சரியமன்று. எனதுநன்மைக்காக ஏற்படுத்தப்பட்டவழியை என்னிடமிருந்து கேள். நான் உன்னிடம் வந்துசேருகிறேன். கீரிப்பிள்ளையிடமிருந்து எனக்குப்பெரியபயமிருக்கிறது. என்னை நீ ரக்ஷிக்கவேண்டும்; கொல்லக்கூடாது. உன்னை ரக்ஷிப்பதில் நான் சக்தியுள்ளவனாயிருக்கிறேன். கோட்டானிடமிருந்தும் நீ என்னைரக்ஷிக்கவேண்டும். அல்பமான அது என்னைத்தின்னவிரும்புகிறது. நண்பனே! உன்னுடையகயிறுகளை நான் அறுத்துவிடுகிறேன். உண்மையாக உனக்கு உறுதிமொழிசொல்லுகிறேன்' என்றுசொல்லிற்று. யுக்தியுள்ளதும் பொருத்தமுள்ளதும் நல்லபொருளுள்ளதுமான அந்தஎலியின்வசனத்தைக்கேட்டு லோமசமானது ஸந்தோஷத்துடன்நிமிர்ந்து பார்த்துப் பலிதத்தை நல்வரவுவினவிப் பூஜித்தது. தைரியமுள்ள அந்தப்பூனையானது மித்திரத்தன்மையிலிருக்கும் பலிதமென்னும் அந்த எலியை நன்குபூஜித்தபின் ஆலோசித்துக்கொண்டு ப்ரீதியுடன் வேகமாகவே சொல்லத்தொடங்கிற்று. 'நண்பனே! வேகமாக வா. உனக்கு க்ஷேமம். நீ என்னுடையஉயிருக்குச் சமமானநண்பன். அறிவிற்சிறந்தவனே! உன்னுடைய அனுக்ரஹத்தாலன்றோ பிரியமான உயிரை அடையப்போகிறேன். இப்பொழுது இவ்விதம்அடைந்தஎன்னால் உனக்கு என்னஎன்னசெய்யக்கூடுமோ அதை நீ கட்டளையிடு; நான் செய்கிறேன். நம்மிருவர்களுக்கும் ஸித்திஉண்டாகட்டும். இந்த

ஸந்தேஹத்திலிருந்துவிடுபட்ட நான் மித்திரக்கூட்டத்துடனும் பந்துக்களுடனும்கூடி உனக்குப்பிரியமும் நன்மையுமான கார்யங்களையெல்லாஞ்செய்கிறேன். அழகுள்ளவனே! இந்தத்துன்பத்திலிருந்துவிடுபட்டு நானும் உனக்கு ப்ரீதியைஉண்டுபண்ணுவேன். ப்ரத்யுபகாரஞ்செய்யவும் சக்தியுள்ளவனுமேன். பலவிதம் ப்ரதியுபகாரஞ்செய்கிறவனும் முதலில்உபகாரஞ்செய்தவனுக்கு ஸரியாவானென்று தோன்றவில்லை. இவர்களில் முதலில்உபகரிப்பவனானஒருவன் காரணமின்றியே உபகரிக்கிறான். மற்றொருவன் உபகாரம்பெற்றபின்னன்றோ செய்கிறான்?' என்றுசொல்லிற்று. இவ்விதம் பூனையால் தேறுதல்சொல்லப்பட்டதும் அறிவுள்ளதுமான அந்தஎலியானது மிகவும் நேயமுள்ளதாய் (அதனிடம்) ப்ரவேசித்து அதை நன்கு அங்கீகரித்துக்கொண்டது. அவ்விதம் அந்தப்பூனைக்குத் தன்னுடையகாரியத்தை அறிவித்துவிட்டு எலியானது ஸ்நேஹமுள்ளதாகித் தாய்தந்தையினிடத்தில்போலப் பூனையின்வயிற்றில்உறங்கத்தொடங்கிற்று. பிறகு அந்தப்பூனையின் அங்கங்களில்படுத்திருக்கும் எலியைக்கண்டு அந்தக்கீரிப்பிள்ளையும் கோட்டானும் ஆசையற்றுத் திரும்பிச்சென்றன. அவ்விதமே அந்தஎலிக்கும் பூனைக்கும்உண்டான பெரியப்ரீதியைக் கண்டு அந்தக்கீரிப்பிள்ளையும் கோட்டானும் அதிகபயமுள்ளவைகளும் மிகஉற்சாகக்குறைவடைந்தவைகளும் பெரிய ஆச்சரியத்தை அடைந்தவைகளுமாயின. பலமுள்ளவைகளும் புத்தியுள்ளவைகளும் நல்லநடையுள்ளவைகளும் ஸமீபத்திலிருப்பவைகளுமான அவ்விரண்டும் அந்தநீதியின்காரணத்தால் வலிந்து பயத்தையுண்டுபண்ணச் சக்தியற்றவைகளாயின. காரியத்திற்குவேண்டி ஸந்திசெய்துகொண்ட அந்தப்பூனையையும் எலியையும்கண்டு அந்தக்கோட்டானும் கீரியும் வேகமாகத் தம்மிருப்பிடஞ்சென்றன. அரசனே! அந்தப்பூனையின் அங்கங்களில் சயனஞ்செய்ததும் தேசகாலங்களை அறிந்ததுமானபலிதமென்னும் அந்தஎலியானது காலத்தைவிரும்பிக்கொண்டு மெள்ள மெள்ளக் கயிறுகளை அறுக்கத்தொடங்கிற்று. பிறகு கயிறுகளின்கட்டால் துன்பமடைந்த பூனையானது, வேகமில்லாமல் கயிறுகளை அறுக்கும் எலியைக்கண்டு அப்பொழுது வேகமுள்ளதாயிற்று. பிறகு பூனையானது கயிறுகளை அறுப்பதில் வேகமில்லாத அந்தப்பலிதமென்னும் எலியை அப்பொழுது ஏவஆரம்பித்தது. 'அழகுள்ளவனே! ஏன் அதிகவேகமில்லாதவனாயிருக்கிறாய்? காரியத்தைச்செய்துகொண்ட நீ அவமதிக்கத்தொடங்குகிறாயோ? பகைவர்களைக்கொல்லுகிறவனே! அந்தச்சண்டாளன்வருவதற்குமுன் கயிறுகளை அறு' என்றுசொல்லி

ற்று. இவ்விதம் பரபரப்புள்ள இந்தப்பூனையால்சொல்லப்பட்ட புத்தியுள்ளபலிதமானது நற்பயிற்சியில்லாத புத்தியையுடைய பூனையை நோக்கி உண்மையும் தனக்குஹிதமுமானவசனத்தைச் சொல்லத்தொடங்கிற்று.

'அழகுள்ளவனே! நீ பேசாமலிரு; நீ அவஸரப்படவேண்டாம்; உனக்குப் பரபரப்புவேண்டாம்; இந்தவிஷயத்தில் ஸமயத்தையறிந்தவர்கள் நாங்களே. ஸமயந்தவறுது; அகாலத்தில்செய்யப்படும்காரியமானது செய்கிறவனுக்குப் பயனைக்கொடுக்கத்தக்கதாகாது. அதுவே ஸமயத்தில்செய்யப்பட்டால் பெரியபயனைக் கொடுக்கத்தக்கதாகும்; அகாலத்தில்விடுவிக்கப்பட்ட உன்னிடமிருந்தே எனக்குப் பயமுண்டாகும்; ஆகையால், ஸமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிரு. நண்பனே! எதற்காக அவஸரப்படுகிறாய்? எப்பொழுது ஆயுதபாணியாகச் சண்டாளன்வருவதைக்காண்கிறேனே அப்பொழுது பொதுவான பயமுண்டானதும் உன்னுடையகயிறுகளை அறுத்துவிடுகிறேன். நீ அந்தஸமயத்தில் விடுவிக்கப்பட்டு மரத்திலேயே ஏறிக்கொள்ளுவாய். உனக்கு உயிரைக்காத்தல்தவிர வேறுஒன்றுஞ்செய்யத்தக்கதிராது. [1] அப்பொழுது வேடனிடம்பயந்து நடுங்கி நீசென்றவுடன் நான் வளையில்ப்ரவேசிப்பேன்; நீ கிளையை அடைவாய்' என்றுசொல்லிற்று. இவ்விதம் எலியால் தனக்குஹிதமானவசனத்தைச்சொல்லப்பட்டதும் வசனத்தின்உண்மையையறிந்ததும் உயிரைவிரும்புவதும் பெரியபுத்தியுள்ளதுமான லோமசமென்னும்பூனையானது பிறகு தன்காரியத்தில்வேகமுள்ளதாகி மிகவும்பிரார்த்தனையைச்செய்து தாமதஞ்செய்யும்எலியைநோக்கிச் சொல்லத்தொடங்கிற்று. 'ஸாதுக்கள் மித்திரர்களின்காரியங்களை இவ்விதஞ்செய்யமாட்டார்கள்; அன்புடன்செய்வார்கள். நான் எவ்விதம் வேகமுள்ளவனாய் உன்னைத் துன்பத்திலிருந்துவிடுவித்தேனே அவ்விதமன்றோ நீ வேகமுள்ளவனாய் எனக்கு இதைச்செய்யவேண்டும். அறிவுள்ளவர்களிற்பெரியவனே! நம்மிருவர்களுக்கும் எவ்விதம் க்ஷேமமுண்டாகுமோ அவ்விதம் முயற்சிசெய். அப்படியில்லாமல் நீ முன்னுள்ளவைரத்தைநினைத்துக்கொண்டு நேரம்போக்கவிரும்புவாயாகில் நிச்சயமாக என்உயிர் அழிந்துபோம். கெட்டநடையுள்ளவனே! நீ பார்த்துக்கொள். அறியாமையால் என்னால் முந்திச் சிறிதுதீங்கு செய்யப்பட்டிருந்தாலும் அதை நீ மனத்தில்வைத்துக்கொள்ளக்கூடாது. உன்னை க்ஷமிக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன். எனக்கு அனுக்ரஹஞ்செய்' என்று

[1] இங்கு, அதிகபாடமானஒருச்லோகம் பின்வருதலால்விடப்பட்டது.

சொல்லிற்று. இவ்விதம் சொல்லுவதும் அதிக அறிவுள்ளதுமான அந்தப்பூனையைநோக்கிச் சாஸ்திரங்களை அறிந்ததும் புத்தியில்மிகச் சிறந்ததுமான எலியானது அப்பொழுது மிகச்சிறந்த இவ்வசனத்தைச் சொல்லத்தொடங்கிற்று.

'பூனையே! ஸ்வகாரியத்தைப்பெரிதாகக்கொண்ட உன்வசனம் என்னால்கேட்கப்பட்டது. என்காரியத்தைப் பெரிதாகக்கொண்ட என்னையும் நீ அறிகிறாய். எந்தஸ்நேஹிதனைப் பயத்துடன்ஸாதிக்க வேண்டுமோ எந்தஸ்நேஹிதனிடத்தில் பயமிருக்கிறதோ அவனிடமிருந்து பாம்பின்வாயிலிருந்து கையைரக்ஷித்துக்கொள்வதுபோலத் தன்னுடைய ரட்சையைச் செய்துகொள்ளவேண்டும். பலமுள்ளவனிடம் ஸந்தியைச்செய்துகொண்டு எவன் தன்னைரட்சித்துக் கொள்ளவில்லையோ அவனுக்கு அந்தஸந்தியானது புஜிக்கப்பட்ட அபத்யம்போலத் துன்பத்திற்குக்காரணமாகும். ஒருவன் ஒருவனுக்கு மித்திரனேயல்லன். ஒருவன் ஒருவனுக்குச் சத்துருவேயல்லன். காரியத்திற்குவேண்டியன்றோ மித்திரர்களாகவும் அப்படியே சத்துருக்களாகவும் ஆக்கப்படுகிறார்கள். யானைகளால் பெரிய யானைகள்கட்டுப்படுதல்போலக் காரியங்களால் காரியங்கள் கட்டுப்படுகின்றன. காரியம்செய்தபின் செய்தவனைப்பார்க்கிறவன் ஒருவனுமில்லை. ஆகையால், எல்லாக்காரியங்களையும் மிச்சமுள்ளனவாகவே செய்துவைக்கவேண்டும். அந்தச்சமயத்திலும் அந்தச் சண்டாளனிடமிருந்து பயந்து கஷ்டப்பட்டு ஓடுவதைப்பெரிதாகக் கொண்டநீ என்னைப்பிடிக்கச் சக்தியுள்ளவனாயிருக்கமாட்டாய். பல கயிறுகள் அறுத்தாய்விட்டன. ஒருகயிறு மிச்சமிருக்கிறது. அதையும் வேகமாகநானறுத்துவிடுகிறேன். லோமச! ஸுகமாயிரு' என்றுசொல்லிற்று.

கஷ்டமுள்ள அந்தப்பூனை எலி அவ்விரண்டும் இவ்விதம்பேசிக் கொண்டிருக்கும்பொழுது அந்தஇரவு முடிவடைந்தது. லோமசமென்னும்பூனைக்கும் பயம்உண்டாயிற்று. பிறகு, வி யற்காலையில் பயங்கரனும் கருஞ்சிவப்பானநிறமுள்ளவனும் பெரிதா ரஇடையின் பின்புறமுள்ளவனும் விகாரமுள்ளவனும் குரூரனும் நாய்க்கூட்டங்களால்சூழப்பட்டவனும் முளைபோன்றகாதுள்ளவனும் பெரியமுகமுள்ளவனும் மண்வெட்டியுள்ளவனும் பயங்கரமாகக்காணப்படுகிறவனும் ஆயுதபாணியுமான பரிகனென்னும்சண்டாளன் காணப்பட்டான். யமதூதனைப்போன்ற அந்தச்சண்டாளனைக்கண்டு பயந்ததும் நடுங்கினபுத்தியுள்ளதுமான பூனையானது பலிதத்தைநோக்கி, 'இப்

பொழுது என்னசெய்வாய்?' என்றுகேட்டது. அவ்விதமே க்ரூரனும் பயங்கரனுமான அந்தச்சண்டாளனைக்கண்டு மிகவும்நடுக்கமடைந்தனவான கீரிப்பிள்ளையும் கோட்டானும் க்ஷணத்தில் ஆசையற்றதன்மையை அடைந்தன. பலமுள்ளவைகளும் புத்தியுள்ளவைகளும் சேர்க்கையை அடைந்தவைகளுமான கோட்டானும் கீரிப்பிள்ளையும் காரியத்திற்குவேண்டி ஸந்திசெய்துகொண்ட அந்தப்பூனையையும் எலியையுங்கண்டு அவைகளின் அந்தநல்லநீதியால் வலிமைசெய்து பயத்தையுண்டுபண்ணச் சக்தியற்றவைகளாய் வேகமாகத் தம்தம்இருப்பிடஞ்சென்றன. பிறகு அந்தஎலியானது பூனையினுடையஅந்தக்கயிற்றையும் அறுத்தது. பிறகு விடுபட்டபூனையானது அந்தமரத்தையே போய்அடைந்தது. அந்தப்பாபப்பிலிருந்தும் கோரனை சத்துருவினிடமிருந்தும் விடுபட்டதான அந்தப்பலிதமானது வளையை அடைந்தது. அந்தலோமசம் கிளையை அடைந்தது. சண்டாளனானவன் எல்லாவிதத்தாலும்பார்த்து ஆசையற்றவனாகவே யந்திரத்தையும்எடுத்துக்கொண்டு க்ஷணப்பொழுதில் அவ்விடத்திலிருந்து விலகினான். பாரதர்களிற்சிறந்தவனே! அந்தச்சண்டாளன் தன்வீடு சென்றான். பிறகு அந்தப்பயத்திலிருந்துவிடுபட்ட லோமசமானது அடையஅரிதான உயிரையடைந்து மரத்தின் நுனியிலிருந்துகொண்டு வளையிலிருக்கும்பலிதத்தைநோக்கிச் சொல்லத்தொடங்கிற்று. 'ஒரு விதஸங்கேதத்தையும்செய்துகொள்ளாமல் வேகமாக நீஓடிவிட்டாய். நன்றியறிந்தவனும் க்ஷேமத்தைச்செய்தவனுமான நீ என்னைப்பற்றிச் சங்கைப்படாமலிருக்கிறாயா? என்னுடையநம்பிக்கையையும் அடைந்து என்உயிரையும்கொடுத்து ஸ்நேஹிதனுக்குரியபோகத்தையடையுங்காலத்தில் ஏன் என்னிடம்வாராமலிருக்கிறாய்? எவன் முதலில் ஸ்நேஹிதர்களை உண்டுபண்ணிக்கொண்டு பிறகு (ஸ்நேஹத்தைக்) கொண்டாடாமலிருக்கிறானோ கெட்டபுத்தியுள்ள அவன் கடுமையான துன்பங்களில் மித்திரர்களை அடையமாட்டான். ஸ்நேஹமுள்ளதோழனே! உன்னுடையஸாமர்த்யத்தால் உன்னால் நான் பூஜிக்கப்பட்டேன். அவ்விதமானநீ மித்ரத்தன்மையை அடைந்தஎன்னை அனுபவிக்கத்தக்கவன். எவர்கள் எனக்குமித்திரர்களாயிருக்கிறார்களோ, எவர்கள் எனக்குப்பந்துக்களாயிருக்கிறார்களோ அவர்களனைவர்களும் பிரியமான ஆசாரியரைச் சிஷ்யர்கள்போல உன்னைப்பூஜிப்பார்கள். நானும் உன்னை உன்மித்திரக்கூட்டங்களுடனும் பந்துக்களுடனும் கூடப் பூஜிக்கிறேன். உயிரைக்கொடுத்தவனை நன்றியறிந்தஎவன் பூஜியாமலிருப்பான்? நீ என்னுடையசரீரம் வீடு பொருள்கள் யாவற்

திற்கும் எஜமானனுயிருக்கவேண்டும். நீ எனக்குக் கட்டளையிடு கிறவனுயிரு. அறிவிற்சிறந்தவனே! நீ எனக்கு அமாத்தியனுயிரு. (மகனைத்) தகப்பன்போல நீ என்னைக்கட்டளையிடு. உனக்கு என்னிடமிருந்து பயம்வேண்டாம். என்உயிரின்மேல் சபதஞ்செய்கிறேன். நீ புத்தியால் சுக்ராசாரியரே; நாங்கள் பலத்தால் அதிகாரமுள்ளவர்கள். மந்த்ரபலத்துடன்கூடியநீ எனக்கு ஜயத்தையேகொடுப்பாய்' என்றுசொல்லிற்று.

இவ்விதம் பூனையால் மிகவும்நன்மொழிகூறப்பட்ட அந்தஎலியானது உண்மையைஅறிந்துகொண்டு அழகுள்ளதும் தனக்குநன்மையுமானவசனத்தைச் சொல்லத்தொடங்கிற்று. 'லோமச! நீசொல்லியது அனைத்தையும் நான்கேட்டேன். எனக்கு எதுதோன்றுகிறதோ அதைச்சொல்லும் என்னுடையவசனத்தையும் கேள். மித்திரர்களையும் அறிந்துகொள்ளவேண்டும்; சத்துருக்களையும் அறிந்துகொள்ளவேண்டும். இது மிகஸூக்ஷ்மமென்று இவ்வுலகில் அறிஞர்கள் [1]அங்கீகரித்ததாகக்காணப்படுகிறது. ஸ்நேஹிதர்கள் சத்துருக்களைப்போலவும் சத்துருக்கள் ஸ்நேஹிதர்களைப்போலவும் இருப்பார்கள். அவர்கள் ஆசைக்கும் லோபத்துக்கும்வசப்பட்டு [2]நன்மொழி கூறப்பட்டாலும் உண்மையைஅறிகிறார்களில்லை. எவர்களுக்கு நற்குணமுள்ளவர்களே மித்திரர்களாயும் கோபமுள்ளவர்களே சத்துருக்களாயுமிருக்கிறார்களோ அவர்களும் ஆசைலோபங்களுக்குவசப்பட்டால் நன்மொழிகூறப்பட்டாலும் (உண்மையை) அறிகிறார்களில்லை. பிறப்பில்சத்துருவென்பவனில்லை; மித்திரனென்பவனுமில்லை; காரியத்திற்குவேண்டி மித்திரர்களாயும் சத்துருக்களாயும் ஆகிறார்கள். ஒருமனிதனுடைய உயிர்வாழ்க்கையில்காரியஸித்தியையும் மரணத்தில்துன்பத்தையும் எவன்காண்கிறானோ அவன் அதுமாறுதிருக்கும் வரையில் அம்மனிதனுக்கு மித்ரனுவான். ஸ்நேஹமென்பது நிலைத்ததாயிருப்பதில்லை. த்வேஷமென்பதும் நிலைத்ததன்று. கார்யத்தின்சேர்க்கையால் நண்பர்களாகவும் அவ்விதமே பகைவர்களாகவும் ஆகிறார்கள். வேறானஒருஸமயத்தில் மித்திரனும் சத்துருத்தன்மையை அடைவான்; சத்துருவும் மித்திரத்தன்மையைஅடைவான். தன்னுடைய காரியமன்றோ மிகவும்பலமுள்ளது? எவன் காரியத்திற்குரியயுக்தியைஅறியாமல் மித்திரர்களிடமே நம்பிக்கையுள்ளவனும் சத்துருக்களிடம் நம்பிக்கையேயில்லாதவனுமாயிருக்கிறானோ அவனுடைய

---

1 வேறுபாடம்.

2 'ஸ்நேஹத்தைஅடைந்தாலும்' என்பதுவேறுபாடம்.

உயிர் நிலையுள்ளதன்று. [1]எவன் காரியத்தை அறிந்துகொள்ளாமல் மித்திரனிடத்திலேயோ சத்துருவினிடத்திலேயோ பிரியத்தில்மனத்தைச்செலுத்துகிறானோ அவனுடையபுத்தியும் நிலையுள்ளதன்று. நம்பிக்கையில்லாதவனிடம் நம்பிக்கைகூடாது. நம்பிக்கையுள்ளவனிடத்திலும் அதிகநம்பிக்கைகூடாது. நம்பிக்கையினாலுண்டாகும்பயமானது வேர்களையும் அறுக்கும். தந்தையும் தாயும் மகனும் மாமனும் மருமகனும் ஸம்பந்திகளும் பந்துக்களும் கார்யத்தின்சேர்க்கையாலுண்டாகிறார்கள். தாயுந்தந்தையும், பதிதனாயிருந்தால் பிரியனான புத்திரனையுந் தள்ளிவிடுகிறார்கள். உலகம் தன்னைரக்ஷித்துக்கொள்ளுகிறது. தன்கார்யத்திற்குள்ள ஸாரத்தைப்பார். அறிவுள்ளவனே! விடுதல்பெற்றபின் ஸுகத்திற்குக்காரணமான காரியத்தைச்செய்ய ஒருவன் தேடுவதென்பது பொதுவானகடமையாகும். ஸந்தேஹமில்லை. ஆனால், இதேஇடத்தில் ஆலமரத்திலிருந்து இறங்கியநீ சபலத்தனத்தால் கொல்லத்தக்கயந்திரத்தில் புகுந்தஉன்னை முதலில் அறிந்துகொள்ளவில்லை. சபலனாயிருப்பவன் தனக்கே உபயோகப்படமாட்டான். பிறர்களுக்கு எங்கு உபயோகப்படுவான்? ஆகையால், சபலன் எல்லாக்காரியங்களையுங்கெடுப்பான்; ஸந்தேஹமில்லை. இப்பொழுது, ‘எனக்கு உன்னிடத்தில் பிரியம்’ என்று இனிமையாக நீஎன்னபேசுகிறாயோ அதுபொய். காரணமனைத்தையும் விரிவாக என்னிடமிருந்து கேள். (மனிதன்) ஒருகாரணத்தால் பிரியமாயிருக்கும்தன்மையை அடைகிறான். ஒருகாரணத்தால் பகையுள்ளவனாகிறான். இவ்வுலகத்திலுள்ளபிராணியானது தன்காரியத்தையேவிரும்பும். ஒருவனும் ஒருவனுக்கும் பிரியனல்லன். ஒருவயிற்றிற்பிறந்த பிராதாக்களானாலும், தம்பதிகளானாலும் எவருக்கும் ஒருவருக்கொருவர் ஸ்நேஹத்தையும் காரணமில்லாத ப்ரீதியையும் இவ்வுலகில் நான் அறிகிலேன். ஆனால், உடன்பிறந்தார்களும் மனைவியும் ஒருகாரணத்தில் கோபமுள்ளவர்களானாலும் (பிறகு) அவர்கள் ஸ்வபாவத்தில் ப்ரீதியுள்ளவர்களாயிருப்பார்கள். அவிவேகியானமற்றமனிதன் அவ்விதமிருக்கமாட்டான். கொடுப்பதால் ஒருவன் பிரியனாவான். பிரியமானவசனத்தால் ஒருவன் பிரியனாவான். மந்திரத்தாலும் ஹோமத்தாலும் ஜபத்தாலும் மற்றொருவன் பிரியனாவான். உலகமானது காரியத்திற்குவேண்டி ப்ரீதியுள்ளதாகிறது. நம்மிருவர்களுக்கும் ஒருகாரணநிமித்தம் ப்ரீதியுண்டாகி அக்காரணத்திற்காக அஃதுஇருந்தது. அந்தக்காரணமானது முடிவடைந்ததும் அந்தப்ரீதியும் இல்

1 வேறுபாடம்.

லாமற்போயிற்று. எந்தக்காரணத்தால் உனக்கு என்னிடத்தில் அன்பிருக்கிறதோ அந்தக்காரணமானது புஜிக்கவேண்டுமென்ற காரியத்தைத்தவிர வேறெனது என்று நினைக்கிறேன். அந்தவிஷயத்திலும் நாங்கள் அறிவுள்ளவர்கள்தாம். காலமானது காரணத்தை வேறுபடச்செய்யும். தனக்குரியபயனானது அக்காரணத்தைத் தொடர்ந்து நிற்கும். அறிவிற்சிறந்தவன் தன்காரியத்தை அறிவான். உலகம் அறிவிற்சிறந்தவனை அனுஸரித்திருக்கும். ஆனால், நீ இவ்விதம்பேச வேண்டாம். எவனும் தன்காரியத்தில் ஸமர்த்தனாயிருப்பன். ஸாமர்த்தியமுள்ளவனுக்கு இந்தஸமயமானது உன்னிடத்தில் ஸ்நேஹஞ்செய்யத்தக்கதன்று. ஆகையால், நட்பிலும் பகையிலும் நல்லதேர்ச்சியுள்ளநான் என்காரியத்திலிருந்து அசையமாட்டேன். மேகங்களின் உருவங்கள்போல் (காரியங்கள்) ஒவ்வொருஸமயத்திலும் வேறுபடுகின்றன. இப்பொழுதுதான் சத்துருவாயிருந்தநீயன்றோ திரும்பவும் இப்பொழுதே எனக்கு ஸ்நேஹிதனாகித் திரும்பவும் இப்பொழுதே சத்துருவாகிறாய்? காரியங்களின் மாறுபாட்டைப் பார். முந்தி எவ்வளவுவரையில் காரணமிருந்ததோ அவ்வளவுவரையில் நம்மிருவர்களுக்கும் ஸ்நேஹமுண்டாயிருந்தது. காலத்துடன் கூடின அந்தக்காரணத்துடன்கூடவே அந்தஸ்நேஹம் போய்விட்டது. நீ எனக்கு இயற்கையில் சத்துருவன்றோ? காரியத்திற்கு வேண்டி மித்திரத்தன்மையை அடைந்தாய். அந்தக்காரியம் முடிந்தபின் சத்துருத்தன்மையை அடைந்தஸ்வபாவம் வந்துவிட்டது. இவ்விதம் இயற்றப்பட்ட சாஸ்திரங்களை உண்மையாக அறிந்தநான் எப்படி உனக்குவேண்டிக் கயிற்றில் ப்ரவேசிப்பேன்? அதை எனக்குச்சொல்லு. உன்னுடையபராக்ரமத்தால் நான் விடுவிக்கப்பட்டேன். அப்படியே என்னுடையபராக்ரமத்தால் நீவிடுவிக்கப்பட்டாய். ஒருவருக்கொருவர்உபகாரம்முடிவுபெற்றதும் திரும்பவும் சேர்க்கையில்லை. அழகுள்ளவனே! நீ இப்பொழுதுகாரியத்தைச்செய்துகொண்டவனாகிறாய். அப்படியே எங்கள்காரியமும் நிறைவேறிற்று. இப்பொழுது உனக்கு உணவாதலைவிட என்னால்செய்யத்தக்கது வேறொன்றுமில்லை. நான் அன்னம்; நீ புஜிப்பவன். நான் பலஹீனன்; நீ பலமுள்ளவன். பிரிந்தபின் பலமானது ஸமமாகஇல்லாமலிருக்கும்பொழுது நம்மிருவர்களுக்கும் ஸந்தியென்பது கிடையாது. நான் உன்னுடையபுத்தியை அறிகிறேன். விடுதல்பெற்றபிறகு எளியஉபாயத்துடன் நிச்சயமாகப் போஜனத்தைத்தேடுகிறாய். ஸந்தேஹமில்லை. விடுதல்பெற்றவுடன் பசியால்தொடரப்பட்ட நீ ஆகாரத்தில்விருப்ப

முள்ளவனென்றே நன்றாகவெளியாகிறது. நீதிசாஸ்திரத்தாலுண்டான புத்தியைவைத்துக்கொண்டு என்னிடத்தில் காலைஆகாரத்தை விரும்புகிறாய். உன்னைப்பசியுள்ளவனென்றும் அறிகிறேன். உனக்குப்போஜனஸமயமாகவுமிருக்கிறது. அவ்விதமானநீ என்னைப் பிரியப்படுத்தித் திரும்பவும் போஜனமாகச்செய்யவிரும்புகிறாய். அன்றியும், நண்பனே! பிள்ளைபெண்டிர்களுக்குவேண்டி என்னிடத்தில் வார்த்தையைச்சொல்வதும் எனக்குப் பணிவிடைசெய்யமுயற்சிப்பதும் எனக்குத் தகுதியல்ல. உன்னுடன்கூடஇருக்கும் என்னைக் கண்டு உன்னுடையமித்திரர்களும் மனைவியும் பிள்ளைகளும் நீஅன்புள்ளவனாயிருக்கும்பொழுதே என்னைப்பிடித்து ஏன்தின்னமாட்டார்கள்? காரணத்தாலுண்டானசேர்க்கையானது முடிவுபெற்றபடியால் நான் உன்னுடன்சேரமாட்டேன். நான்செய்த உபகாரத்தைநினைப்பாயாகில் அங்கிருந்துகொண்டே எனக்கு க்ஷேமத்தைச்சிந்தித்துக்கொண்டிரு. புஜிக்கத்தக்கவஸ்துவாயிருக்கும் எந்த அறிவுள்ளவன் துன்பப்பட்டவனும் பசியுள்ளவனும் ஆகாரத்தைத்தேடுகிறவனுமான சத்துருவினிடத்திற்செல்லுவான். உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். நான் போகிறேன்; தூரத்திலிருந்தாலும்கூட உன்னிடத்திலிருந்து பயமடைகிறேன். [1]நான் உன்னுடன்சேரமாட்டேன். லோமச! நீ நிவ்ருத்தியடை. பலமுள்ளவர்களினருகிலிருப்பது ஒருஸமயத்திலும் கொண்டாடப்படுகிறதில்லை. செய்தஉபகாரத்தை நீ அறிவாயாகில் ஸ்நேஹத்தைஅனுஸரித்துக்கொண்டிரு. மிக்கஅடக்கமுள்ளவனும் நல்லறிவுள்ளவனுமானபலசாலியிடமிருந்தே எப்பொழுதும் பயப்படவேண்டும். ஏதாவதொருபொருளால் உனக்குக் காரியமிருக்குமானால் சொல்லு. உனக்கு நான் என்னசெய்யவேண்டும்? எல்லா இஷ்டத்தையுங்கொடுக்கிறேன். எவ்விதத்திலும் ஆத்மாவைக்கொடுக்கமாட்டேன். ஆத்மாவுக்குவேண்டி ஸந்ததியும் ராஜ்யமும் ரத்தினமும் பொருள்களும் இழக்கத்தக்கவைகளாகும். புத்தியுள்ளவன் எல்லாப்பொருளையும் விட்டாவது ஆத்மாவைரக்ஷித்துக்கொள்ள வேண்டும்; ஐஸ்வர்யத்துக்கும் தனத்துக்கும் ரத்தினங்களுக்கும்விரோதமானநிலையிலும் இருக்கலாம். உயிரோடிருப்பவர்களுக்குத் திரும்பவும் அவைகள்வருவது காணப்படுகிறதென்று எங்களுக்குக்கேள்வி. பொருள்களையும் ரத்தினங்களையும்போல ஆத்மாவைக்கொடுப்பது விரும்பத்தக்கதன்று. தாரங்களாலும் தனங்களாலும் எப்பொழுதும் ஆத்மாவைரக்ஷித்துக்கொள்ளவேண்டும். ஆத்மாரக்ஷையை முக்கிய

1 அரைச்லோகம்விடப்பட்டது.

மாகக்கொண்டவர்களும் காரியங்களை நன்றாகப்பரீக்ஷித்துச்செய்கிற வர்களுமான மனிதர்களுக்குத் தம்குற்றத்தாலுண்டாகுந் துன்பங்கள் உண்டாகமாட்டா. நன்றாக அறியப்படாதவனும் பிரீதியில்லாதவனு மான [1]சத்துருவானவன் எப்பொழுதும் பிரியத்தைச்செய்கிறவனு யிருந்தாலும் பலமில்லாதமனிதன் அவனைப்பற்றி எல்லாவிடத்திலும் ஸந்தேஹப்படவேண்டும். நற்குலத்திற்பிறந்தவர்களும் நல்லமித்தி ரர்களும் தர்மமுள்ளவர்களும் மஹாத்மாக்களுமாயிருப்பவர்களின் புத்தியானது சாஸ்திரத்தின்பொருளில் நிச்சயமுண்டானதாகி வேற் றுமைஅடையாமலிருக்கும்' என்றுசொல்லிற்று. இவ்விதம் இந்தப் பூனையானது பலிதத்தால் வெளிப்படையாகவே பரிஹஸிக்கப்பட்டு லஜ்ஜையுள்ளதாய் அதனைநோக்கி ஒருவசனத்தைச் சொல்லத்தொட ங்கிற்று.

'ஸத்யமாக நான் சபதஞ்செய்கிறேன். என்னை மித்திரத்ரோஹி யென்று நீ நிந்திக்கிறாய். நீ என்னுடையஹிதத்திற்காக முயற்சி யெடுத்தவன். உன்னுடையபுத்தியை நான் சிறந்ததென்றறிகிறேன். என்னுடையஇயற்கையிலுள்ள காரியத்தைக்கொண்டு நீ வேறு எண் ணத்துடன்பேசுகிறாய். ஸாதுவே! இந்தவிஷயத்தில் நீ என்னை வேறுவிதமாகக்கருதுவது நியாயமன்று. உயிரைக்கொடுத்ததனாலுண் டானஸ்நேஹமானது உன்னிடமிருந்து என்னிடம்வந்திருக்கிறது. தர்மமறிந்தவனும் நற்குணங்களையறிந்தவனும் மிக்கநன்றியறிவுள்ள வனுமாயிருக்கிறேன். மித்திரர்களிடம் அன்புள்ளவனுமாயிருக்கி றேன். விசேஷமாக உன்னிடத்தில் பக்தியுள்ளவனுமாயிருக்கிறேன். ஸாதுவே! இவ்விதமிருக்கும்பொழுது என்னை நீ நிந்தித்துப்பேசு வது நியாயமன்று. நான் உன்னால் இவ்விதம்பேசப்படுவேனாகில் பந் துக்களுடன்கூட உயிரையும்விட்டுவிடுவேன். நல்லமனமுள்ள என் போன்றவர்களிடம் அறிஞர்கள் [2]ஸ்நேகத்தையேபார்க்கிறார்கள். தர் மத்தின்உண்மையைஅறிந்தவனே! என்னிடத்தில் தர்மந்தவறுதலை ஸந்தேஹிப்பது நியாயமன்று' என்றுசொல்லிற்று. பூனையால் இவ்வி தம் ஸ்தோத்திரம் செய்யப்பட்டதாயிருந்தாலும் அந்த எலியானது பூனையைநோக்கி மனத்திலுள்ள ஆழ்ந்தகருத்தமைந்த இவ்வசனத் தைச் சொல்லத்தொடங்கிற்று.

'நீ ஸாது. நான் காரியத்தைச் செய்துகொண்டவனாயிருக்கி றேன். நண்பனாயிருப்பவனையும் நான் நம்பவில்லை. ஸ்தோத்திரங்

---

1 இங்கு ஒருபதம் மாற்றப்பட்டது.

2 வேறுபாடம்.

களாலோ பொருள்களாலோ திரும்பவும் நீ என்னை அடையமுடியாது. நண்பனே! அறிவிற்சிறந்தவர்கள் காரணமின்றிச் சத்துருவின்வசத்தை அடையமாட்டார்கள். இந்தவிஷயத்திலும் சுக்ராசாரியாரலியற்றப்பட்ட இரண்டுகாதைகளைக் கேள். அவற்றின்பொருளாவது:—சத்துருவும்சேர்ந்துசெய்யத்தக்ககாரியத்தில் அதிகபலமுள்ளவனுடன்ஸந்தியைச்செய்துகொண்டு தன்புத்தியால் மிக்கஜாக்ரதையுடன்ஸஞ்சரிக்கவேண்டும்; காரியத்தைச்செய்துகொண்டபின் நம்பக்கூடாது; நம்பிக்கையில்லாதவனையும் நம்பக்கூடாது; நம்பிக்கையுள்ளவனிடத்திலும் அதிகநம்பிக்கைகூடாது; எப்பொழுதும் பிறர்களுக்குநம்பிக்கையுண்டாகும்படிசெய்யவேண்டும்; பிறர்களைத் தான் நம்பக்கூடாது - என்பது. ஆகையால், எல்லாஸமயங்களிலும் தன்னுடையஉயிரை ரக்ஷித்துக்கொள்ளவேண்டும். உயிரோடிருப்பவர்களுக்குத் திரவியங்கள் ஸந்ததிமுதலியயாவும் உண்டாகும். நீதிசாஸ்திரங்களின்சுருக்கமானஸாரம் நம்பிக்கையில்லாமையென்றுசொல்லப்படுகிறது. ஆகையால், மனிதர்களிடம்நம்பிக்கையில்லாமலிருப்பது தனக்குப்பூர்ணமானஹிதமாகும். பலங்குறைந்தவர்களாயிருந்தாலும் நம்பிக்கையில்லாமலிருப்பவர்கள் சத்துருக்களால் கட்டப்படமாட்டார்கள். பலசாலிகளாயிருந்தாலும் பகைவர்களிடம்நம்பிக்கையுடனிருப்பவர்கள் பகைவர்களால் கட்டப்படுகிறார்கள். பூனையே! உன்போன்றவர்களிடமிருந்து எப்பொழுதும் நான் ஆத்மாவைரக்ஷித்துக்கொள்ளவேண்டும். நீயும், பிறப்பில்பாபியானசண்டாளனிடமிருந்து உன்னைரக்ஷித்துக்கொள்' என்றுசொல்லிற்று. அந்தஎலிஇவ்விதம்சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே அந்தப்பூனையானது பயத்தால்நடுக்கமுற்றுக் [1]கதையைவிட்டுவிட்டு உடனே மிகவேகமாகச்சென்றது. பிறகு சாஸ்திரங்களின்உண்மைப்பொருளை அறிந்ததும் அறிவிற்சிறந்ததுமான எலியானது தன்புத்திக்குள்ளஸாமர்த்தியத்தைக்கேட்பித்துவிட்டு வேறுவளையைஅடைந்தது. இவ்விதம் நல்ல அறிவுள்ளதும் பலமில்லாததுமான பலிதமென்னும்ஓர்எலி தன்புத்தியால் அதிகபலமுள்ளபலசத்துருக்களை வஞ்சித்தது. ஆகையால், பண்டிதனாயிருப்பவன், சத்துருவாயிருந்தாலும் ஸாமர்த்தியமுள்ளவனோடு ஸந்தியைச்செய்துகொள்ளவேண்டும். எலியும் பூனையும் ஒன்றோடொன்றுசேர்ந்துவிடுபட்டன. மஹாராஜனே! இவ்விதம் க்ஷத்திரியதர்மத்தின்வழியானது விரிவாக என்னால் எடுத்துச்சொல்லப்பட்டது. சுருக்கத்தையும் என்னிடமிருந்துகேள்.

---

1 'இளையை' என்பது வேறுபாடம்.

ஒன்றுக்கொன்று வைரமுள்ளவைகளாயிருப்பவைகள், உத்தம் மானபிரியத்தைச்செய்துகொண்டன. அவைகளுக்குஒன்றையொன்று வஞ்சிக்கவேண்டுமென்றபுத்தி நன்றாகஇருந்தது. அவைகளில் அறிவிற்சிறந்தது நல்லபுத்திபலத்தை அடைந்து மற்றதைவஞ்சிக்கும். அறிவிற்சிறந்தவனும் அஜாக்ரதையாகஇருந்தால் புத்தியுள்ளவர்களால் வஞ்சிக்கப்படுவான். ஆகையால், பயமில்லாதவன்போலப் பயமுள்ளவனும் நம்பிக்கையுள்ளவன்போல நம்பிக்கையில்லாதவனுமாயிருக்க வேண்டும். அஜாக்ரதையில்லாதவன் (வழியைவிட்டுச்) சலிக்கமாட்டான்; சலித்தாலும் நாசமடையமாட்டான். அரசனே! சத்துருவுடனும் ஸமயத்தில்ஸந்தியையும் மித்திரனுடனும் ஸமயத்தில்யுத்தத்தையும் செய்யவேண்டுமென்றே எப்பொழுதும் உண்மையையறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். மஹாராஜனே! இதைஅறிந்து சாஸ்திரத்தின்பொருளையும்தெரிந்துகொண்டு முயற்சியுள்ளவனும் அஜாக்ரதையில்லாதவனுமாய்ப் பயம்வருவதற்குமுந்தியே பயமுள்ளவன் போலநடக்கவேண்டும். ஸந்தியையும் அவ்விதமேசண்டையையும் பயத்துடனேசெய்யவேண்டும். பயத்தால் அஜாக்ரதையில்லாததும் முயற்சியுள்ளதுமான புத்தியுண்டாகும். அரசனே! பயம்வருவதற்கு முந்தியே பயத்துடனிருப்பவனுக்கு அந்தப்பயமுண்டாகாது. நம்பிக்கையால் பயமில்லாமலிருப்பவனுக்கு மிகப்பெரியபயமுண்டாகும். மிகவும் பயமுள்ளவனென்றெண்ணி (ஒருவனிடத்தில்) எவ்விதத்திலும் ஆலோசனையைச்செய்யக்கூடாது. அறியாமையைமுன்னிட்டு அறிந்துகொண்டவன் மூலத்தின்அறிவையும் அடைவான். ஆகையால், பயமில்லாதவன்போலப் பயமுள்ளவனும் நம்பிக்கையுள்ளவன் போல நம்பிக்கையில்லாதவனுமாய்க் காரியங்களின்பெருமையைத் தெரிந்துகொண்டு ஒன்றையும் பற்றுதலுடன்செய்யாமலிருக்கவேண்டும். யுதிஷ்டிர! இவ்விதம் என்னால்சொல்லப்பட்ட இந்தஇதிஹாஸத்தைக்கேட்டு நீ மித்திரர்களின்நடுவில் விதிப்படி நடந்துகொள். சிறந்தபுத்தியையும் சத்துருமித்திரர்களுக்குரிய வேற்றுமையையும் ஸந்திக்கும்யுத்தத்துக்கும்தக்ககாலங்களையும் ஆபத்து, மயத்தில்விடுபடத்தக்கஉபாயத்தையும் தெரிந்துகொண்டு சத்துருவுடன்சேர்ந்து செய்யத்தக்ககாரியத்தில் அதிகபலமுள்ள அவனுடன் ஸந்தியைச் செய்துகொண்டு புத்தியுடன்நடக்கவேண்டும். காரியத்தைச்செய்து கொண்டபின் நம்பாமலுமிருக்கவேண்டும். அரசனே! அறம்பொருள் இன்பமென்றமூவகைப்பயனுக்கும் விரோதமில்லாத இந்தநீதியைக் கேட்டு இதனுடன் விசேஷமாகப்ராஜைகளைரக்ஷித்துக்கொண்டு நீ உய

ர்ந்திருக்கவேண்டும். பாண்டவ! ப்ராம்மணர்களுடன்கூடவே உனக்குக் [1]கூட்டுறவுஇருக்கவேண்டும். பாரத! ப்ராம்மணர்களிடமிருந்தே இவ்வுலகிலும் ஸ்வர்க்கத்திலுமுள்ள பெரியச்ரேயஸ்உண்டாகிறது. ப்ரபுவே! தர்மத்தைஅறிந்தவர்களும் எப்பொழுதும்நன்றியறிவுள்ளவர்களுமான இந்தப்ராம்மணர்கள் பூஜிக்கப்பட்டு க்ஷேமத்தைச்செய்வார்கள். அரசனே! இவர்களைப் பூஜைசெய். அரசனே! ராஜ்யத்தையும் பெரியக்ஷேமத்தையும் பெரியகீர்த்தியையும் குலத்திற்கு வேண்டியஸந்ததியையும் நியாயமாகவும் கிரமமாகவும் அடைவாய். ஓ! பாரத! விசேஷமானஅறிவைக்கொடுப்பதும் [2]சத்துருமித்திரர்கள் இவ்விருவர்களுக்குமுள்ள ஸந்திவிக்ரஹங்களைப்பற்றியதுமான நீதியானது நன்றாகச்சொல்லப்பட்டது. அரசனே! அரசனாயிருப்பவன் எப்பொழுதும் இவ்விதம்பார்த்துக்கொண்டு சத்துருக்கூட்டத்தில் நடந்துகொள்ளவேண்டும்" என்றுசொன்னார்.

---

## நூற்றுமுப்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஒருதருவிக்தும் ப்ரம்மதத்தனென்னும் அரசனுக்தும் நடந்தஸம்வாதத்தைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "மஹாபாஹுவே! உம்மால் மந்த்ராலோசனை சொல்லப்பட்டது. சத்துருக்களிடம் நம்பிக்கையில்லை. எல்லாவிடத்திலும்நம்பிக்கையில்லாதிருப்பானுகில் அரசன் எவ்விதமிருக்கமுடியும்? அரசரே! அரசர்களுக்கு நம்பிக்கையாலன்றோ மிகவும்பயமுண்டாகிறது? பூமிக்குப்பதியான அரசன் நம்பிக்கையில்லாதவனாயிருந்துகொண்டு எவ்விதம் பகைவர்களை வெல்வான்? பிதாமஹரே! இந்தக்கதையைக் [3]கேட்டு நம்பிக்கையில்லாமலிருப்பதில் என்மனம் மிகவும் மயங்குகிறது. என்னுடையஇந்தஸந்தேஹத்தை அறச்செய்யவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அரசனே! ப்ரம்மதத்தனென்னும்அரசனுக்கும் அவன்வீட்டிலிருந்த [4]பூஜனியென்னும் ஒருபக்ஷிக்கும் நடந்தஸம்பாஷணையைக் கேள். காம்பில்யதேசத்தில் ப்ரம்மதத்தனென்னும் அரசனுடைய அந்தப்புரத்தில்வஸிக்கும்பூஜனியென்னும்பக்ஷியானது நெடுங்காலம் அவனுடன்கூட வஸித்துக்கொண்டிருந்தது. அது பறவைப்பிறப்பை

---

1 'யாத்ரா' என்பதுமூலம். 2, 3வேறுபாடம். 4 சிட்டுக்குருவி.

அடைந்திருந்தாலும் பிராணிகளைக்கொண்டு பிழைக்கும் [1]வேடன் போல எல்லாப்பிராணிகளின்சப்தங்களையும்அறிந்ததும் எல்லாவற்றையும்அறிந்ததும் எல்லாஉண்மையையும்அறிந்ததுமாயிருந்தது. அந்தப்பக்ஷி அவ்விடத்தில் நல்லகாந்தியுள்ளஒருகுஞ்சையீன்றது. அதே காலத்தில் அரசனுக்கும் தன்தேவியிடம் ஒருபுத்திரனுண்டானான். நன்றியறிவுள்ளதும் ஆகாயத்தில்ஸஞ்சரிப்பதுமான அந்தப்பூஜனியானது அந்தப்புத்திரர்களிருவர்கள்பொருட்டும் எப்பொழுதும் கடற்கரைசென்று இரண்டுகனிகளைக்கொண்டுவந்து தன்புத்திரனுக்கும் ராஜகுமாரனுக்கும் புஷ்டியுண்டாவதற்காக ஒருகனியைத்தன் புத்திரன்பொருட்டும் மற்றொன்றைராஜகுமாரன்பொருட்டும் கொடுத்தது. பலத்தையும் காந்தியையும்வ்ருத்திசெய்வதும் அமிருதத்தின் ருசிக்குஒப்பானதுமானஅக்கனியை அந்தப்பக்ஷியே சீக்கிரமாகக் கொண்டுவந்துகொண்டுவந்து திரும்பவும்திரும்பவும் அந்தச்சிறுவர்களுக்குக் கொடுத்தது. பிறகு கனியைத்தின்றதால் ராஜகுமாரன் மிக்கவளர்ச்சியையடைந்தான். பிறகு அந்தப்பாலகனானராஜகுமாரன் இளைஞனாயிருப்பதால் தாதியால் கக்ஷத்தில்வஹிக்கப்பெற்றுவந்து அந்தப்பக்ஷியின்குஞ்சைப் பார்த்துக்கொண்டிருந்தான்; பிறகு இளம் பருவத்திலிருந்ததால் ஊக்கத்தோடு அந்தப்பக்ஷியுடன் விளையாடிக் கொண்டிருந்தான். அரசச்ரேஷ்டனே! ஒருவருமில்லாதஸமயத்தில் தனக்குஒத்தபிராயமுள்ளஅந்தப்பக்ஷியை எடுத்துக்கொன்றுவிட்டுப் பிறகு அந்தஅரசகுமாரன் தாதியின்கையைஅடைந்தான். அரசனே! பிறகு அந்தப்பூஜனியானது பழங்களைஎடுத்துக்கொண்டுவந்தது; சிறுவனானராஜகுமாரனால் கொல்லப்பட்டுப் பூதலத்தில்கிடக்கும்புத்திரனைக் கண்டது. விழுந்துகிடக்கும் அந்தப்புத்திரனைக்கண்டவுடன் சோகமுற்றதும் கண்ணீரால் நிறைந்தமுகமுள்ளதுமானபூஜனியானது துக்கத்தால் மிகப்பரிதபித்து அழுதுகொண்டு சிலவசனத்தைச் சொல்லத்தொடங்கிற்று.

'க்ஷத்திரியனிடத்தில் ஸ்நேஹங்கிடையாது; ப்ரீதி கிடையாது; நல்லஎண்ணங்கிடையாது. இவர்கள் ஒருகாரியத்திற்காக நன்மொழியுரைப்பார்கள். காரியத்தைச்செய்துகொண்டபின் தள்ளியும்விடுவார்கள். அனைவர்களுக்கும் அபகாரத்தைச்செய்யும் க்ஷத்திரியர்களிடம் நம்பிக்கைவைக்கக்கூடாது. எப்பொழுதும் அபகாரத்தைச் செய்துவிட்டும் (இவர்கள்) பயனின்றி நன்மொழிகூறுவார்கள். நன்றிகொன்றவனும் மிக்கக்ரூரனும் விஸ்வாஸகாதகனுமானஇந்தஅரசகுமா

---

1 ஒருவகைப்பக்ஷியுமாம்.

ரன்செய்தவிரோதத்திற்குச் சரியானதுன்பத்தை இப்பொழுது நான் செய்கிறேன். கூடப்பிறந்துவளர்ந்தவனும் அவ்விதமேகூடப்போஜனஞ்செய்கிறவனும் சரணமடைந்தவனுமான(என்புத்ரனைக்) கொன்றதால் அவனுக்குமூன்றுவிதமானபாபமாகும்' என்றுசொல்லிற்று. பூஜனியானது இவ்விதஞ்சொல்லிக் கால்களால் அந்தராஜகுமாரன்கண்களைப்பெயர்த்துவிட்டு ஆகாயத்திலிருந்து, பிறகு, 'புத்தியுடன் வேண்டுமென்று இவ்வுலகில்செய்தபாபமானது உடனேயேசெய்தவனிடம்வரும். செய்ததற்குப்பிரதிசெய்தபோதிலும் (முன்செய்த) சுபாசுபகாரியம் நாசமடைகிறதில்லை. செய்யப்பட்டபாபகர்மத்தின் பயனானது செய்தவனிடத்தில்சிறிதும்காணப்படாமல்போனால் அவன் புத்திரர்களிடத்திலும் பௌத்ரர்களிடத்திலும் அவர்கள் புத்திரர்களிடத்திலுமாவது வந்துவிழும்' என்ற வார்த்தையைச் சொல்லிற்று. ப்ரம்மதத்தன் பூஜனியால்பெயர்க்கப்பட்ட கண்ணுள்ளபுத்திரனைக்கண்டு செய்ததற்கு ப்ரதிசெய்யப்பட்டதாக நினைத்துக்கொண்டு பூஜனியைநோக்கி, 'பூஜனி! எங்களால்செய்யப்பட்டதுமிருக்கிறது; உன்னால் அதற்கு ப்ரதிசெய்யப்பட்டதுமிருக்கிறது; அந்த இரண்டும் ஸமமாய்விட்டன. (ஆகையால்) இரு; போகவேண்டாம்' என்று இவ்விதஞ்சொன்னான். பூஜனி சொல்லத்தொடங்கிற்று.

'ஒருமுறைகுற்றஞ்செய்தவனும் அவ்விடத்திலேயே நம்பிக்கையுள்ளவனுமாயிருப்பவனுக்கு நீ சொல்லுகின்றதை அறிவுள்ளவர்கள் கொண்டாடுகிறார்களில்லை; அவ்விடத்தில்விலகிச்செல்லுவது க்ஷேமமாகும். வெளிப்படையாக விரோதமிருக்குமிடத்தில் நன்மொழி கூறப்பட்டாலும் நம்பிக்கை அடையக்கூடாது. அவ்விதம்நம்பிக்கையுள்ளமூடன் விரைவில்கொல்லப்படுவான். வைரமென்பது சமனத்தையடையாதன்றோ? ஒருவருக்கொருவர்வைரத்தைஉண்டுபண்ணிக்கொண்டவர்களுக்குப் புத்திரர்களும் பௌத்திரர்களும் நாசமடைவார்கள். புத்திரபௌத்திரர்களுக்கு நாசமுண்டானால் பரலோகம் நாசமடையும். வைரத்தைச்செய்துகொண்டயாவர்களுக்கும் நம்பிக்கையில்லாமலிருப்பது ஸுகத்தைத்தரும். விஸ்வாஸத்தைக்கெடுப்பவனிடம் உறுதியாக நம்பிக்கையைச்செய்யாமலிருக்கவேண்டும். நம்பிக்கையில்லாதவனிடம் நம்பிக்கைகூடாது. நம்பிக்கையுள்ளவனிடத்திலும்அதிகநம்பிக்கைகூடாது. நம்பிக்கையாலுண்டாகும்பயமானது வேரையும்அறுக்கும். இஷ்டப்படி பிறர்களுக்கு நம்பிக்கையைஉண்டுபண்ணலாம். பிறர்களை நம்பக்கூடாது. பந்துக்களுள் தாயுந்தந்தையும் சிறந்தவர்கள். பாரியையானவள் [1]வயல்போன்றவள். புத்திர

[1] 'கிழத்தனம்போன்றவள்' என்பதுவேறுபாடம்.

னென்பவன் விதைமாத்திரம். உடன்பிறந்தவன் (பொருளைப் பங்கிட்டுக்கொண்டுபோவதால்)சத்துருவாவான். மனிதன்கையில் [1]ஈரமுள்ளவரையில் ஸ்நேஹிதனாயிருப்பான். ஆத்மா ஒன்றே ஸுகதுக்கங்களை அனுபவிக்கவேண்டியதாகும். ஒருவருக்கொருவர் வைரத்தைச்செய்துகொண்டவர்களுக்கு ஸந்தியென்பது கூடாது. எதற்காக நான் வஸித்துக்கொண்டிருந்தேனோ அந்தக்காரணமானது போய்விட்டது. பொருளாலும் அபிமானத்தாலும் நன்மொழிகூறிப்பூஜிக்கப்பட்டவனும் முதலில் அபகாரத்தைச்செய்தவனுமாயிருப்பவனுடைய மனமானது நம்பிக்கையில்லாததாயிருக்கும். தன்செய்கையே வலிந்து பயப்படச்செய்யும். எவ்விடத்தில் முதலில்மர்யாதையும் பிறகு அவமர்யாதையுமிருக்குமோ அவ்விடத்தில் மர்யாதையையும் அவமர்யாதையையும்பெற்ற புத்தியுள்ள அந்தப்ராணி வாஸத்தைவிடவேண்டும். நான் உன்னுடையவீட்டில் துன்பப்படுத்தப்படாமல் நெடுங்காலம் வஸித்துக்கொண்டிருந்தேன். அதில் இந்தவைரம் உண்டாய்விட்டது; ஸுகமாயிரு; நான் போகிறேன்' என்றுசொல்லிற்று. ப்ரம்மதத்தன், 'பூஜனியே! எவன் செய்ததற்குப்ரதிசெய்கிறானோ அவன் அவ்விஷயத்தில் குற்றமுள்ளவனாகமாட்டான். அதனால் [2]கடனில்லாதவனாகிறான். இங்கே வஸித்துக்கொண்டிரு; போகவேண்டாம்' என்று சொன்னான். பூஜனி, 'முதலிற்செய்தவனுக்கும் ப்ரதிசெய்தவனுக்கும் ஸ்நேஹமானது திரும்பவும் சேராது. அந்த விஷயத்தைச்செய்தவனுடையமனமும் ப்ரதிசெய்தவனுடையமனமும் அறியும்' என்று சொல்லிற்று. ப்ரம்மதத்தன், 'செய்தவனுக்கும் ப்ரதிசெய்தவனுக்கும் திரும்பவும் ஸ்நேஹம்சேரும். வைரம் நிவிருத்திப்பதாகக் காணப்படுகிறது. திரும்பவும் பாபம்வராது' என்றுசொன்னான்.

பூஜனி, 'வைரமில்லை; போய்விட்டது. நான் நன்மொழிகூறப்பட்டவனாகிறேனென்று எண்ணி நம்பிக்கை அடையக்கூடாது. உலகம் நம்பிக்கையால் கட்டப்படுகிறது. அதைவிடக் காணாமல்போவது கூட க்ஷேமமாகும். பலத்தாலும் மிகக்கூர்மையான ஆயுதங்களாலுங்கூட எவர்களைஜயிக்கமுடியாதோ அவர்களும் நன்மொழியால் யானைகளால் யானைகள் அடக்கப்படுவதுபோல அடக்கப்படுவார்கள்' என்று சொல்லிற்று. ப்ரம்மதத்தன், 'நாயைக்கொன்றுதின்னும் சண்டாளனுக்கும் நாய்க்கும் ஒன்றுக்கொன்றுஸ்நேஹமுண்டாவதுபோல உயிருக்குஅபாயத்தைச்செய்யும் மனிதர்களுடனும் சேர்ந்துவஸிப்பதால்

---

[1] சாந்திபர்வம் 283 - ம்பக்கம்குறிப்பிற்காண்க.

[2] தன்கடனைமுடித்துக்கொண்டவன்.

ஸ்நேஹமுண்டாகும். ஒருவருக்கொருவர்வைரத்தைச்செய்துகொண்டவர்களுக்குச் சேர்ந்துவஸிப்பதால் குறைவடைந்து அந்தவைரமானது தாமரைஇலையிலுள்ள தண்ணீர்போல நிலைபெற்றிராது' என்று சொன்னான். பூஜனி, 'வைரமென்பது [1]ஸ்திரீயால்செய்யப்பட்டதும் வீடு முதலியபொருளால் செய்யப்பட்டதும் வாக்கால்செய்யப்பட்டதும் பிறவியால் ஏற்பட்டதும் குற்றத்தால்ஏற்பட்டதுமென்று ஐந்து காரணங்களால் ஏற்படுகிறதாகும். அதைப் பண்டிதர்கள் அறிகிறார்கள். அவ்வித வைரியானாலும் உபகாரஞ்செய்கிறவனை விசேஷமாக க்ஷத்திரியன்கொல்லக்கூடாது. வெளியாயிருப்பதோ மறைவாயிருப்பதோ குற்றத்தின்பலாபலத்தைத்தெரிந்துகொண்டு ஸ்நேஹிதனாயிருந்தாலும் வைரத்தைச்செய்தவனிடம் நம்பிக்கைவைக்கக்கூடாது. தீயானது கட்டைகளில் மறைந்திருப்பதுபோல வைரமானது மறைந்துகொண்டிருக்கும். அரசனே! கடலில்முழுகியிருக்கும் தீயைப்போல வைரமென்னுந்தீயானது பொருளாலும் கடுஞ்சொற்களாலும் நன்மொழியாலும் சாஸ்திரங்களாலும் அவிக்கப்படாது. அரசனே! வைரத்தீஉண்டானால் ஒன்றைக்கொளுத்தாமல் அவியாது. குற்றத்தாலுண்டாகுஞ்செய்கையும் இரண்டிலொன்றுக்கு நாசமின்றி அடங்காது. அதிலும் முதலில்விரோதத்தைச்செய்தவனுக்குப்பொருளாலும் கௌரவத்தாலும் பூஜித்தாலும் பொறுமையுண்டாகாது. நம்பிக்கையானது செய்கையாலும் பலாத்காரமாகவும் உண்டாகிறதில்லை. நான் உன்னிடத்திலும் நீ என்னிடத்திலும் ஒரு விதமான குற்றத்திலும் பயந்துகொண்டிருந்ததில்லை. இப்பொழுது நான் நம்பவில்லை' என்றுசொல்லிற்று.

ப்ரம்மதத்தன், 'காரியம் காலத்தால் செய்யப்படுகிறது. அவ்விதமே எல்லாச்செய்கைகளும் காலத்தாலேயே நடக்கின்றன. ஆகையால், யார் எவனுக்குக் குற்றஞ்செய்தவனாவான்? இறப்பு பிறப்பு இவ்விரண்டும் ஸரியாகவேநடக்கின்றன. மனிதன் காலத்தாலேயே உண்டுபண்ணப்படுகிறான்; காலத்தையே காரணமாகக்கொண்டு மரிக்கிறான். சிலர் ஒரேஸமயத்தில் கட்டப்படுகிறார்கள். அவ்விதமே மற்றவர்களும் தனித்தனியேகட்டப்படுகிறார்கள். நன்றாக உண்டானதீயானது விறகையெரிப்பதுபோலக் காலமானது பிராணி

[1] கிருஷ்ணனுக்கும் சிசுபாலனுக்கும் ஸ்திரீயினால் உண்டானது. பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் பொருள்களால் உண்டானது. த்ரோணருக்கும் த்ருபதனுக்கும் வாக்கால் உண்டானது. எலிபூனைமுதலியவைகளுக்குப் பிறப்பிலுண்டானது. பூஜனிக்கும்பிரம்மதத்தனுக்கும் குற்றத்தாலுண்டானது.

களை எரிக்கிறது. நம்மில் ஒவ்வொருவருக்குமுள்ள சுபத்தில் நானும் உண்மையானகாரணமல்லன்; நீயும் உண்மையானகாரணமே அல்லை. எப்பொழுதும் பிராணிகளுக்கு ஸுகத்தையும் துக்கத்தையும் காலம் உண்டுபண்ணுகிறது. இவ்விதம்தெரிந்துகொண்டு துன்பப்படுத்தப் படாமல் ஸ்நேஹத்துடன் இஷ்டம்போல இவ்விடத்திலிரு. உன்னால் செய்யப்பட்டது எதுவோ அதை நான் பொறுத்துக்கொண்டேன்; பூஜனி! நீயும் பொறுத்துக்கொள்' என்றுசொன்னான்.

பூஜனிசொல்லத்தொடங்கிற்று. 'காலமானது (யாவற்றிற்கும்) காரணமென்று உன் வசனப்படி இருந்தால் அப்பொழுது ஒருவனுக்கும் வைரம்உண்டாகாது. பந்துக்களாயிருப்பவர்கள் தம்பந்துவானவன்கொல்லப்பட்டால் ஏன்துன்பத்தை அடைகிறார்கள்? தேவர்களும் அஸுரர்களுமாகிய அனைவர்களும் ஒருவரையொருவர் எதற்காக அடித்தார்கள்? போவதும் ஸுகமும் துக்கமும் பிறப்பும் இறப்பும் காலத்தாலுண்டாகுமானால் எதற்காக வைத்தியர்கள் நோயாளிக்கு மருந்தைச்செய்யவிரும்புகிறார்கள்? (மனிதர்கள்) காலத்தால் கொல்லப்படுவார்களானால் மருந்துகளால்ப்ரயோஜனமென்ன? சோகத்தால் மூர்ச்சையை அடைந்த ஜனங்கள் மிகப்பெரிய பயனற்றவசனங்களை எதற்காகச்சொல்லுகிறார்கள்? காலம் உனக்குக்காரணமானால் தர்மமானது செய்தவர்களிடம் எவ்விதமிருக்கும்? என்னுடையகுழந்தையைக்கொன்ற உன்னுடையபுத்திரன் என்னால் துன்பப்படுத்தப் பட்டான். அரசனே! பிறகு நீ என்னைத் துன்பப்படுத்தவேண்டும். நான் புத்திரசோகத்தால் உன்பிள்ளையிடம் பாபத்தைச்செய்திருக்கிறேன். அப்படியே நீ என்னைக்கொல்லவேண்டும். உண்மையை என்னிடமிருந்துகேள். மனிதர்கள் புஜிக்கவேண்டியும் விளையாடவேண்டியும் பக்ஷிகளை விரும்புகிறார்கள். கொல்லுவதையும் கட்டுவதையும்விட வேறுமூன்றாவதானஸம்பந்தம் தக்கதில்லை. சிலபக்ஷிகள் கொல்லுவதும் கட்டுவதுமாகிய பயத்தால் விடுதலைபெறவேண்டிய உபாயத்தை (மோக்ஷமார்க்கத்தை) அடைந்திருக்கின்றன. வேதத்தை அறிந்தஜனங்கள் துக்கமானது பிறப்புஇறப்புக்களால் உண்டாகிறதென்றுசொல்லுகிறார்கள். எல்லோருக்கும் உயிரில் ஆசையுண்டு. எல்லோருக்கும் புத்திரர்களிடம் ஆசையுண்டு. எல்லோரும் துக்கத்திலிருந்துபயப்படுகிறார்கள். எல்லோருக்கும் ஸுகத்தைஅடைய விருப்பமுண்டு. ப்ரம்மதத்த! கிழத்தனமானது துக்கம். பொருளின்நாசம் துக்கம். வேண்டாதஇடத்தில்வஸிப்பது துக்கம். இஷ்டவஸ்துக்களைஇழப்பது துக்கம். அரசனே! வைரத்தாலுண்டுபண்

ண்ப்பட்டதும் ஸ்திரீகளாலுண்டுபண்ணப்பட்டதும் கூடப்பிறந்ததுமான துக்கமும்உண்டு. இறந்த [1]புத்திரனாலுண்டாகும்துக்கமானது எப்பொழுதும் ஜனங்களிடம் சுற்றிக்கொண்டிருக்கும். பிறர்களுக்குண்டான துக்கத்தில் (தமக்குத்) துக்கமில்லையென்று புத்தியில்லாத சிலர் சொல்லுகிறார்கள். எவன் துக்கத்தை அறியவில்லையோ அவன் கூட்டத்தில் இவ்விதஞ்சொல்லுவான். எவன் துக்கத்தால் துன்பப்பட்டுச் சோகமடைகிறானோ அவன் (இதைச்) சொல்ல எவ்விதம் உத்ஸாஹமுள்ளவனாவான். எல்லாத் துக்கரஸத்தையும்அறிந்தவன் தன் துக்கத்தில் எவ்விதமோ அவ்விதமே பிறர்துக்கத்திலும் இருப்பான். [2] பகைவர்களை அடக்கும்அரசனே! என்னால் உனக்குச் செய்யப்பட்டதையும் உன்னாலும் எனக்குச் செய்யப்பட்டதையும் பலநூறுவருஷங்களாலும் போக்கமுடியாது. நாமிருவரும் ஒருவருக்கொருவர் செய்துகொண்டது எதுவோ அதற்கு ஸந்திகிடையாது. புத்திரனை நினைத்துநினைத்து உனக்குவைரம் புதிதுபுதிதாகஉண்டாகும். நெருங்கியவைரத்தை அடைந்தபின் எவன் பிரியத்தைச்செய்யவிரும்புகிறானோ அவனுக்கு உடைந்தமண்பாத்திரத்தைப்போலச் சேர்க்கையுண்டாகாது. நம்பிக்கையானது ஸுகத்திற்குக் காரணமன்றென்பது தனக்குள்ள பயனைச்சொல்லும் சாஸ்திரங்களின்நிச்சயம். முன்காலத்தில் சுக்ராசாரியரும் ப்ரஹ்லாதரின்பொருட்டு இரண்டுகாதைகளைக்கூறினார்; அவற்றின்பொருளாவது:—"உண்மையோ பொய்யோ சத்துருவின்வசனத்தில் எவர்கள் நம்பிக்கைஅடைகிறார்களோ அவர்கள் காய்ந்தபுல்லுகளால் மறைந்து தெரியாமலிருக்கிற பள்ளத்திலுள்ள தேனைநம்பி இறங்கியவர்கள்போலத் துன்பத்தை அடைகிறார்கள். வைரங்கள் குலங்களில் பத்துயுகமானாலும் போகா. அந்தக்குலத்தில் ஒருபுருஷன்பிறந்தால் அவனுக்குச்சொல்லுகிறவர்களும் இருப்பார்கள்" என்பது. அரசர்கள் வைரங்களை அடக்கிக்கொண்டு முதலில் நன்மொழிகூறுவார்கள்; பிறகு நிறைந்தகுடத்தைக் கல்லில் உடைப்பதுபோல இவனைக்கொல்லுவார்கள். அரசனே! இவ்வுலகில் ஒருவனுக்குக் கெடுதியைச்செய்தபின் (அவனிடம்) எப்பொழுதும் நம்பிக்கைகூடாது. பிறர்களுக்கு அபகாரத்தைச்செய்தபின் நம்பினால் துக்கமடைவான்' என்றுசொல்லிற்று. பிரம்மதத்தன், 'நம்பிக்கையில்லாமல் பொருளைச்சேர்க்கமுடியாது; ஒன்றையும் செய்யவும்முடியாது. [3]எப்பொழுதும் ஒரேவிதமானபயமிருந்தால் செத்த

---

1 வேறுபாடம். 2 அதிகபாடமான ஒருச்லோகம்விடப்பட்டது.
3 வேறுபாடம்.

வனுக்கொப்பாயிருக்கவேண்டும்' என்றுசொல்ல, பூஜனி சொல்லத் தொடங்கிற்று.

'இவ்வுலகில் எவனுடையகால்கள் புண்ணுள்ளவைகளாயிருக்கின்றனவோ அவன் கால்களால்ஓடுவானாகில் மிக்காகைஷயுடன்ஓடுகிறவனானாலும் அந்தக்கால்கள் துன்பமடைகின்றனவாகும். எவன் துன்பமுள்ள கண்களால் காற்றைஎதிர்த்துப்பார்க்கிறானோ அவனுடையகண்களுக்குக் காற்றினாலுண்டாகுந்துன்பம் மிகுதியாகுமென்பது நிச்சயம். எவன் கெட்டவழியை அடைந்து தன்னுடையபலத்தைத்தெரிந்துகொள்ளாமல் அஜ்ஞானத்தால்செல்லுகிறானோ அவனுடையஉயிர் அதில்முடிவடையும். கிருஷிசெய்யும்எந்தமனிதன் மழையைஅறிந்துகொள்ளாமல் வயலைஉழுகிறானோ அவன் பௌருஷத்தை இழந்தவனாகி அதன்பயனையும் அடையமாட்டான். எந்தமனிதன் கசப்போ துவர்ப்போ மதுரமோ ருசியுள்ளதோ தனக்குஹிதமான ஆஹாரத்தை எப்பொழுதும்செய்கிறானோ அவன் மரணமின்றி ஜீவிக்கத்தக்கவனாவான். எந்தமனிதன் அஜ்ஞானத்தால் பத்தியமான ஆஹாரத்தைத்தள்ளிவிட்டு முடிவைத்தெரிந்துகொள்ளாமல் கெட்டபோஜனத்தைப்புஜிக்கிறானோ அவன்உயிர் அதில்முடிவடையும். பௌருஷமும் தெய்வமும் ஒன்றையொன்றுஅடுத்திருப்பவைகளாகும். அவைகளில் பௌருஷந்தான் பெரிதாகும். தைரியமில்லாதவர்கள் தெய்வத்தைக்கொண்டாடுகிறார்கள். கடுமையானதானாலும் மிருதுவானதானாலும் தனக்குஹிதமானமுயற்சியைச் செய்யவேண்டும். இயற்கையில் முயற்சியில்லாதவனாயிருப்பவன் ஒன்றுமில்லாதவனாய் எப்பொழுதும் துன்பங்களால் விழுங்கப்படுவான். ஆகையால், ஸந்தேஹப்படத்தக்கவிஷயத்திலும் பௌருஷத்தையேசெய்யவேண்டும். எல்லாப்பொருளையும்இழந்தாவது மனிதர்கள் தமக்குநன்மையைச் செய்துகொள்ளவேண்டும். கல்வி, பரிசுத்தி, ஸாமர்த்தியம், [1]பலம், சூரத்தன்மைஇவ்வைந்தையும் உடன்பிறந்தமித்திரர்களென்றுசொல்லுகிறார்கள். இவ்வுலகில் அவைகளால் வித்வான்கள் ஜீவிக்கிறார்கள். வீடும் தாம்ரமுதலியஉலோகமும் வயலும் மனைவியும் ஸ்நேஹிதர்களும் மனிதனால் ஸம்பாதிக்கப்படுகின்றனவென்று சொல்லுகிறார்கள். மனிதன் இவைகளை எல்லாவிடத்திலும் அடைவான். அறிவுள்ளவன் எல்லாவிடத்திலும் ஸந்தோஷமடைவான்; எல்லாவிடத்திலும் [2]ப்ரீதியுடனிருப்பான்; [3]சிறிதும்பயத்தைஉண்டுபண்ணமாட்

---

1 'வைராக்யம்'என்பதுபழையவுரை.

2 'விளங்குவான்'என்பதுவேறுபாடம்.

3 'ஒருவனும்அவனைப்பயப்படுத்தமாட்டான்'என்பதுவேறுபாடம்.

டான்; (அவனுக்குப்) பயத்தைஉண்டுபண்ணினாலும் பயத்தைஅடைய வும்மாட்டான். புத்தியுள்ளமனிதனுக்குச் சிறியதானபொருளும் எப்பொழுதும் வ்ருத்தியடையும். ஸாமர்த்தியத்தால்வேலைசெய்யாத வர்களின்செய்கையானது ஸாமர்த்தியமில்லாதகாரணத்தால் நின்று விடும். வீட்டிலுள்ள ஸ்நேஹத்தால்கட்டுப்பட்டவர்களும் அல்ப புத்தியுள்ளவர்களுமான மனிதர்களின்மாம்ஸங்களைக் கெட்டஸ்திரீ யானவள், பெண்நண்டை அதன்குஞ்சுகள் மாய்ப்பதுபோல நாச மடையச்செய்வாள். சிலமனிதர்கள் புத்தியின் வித்தியாஸத்தால் வீடென்றும்வயல்களென்றும் மித்திரர்களென்றும் தம்தேசமென்றும் இவ்விதம் கஷ்டப்படுகிறார்கள். கெட்டவழியிலிருந்தும் அவமான முள்ளஇடத்திலிருந்தும் துர்ப்பிக்ஷத்தால்பீடிக்கப்பட்டதன்தேசத் திலிருந்தும் வேறுஇடத்தில்வஸிக்கச்செல்லவேண்டும்; அல்லது எப் பொழுதும் மர்யாதைபெற்றுவஸிக்கவேண்டும். ஆகையால், நான் வேறிடத்திற்குப்போகிறேன். இவ்விடத்தில்வஸிக்க எனக்கு ஊக்க மில்லை. அரசனே! உன்புத்திரனிடத்திலும் பரிஹரிக்கமுடியாத இக்காரியத்தைச் செய்துவிட்டேன். கெட்டமனைவியையும் கெட்ட மகனையும் கெட்டஅரசனையும் கெட்டஸ்நேஹிதனையும் கெட்டஸம் பந்தத்தையும் கெட்டதேசத்தையும் தூரத்தில்விலக்கவேண்டும். கெட்டஸ்நேஹிதனிடத்தில் நம்பிக்கையிராது. கெட்டமனைவியிடம் ஸந்தோஷப்படக்காரணமேது? கெட்டராஜ்யத்தில் ஸுகமிராது. கெட்டதேசத்தில் ஜீவனமிராது. கெட்டமகனிடம் ப்ரியமிராது. கெட்ட ஸ்நேஹமானது நிலைபெற்றிராது. கெட்டஸம்பந்தத்தில் பொருளுக்கு நாசமுண்டாவதனால் அவமானமுண்டாகும். எவள் ப்ரியமாகப்பேசுகிறாளோ அவள் மனைவியாவாள். எவனிடத்தில் சுகமுண்டாகுமோ அவன் புத்திரனாவான். எவனிடத்தில் நம்பிக் கையிருக்குமோ அவன் மித்திரனாவான். எவ்விடத்தில்ஜீவனமி ருக்கிறதோ அது தேசமாகும். எவன் குடிகளைவருத்தவில்லையோ அவன் கடுமையானஆஜ்ஞையுள்ளஅரசனாவான். [1]தரித்திரர்களையும் எது மேன்மையாயிருக்கச்செய்யவிரும்புகிறதோ அது விவாஹத்தி லுண்டானஸம்பந்தமாகும். அரசன் குணமுள்ளவனும் தர்மத்தைச் செலுத்துகிறவனுமாயிருப்பானாகில் மனைவி, தேசம், மித்திரர்கள், புத்திரர்கள், ஸம்பந்திகள், பந்துக்கள்இவர்கள்யாவரும் ஸுகமாக இருப்பார்கள். தர்மமறியாதஅரசனுடைய தேசத்திலுள்ளப்ரஜைகள் [2] நிக்ரஹத்தையடைந்து நாசமடையும். அஜாக்ரதையின்றிரக்ஷித்து

---

1 வேறுபாடம். 2 'சிறைச்சாலையில்அடைப்பது' என்பதுபழையவுரை.

வரும் அரசன் அறம்பொருள்இன்பங்களுக்கு மூலமாவான். ஆறிலொருபாகம்வரியென்றபயனை எடுத்துக்கொண்டு உபயோகஞ்செய்துகொள்ளவேண்டும். எவன் நன்றாக ப்ரஜைகளைரக்ஷிக்கவில்லையோ அவன் அரசனென்றுபெயருள்ள திருடனாவான். எந்த அரசன் தானே அபயத்தையளித்தபின் பொருளிலுள்ளலோபத்தால் அதை உண்மையாகச்செய்யவில்லையோ அதர்மபுத்தியுள்ள அவன் எல்லாஉலகத்தினிடமிருந்தும் பாபத்தையடைந்து நாகமடைகிறான். அரசன் தான் அபயமளித்து அதைஉண்மையாகச்செய்வானாகில் தர்மப்படிப்ரஜைகளைப்பரிபாலிப்பவனாகி எல்லாஸுகத்தையும் அடைவான். 'அரசன் தகப்பனும் [1]தாயும் குருவும் [2]ரக்ஷகனும் அக்நியும் குபேரனும் யமனுமாகிறான்' என்று அவனுக்கு இவ்வேழுகுணங்களையும் மனு கூறினர். எவன் ப்ரஜைகளிடம் அன்புபாராட்டுகிறானோ அவன் உலகத்திற்குப் பிதாவாகிறான். அந்தஅரசனைப் பொய்யாகஉபசரித்துவரும் மனிதன் கீழ்ப்பிறப்புள்ளவனாகிறான். அரசன் தாய்போல நன்மையைச் சிந்தித்துத் துன்பப்படுகிறவனைரக்ஷிக்கிறான்; விரோதிகளை அக்நிபோலக் கொளுத்துகிறான்; நன்மைசெய்யாதவர்களை (யமன்போல) அடக்குகிறான்; வேண்டியவர்களிடம் பொருள்களை அளித்துக் குபேரன்போல இஷ்டத்தைக்கொடுக்கிறவனாகிறான்; தர்மத்தைஉபதேசிப்பதால் குருவும் ரக்ஷிப்பதால் ரக்ஷகனுமாகிறான். எந்தஅரசன் தன் குணங்களால் பட்டணத்திலுள்ளவர்களையும் தேசத்திலுள்ளவர்களையும் ஸந்தோஷப்படுத்துகிறானோ அவனுடைய ராஜ்யமானது குணங்களையும் தர்மங்களையும்பரிபாலிப்பதால் குறைவடையாது. எந்தஅரசன் பட்டணத்திலுள்ளவர்களும் தேசத்திலுள்ளவர்களும் செய்யும் பூஜையை நன்றாகப்பெற்றுக்கொள்ளுகிறானோ அந்தஅரசன் இவ்வுலகிலும் மேலுலகிலும் ஸுகத்தைக்காண்கிறான். எந்தஅரசனுடையப்ரஜைகள் வரியைச்சுமத்தித் துன்பப்படுத்தப்பட்டவர்களும் எப்பொழுதும் பயமுள்ளவர்களுமாய்த் துன்பங்களால்நாசமடைகிறார்களோ அந்த அரசன் அவமானத்தை அடைகிறான். எந்தஅரசனுடையகுடிகள் குளத்தில்தாமரைபோல வளர்ச்சியடைகிறார்களோ அனைவர்களுக்கும்ஸுகத்தை அளிக்கும் அந்தஅரசன் ஸுவர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். அரசனே! பலசாலியுடன் சண்டைசெய்வது ஒருபொழுதும் கொண்டாடப்படுகிறதில்லை. பலசாலியுடன்யுத்தஞ்செய்பவனுக்கு ராஜ்யமேது? ஸுகமேது?' என்றுசொல்லிற்று. ப்ரம்மதத்தனென்னும் அரசனுக்குஇவ்விதஞ்சொல்லிவிட்டு அந்தப்

---

[1], [2] வேறுபாடம்.

பக்ஷியானது அவனிடம்அனுமதிபெற்றுக்கொண்டு தனக்கிஷ்டமான திக்கைநோக்கிச் சென்றது. பாரதர்களில்மிகச்சிறந்தவனே! ப்ரம்மதத்தனுக்கும் பூஜனியென்னும்பக்ஷிக்கும் நடந்தஇந்தச்சம்பாஷணையானது உனக்கு என்னால் சொல்லப்பட்டது. வேறுஎதைக்கேட்க விரும்புகிறாய் ?" என்றுசொன்னார்.

---

நூற்றுநாற்பதாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், பாரத்வாஜர் சத்ருந்தபனென்னும் அரசனுக்குச் சொன்ன ஆபத்தர்மத்தைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பாரதகுலத்திலுதித்தபிதாமஹரே! யுகத்தின் குறைவால் தர்மம்குறைவடைந்து உலகமும் திருடர்களால்பீடிக்கப் படுகிறபொழுது எவ்விதமிருக்கவேண்டும்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"பாரத! ஸமயத்தில்தயையைவிட்டுக்கூட அரசன்எவ்விதமிருக்கவேண்டுமோ அவ்விதமான ஆபத்காலங்களுக்குரியநீதியை இப்பொழுது உனக்குச் சொல்லுகிறேன். இவ்விஷயத்திலும் சத்ருந்தபனென்னும்அரசனுக்கும் பாரத்வாஜருக்கும்நடந்த ஸம்பாஷணையான பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். ஸௌவீரதேசத்தில் மஹாரதனானசத்ருந்தபனென்னும் ஓர் அரசன் பாரத்வாஜரிடம்சென்று பொருள்களைப்பற்றியநிர்ணயத்தைக்குறித்துக் கேட்கத்தொடங்கினன். 'அடையப்படாதபொருளை அடையவிரும்புவது எவ்விதம்? அடையப்பட்டது எதனால் வ்ருத்தியடையும்? வ்ருத்தியானது எதனால்ரக்ஷிக்கப்படும்? ரக்ஷிக்கப்பட்டதை எவ்விதம் உபயோகப்படுத்தவேண்டும்' என்றுகேட்டான். பொருளைப்பற்றியநிர்ணயத்தைக் கேட்கப்பட்டவரும் புத்தியுள்ளவருமான பாரத்வாஜர் பொருளைநிர்ணயஞ்செய்துகொண்ட அவ்வரசன்பொருட்டு யுக்தியுள்ளதும் உத்தமமுமான இவ்வசனத்தைச் சொல்லத்தொடங்கினர்.

'(அரசன்) எப்பொழுதும் தண்டமெடுத்தவனும் எப்பொழுதும் பராக்ரமத்தை வெளியிடுகிறவனும் பிறருக்குஇடைவெளி கொடாதவனும் பிறர்களின்இடைவெளியைக்கண்டு அதைத்தொடர்ந்துசெல்லுகிறவனுமாயிருக்கவேண்டும். எப்பொழுதும் தண்டத்தையெடுத்த அரசனிடம் மனிதன் மிகவும்பயமடைவான். ஆகையால்,எல்லாப்ராணி

களையும் தண்டத்தாலேயே அடக்கவேண்டும். உண்மையைக்கண்ட பண்டிதர்கள் இவ்விதமே கூறுகிறார்கள். ஆகையால், அந்தநான்குகளில் தண்டம் முக்கியமென்று சொல்லப்படுகிறது. ராஜ்யத்தில் மூலம் அறுபட்டால் அதை அடுத்துப்பிழைக்கும்யாவரும் அடிக்கப்பட்டவர்களாவார்கள். பெரியமரத்தின் வேர் அறுபட்டால் கிளைகள் எவ்விதம் இருக்கக்கூடும்? பண்டிதனாயிருப்பவன் சத்துருபக்ஷத்தின்வேரையே முதலில்அறுக்கவேண்டும்; பிறகு ஸஹாயமாயிருப்பவர்களையும் அந்தப்பக்ஷமனைத்தையுமே அடித்துத்தள்ளவேண்டும்; ஆபத்துவருங்காலத்தில் நல்லஆலோசனையையும் நல்லபராக்ரமத்தையும் நல்லயுத்தத்தையும் நல்லஓட்டத்தையுஞ்செய்யவேண்டும்; ஆலோசிக்கக்கூடாது; வாக்கில்மட்டில்வணக்கமுள்ளவனும் மனத்தில் கத்திபோன்றவனுமாயிருக்கவேண்டும்; மெதுவானவசனத்தைமுன்னிட்டுப் பேசுகிறவனாகிக் காமக்ரோதங்களைவிலக்கவேண்டும்; [1]சத்துருவுடன்கூடி ராஜ்யத்தில் ஸந்தியைச்செய்துகொண்டபின்நம்பிக்கை அடையாமலிருக்கவேண்டும். ஸாமர்த்தியமுள்ளவன் காரியத்தைச்செய்துகொண்டு சீக்கிரம் அதிலிருந்து விலகவேண்டும்; சத்துருவையும் [2]மித்திரன்போலவேயிருந்துகொண்டு நன்மொழியைக்கூறியே ஸமாதானஞ்செய்துகொள்ளவேண்டும். வீட்டிலிருக்கும்பாம்பினிடம்போல அவனிடம் எப்பொழுதும்பயப்படவேண்டும்; எவனுடையபுத்தியை அவமதிப்பானோ அவனைச் சென்றகாரியத்தாலும் அறிவில்லாதவனை வருங்காரியத்தாலும் பண்டிதனை நிகழுங்காரியத்தாலும் ஸமாதானஞ்செய்யவேண்டும். ஸம்பத்தைவிரும்பும் மனிதன் அஞ்சலியும் சபதமும் நன்மொழிகூறுதலும் தலையால் காலில்வணங்குவதும் கண்ணீர்விடுத்தலுஞ் செய்யவேண்டும்; காரியத்தை அடையும்வரையில் சத்துருவைத் தோளால்தூக்கவேண்டும்; பிறகு மண்குடத்தைக் கல்லில்உடைப்பதுபோல இவனை ஸமயம்வந்ததும் உடைக்கவேண்டும்; அரசச்ரேஷ்டனே! ஒருமுகூர்த்தமானாலும் திந்துகமரத்திலெடுத்த கொள்ளிபோல ஜ்வலிக்கவேண்டும். மனிதன் உமியிலுள்ள தீயைப்போல ஜ்வாலையின்றி நெடுங்காலம் புகைந்துகொண்டிருக்கக்கூடாது. பலப்ரயோஜனங்களுள்ளமனிதன் நன்றிகெட்டவனிடம் பொருள்ஸம்பந்தத்தைச் செய்யக்கூடாது. அவன் காரியவிருப்பமுள்ளவனாயிருந்தால் அவனை அனுபவிக்கக்கூடும். காரியத்தைச்செய்துகொண்டவ

1 'சத்துருவுடன் சேர்ந்துசெய்யத்தகுந்தகாரியத்தில் அவனுடன்ஸந்தியைச்செய்து அவனிடம் நம்பிக்கையில்லாதவனாயிருக்கவேண்டும்' என்பது வேறுபாடம்.

2 வேறுபாடம் கொள்ளப்பட்டது.

ஞனல் அவமதிப்பான். ஆகையால், கார்யங்கள்யாவற்றையும் மிச்சமுள்ளனவாகவே செய்துவைக்கவேண்டும். [1]குயில், பன்றி, மேருமலை, ஒன்றுமில்லாதவீடு, [2]அரவம், அன்புள்ளநண்பன் இவர்களுக்குள்ள க்ஷேமவழிஎதுவோ அதைச்செய்துகொள்ளவேண்டும். விடாமுயற்சியுடன் எழுந்திருந்து சத்துருவின்வீட்டுக்குச் செல்லவேண்டும். அவனுக்கு க்ஷேமமில்லாமலிருந்தாலும் அவனுடையக்ஷேமத்தைக்கேட்கவேண்டும். சோம்பர்களும் தைரியமில்லாதவர்களும் அதிகௌரவங்கொண்டாடுகிறவர்களும் உலகத்தின்சொல்லிலிருந்து பயந்தவர்களும் விட்டுவிட்டுமுயற்சிப்பவர்களும் பொருள்களை அடையமாட்டார்கள். இவனுடைய இடைவெளியைப் பிறன்அறியாமலிருக்கவேண்டும். பிறனுடைய இடைவெளியையோவென்றால் இவன் அறியவேண்டும். ஆமைபோலத் தன் அங்கங்களைமறைத்துக்கொள்ளவேண்டும். தன்னுடையஇடைவெளியை ரக்ஷித்துக்கொள்ளவேண்டும். கொக்கைப்போல (ஒரேநினைப்பாய்) காரியங்களைச்சிந்திக்கவேண்டும். ஸிம்மத்தைப்போலப் (பயமின்றிப்) பராக்ரமத்தை வெளியிடவேண்டும். செந்நாயைப்போல (வேகமாக) நாசஞ்செய்யவேண்டும். அம்பைப்போல (திரும்பாமல்போய்) விழவேண்டும். குடி, சூது, பெண்டிர், வேட்டை, பாட்டு, வாத்யம்இவைகளை யுக்தியாக அனுபவிக்கவேண்டும். இவைகளில் ஆசையானது தோஷமுள்ளதாகும். வில்லைப் புல்லைப்போல்செய்யவேண்டும். மிருகம்படுத்திருப்பதுபோலப் படுத்திருக்கவேண்டும். குருடனாயிருக்கவேண்டியஸமயத்தில் குருடனாயிருக்கவேண்டும். செவிட்டுத்தனத்தையும் அடையவேண்டும். ஸாமர்த்தியமுள்ளவன் தேசகாலங்களைஅடைந்து பராக்ரமத்தைச்செலுத்தவேண்டும். தேசகாலங்களைமீறிச் செலுத்தியபராக்ரமமானது பயனற்றதாகுமன்றோ? காலாகாலத்தையும் பிறகு தன்னு

---

[1] குயிலானது தான்போஷிக்கவேண்டியவைகளை வேறொன்றைக்கொண்டு போஷிக்கச்செய்யும்; அதுபோலக் கிருஷி, வர்த்தகம், வழி, காடுகள் முதலியஇடங்களில் அரசன் தன்பொருள்களைப் பிறரைக்கொண்டு ரக்ஷிக்கச் செய்யவேண்டும். பன்றி புஜிக்கத்தக்கவைகளை வேருடன்புஜிக்கும்; அதுபோல அரசன் சத்துருக்களைவேருடன் அழிக்கவேண்டும். மேரு அசைவற்றதும் தாண்டத்தகாததுமாயிருக்கும்; அதுபோல அரசனிருக்கவேண்டும். ஒன்றுமில்லாதவீட்டிற்குப் பொருள்விரும்பவேண்டியதாயிருக்கும்; அதுபோல அரசன் பொருளைவிரும்புகிறவனாயிருக்கவேண்டும். அரவம் பழுதற்ற கோபமுள்ளதாயிருக்கும்; அதுபோல் அரசனிருக்கவேண்டும். அன்புள்ள நண்பன் தன்னைச்சேர்ந்தவர்களின் க்ஷேமத்தைவிரும்புவான்; அதுபோல அரசன் விரும்பவேண்டும்.

[2] இங்கு 'நடன்' என்கிறவேறுபாடத்தில் நடனைப்போல அரசன் பலவேஷமுள்ளவனாயிருக்கவேண்டுமென்பது கருத்து.

டையபலாபலத்தையும் நன்குநிச்சயஞ்செய்துகொண்டும் பிறனுடைய பலத்தையும் அறிந்துகொண்டும் அதற்குத்தக்கபடி தன்னைஉபயோகப்படுத்திக்கொள்ளவேண்டும். எந்தஅரசன் தண்டத்துடன்வரும் சத்துருவை அடக்கவில்லையோ அவன் [1]அச்வதரியென்னும் மிருகமானது கர்ப்பத்தைப்போல மிருத்யுவைமறைத்து வைத்துக்கொள்ளுகிறான். நன்றாகப்பூவுள்ளதாயிருந்து கனியில்லாததாயிருக்கவேண்டும். கனியுள்ளதாயிருந்து ஏறத்தகாததாயிருக்கவேண்டும். பழுக்காமல் பழுத்ததுபோலிருக்கவேண்டும். [2]ஒருவனுக்கும் உதிராமலிருக்கவேண்டும். ஸமயத்திற்குத்தக்க ஆசையை உண்டுபண்ணவேண்டும். அவ்வாசையையும் இடையூறுள்ளதாகச்செய்யவேண்டும். காரணத்துடன் இடையூற்றைச்சொல்லவேண்டும். காரணமும் யுக்தியுள்ளதாயிருக்கவேண்டும். பயம்வரும்வரையில் பயந்தவன்போலக் காரியங்களைச்செய்யவேண்டும். பயம்வந்துவிட்டாலோ அதைக்கண்டு பயமில்லாதவன்போல யுத்தஞ்செய்யவேண்டும். மனிதன் ஸாஹஸத்தை அடையாமல் க்ஷேமங்களைப்பார்க்கமாட்டான். ஸம்சயத்தையடைந்து திரும்பவும் ஜீவித்திருப்பானாகில் க்ஷேமங்களைப்பார்ப்பான். இனிவரும்பயத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும். வந்தபயத்தை விலக்கவேண்டும். [3]திரும்பவும் புத்திக்குறையால் சிறிதுவிலகாமலிருப்பதைப் பார்த்துக்கொள்ளவேண்டும். ஸமயத்திலுண்டாகிறஸுகத்தைவிலக்குவதும் வரப்போகிறஸுகத்தில் ஆசைப்படுவதும் புத்திமான்களின்நீதியே அன்று. எவன் சத்துருவுடன்கூட ஸந்தியைச்செய்துகொண்டுநம்பிக்கையுடன் ஸுகமாகத்தூங்குகிறானோ அவன்மரத்தின் நுனியில் உறங்கியவன்போல விழுந்தபின்விழித்துக்கொள்வான். மிருதுவானதோ குரூரமானதோ எவ்விதக்கர்மத்தாலாவது துன்பப்படுந்தன்னை மீட்டுக்கொள்ளவேண்டும்; (மீண்டு) ஸமர்த்தனாயிருந்து தர்மத்தைச்செய்யவேண்டும். எவர்கள் சத்துருக்களுக்குச்சத்துருக்களாயிருக்கிறார்களோ அவர்களனைவர்களையும்அனுஸரித்துக்கொள்ளவேண்டும். பிறர்களால்பூஜிக்கப்பட்ட தன்சாரர்களையும் தெரிந்துகொள்ளவேண்டும். தன்னுடையசாரனையும்பிறனுடைய சாரனையும் நன்றாகக்கவனித்துக்கொள்ளவேண்டும். பாஷண்டர்களும் தாபஸர்முத

---

[1] 'அச்வதரி' என்னும்மிருகத்தின்கர்ப்பமானது தாயின்வயிற்றைப்பிளந்துகொண்டு வெளியில்வருமென்று சொல்லுகிறார்கள்.

[2] அரசன் இப்படிப்பட்ட மரம்போலிருக்கவேண்டுமென்பது.

[3] 'மறுபடியும் வளர்ந்துவிடுமோவென்கிறபயத்தால் சிறிதுமிச்சமிருக்கிறதோவென்றுபார்க்கவேண்டும்' என்பதுவேறுபாடம். எப்பொழுதும் ஜாக்ரதையுள்ளவனாக இருக்கவேண்டுமென்பது கருத்து.

லியவர்களுமான சாரர்களைப் பிறராஜ்யத்தில் ப்ரவேசிக்கச்செய்ய வேண்டும். தோட்டங்களிலும் விளையாடுமிடங்களிலும் தண்ணீர்ச் சாலைகளிலும் சாவடிகளிலும் குடிக்குமிடத்திலும் ஜனங்கள்கூடு மிடங்களிலும் தீர்த்தங்களிலும் ஸபைகளிலும் தர்மத்தைக்கெடுப்ப வர்களும் பாபிகளும் உலகத்திற்குவிரோதிகளுமான திருடர்கள் வருவார்கள். அவர்களை அறிந்து அடக்கவேண்டும். திருட்டில்லாமலுஞ் செய்யவேண்டும். நம்பிக்கையில்லாதவனிடம் நம்பிக்கைகூடாது. நம்பிக்கையுள்ளவனிடத்திலும் அதிகநம்பிக்கைகூடாது. நம்பிக்கையால் பயமுண்டாகும். பரீக்ஷைசெய்யாமல் நம்பக்கூடாது. உண்மையானகாரணத்தால் பிறனுக்கு நம்பிக்கையுண்டாகும்படிசெய்வித்துப் பிறகு அவன் தன்னிலையிலிருந்து சிறிதுசலிக்கும்ஸமயத்தில் அவனை அடிக்கவேண்டும். சங்கைப்படத்தகாதவனிடமும் சங்கையிருக்கவேண்டும். சங்கைப்பட்டமனிதர்களிடம் எப்பொழுதும் சங்கையிருக்கவேண்டும். சங்கைப்படாமலிருக்கும் மனிதனிடமிருந்து உண்டாகும்பயமானது வேருடன் அறுத்துவிடும். ஜாக்ரதையாலும் மௌனத்தாலும் காஷாயவஸ்திரத்தாலும் ஜடைகளாலும் தோல்களாலும் பகையாளியை நம்பிக்கையுள்ளவனாகச்செய்தபின் செந்நாய் போல நாசஞ்செய்யவேண்டும். புத்திரனோ உடன்பிறந்தவனோ தகப்பனோ ஸ்நேஹிதனோ யாராயிருந்தாலும் பொருளுக்குக் கெடுதிசெய்யு மனிதர்களை ஸம்பத்தைவிரும்பியமனிதன் கொல்லவேண்டும். அஹங்காரமடைந்தவனும் செய்யத்தக்கதையும் செய்யத்தகாததையும் அறியாதவனும் கெட்டவழியில் சென்றவனுமாயிருக்குங் குருவுக்குக் கூடச் சிக்ஷை செய்யத்தக்கதாகும். எதிர்சென்றழைப்பதாலும் நமஸ்கரிப்பதாலும் சிறிதுகொடுப்பதாலும் பூஜித்துக் கூர்மையானமுகமுள்ள பறவையானது (மலர்களையும் கனிகளையும் நாசமாக்குவது) போல் (சத்துருக்களைக்) கொல்லுகிறவனாயிருக்கவேண்டும். மீன்பிடிப்பவன்போலப் பிறர்களின்உயிர்நிலையான அங்கங்களை அறுக்காமலும் கடுமையானகர்மத்தைச்செய்யாமலும் அடியாமலும் உத்தமமானஸம்பத்தை அடையமுடியாது. பிறவியால் சத்துருவென்பவனில்லை; மித்திரனென்பவனுமில்லை; கார்யங்களின்சேர்க்கையால் மித்திரர்களும் சத்துருக்களுமுண்டாகிறார்கள். சத்துருவாயிருப்பவன் தீனமாகப் பலபேசினாலும் அவனைவிடக்கூடாது. அவனிடம் துக்கத்தைச்செய்யக்கூடாது. முந்தி விரோதஞ்செய்தவனைக் கொல்லவேண்டும். எப்பொழுதும் அஸூயையில்லாமல் (ஜனங்களைச்) சேர்ப்பதிலும் அநுக்ரஹிப்பதிலும் முயற்சிசெய்யவேண்டும். நன்மையைவிரும்பும் (மனி

தன்) முயற்சியுடன் நிக்ரஹத்தையுஞ்செய்யவேண்டும். அடிக்கப்போகிறவன் பிரியத்தைப்பேசவேண்டும். அடித்தபின்னும் அதிகப்ரியத்தைப்பேசவேண்டும். வாளால்தலையை அறுத்துவிட்டும்சோகப்படவும் அழவும்வேண்டும். நன்மொழியாலும் ஸம்மானத்தாலும் பொறுமையாலும் (மனிதர்களை) அழைத்துக்கொள்ளவேண்டும். ஸம்பத்தை விரும்புகிறவன் இவ்விதம் [1]உலகத்தைஆராதிக்கவேண்டும். ப்ரயோஜனமின்றி வைரத்தைச்செய்துகொள்ளக்கூடாது. கைகளால் நதியைத் தாண்டக்கூடாது. பசுவின்கொம்பைத்தின்பது ப்ரயோஜனமற்றதும் உயிருக்குக்கேடுமாகும்; பற்களும்உடைந்துபோம்; ரஸமும் அடையப்படாது. அறம்பொருள்இன்பங்களில் (ஒன்றால்மற்றொன்றுக்கு ஏற்படத்தக்க) மூன்றுவிதமானபீடையும் அவ்விதமே மூன்றுவிதமான பயனுமுண்டு. அவ்விதப்பயனையும் பீடையையும்அறிந்துகொண்டு பீடையைவிலக்கிக்கொள்ளவேண்டும். கடனின்மிச்சமும்தீயின்மிச்சமும் சத்துருவின்மிச்சமும் திரும்பவும்திரும்பவும் வளர்ச்சியடையும். ஆகையால், (இவைகளில்) மிச்சமிருக்கும்படி செய்யக்கூடாது. கடனின்மிச்சங்களும் அலக்ஷியஞ்செய்யப்பட்டபகைகளும் மிகவளர்ச்சியடையும். உபேக்ஷிக்கப்படும்வ்யாதிகளும் கடுமையானகெடுதியை உண்டுபண்ணும். காரியத்தைத் திருத்தமாகச்செய்யவேண்டும். எப்பொழுதும் அஜாக்ரதையில்லாதவனாயிருக்கவேண்டும். நன்றாகஎடுக்கப்படாதமுள்ளும் வெகுகாலம் தீங்கைவிளைவிக்கும். மனிதர்களைக் கொல்லுவதாலும் மார்க்கங்களைக்கெடுப்பதாலும் [2]வீடுகளைநாசஞ்செய்வதாலும் சத்துருராஜ்யத்தைஅழிக்கவேண்டும். கழுகின்பார்வைக்கொப்பான நீண்டபார்வையுள்ளவனும் கொக்கைப்போல அசைவற்றஇருப்புள்ளவனும் நாய்போல ஜாக்ரதையானசெய்கையுள்ளவனும் ஸிம்மம்போலப்பராக்ரமமுள்ளவனும் பயமற்றவனும் காகம்போலப் பிறர்இங்கிதத்தைஅறிகிறவனும் பாம்புசெல்லுவதுபோலச் சத்துருவினிடத்தில் செல்லுகிறவனுமாயிருக்கவேண்டும். சூரனை அஞ்சலிசெய்வதாலும், பயமுள்ளவனைப் பேதப்படுத்துவதாலும், லோபியைப் பொருளைக்கொடுப்பதாலும், ஸமமாயிருப்பவனைஸரியான யுத்தத்தாலும் அடக்கவேண்டும். கூட்டத்தலைவர்கள் பேதப்படுத்துங்காலத்திலும் ஸ்நேஹிதர்கள் ப்ரியவார்த்தைபேசுங்காலத்திலும் அமாத்தியர்களைப் பேதப்படாமலும் ஒன்றுசேராமலுமிருக்கும்படி காத்துக்கொள்ளவேண்டும். மிருதுவாகவேயிருந்தால் அவமதிப்பார்கள். குரூரமாகவேயிருந்தால் பயமடைவார்கள். கடுமையாக

1, 2வேறுபாடம்.

விருக்கவேண்டியகாலத்தில் கடுமையாகஇருக்கவேண்டும். மிருது வாகவிருக்கவேண்டியஸமயத்தில் மிருதுவாகவிருக்கவேண்டும். மிருதுவாகவிருப்பவனை மிருதுவாகவிருந்தே வெல்லவேண்டும். மிருதுவாகவிருந்தே கடுமையாகவிருப்பவனையும் வெல்லவேண்டும். மிருதுவாகவிருப்பவனுக்குச் சாதிக்கத்தகாததொன்றுமில்லை. ஆகையால், மிருதுவாகவிருப்பவன், கடுமையாகவிருப்பவனைவிடச் சிறந்தவனாகிறான். ஆகையால், எவன் சிலஸமயத்தில் மிருதுவாகவும் சிலஸமயத்தில் குரூரனாகவுமிருக்கிறானோ அவன் காரியங்களைச்சாதிப்பான்; சத்துருவையும் அடக்கிவிடுவான். பண்டிதனோடு விரோதஞ்செய்துகொண்டவன், 'தூரத்திலிருக்கிறேன்' என்று சிந்தையில்லாமலிருக்கக்கூடாது. புத்தியுள்ளவனுடைய கைகள் நீண்டவைகளாயிருக்கும். துன்பப்படுத்தப்பட்ட பண்டிதன் அந்தக்கைகளால் துன்பஞ்செய்வான். எதன்கரையைக் கடக்கமுடியாதோ அதைத்தாண்டலாகாது. எதைப் பிறன் திரும்பக்கொண்டுபோவானோ அதைஎடுக்கக்கூடாது. எதன்வேரைப்பிடுங்கமுடியாதோ அதைக் கல்லக்கூடாது. எவன்தலையைக் கீழேதள்ளமுடியாதோ அவனை அடிக்கக்கூடாது. ஆபத்துக்காலத்தைக்கருதி இஃது இவ்விதஞ் சொல்லப்பட்டது. மனிதன் இதை இவ்விதஞ் செய்யாமலிருக்கவேண்டும். சத்ருவால்எதிர்க்கப்பட்டவனோ இதை எவ்விதம் சிந்தியாமலிருப்பான்? ஆகையால், உன்னுடையஹிதத்தை விரும்புகிற என்னால் இது சொல்லப்பட்டது' என்றுசொன்னார். ஹிதத்தைவிரும்பும் பிராம்மணரால் உள்ளபடி சொல்லப்பட்டவசனத்தைக் கேட்டு ஸௌவீரதேசத்தரசன் கஷ்டமில்லாதமனமுள்ளவனாகி அவர் வசனத்தை அவ்விதமேசெய்தான்; பந்துக்களுடன்கூடிவிளங்கும் ஸம்பத்தையும் அனுபவித்துக்கொண்டிருந்தான்" என்றுசொன்னார்.

நூற்றுநாற்பத்தோராவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



**(பீஷ்மர், ஆபத்காலத்தில் புஜிக்கத்தகாததைப்புஜித்தாவது ஆத்மாவை ரக்ஷித்துக்கொள்ளவேண்டுமென்பதையும் விச்வாமித்ரருக்கும் நாயின்மாம்ஸத்தைத்தின்னும் சண்டாளனுக்கும்நடந்த ஸம்வாதத்தையும் சொல்லியது.)**

யுதிஷ்டிரர், "பரதகுலத்திலுதித்தராஜரே! முக்யமானதர்மமானது எல்லா உலகங்களாலும் மீறப்பட்டுக் குறைவடைந்தும், அதர்மம்தர்மமாகச்செய்யப்பட்டும், தர்மமும் அதர்மமாகச்செய்யப்பட்டும்,

மர்யாதைகள் மிகவேற்றுமைப்பட்டும், உலகங்களின்உறுதி கலக்கமடைந்தும், உலகம் அரசர்களாலும் திருடர்களாலும் பீடிக்கப்பட்டும், எல்லாஆச்ரமங்களும் மயக்கமடைந்தும், கர்மங்கள் கெடுக்கப்பட்டும், காமத்தாலும் லோபத்தாலும் அவிவேகத்தாலும் பயமுண்டாவதைக்கண்டு நம்பிக்கையில்லாமல் யாவர்களும் எப்பொழுதும் பயந்துகொண்டும், எப்பொழுதும் ஒருவரையொருவர் அடித்துவஞ்சித்துக்கொண்டும், தேசங்கள் எரிக்கப்பட்டும், பிராம்மண்யம் மிகப்பீடிக்கப்பட்டும், மேகம் வருஷியாமலும், ஒருவருக்கொருவர் பேதமுண்டாகியும், பூமியிலுள்ளஜீவனம்யாவும் திருடர்களுக்குஅதீனமாகித் தாழ்ந்ததானகாலம்வந்திருக்கும்பொழுது தயையால் புத்திரர்களையும்பௌத்திரர்களையும் விடவிருப்பமில்லாதபிராம்மணன் எதனால் ஜீவிக்கவேண்டும்? பாரதரே! ஆபத்துள்ளஸமயத்தில் எவ்விதமிருக்கவேண்டும்? பிதாமஹரே! அதனை எனக்கு உபதேசிக்கவேண்டும். சத்துருக்களைத்தபிக்கச்செய்பவரே! உலகம் கலக்கமுள்ளதன்மையை அடைந்திருக்கும்பொழுது அரசன் எவ்விதமிருக்கவேண்டும்? தர்மத்திலிருந்தும் தனத்திலிருந்தும் எவ்விதம் குறைவடையாமலிருப்பான்?" என்றுகேட்டனர்.

பீஷ்மர், "மஹாபாஹுவே! [1]யோகமும் [2]க்ஷேமமும் நல்ல மழைகளும் ப்ரஜைகளிடமுள்ளவ்யாதிகளும் மரணமும் பயங்களும் அரசனைக்காரணமாகக்கொண்டவை. பரதர்களிற்சிறந்தவனே! கிருதமும் திரேதையும் த்வாபரமும் கலியும் அரசனைமூலமாகக்கொண்டவைகளென்பது என் அபிப்ராயம். இதிற்சந்தேகமில்லை. ப்ரஜைகளுக்குத் தீங்கையுண்டுபண்ணத்தக்க அவ்விதக்காலம்வருமாகில் அப்பொழுது ஞானத்தின்பலத்தைப்பிடித்துக்கொண்டுஜீவிக்கவேண்டியதாகும். இவ்விஷயத்திலும் ஒருபறைச்சேரியில் சண்டாளனுக்கும் விச்வாமித்திரருக்கும்நடந்த ஸம்பாஷணையான பழையஇதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். முன்காலத்தில் திரேதை த்வாபரம் இந்தயுகங்களின்ஸந்தியில் தெய்வக்குற்றத்தால் உலகத்தில் பன்னிரண்டுவருஷம் கோரமான [3]அனாவிருஷ்டி உண்டாயிற்று. திரேதாயுகம்முடிந்து த்வாபரயுகம்தொடங்கியஸமயத்தில் (த்ரேதாயுகத்தில்) மிகவளர்ச்சியடைந்த பிரஜைகளுக்கு இந்திரன் மழையைப்பெய்விக்கவில்லை. பிருஹஸ்பதியானவர் வக்ரமாகச்சென்றார். சந்திரன் வேறுவிதமாகத் திரும்பியமண்டலத்துடன் தக்ஷிணமார்க்கத்தில் சென்றான். இரவின்முடிவில் (ஆகாயத்தில்) ஒரு [4]கறுப்புமில்லை.

---

1 அடையப்படாததைஅடைவது. 2 அடையப்பட்டதை ரக்ஷிப்பது.
3 மழைபெய்யாமலிருப்பது. 4 பனியென்றும்பொருளுண்டு.

மேகக்கூட்டங்கள் எங்கிருக்கும்? ஆறுகளில் நீர்மிகக்குறைந்து அடியில்சிறிதுஓடிற்று. குளங்களும் ஆறுகளும் கிணறுகளும் மலையருவிகளும் [1]தெய்வத்தால்செய்யப்பட்ட குற்றத்தால் சோபையழிந்து காணப்படவுமில்லை. பூமியானது, காய்ந்தகுளங்களுள்ளதும் ஸபையும் தண்ணீர்ச்சாலையும் இல்லாததும் யாகமும் வேதாத்யயனமுமில்லாததும் வஷட்காரமென்னும்சப்தமில்லாததும் க்ருஷியும் பசுக்காத்தலும் அழிந்துபோனதும் கடைகளும் விற்றலுமில்லாமற்போனதும் முன்னுள்ள [2]ஆசாரங்கள் நீங்கியதும் பெரியஉத்ஸவங்கள் நாசமடைந்ததும் எலும்புகளும் சிறியஎலும்புகளும்இறைக்கப்பட்டதும் [3]ஆ! ஆ! என்று கதறும்மனிதர்களால் பயங்கரமும் விசேஷமாகப் பாழானபட்டணங்களும் எரிந்துபோனக்ராமங்களும்வீடுகளுமுள்ளதுமாயிற்று. அப்பொழுது பூமியானது திருடர்களால்சிலவிடத்திலும் சூரர்களால் சிலவிடத்திலும் துன்பமுள்ள அரசர்களால் சிலவிடத்திலும் ஒருவருக்கொருவர் பயத்தால்சிலவிடத்திலும் பெரும்பாலும் ஜனங்களின்றிச் சூன்யமாகவும் தேவாலயங்கள்போனதாகவும் கிழவர்களும் சிறுவர்களுமில்லாததாகவும் பசுக்களும் ஆடுகளும் செம்மறிஆடுகளும் எருமைகளுமற்றதாகவும் ஒன்றுலொன்றடிக்கப்பட்டதாகவும் கொல்லப்பட்டப்ராம்மணர்களுள்ளதாகவும் ரக்ஷிக்கும்ஜனங்கள் அடிபட்டுப்போனதாகவும் உத்ஸவமும் கூட்டமும் அழிந்துபோனதாகவும் பெரும்பாலும் பிணமானமனிதர்களுள்ளதாகவும் ஆயிற்று. யுதிஷ்டிர! தர்மமழிந்துபோனதும் பயங்கரமுமான அக்காலத்தில் பசியடைந்தமனிதர்கள் ஒருவரையொருவர் தின்கிறவர்களானார்கள். ரிஷிகள் நியமங்களையும் அக்னிகளையும் தேவதைகளையும் ஆச்ரமங்களையும்தள்ளிவிட்டு இங்குமங்கும் பலவிதமாக ஓடினார்கள். பிறகு பூஜ்யரும் புத்தியுள்ளவருமான விச்வாமித்ரரென்னும் மஹரிஷியானவர் பசியால்தொடரப்பட்டு இடமில்லாமல் நாலுபக்கத்திலும் ஓடத்தொடங்கினார். அக்னியை விட்டவரும் வீடுஇல்லாதவருமான அந்தவிச்வாமித்திரர், பிள்ளைகளையும் மனைவியையும் ஒருஜனக்கூட்டத்தில்விட்டுவிட்டுப் புஜிக்கத்தக்கதையும் புஜிக்கத்தகாததையும் ஸமமாகக்கொண்டு ஸஞ்சரித்து ஒருஸமயத்தில் ஓர் அரண்யத்தில் குரூரர்களும் பிராணிகளைக்கொல்லுகிறவர்களுமான சண்டாளர்களின்இடத்தை அடைந்தார். உடைந்த குடங்கள்சிதறியதும் [4]நாயின்மாம்ஸத்தால் அலங்கரிக்கப்பட்டதும்

---

1 வேறுபாடம். 2 'யூபக்கூட்டங்கள்குறைந்ததும்' என்பதுவேறுபாடம்.
3 'பெரியபிராணிகளின் சப்தங்களால்நிறைந்ததும்' என்பதுவேறுபாடம்.
4 'நாயின்தோல்களின் துண்டங்களுடன்கூடியதும்' என்பதுவேறுபாடம்.

பன்றி கழுதைகளின் ஒடிந்த எலும்புகளுள்ள ஓடுகளாலும் குடங்களா லும்நிறைந்ததும் பிணத்தின்வஸ்திரங்கள்போடப்பட்டதும் அதினிரு ந்துஎடுத்தமாலைகளை ஆபரணமாகக்கொண்டதும் பாம்புச்சட்டையின் மாலைகளால் அடையாளஞ்செய்யப்பட்ட குடிசையின்முகமுள்ளதும் கோழிகளின்சப்தங்களால்நிறைந்ததும் கழுதைகளின் த்வனியால்சப் திக்கப்பட்டதும் ஒருவருக்கொருவர் கடுமையானவார்த்தைகளுடன் கலகஞ்செய்து சப்திக்கும்ஜனங்களுடன்கூடியதும் கோட்டானென் னும்பறவைகளின்த்வனிகளாலும் தேவதைகளுள்ளவிடங்களாலும் சூழப்பட்டதும் இருப்புமணிகளை அலங்காரமாகக்கொண்டதும் நாய்க்கூட்டங்களால் சுற்றப்பட்டதுமான அந்தப்பறைச்சேரியில் ப்ர வேசித்துப் பசியின்வேகமுள்ள விச்வாமித்ரரென்னும் மஹரிஷியான வர் ஆகாரத்தைத்தேடுவதில் எண்ணங்கொண்டு பெரியமுயற்சியைச் செய்தார். அந்தச்சேரியில் பிச்சையெடுக்கப்போயும் அந்தவிச்வா மித்ரர் மாம்ஸத்தையும் அன்னத்தையும் கனிகிழங்குகளையும் மற்ற வற்றையும் சிறிதும் ஓரிடத்திலும்அடையவில்லை. விச்வாமித்ரரான வர், 'அந்தோ! நமக்குக்கஷ்டம்வந்துவிட்டது' என்றுநிச்சயஞ்செய்து கொண்டு பலக்குறைவால் அந்தப்பறைச்சேரியில் பூமியில்விழுந்தார். அரசர்களில் சிறந்தவனே! அந்தமுனிவர், 'எது நமக்குநல்லதாகும்? எவ்விதம் வீணானமரணமில்லாமலிருக்கும்?' என்றுசிந்தித்தார். அர சனே! அந்தமுனிவர் உடனேசண்டாளன்வீட்டில் ஆயுதத்தால் கொல்லப்பட்ட நாயின்மாம்ஸத்தைச்சேர்ந்த ஒருதடைவிழுந்திருப்ப தைக்கண்டார். அவர், 'இப்பொழுது உயிரைக்காப்பாற்றுவதற்கு எனக்கு வேறுஉபாயமில்லை. இப்பொழுது நான் களவுசெய்யவேண் டும். ஆபத்காலங்களில் உத்தமர்களிடத்திலும் ஸமமாயிருப்பவர்களி டத்திலும் தாழ்ந்தவர்களிடத்திலும் செய்யத்தக்கதாகவிதிக்கப்படுந் திருட்டைப் [1]பிராம்மணன் உயிரைக்காப்பாற்றவேண்டிச் செய்யலா மென்பது நிச்சயம். முதலில் தாழ்ந்தவனிடமிருந்து திருடவேண் டும். பிறகு ஸமமாயிருப்பவனிடமிருந்து கவரத், க்கதாகும். இவ் விரண்டும்நேராமலிருந்தால் தர்மமுள்ளவனைசிறந், மனிதனிடமிருந் தும் திருடிக்கொள்ளலாம். நான் பிராணிகளைக்கொல்லத்துணியுஞ் சண்டாளர்களின் இந்தமாம்ஸத்தை அபகரிக்கிறேன். பிரதிக்ரஹ தோஷத்தைவிடத் திருடுவதில் அதிகதோஷத்தை நான்பார்க்கவில்லை. (ஆகையால்) இந்தமாம்ஸத்தை அபகரிப்பேன்' என்று அப்பொழுது ஆலோசித்தார். பாரதனே! விச்வாமித்ரரென்னும் மஹாமுனிவர்

1 வேறுபாடம்.

இந்தப்புத்தியை அடைந்து எவ்விடத்தில்விழுந்தாரோ அவ்விடத்தில் நன்றாகஉறங்கினார். பூஜ்யரான அந்தவிச்வாமித்ரர் நடுநிசியானதைக் கண்டு பறைச்சேரிதூக்கமடைந்ததும் மெள்ளவெழுந்திருந்து குடிசையின்வாயிலில் புகுந்தார். அந்தச்சண்டாளன் தூங்கிக்கொண்டே பீளையால்மூடியகண்ணுள்ளவனும் வேறானஸ்வரமுள்ளவனும் கொடியவனும் பார்க்கவிரும்பத்தகாதவனுமாக, 'பறைச்சேரிதூங்குங்காலத்தில் எவன் தடியை அசைக்கிறவன்? விழித்துக்கொண்டிருக்கிறேன்; நான்தூங்கவேயில்லை; குரூரனான நீ இதோகொல்லப்படப்போகிறாய்' என்றுசொன்னான். அப்பொழுது விச்வாமித்ரர் அந்தத்திருட்டுச் செய்கையால் [1]லஜ்ஜையால் நிறைந்தமுகமுள்ளவரும் சீக்ரத்தில்பயந்துநடுங்கினவருமாகி அந்தச்சண்டாளனைநோக்கி, 'நீண்டஆயுளுள்ளவனே! நான் விச்வாமித்ரன். நான் பசியுடன்வந்தேன். நல்லபுத்தியுள்ளவனே! நீ நன்றாகத்தெரிந்துகொண்டவனானால் என்னைக்கொல்லாதே' என்று சொன்னார். ஆத்மஜ்ஞானமுள்ள மஹரிஷியினுடைய அந்தவசனத்தைக்கேட்டவுடன் சண்டாளனானவன் படுக்கையிலிருந்து பரபரப்புடன் அவரைநோக்கிச்சென்றான். அவன் கண்களிலிருந்து கண்ணீரைவிட்டு வெகுமானத்தால் அஞ்சலிசெய்து கௌசிகரைநோக்கி, 'ஓ! பிராம்மணரே! இரவில் நீரென்னசெய்யவிரும்புகிறீர்?' என்றுகேட்டான். விச்வாமித்திரர், நல்லவார்த்தைசொல்லிக்கொண்டு சண்டாளனைநோக்கிச் சொல்லத்தொடங்கினார். 'பசியுள்ளவனும் உள்ளடங்கியஉயிருள்ளவனுமானநான் நாயின் [2]துடையை அபகரிக்கிறேன்; பசியுள்ளவன் கெட்டகார்யத்தில் ப்ரவேசிப்பான். ஆகாரத்தைவிரும்பும்மனிதனுக்கு வெட்கமிராது. இவ்விஷயத்தில் பசியானது என்னைக்குற்றமுள்ளவனாகச்செய்கிறது; (ஆகையால்) நாயின்துடையைஅபகரிக்கிறேன்; என்னுடையஉயிர் நாசமடைகிறது; பசியால் என்னுடையபிரஜ்ஞை தவறுகிறது. பலங்குறைந்தவனும் பிரஜ்ஞைஇழந்தவனும் புஜிக்கத்தக்கது புஜிக்கத்தகாததென்னும் வேறுபாடற்றவனுமான நான் அதர்மத்தை அறிந்தவனானாலும் நாயின்துடையை அபகரிக்கிறேன். எப்பொழுது உங்கள்வீட்டில் நான்பிச்சையைப்பெறவில்லையோ அப்பொழுதுபாபத்தில் புத்தியுண்டாயிற்று. (ஆகையால்) நாயின்துடையை அபகரிக்கிறேன். தேவர்களின்முகமும் அவர்களுக்குமுந்திச்செல்லுகிறவரும் பரிசுத்த

---

1 வேறுபாடம்.

2 வால் என்றும்பொருளுண்டு. 'ஜங்கா' என்பதுபழையவுரை; அதற்கு, கெண்டைக்காலென்பதுபொருள்.

மாயிருப்பதைமட்டில்பொறுக்கிறவரும் பிரபுவுமான அக்நிபகவான் போல் பிராம்மணனானாலும் எல்லாவற்றையும் புஜிக்கத்தக்கவனாகிறேன்; என்னைத் தர்மப்படியிருப்பவனென்று தெரிந்துகொள்' என்றுசொன்னார். அந்தச்சண்டாளன் அந்தவிச்வாமித்ரரைநோக்கிச் சொல்லத்தொடங்கினான். 'மஹரிஷியே! என்சொல்லைக்கேளும்; கேட்டபின் தர்மம் எப்படிக்குறையாமலிருக்குமோ அதை அப்படிச் செய்யும்; பிரம்மரிஷியே! உமக்குள்ள தர்மத்தையுங்கேளும். நான் அதை உமக்குச் சொல்லுகிறேன். [1]மிருகங்களுள் நாய் அதமமென்று அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். அதிலும் அதன்சரீரத்தினுள் துடையோ இழிவானஇடமாயிருக்கிறது. மஹரிஷியே! இது நல்ல முயற்சியன்று; விசேஷமாகப் பக்ஷிக்கத்தகாததும் சண்டாளன் பொருளுமாயிருப்பதை அபகரிப்பது நிந்திக்கப்பட்டசெய்கையாகும். நீர் உயிரைக்காப்பாற்றுவதற்கு வேறு நல்லஉபாயத்தைப்பாரும்; பெரியமுனிவரே! நாயின்மாம்ஸத்தைவிரும்புவதால்உமது தவத்துக்கு நாசமுண்டாகும். [2]அறிவுள்ளவன் நல்லவழியிற்செல்லவேண்டும். தர்மத்திற்கு ஸங்கரத்தைச்செய்யக்கூடாது; தர்மத்தைநீர்விடக்கூடாது; ஏனெனில், நீர் தர்மமறிந்தவர்களுள் உத்தமராயிருக்கிறீர்' என்று சொன்னான். பரதர்களிற்சிறந்தஅரசனே! பிறகு இவ்விதம்சொல்லியதைக்கேட்டவரும் முனிவர்களில் பெரியவருமான விச்வாமித்ரர் பசியால் பீடிக்கப்பட்டுத் திரும்பவும் இவ்வசனத்தைச் சொல்லத்தொடங்கினார். 'நான் நெடுங்காலமாக ஆகாரமில்லாமல் அலைகிறேன். உயிரைக்காப்பாற்றுவதற்கு எனக்கு ஓர்உபாயமுமில்லை; துன்பப்படுகிறவன் எந்தவிசேஷத்தாலாவது எந்தக்கர்மத்தாலாவது தன்னைத் துன்பத்திலிருந்து விடுவித்துக்கொள்ள விரும்பவேண்டும்; (விடுபட்டு) ஸமர்த்தனாயிருப்பவன் தர்மத்தைச் செய்யவேண்டும்; இந்திரனுடையதர்மம் க்ஷத்திரியர்களுக்குரியதாகும். அக்னியினுடையதர்மம் பிராம்மணர்களுக்குரியதாகும். வேதமென்னும் அக்னியானது எனக்குப்பலம். பசியை அடக்கிக்கொள்ள வண்டிப் புஜிக்கப்போகிறேன்; எந்தஎந்தவிதம்செய்தேஜீவிக்கவேண்டுமோ அதை அதை அலக்ஷியஞ்செய்யாமல் செய்யவேண்டும்; ஜீவித்திருப்பது மரணத்தைவிட மிகநன்று. ஜீவித்திருப்பவன் தர்மத்தையடைவான்; அப்படிப்பட்டநான் உயிரைவிரும்பிப் பக்ஷிக்கத்தகாததையும் தெரிந்

1 'நரியைவிட' என்பது வேறுபாடம்.

2 'விதிக்கப்பட்ட தர்மத்தை அறிந்தவன் தர்மஸங்கரத்தைச் செய்யக் கூடாது' என்பது வேறுபாடம்.

தே பக்ஷிக்கவிரும்புகிறேன்; அதை நீஸம்மதிக்கவேண்டும். உயிரோடிருந்து தர்மத்தைச்செய்வேன்; ஸூர்யன்முதலியசுடர்கள் பெரிய இருட்டை விலக்குவதுபோலத் தவத்தாலும் வித்யைகளாலும் அசுபங்களை விலக்கிக்கொள்வேன்' என்றுசொன்னார். சண்டாளன், 'இந்த மாம்ஸத்தைத்தின்று இப்பொழுது நீர் உயிரைஅடையப்போகிறதில்லை; நீண்டஆயுளை அடையப்போகிறதில்லை; அமிர்தத்தைப் புஜித்ததுபோலத் திருப்தியையும் அடையப்போகிறதில்லை; வேறுபிச்சையை எடும்; நாயின்மாம்ஸத்தைத் தின்பதில் உமது மனம்செல்லவேண்டாம்; நாயானது ப்ராம்மணர்களுக்குத் தின்னத்தகாததன்றோ' என்றுசொன்னான். விச்வாமித்ரர், 'சண்டாள! துர்ப்பிக்ஷகாலத்தில் வேறுமாம்ஸம் கிடைக்குமென்று எனக்குத் தோன்றவில்லை; எனக்குப்பொருளுமில்லை; பசியால்துன்பமுள்ளவனும் கதியற்றவனும் ஆசையற்றவனுமானநான் நாயின்தொடையை ஆறுரஸமும்சேர்ந்ததைவிடப் பெரிதாகநினைக்கிறேன்' என்றுசொன்னார். சண்டாளன், 'ப்ராம்மக்ஷத்ரியவைசியர்களுக்கு ஐந்துநகங்களுள்ளவைகளான [1]சல்யகம், முள்ளம்பன்றி, உடும்பு, முயல், ஆமை இவ்வைந்துமட்டில் புஜிக்கத்தக்கவைகளாகும்; சாஸ்திரம் உமக்குப்பிரமாணமாகவிருந்தால் புஜிக்கத்தகாததில் மனத்தைவைக்காமலிரும்' என்றுசொன்னான். விச்வாமித்ரர், 'பசியைஅடைந்த அகஸ்தியர் வாதாபியென்றஅஸுரனைப் புஜித்தார்; பசியுள்ளவனும் துன்பத்தையடைந்தவனுமான நான் நாயின்தொடையைப் புஜிக்கப்போகிறேன்' என்றுசொன்னார். சண்டாளன், 'வேறுபிச்சையைஎடும்; நீர் இங்கு இவ்விதம்செய்யத்தக்கவர்அல்லர்; நிச்சயமாக இது செய்யத்தக்கதே அன்று; இஷ்டம்போல நாயின்தொடையைஎடுத்துக்கொள்ளும்' என்று சொன்னான். விச்வாமித்திரர், '(அகஸ்தியர்முதலிய) சிஷ்டர்களே தர்மத்திற்குக்காரணர்; அவர்களின்நடையைஅநுஸரித்துச் செல்லுகிறேன்; இந்தநாயின்தொடையைப் பரிசுத்தமான ஆகாரத்தைவிடமேலானதாகவும் புஜிக்கத்தக்கதாகவும் நினைக்கிறேன்' என்றுசொன்னார். சண்டாளன், 'அஸத்துக்களால்செய்யப்பட்டதுஎதுவோ அது ஸநாதனமானதர்மமன்று; இங்குஅகார்யம் செய்யத்தக்கதே [2]அன்று; கபடமாகப் பாபத்தைச்செய்யவேண்டாம்' என்றுசொன்னான். விச்வாமித்திரர், 'ரிஷியாயிருப்பவர் பாதகத்தையும் அவமதிக்கப்படுவதையும் செய்யத்தக்கவர்அல்லர்; நாயும் மானும் ஒப்பானவையென்றே நினைக்கிறேன்; ஆகையால், நாயின்தொடையைப் புஜிக்கப்போகி

---

1 ஒருவகைப்பன்றி.          2 வேறுபாடம்.

றேன்' என்றுசொன்னார். சண்டாளன், 'அந்த அகஸ்தியரிஷியானவர் ப்ராம்மணர்களைரக்ஷிக்கவேண்டிப் பிரார்த்திக்கப்பட்டவராய்ப் புஜிக்கத்தகாத அந்தஅஸுரன் மாம்ஸத்தைப் புஜித்தார்; ஆசையால் புஜிக்கவில்லை; அது தர்மந்தான். அதில்பாபமில்லை. எல்லாஉபாயங்களாலும் பெரியோர்கள் ரக்ஷிக்கத்தக்கவர்கள்அன்றோ' என்று சொன்னான். விச்வாமித்ரர், 'ப்ராம்மணனான என்னுடையஇந்தச் சரீரமானது மித்ரனாகவிருக்கிறது. உலகத்தில் (இஃது) எனக்கு ப்ரியமும் மிகவும் பூஜிக்கத்தக்கதுமாயிருக்கிறது. ஆகையால், நான் புஜிக்கவேண்டுமென்றஎண்ணத்துடன் இதை எடுக்கவிரும்புகிறேன். இவ்விதக்கொடிய காரியங்களுக்கு நான் பயப்படுகிறவனல்லேன்' என்றுசொன்னார். சண்டாளன், 'மனிதர்கள் ப்ரியமானஉயிரையும் விடுவார்கள்; புஜிக்கத்தகாதஒன்றிலும் புத்தியைச்செலுத்தமாட்டார்கள். அவர்கள் ஸ்வர்க்கத்தில் வஸிப்பதால் எல்லாக்காமங்களையும் அடைகிறார்களென்று தெரிந்துகொள்ளும். (அதற்காகப்) பசியையும் பொறுக்கிறார்கள்' என்றுசொன்னான். விச்வாமித்ரர், 'அந்த ஆசையானது மரித்தபின்னுள்ளஜன்மத்தில்புகழையுண்டாக்கத்தக்கதென்பது யுக்தந்தான். (ஜீவித்திருப்பவனுக்கு ஆகாரமில்லாவிட்டால்) கர்மங்களுக்கு நாசம்உண்டாகுமென்பதில் ஸந்தேகமில்லை. நானோ எப்பொழுதும் விரதமுள்ளவனும் புத்தியில்அடக்கமுள்ளவனுமாயிருக்கிறேன். (தர்மத்திற்கு) மூலமான சரீரத்தை ரக்ஷிக்கவேண்டும். (ஆகையால்) புஜிக்கத்தகாததைப் புஜிக்கப்போகிறேன். [1] ஞானஸ்வரூபமானஜீவனை விசாரிப்பவனிடம் (இதிலும்) புண்ணியமிருக்கிறதென்பதுவெளிப்படை. நான் ஆத்மஸ்வரூபத்தில் ஸந்தேகமுள்ளவனாயிருந்து இதைத்தின்றாலும், ஆத்மஸ்வரூபத்தின்விவேகமில்லாதவனிடம் நாயின்மாம்ஸத்தைப் பக்ஷிப்பதால் எவ்விதப்பாபமுண்டோ அவ்விதப்பாபமுள்ள உன்போன்றவனாகமாட்டேன்' என்று சொன்னார். சண்டாளன், 'இந்தத்துக்கத்தைமறைத்து விலக்கவேண்டுமென்று எனக்கு நிச்சயமாகத்தோன்றுகிறது. ஆகையால், நான், பிராம்மணராயிருந்து கெட்டகார்யத்தைச்செய்யும் உம்மை வெறுத்துப்பேசுகிறேன்' என்றுசொன்னான். விச்வாமித்ரர், 'தவளைகள் கத்திக்கொண்டிருந்தாலும் பசுக்கள் தண்ணீரைக்குடிக்கவே செய்யும். உனக்குத் தர்மத்தைச்சொல்வதற்கு அதிகாரமில்லை. தற்புகழ்ச்சி செய்துகொள்ளுகிறவனாயிருக்கவேண்டாம்' என்றுசொன்னார். சண்டாளன், 'ப்ராம்மணரே! ஸ்நேஹிதனாயிருந்து உம்மைப்

[1] வேறுபாடம்.

பற்றித் தூக்கிக்கிறேன். உம்மிடத்தில் எனக்குத் தயையுண்டாகிறது. ஆகையால், க்ஷேமமான இதைச் செய்யும். [1]லோபத்தில் மனத்தைச் செலுத்தவேண்டாம்' என்றுசொன்னான். விச்வாமித்ரர், 'நீ ஸ்நேகிதனாயிருந்து எனக்கு நன்மையைவிரும்புவாயாகில் என்னை ஆபத்திலிருந்து மீளச்செய். நான் தர்மப்படி ஆத்மாவை அறிவேன். இந்த நாயின் தொடையைக்கொடு' என்றுசொன்னார். சண்டாளன், 'உமக்கு இதைக்கொடுக்க எனக்குஉத்ஸாகமேயில்லை. என்னுடையஆகாரம் அபகரிக்கப்படுவதை உபேக்ஷைசெய்யவும் இஷ்டமில்லை. கொடுக்கும்நானும் பெற்றுக்கொள்ளும் ப்ராம்மணரானநீருமாகியஇரண்டு பேர்களும் நாயின்மலத்தால்பூசப்பட்டவர்களாவோம்' என்றுசொன்னான். விச்வாமித்ரர், 'இப்பொழுது நான் பாபமானஇக்கார்யத்தைச் செய்து ஜீவித்துக்கொண்டு மிகவும்பரிசுத்திசெய்யத்தக்க கார்யத்தைச்செய்வேன். பரிசுத்தமானசரீரமுள்ளவனாகவிருந்துகொண்டு தர்மத்தையே அடைவேன். இவைகளில் எதுபெரிதோ அதைச்சொல்' என்றுசொன்னார். சண்டாளன், 'தர்மகார்யத்திற்கு மனமேஸாக்ஷியாகும். இவைகளில் எது பாபமோ அதை நீரேஅறிவீர். எவன் நாயின் மாம்ஸத்தைப்புஜிக்கத்தகுமென்று விரும்புகிறானோ அவனுக்கு விலக்கத்தக்கதில்லையென்றுநினைக்கிறேன்' என்றுசொன்னான். விச்வாமித்ரர், '(அபக்ஷ்யத்தை) [2]எடுப்பதிலும்புஜிப்பதிலும் தோஷமிருக்கிறது. (ஆகிலும்) உயிருக்கபாயம்நேரும்பொழுது எப்பொழுதும் இந்தவிதிக்குவிலக்குஇருக்கிறது. இந்தவிஷயத்தில் புஜிக்கத்தகாததென்று கூறும்சாஸ்திரம் பெரிதன்று. இந்தவிஷயத்தில் ஹிம்ஸையும்இல்லை; பொய்யும்இல்லை; ஆனால், கொஞ்சம்நிந்தையுண்டு' என்றுசொன்னார். சண்டாளன், '(புஜிக்கத்தகாததைப்) புஜிக்கும்விஷயத்தில் உயிரை ரக்ஷிக்கவேண்டுமென்ற இந்த எண்ணம் உமக்குக் காரணமாகுமானால் உமக்கு வேதம்ப்ரமாணமாகாது. பெரியோர்களின்தர்மமும் பிரமாணமாகாது. ப்ராம்மணச்ரேஷ்டரே! அப்பொழுது, இந்தஸமயத்தில் இதுகுற்றமாகாததுபோல் புஜிக்கத்தக்கதிலும் புஜிக்கத்தகாததிலும் நான் தோஷத்தைக்காணேன்' என்றுசொன்னான். விச்வாமித்ரர், '(புஜிக்கத்தகாததைப்) புஜிப்பவனுக்கு (கொலையில்போல்) பாதகம்காணப்படுகிறதில்லை. ஸுரையைக்குடித்தால் பதிதனாகிறானென்று விதியிருக்கிறது. ஆகிலும், ஒருவரோடொருவர்சேர்ந்து செய்யப்படும் கெட்டகார்யங்கள்போலப் புஜிக்கத்தகாததைப்புஜிப்ப

---

1 'ஆசையால் பாபத்தைச்செய்யவேண்டாம்' என்பதுவேறுபாடம்.
2 வேறுபாடம்.

தும்) சிறிதுபற்றுதலுடன் முன்செய்தபுண்ணியத்தை நசிக்கச்செய்யும்' என்றுசொன்னார். [1] சண்டாளன், 'எவன் சண்டாளன்வீடென்ற கெட்டவிடத்திலிருந்து திருட்டென்னும்இழிதொழிலால் கொடுக்க விருப்பமில்லாத தாழ்ந்தமனிதனிடமிருந்து பேராசையுடன் நாயைப் பெற்றுக்கொள்ளுகிறானோ அவனே அதில்வருந்தண்டனையைப் பொறுத்துக்கொள்ளவேண்டும். அது, அறிவுள்ளவனும் நன்னடையுள்ளவனுமாயிருப்பவனைத் துன்பப்படுத்தும்' என்றுசொன்னான். அப்பொழுது சண்டாளன் இவ்விதம் விச்வாமித்ரரைப்பார்த்துச்சொல்லிவிட்டு ஓய்ந்தான். விச்வாமித்ரர் நிச்சயமானபுத்தியுள்ளவராய் நாயின் தொடையை அபகரித்துக்கொண்டார். பிறகுஜீவனத்தை விரும்பும் மஹரிஷியான அந்தவிச்வாமித்ரர், நாயின் அங்கத்தை எடுத்துக்கொண்டார். அந்தநாயின் அங்கத்தையெடுத்துக்கொண்டு, அந்தவிச்வாமித்ரர் வனத்தில் மனைவியுடன்கூடப் புஜிக்கவிரும்பினார். பிறகு, 'நான் முதலில் தக்ககாலத்தில் தேவர்களுக்குத்திருப்திசெய்வித்தபின் விதிப்படி நாயின் தொடையைப் புஜிப்பேன்' என்று அவருக்கு எண்ணமுண்டாயிற்று. உடனே முனிவர் வேதத்திற்சொல்லியவிதிப்படி அக்னியைக்கொண்டுவந்து, இந்திரனுக்கும் அக்னிக்குமுள்ளவிதிப்படி தாமே சருவைப் பாகம்செய்தார். பாரத! பிறகு விதியின்முறைப்படி வகைவகையாக இந்திரன்முதலியதேவர்களையழைத்துத் தேவர்களுக்கும் பித்ருக்களுக்குமுள்ள கர்மத்தைச்செய்யத் தொடங்கினார். அதேஸமயத்தில் அந்தஇந்திரன் விசேஷமாக மழைபெய்வித்தான். எல்லாப்பிராணிகளையும் பிழைக்கும்படிசெய்கிறவனாக (எல்லா) ஓஷதிகளையும் உண்டுபண்ணினான். பூஜ்யரானவிச்வாமித்ரரும் தவத்தால் பாபங்களையெரித்து நீண்டகாலத்தில் மிகஆச்சர்யமானஸித்தியைஅடைந்தார். ப்ராம்மணர்களுள்மிகச்சிறந்த அந்த விச்வாமித்ரர் அந்தக்கர்மத்தையுமுடித்து அந்தச்சருவையும் புஜியாமல் தேவர்களையும்பித்ருக்களையும் ஸந்தோஷப்படும்படி செய்வித்தார். இவ்விதம் துன்பத்திலிருக்கும்அறிவுள்ளவன் ஜீவிக்கவிருப்பமுள்ளவனால் சோகப்படாதபுத்தியுடன் உபாயங்களைச்சிந்துகொண்டு எல்லாஉபாயங்களாலும் துன்பமுள்ளதன்னை விடுவித்துக்கொள்ள வேண்டும். இந்தப்புத்தியை அடைந்து எப்பொழுதும் ஜீவிக்கவேண்டும். உயிரோடிருக்கும்மனிதன் புண்ணியத்தையும் க்ஷேமத்தையும்அடைவான். ஓ! கௌந்தேய! ஆகையால், அறிவுள்ளவன் தர்மாதர்மங்களின்நிச்சயத்திற்குத்தக்க புத்தியைஅடைந்து, இவ்வுலகில் உறுதியானபுத்தியுள்ளவனாக இருக்கவேண்டும்" என்றுசொன்னார்.

---

[1] இங்கு அதிகபாடமான இரண்டுச்லோகங்கள் விடப்பட்டன.

## நூற்றுநாற்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், அரசன் பிராம்மணர்களைத்தவிர மற்றவர்களைத், தண்டத்தால்பரிபாலிக்கவேண்டுமென்னும்விஷயத்தில் சுக்ராசாரியருடைய அபிப்பிராயத்தைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "இந்தக்கோரமானகாரியம் செய்யத்துணியப்பட்டதென்பது நம்பத்தகாததும் பொய்போன்றதுமாயிருக்கிறது. எதை இந்தமனிதன் விலக்கவேண்டுமோ அவ்விதமான ஒருவிலக்குத் திருடர்களுக்கிருக்கிறதா? நான் மோகமடைகிறேன்; வருத்தப்படுகிறேன். எனக்குத் தர்மம் உறுதியற்றதாகச் செய்யப்பட்டது. நன்றாகச்சிந்தித்தும் ஒருகாரணத்தாலும் நான் நிச்சயத்தையடையவில்லை" என்றுசொன்னார். பீஷ்மர், "உனக்குச்செய்த இந்தத்தர்மோபதேசமானது ஆகமத்திலிருந்தேகேட்டுச் செய்யப்பட்டதன்று. இது தேன்போலக் கவிகளால் சேர்த்துவைக்கப்பட்ட ஞானத்திரட்டு. இந்தப்புத்தியானது பலகிளைகளுள்ளதர்மத்துடன் எந்தஅறிவுகளில்ப்ரஸித்தியடையுமோ அவ்விதமானவெளியிலுள்ள அறிவுகளை அரசன் (குயில் பன்றி முதலிய) அந்தஅந்தப் பிராணிகளிடமிருந்து கற்றுக்கொள்ளவேண்டும். [1]ஓ! கௌரவ்ய! எப்பொழுதும்அறிவை உண்டுபண்ணத்தக்க தர்மமும் ஸாதுக்களின் ஆசாரமும் தெரிந்துகொள்ளத்தக்கனவாகும். ஆகையால், அந்தவிஷயத்தில் என்வசனத்தைக்கேள். அறிவிற்சிறந்தஅரசர்களன்றோ ஜயத்தைவிரும்புகிறவர்களாய்ச் [2]சஞ்சரிக்கிறார்கள். அரசன் தன்புத்தியால் அங்கங்கிருந்து தர்மத்தைக் குற்றமில்லாமல்தெரிந்துகொள்ளவேண்டும். அரசனுக்குரியதர்மம் ஒரேகிளையுள்ளதர்மத்துடன் விதிக்கப்படுகிறதன்று. முதலில் கற்குங்காலத்தில் சிக்ஷிக்கப்படாதஅறிவானது அறிவில்பலமில்லாதவனுக்குப் பிறகுஎங்கிருந்துவரும்? [3]இரண்டுவிதமானகாரியத்தின்ஸ்வபாவத்தையும் அறிந்துகொள்ளாதவன் இரண்டுவிதமாகவிருக்கும்வழியில் சந்தேகத்தையடையத்தக்கவனுவான். பாரத! முதலிலேயே இரண்டுவிதமான அறிவையும் [4]அறிந்துகொள்ளவேண்டும். [5]அறிவிற்சிறந்தவன் வருங்காலத்தில் செய்யவேண்டியதை முந்தி நிலைப்படுத்திக்கொண்டு (ஸமயம்போல்) வரியைஅதிகப்படுத்திக்கொ

---

1, 2 வேறுபாடம்.

3 ஒரேசெயலானது ஒருகாலத்தில் புண்யமும் ஒருகாலத்தில் பாபமும் ஆகுமென்பது.

4, 5 வேறுபாடம்.

ள்ளவேண்டும். உலகம் அவ்விதம் நடத்தப்படும்தர்மத்தை வெவ் வேறுவிதமாக அறியும். சிலர் உண்மையான ஞானமுள்ளவர்கள். மற்றவர்கள், பொய்யானஞானமுள்ளவர்கள். அஃது எந்தஎந்தவித மிருக்கிறதோ அவ்வவ்விதம்தெரிந்துகொண்டு நல்லஅறிவை எடுத் துக்கொள்ளவேண்டுமென்பது ஸாதுக்களின் கருத்து. தர்மத்திற்கு விரோதிகளாயிருப்பவர்கள் சாஸ்திரங்களைக் குறைத்துப்பேசுகிறார் கள். அவர்கள் ப்ரயோஜனமற்றவர்களாய் அந்தச்சாஸ்திரங்களின் [1] வேற்றுமையைவெளியிடுகிறார்கள். அரசனே! நான்குபுறத்திலிருந் தும் கல்வியையும் கீர்த்தியையும் காமத்தையும் அடுத்துப்பிழைக்க விருப்பமுள்ளவர்களும் மிக்கபாபிகளும் தர்மத்திற்குவிரோதிகளும் பக்வமில்லாதமனமுள்ளவர்களும் மூடர்களுமான அவர்கள் யாவர்க ளும் உண்மையை அறிகிறார்களில்லை. சாஸ்திரத்தில்தேர்ச்சியில்லாத வர்களும் எல்லாவிஷயத்திலும் யுக்தியில்நிலைபெறாதவர்களும் சாஸ் திரத்தில் குற்றத்தைக்காண்கிறவர்களுமாயிருக்கிறவர்களும், அவ்வி தம் [2] அர்த்தசாஸ்திரங்களாலுண்டாகும்அறிவானது நன்றாக [3] இருக்க வில்லையென்று சாஸ்திரங்களைக் குறைத்துப்பேசுகிறார்கள். வாக்கை அஸ்த்ரமாகவும் வாக்கை அம்பாகவுங்கொண்ட அவர்கள் கல்விகளின் பயனைக் கறந்துகொண்டவர்கள்போலப் பிறர்களின்வித்யைகளைநிந்தி த்துத் தம்வித்யையைப்புகழ்ந்துகொள்ளுகிறார்கள். பாரத! ராக்ஷஸர் கள்போன்ற அவர்களைவித்யாவர்த்தகர்களென்று அறிந்துகொள். கப டமாகச்செய்யப்படும் உன்னுடையவிஹிததர்மமெல்லாம் பரிஹஸிக் கப்படும். சப்தமொன்றால்மட்டிலும் அதுபோல்யுக்தியொன்றால்மட்டி லும் தர்மத்தைநிச்சயஞ்செய்யமுடியாதென்று எங்களுக்குக்கேள்வி. இதைப் பிருகஸ்பதியால் உபதேசிக்கப்பட்டஞானமென்று நேரில் இந்திரன்சொன்னான். காரணமின்றிச் சாஸ்திரத்தில் ஒருவசனமும் சொல்லப்படுகிறதேயில்லை (என்பர்சிலர்). [4] மற்றுஞ்சிலர் நல்லயுக்தி யுடன்கூடிய சாஸ்திரத்தாலும் (சிலவற்றை) நிச்சயஞ்செய்கிறார்க ளில்லை. இவ்வுலகில் முக்கியமான சிலஆசாரியர்கள் உலகநடைக் குக் காரணமாயிருப்பதைத் தர்மமென்று கூறுகிறார்கள். பண்டிதனா யிருப்பவன் ஸாதுக்களால் உபதேசிக்கப்படும்தர்மத்தைத் தானும் ஊஹித்துக்கொள்ளவேண்டும். [5] ஓ! பாரத! பொறாமையாலும் சாஸ் திரத்தில்அவிவேகத்தாலும் அறியாமையாலும் சொல்லவரும் பண் டிதனுடையசாஸ்திரம் ஸதஸில் தோன்றாததாகும். ஒருமனிதன் சாஸ்

---

1 ப்ராமாண்யமில்லாமை; அல்லது அதர்மமாயிருக்குந்தன்மை.

2, 3, 4, 5 வேறுபாடம்.

திரத்தை அனுஸரித்துவந்த யுக்தியுடன்கூடியவசனத்தால் புகழப்படு வான். மற்றவன், அறியாமையால் அறியாதவொன்றை அறிவிக்கக் காரணமாயிருப்பதுகொண்டு (எல்லா) வசனத்தையும் நல்லதென்று நினைப்பான். மற்றொருவன் இந்தச்சாஸ்திரம் [1]யுக்திக்குவிரோதமா யிருப்பதால் இதுபயனற்றதென்று அவிவேகத்தால் எண்ணுவான். (ஆகையால், சாஸ்திரத்திற்கும் யுக்திக்கும்ஒத்ததைத் தெரிந்துகொ ள்ளவேண்டுமென்று) முன்காலத்தில் சுக்ராசாரியர் அஸுரர்களைநோ க்கி ஸந்தேஹத்தை அறுக்கத்தக்கவிஷயத்தை உபதேசித்திருக்கிறார். இரண்டுவிஷயங்களையும்பற்றிநிற்கும் ஸந்தேகஞானமானது இல்லாத தற்கு ஒத்ததாகும். [2]ஆகையால், அதற்குக்காரணத்தை அறுத்து அதைத்தூரவிலக்கிக் கொள்ளத்தக்கவனாகிறாய். என்னுடையஇந்த வசனத்தை நீ ஒத்துக்கொள்ளாமலிருப்பாயாகில் அது [3]யுக்தமன்று. நீ உக்ரகர்மத்திற்காகவே படைக்கப்பட்டவனாகிறாய். அதை நீ பார்க்க வில்லை. [4]அப்பா! ஐச்வரியத்தைவிரும்பும் அரசக்கூட்டத்திற்காக அஃது எவ்விதம் விடுதலைப்பெறுமோ அவ்விதம் யுத்தஞ்செய்தஎன் னைக் கவனித்துப்பார். மற்றஉலகம் இந்தவிஷயத்தை ஸந்தோஷி யாது. [5]ஆடு குதிரை க்ஷத்திரியன்என்ற இவர்கள் பிரம்மதேவரால் ஸமமாகப் படைக்கப்பட்டனர். அதனால்தான் [6]எப்பொழுதும் பிரா ணிகளுக்குள்ள ஓர்உலகநடை பாலித்திபெறுகிறது. கொல்லத்தகாத வனைக்கொல்லுவதில் எந்தத்தோஷமோ அது கொல்லத்தக்கவனைக் கொல்லாதிருப்பதிலும் கூறப்படுகிறது. அதுதான் மர்யாதையாகும். அதை இவன்விலக்கிக்கொள்ளவேண்டும். ஆகையால், அரசன், கடு மையாகவிருந்து பிரஜைகளைத் தம்தர்மத்தில் நிலைக்கச்செய்யவேண் டும். அவ்விதமில்லாவிட்டால் செந்நாய்களைப்போல ஒருவரையொரு வர் தின்றுகொண்டு ஸஞ்சரிப்பார்கள். எந்தஅரசனுடையராஜ்யத் தில், காக்கைகள் ஜலத்திலிருந்து மீன்களையெடுப்பதுபோலத் திருடர் கூட்டங்கள் பிறர்பொருள்களைத் திருடுகின்றனவோ, அவனே க்ஷத்ரி யர்களுள் கெட்டவனாவான். அரசனே! நற்குலத்திற்பிறந்தவர்களும் வேதவித்யையுடன் கூடியவர்களுமாயிருப்பவர்களை மந்திரிகளாகச் செய்து தர்மப்படிப்ராஜைகளைரக்ஷித்துக்கொண்டு பூமியை ஆளு. எந்த அரசன் தன்தர்மமான ரக்ஷையைச்செய்யாமல் [7]அனியாயமாக வரி

---

1, 2, 3, 4 வேறுபாடம்.

5 'யாகத்தில்ஆடு அதன்க்ஷேமத்தைக் கருதியே கொல்லப்படுகிறது. அதுபோல க்ஷத்திரியனும் குதிரையும் யுத்தத்தில்செல்லுதல் தம்க்ஷேமத்திற் காகவே' என்பதுபழையஉரை. 6, 7 வேறுபாடம்.

யைப்பெற்றுக்கொள்ளுகிறானோ அந்தக்ஷத்ரியனே உபாயத்தின்விசே ஷங்களை அறியாதவனும் நபும்ஸகனுமாகிறான். இவ்வுலகில் குரூரமா கவேயிருப்பதும் அல்லது மிருதுவாகவேயிருப்பதும் தர்மப்படி கொண்டாடப்படுகிறதில்லை. இரண்டையும் மீறிச்செல்லாமலிருக்க வேண்டும். குரூரமாகவிருந்து பின்மிருதுவாகஇரு. க்ஷத்ரியர்களுக் குரிய இந்தத்தர்மமானது கஷ்டம். உன்னிடத்தில் எனக்கு ஸ்நேஹ மிருக்கிறது. குரூரமானதர்மத்தில் நீ ஸ்ருஷ்டிக்கப்பட்டவனாகிறாய். ஆகையால், ராஜ்யத்தை ஆண்டுகொண்டிரு. ராஜனே! நீ ஒருவ னிடத்திலும் கோபமில்லாதவனாய் இவ்விதமேசெய். பாரதர்களிற்சிற ந்தவனே! எப்பொழுதும் துஷ்டர்களை அடக்கவும் சிஷ்டர்களைரக்ஷிக் கவும்வேண்டும். இவ்விதம் ஆபத்காலங்களுக்குரியதர்மத்தைப் புத்தி மானானசுக்ராசாரியர் உபதேசித்தார்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "ஸாதுக்களில் மிகச்சிறந்த பிதாமஹரே! எந்தவிலக்கை மற்றொரு வன்தாண்டக்கூடாதோ அவ்விதமானவிலக்குவிதி இந்தத்தண்டனை யில்இருக்குமாகில் அதை உம்மிடம் கேட்டுக்கொள்ளுகிறேன். என க்குஉபதேசிக்கவேண்டும்" என்றார். பீஷ்மர், "கல்விகளில்பெரியோர் களும் தவமுள்ளவர்களும் சாஸ்திரமும் தர்மமும் நன்னடையும் பொருந்தியவர்களுமான பிராம்மணர்களையே ஸேவிக்கவேண்டும். இவர்களைஸேவிப்பது மிக்கஉத்தமமும்பரிசுத்தமுமாகும். [1]மஹாராஜ னே! பிராம்மணர்களிடம் எப்பொழுதும் (உனக்குப்) பணிவிடை யும் நன்மொழியுமிருக்கவேண்டும். அரசனே! ஏனெனில், கோப முள்ளபிராம்மணர்களால் காரியங்கள் பலவிதமாகச் செய்யப்பட்ட வைகளாகும். அவர்களின்பிரியத்தால் பெரியகீர்த்தியும் அப்பிரியத் தால் பெரியபயமுமுண்டாகும். ப்ரீதியுள்ளபிராம்மணர்கள் அமிர்தம் போலவும், கோபங்கொண்ட அவர்களே ஸர்ப்பங்கள்போலவுமாவார் கள்" என்றுசொன்னார்.

---

நூற்றுநாற்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி)



(பீஷ்மர், வேடனையும் புறவையும்பற்றியகதையைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "எல்லாச்சாஸ்திரங்களிலும் ஸமர்த்தரும் பிராஜ் ஞர்களில்பெரியவருமான பிதாமஹரே! சரணமடைந்தவனைரக்ஷிப்ப

---

1 'தேவர்களிடத்தில் நீ எவ்விதநடக்கையுள்ளவனாயிருக்கிறாயோ அவ்வித நடக்கையுள்ளவனாகப் பிராம்மணர்களிடத்திலும் எப்பொழுதுமிருக்கவேண் டும்' என்பது வேறுபாடம்.

வனுக்கு எதுதர்மமென்பதை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"மஹாராஜனே! சரணமடைந்தவனைரக்ஷிப்பதில் பெரியதர்மமுண்டு. பாரதர்களில் மிகச்சிறந்தவனே! இந்தக்கேள்வியை நீயும் கேட்கத்தக்கவன். அரசனே! மஹாத்மாக்களான சிபிமுதலிய அரசர்கள் சரணமடைந்தவனைரக்ஷித்து உத்தமமான நல்லஸித்தியை அடைந்தார்கள். சரணமடைந்தசத்ருவான வேடனவன் புறுவினால் நியாயப்படி பூஜிக்கப்பட்டு அதன்மாம்ஸங்களால் [1]நிமந்திரணம் செய்விக்கப்பட்டானென்று கேள்வி" என்றுசொன்னர். யுதிஷ்டிரர், "பாரதரே! முன்காலத்தில் சரணமடைந்தசத்துருவான வேடன் புறுவினால் எப்படி அதன்மாம்ஸத்தைப்புஜிக்கும்படி செய்யப்பட்டான்? அந்தப்புறுவானது என்னகதியை அடைந்தது?" என்றுகேட்டார். பீஷ்மர், "அரசனே! சுக்ராசாரியரால் முசுகுந்தராஜனுக்குச் சொல்லப்பட்டதும் எல்லாப்பாபங்களையும் நாசஞ்செய்வதுமான திவ்யகதையைக்கேள். புருஷர்களிற்சிறந்த பார்த்தனே! முன்காலத்தில் முசுகுந்தராஜன் வணக்கமுள்ளவனாகி இவ்விஷயத்தைப்பற்றிச் சுக்ராசாரியரிடம் ப்ரச்னஞ்செய்தான். அரசனே! சுக்ராசார்யர், கேட்க விருப்பமுள்ள அவ்வரசன்பொருட்டுப் புறு ஸித்திபெற்றதென்பதைக்கூறும் இக்கதையைச் சொல்லத்தொடங்கினர். "புஜபலமுள்ள அரசனே! சொல்லுகிறஎன்னிடமிருந்து தர்மத்தின்நிச்சயத்தையுடையதும் அர்த்தகாமங்களையுடையதுமான கதையைக் கவனமாகக்கேள். அரசனே! கெட்டநடக்கையுள்ளவனும் காலனைப்போன்றவனும் பயங்கரனும் அண்டங்காக்கைபோலக் கறுத்த அங்கமுள்ளவனும் தயையில்லாதவனும் பாபங்களில்களவுள்ளவனும் [2]நீண்ட முழங்காலுள்ளவனும் சிறியபாதமுள்ளவனும் பெரியமுகமுள்ளவனும் பெரியமோவாய்க்கட்டையுள்ளவனுமான ஒரு பறவைபிடிக்கும் வேடன் பூமியில்ஸஞ்சரித்துக்கொண்டிருந்தான். அவனுக்கு ஸ்நேஹிதன் ஒருவனுமில்லை; ஸம்பந்தியுமில்லை; உறவினர்களுமில்லை. அந்தக்குரூரகர்மத்தால் அவன் பந்துக்களால் விலக்கப்பட்டனன். பாபமானநடையுள்ளமனிதனை அறிவுள்ளவர்கள் தூரத்தில் விலக்கவேண்டும். எவன் தன்னையே நம்புகிறதில்லையோ அவன் மற்றவனுக்கு எவ்விதம் ஹிதமாகயிருப்பான். குரூரர்களும் கெட்டபுத்தியுள்ளவர்களும் பிராணிகளின் உயிரைக்கவர்கிறவர்களுமாயிருக்கிற மனிதர்கள் பாம்புகள்போலவே பிராணிகளுக்குப் பயப்படத்தக்கவர்களாவார்கள்.

---

1 போஜனத்திற்குவரிப்பது. 2 வேறுபாடம்.

அந்தவேடன் வலையையெடுத்துக்கொண்டு ஆரண்யத்திலுள்ள பக்ஷிகளைக்கொன்று அவைகளை விலைசெய்துகொண்டிருந்தான். அரசனே! இவ்விதமானநடையையுடைய கெட்டபுத்தியுள்ள அவ்வேடனுக்கு நெடுங்காலஞ்சென்றது. அவன் அதர்மத்தை அறிந்துகொள்ளவுமில்லை. மனைவியுடன்கூடினவனும்எப்பொழுதும்க்ரீடிப்பவனும் தெய்வமென்னும்காரணத்தால்மூடனுமான அந்தவேடனுக்கு வேறுஜீவனம் விருப்பமாகஇருக்கவில்லை. பிறகு, ஒருஸமயத்தில் அவன் காட்டிலிருக்கும்பொழுது அந்தமரங்களைக் கீழேதள்ளுவதுபோன்றதும் மிகப்பெரிதுமான சுழல்காற்று நாற்புறத்திலுமுண்டாயிற்று. ஆகாயமானது ஒருமுகூர்த்தத்தில் கப்பல்கூட்டத்தால்நிறைந்தகடல்போல மேகங்களால்நிறைந்ததும் மின்னல்கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்டதுமாயிற்று. ஜலங்களின்தாரைக்கூட்டத்தால் [1]ப்ரவேசிக்கத்தொடங்கியஇந்திரன் ஜலத்தால் க்ஷணத்தில் பூமியைநிரம்பச்செய்தான். பிறகு, உலகம் மழையால்கஷ்டப்படும்பொழுது குளிரால்துன்பப்பட்டவனும் ப்ரஜ்ஞைதவறினவனும் துன்பமுள்ளமனத்துடன் அவ்வாரண்யமுழுமையும் சுற்றுகிறவனும் பக்ஷியைக்கொல்லுபவனுமாகிய அவன் பள்ளத்தையும் மேட்டையும் அறியவேயில்லை. அந்தஆரண்யத்தின்வழியானது ஜலத்தின்ப்ரவாகத்தால் நிறைந்ததாயிற்று. பக்ஷிகள் மழையின்வேகத்தால்அடிக்கப்பட்டு மரத்தில்மறைந்துகொண்டிருந்தன. வனத்தில்வஸிக்கும்மான்களும் சிங்கங்களும் பன்றிகளும் அந்தஆரண்யத்திலிருக்கும் மற்றப்பக்ஷிகளும் பெரியகாற்றினாலும் மழையினாலும் பயமடையச்செய்யப்பட்டுப் பயத்தால் துன்பப்பட்டவைகளும் பசியால்பீடிக்கப்பட்டவைகளுமாகிச் சோர்வடைந்து வனத்தில்சுற்றின. அந்தவேடனோ குளிரால்அலைக்கப்பட்ட அங்கங்களுடன் நில்லாமல் சென்றுகொண்டேயிருந்தான். குளிரால்துன்பமடைந்து பூமியில் [illegible]ருக்கும் ஒருபெண்புறாவைக் கண்டான். துன்பமுள்ளவனாயிருந்தும் பாபபுத்தியுள்ள அவ்வேடன், கண்டதும் அந்தப்பெண்புறாவைத் தன்கூட்டில்எடுத்துப் போட்டுக்கொண்டான். தான்துக்கத்தால் பீடிக்கப்பட்டவனாயிருந்[illegible] பிறரிடத்தில் துக்கத்தையேசெய்தான். பாபபுத்தியுள்ள அவன் பாபத்தைச்செய்யும் ஸ்வபாவமுள்ளவனானதால் பாபத்தையேசெ[illegible] அவன், மரக்கூட்டங்களுள் மேகம்போலக்கறுத்ததும் நி[illegible] இடத்தையும் கனிகளையும்விரும்பும் பறவைக்கூட்டங்களால் [illegible]படுவதுமான ஒரு பெரியமர[illegible] கண்டான். அம்மாமான[illegible]க்புருஷனைப்

---

1 வேறுபாடம்.

போலப் பிறரின்உபகாரத்தின்பொருட்டு ப்ரம்மதேவரால் உண்டுபண்ணப்பட்டது. பிறகு, ஆகாயமானது மலர்ந்த ஆம்பல்புஷ்பங்களுடன் கூடிய ஜலமுள்ள பெரியகுளம்போல க்ஷணத்திலேயே சுத்தமான நக்ஷத்திரங்களுள்ளதாயிற்று. புஷ்பங்கள்போன்றஉருவமுள்ள நக்ஷத்திரங்களுடன்கூடிய ஆகாயமானது மிகவும் அழுக்கற்றதாயிற்று. மேகங்களால்விடப்பட்ட ஆகாயத்தைக்கண்டபின் குளிரால்துன்பப் படுகிறவனும் மிகக்கெட்டபுத்தியுள்ளவனுமானவேடன் திக்குக்களையும் ஸமயத்தையும் கவனித்துப்பார்த்தான். பிரபுவே! [1]அவ்விடத்திலிருந்து கிராமமிருக்குமிடம் தூரமுள்ளதென்று அவ்விரவுமுழுமையும் அந்தமரத்தில் வஸிக்கவேண்டுமென்ற புத்தியுள்ளவனானான். பாரத! பிறகு அஞ்சலியுடன் நமஸ்காரஞ்செய்து அந்தப்பெரியமரத்தைநோக்கி, 'இதிலுள்ளதெய்வங்களைச் சரணமடைகிறேன்' என்ற வசனத்தைச்சொன்னான். பிறகு, பக்ஷிகளைக்கொல்லும் அவ்வேடன் பெரியதுக்கத்துடன் பூமியில் இலைகளைப்பரப்பிக் கல்லில்தலையைவைத்துக்கொண்டு உறங்கத்தொடங்கினான்.

---

## நூற்றுநாற்பத்துநான்காவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(வேடனையும் புறவையும்பற்றிய கதைத்தொடர்ச்சி.)

அரசனே! பிறகு, அந்தமரத்தின்கிளையில் விசித்ரமானமயிருள்ள ஒருபுறுவானது இனத்துடன்கூட நெடுங்காலமாக வஸித்துக்கொண்டிருந்தது. இரைதேடவேண்டிக் காலையில்சென்ற அதன் பெட்டையானது வரவில்லை. இரவுவந்ததைக்கண்டு அந்தப்பக்ஷியானது வருத்தமடைந்தது. 'பெரியகாற்றும் மழையுமாயிருந்ததே; என்ப்ரியைவரவில்லையே; இன்னும் அவள் திரும்பாமலிருப்பதற்கு என்னகாரணமிருக்குமோ; கானகத்திற்சென்ற என் அன்புள்ளமனைவிக்கு க்ஷேமமிருக்குமோ; அவளில்லாத இந்தஎனதுவீடு இப்பொழுது சூன்யமாயிருக்கிறதே; கிருஹஸ்தனாயிருப்பவனுடையவீடானது நான்குபுறத்திலும் புத்ரர்களாலும் பௌத்ரர்களாலும் மருமக்களாலும் வேலைக்காரர்களாலும் நிறைந்திருந்தாலும் பாரியையில்லாமலிருந்தால் சூன்யமாகவேயிருக்கும். (அறிந்தவர்கள்) வீட்டை வீடெ

---

[1] 'என்வீடு இவ்விடமிருந்து தூரத்திலிருக்கிறது என்றெண்ணி' என்பது வேறுபாடம்.

ன்றுசொல்லவில்லை. வீட்டிற்குடையவளான மனைவியே வீடென்று சொல்லப்படுகிறாள். மனையாளில்லாதவீடானது அரண்யத்திற்கொப்பானதாகச் சொல்லப்படுகிறது. சிவந்தகடைக்கண்களுள்ளவளும் பலவர்ணமான அங்கங்களுள்ளவளும் இனிமையானகுரலுள்ளவளுமான அந்த என்னுடையமனைவி இப்பொழுது வராவிட்டால் எனக்கு உயிரால் பயனில்லை. நல்லவ்ரதமுள்ள அவள், நான்உண்ணாவிட்டால் உண்பதில்லை; நான் ஸ்நானஞ்செய்யாவிட்டால் ஸ்நானஞ்செய்கிறதில்லை; நான்நில்லாவிட்டால் நிற்பதில்லை. நான் படுத்தபின் அவள் படுப்பாள். நான்ஸந்தோஷமுள்ளவனாயிருந்தால் அவள்ஸந்தோஷமுள்ளவளாயிருப்பாள். நான் துக்கமுள்ளவனானால், அவள் துக்கமுள்ளவளாயிருப்பாள்; நான் வெளியிற்செல்லும்பொழுது வாடியமுகமுள்ளவளாயிருப்பாள்; நான் கோபங்கொண்டால், ப்ரியமாகப்பேசுவாள். பதிவ்ரதைகளின்தர்மமுள்ளவளும் ஸாதுவுமான அவள் உயிரினும் மிகமேலானவள். எந்தமனிதனுக்கு அவ்விதமானபார்யையிருக்கிறாளோ அந்தமனிதன் உலகில் பாக்யம்பெற்றவன். ச்ரமமுள்ளவனும் பசியால் துன்பமுள்ளவனுமான என்னைத் தவமும் ஆசையும் உறுதியும் பக்தியும் ஸ்நேஹமும் கீர்த்தியுமுள்ளவளான அவளன்றோ அறிவாள். மரத்தினடியிலும் எவனுக்குப் பாரியையிருக்கிறாளோ அவனுக்கு அதுவீடாகும். பாரியையில்லாதது மாடியாயிருந்தாலும் காடாகுமென்பது நிச்சயம். புருஷனுக்கு அறம்பொருள்இன்பங்களுக்குரியகாலங்களில் பார்யைஸஹாயமாகஇருப்பாள். இவன்வேறுதேசத்திற்குச்செல்லும்பொழுதும் அவள்தான் நம்பிக்கையை உண்டுபண்ணுகிறவள். இவ்வுலகில் புருஷனுக்குப் பாரியையென்பவள்தான் உத்தமமானபொருளென்று கூறப்படுகிறாள்; ஸஹாயமில்லாதமனிதனுக்கு இவ்வுலகில் உலகநடைக்குஸஹாயமாகவிருப்பாள்; துன்பத்தைஅடைந்தவனுக்கும் பிணியால்பீடிக்கப்பட்டவனுக்கும் எப்பொழுதும்ஸஹாயமாகஇருப்பாள். துன்பமுள்ளமனிதனுக்குப் பாரியைக்கொப்பான மித்திரனில்லை; பாரியைக்கொப்பான மருந்தில்லை; பாரியைக்கொப்பான பந்துவில்லை; பாரியைக்கொப்பான கதியில்லை. உலகத்தில் தர்மங்களைச்சேர்க்கும்விஷயத்தில் பாரியைக்கொப்பான ஸஹாயமில்லை. எவனுடையவீட்டில் ஸாத்வியும் பிரியத்தைப்பேசுகிறவளுமான பாரியைஇல்லையோ அவன் அரண்யஞ்செல்லவேண்டும்; அரண்யமெவ்விதமோ அவ்விதம் அவன்வீடு' என்று புலம்பிற்று.

இவ்விதம்புலம்புகிறதும் துன்பமுள்ளதுமான அந்தப்பக்ஷியின் வசனத்தை அப்பொழுது வேடனால்பிடிக்கப்பட்ட பெண்புறாவானது

கேட்டு, 'அந்தோ! என்னுடைய பிரியமுள்ளபதியானவர், இல்லாதவைகளோ இருப்பவைகளோ இவ்விதமான குணங்களைச் சொல்லுகிறார்; ஆதலால், நான் மிகவும்நல்லபாக்கியம்பெற்றவள். [1]எந்தஸ்திரீயின்பதி ஸந்தோஷமுள்ளவனாயிருக்கிறானோ அவளன்றோ ஸ்திரீயென்று அறியத்தக்கவள். பதி ஸந்தோஷமுள்ளவனானால், ஸ்த்ரீகளுக்கு எல்லாத்தேவதைகளும் ஸந்தோஷமுள்ளவர்களாகிறார்கள். பதியன்றோ பெரியசரணமாகிறான். இந்த அக்நியைஸாக்ஷியாகக்கொண்டதுமாகும். எந்தஸ்த்ரீயின்பதி ஸந்தோஷமடையவில்லையோ அவள் காட்டுத்தீயால் எரிக்கப்பட்டதும் பூங்கொத்துடன்கூடியதுமான கொடிபோலச் சாம்பலாகிறாள்' என்றுசிந்தித்துக்கொண்டு துக்கத்தால் துன்பப்படும் பெண்புறாவானது வேடனால்பிடிக்கப்பட்டிருந்தாலும், அப்பொழுது துக்கப்படும்பதியைநோக்கி வார்த்தைசொல்லத் தொடங்கிற்று. 'காந்தனே! இப்பொழுது உனக்கு க்ஷேமத்தைச் சொல்லுகிறேன். அதைக்கேட்டு அவ்விதஞ்செய். விசேஷமாகச் சரணமென்றுவந்தவர்களை ரக்ஷி. இதோ பறவைபிடிக்கும்வேடன் உன்னிடத்திற்குவந்து குளிராலும்பசியாலும் துன்பத்துடன் படுத்திருக்கிறான். இவன்பொருட்டுப் பூஜைசெய். பிராம்மணனைக்கொல்லுகிறவனுக்கும் உலகத்திற்குமாதாவான பசுவைக்கொல்லுகிறவனுக்கும் சரணமென்றுவந்தவனைக் கொல்லுகிறவனுக்கும் பாதகம் ஸமானமாகும். ஜாதியின்தர்மப்படி புறாக்களுக்குள்ளபிழைப்பு நமக்குவிதிக்கப்பட்டிருக்கிறது. உன்னைப்போன்றபுத்தியுள்ளவன் எப்பொழுதும் அதைஅனுஸரிக்கவேண்டியது நியாயமாகும். கிருஹஸ்தனாயிருக்கும்எவன் சக்திக்குத்தக்கபடி தர்மத்தை அனுஸரித்திருக்கிறானோ அவன் இறந்தபின் அழிவில்லாதஉலகங்களையடைகிறானென்று கேள்விப்பட்டிருக்கிறோம். ஓ! பக்ஷியே! அப்படிப்பட்ட நீ இப்பொழுது புத்ரனுள்ளவனும் பரம்பரையுள்ளவனுமாயிருக்கிறாய். நீ உன்சரீரத்தில் கருணையைத்தள்ளிவிட்டு அறம்பொருள்களைப்பற்றிக்கொண்டு, இந்தமனிதனுடையமனம் எவ்விதம்ஸந்தோஷப்படுமோ அவ்விதம் இவன்பொருட்டுப்பூஜைசெய். ஓ! பக்ஷியே! நீ சரீரத்திற்குவேண்டி (என்விஷயமாகத்) தாபத்தை அடையாதே. சரீரம்நடைபெறத்தக்க ஜீவனத்திற்குவேண்டி வேறுதாரங்களை அடைவாய்' என்றுசொல்லிற்று. இவ்விதம், கூட்டிலிருப்பதும் தவமுள்ளதும் மிகவும்துக்கத்துடன்கூடியதுமான அந்தப்பெண்பக்ஷியானது வார்த்தையைச் சொல்லிவிட்டுத் தலையைத்தூக்கிப் பதியை நன்றாகப்பார்த்தது.

---

[1] 'எவளிடத்தில் பர்த்தா ஸந்தோஷமடையவில்லையோ அவள் ஸ்திரீயென்று அறியத்தக்கவளல்லள்' என்பது வேறுபாடம்.

## நூற்றுநாற்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(வேடனையும் புறவையும்பற்றிய கதைத்தொடர்ச்சி.)

தர்மத்துடனும் யுக்தியுடனும்கூடியதான மனைவியின்வசனத்தைக்கேட்டு அந்தப்புறுவானது பெரியஸந்தோஷத்துடன்கூடியதும் பாஷ்பப்புள்ளகண்களுள்ளதுமாய் அந்தப் பறவைவேடனைக்கண்டு பக்ஷிகளைக்கொண்டு பிழைக்கும் அவனை விதியில்காணப்படும்கர்மத்தால் முயற்சியுடன்பூஜித்தது. அந்தப்பக்ஷியானது ஒருவாக்கியத்தைச்சொல்லத்தொடங்கிற்று. 'இப்பொழுது உனக்கு நல்லவரவா? உனக்கு நான் என்னசெய்யவேண்டும்? சொல். நீ தாபத்தைஅடைய வேண்டாம். நீ உன்வீட்டிலிருக்கிறாய். ஆகையால், நீ சீக்கிரம் சொல்லு. நான் என்னசெய்யவேண்டும்? நீ எதைவிரும்புகிறாய்? ஸ்நேஹத்துடன் உன்னைக் கேட்கிறேன். நீ எங்களிடம் சரணமென்றுவந்தவனன்றோ? வீட்டிற்குவந்தவன் சத்ருவானாலும்ஆதித்யஞ் செய்யவேண்டுவது நியாயம். மரமானது வெட்டுவதற்காகவந்தமனிதனிடத்திலும் நிழலைக் குறையச்செய்கிறதில்லை. [1]ஐந்துயஜ்ஞங்களையும் செய்யும் கிருஹஸ்தனாயிருப்பவன் சரணமென்றுவந்தவனுக்கு விசேஷமுயற்சியுடன் ஆதித்யத்தைச்செய்யவேண்டுமன்றோ? கிருஹஸ்தாச்ரமத்திலிருக்கும் எவன் அவிவேகத்தால் ஐந்துயஜ்ஞங்களையும் செய்யாமலிருக்கிறானோ அவனுக்குத் தர்மப்படி இவ்வுலகமும் மேலுலகமுமில்லை. ஆகையால், நல்லநம்பிக்கையுள்ளவனாகி என்னிடஞ்சொல். நீ வாயினால் எதைச்சொல்லுகிறாயோ அதையெல்லாம் நான் செய்கிறேன். நீ சோகத்தில் மனத்தைச்செலுத்தாதே' என்று சொல்லிற்று. அந்தப்பக்ஷியின் அவ்வசனத்தைக்கேட்டு வேடன், 'என்னைக் குளிரானது வருத்துகிறது. ரக்ஷையைச்செய்யவேண்டும்' என்று சொன்னான். பிறகு இவ்விதஞ்சொல்லப்பட்ட பக்ஷியானது காய்ந்தஇலைகளைப் பூதலத்தில் முயற்சியுடன்பரப்பித் தீக்குவேண்டி வேகமாகச்சென்றது. அது கம்மாளன்வீட்டினருகிற்சென்று தீயையெடுத்துக்கொண்டு உடனே வந்தது. பிறகு அந்தப்பக்ஷியானது காய்ந்தஇலைகளில் தீயை ப்ரகாசிக்கும்படிசெய்தது. அந்தப்புறு அத்தீயை நன்றாகஜ்வலிக்கும்படி மூட்டியபின் சரணாகதனான அந்த வேடனைநோக்கி, 'ஒருவிதப்பயமுமின்றி நல்லநம்பிக்கையுள்ளவ

[1] ஆதிபர்வம் 559 - வது பக்கம் குறிப்பிற்காண்க.

ஞக உன் அங்கங்களைக் காய்ச்சிக்கொள்' என்றுசொல்லிற்று. அவ் விதஞ்சொல்லப்பட்ட அந்தவேடன், 'அப்படியே செய்கிறேன்' என்றுசொல்லிவிட்டு அங்கங்களைக் காய்ச்சிக்கொண்டான். பிறகு, தீயினால்திரும்பிவந்த உயிருள்ளவனும் பெரிய ஸந்தோஷத்துடன் கூடியவனும் பரபரப்புள்ள கண்ணுள்ளவனுமான வேடன் பக்ஷியை நோக்கிச் சொல்லத்தொடங்கினான். அந்தப் பக்ஷியைப்பார்த்து, 'விதியில்காணப்படும் கர்மப்படி உன்னால்கொடுக்கப்படும் ஆகாரத் தையும் அப்படியேவிரும்புகிறேன். பசியானது என்னைப்பீடிக் கிறது' என்றுசொன்னான். அந்தப்பக்ஷியானது அவன் வார்த்தையை அங்கீகரித்துக்கொண்டு, 'உன்னுடையபசியை விலக்கத்தக்கதான செல்வம் எனக்கில்லை. வனத்திலிருக்கும்நாங்கள் ஒவ்வொருநாளும் உண்டாகிறதைக்கொண்டு ஜீவிக்கிறோம். கானகத்திலுள்ள ரிஷிக ளைப்போல எங்களுக்கும் சேர்த்துவைக்குந் திரவியமில்லை' என்ற சொல்லைச்சொல்லிற்று. இவ்விதம் அந்த வேடனைப்பார்த்துச் சொ ன்னபின் அப்பொழுது நிறம்மாறியமுகமுள்ளதாயிற்று. பரதர்களிற் சிறந்தவனே! அப்பொழுது அந்தப்பக்ஷியானது தன்னுடைய ஜீவ னத்தைநிந்தித்துக்கொண்டு எவ்விதஞ் செய்யக்கூடுமென்ற பெரிய சிந்தையுள்ளதாயிற்று. அந்தப்பக்ஷியானது ஒருமுகூர்த்தத்தில் ஞா பகமடைந்து பக்ஷிகளைக்கொல்லும்வேடனைநோக்கி, 'ஒருமுகூர்த்தம் பொறுத்துக்கொள்; உனக்குத்திருப்திசெய்விக்கிறேன்' என்றுசொல் லிற்று. இவ்விதஞ்சொல்லிவிட்டுக் காய்ந்தஇலைகளைக்கொண்டு அக்னி யை நன்றாகஜ்வலிக்கும்படிசெய்து மிக்கஸந்தோஷத்துடன்கூடியபுரு திருப்பவுஞ்சொல்லத்தொடங்கிற்று. 'ரிஷிகள், தேவர்கள், மஹாத் மாக்கள்எனபித்ருக்கள் இவர்களிடமிருந்து, அதிதியைப்பூஜிப்பதில் பெரியதர்மமுண்டென்று முந்தி என்னால் கேட்கப்பட்டிருக்கிறது. அழகியநண்பனே! அனுக்ரஹஞ்செய். நான் உனக்கு ஸத்யமாக இதைச்சொல்லுகிறேன். அதிதியைப் பூஜிக்கும்விஷயத்தில் என் புத்தி உறுதியுள்ளதாகவே இருக்கிறது' என்றுசொல்லிற்று. இவ்வி தஞ்சொன்னபின் ப்ரதிஜ்ஞைசெய்துகொண்டதும் பெரியபுத்தியுள் ளதுமான அந்தப்பக்ஷியானது சிரிப்பதுபோல மூன்றுதடவை வலம் வந்து அந்தஅக்னியில் ப்ரவேசித்தது. அக்னியின்நடுவில்ப்ரவேசித்த பக்ஷியைக்கண்டவுடன் வேடன், 'இதுஎன்ன என்னால்செய்யப்பட் டது?' என்று மனத்தில்சிந்தையடைந்தான். (பிறகு) 'கஷ்டம்! க்ரூர னும் தன்கர்மத்தால் நிந்திக்கப்பட்டவனுமான எனக்கு மிகப்பெரி தும் கோரமுமான அதர்மம்வருமென்பதில் ஸந்தேஹமில்லை' என்று

அந்தவேடன், அவ்விதம் அக்னியிற்சென்றபக்ஷியைக்கண்டு தன்கர்மங்களை நிந்தித்துக்கொண்டு இப்படிப் பலவிதமாக மிகவும்புலம்பினான்.

நூற்றுநாற்பத்தாறுவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(வேடனையும் புறவையும்பற்றிய கதைத்தொடர்ச்சி.)

பிறகு, அந்தவேடன், பசியால்துன்பப்பட்டிருந்தும், அக்னியில்விழுந்தபுறவைக்கண்டு திரும்பவும் சொல்லத்தொடங்கினான்.

'புத்தியில்லாதவனும் குரூரனுமான என்னால் இவ்விதம் என்ன காரியஞ்செய்யப்பட்டது? பூமியில் உயிரோடிருக்கும் எனக்கு எப்பொழுதும் பாதகமேஉண்டாகும்' என்று அந்தவேடன் திரும்பவும் திரும்பவும் தன்னைநிந்தித்துக்கொண்டுசொன்னான். 'மிகவும்கெட்டபுத்தியுள்ளவனும் எப்பொழுதும் ஹிம்ஸிப்பதில் உறுதியுள்ளவனுமானஎன்னை நிந்திக்கவேண்டும். சுபமானகர்மத்தைத் தள்ளிவிட்டு நான் பறவைகளைப்பிடிக்கும்வேடனானேன். மஹாத்மாவும் தன்னுடையமாம்ஸத்தைஎரிக்கிறதுமான புறுவினால் குரூரனான எனக்கு இப்பொழுது நிந்தையைமுன்னிட்டு இந்தஓர்உபதேசம் செய்யப்பட்டதென்பதில் ஸந்தேஹமில்லை. நான் புத்திரர்களையும் தாரங்களையும் தள்ளிவிட்டுப் பிரியமான உயிரையும் விடுவேன். இவ்விஷயத்தில்தர்மமுள்ளபுறுவினால் எனக்குத் தர்மம் உபதேசிக்கப்பட்டிருக்கிறதன்றோ? இதுமுதல் எல்லாப்போகங்களையும்விட்டுவிலக்கி என்சரீரத்தைக் கோடைக்காலத்திலுள்ள மிகச்சிறியகுளத்தைப்போல நான் சோஷிக்கச்செய்வேன். பசியையும் தாகத்தையும் வெயிலையும்பொறுப்பவனும் நரம்புகளால்சுற்றப்பட்டவனும் இளைத்தவனுமாகப் பலவிதஉபவாஸங்களுடன் பரலோகத்திற்குரியதர்மத்தைச்செய்வேன். அந்தோ! அதிதிகளின்பூஜை சரீரத்தைஅளித்துக் காண்பிக்கப்பட்டது. ஆகையால், தர்மத்தைச்செய்வேன். தர்மமுள்ளஉத்தமபக்ஷியினிடம் எவ்விதத்தர்மம்காணப்பட்டதோ அவ்விதத்தர்மமன்றோ உத்தமமானகதியாகும்' என்றுசொன்னான். இவ்விதஞ்சொன்னபின் நிச்சயஞ்செய்துகொண்டு குரூரமான செய்கையுள்ள அந்தவேடன் [1] மஹாப்ரஸ்தானத்தை அடைந்து மிகக்கடுமையான வ்ரதத்துடன்

[1] மரணத்தைஅடையவேண்டி வடக்குநோக்கிச்செய்யப்படும் ஒருவிதப் பெரியயாத்திரை.

செல்லத்தொடங்கினன். உடனே அந்தவேடன் தடியையும் சலாகை யையும் பறவைகளைஎடுக்கும்பெட்டியையும் தள்ளினன். அதில்கட் டுப்பட்டிருக்கும் அந்தப்பெண்புறுவையும் அதிலிருந்துஎடுத்துவிட்டு விட்டான்.



நூற்றுநாற்பத்தேழாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

—✻✻✻—

(வேடனையும் புறவையும்பற்றிய கதைத்தொடர்ச்சி.)

பிறகு, வேடன்சென்றதும், அந்தப்பெண்புறுவும் கணவனை நினைத்துத் துயரமுற்றுச் சோகத்தால்வாடி அழுதுகொண்டு சொல் லத்தொடங்கிற்று.

'நாதனே! ஒருபொழுதும் உனக்கு அப்ரியத்தை நான் நினைக்க வில்லையே. பலபுத்திரர்களுள்ளவர்களானாலும் பதியையிழந்தஸ்திரீக ளெல்லாரும் சோகமடைவார்கள். பதியையிழந்து துக்கப்படும்ஸ்திரீ பந்துக்களுக்கும் வ்யஸனிக்கத்தக்கவளாகிறாள். நான் உன்னால் அன்புபாராட்டப்பட்டவளும் எப்பொழுதும் வெகுமானத்துடன் இனியவைகளும் ஸ்நேஹமுள்ளவைகளும் குறைவின்றி அழகுள்ளவை களுமான வசனங்களால் பூஜிக்கப்பட்டவளுமாகிறேன். மலைகளின் குகைகளிலும் ஆறுகளிலும் ப்ரவாஹங்களிலும் அழகானமரத்தின் நுனிகளிலும் நான் உன்னுடன்கூடி விளையாடிக்கொண்டிருந்தேன்; ஆகாயத்தில்போகுங்காலத்திலும் நான் உன்னுடன் ஸுகமாகவிளை யாடிக்கொண்டிருந்தேன். காந்தனே! முந்திவிளையாடிக்கொண்டி ருந்தேன். என்பிரியமானவனே! அஃது இப்பொழுது எனக்கில்லை. தகப்பன் அளவுள்ளதை அளிப்பான். உடன்பிறந்தவனும் புத்திரனும் அளவுள்ளதை அளிப்பார்கள். அளவில்லாததை அளிக்கும் பதியை எவள் பூஜியாமலிருப்பாள்? பதிக்குச்சரியான நாதனில்லை. பதிக்குச் சரியான ஸுகமில்லை. ஸ்திரீக்குப் பொருள்எல்லாவற்றையுங்காட்டி லும் பதியே கதியாவான். என்னுதனே! நீயில்லாமல் இவ்வுலகில் உயி ரால் எனக்குப் பயனில்லை. பதிவ்ரதையான எந்தஸ்திரீ பதியையிழந் தபின் உயிரோடிருக்க உத்ஸாஹப்படுவாள்?' என்றுசொல்லிற்று. இவ்விதம் பலவாறு தீனமாகப்புலம்பி மிக்கதுக்கமுள்ளதும் பதிவ்ர தையுமான அந்தப்பெண்புறுவானது நன்றாகஜ்வலிக்கும்அக்கினியில் ப்ரவேசித்தது. பிறகு, விசித்ரமான தோள்வளையணிந்ததும், விமா

னத்திலிருப்பதும், மஹாத்மாக்களான புண்யசாலிகளால்பூஜிக்கப்படு கிறதும், ஆச்சரியமானமாலைகளையும்ஆடைகளையுந்தரித்ததும், எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும், நூறுகோடிவிமானங்களுடன் புண்யமானகர்மங்களைச்செய்தவர்களால் சூழப்பட்டதுமான தன்பதியை அந்தப்பெண்புறு அடைந்தது. பிறகு, அந்தப்பக்ஷியானது சிறந்தவிமானத்தை அடைந்து ஸ்வர்க்கஞ்சென்று அவ்விடத்தில் தன் கர்மத்தால்பூஜிக்கப்பட்டுப் பாரியையுடன்கூட ஸுகித்துக் கொண்டிருந்தது.

---

## நூற்றுநாற்பத்தெட்டாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(வேடனையும் புறவையும்பற்றிய கதைத்தொடர்ச்சி.)

அரசனே! வேடன் விமானத்திலிருக்கும் அவ்விரண்டுபக்ஷிகளையும் ஆகாயத்திற்கண்டான். அரசனே! அந்தத்தம்பதிகளைக் கண்டு, 'எவ்விதத்தவத்தால் உத்தமமானகதியை அடைவேன்' என்று அவைகளின் அந்தக்கதியைச் சிந்தித்தான். இவ்விதம் புத்தியில் நிச்சயித்துக்கொண்டு பக்ஷிகளால்பிழைக்கும்வேடன் செய்கையற்றவனும் காற்றைஉணவாகக்கொண்டவனும் அபிமானமில்லாதவனுமாக ஸ்வர்க்கத்தைவிரும்பிக்கொண்டு மஹாப்ரஸ்தானத்தை அடைந்து செல்லத்தொடங்கினான்.

பிறகு, மிகப்பெரியதும் அழகுள்ளதும் தாமரைமலர்களால் அலங்கரிக்கப்பட்டதும் பலவிதப்பறவைக்கூட்டங்களால் சூழப்பட்டதும் குளிர்ந்தஜலமுள்ளதும் மங்களகரமுமான குளத்தைக்கண்டான். நீரைஉண்ணும்விருப்பமுள்ளவன் அந்தக்குளத்தைக் கண்டவுடன் திருப்தியுள்ளவனாவானென்பதில் ஸந்தேஹமில்லை. அரசனே! உபவாஸங்களால் மிகவும்மெலிந்த அந்தவேடனோ தைரியமுள்ளவனாக அதனருகிற்சென்று கொடியமிருகங்கள்வாஸஞ்செய்யும்வனத்தில் பெரியஉறுதிசெய்துகொண்டு பிரவேசித்தான். வனத்தில் பிரவேசிக்கும்பொழுதே அந்தவேடன் முட்களால்பீடிக்கப்பட்டான். முட்களால்பிளக்கப்பட்ட அங்கமுள்ளவனும் உதிரங்களால்நனைந்த வர்ணமுள்ளவனுமான அந்தவேடன் ஜனங்களில்லாததும் பலமிருகங்களால்நிறைந்ததுமான அந்தவனத்தில்சுற்றினான். பிறகு, அப்பொழுது காற்றினால் அரண்யத்திலுள்ள பெரியமரங்கள் ஒன்றோடொ

ன்று உரைந்துகொண்டதனல் மிகப்பெரியதீயானது கிளம்பிற்று. ஜ்வலிப்பதும் பிரளயகாலத்திய அக்கினிக்குச் சரியான காந்தியுள்ளது மான அந்தத்தீயானது மரங்கள்நிறைந்ததும் கொடிகளாலும் கிளைகளாலும் நெருங்கியதுமான அந்தவனத்தை எரிக்கத்தொடங்கிற்று. அந்தத்தீயானது ஜ்வாலைகளாலும் நான்குபுறத்திலும் காற்றினல் ஓடிய நெருப்புப்பொறிகளாலும் மிருகங்களும் பக்ஷிகளும் நிறைந்த கோரமான அவ்வாண்யத்தைஎரித்தது. பிறகு, அந்தவேடன் சரீரத்தைவிடவேண்டி மிகச்சந்தோஷமுள்ளமனத்துடன் அப்பொழுது வளர்ந்ததீயைஎதிர்த்து ஓடினன். பாதர்களில்மிகச்சிறந்தவனே! பிறகு, வேடன் அந்தத்தீயால்எரிக்கப்பட்டுப் பாபங்கள்நாசமடைந்தவனகி உடனே பெரியஸித்தியைப் பெற்றான். பிறகு, துன்பத்தைவிட்டு ஸ்வர்க்கத்திலிருப்பவனும், யக்ஷர்கள் கந்தர்வர்கள் ஸித்தர்கள் இவர்களின்நடுவில் இந்திரனைப்போலவிளங்குகிறவனுமாகத் தன்னைக் கண்டான். இவ்விதம், புண்யகர்மத்தால் ஆண்புறுவும் பதிவ்ரதையான பெண்புறுவும் வேடனும் ஸ்வர்க்கமடைந்தார்கள். இவ்விதமே, வேறெந்தஸ்திரீ பதியை அனுஸரித்திருக்கிறளோ அவளும் சீக்கிரமாகப் பெண்புறுவைப்போலத் தேவலோகத்திலிருந்துகொண்டு விளங்குவாள். மஹாத்மாவானவேடனுக்கும் புறுவுக்கும் புண்யகர்மத்தால் தர்மத்திற்குரிய நற்கதியுண்டாயிற்றென்று இப்பழையகதை இவ்விதமிருக்கிறது. இக்கதையை எப்பொழுதும்கேட்கிறவனுக்கும் இக்கதையை எப்பொழுதும்சொல்லுகிறவனுக்கும் அஜாக்ரதையாலும் மனத்தாலும் அசுபமுண்டாகிறதில்லை. தர்மத்தைப் பரிப்பவர்களுள் சிறந்த யுதிஷ்டிர! இது பெரியதர்மம். இவ்வுலகில் பசுவைக் கொன்றவர்களின் பாபகர்மத்திற்குப் பிராயச்சித்தமுண்டு. எவன் சரணமென்றுவந்தவனைக் கொல்லுகிறனே அவனுக்குப் பிராயச்சித்தமில்லை. பாபங்களைநசிக்கச்செய்வதும் புண்யமுமானஇவ்விதிஹாஸத்தைக்கேட்டவன் கெட்டகதியை அடையமாட்டான்; ஸ்வர்க்கலோகத்தையும் அடைவான்" என்றுசொன்னர்.

---

## நூற்றுநாற்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், அறியாமற்செய்யப்பட்ட பாபநிவிருத்திவிஷயமாக ஜனமேஜயனுடைய சரித்திரத்தைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பாதர்களில்மிகச்சிறந்தவரே! முந்தி அறியாமல் எவன் எந்தப்பாபத்தைச்செய்கிறனே அவன் அந்தப்பாபத்திலிரு

ந்து எவ்விதம்விடுபடுவான்? அதனை எனக்கு உபதேசிக்கவேண்டும்” என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

“இந்தவிஷயத்தில் சௌனககோத்திரத்திலுதித்த இந்த்ரோதரென்னும்பிராம்மணர் ஜனமேஜயராஜனைப்பற்றிச் சொல்லியதும் ரிஷிகளால்புகழப்பட்டதுமான பழையகதையை உனக்குச் சொல்லுகிறேன். மிக்கவீர்யம்பெற்றவனும் பரிக்ஷித்தின்குமாரனுமான [1]ஜனமேஜயனென்னும் ஓர்அரசனிருந்தான். அறியாமையாலுண்டான பிரம்மஹத்தியானது அந்தஅரசனை அடைந்தது. புரோஹிதருடன் கூடின பிராம்மணர்களனைவர்களுமே அந்த அரசனைத் தள்ளிவிட்டார்கள். அந்தஅரசன் இரவும்பகலும் தஹிக்கப்படுகிறவனாகி அரண்யஞ்சென்றான். பிரஜைகளால்விலக்கப்பட்டஅவ்வரசன் பெரிதான நல்லகாரியத்தைச் செய்யத்தொடங்கினன். அவன் சோகத்தால் தஹிக்கப்பட்டு மிகப்பெரியதவத்தைச்செய்தான். அந்தஅரசன் பிரம்மஹத்தியைவிலக்கிக்கொள்ளவேண்டிப் பூமிமுழுமையும் சுற்றிக்கொண்டு ஒவ்வொருதேசத்திலுமுள்ள பலப்ராம்மணர்களை ப்ரச்னஞ்செய்தான். இந்தத்தர்மத்தை வெளியிடத்தக்க அந்தவிஷயத்திலுள்ளஇதிஹாஸத்தைச் சொல்லுகிறேன். பாபகாரியத்தால்கொளுத்தப்படும் ஜனமேஜயன் (பிராயச்சித்தத்தைச்) செய்துகொள்ளவேண்டி, மிகக்கடுமையானவ்ரதமுள்ளவரும் சௌனககோத்திரத்தில் பிறந்தவருமான இந்த்ரோதரிடஞ்சென்றான். அருகிற்சென்று (அவரைத்) துன்பப்படுத்துகிறவனாகிக் கால்களில்தொட்டுப் பிடித்துக்கொண்டான். பிறகு பயந்தவரும் அறிவுள்ளவர்களிற் பெரியவருமான இந்த்ரோதர் அப்பொழுது மிகவும்நிந்திக்கத்தொடங்கினர்.

‘பெரியபாபத்தைச்செய்தவனும் ப்ரூணஹத்திசெய்தவனுமான நீ ஏன் இங்குவந்தாய்? உனக்கு எங்களிடத்தில் என்னகாரியமிருக்கிறது? எவ்விதத்திலும் என்னை நீ பார்க்கவேண்டாம்; போ; போ. உன்னுடையஒழுக்கம் எங்களுக்கு விருப்பமானதன்று. [2]உன்னுடையமணம் உதிரத்தின்மணம்போலவும் உன்னைப்பார்ப்பது பிணத்தைப்பார்ப்பதுபோலவுமிருக்கின்றன. அசுபனானநீ சுபன்போலவும் செத்தவனானநீ ஜீவிக்கிறவன்போலவும் ஸஞ்சரிக்கிறாய். உள்ளே மிருத்யுஉள்ளவனும் அசுத்தமானபுத்தியுள்ளவனும் பாபத்தையே சிந்திப்பவனுமானநீ விழித்துக்கொண்டிருக்கிறாய்; தூங்குகிறாய்; பெரியஸுகத்திலிருக்கிறாய். அரசனே! உன்னுடையஉயிர் பயனற்றதாயிருக்கிறது. துன்பத்துடன்ஜீவிக்கிறாய். (முன்னுள்ள) வினையால்

1 இவன்வேறு. 2 இரண்டுசொற்கள் விடப்பட்டன.

ரீழானபாபத்தின்பொருட்டே இவ்வுலகில் ஸ்ருஷ்டிக்கப்பட்டவனு கிறாய். தந்தைகள் பலக்ஷேமத்தைவிரும்புகிறவர்களாய்த் தவத் தாலும் தேவபூஜைகளாலும் நமஸ்காரத்தாலும் பொறுமையாலும் புத்திரர்களை அடையவிரும்புகிறார்கள். உன்னிமித்தமாகநாசமடைந்த இந்தப்பித்ருவம்சத்தைப் பார். உன்னை ஆச்ரயித்தவைகளானஇவர் களின்உறுதியான ஆசைகள்யாவுமே பயனற்றவைகளாகின்றன. எந்த ப்ராம்மணர்களைப்பூஜிப்பவர்கள் ஸ்வர்க்கத்தையும் ஆயுளையும் கீர்த் தியையும் ப்ரஜைகளையும் அடைகிறார்களோ அவ்விதமானப்ராம்மணர் களிடம் எப்பொழுதும் உனக்கு வீணானத்வேஷமிருக்கிறது. நீ இவ் வுலகைவிட்டுத் தலைகீழாகவிழப்போகிறாய். பாபகர்மத்தால் நிலையற்ற வையான பலவருஷங்கள் கூர்மையானபற்களுள்ளவைகளும் இரும்பு போன்றமுகமுள்ளவைகளுமான பலஜந்துக்களால் கடிக்கப்படுவாய். பிறகும் மறுபிறப்பைஅடையும்நீ பாபஜன்மத்தை அடையப்போகிறாய். அசகனே! 'இவ்வுலகமில்லை; மேலுலகமேது?' என்று நீ நினைக்கிற விஷயத்தில் யமன்வீட்டிலுள்ளயமதூதர்கள் உனக்கு உத்தரமளிக்கப் போகிறார்கள்' என்றுசொன்னார்.

## நூற்றைம்பதாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(ஜனமேஜயன்சரித்திரத்தொடர்ச்சி.)

இவ்விதஞ்சொல்லப்பட்ட ஜனமேஜயன் அர்தரிஷியைநோக்கி மறுமொழி சொல்லத்தொடங்கினான். 'இகழ்ச்சியாகப்பேசத்தக்க என்னை நீர் இகழ்ந்துபேசுகிறீர். நிந்திக்கத்தக்கஎன்னை நீர் நிந்திக் கிறீர். வெறுக்கத்தக்கஎன்னை நீர் வெறுக்கிறீர். ஆகையால், நான் உமிமுடைய அனுக்ரஹத்தைவேண்டுகிறேன். என்னுடையஇஃதனைத் தும் என்னுடையசெய்கையாகும். தீயில்வைக்கப்பட்டதுபோல நான் தபிக்கிறேன். என்னுடையகர்மங்களைநினைத்து என்மனம் ஸந்தோஷ மடையவில்லை. மிருத்யுவிலும்கோரமானபயம் நிச்சயமாக என்னால் அடையப்பட்டிருக்கிறது. அந்தச் சல்யத்தைவிலக்கிக்கொள்ளாமல் எவ்விதம் நான் ஜீவிக்கத்தக்கவனாவேன்? ஓ! சௌனகரே! எல்லாக் கோபத்தையுந்தள்ளிவிட்டு நீர் எனக்குஅனுக்ரஹஞ்செய்யவேண் டும். பிராம்மணர்களுக்குப் பெரியபக்தனாயிருந்தேன். திரும்பவும் இப் பொழுது சொல்லுகிறேன். பிராம்மணர்களுக்குரியகதியை அடைந்து

நான் திரும்பவும் பிரயோஜனமுள்ளவனுயிருக்கவேண்டும். இந்தக் குலத்தில் மிச்சமிருக்கவேண்டுகிறேன். இந்தக்குலமானது துன்பத்தையடையாமலிருக்கவேண்டும். பிராம்மணர்களால்சபிக்கப்பட்டவர்களும் (பந்துஜனங்களுடன்) சேர்க்கையையும் ஸ்துதிகளையும் அடையாதவர்களுமான எங்களுடையகுலம் மிச்சமிருக்கத்தகாததாகுமே. வேதத்தில்நிச்சயத்தையடைந்த [1]உங்களிடம் என்னுடைய ஆத்மாவைவெறுத்துக்கொள்ளும் நான் திரும்பவும் இப்பொழுது சொல்லுகிறேன். தர்மமில்லாதவர்கள் ஜலமில்லாதவர்கள்போல மிகவும் (துன்பத்தில்) முழுகுவார்கள். யஜ்ஞமில்லாதவர்கள் எவ்விதத்திலும் மேலுலகத்தை அடையமாட்டார்கள். புளிந்தர்களென்னும் ஒருவகைமிலேச்சர்கள்போல அவர்கள் தலைகீழாகவிழுவார்கள். ஓ! பிராம்மணரானசௌனகரே! சிறுவன்போன்ற என்னுடையபுத்தியைக் குற்றமுள்ளதாகநினையாமலே மிக்கபண்டிதரானநீர் தகப்பன் மகனிடமிருப்பதுபோல ப்ரீதியுள்ளவராயிருக்க வேண்டுகிறேன்' என்றுசொன்னான்.

சௌனகர் சொல்லத்தொடங்கினர். 'அறிவிற்சிறந்த [2]பிராம்மணனும் (கோபமடைந்தால்) அயுக்தமானகாரியத்தையும்செய்வான். இதில் என்னஆச்சர்யம்? ஆகையால், இவ்விதமான விவேகமுள்ளவனுயிருந்து எவன் பிராணிகள்விஷயத்தில் [3]கோபமடைவான்? பிரஜ்ஞையென்னும்மாடியிலேறிச் சோகப்படத்தகாதமனிதன் ஜனங்களைப்பற்றிச் சோகமடைவான்; மலையிலிருப்பவன் பூமியிலிருப்பவர்களைப்போலப் பிரஜ்ஞையால் அறிவான். எல்லாஸாதுக்களிடத்திலும் வெறுப்புற்றமனமுள்ளவனும் அவர்களைவிட்டு விலகியிருப்பவனும் அவர்களால் நிந்திக்கப்பட்டவனுமாயிருக்கும் ஒருவனும் அறிவை அடையமாட்டான்; ஆச்சர்யங்களையுங்காணமாட்டான். உன்னுடைய வீர்யத்தையும் வேதத்திற்குள்ளமஹிமையையும் அறிந்துகொண்டு நடந்துகொள். பிராம்மணன் உன்னுடையபொறுமைக்குத்தக்கபடி ரக்ஷகனுயிருக்கட்டும். அப்பா! கோபமில்லாத பிராம்மணர்களின் செய்கை எதுவோ அதுதான் [4]பரலோகத்திற்குரியதாகும். அல்லது, தர்மத்தைக் கவனித்துப்பார்ப்பாயாகில், பாபவிஷயத்தில் வருத்தமுள்ளவனுயிரு' என்றுசொன்னர். ஜனமேஜயன், 'பாபத்தைப் பற்றி மனவருத்தமுள்ளவனுயிருக்கிறேன். நான் அதர்மத்தையும் செய்யாமலிருக்கிறேன். அடுத்தவனை ரக்ஷிக்கவிரும்பவேண்டும். ஓ! சௌனகரே! ப்ரியமுள்ளவராயிரும்' என்றுசொன்னான்.

1, 2, 3, 4 வேறுபாடம்.

சௌனகர் சொல்லத்தொடங்கினார். '(உன்னுடைய) டம்பத்தையும் அபிமானத்தையும் அறுத்துவிட்டு (அதனாலுண்டாகும்) உன்பிரியத்தைவிரும்புகிறேன். அரசனே! தர்மத்தைநினைத்துக்கொண்டு எல்லாப்பிராணிகளுக்கும் ஹிதமானகாரியத்திலிரு; பயத்தாலும் தீனத்தனத்தாலும் லோபத்தாலும் நான் உன்னைச் சிஷ்யனாகஅழைக்கவில்லை. நீ பிராம்மணர்களுடன் தெய்வத்தினுடையதும் உண்மையுமான என்னுடையவசனத்தைக்கேள். அந்தநான் ஒன்றையும்விரும்புகிறவனல்லன். ஆ! ஆ! (பாபியைச்சேர்த்துக்கொண்டசௌனகர்) நிந்திக்கத்தக்கவரென்றுபேசிக்கூச்சலிடும் எல்லாப்பிராணிகளையும் அலக்ஷியம்செய்துவிட்டுத் தர்மத்திற்காக உன்னைச்சிஷ்யனாக்கிக்கொள்ளுகிறேன். என்னைத் தர்மமறியாதவனென்றுசொல்லுவார்கள். ஸ்நேஹிதர்களானஜனங்கள் என்னைவிலக்குவார்கள். அவ்விதவார்த்தைகளைக் கேட்டு ஸ்நேஹிதர்கள் [1]என்னிடத்தில் மிகவும்தாபமடைவார்கள். அறிவுள்ளவர்களிற் சிறந்தவர்களானசிலர்மட்டில், 'செய்யத்தக்கது' என்று அங்கீகரிப்பார்கள். அப்பா! பாரத! என்னால்செய்யப்பட்டதை ப்ராம்மணர்களிடம்சென்று தெரிந்துகொள். அவர்கள் மர்யாதை பெற்று எவ்விதம்க்ஷேமமடைவார்களோ அவ்விதம் நீசெய். அரசனே! பிராம்மணர்களுக்குத் துன்பம்செய்யாமலிருப்பதை ப்ரதிஜ்ஞைசெய்' என்றுசொன்னார். ஜனமேஜயன், 'பிராம்மணரே! வாக்காலும் மனத்தாலும் செய்கையாலும் இனிஒருஸமயமும் பிராம்மணர்களை நான் துன்பப்படுத்துகிறதில்லை. உமதுகால்களையே தொட்டுச்சொல்லுகிறேன்' என்றுசொன்னான்.

## நூற்றைம்பத்தோராவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(ஜனமேஜயன்சரித்திரத் தொடர்ச்சி.)

சௌனகர் சொல்லத்தொடங்கினார். 'ஸம்பத்துள்ளவனும் பெரியபலமுள்ளவனும் ஸந்தோஷமுள்ளவனுமான நீ தானாகத் தர்மத்தைப்பார்க்கிறாய். ஆகையால், மறைக்கப்பட்டபுத்தியுள்ள உன்பொருட்டு நான் தர்மத்தைச்சொல்லுகிறேன். அரசன் முதலில்குரூரனாயிருந்து பின் பிராணிகளைத் தன்னடக்கையால் அநுக்ரஹஞ் செய்கிறானென்பது மிகப்பெரியஆச்சரியமே. எல்லாம் நல்லதும்

1 வேறுபாடம்.

கெட்டதுமாயிருப்பது நிச்சயமென்று உலகமானது தெரிந்துகொள்ளும். எந்தவிடத்தில் நீ அவ்விதமாயிருந்துவிட்டுத் திரும்பவும் கர்வத்தையும் போகங்களையும் தள்ளிவிட்டுத் தவத்தையடைந்து தர்மத்தையேபார்க்கிறாயோ அந்தவிடத்தில் அதர்மத்தால்துன்பப்படுத்தப் பட்டவர்களுக்கு இது ஆச்சர்யமாகும். ஜனமேஜய! [1]ஸம்பத்துள்ளவன் தாதாவாயிருப்பதும் க்ருபணன் தவத்தைப்பொருளாகக் கொண்ட முனியாயிருப்பதும் ஆச்சர்யமல்லவென்று சொல்லுகிறார்கள். அது ஸமீபத்திலிருக்கிறது. கார்ப்பண்யமென்பது [2]இதுதான். நன்றாகஆலோசிக்கப்படாதவையெல்லாம் கார்ப்பண்யமாகும். அது நன்றாக ஆலோசனையுடனிருக்குமாகில் அதில் [3]அதனால் குணமுண்டாகும். அரசனே! யாகமும் தானமும் தயையும் வேதங்களும் ஸத்யவசனமுமாகிய இவ்வைந்தும் பரிசுத்தங்களாகும். நன்றாகச் செய்யப்படுந் தவமானது ஆறாவதாகும். ஜனமேஜய! அதுதான் அரசர்களுக்கு உத்தமமானபரிசுத்தியாகும். நன்றாகஅடைந்த அந்தத்தவத்தால் மிகச்சிறந்ததர்மத்தை அடைவாய். புண்யதேசத்திற்குச்செல்வது மிகவும்பரிசுத்தமென்றுசொல்லப்படுகிறது. இவ்விஷயத்திலும் யயாதியால்பாடப்பட்ட இந்தக்காதையை உதாஹரிக்கிறார்கள். எந்தமனிதன் [4]தான்ஜீவித்திருக்கத்தக்க ஆயுளை அடையக்கருதுகிறானோ அவன் [5]உறுதியாக யாகத்தைச்செய்தபின் அதை விலக்கிவிட்டுத் தவத்தைச்செய்யவேண்டும். குருக்ஷேத்திரத்தைப் புண்யமென்றுசொல்லுகிறார்கள். குருக்ஷேத்திரத்தைவிட ஸரஸ்வதியையும், ஸரஸ்வதியைவிட மற்றத்தீர்த்தங்களையும், தீர்த்தங்களைவிட ப்ருதூதகத்தையும் புண்ணியமென்று சொல்லுகிறார்கள். அந்த ப்ருதூதகத்தில் ஸ்நானஞ்செய்து [6]பானமுஞ்செய்தமனிதனை நாளைக்கு வரும்மரணமும் தபிக்கச்செய்யாது. திரும்பவும்ஜீவித்து ஆயுளை அடைந்திருப்பாயாகில், மஹாஸரஸ், புஷ்கரம், ப்ரபாஸம், உத்தரமானஸம், காலோதகம்என்றதீர்த்தங்களையும்அடைவாய். ஸரஸ்வதியிலும் திருஷத்வதியிலும்ஸ்நானஞ்செய்யும்மனிதன் தாபமடைவானோ? இந்தத்தீர்த்தங்கள்யாவற்றிலும் வேதத்தைஜபிக்கும்சீலமுள்ளவனாயிருந்துகொண்டு இவ்விதம் ஸ்நானஞ்செய்யவேண்டும். பரிசுத்தங்களுள், தானமென்றதர்மத்தைச்சிறந்ததென்றும் அதைவிட ஸந்யாஸஞ்சிறந்ததென்றும் மனு சொன்னார். இவ்விஷயத்திலும் ஸத்யவானென்றமுனியாலியற்றப்பட்ட இந்தக்காதையை உதாஹரிக்கிறார்கள். குழந்தையாயிருப்பவன் எவ்விதம் உண்மையாகவும் புண்ணியமி

1, 2, 3, 4, 5, 6 வேறுபாடம்.

லாதவனும் பாபமில்லாதவனுமிருக்கிறானோ அவ்விதமிருக்கவேண்டும். எல்லாப்ராணிகளிடத்திலுமுள்ள துக்கமானது இவனிடத்தில்லை. ஸுகம் இவனிடத்திலேது? இவ்விதம் காரணவஸ்துவான ப்ரம்மத்தை அடைந்தவர்களும் எல்லாவிஷயங்களுடனும் ஸம்பந்தத்தை அடைந்தவர்களுமான த்யாகிகளுக்குப் பெரும்பாலும் ஜீவனமும் புண்யபாபங்களும் விலகினவைகளாயிருக்கும். அரசனுடையகார்யங்களுள் எதுமிகச்சிறந்ததோ அதைத்தான் உனக்கு உபதேசிக்கிறேன். பலத்தாலும் தனங்களாலும் ஸ்வர்க்கத்தைஜயி; பரிசுத்தியையும் அடை. எவனுக்குப் பலமும் கருவிகளுள்ளசக்தியுமிருக்கின்றனவோ அந்தமனிதனே தர்மத்திற்கு ப்ரபுவாவான். ப்ராம்மணர்களின் ஸுகத்திற்குவேண்டி நீ பூமியைச்சுற்றிக்கொண்டிரு. இவர்களை முந்தி எவ்விதம்நிந்தித்தாயோ அவ்விதமே இவர்களை அனுக்ரஹஞ்செய்யும்படிசெய். இவர்களால் நிந்திக்கப்படுகிறவனாலும் பலவிதமாக அதட்டப்படுகிறவனாலும் தன்னைத் திருஷ்டாந்தமாக அறிந்துகொண்டு துன்பப்படுத்தாமலிருக்கிறேனென்ற எண்ணத்துடன் கோபமில்லாதவனாயிரு. ஸ்வகாரியங்களில்முயற்சியுள்ளவனாயிருந்துகொண்டு பெரியக்ஷேமத்தைச்செய்துகொள். ஓர் அரசன் பனிபோலக் குளிர்ச்சியுள்ளவனும் அக்னிபோலச்சூடுள்ளவனும் யமன்போலக் குற்றங்களையும் குணங்களையும் பகுத்தறிகிறவனுமாயிருப்பான். சத்துருக்களைத்தபிக்கச்செய்கிறவனே! மற்றொருவன் கலப்பைபோலத் துஷ்டர்களின் வேரைஅறுப்பவனும் இடிபோலஅவர்களிடம்திடீரென்றுவிழுகிறவனுமாயிருப்பான். விசேஷபுத்தியுடனோ [1]பொதுவானபுத்தியுடனோ துஷ்டர்களிடம்செல்லக்கூடாது. நான் இல்லாமற்போய்விடுவேனென்றபயத்துடன் ஒருஸமயத்திலும் துஷ்டர்களிடம் சேரக்கூடாது. பாபியானவன் கெட்டகாரியத்தைச்செய்தேனென்று மனவருத்தமடைந்தால் ஒருதடவைசெய்தபாபத்திலிருந்து விடுதல் அடைகிறான். 'இதைத்திரும்பவும் செய்கிறதில்லை' என்றநியமத்தால் இரண்டாவதுபாபத்திலிருந்து விடுபடுகிறான். 'தர்மத்தைச்செய்கிறேன்' என்றநியமத்தால் மூன்றாவதுபாபத்திலிருந்துவிடுபடுகிறான். பரிசுத்தனாகத்தீர்த்தங்களுக்குச்செல்வதால் பலமுறைசெய்தபாபத்திலிருந்துவிடுபடுகிறான். மேன்மையைவிரும்பும்மனிதன் சுபத்தையே செய்யவேண்டும். எவர்கள் நல்லவாஸனையுள்ளவைகளுடன்பழகுகிறார்களோ அவர்கள் அவ்விதவாஸனையுள்ளவர்களாகிறார்கள். எவர்கள் கெட்டமணமுள்ளவைகளோடுபழகுகிறார்களோ அவர்கள் அவ்

[1] வேறுபாடம்.

விதமென்னமுள்ளவர்களாகிறார்கள். தவஞ்செய்கிறதைப் பெரிதாகக் கொண்டவன் உண்மையில் பாபத்திலிருந்துவிடுபடுகிறான். அபவாதமடைந்தவன் ஒருவருஷம் அக்னியைஉபாஸித்து (பாபத்திலிருந்து) விடுபடுகிறான்.' ப்ரூணஹத்திசெய்தவன் மூன்றுவருஷங்கள் அக்னியைஉபாஸித்தபின் விடுதல்அடைகிறான். ப்ரூணஹத்திசெய்தவன் மஹாஸரஸ், புஷ்கரம், ப்ரபாஸம், உத்தரமானஸம் இவைகளுக்காக நூறுயோஜனஞ்செல்வதால் விடுதல்பெறுவான். பிராணிகளைக் கொன்றவன் எவ்வளவுபிராணிகளைக்கொன்றிருக்கிறானோ அந்தஜாதியிலுள்ள அவ்வளவுபிராணிகளையும் நாசமடையுங்காலத்தில் விடுவிப்பதால்அந்தப்பாபத்திலிருந்து விடுபடுகிறான். அன்றியும், அகமர்ஷணமென்னும்மந்திரத்தை மூன்றுதடவைஜபித்துக்கொண்டு ஜலத்தில் முழுகவேண்டும். அஃது அஶ்வமேதத்தின் அவபிருதத்திற்கொப்பானதென்று மனு கூறினார். அவன் வேகமாகப் பாவத்தைவிலக்கிக் கொள்வான். அப்படியே பூஜையையும்பெறுவான். அன்றியும் ஜடர்கள்போலவும் ஊமைகள்போலவும் பிராணிகள் இவனிடம்நல்லெண்ணமுள்ளவைகளாகின்றன. அரசனே! தேவாஸுரர்களனைவர்களும் தேவகுருவான பிருஹஸ்பதியிடம்வந்து, 'ரிஷிகளிற்சிறந்தவரே! காரணத்துடன் செய்யப்பட்ட தர்மத்தின்பயனையும் அதுபோல வேறானபாபத்தின்பயனானநரகத்தையும் அறிகிறீர். எந்தமனிதனுக்குப் புண்யம்பாபம்இரண்டும் நன்றாகச்செய்யப்பட்டவைகளாகின்றனவோ அவனிடத்தில் அவ்விரண்டினுள்ளும் எது மற்றொன்றை வெல்லுவதில்சிறந்ததாகும்? ரிஷிகளில்பெரியவரே! அவ்விதமான கர்மத்தின்பயனை நீர் சொல்லவேண்டும். தர்மத்தைச்செய்கிறவன் எப்படிப் பாபத்தைவிலக்கிக்கொள்ளுகிறான்?' என்றுகேட்டார்கள்.

பிருஹஸ்பதி சொல்லத்தொடங்கினார். 'முதலில் அறியாமையால்பாபத்தைச்செய்துவிட்டுப் பிறகு அறிவைமுன்னிட்டுப் புண்ணியங்களைச்செய்வானாகில் அவ்விதம் புண்ணியகாரியத்தைச்செய்யும் அந்தமனிதன் காரங்களைப்போட்டு அழுக்கானவஸ்திரத்தைச்சுத்தி செய்வதுபோல அப்பாபத்தைவிலக்கிச் சுத்திசெய்துகொள்வான். மனிதன் பாபத்தைச்செய்தபின் நான்செய்யவில்லையென்றே நினைக்க வேண்டும்; ஶ்ரத்தையுள்ளவனும் அஸூயையில்லாதவனுமாய்ச் சுபத்தைச்செய்யவிரும்பவேண்டும். எந்தப்புருஷன் பாபத்தைச்செய்தபின் சுபத்தைச்செய்கிறானோ அவன் வஸ்திரத்திலுள்ள இடைவெளிகளைமறைப்பதுபோல நல்லகர்மத்தால் பாபங்களைமறைத்துக்கொள்ளுகிறான். திரும்பவும் உதயமடைந்தஸூரியன் இருளையெல்லாம்விலக்

குவதுபோலச் சுபத்தைச்செய்யும்புருஷன் எல்லாப்பாபத்தையும் விலக்கிக்கொள்ளுகிறான்' என்றுசொன்னார்' என்றார். இந்த்ரோத ரென்னும்சௌனகர் ஜனமேஜயராஜனுக்கு இவ்விதஞ்சொல்லிவிட்டு விதிப்படி அச்வமேதயாகத்தைச்செய்வித்தார். அதனால், பாபங்கள் விலகியவனும் அழகானசோபையுடன் கூடிவிளங்குகிறவனும் சத்ருக் களைக்குறைக்கிறவனுமான அந்தஜனமேஜயராஜன் நிறைந்தஉருவ முள்ள சந்த்ரன் ஆகாயத்தை அடைவதுபோலத் தன்ராஜ்யத்தை அடைந்தான்" என்றுசொன்னார்.

---

## நூற்றைம்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், வைதிசமென்னும்நகரத்தில் இறந்தகுழந்தை பிழைத்தகதையைச்சொல்லியது.)

யுதிஷ்டிரர், "அரசரே! மரணமடைந்தமனிதன் திரும்பவும் உயிருள்ளவனானென்பது உண்டோ? இது பிதாமஹரால்காணப் பட்டதாவது கேட்கப்பட்டதாவதுஉண்டோ?" என்றுகேட்க, பீஷ் மர் சொல்லத்தொடங்கினார்.

"ஏ! பார்த்த! வைதிசமென்னும் நகரத்தில்நடந்ததும் கழுகு நரிகளைச்சேர்ந்த ஸம்பாஷணையுமான பழையஇதிஹாஸத்தை நடந்த படிகேள். ஒருபிராம்மணனுக்குக் கஷ்டப்பட்டுக் கிடைத்தவனும் நீண்டகண்ணுள்ளவனுமான ஒருபுத்திரன் பாலகனாயிருக்கும்பொழு தே பாலக்ரஹங்களால்பிடிக்கப்பட்டு மரணமடைந்தான். குலத்திற் குள்ள எல்லாப்பொருளும்போன்றவனும் யௌவனத்தைஅடையாத வனுமான அந்தப்பாலகனைஎடுத்துச் சிலர் துக்கத்துடன்சோகத்தால் பீடிக்கப்பட்டு அழுது பிறகு மரித்தஅப்பாலகனைத்தூக்கிக்கொண்டு மயானத்திற்குஎதிராகவந்து நின்றார்கள். அவர்கள் அப்பாலகன், முன்சொல்லியசொற்களைத் திரும்பவும்திரும்பவும்நினைத்துச்சோகப் படுகிறவர்களும் மிக்கதுக்கமுள்ளவர்களுமாய் ஒருவரை ஒருவர்கட் டிக்கொண்டு அழுதார்கள். அவர்கள் அப்பாலகனைப் பூதலத்தில் போட்டுவிட்டுத் திரும்பிச்செல்லத்திறமையுள்ளவர்களாகவில்லை. அவ ர்களின் அழுகைக்குரலால் ஒருகழுகு அவ்விடத்தில்வந்து ஒருவச னத்தைச்சொல்லத்தொடங்கிற்று. 'பிரேதவடிவமான இக்குழந்தை யைக் காலனிடத்தில்விட்டுவிட்டுச்செல்லுங்கள்; தாமஸிக்கவேண்

டாம். இவ்விடத்தில் புருஷர்களில் பலவாயிரர்களும் ஸ்திரீகளில்பல வாயிரர்களுமான காலனால்கொண்டுவரப்பட்டவர்களைத் தள்ளிவிட்டுப் பந்துக்கள் போகிறார்கள். உலகம்யாவும் ஸுகதுக்கங்களால் தொடரப்பட்டிருப்பதை நன்றாகப்பாருங்கள். சேர்க்கையும் பிரிவும் முறையே காணப்படுகின்றன. அந்தமரித்தவர்களை எடுத்துக்கொண்டு எவர்கள் செல்லுகிறார்களோ, எவர்கள் அவர்களைத் தொடர்ந்துசெல்லுகிறார்களோ, அந்தமனிதர்களும் தமக்குள்ள ஆயுள் அளவுப்படியே செல்லுகிறார்கள். கழுகுகளாலும் நரிகளாலும்நிறைந்ததும் அதிகமான எலும்புகளுள்ளதும் கோரமும் எல்லாப்பிராணிகளுக்கும்பயத்தையுண்டுபண்ணுவதுமான இந்தமயானத்தில்நிற்பதில் என்னபயன்? நண்பனானாலும் பகைவனானாலும் மரணத்தை அடைந்தஒருவன் மறுபடி ஜீவிப்பதில்லை. பிராணிகளின்கதி இவ்விதமானது. மனுஷ்யலோகத்தில்பிறந்தயாவுமே மரிக்கவேண்டும். யமனால்செய்யப்பட்ட வழியிற்சென்று மரித்தவனை எவன் ஜீவிக்கச்செய்வான். திக்குக்களின் கடைசியிற்சென்றஸூர்யன் அஸ்தமயத்தை அடைவதற்குள்ளாகவே புத்திரனிடமுள்ளஸ்நேஹத்தைத்தள்ளிவிட்டு உங்கள் இடம் போய்ச்சேரலாம்' என்றுசொல்லிற்று. அரசனே! பிறகு கழுகின் வசனத்தைக்கேட்டு அந்தப்பந்துக்கள் அப்பொழுது பூதலத்தில் புத்திரனைப்போட்டுவிட்டு மிகவும் அழுதுகொண்டு திரும்பிச்சென்றார்கள். பிறகு மரித்தவனென்றேநிச்சயஞ்செய்துகொண்டு அந்தப்பாலகனைப்பார்ப்பதில்ஆசையற்றவர்களாய் அழுதுகொண்டு அப்பொழுது அங்குமிங்கும் செல்லத்தொடங்கினார்கள். அவர்கள்யாவரும், மரித்ததைநிச்சயஞ்செய்துகொண்டு தம்புத்திரனைத்தள்ளிவிட்டு அவ ஜீவிப்பதில் ஆசையற்றவர்களாய் வழியை மறைத்துக்கொண்டு நின்றார்கள். (அப்பொழுது) காக்கையின்இறகுக்கொப்பான நிறமுள்ள ஒருநரியானது வளையிலிருந்துவெளியில்வந்து, போகும் அந்த மனிதர்களைநோக்கிச் சொல்லத்தொடங்கிற்று.

'மனிதர்கள் தயையில்லாதவர்களன்றோ? மூடர்களே! இதோ ஸூர்யனிருக்கிறான்; பயப்படவேண்டாம்; ஸ்நேஹத்தைச்செய்யுங்கள். அதிகஅழகுள்ளபாலகன் ஒருமுகூர்த்தத்தில் ஜீவிக்கலாம்; புத்திரனிடமுள்ளஸ்நேஹமில்லாதவர்களாய்ப் பூமியில்தர்ப்பங்களைப் பரப்பிப் புத்திரனை மயானத்தில் போட்டுவிட்டு ஏன் தயையின்றிச் செல்லுகிறீர்கள்? எவனுடையவார்த்தையினால்தானே ஸந்தோஷமடைவீர்களோ, இனிமையாகப்பேசும்இந்தப்பாலனானபுத்திரனிடத்தில் உங்களுக்கு ஸ்நேஹமில்லையே! பசுக்களுக்கும் பறவைகளுக்கும்

புத்திரர்களிடம் ஸ்நேஹம்எவ்விதமென்று நீங்கள் பார்க்கவில்லையே? பரலோகத்திற்குரியவழியிலிருப்பவர்களுக்கு முனிகள்செய்யும் யாகங்களைரக்ஷித்துக்கொள்வதால் பயனில்லாமைபோல ஸ்நேஹப்பற்றுதலுள்ளமிருகங்கள் பக்ஷிகள் புழுக்கள் என்னும் அந்தப்பிராணிகளுக்கு அவற்றின்புத்திரர்களைரக்ஷித்துக்கொண்டிருப்பதில் யாதொரு பயனும்வருவதில்லை. புத்திரர்களிடம் ஸ்நேஹமுள்ள அந்தப்பிராணிகளுக்கு இந்தஉலகத்திலும் மேலுலகத்திலும் யாதொருகுணமும் காணப்படவில்லை. அவைகள் தம்பிரஜைகளை நன்றாகப்போஷிக்கவுஞ் செய்கின்றன. பிரியமானபுத்திரர்களைப் பாராமலிருக்கும்பொழுது எவர்களுக்குச் சோகமில்லையோ அவர்கள் புத்திரர்களைப்போஷிப்பதில் மிகவும்பிரீதியுள்ளதாய்தந்தைகளே அல்லர். எந்தமனிதர்களுக்கு(பாராமலிருக்கும்பொழுது) சோகமில்லையோ அவர்களுக்குஸ்நேஹமேது? குலத்தைவிருத்திசெய்யும் இந்தப்புத்திரனைத்தள்ளிவிட்டு எங்கேபோகப்போகிறீர்கள்? வெகுநேரம் கண்ணீரைவிடுங்கள். வெகுநேரம் ஸ்நேஹத்துடன்பாருங்கள். இப்படிப்பட்ட பிரியவஸ்துக்களைவிடுவது பெரியகஷ்டம். குறைஅடைந்தவனுக்கும் அபவாதமுள்ளவனுக்கும் ஶ்மசானத்தைக்குறித்துச்சென்றவனுக்கும் பந்துக்கள்இருப்பதுபோல மற்றவனிருக்கமாட்டான். யாவருக்கும் உயிர் இஷ்டமானது. யாவரும் ஸ்நேஹத்தையும் அடைவார்கள். கீழான பசுமுதலியபிறப்பிலிருப்பவைகளுக்கும் ஸ்நேஹம்எவ்விதமிருக்கிறதென்றுபாருங்கள். புதிதாகக்கல்யாணஞ்செய்துகொண்டு ஸ்நாநத்தாலும் மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டிருப்பவன்போன்றவனும் தாமரைமலர்போல்சலிக்கும் நீண்டகண்ணுள்ளவனுமான இவனை விட்டுவிட்டு எப்படிப்போகிறீர்கள்?' என்றுசொல்லிற்று. இவ்விதம் சோகத்துடன் அழுதுகொண்டுசொல்லும் நரியின்வசனத்தைக் கேட்டு அந்தமனிதர்கள்யாவரும் அப்பொழுது குழந்தைக்குவேண்டித் திரும்பினார்கள். கழுகு சொல்லத்தொடங்கிற்று.

'அந்தோ! கஷ்டம்! ஹீனபுத்தியுள்ளமானிடர்களே! குரூரமும் அல்பபுத்தியுள்ளதும் இழிந்ததுமானநரியின் சொல்லைக்கேட்டு ஏன் திரும்புகிறீர்கள்? ஐந்துபூதங்களாலும் விடப்பட்டதும் காய்ந்து கட்டைத்தன்மையை அடைந்ததும் சேஷ்டையற்றதுமான இந்தக் குழந்தையைப்பற்றி ஏன்சோகப்படுகிறீர்கள்? உங்களைப்பற்றி ஏன் சோகப்படவில்லை. எதைச்செய்து பாபத்திலிருந்துவிடுபடுவீர்களோ அவ்விதத்தீவ்ரமானதவத்தைச்செய்யுங்கள். தவத்தால் எல்லாம்அடையப்படும். அழுகை எதைச்செய்யும்? அனிஷ்டங்களும் பாக்யங்

களும் [1]சரீரத்துடன்கூடஉண்டாகின்றன. அந்தக்காரணத்தால் இந்தக்குழந்தை முடிவில்லாத சோகத்தைக்கொடுத்துவிட்டுச் செல்லுகிறது. பொருளும் பசுக்களும் ஸுவர்ணமும் மணிகளும் ரத்தினங்களும் ஸந்தானமும் தவத்தைமூலமாகக்கொண்டவை. தவமானது யோகத்தாலடையப்படும். தாம்செய்திருக்கிறபடி பிராணிகளிடம் ஸுகமும் துக்கமும் அடைகின்றன. பிராணியானது துக்கங்களையும் ஸுகங்களையும் பற்றிக்கொண்டே உண்டாகிறது. தந்தையின் கர்மத்தால்புத்திரனும் புத்திரனின்கர்மத்தால் தந்தையுமிருப்பதில்லை. (மனிதர்கள்) புண்ணியபாவங்களால்கட்டப்பட்டு வேறுவழியாகச் செல்லுகிறார்கள். முயற்சியுடன் தர்மத்தைச்செய்யுங்கள்; அவ்விதம் அதர்மத்திலிருந்துவிலகுங்கள்; காலந்தவறாமல் தேவர்களிடத்திலும் பிராம்மணர்களிடத்திலுமிருங்கள்; சோகத்தையும் தீனத்தனத்தையும் விடுங்கள்; புத்திரனிடமுள்ள ஸ்நேஹத்திலிருந்து விலகுங்கள்; இந்தஅழுகையை விடுங்கள்; வேகமாக அதிலிருந்து திரும்புங்கள். சுபமானஎந்தக்கர்மத்தையும் அவ்விதமே மிகக்குரூரமானகர்மத்தையும் எவன் செய்கிறானோ அவனே அனுபவிக்கவேண்டும். பந்துக்களுக்கு இதிலென்ன? இவ்விடத்தில் பிரியமாயிருக்கும் பந்துவைத் தள்ளிவிட்டுப் பந்துக்களாயிருப்பவர்கள் நிற்பதில்லை. ஸ்நேஹத்தைத் தள்ளிவிட்டுக் கண்ணீர்நிரம்பிக் கலங்கியகண்ணுள்ளவர்களாய்ச் செல்லுவார்கள். அறிவிற்சிறந்தவனோ மூர்க்கனோ பொருளுள்ளவனோ பொருளற்றவனோ சுபாசுபங்களுடன்கூடினயாவருமே காலத்தின்வசத்தை அடைகிறார்கள். சோகப்பட்டு என்னசெய்யப்போகிறீர்கள்? மரித்ததைப்பற்றி ஏன்சோகப்படுகிறீர்கள்? தர்மப்படி ஸமானபார்வையுள்ளகாலம் யாவர்க்கும் பிரபுவன்றோ? மிருத்யுவானது யௌவனத்திலிருப்பவர்களையும் சிறுவர்களையும் வயதுசென்றவர்களையும் கர்ப்பத்திலிருப்பவர்களையும் யாவர்களையும் பிடிக்கிறது. இவ்வுலகம் இப்படியிருக்கிறது' என்றுசொல்லிற்று.

நரி சொல்லத்தொடங்கிற்று. 'அந்தோ! புத்திரனிடமுள்ள ஸ்நேஹத்தால் துன்பமடைந்து மிகவும்சோகப்படும் உங்களுடைய ஸ்நேஹமானது அல்பபுத்தியானஇங்குள்ளகழுகால் நன்றாகக்கூறப்பட்டவைகளும் காரணத்தைவிளங்கச்செய்பவைகளும் (தன்கொள்கைக்கு) ஒத்தவைகளுமானவசனங்களால் அல்பமாகச்செய்யப்பட்டது. இதுமுழுமையுந்தெரிந்துகொண்டு சீக்கிரம் ஆலோசனையையாவது செய்யுங்கள். விடத்தகாதஸ்நேஹத்தைவிட்டுவிட்டு ஜலமுள்ள

1 வேறுபாடம்.

விடத்திற்குப்போகிறீர்களே. கஷ்டம்! புத்திரனைவிட்டுப்பிரிந்து இறந்தபுத்திரனில்லாதஇடத்தையடைந்து அழும்உங்களுக்குக் கன்றில்லாதபசுக்களுக்குப்போல மிகவும்துக்கமுண்டாகும். பூதலத்தில்மனிதர்களுக்குள்ளசோகத்தை இப்பொழுது அறிகிறேன். ஏனெனில், ஸ்நேஹத்தின்காரணமாகச்செய்துகொண்டு எனக்கும் கண்ணீர் விழுந்தது. எப்பொழுதும் முயற்சிசெய்யவேண்டும். பிறகு தெய்வத்தால்ஸித்திக்கும். தெய்வமும் பௌருஷமும்ஒரேஉறுதியாயிருப்பது யுக்தமாகும். எப்பொழுதும் வெறுப்பில்லாமலிருக்கவேண்டும். வெறுப்படைந்தால் எங்கிருந்து ஸுகமுண்டாகும். முயற்சியாலன்றோ பொருளடையப்படுகிறது? ஏன் தயையில்லாமற்செல்லுகிறீர்கள்? தன்மாம்ஸத்திலிருந்துஉண்டானதும் தன்பாதிச்சரீரம்போன்றதும் பித்ருக்களுக்குவேண்டி வம்சத்தைஉண்டுபண்ணுவதுமான (புத்திரனுடைய) சரீரத்தை வனத்தில்தள்ளிவிட்டு எங்கேபோகிறீர்கள்? ஸூர்யன் அஸ்தமயத்தைஅடைந்து ஸந்தியாகாலம்வந்துவிட்டால் புத்திரனை எடுத்துக்கொண்டாவதுபோங்கள்; அல்லது இவ்விடத்திலேயே இருக்கவாவதுசெய்யுங்கள்' என்றுசொல்லிற்று.

கழுகு சொல்லத்தொடங்கிற்று. 'மானிடர்களே! இப்பொழுது நான்பிறந்து ஆயிரம்வருஷத்துக்குமேலாகிறது. ஸ்திரீயோ, புருஷனோ, நபும்ஸகனோ மரித்தவர் பிழைப்பதைக்காணேன். சிலர் கர்ப்பங்களில்மரித்துப்பிறக்கிறார்கள்; பிறந்தவுடனும் மரிக்கிறார்கள். தவழ்ந்துகொண்டிருப்பவர்களும் மரிக்கிறார்கள். அவ்விதம் சிலர் யௌவனத்தில்மரிக்கிறார்கள். இவ்வுலகில் நாற்கால்பிராணிகளுக்கும் பறவைகளுக்குங்கூடப் பாக்கியங்கள் நிலைத்தவைகளல்ல. அசைவுள்ளவைகளுக்கும் அசையாமலிருப்பவைகளுக்கும் வாழ்நாள் எதிர்காலத்தில் முடிவுபெறுகிறது. இஷ்டமானதாரங்களைவிட்டுப்பிரிந்தவர்களும் புத்திரசோகத்துடன் கூடியவர்களுமாய்ச் சோகத்தால் கொளுத்தப்பட்டு ஒவ்வொருநாளும் வீடுசெல்லுகிறார்கள். ஆயிரம் அனிஷ்டங்களையும் நூறுஇஷ்டங்களையும் இவ்விடத்தில் தள்ளிவிட்டுப் பந்துக்களாயிருப்பவர்கள் மிகவுந்துக்கத்துடன் செல்லுகிறார்கள். தேஜஸின்றிச் சூன்யமாகக் கட்டைத்தன்மையை அடைந்த இந்தச்சிசுவை விடுங்கள். வேறுதேகத்தில்ஸம்பந்தமடைந்து கட்டையாயிருக்கும்சிசுவை உபாஸிக்கிறீர்களே. உயிரைவிட்டகுழந்தைக்குக் கண்ணீரைவிட்டுவிட்டு ஏன்போகாமலிருக்கிறீர்கள்? இந்தஸ்நேஹம் பயனற்றதாயிற்றே. சிரமமும் பயனற்றது. அந்தக்குழந்தை கண்களால் பார்க்கிறதுமில்லை; செவிகளால் கேட்கிறதுமில்லை. ஏன்

இதைத்தள்ளிவிட்டு வேகமாகவீடுசெல்லாமலிருக்கிறீர்கள்? மோக்ஷ தர்மமுள்ளவைகளும் யுக்தியுள்ளவைகளும் மிக்ககுணங்களுமான வசனங்களால் என்னாலுபதேசிக்கப்பட்டநீங்கள் வேகமாகத் தம்தம் வீட்டையே போய்அடையுங்கள். அறிவும் போறிவுமுள்ளவனும் புத்தியையும் நல்லறிவையுங் கொடுப்பவனுமானஎன்னால் நல்லவசனத்தைக்கேட்கும்படிசெய்யப்பட்டீர்கள். மானிடர்களே! திரும்புங்கள். நடந்ததைநினைத்தும் கண்டும் சோகமானது இரண்டுமடங்காகும்' என்றுசொல்லிற்று. இவ்விதம் இக்கழுகின்வசனத்தைக் கேட்டபின் மனிதர்கள் திரும்பிவிட்டார்கள். அப்பொழுது நரியானது வேகமாகவந்து அக்கழுகுஉறங்கிஇருப்பதைக்கண்டது. நரி சொல்லத்தொடங்கிற்று.

'தங்கத்தின்வர்ணம்போன்ற மேனியுள்ளவனும் ஆபரணங்களால் நன்றாகஅலங்கரிக்கப்பட்டவனும் பித்ருக்களுக்குப்பிண்டமளிப்பவனுமானஇந்தப்புத்திரனைக் கழுகின்சொல்லால் எப்படிவிடுகிறீர்கள்? இறந்தஇந்தப்புத்திரனைவிடுவதால் ஸ்நேஹத்திற்கும் புலம்பலுக்கும் அழுகைக்கும் நிவிருத்தியில்லை; நிச்சயமாகத் தாபமுண்டாகும். சம்புகனென்னும்சூத்திரன்கொல்லப்பட்டதும், ஸத்யமான பராக்ரமமுள்ள ராமனிடமிருந்து தர்மத்தைஅடைந்து பிராம்மண குமாரன்பிழைத்தானென்றுகேள்விப்படுகிறோம். அப்படியே ஸ்வயித்தியனென்னும் ராஜரிஷியின்பாலகன் காலத்தின்முடிவைஅடைந்து மரித்தவன் தர்மநிஷ்டரென்னும்முனிவரால் திரும்பவும் ஜீவித்திருக்கும்படிசெய்யப்பட்டான். அதுபோல ஸித்தனோ, முனியோ, தேவதையோ ஒருவனிருக்கலாம். அவன் துன்பமுள்ளவர்களாக இங்குஅழுதுகொண்டிருக்கும் உங்களுக்குத் தயைபண்ணலாம்' என்றுசொல்லிற்று. இவ்விதஞ்சொல்லப்பட்டஅவர்கள் புத்திரனிடம் ஸ்நேஹமுள்ளவர்களும் சோகத்தால்பீடிக்கப்பட்டவர்களுமாய்த் திரும்பினார்கள். அவர்கள் மடியில் (புத்திரனின்) தலையைவைத்துக்கொண்டு அதிக விஸ்தாரமாகஅழத்தொடங்கினார்கள். அவர்களின் அழுகைக்குரலைக்கேட்டுக் கழுகுவந்து சொல்லத்தொடங்கிற்று.

'தர்மராஜனின் செய்கையால் நீண்டதூக்கமென்னும் மரணத்தைஅடைவிக்கப்பட்ட சிசுவானது கண்ணீர்விழுந்துநனைந்ததும் கைகள்பட்டுத் துன்பப்படுத்தப்பட்டதுமாயிருக்கிறது. [1]தவமுள்ளவர்களும் தனமுள்ளவர்களும் பெரியபுத்தியுள்ளவர்களுமாகிய எல்லோ

---

1 வேறுபாடம்.

ரும் மிருத்யுவின்வசத்தை அடைகிறார்கள். இது பிரேதங்களிருக்கும்நகரமாகும். பல்லாயிரம்பாலர்களையும் பல்லாயிரம் கிழவர்களையும் எப்பொழுதும் இங்குதள்ளிவிட்டுப் பந்துக்கள் பூதலத்தில் பகலும் இரவும் துக்கத்துடனிருக்கிறார்கள். சோகத்தைவிலக்கக்காரணமாகாதபிடிவாதத்தை அடைவதில் பயனில்லை. இந்தக்குழந்தைக்கு இப்பொழுது திரும்பவும்பிழைப்பேது? நரியின்வசனத்தால் இந்தக் குழந்தை திரும்பவும் உயிரை அடையமாட்டாது. மரித்துச்சரீரத்தைவிட்டதற்குத் திரும்பவும் அச்சரீரம்கிடைக்காது. பலநூறுநரிகளாலும் அந்தக்குழந்தையைப் பலநூறுவருஷங்களிலும் சரீரத்தைக் கொடுத்துப் பிழைக்கும்படிசெய்யமுடியாது. ஒருஸமயம் ருத்ராாவது ஸுப்ரம்மண்யராவது ப்ரம்மாவாவது விஷ்ணுவாவது இக்குழந்தையின்பொருட்டு வரமளிப்பார்களாகில் அப்பொழுது இக்குழந்தை பிழைக்கக்கூடும். கண்ணீர்விடுவதாலும் பெருமூச்சுவிடுவதாலும் நீண்ட அழுகையாலும் இது திரும்பவும் ஜீவனை அடையாது. நானும் நரியும் இக்குழந்தைக்குப் பந்துக்களானநீங்களும் யாவரும் தர்மாதர்மங்களைக்ரஹித்துக்கொண்டு இவ்வுலகில் வழியிலிருந்துகொண்டிருக்கிறோம். அறிவுள்ளவன், அப்ரியத்தையும் குரூரத்தையும் பிறர்களுக்குத்த்ரோஹத்தையும் பிறன்மனைவியையும் அதர்மத்தையும் பொய்யையும் தூரத்தில் விலக்கவேண்டும். நீங்கள் தர்மத்தையும் ஸத்யத்தையும் சாஸ்திரத்தையும் நியாயம்தவறாமையையும் பிராணிகளிடம்பெரியதயையையும் குடிலமில்லாமலிருப்பதையும் வஞ்சகமில்லாமலிருப்பதையும் முயற்சியுடன்தேடுங்கள். தாயையும் தந்தையையும் பந்துக்களையும் அப்படியே ஸ்நேஹிதர்களையும் ஜீவிக்கும்படி எவர்கள் பார்க்கிறார்களில்லையோ அவர்களுக்குத் தர்மம்கெடும். எவன் கண்களால் பார்க்கவில்லையோ எவ்விதத்திலும் அசையவில்லையோ அவன்நிலைமுடிவுபெற்றதென்று நிச்சயமிருக்கும்பொழுது அழுதுகொண்டு என்னசெய்யப்போகிறீர்கள்?' என்றுசொல்லிற்று. இவ்விதஞ்சொல்லக்கேட்ட அந்தப்பந்துக்கள் புத்திரனைப் பூமியில் போட்டுவிட்டுச் சோகத்தால் பிடிக்கப்பட்டவர்களும் புத்திரனிடமுள்ளஸ்நேஹத்தால் கொளுத்தப்படுகிறவர்களுமாய் வீடுசெல்லப்புறப்பட்டார்கள்.

நரி சொல்லத்தொடங்கிற்று. 'எல்லாப்பிராணிகளையும் நசிக்கச்செய்யும் இம்மானிடலோகம் குரூரமானது. இவ்வுலகில் நண்பர்களையும் பந்துக்களையும்விட்டுப் பிரியவேண்டியதாயிருக்கிறது. உயிரோடிருக்குங்காலமும் கொஞ்சம். பலகபடங்களுள்ளதும் பொய்யுள்ளதும் அதிகமாகப்பேசுவதும் அப்ரியத்தைப்பேசுவதுமான இவ்

வுலகத்தையும் துக்கசோகங்களை வளரச்செய்யும். விஷயத்தையும் பார்க்கையில், ஒருமுகூர்த்தமும் இம்மானிடஉலகம் எனக்குப் பிரிய மாகஇருக்கவில்லை. அந்தோ! சீ! கழுகின்வாக்யத்தால் புத்தியில் லாதவர்களைப்போலப் புத்திரனிடமுள்ளஸ்நேஹத்தைத் தள்ளிவிட்டு ஸ்நேஹமற்றவர்களாய் எப்படிப்போகிறீர்கள்? புத்ரசோகத்தால் எரிக்கப்பட்ட மானிடர்களே! பாபியும் புத்தியில்லாததுமான கழு கின் வசனத்தைக்கேட்டுத் திரும்புகிறீர்களே. ஸுகத்திற்குப்பின் துக்கமும் துக்கத்திற்குப்பின்ஸுகமும் உண்டு. ஸுகதுக்கங்களால் சூழப்பட்டஉலகத்தில் முடிவடையாத ஸுகமென்பதில்லை. அழகுள் ளவனும் குலத்தைவிளங்கச்செய்கிறவனும் பாலகனுமான இந்தப் புத்திரனைப் பூதலத்தில்தள்ளிவிட்டு எங்கேபோகிறீர்கள்? மூடர் களே! அழகும்யௌவனமும் நிறைந்து லக்ஷ்மியுடன்விளங்குகிறவன் போன்ற பாலனை உயிரோடிருப்பவனாகவே நான் மனத்தால் பார்க் கிறேன். இதில் ஸந்தேஹமில்லை. மானிடர்களே! இந்தப்பாலனின் நாசத்தால் ஸுகத்தை அடையமாட்டீர்கள். புத்திரசோகத்தால் மிகவும் தபிக்கப்பட்டஉங்களுக்கு இப்பொழுது மரிப்பது உசிதம். [1] ஸுகம் வரலாமென்று நினைத்துத் தாமாகவே ஸுகத்தை உறுதி யாகக்கருதிக்கொண்டு அல்பபுத்தியுள்ளவர்களைப்போல [2]இவனைத்தள் ளிவிட்டு இப்பொழுது எங்கேபோகப்போகிறீர்கள்?' என்றுசொல் லிற்று. அரசனே! அவ்விதம் தர்மத்திற்குவிரோதமாகப் பொய்யான பிரியத்தைச் [3]சொல்லுவதும் மயானத்தில்வஸிப்பதும் தன்காரியத் திற்குவேண்டி எப்பொழுதும் ராத்ரியைத்தேடுகிறதுமானநரியினால் அமிர்தத்திற்கொப்பானவசனங்களால் அவ்விடத்தில் தடுக்கப்பட்ட பந்துஜனங்கள் உடனே நடுவிலிருக்கும்நிலைமையை அடையும்படி செய்யப்பட்டார்கள்.

கழுகு சொல்லத்தொடங்கிற்று. 'இந்த அரண்யப்ரதேசமானது மிருகங்களால் சூழப்பட்டதும் யக்ஷர்களாலும்ராக்ஷஸர்களாலும் அடையப்பட்டதும் குரூரமும் கோட்டான்களால்சப்திக்கப்பட்ட தும் பயங்கரமும் மிக்ககோரமும் கறுத்தமேகம்போன்றநிறமுள்ளது மாயிருக்கிறது. இதில்பிணத்தைப்போட்டுவிட்டுப் பிரேதத்திற்குச் செய்யவேண்டிய காரியங்களைச் செய்யுங்கள். எவ்வளவுவரையில் ஸூர்யன் அஸ்தமயத்தைஅடையவில்லையோ எவ்வளவுவரையில் திக் குகள் பிரகாசமாயிருக்கின்றனவோ அவ்வளவுக்குள் இதைத்தள்ளி விட்டுப் பிரேதத்திற்குள்ள காரியங்களைச்செய்யுங்கள். பருந்துகள்

1 வேறுபாடம். 2 ஒருசொல் விடப்பட்டது. 3 வேறுபாடம்.

கொடுமையாகக்கத்துகின்றன. நரிகள் பயங்கரமாக் ஊளையிடுகின்றன. ஸிம்மங்கள் கர்ஜிக்கின்றன. ஸூர்யனும் அஸ்தமயத்தை அடைகிறான். கறுத்ததானசிதையின்புகையால் மரங்கள் நன்றாகஇருட்டுகின்றன. மயானத்திலுள்ள தேவதைகளும் ஆகாரமில்லாதவைகளாய்க் கூச்சலிடுகின்றன. மிக்ககுரூரமான இவ்விடத்திலுள்ளவர்களும் விகாரமானசரீரமுள்ளவர்களும் விகாரமுள்ளவர்களும் மாம்ஸத்தைப்புஜிப்பவர்களுமான அனைவர்களும் உங்களை மிகவும்பயப்படும்படிசெய்வார்கள். இந்தஅரண்யப்ரதேசமும் குரூரமானது. இப்பொழுது பயமுண்டாகும். கட்டைபோன்றதான இந்தப்பிணத்தைப் போடுங்கள். நரியின்வார்த்தையை விடுங்கள். பயனற்றனவும் பொய்யுமான நரியின்வார்த்தைகளைப் புத்தியிழந்து கேட்பீர்களானால் அப்பொழுது யாவரும் நாசமடைவீர்கள்' என்றுசொல்லிற்று.

நரி சொல்லத்தொடங்கிற்று. 'நில்லுங்கள்; உங்களுக்குப் பயம்வேண்டாம். எவ்வளவுவரையில் ஸூர்யன்ப்ரகாசிக்கிறானோ அவ்வளவுவரையில் இந்தப்புத்திரனிடம் ஸ்நேஹத்தால் வெறுப்பில்லாமலிருங்கள். இஷ்டம்போலழுதுகொண்டு நம்பிக்கையுள்ளவர்களாய் நெடுநேரம்ஸ்நேஹத்துடன்பாருங்கள். குரூரமான இந்தஅரண்யப்ரதேசத்தில் உங்களுக்குப் பயமுண்டாகுமென்பதில்லை. இந்தஅரண்யப்ரதேசமானது அழகுள்ளதும் பித்ருக்களுக்குமுடிவில்இடமுமாயிருக்கிறது. ஸூர்யனுள்ளவரையிலிருக்கலாம். மாம்ஸத்தைத்தின்னும் கழுகின்வார்த்தைகளால் உங்களுக்காவதென்ன? அவிவேகமுள்ளபுத்தியுள்ளவர்களாய் க்ரூரமும் பாபமுமுள்ளவைகளுமான கழுகின்வசனங்களைக்கேட்பீர்களாகில் உங்களுக்குப்புத்திரனில்லாமற்போவான்' என்றுசொல்லிற்று. அரசனே! அஸ்தமயமானால் கழுகுவாராது. இரவில் நரிஇருக்கும். ஆகையால், பசியுடன் கூடிய அந்தக்கழுகும் நரியும் இறந்தவனைச்சேர்ந்தஅந்தஜனங்களை இவ்விதம்சொல்லின. தம்காரியத்தில் நல்லஉறுதியுள்ள அந்தக்கழுகும் நரியும் பசியாலும் தாகத்தாலும் மிக்கச்ரமமுற்றவைகளாய்ச் சாஸ்திரத்தைத்தொடர்ந்துபேசின. அறிவில்ஸாமர்த்யமுள்ள அந்தமிருகபக்ஷிகளின் அமிர்தம்போன்ற அந்தவசனங்களால் அவர்கள் சற்றுநிற்கவும் சற்றுப்போகவுஞ்செய்தார்கள். அப்பொழுது சோகத்தாலும் தீனத்தனத்தாலும் பிடிக்கப்பட்டு அழுதுகொண்டுநின்றார்கள். ஸ்வகார்யத்தில்ஸாமர்த்தியமுள்ள அவ்விரண்டினாலும் அவர்கள் ஸாமர்த்தியமாக ப்ரமிக்கும்படிசெய்யப்பட்டார்கள். அவ்விதம் விவாதப்படுகின்றவைகளும் அறிவுள்ளவைகளுமான அந்தக்கழுகுநரி

இரண்டுக்கும் அங்குநிற்கும் அந்தப்பந்துக்களுக்கும் எதிரில் சங்கரர் வந்தார். பார்வதிதேவியால் தூண்டப்பட்டவரும் அருளால் நனைந்த கண்ணுள்ளவரும் தேவருமான சங்கரர் உடனே அந்தமனிதர்களை நோக்கி, 'நான் வரமளிக்கிறவனாயிருக்கிறேன்' என்றுசொன்னார். துக்கமுள்ள அந்தஜனங்கள் வணங்கிநின்றுகொண்டு, 'ஒரேபுத்திரனை யிருப்பவனை இழந்தவர்களும் அவன் ஜீவிக்கவேண்டுமென்று விரும்புகிறவர்களுமான எங்கள் அனைவர்களுக்கும், புத்திரனுக்குஜீவனை யளித்து, வாழ்வைக்கொடுக்கவேண்டும்' என்றஇந்தவசனத்தைச் சொன்னார்கள். இவ்விதஞ்சொல்லப்பட்ட அந்தப்பகவான் நீர்நிரம்பியகையினால் அந்தக்குமாரனுக்கு உயிரையும் நூறுவருஷம்ஆயுளையும் அளித்தார். அப்படியே எல்லாப்பிராணிகளுக்கும் ஹிதத்தைச் செய்வதில்பிரியமுள்ளவரானபகவான்பினாகியானவர் நரிக்கும் கழுகுக்கும் பசியைப்போக்குவதானவரமளித்தார். பிரபுவே! பிறகு அப்பொழுது அவர்கள் க்ஷேமத்துடனும் ஸந்தோஷத்துடனும் அந்தச் சங்கரரைநமஸ்கரித்துவிட்டுச் செய்யவேண்டியதைச்செய்து கொண்டவர்களாய் மிக்கஸந்தோஷத்துடன் புறப்பட்டார்கள். நீண்டதானவெறுப்பில்லாமையாலும் உறுதியானநிச்சயத்தாலும் தேவதேவரின் அனுக்ரஹத்தாலும் சீக்கிரமாகப் பயன் அடையப்படும். தெய்வத்தின் சேர்க்கையையும் பந்துக்களின்நிச்சயத்தையும் பார். தீனர்களாய் அழுதுகொண்டிருப்பவர்களுக்குக் கண்ணீரானது துடைக்கப்பட்டது; பார். சிறியகாலத்தால் நிச்சயத்துடன்தேடியதால் சங்கரரிடமிருந்து அனுக்ரஹம்பெற்றுத் துக்கப்பட்டவர்கள் ஸுகமடைந்தார்கள். பரதர்களில்மிகச்சிறந்தவனே! அவர்கள் சங்கரரின் அனுக்ரஹத்தால் திரும்பவும் புத்ரன்பிழைத்திருப்பதால் மிக்கஸந்தோஷமுள்ளவர்களும் ஆச்சர்யமுள்ளவர்களுமானார்கள். அரசனே! பிறகு அவர்கள் குழந்தையிடமுண்டான சோகத்தைத்தள்ளிவிட்டு ஸந்தோஷமுள்ள மனமுள்ளவர்களாய்ப் புத்திரனையெடுத்துக்கொண்டு வேகமாக நகரத்திற்குச் சென்றார்கள். நான்குஜாதியாயிருக்கும் யாவர்களுக்கும் இந்தப்புத்தியானது காண்பிக்கப்பட்டது. அறம் பொருள் மோக்ஷங்களுடன்கூடிய பழையஇவ்விதிஹாஸத்தைக்கேட்டமனிதன் எப்பொழுதும் இங்கும் மேலும் மிக்கஸந்தோஷமடைவான்" என்றுசொன்னார்.

---

## நூற்றைம்பத்துமூன்றுவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், மிக்கபலமுள்ளசத்துருவினிடத்தில்விரோதத்தைச்செய்து கொண்டவன்விஷயத்தில் உதாஹரணமாக ஓர்இலவ மரத்தின்சரித்திரத்தைச்சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பலமில்லாதவனும் அல்பபேஸனை யுள்ளவனும் எளியவனுமானமனிதன், அவிவேகத்தால் தற்புகழ்ச்சிகள்மட்டும்கூடினவனுகத் தகாதவார்த்தைகளால், பலமுள்ளவனும் எப்பொழுதும்அருகிலிருப்பவனும் உபகாரஞ்செய்வதிலும் அபகாரஞ் செய்வதிலும் ஸாமர்த்தியமுள்ளவனும் முயற்சியுள்ளவனுமான சத்துருவுக்குவிரோதத்தைச்செய்து, பின் அவன் அதிககோபங்கொண்டு தன்னைக் களையவேண்டுமென்றவிருப்பத்துடன் வரும்பொழுது தனக்குள்ளபலத்தைக்கொண்டு எவ்விதமிருக்கவேண்டும்?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"பாரதச்ரேஷ்டனே! இவ்விஷயத்திலும் இலவமரத்திற்கும் காற்றிற்கும் நடந்தஸம்பாஷணையான பழையஇவ்விதிஹாஸத்தை உதாஹரிக்கிறார்கள். இமயமலையை அடைந்து பலவருஷங்களாகவளர்ந்ததும் கிளைகளும் வேர்களும் இலைகளுமுள்ளதும் பெரிதுமானஒருமரமிருந்தது. ஓ!மஹாபாஹுவே! அந்தமரத்தினடியில் வெயிலால்துன்பப்பட்டவைகளும் ச்ரமத்தால்இளைப்புற்றவைகளுமான கொழுத்த யானைகளும் அவ்விதமே மற்றமிருகஜாதிகளும்இளைப்பாறிக்கொண்டிருந்தன. அந்தமரமானது நானூறுமுழம் சுற்றளவுள்ளதும் நெருங்கியநிழலுள்ளதும் கிளிகளாலும் நாகணவாய்ப்புட்களாலும் சப்திக்கப்பட்டதும் பூக்களுள்ளதும் கனிகளுள்ளதுமாயிருந்தது. மிக்க அழகான அந்தச்சிறந்தமரத்தினடியில் வழிப்போக்கர்களின் கூட்டங்களும் வர்த்தகர்களும் வனத்தில்தவஞ்செய்வோர்களும் வஸிப்பார்கள். பரதர்களிற்சிறந்தவனே! நாரதர், அந்தமரத்தின் பெரிய அந்தக் கிளைகளையும் எல்லாப்பக்கத்திலுமுள்ளகப்புக்களையுங்கண்டு அருகிற் சென்று அதைநோக்கிச் சொல்லத்தொடங்கினர்.

'மரங்களிற்சிறந்த இலவமரமே! நீ ஆச்சரியமான அழகுள்ளவனுயிருக்கிறாய்; ஆச்சரியமாக மனத்தைஇழுக்கிறாய். உன்னால் எப்பொழுதும் ஸந்தோஷமுள்ளவராயிருக்கிறோம். அப்பா! எப்பொழுதும் பக்ஷிகளும் மிருகங்களும் அப்படியே யானைகளும் மிக

அழகுள்ளவைகளாயும் ஸந்தோஷமுள்ளவைகளாயும் உன்னிடம் வஸிக்கின்றன. பெரியகிளையுள்ளவனே! உன்னுடைய கிளைகளையும் அங்ஙனமே பெரியகவைகளையும் எவ்விதத்திலும் காற்றால்முறிக்கப்பட்டவைகளாகக் காணேன். அப்பா! உன்னிடம் வாயுவானவன் பிரியமுள்ளவனு? அல்லது ஸ்நேஹிதனு? எந்தக்காரணத்தால் இந்த வனத்தில் வாயுவானவன் எப்பொழுதும் உன்னை நிச்சயமாக ரக்ஷிக்கிறான். பூஜ்யனுனவாயுவானவன் வேகமுள்ளவனுய் பலவிதமான மரங்களையும் மலைகளின்சிகரங்களையும் இருப்பிடத்திலிருந்து ஆட்டிவிடுகிறான். சுத்தமாகவீசும்வாயுவானவன் பாதாளத்தையும் குளங்களையும் ஆறுகளையும் அவ்விதமேகடல்களையும் காயவைசெய்கிறான். ஸ்நேஹிதனுயிருப்பதால் வாயுவானவன் உன்னை ரக்ஷிக்கிறான்; ஸந்தேகமில்லை. ஆகையால், நீ பலகிளைகளும் இலைகளும் மலர்களுமுள்ளவனுயிருக்கிறாய். அப்பா! பெரியமரமே! இந்தப்பறவைகள் உன்னிடம் ஸந்தோஷத்துடன் விளையாடிக்கொண்டிருப்பது உனக்கு அழகாகத் தோன்றுகிறது. சேர்ந்திருக்கும் இப்பறவைகளின் இனிமையானகுரல்கள் வெவ்வேறுகக் கேட்கப்படுகின்றன. பூக்களால்நல்லமணமுள்ளகாலத்தில் ஸிம்மக்கூட்டங்களின் தலைமையானவைகள் கத்திக்கொண்டிருக்கின்றன. இலவமரமே! அவ்விதம் வெயிலால் துன்பப்படும் இந்தயானைகளும் தங்களைச்சேர்ந்த கூட்டங்களுடன் விளக்கமுற்று உன்னை அடைந்து கர்ஜித்துக்கொண்டு ஸுகமடைகின்றன. அவ்விதமே மற்றுமுள்ள மிருகஜாதிகளாலும் மிகவும்விளங்குகிறாய். மரமே! அவ்விதம் பலகூட்டங்கள் வந்துவஸிப்பதாலும் மேருமலைபோல்விளங்குகிறாய். பிராம்மணர்களாலும் தவத்தில்ஸித்திபெற்ற முனிவர்களாலும் அவ்விதமே துறவிகளாலும் விளங்குகிறாய். உன்னுடைய இடத்தைத் தேவலோகத்திற்குச்சமமென்றேநினைக்கிறேன்.

---

நூற்றைம்பத்துநான்காவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(இலவமரத்தின் சரித்திரத்தொடர்ச்சி.)

இலவமரமே! பயங்கரனும் எல்லாவிடத்திலும் ஸஞ்சரிப்பவனுமானவாயுவானவன் என்னகாரணத்தால் உன்னை எப்பொழுதும்ரக்ஷிக்கிறான்? பந்துவாயிருப்பதாலோ; அல்லது ஸ்நேஹமாயிருப்பதாலோ; இதிற்சந்தேஹமில்லை. இலவமரமே! 'நான் உன்னுடையவனுக இருக்

கிறேன்?' என்றுசொல்லி எப்பொழுதும் வாயுவுக்கு மிகவும் கீழ்ப்படிந்ததில்லைமையை நீ அடைந்திருக்கிறாய். அக்காரணத்தால் வாயுவானவன் உன்னைரக்ஷிக்கிறான். மரமாவது மலையாவது வீடாவது இவ்விதமாயிருப்பதை நான்காணேன். பூமியில் வாயுவின்பலத்தால் பங்கமடையாதிருப்பதைக் காணேனென்பது என் அபிப்பிராயம். இலவமரமே! நீயோ வாயுவால் பலகாரணங்களுக்காக ரக்ஷிக்கப்படுகிறாய்; நிச்சயம். ஆகையால் பரிவாரங்களுடன்கூடியவனாக ஸந்தேஹமில்லாமல்நிற்கிறாய்' என்றுசொன்னார்.

இலவமரம், 'பிராம்மணரானநாரதரே! வாயுவானவன் என்னை எந்தக்காரணத்தால்ரக்ஷிக்கிறானோ அஃது அவன் எனக்குஸகாவாயிருப்பதாலுமன்று; எனக்குப்பந்துவாயிருப்பதாலுமன்று; வெகுகாலமாக என்னிடம்பிரியமுள்ளவனாயிருப்பதாலுமன்று. நாரதரே! என்பராக்ரமத்தின்பலமானது வாயுவுக்கும் பயத்தையுண்டுபண்ணுகிறது. வாயுவானவன் என்னுடையபலத்தில் பதினெட்டிலொரு பாகத்தையும் அடைந்தவனல்லன். மரங்களையும் மலைகளையும் மற்றுமுள்ள அசையாப்பொருளையும் ஸஞ்சரிக்கும்பிராணியையும் பங்கப்படுத்திக்கொண்டு குரூரனாகவரும்வாயுவை நான்பலத்தால் அடக்கியிருக்கிறேன். (மற்றவைகளைப்) பங்கப்படுத்தும் அந்தவாயுவானவன் பலமுறை என்னால்பங்கமடைந்திருக்கிறான். தேவரிஷியே! ஆகையால், கோபங்கொண்டவாயுவினிடமிருந்தும் நான் பயமடையமாட்டேன்' என்றுசொல்லிற்று.

நாரதர் சொல்லத்தொடங்கினார். 'இலவமரமே! உன்னுடைய எண்ணம் விபரீதமானது. இதிற்சந்தேகமில்லை. வாயுவின்பலத்திற்குச்சரியானபலமுள்ளபிராணி ஓரிடத்திலுமில்லை. இந்திரனும் யமனும் குபேரனும் ஜலங்களுக்குப்பதியானவருணனும் வாயுவுக்குச் சரியானவர்களல்லர். மரமே! நீயா சரியாயிருப்பாய்? இலவமரமே! பிராணியென்று எதெல்லாம் பூமியில்சலிக்கிறதோ அந்தஎல்லாப் பிராணியிடத்திலும் பூஜ்யனான வாயுவானவன் அசைவையும் உயிரையும்உண்டுபண்ணும் பிரபுவாயிருக்கிறான். இந்தவாயுவானவன் நன்றாகச்சலித்தால் பிராணிகளை நன்றாகச்சலிக்கும்படிசெய்வான். கெடுதலாகச்சலித்தால் மனிதர்களிடம் மிகவும்விகாரமான சேஷ்டையை உண்டுபண்ணுவான். இவ்விதமாயிருப்பவனும் எல்லாப்பிராணிகளுக்கும் மேலானவனும் பூஜிக்கத்தக்கவனுமான அந்தவாயுவை நீ பூஜியாமலிருக்கிறாய்.[1] இது புத்திக்குறைவைத்தவிர வேறென்ன? பல

---

1 வேறுபாடம்.

மில்லாதவனும் கெட்டபுத்தியுள்ளவனுமான நீ வீணாகப் பலபேசு கிறாய். இலவமரமே! கோபமுதலியவைகளால் மறைக்கப்பட்டு நீ பொய்பேசுகிறாய். நீ இவ்விதம் பேசுவதில் எனக்குக் கோபமுண் டாகிறது. உன்னுடைய பலதுர்ப்பாஷையை நான் இதோ வாயு வுக்கு நேரில்சொல்லுகிறேன். புத்திகெட்டவனே! புத்தியுள்ளவை களானசந்தனம், ஸ்யந்தனம், சாலம், ஸரளம், தேவதாரு, நீர்நொச்சி, தன்வனம்என்னும் மரங்களாலும் மற்றும் மிகப்பலமுள்ளமரங்களா லுங்கூட இவ்விதம் வாயுநிந்திக்கப்பட்டதில்லை. அந்தமரங்களும் வாயுவுக்குள்ளபலத்தையும் தங்களுக்குள்ளபலத்தையும்அறிகின்றன. ஆகையால், மிகஉத்தமமான அந்தமரங்கள் வாயுவை அவமதிக்கிற தில்லை. நீயோ அவிவேகத்தால் வாயுவின் அளவில்லாதபலத்தையறிய வில்லை. ஆகையால், இப்படியே வாயுவின்ஸமீபத்திற்குச்செல்லுகி றேன்' என்றுசொன்னார்.

---

நூற்றைம்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(இலவமரத்தின் சரித்திரத்தொடர்ச்சி.)

அரசச்ரேஷ்டனே! பிரம்மஜ்ஞானிகளிற்சிறந்த நாரதரானவர் இலவமரத்தினிடம் இவ்விதஞ்சொல்லிவிட்டு, அதனுடைய எல்லா வார்த்தையையும் வாயுவினிடம்சொல்லத்தொடங்கினார். ''வாயுவே! இமயமலையின்புறத்திலுண்டானதும் பரிவாரங்களுள்ளதும் பெரிய வேருள்ளதும் பெரியநிழலுள்ளதுமான ஓர்இலவமரமிருக்கிறது. அந்தது உன்னை அவமதிக்கிறது. அந்தது உன்னைப்பற்றிப் பலநிந்தை யுள்ளவசனங்களைப்பேசிற்று. வாயுவே! நான் அவைகளை உன்முன் னிலையில்சொல்வது யுக்தமாகாது. வாயுவே! நீ எல்லாப்பிராணி களுக்கும்மேலானவனென்றும் மிகச்சிறந்தவனென்றும் மிக்கபூஜ்ய னென்றும் எல்லாஉலகங்களுக்கும்ஈசனானப்ரபுவென்றும் நானறிகி றேன்' என்றுசொன்னார். நாரதருடைய இந்தவசனத்தைக்கேட்டு வாயுவானவன் கோபங்கொண்டு அந்தஇலவமரத்தினிடம்வந்து பின் வரும்வசனத்தைச் சொல்லத்தொடங்கினான்.

'இலவமரமே! நாரதர்போகும்போது உன்னால்என்னைப்பற்றிய நிந்தைசொல்லப்பட்டதாம். நான்வாயு; என்னுடையப்ரபாவத்தை யும் பலத்தையும் உனக்குக்காண்பிக்கிறேன். நான் உன்னை அறியாத

வனல்லன். மரமே! எனக்கு நீ தெரிந்தவனாகிறாய். ப்ரபுவானபிதாமஹரானவர் பிரஜைகளைப்படைக்குங்காலத்தில் உன்னிடத்தில்இளைப்பாறிக்கொண்டிருந்தார். அவர் இளைப்பாறினகாரணத்தால் உனக்கு இந்தஅநுக்ரஹம் என்னால்செய்யப்பட்டது. மரங்களில் அதமமே! [1] அவரநுக்ரஹத்தால் உன்னை நான்முறியாமலிருக்கிறேன். அவிவேகியானமற்றவனைப்போல என்னை நீ அவமதிக்கிறகாரணத்தால் நீ என்னை அவமதியாமலிருக்கும்படி இதோ என்னைக்காண்பிக்கிறேன்' என்றுசொன்னான். பிறகு இவ்விதஞ்சொல்லப்பட்ட இலவமரமானது பரிஹஸிப்பதுபோலச் சொல்லத்தொடங்கிற்று. 'வாயுவே! நீகோபங்கொண்டு தானாகவே உன்னை ஆரண்யத்தில் காண்பித்துக்கொள்; என்னிடத்தில் கோபத்தைவிட்டுவிடு; கோபங்கொண்டு எனக்கு என்னசெய்துவிடுவாய்? வாயுவே! நீ உனக்கு ப்ரபுவாயிரு; நான் உனக்குப் பயப்படுகிறவனல்லன். நான் உன்னைவிடப் பலத்தில் மேலானவன். நான்உன்னிடத்தில் பயத்தை அடையவேண்டியதில்லை. எவர்கள் புத்தியால்பலமுள்ளவர்களோ அவர்கள் மிகவும்பலசாலிகளாகிறார்கள். எவர்கள் பிராணனில்மட்டும் பலமுள்ளவர்களோ அவர்கள் பலமுள்ளவர்களே அல்லரென்று சொல்லப்படுகிறார்கள்' என்றுசொல்லிற்று. இவ்விதஞ்சொல்லியதைக்கேட்ட வாயுவானவன், 'உனக்குள்ளபலத்தை நாளைக்கே காண்பிக்கிறேன்' என்றவசனத்தைச்சொன்னான். பிறகு இரவுவந்தது. உடனே இலவமரமானது, (வாயுவுக்கு) பகையிருப்பதை மனத்தில்நிச்சயஞ்செய்து தன்னை வாயுவுக்குச்சரியன்றென்றும் பார்த்துக்கொண்டு அப்பொழுது ஆலோசிக்கத்தொடங்கிற்று. 'நாரதரிடம் என்னால் எந்த வார்த்தைசொல்லப்பட்டதோ அதுபொய். நான் வாயுவின்பலத்திற்கு நிகரான ஸாமர்த்தியமுள்ளவனல்லன். அவன் பலசாலியன்றோ. நாரதர் எவ்விதஞ்சொன்னாரோ அவ்விதம் வாயுவானவன் எப்பொழுதும் பலமுள்ளவன்தான். நானோ மற்றமரங்களைவிடப் பலங்குறைந்தவனென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால், புத்தியில் எனக்குச்சரியான மரம் ஒன்றுமில்லை. ஆகையால், நான் புத்தியைப்பிடித்துக்கொண்டு வாயுவினிடமிருந்து நேரும்பயத்தை விலக்கிக்கொள்வேன். ஆரண்யத்திலுள்ளமரங்கள் அந்தப்புத்தியை அடைந்துநிற்குமாகில் கோபங்கொண்டவாயுவினிடமிருந்து எப்பொழுதும் துன்பமில்லாதவைகளாயிருக்கலாமென்பதிற் சந்தேஹமில்லை. நான் எவ்விதம் அறிகிறே

---

[1] 'கெட்டபுத்தியுள்ளதே! அதனால் நீ ரக்ஷிக்கப்படுகிறாய். உன்வீர்யத்தால் நீ ரக்ஷிக்கப்படவில்லை' என்பது வேறுபாடம்.

னே அவ்விதம் மிகவுங்கோபங்கொண்டவாயு இந்தமரங்களை அசையாமலிருக்கும்படிசெய்ய அவிவேகிகளான இந்தமரங்கள் அறிகிறதில்லை' என்றுஆலோசித்தது. கலக்கமடைந்த இலவமரமானது அப்பொழுது மனத்தில்நிச்சயஞ்செய்துகொண்டு உடனேகிளைகளையும் கவைகளையும் சிறுகிளைகளையும் தானுகவேகீழேதள்ளிக்கொண்டது. அந்தமரமானது கிளைகளையும் இலைகளையும் பூக்களையும்தள்ளிவிட்டுக் காலையில்வருகிற வாயுவைப்பார்த்துக் கொண்டிருந்தது. பிறகு கோபங்கொண்டு பெருமூச்செறிந்தவாயுவானவன் பெரியமரங்களைத்தள்ளிக்கொண்டு அந்தஇலவமரம் இருக்கிறஇடத்திற்கு வந்தான். இலைகள் போனதும் நுனிக்கிளைகள்விழுந்ததும் பூக்களுதிர்ந்ததுமாயிருக்கும் அந்தமரத்தைக்கண்டு வாயுவானவன் சிரித்துக்கொண்டு ஸந்தோஷத்துடன்கூடியவனுய் ஒடிந்தகிளைகளுள்ள இலவமரத்தைநோக்கி, இவ்விதம் வசனத்தைச்சொல்லத்தொடங்கினுன். 'இலவமரமே! கிளைகளைமுறிப்பதாகிய கஷ்டம் உன்னுல்செய்துகொள்ளப்பட்டதுபோல் வேதான் நானும் உன்னைக் கோபத்தால்செய்வேன். உன்னுடைய கெட்ட எண்ணத்தால் இப்பொழுது பூக்களும் நுனிக்கிளைகளும் போனவனும் தளிர்களும் இலைகளும் உதிர்ந்தவனுமான நீ என்பராக்ரமத்திற்கடங்கினவனுகச் செய்யப்பட்டாய்' என்றுசொன்னுன். அப்பொழுது வாயுவின்இந்தவசனத்தைக்கேட்டு வெட்கமடைந்த இலவமரமானது முன் நாரதர்சொன்ன அந்தவசனத்தைநினைத்து வருத்தமடைந்தது.

அரசப்புலியே! இவ்விதமே இலவமரம்போல அவிவேகியானவன் பலஹீனனுயிருந்துகொண்டு அதிகபலசாலியுடன் விரோதத்தையுண்டுபண்ணிக்கொண்டு வருத்தமடைவான். ஆகையால், பலஹீனன் அதிகபலசாலிகளுடன் விரோதத்தை உண்டுபண்ணிக் கொள்ளக்கூடாது. விரோதத்தைஉண்டுபண்ணிக்கொள்ளுகிறவன் இலவமரம் எப்படிச்சோகமடைந்ததோ அப்படிச்சோகமடைவான். பெரியபுத்தியுள்ளவர்கள் அபகாரிகளிடத்திலும் விரோதத்தைவெளியிடமாட்டார்கள். மஹாராஜனே! அவர்கள் மெள்ளமெள்ளப் பலத்தை வெளியிடுவார்கள். புத்தியில்லாதமனிதன் புத்தியால்பிழைப்பவனோடு பகையைச் செய்துகொள்ளக்கூடாது. நல்லபுத்தியுள்ளவனுடைய புத்தியானது பஞ்சுகளில்தீயானதுசெல்வதுபோல விரோதிகளிடம் செல்லும். அரசனே! மனிதனிடம் புத்திக்குச்சரியானதொன்றுமில்லை. அரசச்ரேஷ்டனே! அவ்விதமே பலத்திற்குச்சரியானது இவ்வுலகில் ஒன்றுமில்லை. ஆகையால், சிறுவனும் ஜடனும் குருட

னும் செவிடனுமானாலும் அதிகபலமுள்ளவனிடத்தில் (எவனும்) பொறுமையுள்ளவனாயிருக்கவேண்டும். சத்துருக்களைக்கொல்லும் அரசச்ரேஷ்டனே! அஃது உன்னிடம் காணப்படுகிறது. பெரிய காந்தியுள்ள அரசனே! பதினெட்டு அக்ஷௌஹிணிகளும் மஹாத்மாவான அர்ஜுனனுடையபலத்திற்குச் சரியாகவில்லை. அவைகள், பலத்தைஅடைந்து ஸஞ்சரிக்கிறவனும் இந்திரகுமாரனும் கீர்த்தி பெற்றவனுமான பாண்டவனால் யுத்தத்தில்அடிக்கப்பட்டுப் பங்கமடைந்தன. பாரத! ராஜதர்மங்களும் ஆபத்காலத்திற்குரியதர்மங்களும் விரிவாக உனக்குஉபதேசிக்கப்பட்டன. மஹாராஜனே! திரும்பவும் எதை நான் உனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுவினவினர்.

---

## நூற்றைம்பத்தாறுவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், பாபத்திற்குக்காரணத்தையும் அதனை விலக்கும்மார்க்கத்தையும்கூறியது.)

யுதிஷ்டிரர், "பரதர்களிற்சிறந்தவரே! எது பாபத்திற்கிருப்பிடமென்பதையும் எந்தக்காரணத்தால் பாபமுண்டாகிறதென்பதையும் நான் உண்மையாகக் கேட்கவிரும்புகிறேன்". என்றுசொல்ல, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"அரசனே! எதுபாபத்திற்கிருப்பிடமோ அதைக்கேள். பெரிய முதலைபோன்றலோபம் ஒன்று (பாபத்திற்கிருப்பிடம்.) லோபத்தால் பாபமுண்டாகிறது. லோபத்திலிருந்து பாபமும் அதர்மமும் அப்படியே மிகமேலானதுக்கமும் உண்டாகின்றன. எந்தலோபத்தால் ஜனங்கள் பாபத்தைச் செய்கிறவர்களாகிறார்களோ அந்தலோபமானது ஹிம்ஸைக்குக்காரணமாகிறது. லோபத்திலிருந்து கோபமுண்டாகிறது. லோபத்திலிருந்து காமமுண்டாகிறது. லோபத்திலிருந்து அவிவேகமும் மாயையும் மானக்குறையும் பராதீனமான பிணைப்பும் பொறாமையும் வெட்கத்தைவிடுவதும் பொருள்நாசமும் தர்மநாசமும் சிந்தையும் அபகீர்த்தியுமாகிய யாவுமுண்டாகின்றன. ஈயாமையும் குதர்க்கமும் கெட்டகாரியங்களில்முயற்சியும் குலமதமும் கல்விமதமும் அழகின்மதமும் தனமதமும் எல்லாப் பிராணிகளிடத்திலும்த்ரோஹமும் எல்லாப்பிராணிகளிடத்திலும்அவமதிப்பும் எல்லாப்பிராணிகளிடத்திலும் நம்பிக்கையில்லாமையும் எல்லாப்பிராணிக

ளிடத்திலும் கபடமாயிருப்பதும் பிறர்பொருள்களை அபஹரிப்பதும் பிறர்தாரங்களைத்தொடர்வதும் வாக்கின்வேகமும் மனத்தின்வேகமும் நிந்திப்பதில்வேகமும் ரஹஸ்யேந்திரியத்தின்வேகமும் வயிற்றின்வேகமும் பயங்கரமானமரணவேகமும் பலமான அஸூயையின்வேகமும் வெல்லத்தகாதபொய்யிலுள்ளவேகமும் தடுக்கமுடியாத நாவின்வேகமும் பொறுக்கமுடியாதசெவியின்வேகமும் நிந்தையும் ஸ்துதியும் மத்ஸரமும் பாபமும் கெட்டசெய்கையைச்செய்வதும் எல்லாவிதமான ஸாஹஸங்களையுஞ்செய்வதும் செய்யத்தகாதவைகளைச்செய்வதும் லோபத்தாலுண்டாகின்றன. மனிதர்கள் பிறந்தபொழுதும் குழந்தைப்பருவத்திலும் கௌமாரப்பருவத்திலும் யௌவனப்பருவத்திலும் தமக்குரிய ஒருகாரியத்தை விடாமலிருக்கக் காரணமும், ஜரையை அடைந்தவனிடத்திலும் கிழத்தனத்தை அடையாததும், எப்பொழுதும் ஆழமானஜலமுள்ளநதிகளால் கடலானது நிரப்பமுடியாமலிருப்பதுபோல எவ்விதமும் [1]பிரியத்தால்பூர்த்திசெய்யமுடியாததும், லோபங்களால்ஸந்தோஷமடையாததும், காமங்களாலும் திருப்தியடையாததும்,தேவர்களாலும் கந்தர்வர்களாலும் அஸுரர்களாலும் பெரியஉரகர்களாலும் அப்படியே எல்லாப்பிராணிகளின் கூட்டங்களாலும் உண்மையாய்அறியப்படாததுமான அந்தலோபத்தையும் (அதற்குக்காரணமான) அவிவேகத்தையும் மனத்தைவென்ற மனிதன் ஜயிக்கவேண்டும். கௌரவ்ய! மனத்தை அடக்காதவர்களும் லோபிகளுமாயிருப்பவர்களுக்கு டம்பமும் த்ரோஹமும் நிந்தையும் கோட்சொல்லுவதும் மத்ஸரமும்உண்டாகும். மிகப்பெரிய சாஸ்திரங்களைக்கற்றவர்களும் பலகல்விகளுள்ளவர்களும் ஸந்தேஹங்களை அறுக்கிறவர்களுமாயிருப்பவர்களும் அல்பமானபொருளில் புத்தியுள்ளவர்களாகி இவ்வுலகில் கஷ்டப்படுகிறார்கள். த்வேஷத்தையும் கோபத்தையும்அடைந்தவர்களும் பெரியோர்களின் ஆசாரத்திலிருந்து விலகியவர்களும் புற்களால்மறைக்கப்பட்டகிணறுகள்போல வாக்கில் இனிமையுள்ளவர்களும் உள்ளத்தில்கத்திபோன்றவர்களும் தர்மவேஷம்பூண்டவர்களும் தர்மத்திற்கென்று பிறரைத்துன்பப்படுத்துகிறவர்களுமான அல்பர்கள் ஜகத்தைத் திருடுகிறார்கள். ஒருகாரணத்தைப்பலமாகக்கொண்டு [2]பலகெட்டவழிகளையும் உண்டுபண்ணுகிறார்கள். பேராசைக்குத்தக்க ஞானங்களிலிருந்துகொண்டு எல்லாநல்லவழிகளையும் அழிக்கிறார்கள். பேராசைபிடித்த கெட்டபுத்தியுள்ள

---

1 'பொருளின் வரவால்' என்பது வேறுபாடம்.

2 இங்கு 'தாம்' என்கிறபதம் விடப்பட்டது.

வர்களால் அபஹரிக்கப்படும் தர்மத்தின்நிலை எதுஎதுமாறுகிறதோ அதுஅது பிறகு அவ்வவ்விதமே ப்ரஸித்திஅடையும். கௌரவ்ய! பேராசைகொண்டபுத்தியுள்ளவர்களிடம் கர்வமும் கோபமும் கொழுப்பும் தூக்கமும் ஸந்தோஷமும் சோகமும் அபிமானமுமே காணப்படுகின்றன. எப்பொழுதும் லோபத்துடன்கூடியஇவர்களை அயோக்கியர்களென்று தெரிந்துகொள். யோக்கியர்களைப்பற்றிக் கேள். எவர்களிடம், 'பரலோகம்சென்று திரும்பவும்இவ்வுலகத்திற்குவந்துவிடுவோமோ' என்கிறபயமும் பரலோகத்தைப்பற்றியபயமும் இல்லையோ, பிரியங்களும் அப்பிரியங்களுமான போக்யவஸ்துக்களில் ஆசையில்லையோ, எவர்களுக்குப் பெரியோர்களின்ஆசாரம்பிரியமோ, எவர்களிடம் அடக்கம்நிலைபெற்றிருக்கிறதோ, எவர்களுக்கு ஸுகமும் துக்கமும்ஸமமோ, எவர்களுக்குஸத்தியம்மிகமுக்கியமோ, பரிசுத்தமானநியமமுள்ள அந்தப்பெரியோர்களைப்பற்றிச் சொல்லுகிறேன். ஓ! பாரத! அவர்கள் கொடுப்பவர்களும் பெற்றுக்கொள்ளாதவர்களும் அவ்விதமே தயையுள்ளவர்களும் பித்ருக்களிடமும்தேவர்களிடமும்அதிதிகளிடமும் பக்தியுள்ளவர்களும் எப்பொழுதும்முயற்சியுள்ளவர்களும் யாவருக்கும்உபகாரஞ்செய்கிறவர்களும் வீரர்களும் எல்லாத்தர்மங்களையும் ரக்ஷிக்கிறவர்களும் எல்லாப்பிராணிகளுக்கும் ஹிதர்களும் யாவற்றையும் வரையாமற்கொடுக்குந்தன்மையுடையவர்களுமாயிருப்பார்கள். தர்மத்திற்குரிய வ்யவகாரத்தைச்செய்யும்அவர்களை (அதிலிருந்து) அசைக்கமுடியாது. எந்தநடையானது ஸாதுக்களால் முன்காலத்தில் அநுஷ்டிக்கப்பட்டதோ அது வேற்றுமைப்படாது. நல்வழியிலிருப்பவர்கள், பயமுள்ளவர்களும் சபலர்களும் பயங்கரர்களுமாயிருக்கமாட்டார்கள். ஸாதுவாயிருப்பவர்கள் எப்பொழுதும் அவர்களை வழிபடவேண்டும்; அஸாதுக்களை விலக்கவும் வேண்டும். ஆசையையும் கோபத்தையும் விலக்கியவர்களும் அபிமானமும் அஹங்காரமும்அற்றவர்களும் நல்லநியமமுள்ளவர்களும் உறுதியான மரியாதையுள்ளவர்களுமாயிருப்பவர்கள் எவர்களோ அவர்களை ஆராதித்துக்கொள். அவர்களுடையதர்மத்தையுங்கேள். யுதிஷ்டிர! அவர்கள்செய்யும்தர்மமானது [1](பலர்) சொல்லவேண்டியதற்காகவும் கீர்த்திக்காகவும் செய்யப்படுகிறதன்று. செய்யவேண்டியது கடமையென்றெண்ணியே தர்மமும் அதுபோலச் சரீரத்திற்குரியகாரியங்களும் செய்யப்படுகின்றன. பயமும் கோபமும் ஆசையும் சோகமும் அவர்களிடமிரா. அவர்கள் தர்மவேஷம் பூண்டவர்க

1 'பொருளுக்காகவும்' என்பது வேறுபாடம்.

ளல்லர் ; மறைவாக ஒன்றைச்செய்கிறவர்களுமல்லர். கௌந்தேய! எவர்களிடம் பேராசையும் அவிவேகமும் இல்லையோ எவர்கள் ஸத்யத்திலும் ஒழுங்கான நடையிலும் நிலைபெற்றிருக்கிறார்களோ எவர்களுக்கு (அதிலிருந்து) திரும்பவும் நழுவுதலில்லாமலிருக்கிறதோ அவர்களிடம் பக்தியுடனிரு. லாபங்களில் ஸந்தோஷமடையாமலும் லாபமில்லாதவைகளில் துக்கப்படாமலுமிருப்பவர்களும் உறுதியான பராக்கிரமமுள்ளவர்களும் உண்மையானவழியில் நிலைபெற்றவர்களும் அறிவில்விருப்பமுள்ளவர்களும் லாபாலாபமும் ஸுகதுக்கமும் பிரியாப்ரியமும் மரிப்பதும் ஜீவிப்பதும் ஸமமாகக்கொண்டவர்களும் அபிமானமும் அஹங்காரமும் அற்றவர்களும் ஸத்வகுணத்திலிருப்பவர்களும் ஸமதிருஷ்டியுள்ளவர்களும் தர்மத்தில்பிரீதியுள்ளவர்களும் உத்தமர்களுமான அந்தமஹாத்மாக்களை நீ அடக்கத்துடனும் அஜாக்ரதையில்லாமலும் நன்றாகப்பூஜித்துக்கொண்டிரு. அப்பா! க்ஷேமமுள்ளவனே! அவர்களின் சொற்கள்யாவும் தெய்வத்தின் அனுக்ரஹத்தால் குணமுள்ளவைகளாகவேயிருக்கும். மற்றமூடர்களுடைய பயனற்றசொற்கள் அமங்களத்தைக் கொடுக்கத்தக்கவைகளாகும்" என்று சொன்னார்.



## நூற்றைம்பத்தேழாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், அஜ்ஞானத்தின் லக்ஷணமுதலியவற்றைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "குருகுலத்திலுதித்தபிதாமஹரே! துன்பங்களுக்கிருப்பிடமான லோபம்சொல்லப்பட்டது. அஜ்ஞானத்தையும் உண்மையாகக்கேட்கவிரும்புகிறேன்" என்றுசொன்னார்.

பீஷ்மர், "எவன் அஜ்ஞானத்தால்பாபத்தைச்செய்து தனக்குத் தக்கதை அறிந்துகொள்ளாமல் ஸாதுக்களின்நடைகளையும் பகைக்கிறானோ அவன் உலகம்நிந்திக்கத்தக்கநிலையை அடைவான் ; அஜ்ஞானத்தால் நரகத்தை அடைவான் ; அஜ்ஞானத்தால்கெட்டகதியை அடைவான் ; அஜ்ஞானத்தால் துக்கத்தை அடைவான் ; அஜ்ஞானத்தால் ஆபத்துக்களில்முழுகுவான்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "அரசரே! அஜ்ஞானத்தையும் அஜ்ஞானத்தின்ப்ரவிருத்தியையும் இடத்தையும் வளர்ச்சியையும் குறைவையும் உத்பத்தியையும் மூலத்தையும் சேர்க்கையையும் கதியையும் காலத்தையும் காரணத்தையும் காரியத்தையும் உள்ளபடி உண்மையாகக்கேட்கவிரும்புகிறேன். துக்க

மாகக் காணப்படுவதுளதுவோ அஃது அஜ்ஞானத்தாலுண்டாவ தன்றோ ?" என்றுசொல்ல, பீஷ்மர்சொல்லத்தொடங்கினார்.

"ராகமும், த்வேஷமும், மோஹமும், ஸந்தோஷமும், சோகமும், அபிமானமும், காமமும், கோபமும், கர்வமும், தூக்கமும், சோம்பலும், விருப்பமும், பகையும், தாபமும், பிறர்களின்பெருமையில் வருத்தமும்,பாபச்செயல்களும் [1] அஜ்ஞானமென்றுசொல்லப்படுகின்றன. மஹாராஜனே! எந்தஅஜ்ஞானத்தின்ப்ரவிருத்தியைப்பற்றியும் வளர்ச்சிமுதலியவைகளைப்பற்றியும் நீகேட்கிறாயோ அவற்றை அதிகவிரிவாகக்கேள். பாதகுலத்திலுதித்தஅரசனே! அஜ்ஞானம் அதிலோபமென்னும்இவ்விரண்டும் ஸமமானபயனுள்ளவைகளென்றும் ஸமமான தோஷமுள்ளவைகளென்றும் தெரிந்துகொள். அஜ்ஞானமானது லோபத்திலிருந்து உண்டானது. பலவிதமான கஷ்டகதியைக் கொடுக்கவேண்டி லோபம்வளர்ச்சியடைந்தால் அஜ்ஞானம் மிக வளர்ச்சிஅடையும். லோபம்ஸமமாகவிருந்தால் அது ஸமமாயிருக்கும். லோபம்குறைந்தால் அது குறைவடையும். லோபமுண்டானால் அஜ்ஞானமுண்டாகும். (அஜ்ஞானஸ்வரூபமான) லோபத்திற்கு மூலம் [2] அவிவேகமாகும். காலத்தால் பலசரீரங்களில்பிறப்பது அஜ்ஞானத்தின்கதியாகும். [3] லோபம் அறுக்கப்படவும் வேற்றுமைப்படவும் காலந்தான் காரணமாகும். விவேகமில்லாதிருப்பவனுக்கு அஜ்ஞானத்தால் லோபமும் ஆசையைஉருவமாகக்கொண்ட (கஷ்ட) கதியும் உண்டாகும். லோபத்திலிருந்தே எல்லாத்தோஷங்களுமுண்டாகின்றன. ஆகையால், லோபத்தை விலக்கிக்கொள்ளவேண்டும். ஜனகரும் யுவனாச்வனும் ப்ருஷதச்வனும் ப்ரஸேனஜித்தும் மற்றுமுள்ள அரசர்களும் லோபத்தைநாசஞ்செய்ததால் தேவலோகமடைந்தார்கள். லோபத்தைநன்றாக அறுத்துவிட்டுப் பின் அரசர்கள் தேவலோகமடைந்திருக்கிறார்கள். குருக்களில்சிறந்தவனே! ப்ரத்யக்ஷமாகவே லோபத்தைப் புத்தியால் விலக்கிக்கொள். மனிதன் லோபத்தைவிலக்கிவிட்டால் இவ்வுலகத்திலும் இறந்தபின்னும் ஸுகமடைந்து ஸந்தோஷிப்பான்" என்றுசொன்னார்.

---

[1] 'இங்கு காரியத்திற்கும் காரணத்திற்கும் வேற்றுமையில்லையென்னும் கொள்கையையனுஸரித்து அஜ்ஞானத்தின்காரியமான ராகமுதலியவற்றையே அஜ்ஞானமென்றுகூறினார்' என்பதுபழையஉரை.

[2] 'கார்யாகாரியங்களின்வேற்றுமையைஅறியாமை அவிவேகம். இஃது உள்ளவரைக்கும் அஜ்ஞானமுமிருக்கும். இதுதான் அஜ்ஞானத்தின்சேர்க்கையாகும்' என்பதுபழையவுரை.

[3] 'லோபத்தின்நாசத்திற்கும் வேற்றுமைக்குங் காரணமானகாலந்தான் அஜ்ஞானத்தின்நாசத்திற்கும் வேற்றுமைக்கும் காரணமாகும்' என்பது பழையவுரை.

## நூற்றைம்பத்தேட்டாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், தமமானது தர்மத்திற்கு முக்கியகாரணமென்று சொல்லி அதைப்புகழ்ந்துகூறியது.)

யுதிஷ்டிரர், "தர்மபுத்தியுள்ளவரே! வேதமோதுவதில் முயற்சிசெய்கிறவனும் விசேஷமாகத் தர்மத்தைவிரும்புகிறவனுமான பிராம்மணனுக்கு இவ்வுலகில் எது சிறந்ததென்றுசொல்லப்படுகிறது? பிதாமஹரே! இவ்வுலகில் பலவிதமாகக் காணப்படுவதில் இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் எதைச் சிறந்ததென்றுநினைக்கிறீரோ அதை எனக்குச் சொல்லவேண்டும். பாரதரே! இந்தத்தர்மவழியானது பெரிதும் பலகிளைகளுள்ளதுமாயிருக்கிறது. இதிலுள்ள தர்மங்களுள் எது முக்கியமாகஅநுஷ்டிக்கத்தக்கதென்று கருதப்படுகிறது? தந்தையான அரசரே! பெரிதும் பலகிளைகளுள்ளதுமான தர்மத்திற்கு உண்மையாக எது முக்கியமானமூலமோ அதுமுழுமையும் சோம்பலின்றிச்சொல்லும்" என்றுசொல்ல, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"அறிவிற்சிறந்த நீ எதனால்க்ஷேமத்தையடைவாயோ, அமிருதத்தைப்பானம்பண்ணியதுபோல எதனால் திருப்தியுள்ளவனுவாயோ அதை இப்பொழுது உனக்குச் சொல்லுகிறேன். மஹரிஷிகளால் தத்தமக்குள்ளஞானத்தை ஆச்ரயித்துப் பலவிதமான அந்தஅந்தத் தர்மமுறைகள் கூறப்பட்டிருக்கின்றன. அவைகளுள், [1]தமமானது மிகமுக்கியமானது. நிச்சயமான அறிவுள்ளபெரியோர்கள் தமத்தை மோக்ஷத்திற்குக்காரணமென்று கூறுகிறார்கள். பிராம்மணனுக்குத் தமமானது ஸநாதனமானசிறந்ததர்மமாகும். தமமில்லாதவனுக்குக் காரியங்களின்ஸித்தி உள்ளபடிகாணப்படுகிறதில்லை. தமமானது தானத்திற்கும் யாகங்களுக்கும் அத்தியயனத்திற்கும் மேலானதாயிருக்கிறது. தமமானது தேஜஸைப்பெருகச்செய்யும். தமமானது பெரியபரிசுத்தமுமாகும். தேஜஸுடன்கூடியமனிதன் பாபங்களை விட்டுவிலகிப் பெரியபயனைப்பெறுவான். உலகங்களில் தமத்திற்குச் சரியானவேறுதர்மத்தை நாங்கள் கேட்டதில்லை. உலகத்தில் எல்லாவிததர்மங்களுமுள்ளவர்களுக்கும் தமமானதுஉத்தமதர்மமென்பது ப்ரஸித்தம். அரசனே! எப்பொழுதும் தமத்துடன்கூடியிருப்பவன்

1 இந்திரியங்களினடக்கம்.

பெரியதர்மத்தை அடைவான். இங்கும்இறந்தபின்னும் பெரியஸௌகத்தையும்பெறுவான். தமமுள்ளவன் ஸௌகமாக உறங்குவான்; ஸௌகமாகவே விழித்துக்கொள்வான்; உலகங்களிலும் ஸௌகமாகஸஞ்சரிப்பான்; இவனுடையமனமும் தெளிவாயிருக்கும். தமமில்லாதபுருஷன் அடிக்கடி துக்கத்தை அடைவான்; தன்குற்றத்தாலுண்டாகும் மற்றும்பலதுன்பங்களையும் உண்டுபண்ணிக்கொள்ளுவான். நான்கு ஆச்ரமங்களிலும் தமமேஉத்தமமானவ்ரதமென்று சொல்லுகிறார்கள். எவைகளின்கூட்டம்தமமோ அவ்விதத் தமத்திற்குரிய குறிகளைச் சொல்லுகிறேன். கௌரவ்ய! பொறுமை, தைரியம், கொல்லாமை, ஸமபுத்தி, ஸத்யம், ருஜுவாயிருப்பது, இந்திரியங்களின்வெற்றி, ஸாமர்த்யம், மிருதுவாயிருப்பது, வெட்கம், சபலமில்லாமை, தீனத்தனமில்லாமை, கோபமில்லாமை, ஸந்தோஷம், இன்சொல், துன்பஞ்செய்யாமை, அஸூயையின்மை, பெரியோர்களைப்பூஜிப்பது, பிராணிகளிடந்தயை, கோட்சொல்லாமை, ஜனவாதத்தையும் பொய்வாதத்தையும் ஸ்துதியையும் நிந்தையையும்விலக்குவது (இவைகள் தமத்தின் குறிகளாகும்.) இவைகளின்சேர்க்கை தமமாகும். தமமுள்ளவன் காமத்தையும் கோபத்தையும் லோபத்தையும் கர்வத்தையும் அவிநயத்தையும் தற்புகழ்ச்சியையும் ரோஷத்தையும் அஸூயையையும்அவமானத்தையும் செய்யவேமாட்டான். நிந்திக்கப்படாதவனும் ஆசையற்றபுத்தியுள்ளவனும் அல்பஸௌகங்களைவிரும்பாதவனும் அஸூயையில்லாதவனுமான அந்தமனிதன் ஸமுத்திரம்போல [1]எவ்விதத்தாலும் திருப்தியுள்ளவனாகமாட்டான். தமமுள்ளவன், 'நான் உன்னுடையவன்; நீ என்னுடையவன்; அவர்கள் என்னைச்சேர்ந்தவர்கள்; நான் அவர்களைச்சேர்ந்தவன்' என்றஇந்தமுன்னுள்ளஸம்பந்திகளின்ஸம்பந்தத்தைப் பற்றுதலுடனடையமாட்டான். கிராமத்திற்குரியவைகளும் அப்படியேவனத்திற்குரியவைகளுமான உலகத்திலுள்ளப்ரவிருத்திகளெல்லாவற்றையும் நிந்தையையும் ஸ்துதியையும் எவன் அடையவில்லையோ அவன் முக்தியடைவான். எவன் மித்திரஸ்வபாவமும் நல்லசீலமும் தெளிந்தமனமுமுள்ளவனும் ஆத்மாவையறிந்தவனுமாயிருக்கிறானோ பலவிதமான ஆசைகளிலிருந்துவிடுபட்ட அவனுக்கு இறந்தபின் பெரியபயனுண்டாகும். நல்லநடக்கையும் நல்லசீலமும் பொருந்தியவனும் தெளிந்தமனமுள்ளவனும் ஆத்மாவைஅறிந்தவனுமான அறிஞன் இவ்வுலகில் பூஜையைப்பெற்றுப்

---

[1] 'பிரம்மலோகங்கிடைத்தாலும் அஃது அநித்யமானதால் அதையும் விரும்பான்' என்பது பழையவுரை.

பிறகு நற்கதியை அடைவான். எந்தக்கர்மம் இவ்வுலகில் சுபமாகவேயிருக்கிறதோ, எது ஸாதுக்களால் ஆசரிக்கப்பட்டதோ அதுதான் ஞானத்துடன் கூடியமுனிக்கு இயற்கையிலுள்ளவழியாயிருந்துகுறையாமலிருக்கும். (வீட்டிலிருந்து) வெளிக்கிளம்பி அரண்யஞ்சென்று இந்திரியங்களைவென்றவனும் ஞானத்துடன்கூடியவனும் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு இவ்விதம்ஸஞ்சரிப்பவனுமாயிருப்பவன் பிரம்மத்தின்தன்மையை அடையத்தக்கவனாவான். பிராணிகளிடமிருந்து எவனுக்குப்பயமில்லையோ, எவனிடமிருந்து பிராணிகளுக்குப் பயமில்லையோ அவனுக்குச் சரீரத்திலிருந்துவிடுபட்டபின் ஓரிடத்திலிருந்தும் பயமிராது. அவன் கர்மங்களை அனுபவித்து அழிப்பான். (புதிதாகக்)கர்மங்களைச்சேர்க்கமாட்டான். எல்லாப்பிராணிகளிடமும் ஸமமாயிருந்துகொண்டு பயமில்லாமலிருக்கும்மித்திரநிலையை அடைவான். ஆகாயத்தில்பறவைகளின்வழிபோலவும் தண்ணீரில்மீன்களின்வழிபோலவும் அவனுடையவழிகாணப்படாது; ஸந்தேஹமில்லை. அரசனே! எவன் வீடுகளைவிலக்கிவிட்டு மோக்ஷத்தையே அடைகிறானோ அவனுக்கு அழிவில்லாதவருஷங்கள் தேஜோமயமான உலகங்கள்ஸித்திக்கும். எல்லாக்கர்மங்களையுந்தள்ளிவிட்டுத் தவத்தையும் விதிப்படிதள்ளிவிட்டுப் பலவிதக்கல்விகளையுந்தள்ளிவிட்டு மற்றயாவற்றையுந்தள்ளிவிட்டுக் காமவிஷயத்தில்பரிசுத்தனும் திரும்பாமல் செல்லுகிறவனும் தெளிந்தமனமுள்ளவனும் பரிசுத்தனுமான ஆத்மஞானியானவன் இந்தஉலகத்தில்பூஜையைப்பெற்றுப் பிறகு ஸ்வர்க்கத்தைஅடைவான். வேதராசிகளிலிருந்துவெளியானதும் (பிராணிகளின் ஹ்ருதயமென்னும்) குகையில்வைக்கப்பட்டதும் அழிவில்லாததுமான பிரம்மலோகமென்னும்ஸ்தானமானது தமத்தால் அடையப்படுகிறது. ஞானத்தில்ஸந்தோஷப்படுகிறவனும் எல்லாப்பிராணிகளிடமும்மித்திரனாயிருப்பவனுமான அறிவுள்ளவனுக்கு இவ்வுலகில் மறுபிறப்பென்னும்பயமில்லை. பரலோகத்தைப்பற்றியபயமேது? தமத்தில் ஒருதோஷந்தான் இருக்கிறது. இரண்டாவதுதோஷமில்லை. அதாவது:—தமத்துடன்கூடியஇந்தமனிதனை உலகம் சக்தியற்றவனென்றுநினைக்கும். அறிவுள்ளவர்களில்மிகப்பெரியவனே! இந்தத் தமமுள்ளவனுக்குத் தோஷம்ஒன்று; குணமோ மிகஅதிகம். பொறுமையால் மிகப்பெரியஉலகங்கள் ஸித்திக்கின்றன. பொறுக்குந்தன்மை மிகஅரிது. பார்த்த! தமமுள்ளவனுக்கு அரண்யத்தால் என்ன பயன்? அதுபோலத் தமமில்லாதவனுக்கும் அரண்யத்தால் என்ன பயன்? தமமுள்ளவன் [illegible]

யம். ஆச்ரமமும் அதுதான்" என்றுசொன்னார். பீஷ்மருடைய இந்தவசனத்தைக்கேட்டு யுதிஷ்டிராஜர் அமிருதத்தால்திருப்தி யடைந்தவர்போல மிக்கஸந்தோஷமுள்ளவரானார். அவர் தர்மத்தைத் தரிப்பவர்களுள்சிறந்தபீஷ்மரைத் திரும்பவும்கேட்க, பிறகு, கௌர வர்களிற்சிறந்தஅந்தப்பீஷ்மரும் பிரீதியுடன் யாவற்றையும் அவருக்குச் சொல்லலானார்.

---

## நூற்றைம்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் தவத்தின்பெருமையைச் சொல்லியது.)

"இவ்வனைத்தும் தவத்தைமூலமாகக்கொண்டதென்று கவிகள் சொல்லுகிறார்கள். தவத்தைச்செய்யாதமூடன் காரியங்களின் பயனை அடையமாட்டான். பிரபுவானபிரம்மதேவரானவர் தவத்தாலேயே இவ்வுலகத்தையெல்லாம் படைத்தார். அப்படியே ரிஷிகள் தவத்தால் வேதங்களை அடைந்தார்கள். அன்னத்தையும் கனிகளையும் கிழங்குகளையும் தவத்தாலேயே (பிரம்மதேவர்) உண்டுபண்ணினார். மனத்தைஅடக்கினஸித்தர்களும் தவத்தினால் மூன்றுஉலகங்களையும் பார்க்கிறார்கள். அகதமுதலிய ஔஷதங்களும் பூஜ்யமானமூன்று வேதவித்யைகளும் தவத்தாலேயே ஸித்திக்கின்றன. ஸித்தியானது தவத்தை மூலமாகக்கொண்டதன்றோ? எது அடையத்தகாததும் ஆராதிக்கத்தகாததும் அடக்கத்தகாததும் பொறுக்கத்தகாததுமாயிருக்கிறதோ அதுமுழுதும் தவத்தால் ஸாதிக்கப்படும். தவமென்பது தாண்டக்கூடியதன்று; ரிஷிகள் அணிமாமுதலிய ஐச்வர்யத்தைத் தவத்தாலேயே அடைந்திருக்கிறார்கள். ஸந்தேகமில்லை. கள்ளுக் குடித்தவனும் உடையவன்விருப்பத்துக்குமாறாகப் பொருளையெடுப்பவனும் ப்ரூணஹத்திசெய்தவனும் குருதாரத்திற்சென்றவனுமான மனிதன் நன்றாகச்செய்யப்பட்டதவத்தாலேயே பாபத்திலிருந்துவிடுபடுகிறான். பலரூபமுள்ள தவத்தினுடைய அந்தஅந்தவழிகளால் பிரவ்ருத்திக்கிறவனும நிவ்ருத்திதர்மத்திலிருக்கிறவனுமான மனிதனுக்கு உபவாஸத்தைவிடப் பெரியதவமில்லை. மகாராஜனே! அஹிம்ஸை, ஸத்யவசனம், தானம், இந்திரியங்களின் அடக்கம்இவை களைவிடமேலானதவமானது உபவாஸவிரதமே. தானத்தைக்காட்டிலும் மிகவும்செய்யக்கடினமானது வேறில்லை. தாயினும்சிறந்ததான

[1] ஆச்ரமமில்லை. மூன்றுவேதங்களையுங்கற்றவர்களைக்காட்டிலும் மிகப் பெரியதில்லை. ஸந்யாஸத்திலும் மிகப்பெரிதானதவமில்லை. பிராம் மணர்களும் ரிஷிகளும் பித்ருக்களும் தேவர்களும் இந்திரியங்களை (வெளியிற்செல்லாமல்) ரக்ஷிக்கிறார்கள். ஆகையால், பொருளிலும் தர்மத்திலும் உபவாஸத்தைவிடப் பெரிதானதவமில்லை. ரிஷிகளும் பித்ருக்களும் தேவர்களும் மனிதர்களும் மிருகங்களும் பக்ஷிகளும் ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான மற்றுமுள்ளபிராணிகள்யாவும் தவத்தை மிகப்பெரிதாகக்கொண்டிருக்கின்றன. அவைகள் தவத் தால்ஸித்திபெறுகின்றன. இவ்விதமே தேவர்கள் தவத்தால் மஹி மையை அடைந்திருக்கிறார்கள். இந்த [2]வெவ்வேறான இன்பங்களும் எப்பொழுதும் தவத்தின்பயன்களாகும். தவத்தால் தேவத்தன்மை யையும்அடையலாமென்பது நிச்சயம்" என்றுசொன்னார்.



## நூற்றறுபதாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், ஸத்தியத்தின்லக்ஷணமுதலியவற்றைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பிராம்மணர்களும் ரிஷிகளும் பித் ருக்களும் தேவர்களும் ஸத்யத்தைத் தர்மமென்றுகொண்டாடு கிறார்கள். நான் ஸத்யத்தைத் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன். அதனை எனக்குச் சொல்லவேண்டும். அரசரே! ஸத்யம் என்ன லக்ஷணமுள்ளது? அஃது எப்படி அடையப்படும்? ஸத்யத்தை அடை தால் என்னவரும்? அஃது எத்தன்மையது? சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"நான்குஜாதிகளுக்குமுள்ள தர்மங்களுடைய [3]ஸாங்கர்யமா னது சிறந்ததன்று. பார்த்த! ஸத்தியமானது எல்லாஜாதிகளுக்கும் பொதுவான தர்மமாகும். ஸத்யமானது எப்பொழுதும் ஸாதுக்களிட முள்ளதர்மமாகும். ஸத்யமானது ஸநாதனமான தர்மமாகும். ஸத் யத்தையே பூஜிக்கவேண்டும். ஸத்யமென்பது உத்தமமானகதியா கும். ஸத்யமானது தர்மமும் தவமும் யோகமுமாகும். ஸத்யமானது

[1] 'யாவற்றையும் விட்டுவிலகினஸந்யாஸியும் தாயைவிடக்கூடாது' என் பது பழையஉரை.

[2] 'காணப்படும்நக்ஷத்திரமுதலியஜ்யோதிகள் தவத்தின்பயன்கள்' என் பது பழையஉரை.

[3] ஒருஜாதிக்குவிதித்ததர்மத்தை மற்றொருஜாதியிலுள்ளவன்செய்வது.

ஸநாதனமானபிரம்மம். ஸத்யமானது பெரியயஜ்ஞமாகச் சொல்லப் படுகிறது. ஸத்யத்தில் யாவும் நிலைபெற்றிருக்கின்றன. ஸத்யத்தின் ஸ்வரூபம் எதுவோ அதையும் அதன்லக்ஷணத்தையும் அதன்பராக்ர மத்தையும் உள்ளபடி முறையேசொல்லுகிறேன். ஸத்யம் எவ்விதம் அடையப்படுமோ அதையும் இதில் நீ தெரிந்துகொள்ளத்தக்கவன். பாரத! எல்லாஉலகங்களிலும் ஸத்யம் பதின்மூன்றுவிதமாகிறது. அரசச்ரேஷ்டனே! உண்மை, ஸமதை, தமம், அமாத்ஸர்யம், க்ஷமை, லஜ்ஜை, திதிக்ஷை, அனஸூயை, த்யாகம், த்யானம், ஆர்யத்தன்மை, த்ருதி, எப்பொழுதும்தயை, அஹிம்ஸைஎன்று ஸத்யத்தின்உருவங் கள் [1]பதின்மூன்றாகும்; ஸந்தேஹமில்லை. ஸத்யமென்பது அழிவில் லாததும் நிலைபெற்றதும் விகாரமில்லாததும் எல்லாத்தர்மங்களுக்கும் விரோதமில்லாததுமாயிருக்கும். இது யோகத்தால் அடையப்படும். தன்னிடத்திலும் சத்ருவிடத்திலும் இஷ்டத்திலும் அனிஷ்டத்தி லும் (ஒருவிதமாயிருப்பது) ஸமதைஎன்றுசொல்லப்படுகிறது. இஃது விருப்புவெறுப்புக்களையும் காமக்ரோதங்களையும்நசிக்கும்படிசெய்த பின் அடையப்படும். எப்பொழுதும் வேறுவஸ்துவில் ஆசையில்லா மையும், காம்பீர்யமும், தைரியமும், பிறருக்குத்தீங்குசெய்யாமையும் கோபத்தைஅடக்குவதும் தமமாகும். இது ஞானத்தால் அடையப் படும். தானத்திலும் தர்மத்திலுமுள்ளஅடக்கமானது அமாத்ஸர்ய மென்று அறிஞர்கள் கூறுகிறார்கள். எப்பொழுதும்நிலைபெற்றஸத் யத்தால் மனிதன் அமாத்ஸர்யமுள்ளவனாக இருக்கவேண்டும். ஸாது வானவன், பொறுக்கக்கூடியவிஷயத்திற்போலவே பொறுக்கக்கூடாத விஷயத்திலும், எல்லாவிதமான ப்ரியங்களையும் அப்ரியங்களையும் க்ஷமிக்கவேண்டும். அதனால் ஸத்யத்தை அடைவான். எப்பொழு தும் நல்லஅடக்கமுள்ளவாக்கும் மனமும் புத்தியுமுள்ளவனாகி மங் களகார்யத்தை நன்றாகச்செய்வதும் ஒருவிஷயத்திலும் வாட்டமில் லாமலிருப்பதும் லஜ்ஜையாகும். லஜ்ஜையானது தர்மத்தால் அடை யப்படும். உலகத்தைஅனுஸரித்து நடக்கவேண்டி அறம்பொருள்களி னிமித்தம்பொறுத்துக்கொள்வது உத்தமதர்மமான திதிக்ஷையாகும். அது தைரியத்தால் அடையப்படும். கம்பீரமாகஇருப்பது அன ஸூயையாகும். இது தானத்தாலடையப்படும். பற்றுக்களை முற் றும் துறந்தமனிதன் அவ்விதமே விஷயங்களையும்விடுவது ராகமும் த்வேஷமும் இல்லாதவனுக்குள்ள த்யாகமாகும். வேறுவிதமாயுள்

[1] பதினொன்குகூறப்பட்டுள்ளன. த்யாகத்தையும் த்யானத்தையும் ஒன்றா க்கி த்யாகவிஷயமானத்யானமென்று பழையவுரை கூறுகிறது.

ளது த்யாகமன்று. [1]ஆசையற்றவனும் பயனைக்கருதாதவனுமாய் எவன் முயற்சியுடன் பிராணிகளுக்குச்சுபமான கர்மத்தைச்செய்கிறானோ அவனுக்கு அஃது ஆர்யத்தன்மையாகும். ஸுகத்திலும் துக்கத்திலும் எதனால் விகாரத்தை அடையமாட்டானோ அது த்ருதியாகும். தனக்கு ஸம்பத்தை விரும்புகின்ற அறிவுள்ளவன் எப்பொழுதும் அதை அடையவேண்டும். (மனிதன்) எவ்விதத்திலும் பொறுமையுள்ளவனும் அவ்விதமே ஸத்யத்தைப்பெரிதாகக்கொண்டவனுமாயிருக்கவேண்டும். ஸந்தோஷத்தையும் பயத்தையும் கோபத்தையும்விட்டவனானபண்டிதன் [2]தயையை அடைவான். செய்கையாலும் மனத்தாலும் வாக்காலும் எல்லாப்ராணிகளிடத்திலும் அனுக்ரஹமும் தானமும் அஹிம்ஸையாகும். இது ஸாதுக்களின்ஸனாதனமான தர்மம். பாரத! ஸத்யமென்னும் ஒரேலக்ஷணமுள்ள வெவ்வேறான இந்தப் பதின்மூன்றுஸ்வரூபங்களும் ஸத்யத்தையே அடுத்திருக்கின்றன; ஸத்யத்தையே பெருமைப்படுத்துகின்றன. அரசனே! ஸத்யத்தைச்சேர்ந்த குணங்களின் முடிவைச் சொல்லஇயலாது. ஆகையால் பிராம்மணர்களும் தேவர்களும் பித்ருக்களும் ஸத்யத்தையேகொண்டாடுகிறார்கள். ஸத்யத்தைவிடப் பெரியதர்மமில்லை. பொய்யைவிடப் பெரியபாதகமில்லை. ஸத்யமானது தர்மத்தின்நிலையாகும். ஆகையால், ஸத்யத்தைக் குறைவில்லாமலிருக்கச்செய்யவேண்டும். தானமும் தக்ஷிணையுடன்கூடியயாகங்களும் மூன்றுஅக்னிகளைச் சேர்ந்த அக்னிஹோத்திரமும் வேதங்களும் மற்றுமுள்ள தர்மநிச்சயங்களும் ஸத்யத்திலிருந்துவருகின்றன. ஆயிரம் அச்வமேதயாகங்களும் ஒரு ஸத்யமும் தராசில்தூக்கப்பட்டன. ஆயிரம் அச்வமேதங்களைவிட ஒருஸத்யந்தான் சிறந்ததாயிருக்கிறது" என்றுசொன்னார்.

நூற்றறுபத்தோராவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

—— ——

(பீஷ்மர், கோபமுதலியவைகளின் உத்பத்திமுதலியவற்றைக் கூறியது.)

யுதிஷ்டிரர், "பாதர்களிற்சிறந்தவரே! பிராஜ்ஞர்களிற்பெரியவரே! எந்தஅஜ்ஞானத்திலிருந்து கோபமும், காமமும், சோகமும், அவிவேகமும், ப்ரவிருத்தியும், பாவசத்தன்மையும், மதமும், லோப

---

[1] இதன்பிறகுள்ள அதிகபாடமான அரைச்லோகம்விடப்பட்டது.

[2] 'த்ருதிம்' என்பதுமூலம்; அதற்கு, 'தயை' என்பது பழையஉரை.

மும், மாத்ஸர்யமும், ஈர்ஷையும், நிந்தையும், அஸூயையும், தயையும், பயமும் உண்டாகின்றனவோ அதையும் இவைகளையும் உள்ளபடி எனக்குச் சொல்லவேண்டும்” என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

“மஹாராஜனே! பிராணிகளுக்கு அதிகபலமானசத்ருக்களென்றுசொல்லப்படும் இந்தப் [1]பதின்மூன்றும் நாலுபக்கத்திலும் இவ்வுலகிலுள்ளபுருஷர்களைப் பிடித்துக்கொண்டிருக்கின்றன. அஜாக்ரதையாயிருக்கும்புருஷனை இந்தப்பகைகள் ஜாக்ரதையுள்ளவைகளாய்த் துன்பப்படுத்துகின்றன. இவைகள் செந்நாய்கள்போல மனிதனைக்கண்டமாத்திரத்தில் [2]பலாத்காரமாக நாசஞ்செய்கின்றன. புருஷச்ரேஷ்டனே! மனிதன், எப்பொழுதும், ‘இவைகளிலிருந்து துக்கமுண்டாகிறது; இவைகளிலிருந்துபாபமுண்டாகிறது’ என்று தெரிந்துகொள்ளவேண்டும். அரசனே! இவைகளுண்டாவதையும் இருப்பதையும் நசிப்பதையும் இப்பொழுது உனக்குச் சொல்லுகிறேன். முதலில் கோபமுண்டாவதை உள்ளபடிசொல்லுகிறேன். அரசனே! சொல்லுகிறஎன்னிடமிருந்து அதைக்கேள். லோபத்திலிருந்து கோபமுண்டாகிறது; பிறரிடம் (காணப்படும்) குற்றங்களால் வ்ருத்தியடைகிறது. அரசனே! அது பொறுமையால் தடுக்கப்படுகிறது; பொறுமையால் விலகுகிறது. ஸங்கல்பத்திலிருந்து காமமுண்டாகிறது. அஃது அனுபவிக்கப்பட்டுவளர்ச்சியடைகிறது. எப்பொழுது (மனிதன்) அறிவுள்ளவனாய் வெறுப்படைகிறானோ அப்பொழுது உடனே காமம் நாசமடையும். [3]அவிவேகமானது அஜ்ஞானத்தினின்று உண்டாகிறது. அது பாபங்களை அடிக்கடிசெய்வதால் வளர்ச்சியடைகிறது. (மனிதன்) எப்பொழுது அறிவிற்சிறந்தவர்களிடம் ஸந்தோஷமாகச்சேருகிறானோ அப்பொழுது அஃது உடனே நாசமடைகிறது. குருக்களிற்சிறந்தவனே! எவர்கள் இவ்வுலகிலுள்ள வேதத்திற்குவிரோதமானசாஸ்திரங்களைப் பார்க்கிறார்களோ அவர்களுக்கு ப்ரவ்ருத்தியென்பது உண்டாகிறது. அது வேதத்தின் உண்மைப்பொருளை அறிவதால் விலகுகிறது. மனிதனுக்

1 ‘லோபத்தைப்பற்றி முன்னம் கூறியிருத்தலால், இங்கு அதைவிலக்கிப் பதின்மூன்றாகக்கொள்ளவேண்டும்’ என்பது பழையஉரை. இவைகளுக்கு லக்ஷணம்சொல்லுமிடத்தில் இங்கேசொல்லியமுறைப்படி சொல்லப்படவில்லை. இதனைப் பழையஉரையும் கூறுகிறது.

2 வேறுபாடம்.

3 பின்னர் உரியஇடத்தில் சொல்லப்படுவதால், அதிகபாடமான ஒன்றரைச்லோகங்கள் இங்கே விடப்பட்டன.

குப் பிரியமானவஸ்துவிலகுவதால் அதிலுள்ளபிரீதியிலிருந்து சோக முண்டாகிறது. எப்பொழுது சோகம்பயனற்றதென்றறிகிறானோ அப் பொழுது அஃது உடனே நாசமடைகிறது. கோபத்தாலும் லோபத் தாலும் பரவசத்தன்மையுண்டாகிறது. அஃது அப்யாஸத்தால் வ்ரு த்தியடைகிறது. (அதில் கோபத்தாலுண்டானது) எல்லாப்ராணிக ளிடத்திலுமுள்ள தயையால் நிவ்ருத்தியாகிறது; (லோபத்தாலுண்டா னது) வெறுப்பால்விலகுகிறது. ஸத்யத்தைவிடுவதாலும் அஹிதர்க ளானமனிதர்களை அடைவதாலும் மாத்ஸர்யமுண்டாகிறது. அப்பா! இது ஸாதுஜனங்களை அனுஸரிப்பதால் நாசமடைகிறது. குலத்தா லும் கல்வியாலும் தனத்தாலும் மனிதர்களுக்கு மதமுண்டாகிறது. அந்தமதமானது குலமுதலியஇவைகளை உண்மையாக அறிவதால் உட னே நாசமடைகிறது. காமத்தாலும் அதிகஸந்தோஷத்தாலும் ஈர் ஷை உண்டாகிறது. அது மற்றப்பிராணிகளை நன்றாக அறிந்துகொள்வ தால் நாசமடைகிறது. அரசனே! [1]விப்ரமத்தாலும் பகைக்கத்தக்கவை களும் ஸம்மதிக்கத்தகாதவைகளுமான உலகவிரோதிகளின்வார்த்தை களாலும் நிந்தை உண்டாகிறது. அஃது உலகங்களைநன்றாகப்பார் த்தபின் விலகுகிறது. எவர்கள் அபகாரஞ்செய்தபலிஷ்டனுக்கு ப்ரதி செய்யச்சக்தியற்றவர்களோ அவர்களுக்குக் கொடுமையான அஸூயை உண்டாகும். அது கருணையால் நிவ்ருத்தியடைகிறது. எப்பொழு தும் தீனர்களாயிருப்பவர்களைக்கண்டால் அதிலிருந்து தயையுண் டாகிறது. எப்பொழுது தர்மத்தின்மேன்மைத் தெரிந்துகொள்ளுகி றானோ அப்பொழுது அந்தத்தயையானது விலகுகிறது. ப்ராணிகளு க்கு எப்பொழுதும் அஜ்ஞானத்திலிருந்து [2]பயமுண்டாகிறதாகக் காணப்படுகிறது. போகங்களுக்குள்ளநிலையற்றதன்மையை அறிந்து அனுபவித்தபின் அந்தப்பயம் விலகுகிறது. இந்தப்பதின்மூன்றும் மிக்க அடக்கமுள்ள மனிதனால்தான் ஜயிக்கப்பட்டவைகளென்று சொல்லுகிறார்கள். இந்தப்பதின்மூன்றுதோஷங்களும் த்ருதராஷ் டிரன்குமாரர்களிடமிருந்தன. எப்பொழுதும் ஸத்யத்தையேவிரும்பு. 3 பெரியோர்களைஸேவித்ததால் உன்னால் இவைகள் ஜயிக்கப்பட்டன" என்றுசொன்னார்.

---

1 பரபரப்பினால் காரியங்களை மாறுபடச்செய்வது.
2 'லோபம்' என்பது மூலம்; அதற்கு, 'பயம்' என்பது பழையஉரை.
3 வேறுபாடம்.

## நூற்றறுபத்திரண்டாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், க்ரூரர்களின் லக்ஷணமுதலியவற்றைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "ஓ! பாரதரே! எப்பொழுதும் ஸாதுக்களுக்குள்ள க்ரூரத்தனமில்லாமையை ஸாமான்யஞானத்தால் அறிகிறேன். க்ரூரர்களையும் அவர்களுக்குள்ளசெய்கையையும் நானறியவில்லை. மனிதர்கள், முட்களையும் கிணற்றையும் தீயையும் எவ்விதம்விலக்குகிறார்களோ அவ்விதம் க்ரூரமானசெய்கையுள்ளமனிதனை விலக்குகிறார்கள். ஓ! பாரத! க்ரூரனாயிருப்பவன் இவ்வுலகிலும் இறந்தபின்னும் நிச்சயமாகஎரிக்கப்படுகிறான். ஓ! கௌரவ்யரே! ஆகையால், அந்தக்ரூரனுடைய நிச்சயமானதர்மத்தை நீர் சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"[1]நிந்திக்கத்தக்கஆசையும் செய்கைகளுமுள்ளவனும், பிறரை நிந்திக்கிறவனும், நிந்திக்கப்படுகிறவனும், 'நான் (தெய்வத்தால்) வஞ்சிக்கப்பட்டவன்' என்றுசொல்லிக்கொண்டு கெட்டகாரியத்தைச் செய்கிறவனும், தான்கொடுத்ததைப்புகழ்ந்துபேசுகிறவனும், த்வேஷத்தைச்செய்கிறவனும், இகழ்ந்தகார்யங்களைச்செய்கிறவனும், ஸ்நேஹத்தைக்காண்பித்துவஞ்சிப்பவனும், (ஸாமர்த்தியமிருந்தும்) வெளிக்கு ஏழைத்தனத்தைக்கொண்டாடுகிறவனும், உள்ளதைப்புதைப்பாதவனும், அபிமானமுள்ளவனும், ஆசையுள்ளவனும், தன்னைப்புகழ்ந்துகொள்ளுகிறவனும், எல்லாரிடத்திலும்சங்கைப்படுகிறவனும் காகம்போல [2]வஞ்சகப்பார்வையுள்ளவனும், க்ருபணனும், எப்பொழுதும் தன்வகுப்பைக்கொண்டாடுகிறவனும், ஆச்ரமங்களின்பகையும்ஸாங்கர்யமுமுள்ளவனும், எப்பொழுதும் ஹிம்ஸிப்பதைவிளையாட்டாகக் கொண்டவனும், குணதோஷங்களின்வேற்றுமையில்லாதவனும், பலபொய்யுள்ளவனும், அஹங்காரமுள்ளவனும், மிகவும்லோபியும் க்ரூரமானசெய்கையுள்ளவராவார்கள். இயற்கையில் தர்மமும் நற்குணங்களுமுள்ளவனைப் பாபிஎன்று அறிகிறவனையும், தன்சீலத்திற்குலைப்பாக ஒருவனையும்நம்பாதவனையும், பிறர்களுக்குத்தோஷமுள்ளாஹஸ்யத்தை நன்றாகவெளியிடுகிறவனையும், தோஷங்கள்ஸமானமாயிருந்தும் தன்ஜீவனத்திற்காகப் பிறனைக்கெடுப்பவனையும், உபகாரஞ்செய்யும்பிறனை வஞ்சிக்கப்பட்டவனாக நினைப்பவனையும், உபகாரஞ்செய்த

---

1 வேறுபாடம்.     2 பக்ஷபாதமுள்ளவன்.

மனிதனுக்கு ஸமயத்தில்பொருளைக்கொடுத்திருந்தாலும் பிறகுவருத்தமடைகிறவனையும், உண்ணத்தக்கதையும் குடிக்கத்தக்கதையும் நக்கியுண்ணத்தக்கதையும் மற்றுமுள்ள நல்லபோஜனத்தையும் பிறர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது புஜிக்கிறவனையும், க்ரூரனென்று சொல்லவேண்டும். எவன் பிராம்மணர்களின்பொருட்டு முதலில் (அன்னத்தைக்) கொடுத்துவிட்டு ஸ்நேஹிதர்களுடன் கூடப்புஜிக்கிறானோ அவன் இறந்தபின் ஸ்வர்க்கத்தை அடைவான்; இங்கும் அழிவில்லாத ஸுகமடைவான். பாதர்களில் மிகச்சிறந்தவனே! க்ஷேமத்தைவிரும்பும்மனிதனால் எப்பொழுதும்விலக்கத்தக்க இந்தக்குரூரனென்பவன் உனக்குச் சொல்லப்பட்டான்.

## நூற்றறுபத்துமூன்றாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், யாகமுதலியவைகளுக்காகப் பொருள்ஸம்பாதிக்கவேண்டிய விஷயத்தையும் பாபங்களையும் பாபங்களைப்போக்கத் தக்கபிராயச்சித்தங்களையும் சொல்லியது.)

பொருள் [1]அபஹரிக்கப்பட்டவனும் யாகஞ்செய்யப்போகிறவனும் எல்லாவேதாந்தங்களையும்அறிந்தவனும் குருவுக்காகவும் பித்ருகார்யத்திற்காகவும் அத்யயனத்திற்காகவும் தர்மப்படியாசிப்பவர்களுமான இந்தப்பிராம்மணர்கள் ஸாதுக்களாகக் காணப்படுகிறார்கள். பாரத! பொருளில்லாதஇந்தப்பிராம்மணர்களின்பொருட்டுத் தானத்தையும் வித்யையையும் அளிக்கவேண்டும். பாதர்களில்மிகச்சிறந்தவனே! வேறுபிராம்மணர்களின்பொருட்டு (யாகங்களில்) தக்ஷிணாதானஞ்செய்யவேண்டும். பிராம்மணர்களல்லாதவர்களுக்கும் யாகசாலையைவிட்டு வெளியில் பக்வமாகாத [2]அன்னம்கொடுக்கவேண்டுமெனவிதிக்கப்படுகிறது. அரசன் எல்லாரத்தினங்களையும் யோக்யதைக்குத்தக்கபடி கொடுக்கவேண்டும். [3]தக்ஷிணைகளுடன்கூடியவையும் அன்னத்துடன்கூடியவையுமான யாகங்கள் பிராம்மணர்பொருட்டேகொடுக்கத்தக்கவையாகும். பரிசுத்தமான ஆசாரமுள்ள அவர்கள் எப்பொழுதும் மற்றவர்களுக்குவேண்டி நற்குணத்துடன்

---

[1] வேறுபாடம்.  [2] அரிசிமுதலியவை.

[3] 'பிராம்மணர்களே வேதங்களும் அதிகதக்ஷிணையுள்ளயாகங்களும்ஆகிறார்கள்' என்பது வேறுபாடம்.

யாகஞ்செய்கிறார்கள். வேலைக்காரர்களின் ஜீவனத்திற்குப்போதுமானதும் மூன்றுவருஷங்களுக்கு வேண்டியதுமான தான்யமும் அதற்கதிகமானதும் எவனுக்கிருக்கிறதோ அவன் ஸோமரஸத்தைப் பானஞ்செய்யத்தக்கவனாகிறான். அரசன் விசேஷமாகத்தர்மிஷ்டனாயிருக்கும்பொழுது, யாகஞ்செய்யும்பிராம்மணனுக்கு யாகமானது ஓர் அம்சத்தால்தடைப்பட்டிருக்குமாகில் எந்தவைச்யன் பலபசுக்களுள்ளவனும் யாகங்களைவிட்டவனும் ஸோமபானஞ்செய்யாதவனுமாயிருக்கிறானோ அவனுடையகுடும்பத்திலிருந்து அந்தப்பொருளை யாகத்திற்குவேண்டி அவ்வரசன் அபஹரிக்கலாம். சிறிதுகுற்றமுள்ள சூத்திரனுடையவீட்டிலிருந்து பொருளை இஷ்டம்போல் அபஹரிக்கலாம். சூத்ரனுக்கு வீட்டில் சொந்தமானபொருளொன்றுமில்லை. நூறுபசுக்களுள்ளவன் ஆதானஞ்செய்துகொள்ளாமலிருக்கிறானோ ஆயிரம்பசுக்களுள்ளவன் யாகஞ்செய்யாமலிருக்கிறானோ அவர்களுடைய குடும்பங்களிலிருந்தும் ஆலோசியாமல் பொருளை அபஹரிக்கலாம். அரசன் தானஞ்செய்யாதவர்களிடமிருந்து எப்பொழுதும் தெரிவித்துவிட்டுப் பொருளை அபஹரிக்கலாம். அவ்விதமேநடத்திவரும் அரசனுக்குத் தர்மம்குறைவில்லாமலிருக்கும். அப்படியே ஆறுவேளைஉண்ணாமலிருப்பவன் ஏழாவதுவேளை போஜனத்திற்காக [1] அஶ்வஸ்தனவிதிப்படி (ஒருநாளைக்குவேண்டிய தான்யத்தை) கர்மங்களைவிட்டவனுடைய களத்திலிருந்தோ வயலிலிருந்தோ வீட்டிலிருந்தோ எங்கிருந்துகிடைக்குமோ அங்கிருந்து அபஹரித்துக்கொள்ளலாம். அரசன், கேட்பவனானாலும் கேளாதவனானாலும் அவனுக்கு இதை அறிவிக்கவேண்டும். தர்மமறிந்த அரசன் தர்மப்படி அவனுக்குத் தண்டனையைவிதியாமலிருக்கவேண்டும். அரசனுடைய அவிவேகத்தால் பிராம்மணன் பசியால்துன்பப்படுவான். கல்வியையும் சீலத்தையும்அறிந்துகொண்டு இந்தப்பிராம்மணனுக்கு ஜீவனத்தைச் செய்துகொடுக்கவேண்டும். தகப்பனானவன் ஔரஸபுத்திரனைரக்ஷிப்பதுபோல, இவனை ரக்ஷிக்கவும்வேண்டும். ஒவ்வொருவர்ஷத்திலும் செய்யத்தக்கதர்மங்களுக்குக் குறைவுவந்தால், எப்பொழுதும் வைஶ்வாநரியென்னும் இஷ்டியைச்செய்யவேண்டுமென்று முன்காலத்தில் தர்மத்தைக்கூறும் பெரியோர்களால் [2]அநுகல்பமானதர்மமொன்று சொல்லப்பட்டிருக்கிறது. விஶ்வேதேவர்களாலும் ஸாத்யர்களாலும் மஹரிஷிகளான பிராம்மணர்களாலும் ஆபத்காலங்களில் மரணத்தி

---

[1] மறுநாளைக்கு வைத்துக்கொள்ளாமல் ஒவ்வொருநாளைக்கு வைத்துக்கொள்ளும் வ்ருத்தி.

[2] வேறுபாடம்.

விருந்து பயந்து இந்தத்தர்மம் ப்ரதிநிதியாகச் செய்யப்பட்டிருக்கிறது. முக்கியமானதர்மத்தைச் செய்யச்சக்தியுள்ளவன் அநுகல்பத்துடனிருக்கிறானே துர்ப்புத்தியுள்ளஅவன் இவ்வுலகிலும் இறந்தபின்னும் அந்தத்தர்மத்தின்பயனை அடையமாட்டான். தர்மமறிந்தபிராம்மணன் அரசனிடத்தில் ஒன்றையும் தெரிவித்துக்கொள்ளாமலிருக்கவேண்டும்; அறிவிப்பதைவிட அறிவியாமலிருந்தால் தன்னுடையவீர்யமானது அதிக பலமுள்ளதாயிருக்குமென்று தெரிந்துகொள்ளவேண்டும். ஆகையால், வேதமோதும்பிராம்மணர்களின் தேஜஸானது எப்பொழுதும் அரசனுக்குப் பொறுக்கக்கடினமாகும். அறிவுள்ளவனும் தர்மத்தைவிதிப்பவனும் விதிப்படி நடப்பவனுமான பிராம்மணன் தேவனென்று சொல்லப்படுகிறான். அவனிடத்தில் க்ஷேமமல்லாததைச் சொல்லக்கூடாது; ஸாரமல்லாதவார்த்தையையுஞ்சொல்லக்கூடாது. க்ஷத்திரியன் தனக்குள்ளஆபத்தைத் தன் கைவலிமையாலும் வைச்யனும் சூத்திரனும் பொருள்களாலும் பிராம்மணன் மந்திரங்களாலும் ஹோமங்களாலும் விலக்கிக்கொள்ளவேண்டும். கன்னிகையானஸ்திரீயும் யௌவனமடைந்தஸ்த்ரீயும் மந்திரமறியாதவனும் விவேகமற்றவனும் உபநயனஞ்செய்யப்படாதவனும் அக்நிஹோத்ரஹோமஞ்செய்கிறவர்களாயிருக்கக்கூடாது. இவர்கள் அக்னிஹோத்திரத்தின் அந்தஹோமத்தைச்செய்வார்களாகில் நரகத்தில்விழுவார்கள். ஆகையால், யாகத்தில்ஸமர்த்தனும் வேதங்களின் கரையைக்கண்டவனுமாயிருப்பவன் ஹோமஞ்செய்கிறவனாயிருக்கவேண்டும். ப்ரம்மாவைத்தேவதையாகக்கொண்ட [1]குதிரையை ஆதானத்திற்குத்தக்ஷிணையாக அளிக்காமற்போனால் அவன்தர்மமறிந்தவர்களால் ஆதானஞ்செய்துகொள்ளாதவனென்றே சொல்லப்படுகிறான். இந்திரியங்களைஜயித்தவனும் ச்ரத்தையுள்ளவனுமாய் மற்றப்புண்யகர்மங்களைச் செய்துகொள்ளலாம். போதுமானதக்ஷிணையில்லாதயாகங்களை எவ்விதத்திலும் செய்யக்கூடாது. ஏனெனில், தக்ஷிணையில்லாதயாகமானது ப்ரஜைகளையும் பசுக்களையும் ஸ்வர்க்கத்தையும் கொல்லும்; இந்திரியங்களையும் இங்குள்ளகீர்த்தியையும் மேலுலகத்திற்குத்தக்ககியாதியையும் ஆயுளையும் அறுக்கும். எந்தச்சிலபிராம்மணர்கள் ரஜஸ்வலையுடன்சேர்ந்தவர்களோ எவர்கள் அக்னியைவிட்டவர்களோ எவர்களின்குலம் வேதமோதுபவர்களில்லாததோ அவர்கள்யாவரும் சூத்திரனின் செய்கையுள்ளவர்களாகிறார்கள். கிணற்றையேஜலமாகக்கொண்டகிராமத்தில்பிராம்மணன் சூத்திரஸ்திரீயின்

1 வேறுபாடம்.

பதியாயிருந்துகொண்டு பன்னிரண்டுவருஷங்கள்வஸித்தபின் சூத்திர கர்மத்தையே அடைந்தவனாகிறான். தன்பார்யையல்லாதஸ்திரீயைச் சயனத்தில் ஏற்பவனும் சூத்திரனையும் க்ஷத்திரியனையும் வைஸ்யனை யும் பெரியவர்களென்று நினைப்பவனுமானபிராம்மணன் பின்புறத் தால் வைக்கோலில் உட்காரவேண்டும். அரசனே! இதுவிஷயத்தி லும் அவன்எப்படிநன்றாகச்சுத்திபெறுவானே அப்படிக்குள்ள என் வசனத்தைக் கேள். நின்றும் உட்கார்ந்தும் விளையாடிக்கொண்டு கீழானஜாதியை ஸேவிப்பவனானபிராம்மணன் ஓர்இரவில் செய்கிற பாபத்தை மூன்றுவருஷங்கள் விரதமுள்ளவனாயிருந்து விலக்கிக் கொள்ளவேண்டும். அரசனே! விளையாட்டுடன்கூடியபொய்யும் ஸ்தி ரீகளிடத்திலும் விவாஹஸமயத்திலும் உயிருக்கபாயமுள்ள ஸமயத் திலும் எல்லாப்பொருளும்அபஹரிக்கப்படும்ஸமயத்திலும் சொல்லப் படும்பொய்யும் துன்பத்தைஉண்டுபண்ணுகிறதில்லை. இவ்வைந்து பொய்யும் பாதகங்கள் அல்லவென்றுசொல்லுகிறார்கள். சுபமான கல் வியை ஹீனனிடமிருந்தும் ச்ரத்தையுடன்பெற்றுக்கொள்ளலாம். அசுத்தமானவிடத்திலிருந்தும் ஆலோசியாமல் ஸுவர்ணத்தைஎடுத் துக்கொள்ளலாம். குற்றமுள்ளகுலத்திலிருந்தும் ரத்நம்போன்ற ஸ்த்ரீயை எடுத்துக்கொள்ளலாம். விஷத்திலிருந்தும் அமிருதத் தைப்பானஞ்செய்யலாம். ஸ்த்ரீகளும் ரத்நமும் ஜலங்களும் தர்மப் படி தோஷமுள்ளவைகளல்ல. வைஸ்யனாயிருப்பவன் பசுக்கள் பிராம் மணர்கள் இவர்களின்ஹிதத்திற்குவேண்டியும் ஜாதிகளுக்கு ஸாங் கர்யமுண்டாகுங்காலத்திலும் தன்னைரக்ஷித்துக்கொள்ளவேண்டியும் ஆயுதங்களை எடுக்கலாம். மஹாராஜனே! கட்குடித்தவனும் பிராம் மணனைக்கொன்றவனும் குருவின்தாரத்திற் சென்றவனும் தாமத மின்றி உடனே பதிதராகிறார். ஸுவர்ணத்தைத்திருடுவதும் பிராம் மணனுடைய பொருளைத்திருடுவதும் பாதகமாகும். சூதாடுவதும் கள் குடிப்பதும் செல்லத்தகாதஸ்திரீயிடஞ்செல்லுவதும் பதிதர்களு டன்சேருவதும் (பிராம்மணனல்லாதவன்) பிராம்மணஸ்திரீயினிடம் செல்லுவதுமாகியஇப்பாவங்கள் (அறிந்துசெய்யப்பட்டால்) பிராயச் சித்தஞ்சொல்லத்தக்கவைகளல்லவென்றுநினைக்கிறார்கள். இவைகள் மரணத்தையே முடிவாகக்கொண்டவைகளென்பதுநிச்சயம். பதித னுடன் கூடச்சேர்ந்துபோவதாலும் இருப்பதாலும் புஜிப்பதாலும் ஒருவருஷத்தில்பதிதனாவான். அவனுக்கு யாகஞ்செய்விப்பதாலும் அத்யயனஞ்செய்விப்பதாலும் [1]தானங்கொடுப்பதாலும் உடனேபதி

[1] 'விவாஹத்தால்ஸம்பந்தம்செய்வது' என்பது வேறுபாடம்.

தனுவான். இந்தப்பாவங்களைத்தவிர மற்றவைகள் பிராயச்சித்தமுள்ளவைகளென்பது நிச்சயம். பிராயச்சித்தத்திற்குத்தக்க விதியுடனிருந்து காலத்தால் திரும்பவும் அப்பாவத்தில் ருசியுள்ளவனுயிருக்கக் கூடாது. இவர்களில் முதல் [1]மூன்றுபேர்களைப்பற்றிய பிரேதகாரியம்வந்திருக்கும்பொழுது (அவர்களின்ஞாதியிடமிருந்து) [2]அன்னத்தையும் தனத்தையும் [3]பெற்றுக்கொள்ளலாம். ஆலோசனைசெய்ய வேண்டாம். இப்பாவமுள்ளவர்கள் அமாத்தியர்களானாலும் குருக்களானாலும் அவர்களைத் தர்மமுள்ளவன் தர்மப்படிவிலக்கவேண்டும். இவர்கள் பிராயச்சித்தங்களைச்செய்துகொள்ளாமல் ஸஹவாஸஞ்செய்யத்தக்கவர்களல்லர். அதர்மத்தைச்செய்தமனிதன் தர்மத்தாலும் தவத்தாலும் பாபத்தை விலக்கவேண்டும். [4]திருடனைத்திருடனென்று சொல்லுகிறவன் திருட்டுக்குள்ளபாபத்தை அடைவான். திருடனல்லாதவனைத்திருடனென்று சொன்னவன் இரண்டுமடங்கு பாபத்தை அடைவான். [5]கன்னிகை தோஷமுள்ளவளானுல் பிரம்மஹத்தியின் மூன்றிலொருபாகத்தை அடைகிறுள். எவன் அவளைத் தோஷமுள்ளவளாகச் செய்தவனே அவன் அந்தப்ரம்மஹத்திபாபத்தின் மிச்சத்தை அடைகிறுன். பிராம்மணர்களைநிந்திப்பதாலும் அவ்விதப்பாபமுண்டு. அவர்களைத்தொட்டுத்தள்ளுவதால் அதைவிட மிக அதிகமானபாபமுண்டு. (அவர்களைநிந்தித்த) பாபியானவன் நூறுவருஷங்கள் நரகத்தில் ஒரு நிலை அடையாமலிருப்பான். தொட்டுத்தள்ளியவன் ஆயிரம் வருஷம் நரகத்தில் வஸிப்பான். ஆகையால், பிராம்மணர்களை நிந்திக்கவுங்கூடாது; ஒருஸமயத்திலும்தள்ளவுங்கூடாது. அரசனே! பிராம்மணர்களின் காயத்திலிருந்துவரும்உதிரமானது எவ்வளவு அணுக்களைச்சேரச்செய்யுமோ அவ்வளவுவருஷங்கள் அந்தக்காயத்தைச் செய்தமனிதன் நரகத்திலிருப்பான். ப்ரூணஹத்திசெய்தவன் யுத்தமத்தியில் ஆயுதங்கள்விழுந்து அடிபடுவதால் சுத்திஅடைவான். அல்லது ஜ்வாலையுள்ள அக்னியில் தன்சரீரத்தை ஹோமஞ்செய்யவேண்டும்; அதனுல்சுத்திஅடைவான். கள்குடித்தபிராம்மணன் உஷ்ணமானகள்ளைக்குடித்து அக்கள்ளால் சரீரம் நன்றுகஎரிக்கப்படுமாகில் அந்தப்பாபத்திலிருந்து விடுபடுகிறுன்; அல்லது மாணத்தை அடைந்து

---

1 கள்குடித்தவன், பிராம்மணனைக்கொன்றவன், குருதாரத்திற்சென்றவன்.

2 வேறுபாடம்.

3 இம்மூன்றுபேர்கள்இறப்பதில் அவர்களின்ஞாதிகளுக்குத் தீட்டு இல்லை; ஆகையால், அவர்களிடமிருந்து அன்னமுதலியவற்றைப்பெற்றுக் கொள்ளலாம்.

4, 5 வேறுபாடம்.

சுத்தி அடைகிறான். அவ்விதம் சுத்தமானபிராம்மணன் லோகங்களை அடைகிறான்; இல்லாவிட்டால் அடையமாட்டான். பாபபுத்தியுள்ள வனுன துராத்மா குருதாரத்தைச்சேர்ந்தால் ஜ்வலிக்கும்சிலையைக் கட்டிக்கொண்டு மாணமடைவதால் சுத்தனுவான்; அல்லது ஆண் குறியையும்விருஷணத்தையும் தானே இருகையிலுமெடுத்துக்கொண்டு நிருதிதிக்கை அடைந்து குரூரமானபிராணிகளிடஞ்சென்று விழவேண்டும். அல்லது பிராம்மணர்களுக்குவேண்டியாவது உயிரை விட்டால் அதனுல் சுத்திபெறுவான்; அல்லது, அச்வமேதமென்னும் யாகத்தையாவது கோஸவமென்னும் யாகத்தையாவது [1]மருத்மேஸாமமென்னும்யாகத்தையாவது செய்வதால் இவ்வுலகிலும் இறந்தபின்னும் நன்றாகப் பூஜிக்கப்படுவான். அவ்விதமே பன்னிரண்டு வருஷங்கள் [2]காபோதமென்னும்தர்மத்தைச்செய்யவேண்டும். தன்கர்மத்தை ஜனங்களிடம்தெரிவித்துக்கொண்டு ஒருவேளை பிச்சைஎடுக்கவேண்டும். பிரம்மஹத்திசெய்தவன் மூன்றுவேளையிலும் ஸ்நானஞ்செய்துகொண்டு இவ்விதத்தவத்துடனிருக்கவேண்டும். இவ்விதமே கர்ப்பத்தையறியாமல் கர்ப்பமுள்ளஸ்த்ரீயை எவன்கொன்ருனே அவனும் செய்யவேண்டும். கர்ப்பிணியானஸ்த்ரீயைக்கொல்லுவதில் இரண்டுமடங்கு பிரம்மஹத்திபாபமுண்டு. கள்குடித்தவன், ஆகாரநியமமுள்ளவனும் [3]பிரம்மசாரியும் இரவில்ஸஞ்சரிப்பவனுமாயிருந்துகொண்டு மூன்றுவருஷங்களுக்குமேல் அக்னிஷ்டுத்தென்னும் யாகத்தை மட்டும் செய்யவேண்டும். அல்லது, ஆயிரங்காளைகளுடன்கூடிய பசுக்களைத் தானஞ்செய்து பரிசுத்தியை அடையவேண்டும். வைச்யனைக் கொன்றால் இரண்டுவருஷங்களுக்குப்பிறகு நூறுகாளைகளுடன்கூடிய பசுக்களைத் தானஞ்செய்து பரிசுத்தியைஅடையவேண்டும். சூத்திரனைக்கொன்றால் ஒருவருஷத்திற்குப்பிறகு நூறுகாளைகளையும் பசுக்களையுங்கொடுத்துச் சுத்திபெறவேண்டும். நாய், பன்றி, கழுதை, பூனை, காடை, தவளை, காக்கை, பாம்பு, எலி இவைகளைக்கொன்றால் சூத்திரனைக்கொன்றதற்குள்ள பிராயச்சித்தவிரதத்தைச்செய்யவேண்டும். ராஜனே! பசுவைக்கொன்றாலும் மற்றப்பிராணிகளைக்கொன்றாலும் தோஷம்சொல்லப்பட்டிருக்கிறது. (அவற்றுள்) எலும்பில்லாதபிராணிகளைக்கொன்றால் பசுவின்மூத்திரத்தை ஒருதரம் பானஞ்

---

1 அக்னிஷ்டோமமென்பது வேறுபாடம்.

2 தான்யத்தைச்சேர்த்துவைத்துக்கொள்ளாமல், உதிர்ந்ததான்யங்களைக்கொண்டு ஜீவிக்கும்ஒருவிரதம். காபோதம் = கபோதத்திற்குரியது. கபோதம் = புறு.

3 ஸ்திரீஸம்பந்தமில்லாதவன்.

செய்யவேண்டுமென்று அறிஞர்கள்சொல்லுகிறார்கள். வேறுபிராயச்சித்தங்களையும் முறையே சொல்லுகிறேன். [1]அறியாமல்செய்தசிறிய பாபத்தில் பச்சாத்தாபமடையவேண்டும். (உபபாதகங்கள்ஒவ்வொன்றுக்கும்) வெவ்வேறாக ஒவ்வொருவருஷம் பிராயச்சித்தஞ்செய்துகொள்ளவேண்டும். பரதாரத்திற்சென்றவன் இரண்டுவருஷங்களும், வேதமோதியபிராம்மணனுடைய தாரத்திற்சென்றவன் மூன்றுவருஷங்களும் விரதத்தைச்செய்யவேண்டுமென்று நினைக்கப்படுகின்றனர். நான்காவதுகாலத்தில் புஜித்துக்கொண்டு பிரம்மசாரியும் விரதமுள்ளவனுமாயிருக்கவேண்டும். பகலில் மூன்று தடவை நீராடுகிறவனாகி நின்றுகொண்டும் உட்கார்ந்துகொண்டுமிருக்கவேண்டும். அரசனே! இவ்விதமே வ்ரதத்தைச்செய்கிறவன் அந்தப்பாபத்திலிருந்து விடுபடுகிறான். இவ்விதமே (தாய்தந்தைகுருக்களையும்) அக்நிகளையும் விட்டவனும் செய்துகொள்ளவேண்டும். கௌரவ்ய! எவன் காரணமில்லாமல் தகப்பனையும் தாயையும் குருவையும்விடுகிறானோ அவன், பதிதனாகிறானென்பது தர்மங்களின்நிச்சயம். வ்யபிசாரக்குற்றமுள்ள மனைவியை விசேஷமாகத்தடுத்துவைத்து அவளுக்கு ஆடையையும் ஆகாரத்தையும் [2]மட்டும் கொடுக்கவேண்டுமென்று [3]கூறப்படுகிறது. பரதாரங்களிற்சென்றபுருஷனுக்குள்ள பிராயச்சித்தத்தை இவளைச் செய்யும்படி செய்யவேண்டும். [4]எவள் உயர்ந்தஜாதியான தன்பதியைத்தள்ளிவிட்டுத் தாழ்ந்தஜாதியானைப் படுக்கையில் அடைகிறாளோ அவளை விரிவாகப் பலஜனங்களுள்ளஇடத்தில் அரசன் நாய்களால் துன்பப்படுத்தச்செய்யவேண்டும். அந்தப்பாபியானபுருஷனைப் பழுக்கக்காய்ந்தஇரும்புப்படுக்கையில் கயிறுகளால்கட்டிவைக்கவேண்டும். அந்தப்பாபியானவன் எரிக்கப்படும்படி அந்தப்படுக்கையில் கட்டைகளையும் போடவேண்டும். மஹாராஜனே! பதியைமீறிச்சென்ற ஸ்திரீகளுக்கு இந்தத்தண்டனை ஒருவருஷம்செய்யவேண்டியதாகும். அபவாதமுள்ளமனிதன் உடனே பிராயச்சித்தஞ்செய்துகொள்ளாவிட்டால் அந்தத்துஷ்டனுக்கு இரண்டுமடங்கு பிராயச்சித்தஞ்செய்யவேண்டும். அந்தப்பதிதனுடன் இரண்டுமூன்றுநான்குவருஷங்கள் சேர்ந்துவஸித்தவன் முனிகளுக்குள்ளவ்ரதத்துடன் பூமியில் [5]ஸஞ்சரித்துக்கொண்டு ஐந்துவருஷங்கள் பிக்ஷைஎடுக்கவேண்டும். தமையன் விவாஹமில்லாமலிருக்கும்பொழுது அதர்மமாகவிவாஹஞ்செய்துகொண்டபரிவேத்தாவும் அவன்தமையனைபரிவித்தியும் விவா

1, 2 வேறுபாடம். 3இங்கு அதிகபாடமான அரைச்லோகம்விடப்பட்டது. 4, 5 வேறுபாடம்.

ஹஞ்செய்யப்பட்டஸ்திரீயுமாகிய அவர்கள்யாவரும் பதிதர்களென்று சொல்லப்படுகிறார்கள். அவர்கள்யாவருமே வீரஹத்திசெய்தவன் எந்தப்பிராயச்சித்தஞ்செய்துகொள்ளுவனே அதைச்செய்துகொள்ள வேண்டும். அல்லது பாபம்விலகவேண்டி ஒருமாஸம் சாந்திராயணத்தையாவது கிருச்சிரத்தையாவது செய்துகொள்ளவேண்டும். பரிவேத்தாவென்னும் அந்தத்தம்பியானவன் பரிவித்தியானதமையன் பொருட்டு விவாஹஞ்செய்த அந்தஸ்திரீயை மருமகளாக மரியாதையுடன் அளிக்கவேண்டும். தமையனால் அனுமதிகொடுக்கப்பட்டுத்தம்பியும் பிறகு அவளைப்பெற்றுக்கொள்ளலாம். (இவ்விதஞ்செய்தால்) அவ்விருவர்களும் அந்தஸ்திரீயுமே தர்மப்படி பாபத்திலிருந்துவிடுபடுகிறார்கள். கோவல்லாத பசுஜாதிகளின்ஹிம்ஸை குற்றமாகாது. மனிதனைப் பசுக்களுக்குஎஜமானனென்றும் அவைகளைப்புஜிக்கத்தக்கவனென்றும் (பெரியோர்கள்) அறிவிக்கிறார்கள். சமரீமிருகத்தின்வாலைத் [1]தரித்துக்கொண்டு (நாடகத்திற்குச்செல்லும்பிராம்மணன்) மண்பாத்திரத்தைஎடுத்துக்கொண்டும் தன்கர்மத்தைவெளியிற்சொல்லிக்கொண்டும் ஏழுவீடுகளில் பிச்சையெடுக்கவேண்டும். அவ்விதமே கிடைத்ததைப்புஜித்துக்கொண்டுஇருப்பானாகில் பன்னிரண்டுநாளில் சுத்திபெறுவான். எவன் தரித்துக்கொள்வதற்காகச் சமரியின்வாலைஅறுக்கிறானே அவன் அந்தவ்ரதத்தை ஒருவருஷம் செய்யவேண்டும். இவ்விதம் மிகஉத்தமமானபிராயச்சித்தம் மனிதர்களுக்கிருக்கவேண்டும். தானத்தில்சக்திபெற்றவர்களுக்கு இவ்வனைத்தையும் தானமாகவும் ஏற்படுத்திக்கொள்ளலாம். ஆஸ்திகர்களுக்கு ஒருபசுவைமட்டும் தானஞ்செய்யவேண்டுமென்று சொல்லுகிறார்கள். நாய் பன்றி மனிதர்கள் கோழி கழுதை இவைகளின் மாம்ஸத்தையும் மூத்திரத்தையும் மலத்தையும்புஜித்தால் திரும்பவும் உபநயனஞ் செய்துகொள்ளவேண்டும். ஸோமபானஞ்செய்தபிராம்மணன் கள்குடித்தவனுடையமணத்தைஏற்றுக்கொண்டால் இந்திரியங்களைஜயித்தவனும் மனத்தைஅடக்கினவனுமாகி மூன்றுநாள் உஷ்ணமானஜலத்தைக்குடிக்கவேண்டும். அவன் ஜலத்தைக்குடித்தபின் திரும்பவும் மூன்றுநாள் காற்றைப்புஜிப்பவனயிருக்கவேண்டும். பிராம்மணனுக்கு விசேஷமாக அஜ்ஞானத்தாலுண்டாகும் பாபம் எதுவோ அதற்குள்ள இந்தப்பிராயச்சித்தம்செய்வது இவ்விதம் சொல்லப்பட்டது" என்றுசொன்னார்.

---

[1] சமரீமிருகத்தின்வால்மயிரைத்தலையில்தரித்துப் பெண்வேடம் பூண்டு நடிக்கும்பிராம்மணன்' என்பதுபொருள்.

## நூற்றறுபத்துநான்காவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(நகுலனால்வினவப்பட்டபீஷ்மர், கத்தியின்உத்பத்தி முதலியவற்றைச் சொல்லியது.)

பிறகு, கத்திச்சண்டையில்ஸமர்த்தனானநகுலன் கதையின் முடிவுஸமயத்தில், அம்புப்படுக்கையிலிருக்கும் பிதாமஹரைநோக்கி இவ்வசனத்தைச் சொல்லத்தொடங்கினான். "தர்மங்களை அறிந்த பிதாமஹரே! வில்லானது மிகச்சிறந்தஆயுதமென்றுசொல்வதுண்டு. எனக்கோ மிகக்கூர்மையானகத்தியே சிறந்ததென்றுதோற்றுகிறது. அரசரே! வில்அறுக்கப்பட்டாலும் அம்புகள் அழிந்துபோனாலும் கத்தியால் யுத்தஞ்செய்யவும் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவுங்கூடும். அந்தச்சமயத்தில் வில்லைஎடுத்தவர்களையும் கதாயுதத்தையும் வேலாயுதத்தையும் ஏந்தியவர்களையும் கத்தியெடுத்தஒருவீரன் எதிர்த்துக் கொல்லச் சமர்த்தனாவான். அரசரே! எல்லாயுத்தங்களிலும் எந்த ஆயுதம் மிகச்சிறந்ததாகும்? இதில் எனக்குச் சந்தேகமும் (இதைக் கேட்பதில்) அதிகஊக்கமுமிருக்கின்றன. கத்தியானது என்னபயனுக்காக யாரால் எவ்விதம் உண்டுபண்ணப்பட்டது? பிதாமஹரே! கத்திக்கு முதல்ஆசார்யரையும் சொல்லவேண்டும்" என்றுகேட்டனன். [1]ஸாமர்த்தியத்துடன்கூடியதும், ஸூக்ஷ்மமும்ஆச்சர்யமுமானபொருளுள்ளதும், ஸுகமாயிருப்பதுமான மாத்ரியின்குமாரனுடைய புத்தியுள்ள அந்தநகுலனுடைய அந்தவசனத்தைக்கேட்டுஅதன் பிறகு எல்லாத்தர்மங்களையும்அறிந்தவரும் தனுர்வேதத்தில்கரைகண்டவரும் சரதல்பத்தை அடைந்தவருமான அந்தப்பீஷ்மர், த்ரோணரின் சிஷ்யனும் நல்ல சிக்ஷையுடன்கூடியவனும் ப்ரச்னஞ்செய்கிறவனும் மஹாத்மாவுமான நகுலன்பொருட்டு, அந்தவசனத்திற்கு உத்தரமாக நல்லஸ்வரத்தாலும் அக்ஷரங்களாலும் பொருத்தமுள்ளதான வாக்கியத்தைச் சொல்லத்தொடங்கினார்.

"மாத்ரியின்குமாரனே! இதை எவ்விதம் அறியவிரும்புகிறாயோ அவ்விதம் உண்மையைக்கேள். [2]தாதுக்களுள்ள மலைபோன்ற நான் உன்னால்ஞாபகப்படுத்தப்பட்டவனாகிறேன். அப்பா! முன்காலத்

---

1 வேறுபாடம்.

2 யுத்தத்திலடிபட்டு ரக்தத்தால் நனைந்திருத்தலால், தாதுமயமானமலை உவமையாயிற்று.

தில்இவ்வுலகமுழுவதும்,அறியப்படாததும் ஆகாயமற்றதும் காட்டத் தகாதபூதலமுள்ளதும் இருளால் சூழப்பட்டதும் ஸ்பர்சமில்லாததும் பார்க்கமிகக்கம்பீரமானதும் சப்தமில்லாததும் நிச்சயிக்கத்தகாதது மான ஒரேஜலக்கடலாயிருந்தது. அப்பொழுது பிதாமஹருண்டா ஞர். சக்தியுள்ள அப்பிதாமஹரானவர் வாயுவையும் அக்னியையும் ஸூர்யனையும் படைத்தார்; மேலே ஆகாசத்தையும் கீழே பூமியை யும் ராக்ஷஸர்களுள்ளபாதாளத்தையும் படைத்தார். பிறகு, அவர் சந்திரனையும் (பிரஸித்தமான) நக்ஷத்திரங்களையும் மற்றநக்ஷத்திரங் களையும் கிரஹங்களையும் லவங்களையும் க்ஷணங்களையும் பகல்களையும் இரவுகளையும் ருதுக்களையும் வருஷங்களையும் உண்டுபண்ணினார். பிறகு பூஜ்யரானபிதாமஹரானவர் உலகத்திலுள்ள ஒருசரீரத்தை எடுத்துக்கொண்டு உத்தமமானதேஜஸுள்ள புத்திரர்களான மரீ சியையும் ப்ருகுவையும் அத்ரியையும் புலஸ்தியரையும் புலஹரை யும் க்ரதுவையும் வஸிஷ்டர் அங்கிரஸ் இருவர்களையும் பரத்வாஜரையும் உண்டுபண்ணினார். அவ்விதமே தக்ஷப்ரஜாபதியானவர் அறுபது கன்னிகைகளை உண்டுபண்ணினார். அக்கன்னிகைகளும் பிரஜைகளை உண்டுபண்ணவேண்டி எல்லாப்ரம்மரிஷிகளையும் அடைந்தார்கள். அந்தஸ்த்ரீகளிடமிருந்து தேவர்களும் பித்ருக்கூட்டங்களும் கந்தர் வர்களும் அப்ஸரஸுகளும் பலவிதராக்ஷஸர்களும் பக்ஷிகளும் மிரு கங்களும் மீன்களும் பசுக்களும் பெரியஸர்ப்பங்களும் ஜலத்திலும் பூமியிலும் ஸஞ்சரிக்கும் பலவிதஆகிருதியும்பலமுமுள்ள மற்றப் பிராணிகளும் [1]உத்பிஜ்ஜம், ஸ்வேதஜம், அண்டஜம், ஜராயுஜம்என்ற எல்லாப்பிராணிகளும் உண்டாயின. அப்பா! அவ்விதம் அசைவற் றதும் அசைவதுமான உலகம்அனைத்தும் உண்டாயிற்று. இந்தஸ்ருஷ் டியைச்செய்தபின் எல்லாஉலகங்களுக்கும் பிதாமஹரானபிரம்மதே வர் திரும்பவும் சாச்வதமும் வேதத்தில்கூறியதுமான தர்மத்தை அடைந்தார். அந்தவைதிகதர்மத்தில் ஆசாரியர்களும் புரோஹிதர் களும் ஆதித்யர்கள் வஸுக்கள் ருத்திரர்கள் ஸாத்யர்கள் மருத் துக்கள் அச்வினிகள் ஆகியதேவர்களும் ப்ருகு, அத்ரி, அங்கிரஸ், கச்யபர், வஸிஷ்டர், கௌதமர், அகஸ்தியர், நாரதர், பர்வதர் என்னும் ஸித்திபெற்றதபோதனர்களும் வாலகில்யமுனிவர்கள் பிரபாஸர்கள் ஸிகதர்கள் [2]க்ருதபர்கள் ஸோமவாயவ்யர்கள் வைஸ்வானரர்கள் மரீசிபர்கள் கரூஷர்கள் ஹம்ஸர்கள் அக்னியோனிகள் மாஷப்ரஸ் தர்கள் ப்ருச்னிகள்என்னும் ரிஷிகளும் உறுதியுள்ளவர்களாயிருந்து

[1] ஆதிபர்வம் ௩௯ - ம் பக்கம் குறிப்பிற்காண்க. [2] வேறுபாடம்.

கொண்டு பிரம்மதேவரின்கட்டளைப்படி இருந்தார்கள். கோபத்தையும் லோபத்தையுமுடைய அஸுரேந்திரர்களோ பிரம்மதேவரின் அந்தக்கட்டளையைமீறித் தர்மத்திற்குக் கெடுதியைச்செய்தார்கள். ஹிரண்யகசிபு, ஹிரண்யாக்ஷன், விரோசனன், சம்பரன், விப்ரசித்தி, [1] ப்ரஹ்லாதன், நமுசி, பலி இந்தஅஸுரர்களும் மற்றுமுள்ளபல அஸுரர்களும் கூட்டத்துடன்சேர்ந்து தர்மவரம்பைமீறி அதர்மத்தில் நிச்சயமுள்ளவர்களாய் விளையாடிக்கொண்டிருந்தார்கள். பாரத! 'எல்லோரும் ஸமமானஜாதியில் பிறந்தவர்கள். தேவர்களெவ்விதமோ அவ்விதமேநாமும்' என்றஇந்தக்காரணத்தைக்கொண்டு தேவர்களுடனும் ரிஷிகளுடனும் பொறாமையுள்ளவர்களானஅஸுரர்கள் பிராணிகளிடம்பிரியத்தையும்தயையையும் செய்யாமலிருந்தார்கள். அவர்கள் மூன்றுபாயங்களையும் விட்டுத் தண்டோபாயத்தால் பிரஜைகளைத் தடைசெய்தார்கள். அஸுரஸ்ரேஷ்டர்கள் கர்வத்தால் அந்தத் தேவர்களுடன் ஒற்றுமையை அடையாமலிருந்தார்கள். பிறகு எல்லாஉலகங்களாலும் நமஸ்கரிக்கப்படும் பூஜ்யரானபிரம்மதேவரானவர் அப்பொழுது மிக்கஅழகுள்ளதும் தாமரைமலர்களைப்போல நக்ஷத்திரங்களைத் தாங்குவதும் நூறுயோஜனைவிஸ்தாரமுள்ளதும் ரத்னக்கூட்டங்களாலும் முத்துக்கூட்டங்களாலும் நிறைந்ததுமான இமயமலையின் [2]புறத்தில் இருந்தார். மகனே! தேவர்களில்மிகச் சிறந்த அந்தப் பிரம்மதேவர் புஷ்பித்தமரங்களுள்ள காடுகளுள்ளதான அந்தச் சிறந்த இமயமலையில் உலகங்களுக்கு ப்ரயோஜனம் உண்டாகவேண்டியதற்காக இருந்தார். பிறகு, பிரபுவானபிரம்மதேவர் ஆயிரம்வருஷங்களின்முடிவில், சாஸ்திரத்தில்காணப்பட்டவிதிப்படிசெய்யப்படுவதான யாகத்தைச்செய்யத்தொடங்கினர். யாகத்தில்ஸாமர்த்தியமுள்ளவர்களும் விதிப்படிகர்மத்தைச்செய்கிறவர்களுமான ரிஷிகளாலும் தேவர்களாலும் ஜ்வலிப்பவைகளான அக்னிகளாலும் நான்குபுறத்திலும் சூழப்பட்டதும் தங்கத்தால் செய்யப்பட்டுவிளங்கும்யாகபாத்திரங்களால் அலங்கரிக்கப்பட்டதும் தேவகணங்களால்சூழப்பட்டதும் அப்படியே ஸதஸ்யர்களானபிரம்மரிஷிகளால்சோபிப்பதுமான யாகசாலையானது மிகவும்விளங்கிற்று. அந்தயாகத்தில் மிகக்கோரமானஒன்றுஉண்டாயிற்றென்று ரிஷிகளிடமிருந்து எனக்குக்கேள்வி. உதித்த நக்ஷத்திரங்களுள்ளதும் பிரகாசிப்பதுமான ஆகாசத்தைப் பிளந்துகொண்டு சந்திரன் உதிப்பதுபோல, அக்னியைப்பிளந்துகொண்டு நீலோத்பலத்தின்நிறம்போன்ற காந்தியுள்ளதும் கூர்மை

[1] இவன் வேறு. [2] 'சிகரத்தில்' என்பது வேறுபாடம்.

யானகோரப்பல்லுள்ளதும் சிறியவயிறுள்ளதும் உயர்ந்ததும் பயங்கரமும் அளவற்றபராக்ரமமுள்ளதுமான ஒருபூதம் அப்பொழுது கிளம்பிற்றென்று கேள்வி. அந்தப்பூதம் உண்டானபொழுது பூமி மிகவும் நடுக்கமடைந்தது; அந்தப்பெரியகடலும் பெரிய அலைகள் சூழ்ந்தசுழலுள்ளதாய்க் கலக்கமடைந்தது; பெரிய உத்பாதமான கொள்ளிகள் விழுந்தன; மரங்களும் கிளைகளைக் கீழேதள்ளின; திக்குகள்யாவும் கலக்கமுற்றன; அமங்களமானகாற்றும்வீசிற்று; அடிக்கடி பிராணிகள் பயத்தால் மிகநடுக்கமடைந்தன. பிறகு பயங்கரமாகக்கிளம்பிய அந்தப்பூதத்தைக்கண்டு அந்தப்பிதாமஹரானவர் மஹரிஷிகளையும் தேவர்களையும் கந்தர்வர்களையும் நோக்கி, 'உலகத்தைரக்ஷிக்கவேண்டியும் தேவர்களைப்பகைக்கும் அஸுரர்களைக்கொல்லவேண்டியும் இவ்விதமானபூதம் என்னால் சிந்திக்கப்பட்டது. வீர்யமுள்ளஇது கத்தியென்றுபெயருள்ளது' என்று சொன்னார். உடனே அந்தப்பூதமானது அந்தஉருவத்தைவிட்டுவிட்டு அழுக்கில்லாததும் கூர்மையானமுனையுள்ளதுமான கத்தியேயாகிக் கிளம்பிய காலாந்தகன்போல விளங்கிற்று. பிறகு, பிரம்மதேவரானவர் கூர்மையானதும் அதர்மங்களைவிலக்குவதுமான அந்தக் கத்தியை வ்ருஷபத்வஜரும் நீலகண்டருமான ருத்ரரின்பொருட்டுக் கொடுத்தார். பிறகு பிரம்மரிஷிக்கூட்டங்களால் பூஜிக்கப்பட்டவரும் அளவிடத்தகாதஸ்வரூபமுள்ளவருமான அந்தருத்ரபகவான் கத்தியை வாங்கிக்கொண்டு வேறுஉருவத்தையெடுத்துக்கொண்டார். அந்த உருவமானது நான்குகைகளுள்ளதும் பூமியிலிருந்தாலும் தலையால் பத்துத்திக்குகளையுந்தொடுவதும் உயர்ந்தபார்வையுள்ளதும் பெரிய கையுள்ளதும் வாயிலிருந்து ஜ்வாலைகளைமிகவும்விடுவதும் விகாரமுள்ளதும் கறுப்பும் வெளுப்பும் சிவப்புமான பலநிறங்களைக்கொண்டதும் உயர்ந்தபொன்னிறமான புள்ளிகளையுடையமான்தோலை ஆடையாகஉடுத்ததும் நெற்றியில் ஸூர்யனுக்கொப்பானபெரிய ஒருகண்ணுள்ளதும் கருநிறமும்பொன்னிறமுமாகவிளங்கும் பரிசுத்தமான இரண்டுகண்களுள்ளதுமாய் விளங்கிற்று. பிறகு சூலத்தைக்கையிற் கொண்டவரும் பகதேவரின்கண்ணைப்பெயர்த்தவரும் தேவர்களில் பெரியவருமானருத்திரமூர்த்தி காலாக்கினிக்கொத்ததான காந்தியுள்ளதும் [1]மூன்றுபக்கங்களில் கூர்மையான முனையுள்ளதுமான கத்தியையும் கேடகத்தையும் மின்னலுடன்கூடியமேகத்தைப்போல உயரத்தூக்கியெடுத்துக்கொண்டு அஸுரர்களைநாசஞ்செய்யவேண்டு

[1] இரண்டுபக்கமும் நுனியும்கூராகவிருக்குமென்பதுகருத்து.

மென்ற எண்ணத்துடன் யுத்தஞ்செய்யவிரும்பிக்கத்தியைச்சுழற்றிக் கொண்டு ஆகாயத்தில் பலவழிகளில்ஸஞ்சரித்தார். பாரத! அப்பொழுது, கூச்சலைச்செய்கிறவரும் அட்டஹாஸத்தைவெளியிடுகிறவருமான அந்தருத்ரரின் உருவமானது பயங்காமாக விளங்கிற்று. பயங்கரமான யுத்தஞ்செய்ய விருப்பத்துடன் ருத்ரதேவர் அந்த உருவத்தைத் தரித்தாரென்பதைக் கேட்டு, அஸுரர்கள் அனைவர்களும் ஸந்தோஷப்பட்டு நான்குபுறத்திலும் ஓடிவந்தார்கள். அவர்கள் கற்களையும் அதிகமாகஜ்வலிக்கும் கொள்ளிகளையும் கோரமானவைகளும் கூரானமுனையுள்ளவைகளும் இரும்பாற்செய்யப்பட்டவைகளுமான மற்றஆயுதங்களையும் வருஷித்தார்கள். பிறகு, நாயகர்களுடன் கூடியதாகவிருந்தும், அஸுரச்சேனையானது பலமாகச் சுழற்றப்படுங்கத்தியைக்கண்டு மிகவும் மயக்கமடைந்தது; ஓடவுந் தொடங்கிற்று. வேகமானகாலுள்ளவராகையால் ஆச்சர்யமாக ஸஞ்சரிப்பவரும் கத்தியைக் கையிற்கொண்டவருமான அந்தருத்ரர் ஒருவரையும் ஆயிரவராக அஸுரர்கள் அனைவர்களும் நினைத்தார்கள். அவர், வெட்டுகிறவரும் பிளக்கிறவரும் முறிக்கிறவரும் அறுக்கிறவரும் கிழிக்கிறவரும் ஊதுகிறவருமாய்ப் புற்கூட்டத்திற்சென்ற காட்டுத்தீப்போலச் சத்ருக்கூட்டங்களில் ஸஞ்சரித்தார். அதிகபலமுள்ளவர்களான அந்தஅஸுரர்கள், கத்தியின் வேகத்தால் மிகவும் பங்கமடைந்தவர்களும் கையும் துடையும் மார்பும் பிளக்கப்பட்டவர்களும் தலையறுபட்டவர்களுமாய்ப் பூமியில் விழுந்தார்கள். மற்ற அஸுரர்கள், கத்தியின்முனையால்துன்பப்படுத்தப்பட்டவர்களும் பங்கமடைந்தவர்களுமாய் ஒருவரோடொருவர்கூச்சலிட்டுக்கொண்டுதிக்குகளிற்சென்றார்கள். சிலர் பூமியைஅடைந்தார்கள். மற்றுஞ்சிலர் மலைகளையடைந்தார்கள். மற்றுஞ்சிலர் ஆகாயஞ்சென்றார்கள். வேறு சிலர் ஜலத்தில்புகுந்தார்கள். மிகவும்பயங்கரமான அந்தப்பெரிய யுத்தமானது முடிவுபெற்றவுடன் உதிரத்துடன்கூடியமாம்ஸமென்னும்சேறுள்ளபூமியானது பயங்கரமாயிருந்தது. மஹாபாஹுவே! கீழேவிழுந்தவைகளும் உதிரங்களால்நனைக்கப்பட்டவைகளும் பலாசமரத்துடன்கூடிய மலைகள்போன்றவைகளுமான அஸுரர்களின் சரீரங்களால்நிறைந்ததும் உதிரத்தால்நனைந்ததுமான பூமியானது அப்பொழுது சிவந்த ஈரமானவஸ்திரமுள்ளவளும் கறுத்தவளும் மதமயக்கமுள்ளவளுமானமடந்தைபோல விளங்கிற்று. மங்களரூபியான அந்த ருத்ரரானவர் அஸுரர்களைக்கொன்று உலகத்தைத்தர்மம்மேலிதாகச்செய்தபின் பயங்கரமான அந்தஉருவத்தைநீக்கிவிட்டு மங்க

மானஉருவத்தையெடுத்துக்கொண்டார். பிறகு, மஹரிஷிகள் அனைவர்களும் எல்லாத்தேவக்கூட்டங்களும் ஆச்சர்யமான அஸுரஜயத்தால் தேவதேவரானருத்ரரை ஸ்துதித்தார்கள். பிறகு, அந்தருத்ரபகவான் அஸுரர்களின் உதிரத்தால் நனைக்கப்பட்டதும் தர்மத்தைக் காப்பதுமானகத்தியை மர்யாதையுடன் விஷ்ணுவிடம்கொடுத்தார். விஷ்ணுவானவர் மரீசியினிடம்கொடுத்தார். மரீசியானவர் அதைச் சுக்ராசாரியரிடங்கொடுத்தார். சுக்ராசாரியர் மஹரிஷிகளிடம்கொடுத்தார். மஹரிஷிகள் அந்தக்கத்தியை இந்திரனிடம்கொடுத்தார்கள். மகனே! இந்திரன் லோகபாலர்களுக்குக்கொடுத்தான். லோகபாலர்கள் மிகப்பெரிதான கத்தியை ஸூர்யகுமாரனைமனுவுக்குக்கொடுத்து, அந்தமனுவைநோக்கி, ‘ நீ மானிடர்களுக்குஈசனாகியிருக்கிறாய்; தர்மத்தைஉள்ளிற்கொண்டகத்தியால் ப்ரஜைகளைரக்ஷித்துக்கொள் ’ என்றவசனத்தையுஞ்சொன்னார்கள். பெரிதும்சிறிதுமான பிரயோஜனத்தைக்காரணமாகக்கொண்டு தர்மவரம்பைமீறிச்சென்றப்ரஜைகள் தர்மப்படி தண்டத்தைக் [1]குற்றத்திற்கேற்பவிதித்து ரக்ஷிக்கத் தக்கவர்களாகிறார்கள்: மனத்தில்தோன்றியபடிசெய்யத்தக்கவர்கள் அல்லர். கடுஞ்சொல்லால் அடக்குவதானதண்டமும் அப்படியே பெரியபொருள்தண்டமும் சரீரத்தைக்குறைப்பதும் கொலையும் சிறிய காரணத்திற்காகச் செய்யத்தக்கவையல்ல. இந்தக் [2]கடுஞ்சொல்முதலிய தண்டங்கள் கத்தியின்உருவங்களென்றே சொல்லவேண்டும். மீறிச்செல்வதினின்றும் (தடுப்பதற்காகக்) கத்தியின் சிறந்தநியமங்கள் இவ்விதமிருக்கின்றன. அதன்பிறகு மனுவானவர் தமதுபுத்திரனைக்ஷுபனை ப்ரஜைகளுக்குப்பதியாக அபிஷேகஞ்செய்துவைத்து ப்ரஜைகளைரக்ஷிக்கவேண்டி க்ஷுபன்பொருட்டுக் கத்தியைக் கொடுத்தார். க்ஷுபனிடமிருந்து இக்ஷ்வாகுவும், இக்ஷ்வாகுவினிடமிருந்து புரூரவஸும் அவனிடமிருந்துஆயுவும் அவனிடமிருந்து நஹுஷனும் பிறகு நஹுஷனிடமிருந்து யயாதியும் அவனிடமிருந்து பூருவும் பூருவினிடமிருந்து ஆதூர்த்தனும் ஆதூர்த்தனிடமிருந்து கயனும் அந்தக்கயனிடமிருந்து பூமிசயனென்றஅரசனும் பூமியில் அந்தக்கத்தியைப்பெற்றுக்கொண்டார்கள். பூமிசயனிடமிருந்து துஷ்யந்தன்குமாரனைபரதனும் அதைப்பெற்றுக்கொண்டான். அரசனே! அப்படியே அந்தப்பரதனிடமிருந்து தர்மமறிந்த ஐலபிலனும் அந்தஐலபிலனிடமிருந்து துந்துமாரனென்னும் அரசனும் அந்தத்துந்துமாரனிடமிருந்து கம்போஜதேசத்திற்கு அரசனைமுசு

1 ‘விபஜ்ய’ என்பதுமூலம். 2 வேறுபாடம்.

குந்தனும் முசுகுந்தனிடமிருந்து மருத்தனும். மருத்தனிடமிருந்து ரைவதனும் ரைவதனிடமிருந்து யுவனாஸ்வனும் அந்தயுவனாச்வனிடமிருந்து இக்ஷ்வாகுவம்சத்திற்பிறந்த ரகுவும் அந்தரகுவினிடமிருந்து பராக்ரமமுள்ள ஹரிணாச்வனும் ஹரிணாச்வனிடமிருந்து சுனகனும் சுனகனிடமிருந்து தர்மபுத்தியுள்ள உசீனரனும் அந்தஉசீனரனிடமிருந்து போஜர்களும் யதுக்களும் கத்தியைப்பெற்றுக்கொண்டார்கள். யதுக்களிடமிருந்து சிபியும் சிபியினிடமிருந்து பிரதர்த்தனனும் பிரதர்த்தனனிடமிருந்து அஷ்டகனும் அஷ்டகனிடமிருந்து ருசதச்வனும் ருசதச்வனிடமிருந்து பரத்வாஜரும் அந்தப் பரத்வாஜரிடமிருந்து துரோணரும் அந்தத்துரோணரிடமிருந்துகிருபரும் அந்தக்கத்தியைப் பெற்றுக்கொண்டார்கள். அந்தக்கிருபரிடமிருந்து ஸஹோதரர்களுடன்கூடிய நீயும் சிறந்த கத்தியைப் பெற்றுக்கொண்டிருக்கிறாய். அந்தக்கத்திக்கு க்ருத்திகை நக்ஷத்திரமும் அக்னி தேவதையும் ரோஹிணி கோத்திரமும் ருத்திரர் மிகச்சிறந்தகுருவுமாகிறார். பாண்டுவின் குமாரனே! கத்திக்குள்ள ரஹஸ்யங்களான எட்டுப்பெயர்களையும் என்னிடமிருந்து தெரிந்துகொள். எப்பொழுதும் இப்பெயர்களைச் சொல்லுகிறவன் ஜயம் பெறுவான். அவையாவன:—அஸி, விசஸனம், கட்கம், தீக்ஷ்ணசர்மா, துராஸதம், ஸ்ரீகர்ப்பம், விஜயம், தர்மபாலம் என்பன. கத்தியானது ஆயுதங்களுள் முதலிலுண்டானதென்று பூமியில் ப்ரஸித்திபெற்றிருக்கிறது. (இது) மஹேஸ்வரரால் உண்டுபண்ணபபட்டதென்று புராணத்தில் நிச்சயமடைந்திருக்கிறது. இந்தப் பெயர்களும் புராணத்தில் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றன, சத்ருக்களை அடக்கும் பிருதுவானவன் முதலில் வில்லை உண்டுபண்ணினான். முன்காலத்திலுள்ளபடி தர்மமாக உலகத்தைரக்ஷித்துவரும் வேனனின் குமாரனை அந்தப்பிருதுவினால் இந்தப்பூமியானது பலநல்லபயிர்களைக்கறக்கப்பட்டது. மாத்ரியின் குமாரனே! ரிஷிகளாற்சொல்லப்பட்ட அந்த வரலாற்றை ப்ரமாணமாகச்செய்துகொள்ளவேண்டும். யுத்தத்தில் ஸமர்த்தர்களாயிருப்பவர்கள் எப்பொழுதும் கத்திக்குப்பூஜைசெய்ய வேண்டுமென்ற இந்தமுக்யதர்மத்தைத் திரும்பவும் நான் உனக்குச் சொன்னேன். பரதர்களிற்சிறந்தவனே! கத்தியின் இந்தஸ்ருஷ்டியானது உள்ளபடி இப்படித்தான். இவ்வுலகிலுள்ளபுருஷன் கத்தியின்உத்தமமான இந்தவரலாற்றை முழுமையுங்கேட்டால் கீர்த்தியையடைவான்; இறந்தபின்னும் அழிவற்றபதத்தையும் பெறுவான்" என்றுசொன்னார்.

---

## நூற்றறுபத்தைந்தாவது அத்தியாயம்.[1]

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர், தர்மார்த்தகாமங்களில் எதுமிகச்சிறந்ததென்று வினவியதும், விதுரரும் தம்பிகளும் தர்மார்த்தகாமங்களைப்புகழ்ந்து கூறியதும், யுதிஷ்டிரர் மோக்ஷம் மிகச்சிறந்ததென்றுகூறியதும்.)

பீஷ்மரானவர், இவ்விதம்சொல்லிவிட்டுப் பேசாமலிருக்கும் பொழுது, யுதிஷ்டிரர், வீடுசென்றபின் நான்குதம்பிகளையும் ஐந்தாமவரானவிதுரரையும்நோக்கி, "உலகத்தின்நிலை தர்மத்திலும் அர்த்தத்திலும் காமத்திலும் அடங்கியிருக்கிறது. அவைகளுள் எது மிகப்பெரிது? எது நடுத்தரமானது? எது எளிது? காமம் கோபம் லோபம் இம்மூன்றையும் ஜயிக்கவேண்டி எதில் மனத்தை அடக்கி வைக்கவேண்டும்? வினவப்பட்டநீங்கள் நிச்சயமுள்ளவசனத்தை உள்ளபடி சொல்லத்தக்கவர்களாகிறீர்கள்" என்று ப்ரச்னஞ்செய்தார். பிறகு கார்யங்களின் வழியின்உண்மையைக்கண்டவரும் புத்தியில்தோற்றும் திறமையுள்ளவருமான விதுரரானவர் தர்மசாஸ்திரத்தைநினைத்துக்கொண்டு முதலில் ஒருவசனத்தைச்சொல்லத்தொடங்கினார். "அதிகமான வேதாத்யயனம், தவம், த்யாகம், ச்ரத்தை, யாகஞ்செய்தல், பொறுமை, உள்ளத்தில்சுத்தி, தயை, ஸத்யம், அடக்கம் இவைகள் தர்மத்திற்குரிய ஸம்பத்துக்களாகும். இவற்றையே நீ அடை. உன்மனம் சஞ்சலமாகவிருக்கவேண்டாம். அறம்பொருள் இவ்விரண்டும் இதை மூலமாகக்கொண்டவை. ஹிதமானது இஃது ஒன்றையே இருப்பிடமாகக்கொண்டது. ரிஷிகள் தர்மத்தாலேயே கரையேறியிருக்கிறார்கள். உலகங்கள் தர்மத்தில்நிலைபெற்றிருக்கின்றன. தேவர்கள் தர்மத்தால் ஸ்வர்க்கலோகத்திலிருக்கிறார்கள். பொருளும் தர்மத்தில் அடங்கியிருக்கின்றது. அரசனே! தர்மமானது மிகச்சிறந்தகுணமாகும். பொருளானது மத்யமமென்று சொல்லப்படுகிறது. காமமானது மிகவும் அல்பமென்று அறிவுள்ளவர்கள் கூறுகிறார்கள். ஆகையால், (மனிதன்) அடங்கியமனமுள்ளவனும் தர்மத்தைப்பெரிதாகக்கொண்டவனுமாயிருக்கவேண்டும்; அவ்விதமே எல்லாப்ராணிகளிடத்திலும் [2]தன்விஷயத்தில்போல இருக்கவேண்டும்" என்றுசொன்னார். அந்தவிதுரருடையவசனம் முடிவுபெற்ற

---

[1] இந்த அத்யாயத்துக்கு, 'ஷட்ஜகீதை' என்று ஒருபெயர் வழங்குகிறது.

[2] வேறுபாடம்.

வுடன் காரியங்களின்வழியின் உண்மையைஅறிந்தவனும் பயங்கரமானசெய்கையுள்ளவனும் ப்ரச்னஞ்செய்யப்பட்டவனுமான அர்ஜுனன் ஒருவசனத்தைச்சொல்லத்தொடங்கினன். "அரசரே! இது கர்மபூமியாகும். இந்தப்பூமியில் க்ருஷி, வர்த்தகம், பசுக்காத்தல், பலவிதமானகைத்தொழில்கள்என்னும் அர்த்தசாஸ்திரமானது மிகச் சிறந்ததாகும். பொருளிருக்கிறதென்றகாரணத்தாலேயே எல்லாக் கார்யங்களுக்கும் மர்யாதையிருக்கிறது. பொருளானதுபோய்விடுமானல் தர்மமும்காமமும் நில்லாவென்று சாஸ்திரமிருக்கிறது. பொருளுள்ளவன் உத்தமமானதர்மத்தைஆராதிக்கச் சக்திபெற்றவனுவான்; நல்லபுத்தியில்லாதவர்களால் அடையக்கடினமானகாமத்தையும் அனுபவிக்கத்திறமையுள்ளவனுவான். தர்மம் காமம் இவ்விரண்டும் பொருளைச்சேர்ந்தபாகங்களென்று சாஸ்திரங்கூறுகிறது. பொருள்ஸித்திபெற்றால் இவ்விரண்டும் ஸித்திபெற்றவைகளாகவே ஆகும். ஆகையால், பொருளைஅடைந்தபுருஷனை மிகச்சிறந்தபிறப்புள்ளவர்களும், ப்ரம்மதேவரைப் பிராணிகள் உபாஸிப்பதுபோல எப்பொழுதும் உபாஸிப்பார்கள். ஜடையும் தோலும்தரிப்பவர்களும் அடக்கமுள்ளவர்களும் அழுக்கால்பூசப்பட்டவர்களும் இந்திரியங்களைஜயித்தவர்களுமான ஸந்யாஸிகளும் [1]நைஷ்டிகப்ரம்மசாரிகளுங்கூட வெவ்வேறான பொருளைக்கருதியவர்களாயிருக்கிறார்கள். காஷாயமுடுத்தவர்களும் தாடியுள்ளவர்களும் மிக்கஅடக்கமுள்ளவர்களும் அறிவுள்ளவர்களும் பொறுமையுள்ளவர்களும் எல்லாப்பரிக்ரஹங்களையும் விட்டவர்களுமானமற்றவர்களும் பொருளைவிரும்புகிறவர்களாயிருக்கிறார்கள். எப்பொழுதும் கர்மங்களால் தாபமடைகிறார்கள். சிலர் பொருளைவிரும்புகிறவர்களாயிருக்கிறார்கள், மற்றுஞ்சிலர் ஸ்வர்க்கத்தைவிரும்புகிறவர்களாயிருக்கிறார்கள். சிலர் குலாசாரத்தை அனுஸரித்துத் தம்தம்தர்மத்தை அனுஷ்டிக்கிறவர்களாயிருக்கிறார்கள். ஆஸ்திகர்களும் நாஸ்திகர்களுமான வேறு சிலர் [2] ஸம்யமத்தில் உறுதியுள்ளவர்களாயிருக்கிறார்கள். பொருள் பெரிதென்று தெரிந்துகொள்ளாமலிருப்பது இருளாகும்; தெரிந்துகொள்வது வெளிச்சமாகும். எவன் வேலைக்காரர்களைப் போகங்களுடனும் விரோதிகளைத் தண்டங்களுடனும் சேர்க்கிறானே அவன்பொருளுள்ளவனாகிறான். புத்தியுள்ளவர்களில்மிகச்சிறந்தவரே! இஃது உண்

---

1 மரணமடையும்வரையில் பிரம்மசாரியாகவேயிருக்க ஸங்கல்பங்கொண்டவர்கள்.

2 [illegible] இத்தரிவதுமா? அல்லது [illegible]

மையான என் அபிப்ராயம். [1]நன்றாகப்பேசத்தக்க கண்டமுள்ள இந்தநகுலஸஹதேவர்களின் வசனத்தையும் நீர் அறிந்துகொள்ளும்" என்றுசொன்னான். அவ்விதம் சொன்னபிறகு, அறம்பொருள்களில் ஸமர்த்தர்களும் மாத்ரியின்புத்திரர்களுமான நகுலஸஹதேவர்கள் உத்தமமானவசனத்தைச் சொல்லத் தொடங்கினார்கள்.

"(மனிதன்) உட்காருகிறவனும் படுக்கிறவனும் போகிறவனும் இருக்கிறவனுமாய்ப் பலவிதமானஉபாயங்களாலும் பொருளின்சேர்க்கையை உறுதியாகச் செய்துகொள்ளவேண்டும். அடையஅரிதும் மிகவும்பிரியமுமான இந்தப்பொருளானது நன்றாகஸித்திபெற்றதாகுமானால் (மனிதன்) இவ்வுலகில் காமங்களையடைவானென்பது ப்ரத்யக்ஷம். இதற்கு ஸந்தேகமில்லை. தர்மத்துடன்கூடியபொருளும், பொருளுடன்கூடியதர்மமும் அம்ருதத்துடன் சேர்ந்ததேன்போலாகும். ஆகையால், இவ்வுலகில் இவ்விரண்டும் சிறந்தவைகளாகும். பொருளில்லாதவனுக்கு இன்பமில்லை. அதுபோலத் தர்மமில்லாதவனுக்குப் பொருள்எங்கிருந்துவரும்? அறம்பொருள்களிலிருந்தும் விலகியவனெவனோ அவனிடமிருந்து உலகம்நடுக்கமடையும். ஆகையால், தர்மத்தைப்பெரிதாகக்கொண்டவனும் அடங்கியபுத்தியுள்ளவனுமாயிருந்துகொண்டு பொருளைஸம்பாதிக்கவேண்டும். ப்ராணிகள் விச்வாஸத்துடன் இருக்குமானால் எல்லாம் ஸித்திக்கும். முதலில் தர்மத்தைச் செய்யவேண்டும். அதன்பிறகு தர்மத்துடன்கூடிய பொருளைஸாதிக்கவேண்டும். அதன்பிறகு காமத்தையனுபவிக்கவேண்டும். ஸித்தமான பொருளுள்ளவனுக்கன்றோ அந்தக்காமம் பயன்படும்" என்றுசொன்னார்கள். அச்வினிதேவர்களின் குமாரர்களான அந்த நகுலஸஹதேவர்கள் அந்தவசனத்தைச்சொல்லி நிறுத்தினார்கள்.

அதன்பிறகு, பீமஸேனனானவன் இந்தவசனத்தைச் சொல்லத் தொடங்கினான். "காமமில்லாதவன் பொருளைவிரும்பமாட்டான். காமமில்லாதவன் தர்மத்தை விரும்பமாட்டான். காமமில்லாதவன் காமத்திற்செல்லுகிறவனாயிருக்கமாட்டான். ஆகையால், காமம் உயர்ந்ததாகும். காமத்துடன்கூடியவர்களான்ரிஷிகள், கனியையுண்ணுகிறவர்களும் காய்கிழங்குகளைப் புஜிக்கிறவர்களும் வாயுபக்ஷகர்களும் நல்லஅடக்கமுள்ளவர்களுமாய்த் தவத்திலேயே நிலைபெற்றிருக்கிறார்கள். வேதத்ின்கரைகண்டவர்களான மற்றுஞ்சிலர், காமத்தையுடையவர்களாய் வேதங்களிலும் உபவேதங்களிலும் ஸ்ராத்தத்தி

---

1 வேறுபாடம்.

னும் யாகஞ்செய்வதிலும் அப்படியேகொடுப்பதிலும் பெற்றுக்கொள் வதிலும் ப்ரவ்ருத்திக்கிறார்கள். வர்த்தகர்களும் உழுகிறவர்களும் இடையர்களும் தைத்தொழிற்காரர்களும் அப்படியே சில்பிகளும் அப்படியே தேசத்திற்குரியதர்மத்தைச்செய்கிறவர்களும் காமத்தை யுடையவர்களாகியே கர்மங்களில்செல்லுகிறார்கள். வேறுசிலமனிதர் கள் காமத்தையுடையவர்களாய்க் கடலினுஞ்செல்லுகிறார்கள். காம மானது பலவிதஉருவமுள்ளதன்றோ? உலகம்யாவும் காமத்தால் வ்யா பிக்கப்பட்டிருக்கிறது. காமமில்லாதஒருப்ராணியும் இருக்கவுமில்லை; இருந்ததுமில்லை; இனி இருப்பதுமில்லை. மஹாராஜனே! இந்தக் காமம் சிறந்ததாகும். அறம்பொருள்கள் இந்தக்காமத்தையடுத்திருக் கின்றன. வெண்ணெயானது தயிரைவிட ஸாரமானதுபோல, காம மானது அறம்பொருள்களைவிட ஸாரமானது. எண்ணெய் மிகச்சிறந் தது. பிண்ணாக்குச் சிறந்ததன்று. நீருள்ளமோரைவிட நெய்மிகச் சிறந்ததாகும். கட்டையைவிடப் பூவும் கனியும் மிகச்சிறந்தவை. காமமானது அறம்பொருள்களைவிடச் சிறந்ததாகும். பூவிலிருந்து சிற ந்த தேனுண்டாவதுபோலக் காமத்திலிருந்து ஸுகமுண்டாகிறது. காமமானது அறம்பொருள்களுக்குக் காரணமாகும். (அன்றியும்) காமம் அக்காமரூபமுமாயிருக்கிறது. காமமில்லாமல் பொருளால்மட் டும் ப்ராம்மணர்கள் நல்லஅன்னத்தைப் புஜிக்கிறார்களில்லை. காம மில்லாமல் ப்ராம்மணர்கள்பொருட்டுத் தானஞ்செய்கிறதில்லை. காம மில்லாமல் உலகத்திலுள்ள பலவிதச்சேஷ்டையுமில்லை. ஆகையால், அறம் பொருள் காமங்களுள் காமமானது முதலாவதாகக் காணப் படுகிறது. மிகஅழகான வேஷமுள்ளவர்களும் அலங்கரிக்கப்பட்ட வர்களும் அதிகமதமுள்ளவர்களும் அன்பாகப் பேசுகிறவர்களுமான ஸ்திரீகளுடன்சேர்ந்து இஷ்டம்போல ரமித்துக்கொண்டிரும். அரசரே! காமமன்றோ மிகவும் இனிமையானது. அகழ்போன்ற ஆழ்ந்த ஆலோசனையிலிருக்கும் என்னுடையபுத்தி இவ்விதமிருக்கிறது. தர்ம புத்திரரே! உமக்கு விசாரம்வேண்டாம். மிக மிருதுவான என்னு டைய வசனம்அனைத்தும் உயர்ந்தஸாரமுள்ளதென்று ஸாதுக்களால் அங்கீகரிக்கப்பட்டதாகும். அறமும் பொருளும் காமமும் ஸமமா கவே அனுஷ்டிக்கத்தக்கவைகள். இவைகளுள் ஒன்றில் ஆசைபற்றி இருப்பவன் எந்தமனிதனே அவன் அதமனுவான். இரண்டில் ஆசை பற்றிஇருப்பவனை மத்தியமனென்றுசொல்லுகிறார்கள். அறம்பொருள் காமம் மூன்றிலும் ஆசைபற்றியிருப்பவனெவனே அவன் உத்தம னுவான்" என்றுசொன்னான். நல்ல அறிவுள்ளவனும் ஸ்நேஹமுள்ள

வனும் உயர்ந்தசந்தனத்தால் பூசப்பட்டவனும் விசித்திரமானமாலைகளையும் ஆபரணங்களையும்தரித்தவனுமான பீமனானவன் அந்தவீரர்களைநோக்கிச் சுருக்கமாகவும் விரிவாகவும் அந்தவசனத்தைச் சொல்லிநிறுத்தினான்.

அதன்பிறகு அவர்களின்வசனங்களை நன்றாகஒருமுகூர்த்தம் ஆலோசனைசெய்தபின், பலசாஸ்திரங்களைக்கற்றவரும் தர்மத்தை மேற்கொண்டவர்களுள் மிகச்சிறந்தவருமானதர்மராஜரானவர் சிரித்துக்கொண்டு தம்வாக்கால் உண்மையைச்சொல்லத்தொடங்கினார். "நீங்களனைவரும் ஸந்தேகமில்லாமல் எல்லாச்சாஸ்திரங்களையும் நிச்சயஞ்செய்தவர்களும் பிரமாணங்களை அறிந்தவர்களுமாயிருக்கிறீர்கள். அறியவிருப்பமுள்ளஎனக்கு இவ்விஷயத்தில் ஸித்தாந்தமாக உங்களால் சொல்லப்பட்டவசனம்எதுவோ அஃது என்னால்கேட்கப்பட்டது. ஆனால், சொல்லுகிறஎன்னுடைய [1] இந்தவசனத்தையும் நீங்கள் வேறுஎண்ணமில்லாதவர்களாய் அவச்யம்தெரிந்துகொள்ள வேண்டும். எந்தமனிதன் பாபத்திலும் புண்ணியத்திலும் பொருளிலும் தர்மத்திலும் காமத்திலும் பற்றுதலில்லாதவனாயிருக்கிறானோ தோஷங்களைவிட்டவனும் ஸாராஸாரங்களைஸமமாகக்கொண்டவனும் ஸித்தியுள்ளவனுமான அந்தமனிதன் ஸுகதுக்கங்களிலிருந்து விடுபடுகிறான். ப்ராணிகளானவை பிறப்புஇறப்புக்களுடன்கூடியவைகளும் கிழத்தனத்தின்விகாரங்களுடன்கூடியவைகளுமாயிருக்கின்றன. திரும்பவும் அந்தஅந்தவிகாரங்களால் தொடரப்பட்டவைகளாகின்றன. (பெரியோர்கள்) மோக்ஷத்தைக் கொண்டாடுகிறார்கள். அதை நாம் அறியவில்லை. ஸ்நேஹத்தால் கட்டப்பட்டவனுக்கு [2] மோக்ஷமில்லையென்று பூஜ்யரானபிரம்மதேவர் கூறினார். [3] அறிஞர்கள் மோக்ஷத்தைப் பெரிதாகக் கொண்டவர்களாயிருக்கிறார்கள். ஆகையால், ப்ரியத்தையும் அப்ரியத்தையும் செய்துகொள்ளாமலிருக்கவேண்டும். ஆசைப்படுவது சிறந்ததன்று. இதுதான் சிறந்தது. (விதியால்) நான் எவ்விதம்ஏவப்பட்டவனாயிருக்கிறேனோ அவ்விதம் செய்கிறேன். விதியானது எல்லாப்ராணிகளையும் ஏவுதல்செய்கிறது. விதியானது மிகவும்பலமுள்ளதென்று யாவரும் அறியுங்கள். அடையத்தகாதமோக்ஷத்தைக் கர்மத்தால்அடையமாட்டான். எது வரக்கூடியதோ அது வந்தேவிடுமென்று நாம் அறிந்துகொள்ளவேண்டும். அறம்பொருள்காமங்களைவிட்டவனும் மோக்ஷமென்னும்பயனையடைகிறான். ஆகையால், இந்தமோக்ஷமானது உலகங்களின்நன்மைக்குக்

1, 2, 3 வேறுபாடம்.

காரணமான ரஹஸ்யமாகும்" என்றுசொன்னார். சிறந்தபுத்தியுள்ள தர்மபுத்திரர்சொல்லிய மனத்திற்கு இசைந்ததும் யுக்தியுள்ளதுமான அந்தவசனத்தையெல்லாம்கேட்டு அப்பொழுது அவர்கள் கொண்டாடினார்கள்; மிகவும்ஸந்தோஷத்தையும் அடைந்தார்கள். குருக்களிற்சிறந்ததர்மபுத்திரரின்பொருட்டு அஞ்சலியையுஞ்செய்தார்கள். மிக்கஅழகானவெழுத்துக்களும் சொற்களுமுள்ள வாக்யங்களால் அலங்கரிக்கப்பட்டதும் மனத்திற்குப்பிரியமானதும் சொற்குற்றங்களில்லாததும் அரசரானதர்மபுத்திரரால்சொல்லப்பட்டதுமான அந்த வார்த்தையைக்கேட்டு அனைவரும் அவரிடம் வணக்கமுள்ளவர்களாயிருந்தார்கள். அப்படியே வீரியசாலியான தர்மபுத்திரராஜரும் மெச்சிக்கொண்டார்; திரும்பவும் அறம்பொருள்காமங்களைப்பற்றிய நிச்சயத்தையறிந்தவரும் பெரியமனமுள்ளவரும் கங்கையின்புத்திரருமான பீஷ்மரைநோக்கி அதற்குமேலான தர்மத்தைக் கேட்கத்தொடங்கினார்.

---

நூற்றறுபத்தாறுவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், ஸ்நேகிக்கத்தக்கவர்கள் தகாதவர்களின் லக்ஷணத்தைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிராஜ்ஞர்களில் பெரியவரும் குருக்களுக்குப் பிரியத்தைப்பெருகச்செய்கிறவருமான பிதாமஹரே! ஒருப்[illegible]னத்தைச்செய்கிறேன்; அதனை எனக்கு நீர் விரித்துரைக்கவேண்டும். எவ்விதமானமனிதர்களை அடுக்கவேண்டும்? எவர்களுடன் ப்ரியமாகவிருப்பது சிறந்ததாகும்? வருங்காலத்திலும் நிகழ்காலத்திலும் எவர்கள் (ஹிதத்தைச்) செய்யத்தக்கவர்கள்? அவர்களை எனக்குச் சொல்லவேண்டும். மித்திரர்கள் எந்தக்கார்யத்தில் உறுதியாகவிருப்பார்களோ அதில் பெருஞ்செல்வமும் ஸம்பந்திகளும் பந்துக்களும் இருக்கமாட்டார்களென்று எனக்குத்தோன்றுகிறது. (சொல்லுகிறதைக்) கேட்கிறமித்திரன் அரியனன்றோ. ஹிதத்தைச்செய்யும் மித்திரன் [illegible]ப்பதும் அரிது. தர்மத்தை மேற்கொண்டவர்களிற்சிற[illegible]த்தையும் நீர் விரிவாகச்சொல்லத்தக்கவராகிறீர்" [illegible] சொல்லத்தொடங்கினார்.

[illegible]! [illegible]க்கபுருஷர்களை[illegible]

[illegible]

[illegible]

கொண்டவன், க்ரூரனாயிருப்பவன், தர்மத்தைவிட்டவன், ஹிம்ஸை செய்கிறவன், ரஹஸ்யமாக அப்ரியத்தைச்செய்கிறவன், நீசன், பாப நடையுள்ளவன், எல்லாரிடத்திலும் ஸந்தேகப்படுகிறவன், முயற்சி யில்லாதவன், தாமஸஸ்வபாவமுள்ளவன், கோணலாயிருப்பவன், நிந் திக்கப்பட்டவன், குருதாரத்திற்செல்லத்துணிபவன், துன்பமுள்ள ஸமயத்தில்விலகிப்போகிறவன், கெட்டபுத்தியுள்ளவன், வெட்க மில்லாதவன், எல்லாவிடத்திலும் பாபத்தைப்பார்க்கிறவன், நாஸ் திகன், வேதத்தைநிந்திக்கிறவன், உலகத்தில்பலவிதமாகச்செல்லும் இந்திரியங்களுடையவன், [1]காமத்தில்பற்றுதலுடன் ஸஞ்சரிப்பவன், ஸபைக்குத்தகாதவன், உலகத்தால்பகைக்கப்பட்டவன், ப்ரதிஜ்ஞை யில் உறுதியில்லாதவன், கோட்சொல்லுகிறவன், கல்வியறிவில்லா தவன், மாத்ஸர்யமுள்ளவன், கெட்டஎண்ணமுள்ளவன், கெட்ட இயற்கையுள்ளவன், நல்லமனமில்லாதவன், க்ரூரச்செய்கையுள்ளவன், கபடன், மித்ரர்களுடன்விரோதிப்பவன், எப்பொழுதும் பொருளா சையால் பொருளைக்குறித்து ஸஞ்சரிப்பவன், சக்திக்குத்தக்கபடி கொடுப்பவர்களிடமும் ஸந்தோஷமடையாத அல்பபுத்தியுள்ளவன், எப்பொழுதும் மித்ரனுக்குஅதைர்யத்தையே உண்டுபண்ணும் அதம மனிதன், காரணமில்லாமல்கோபங்கொள்ளுகிறவன், காரணமில்லா மல்வெறுத்துக்கொள்ளுகிறவன், ஸ்நேகிதர்களையும் சுபகார்யங்களை யும் வேகமாகவிலக்கும்பாவி, அறியாமற்செய்த அல்பஅபகாரத்தால் செய்தஉபகாரத்தை நினையாமலிருப்பவன், கார்யத்திற்குவேண்டி மித்திரர்களை அடுக்கும் மித்ரத்வேஷி, மித்ரனுக்கொப்பானமுகங் கொண்டசத்ரு, கோணலான பார்வையுள்ளவன், மாறுனபார்வை யுள்ளவன், க்ஷேமகாலத்தில் ஸந்தோஷமடையாதவன் ஆகிய இவ் விதமானமனிதர்களை விலக்கவேண்டும். குடியுள்ளவனும், பகையுள் ளவனும், கோபமுள்ளவனும், தயையில்லாதவனும், க்ரூரனாயிருப்ப வனும், பிறரைத்துன்பப்படுத்துபவனும், மித்ரர்களுக்கு த்ரோகஞ் செய்பவனும், ப்ராணிகளைக்கொல்லுவதில்விருப்பமுள்ளவனும், நன் றிகெட்டஅதமனும், உலகத்தில்எவ்விதத்திலும் ஸ்நேஹிக்கத்தக்க வர்களல்லர். மித்ரர்களைப்பகைப்பவனும் ஸ்நேஹிக்கத்தக்கவனல்லன். ஸ்நேஹஞ்செய்யத்தக்கவர்களையும் என்னிடமிருந்துகேள். நற்குலத் திற்பிறந்தவர்களும், இன்சொல்கூறுகிறவர்களும், ஞானத்திலும்விசே ஷமானஞானத்திலும் ஸாமர்த்தியமுள்ளவர்களும், நல்லரூபமுள்ள வர்களும், நற்குணமுள்ளவர்களும், ஆசையற்றவர்களும், ச்ரமத்தை

[1] வேறுபாடம்.

ஜயித்தவர்களும், நல்லமித்ரர்களுள்ளவர்களும், நன்றியறிவுள்ளவர்க ளும், எல்லாமறிந்தவர்களும், லோபமில்லாதவர்களும், இனியகுணம் நிறைந்தவர்களும், ஸத்யமானசொல்லுள்ளவர்களும், இந்திரியங்களை வென்றவர்களும், எப்பொழுதும் ச்ரமமெடுக்கும் ஸ்வபாவமுள்ளவர் களும், [1]நல்லகுலத்தைச் சேர்ந்தபுத்திரர்களும், குலத்தில் தலைமையாக இருப்பவர்களும், தோஷங்களால் விடப்பட்டவர்களும், ப்ரஸித்திபெற்ற வர்களும் அரசர்களால் ஸ்நேஹிக்கத்தக்கவர்கள். பிரபுவே! (இவர் கள்) சக்திக்குத்தக்கபடி காரியங்களைச்செய்து மிகவும்ஸந்தோஷப் படுத்துவார்கள். அகாரணத்தில் கோபமுள்ளவர்களும் காரணமின்றி வெறுப்படைந்தவர்களுமாயிருக்கமாட்டார்கள். வெறுப்படைந்தா லும் காரியத்தில்ஸமர்த்தர்களாயிருப்பவர்கள் மனத்தாலும் குற்ற முள்ளவர்களாகமாட்டார்கள். தம்மைக் கஷ்டப்படுத்திக்கொண்டா வது மித்ரகார்யத்தை மிகப்பெரிதாகக்கொண்டவர்கள். ஆட்டுமயி ரால்செய்து சிவப்புவர்ணங்கொடுத்த ஆடையானது நிறம்மாறுமலிருப் பதுபோல மித்ரர்களிடம் ஸ்நேஹம் மாறுமலிருப்பார்கள். நம்பிக்கை யுள்ளவர்களும் பந்துக்களிடம் நேசமுள்ளவர்களுமான மித்ரர்கள் பொருள்களில்லோபம் ஸ்திரீகளிடம்மோகமுதலிய தோஷங்களைக் காண்பிக்கமாட்டார்கள். எவர்கள் மண்ணாங்கட்டியிலும் ஸுவர் ணத்திலும் ஸமமான எண்ணமுள்ளவர்களும் மித்ரர்களிடம்உறுதி யானபுத்தியுள்ளவர்களும் அபிமானமற்றவர்களும் பொருளிலும் ஆபரணங்களிலும் ஆசையைவிட்டவர்களும் [2]பரிஜனத்தைச் சேர்க் கிறவர்களும் எப்பொழுதும் யஜமானனுடையபொருளைப் பெரிதாகக் கொண்டவர்களுமாய் நடக்கிறார்களோ அவ்விதமான உத்தமபுருஷர்க ளுடன் எந்தஅரசன் ஸ்நேஹத்தைச்செய்துகொள்ளுகிறானே அந்த அரசனுடைய [illegible]

## நூற்றறுபத்தேழாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், ஒருபிராம்மணுதமன் திருடர்களின்கிராமம்சென்று பாபத்தொழிலுள்ளவனாகி வஸித்ததையும், மற்றொருபிராம்மணர் அவனுக்கு நல்லஆசாரத்தை உபதேசித்ததையும் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "மித்திரர்களை த்ரோஹஞ்செய்பவனும் நன்றிகெட்டவனுமாக எவன்சொல்லப்பட்டானோ அவனை எனக்குச் சொல்லவேண்டும். இவ்விஷயத்தைப்பற்றிய இதிஹாஸத்தை உள்ளபடி விரிவாகக் கேட்கவிரும்புகிறேன்" என்றுசொல்ல, பீஷ்மர்சொல்லத் தொடங்கினார். "அரசனே! வடக்குத்திக்கில் மிலேச்சர்களிடம் நடந்தபழையஇதிஹாஸத்தை இப்பொழுது நான் உனக்குச்சொல்லுகிறேன். மத்தியதேசத்திலுண்டானவனும் கறுத்தசரீரமுள்ளவனும் [1] வேதமோதாதவனுமான ஒருபிராம்மணன், பொருளில் பேராசையால், திருட்டுக்கூட்டம் நிரம்பிய ஒருகிராமத்திற்குச் சென்றான். அந்தக்கிராமத்தில் எல்லாஜாதிகளின் விசேஷங்களையும் அறிந்தவனும் பிராம்மணர்களுக்குஹிதனும் ஸத்யமான சொல்லுள்ளவனும் தனமுள்ளவனுமான ஒருதிருடன் தானஞ்செய்வதில் அதிகப்ரியமுள்ளவனாயிருந்தான். உடனே பிராம்மணன் அந்தத்திருடனுடைய வீட்டிற்குச்சென்று பிக்ஷையையாசித்தான். அந்தத்திருடனானவன் அந்தப்பிராம்மணனுக்கு வஸிக்கவேண்டியதற்காக இடத்தையும் வருஷத்திற்குவேண்டிய பிக்ஷையையும் கரையுள்ளதான புதியவஸ்திரத்தையும் பதியில்லாதவளும் யௌவனப்பருவமுடையவளுமான ஒருஸ்திரீயையும் கொடுத்தான். அரசனே! கௌதம கோத்திரத்தில் பிறந்த அந்தப்பிராம்மணன் [2] திருடனிடமிருந்து இவற்றையெல்லாம் அவ்விதம்பெற்றுக்கொண்டு ஸந்தோஷமடைந்த மனமுள்ளவனாகிச் சிறந்ததான அந்தவீட்டில் அந்தஸ்திரீயுடன்கூட ஸந்தோஷமாகஇருந்தான்; திருடனுடைய குடும்பத்திற்கு வேண்டியஸஹாயத்தையும் செய்துகொண்டு வந்தான். அந்தப்ராம்மணன், ஸம்பத்து நிறைந்ததும் வேடர்களுக்கிருப்பிடமுமான அந்தக்கிராமத்தில் ஒருவருஷம் வஸித்துவந்தான். கௌதமன், (பிராணிகளை) அம்பினால் அடிப்பதில் பெரியமுயற்சியையும் செய்துகொண்டுவந்தான். அரசனே!

---

1 'வேதத்தில்கூறியகர்மங்களைச்செய்யாதவனும்' என்பதுபழையவுரை.

2 வேறுபாடம்.

திருடர்களின் கூட்டங்கள்போல அந்தக் கௌதமப்ராம்மணனும் ஒவ்வொருநாளும் நான்குபக்கங்களிலும் காடுகளிலிருப்பவைகளான அன்னபக்ஷிகளைக் கொன்முன். ஹிம்ஸிப்பதில் ஸாமர்த்தியமுள்ளவனும் தயையற்றவனும் எப்பொழுதும் பிராணிகளைக்கொல்வதில்பிரியமுள்ளவனுமான கௌதமன் சேர்ந்திருக்குங்காரணத்தால் திருடர்களுக்குச்சரியான தன்மையைஅடைந்தான். அவ்விதம் திருடர்களின்கிராமத்தில் பலபக்ஷிகளைக்கொன்றுகொண்டு ஸுகமாகவஸித்துவரும் அந்தப்பிராம்மணனுக்குப் பலமாஸங்கள்சென்றன. பிறகு, ஒருஸமயத்தில் ஜடையையும் மாவுரியையும் தோலையும்தரிப்பவரும் வேதாத்யயனத்தில் விடாமுயற்சியுள்ளவரும் பரிசுத்தருமான வேறு ஒருபிராம்மணர் அந்தத்தேசத்திற்குவந்தார். வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் படிப்புள்ளவரும் வேதாந்தங்களின்கரையைக்கண்டவருமான அந்தப்பிராம்மணர் அவ்விடத்தில் அந்தக்கௌதமனுக்கு ஸ்நேஹிதராகவே காணப்பட்டார். அவர் இந்தக்கௌதமன் எந்தக் கிராமத்திலிருந்தானே அந்தத்திருடர்களுடைய கிராமத்தையடைந்தார். சூத்திரர்களின் அன்னத்தைவிலக்கிய அந்தப்பிராம்மணர் திருடர்கள்நிறைந்த அந்தக்கிராமத்தில் பிராம்மணர்களின் வீட்டைத் தேடிக்கொண்டு நான்குபுறத்திலும் ஸஞ்சரித்தார். பிறகு, அந்தப் பிராம்மணோத்தமர் கௌதமனுடைய வீட்டையடைந்தார். கௌதமனும் வந்தான். அவர்கள் ஒருவரோடொருவர் சேர்ந்துகொண்டார்கள். தோளில்அன்னப்புள்சுமையுள்ளவனும் கையில்வில்லேந்தியவனும் ஆயுதமெடுத்தவனும் உதிரத்தால்நனைந்த அங்கங்களுள்ளவனும் வீட்டின் வாயிலை அடைந்தவனும் மனிதர்களைத்தின்னும் ராக்ஷஸன் போன்றசோபையுள்ளவனுமான அந்தக்கௌதமனைப்பார்த்து அவனைப் பதிதனும் குறைவை அடைந்தவனுமாகத் தெரிந்துகொண்டு பிராம்மணர் வெட்கமுற்று உடனே இந்தவசனத்தைச் சொல்லத்தொடங்கினர்.

'இஃது என்ன அவிவேகத்தால்செய்கிறாய்? நீ, நற்குலத்திற் பிறந்தபிராம்மணனன்றோ? மத்தியதேசத்தானென்று அறியப்பட்ட நீ எப்படித் திருடர்களின்நிலையை அடைந்தாய்? பிராம்மணனே! வேதத்தில் கரைகண்டவர்களும் ப்ரஸித்திபெற்றவர்களுமான உன் முன்னோர்களானஞாதிகளை நினைத்துப்பார். அந்தப்பெரியோர்களின் குலத்தில்பிறந்தநீ இவ்விதம் குலத்தைக்கெடுக்கிறாயே. பிராம்மணனே! நீ உன்னைப் புத்தியால்தெரிந்துகொண்டு ஸத்வகுணத்தையும் ஸ்வபாவத்தையும் வேதத்தையும் அடக்கத்தையும் தயையை

யும் நன்றாகநினைத்துப்பார்த்து இவ்விடத்தில் வஸிப்பதை விலக்கிக் கொள்' என்றுசொன்னார். அரசனே! ஹிதத்தைவிரும்புகிறவரும் ஸ்நேஹிதருமான அந்தப்பிராம்மணரால் அவ்விடத்தில் இவ்விதஞ் சொல்லப்பட்ட அந்தக்கௌதமன் உடனே அப்பொழுது துன்ப முள்ளவன்போலப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, 'பிராம்மணச்ரேஷ் டரே! நான் பொருளில்லாதவனாயிருக்கிறேன். நான் வேதமறிந்த வனும் அல்லன். பிராம்மணர்களில் மிகச்சிறந்தவரே! பொருளுக்கு வேண்டி இவ்விடத்தில் வந்தவனென்று என்னை அறிந்துகொள்ளும். பிராம்மணச்ரேஷ்டரே! இப்பொழுது உம்மைக்கண்டவுடன் நான் க்ருதார்த்தனாகிறேன். பிராம்மணரே! இன்றிரவு இங்குவஸித்துக் கொண்டிரும். நாளைத்தினம் சேர்ந்து வழியிற்செல்லுவோம்' என்று மறுமொழிசொன்னான். அந்தப்பிராம்மணர் வெட்கமுற்று ஒன்றை யும் தொடாமல் அவ்விடத்தில் வஸித்தார். பசியுள்ள அவர் உபசரிக் கப்படுகிறவரானாலும் போஜனஞ்செய்யவிரும்பவில்லை.

---

## நூற்றறுபத்தேட்டாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர், கௌதமன்பொருள்தேடுவதற்காகச் சென்றதையும், ஒரு கொக்கினுடன் நட்புக்கொண்டதையும் கூறியது.)

அன்று இரவுவிடிந்ததும் அந்தப்பிராம்மணோத்தமரானவர் சென்றவுடன், கௌதமன் தனவிருப்பமுள்ளவனாகி வெளியில்கிளம் [illegible] ஸஞ்சரிக்கத்தொடங்கினான். பிறகு, அவன் வழியில் [illegible] செய்யும் வர்த்தகர்களைக்கண்டான். அவன் [illegible] ஸமுத்திரத்தைக்குறித்துப் பிரயாணஞ் [illegible] மஹாராஜனே! பிறகு, அந்தவர்த்தகக் [illegible] யின்குகையிலுள்ள மதம்பிடித்தயானையால் [illegible] பட்டதாயிற்று. அப்பொழுது உயிரில்ஆசை [illegible] '[illegible] க்கில் செல்லுவேன்?' என்று பயந்தவனுமான [illegible] கபிரயாஸத்தால் அந்தப்பயத்திலிருந்து விடு [illegible] க்கி ஓடத்தொடங்கினான். பிறகு, கூட்டத் [illegible] ருந்தும் காரியத்திலிருந்தும் நழுவுதலடைந்த [illegible] ந்தமனிதனைப்போல ஸஹாயமில்லாமல் அந்த அரண்யத்தில ஸஞ்சரித்துக்கொண்டிருந்தான். பிறகு, அவன் அப்பொழுது

கடலுக்குச்செல்லும் வழியை அடைந்து பூத்தமரங்களுள்ளதும் எல்லாருதுக்களிலும்பூக்களுள்ளமாங்காடுகளால் அலங்கரிக்கப்பட்டதும் நந்தனவனத்தின் இடத்திற்கொப்பானதும் யக்ஷர்களாலும் கின்னரர்களாலும் அடையப்பட்டதும் [1]ஸாலம், பனை, வெள்வேல், அரசு, ஆல், அகில் இவைகளின்காடுகளாலும் சிறந்தசந்தனமரங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் அழகுள்ளதுமான பெரிய அரண்யத்தை அடைந்தான். அந்த அரண்யத்தில் ஸுகமானவாஸனையுள்ளவைகளும் ஸுகமுள்ளவைகளும் அழகுள்ளவைகளுமான மலையின்தாழ்வரைகளில் நான்குபக்கங்களிலும் மிகச்சிறந்தபக்ஷிகள் அழகாகச்சப்தித்துக்கொண்டிருந்தன. மனுஷ்யர்களின் முகம்போன்ற முகமுள்ளவைகளும் பாருண்டங்களென்று பிரஸித்திபெற்றவைகளுமான வேறுபக்ஷிகளும் கடலில் செல்லத்தக்க வேறுசிலபக்ஷிகளும் நான்குபுறங்களிலும் மேலே பறந்துகொண்டிருந்தன. அந்தக்கௌதமனென்ற பிராம்மணன் மிக்கஅழகுள்ளவைகளும் மிகவும்மனத்தைக்கவரத்தக்கவைகளுமான பக்ஷிகளின்சப்தங்களைக் கேட்டுக்கொண்டே சென்றான். பிறகு, மிக்கஅழகான இடங்களில் பொன்மணல்கள்நிரம்பியதும் ஆச்சர்யமும் ஸ்வர்க்கலோகத்திலுள்ள தேசத்திற்குச்சரியான காந்தியுள்ளதும் மேடுபள்ளமில்லாததுமான அந்தப்ரதேசத்தின்ஒருபக்கத்தில் லக்ஷ்மியால் வஸிக்கப்பட்டதும் மிகப்பெரிதுமான ஓர் ஆலமரத்தைக்கண்டான். மரத்திற்குத்தகுதியானகிளைகளால் சூழப்பட்டதும் குடைபோன்றதும் உத்தமமானசந்தனஜலத்தால் நனைக்கப்பட்டதும் திவ்யமானபுஷ்பங்களுடன்கூடியதும் சோலையுள்ள ப்ரம்மதேவரின் ஸபையை உபமானமாகக்கொண்டதுமான அந்தமரத்தின் அடியையும் மனத்திற்குப்பிரியமுள்ளதும் மிகஉத்தமமுமான அந்தமரத்தையும்கண்டு கௌதமன் பிரீதியுள்ளவனாய்ப் பரிசுத்தமானதும் தேவர்களின்வீடுபோல் விளங்குவதும் புஷ்பங்களுள்ளமரங்களால் சூழப்பட்டதுமான அந்தஆலமரத்தினருகிற்சென்று ஸந்தோஷத்தையடைந்து அந்தமரத்தினடியில் உட்கார்ந்தான். குந்தியின்குமாரனான அரசனே! அந்தமரத்தினடியில் உட்கார்ந்திருக்கும் கௌதமனுக்கு அப்பொழுது பூக்களைநன்றாகஸ்பர்சித்துக்கொண்டு அவனுடைய அங்கங்களைஸந்தோஷப்படுத்துகிறதான சுபமானகாற்றானது நன்றாகவீசிற்று. அரசனே! மிகவும்ச்ரமமுற்ற அந்தப்பிராம்மணன் உத்தமமான காற்றினால் வீசப்படவும் ஸுகமடைந்து உறக்கமுற்றான். ஸூர்யனும் அஸ்தமயமடைந்தான். பிறகு, ஸூர்யன் அஸ்தமயமடைந்து

1 ஆச்சாமரம்.

ஸந்தியாகாலம்வந்ததும், காச்யபருக்குப்பிள்ளையும் அறிவுள்ளவர்களில்பெரியதும் கொக்குக்களுக்கு அரசும் பிரம்மதேவருக்குஆசைத்தோழமையுள்ளதும் நாடீஜங்கனென்றுப்ரஸித்திபெற்றதும் உத்தமமுமானபக்ஷியானது பிரம்மலோகத்திலிருந்து தன்வீடான அவ்வாலமரத்திற்கு வந்தது. தேவகன்னிகையின்பிள்ளையும் காந்தியுள்ளதும் அறிவுள்ளதும் தேவர்களுக்குச்சரியான காந்தியுள்ளதும் ராஜதர்மாவென்றுபிரஸித்திபெற்றதுமான அது பூமியில்ஒப்பற்றதாயிருந்தது. மெருகிட்ட தங்கத்தால் மறைக்கப்பட்டதும் ஸூர்யனுக்குச்சமமான ஆபரணங்களால் எல்லா அங்கங்களிலும் அலங்கரிக்கப்பட்டதும் தேவகுமாரனுமான அந்தப்பக்ஷியானது காந்தியால் ஜ்வலித்துக்கொண்டுவந்தது. கௌதமன், வந்த அந்தப்பக்ஷியைக் கண்டு ஆச்சர்யமடைந்தான். பசியும் தாகமும்சூழ்ந்தபுத்தியுள்ள கௌதமன் அந்தப்பக்ஷியைக் கொல்லவேண்டுமென்று பார்த்தான். ராஜதர்மாவென்னும் பக்ஷியானது, 'ஓ! பிராம்மணரே! உமக்கு நல்லவரவா? (என்னுடைய) பாக்யத்தால் என்வீட்டைஅடைந்தவராயிருக்கிறீர். ரவியும் அஸ்தமயத்தைஅடைந்துவிட்டான். இதோ ஸந்தியாகாலம் வந்துவிட்டது. என்னுடையவீட்டை அடைந்த குற்றமில்லாதநீர் பிரியமான அதிதியாகிறீர். விதியில்காணப்படும்கர்மப்படி பூஜிக்கப்பட்டு நீர் காலையில் பிரயாணப்படலாம்' என்றுசொல்லிற்று.

---

## நூற்றறுபத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், கௌதமன் கொக்கினால்ஏவப்பட்டு, மனுவ்ராஜநகரத்தைஅடைந்து, அதன் அரசனால் உபசரிக்கப்பட்டதைச் சொல்லியது.)

அரசனே! கௌதமன் அப்பொழுது இனிமையான அந்தச்சொல்லைக்கேட்டு ஆச்சர்யமடைந்து குதூஹலத்துடன் ராஜதர்மாவென்னும்அந்தப்பக்ஷியைப்பார்த்தான். ராஜதர்மா, 'ஐயா! நான் காச்யபரின்புத்திரன். பதிவ்ரதையானதாக்ஷாயணி என்னுடையதாய். நீர் நற்குணங்களையுடையவராயிருக்கிறீர். பிராம்மணோத்தமரே! உமக்கு நல்வரவா?' என்றுசொல்லிற்று. (சொன்னபின்) அந்தராஜதர்மாவானது விதியில்காணப்படும்கர்மப்படி அந்தப்ராம்மணன்பொருட்டு மரியாதையைச்செய்தபின் ஸாலவிருக்ஷங்களின்புஷ்பங்களால் செய்யப்பட்ட திவ்யமான ஆஸனத்தை ஏற்படுத்திக் கங்காநதியால்

பின்செல்லப்பட்ட பகீரதரின் தேர்சென்றஇடங்களில் எந்தப்பெரிய மீன்கள் ஸஞ்சரிக்கின்றனவோ அவைகளையும் அந்தப்பிராம்மண னுக்கு ஸித்தஞ்செய்தது. காச்யபரின்புத்திரனை அந்தப்பக்ஷியா னது மிகப்பெரியவைகளானமீன்களையும் நன்றாகஜ்வலிக்கும் அக்னி யையும் அதிதியானகௌதமனுக்கு அளித்தது. பெரியமனமுள்ள அந்தப்பக்ஷியானது போஜனம்செய்தவனும் ஸந்தோஷமடைந்த மன முள்ளவனுமான அந்தப்பிராம்மணனைக் களைப்பைமாற்றவேண்டிய தற்காகச் சிறகுகளால்வீசிற்று. பிறகு, ஶ்ரமபரிகாரம்அடைந்து உட் கார்ந்திருக்கும்பிராம்மணனைக் கோத்திரத்தையும் நடக்கையையும் வினவிற்று. அந்தப்ராம்மணன், 'நான் கௌதமகோத்திரத்தில்பிறந்த வன்' என்றும், 'பிராம்மணன்' என்றும் கூறினன். அவன்பொருட்டு இலைகளால்செய்யப்பட்டதும் திவ்யமானபுஷ்பங்களால் வாஸனையுள்ள தாகச்செய்யப்பட்டதும் வாஸனைநிறைந்ததுமான படுக்கையை அளித் தது. அந்தப்பிராம்மணன் ஸுகமாக அந்தப்படுக்கையில் படுக்கத் தொடங்கினன். பிறகு, வாக்கியங்களை அறிந்தவைகளுள் சிறந்ததும் நல்லவாக்குள்ளதும் காச்யபரின்பிள்ளையுமான அந்தப்பக்ஷியானது படுக்கையில்உட்கார்ந்திருக்கும் கௌதமனை நோக்கி, 'வந்தகாரணமெ ன்ன?' என்று வினவிற்று. பாரத! உடனே கௌதமன், 'பெரிய புத்தியுள்ளதே! நான்ஏழை; தனம்ஸம்பாதிக்கவேண்டுமென்று கட லில்செல்லவிரும்பி வந்தேன்' என்று அந்தப்பக்ஷியிடம்சொன்னன். காச்யபரின்பிள்ளையான பக்ஷியானது ப்ரீதியுடன் அந்தப்பிராம்மண னைநோக்கி, 'ஓ! ப்ராம்மணச்ரேஷ்டரே! நீர் சே த்தை அடையத் தக்கவரல்லர், காரியத்தைச்செய்துகொண்டவரும் திரவியங்களையு டையவருமாக வீடுசெல்லப்போகிறீர். பொருளை அடையத்தக்க வழி யானது, மித்திரனும் கல்வியும் பொருளும் அறிஞர்கள்விரும்பத்தக்க புத்தியுமென நான்குவகைப்படுமென்று ப்ருஹஸ்பதி கூறியிருக்கி றார். நான் உமக்கு நண்பனுகிறேன். மித்திரத்தன்மையானது மிக வும்பெரிது. அவ்விதம் மித்திரனைநான் நீர் எவ்விதம் பொருளுள் ளவராவீரோ அவ்விதம் முயற்சிசெய்கிறேன்' என்றுசொல்லிற்று. பிறகு, பொழுதுவிடிந்தஸமயத்தில் ஸுகப்ரச்னம்செய்தபின், 'அழ குள்ளவரே! இந்தவழியால்செல்லும்; செய்யவேண்டியதைச் செய்து கொண்டவராவீர். இங்கிருந்து மூன்று யோஜனைதூரம் போன பின்பு ராக்ஷஸர்களுக்குஅதிபதியும் மஹானும் விரூபாக்ஷனென்று பிரஸித்திபெற்றவனும் மஹாபலசாலியுமான என்னுடைய ஸ்நேஹி தன் ஒருவனிருக்கிறான். பிராம்மணச்ரேஷ்டரே! நீர் அவனிடம்

போய்ச் சேரும். அவன் என்னுடையவசனத்தால்ஏவப்பட்டு இஷ்டமானகாமங்களை உமக்கு அளிப்பான். இதில் ஸந்தேஹமில்லை' என்ற இவ்வசனத்தைச் சொல்லிற்று. அரசனே! இவ்விதம்சொல்லப்பட்ட கௌதமன் ச்ரமம்நீங்கினவனாகி அமிருதத்திற்கொப்பான கனிகளை இஷ்டம்போலப் புஜித்துக்கொண்டு செல்லத்தொடங்கினான். மஹாராஜனே! அந்தவழியிலுள்ள சிறந்ததானசந்தனமும் அகிலுமாகிய மரங்களையும், நல்லஇலையும்பட்டையுமுள்ளகாடுகளையும் பார்த்துக்கொண்டு வேகமாகச்சென்றான். உடனே கற்களால்கட்டப்பட்ட தோரணங்களுள்ளதும் கற்களால்அமைக்கப்பட்ட பிராகாரங்களும் தாழ்வரைகளுமுள்ளதும் சிலாமயமான யந்திரத்தாழ்களுள்ளதுமான [1] மனுவ்ராஜமென்னும் நகரத்தைஅடைந்தான். அரசனே! அவனை, ஸ்நேஹிதனால்அனுப்பப்பட்டவனும் ஸந்தோஷிக்கத்தக்கவனுமான ப்ரியஅதிதியென்று புத்திமானான அந்தராக்ஷஸராஜன் அறிந்துகொண்டான். யுதிஷ்டிர! உடனே அந்தராக்ஷஸராஜன் தன்வேலைக்காரர்களைநோக்கி, 'நகரின்துவாரத்திலிருந்து சீக்கிரமாகக் கௌதமனை அழைத்துவரவேண்டும்' என்றுசொன்னான். அந்தஉத்தமமானபட்டணத்திலிருந்து வெண்மையான கவசமுள்ளபுருஷர்கள், 'கௌதம! கௌதம!' என்றுகூவிக்கொண்டு வேகமாக நகரின் கோட்டைவாயிலுக்கு வந்தார்கள். மஹாராஜனே! அப்பொழுது அரசனுடைய அந்தவேலைக்காரர்கள் அந்தப்பிராம்மணனைநோக்கி, 'சீக்கிரப்படு; சீக்கிரமாகவா. ராக்ஷஸர்களுக்கு அதிபதியும் வீரரும் விரூபாக்ஷரென்றுபிரஸித்தருமான அரசர் உன்னைப்பார்க்கவிரும்புகிறார். அவர் உன்னைப்பார்க்க அவஸரப்படுகிறார். ஆகையால், சீக்கிரஞ்செய்யவேண்டும்' என்று சொன்னார்கள். உடனே அந்தப்பிராம்மணன் ஆச்சர்யத்தால்ச்ரமம்நீங்கினவனாகி விரைந்துசென்றான். அப்பொழுது அந்தச் சிறந்தஸம்பத்தைப்பார்த்து மிகவும் வியப்படைந்தவனும் அந்தவேலைக்காரர்களுடன்கூடினவனுமான கௌதமனென்னும்பிராம்மணன் ராக்ஷஸராஜனுடையதர்சனத்தை விரும்பிக்கொண்டு அவனுடையவீட்டை வேகமாகஅடைந்தான்.

1 'மேருவ்ராஜம்' என்பது வேறுபாடம்.

## நூற்றெழுபதாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், விரூபாக்ஷன் கௌதமனுக்கு ஸுவர்ணமுதலியவற்றைக் கொடுத்தனுப்பியதையும், அவன் திரும்பிக் கொக்கினிடம் வந்து உபசரிக்கப்பெற்று அந்தக்கொக்கைக்கொன்று விடத்துணிந்ததையும் சொல்லியது.)

*பிறகு, அறியப்பட்ட அந்தக்கௌதமன் உத்தமமானராக்ஷஸராஜன்வீட்டை அடைந்து அவனால்பூஜிக்கப்பட்டு உத்தமமான ஆஸனத்தில்உட்கார்ந்தான். அவன்கோத்திரத்தையும் ப்ரம்மசர்யத்தில்செய்த வேதாத்யயனத்தையும் வேதத்திலுள்ளசாகையையும் வினவப்பட்டான். அரசனால் ப்ரச்னஞ்செய்யப்பட்டபிராம்மணன் ஒன்றையும் அறியவில்லை. பிறகு கோத்திரத்தைமட்டில்சொன்னான். பிராம்மணர்களுக்குள்ள தேஜஸில்லாதவனும் வேதாத்யயனத்திலிருந்துவிலகியவனும் கோத்திரத்தைமட்டில்அறிந்தவனுமான அந்தப்பிராம்மணனுடைய இருப்பிடத்தைப்பற்றி அரசன்கேட்கத்தொடங்கினான். ‘ஏ! கல்யாண! எவ்விடத்தில் உனக்குவாஸம்? உன்னுடையபார்யையானபிராம்மணி, எந்தக்கோத்திரத்திலுண்டானவள்? உண்மையைச்சொல்லு; பயப்படவேண்டாம்; ஸுகமாகஇருக்கும்படி ச்ரமபரிகாரம்செய்துகொள்’ என்றுசொன்னான். கௌதமன், ‘நான் மத்யதேசத்தில் பிறந்தவன். வேடர்களுக்கிருப்பிடமான ஒருசேரியில் எனக்குவாஸம். இரண்டாவதுதடவை விவாஹஞ்செய்யப்பட்டசூத்ரஸ்திரீ என்னுடையமனைவி; உண்மையாக இதை உன்னிடஞ்சொல்லுகிறேன்’ என்றுசொன்னான். உடனே, அரசன்ஆலோசிக்கத்தொடங்கினான். ‘எப்படி இதுசெய்யத்தக்கதாகும்? எனக்குப் புண்யந்தான்எவ்விதமுண்டாகக்கூடும்? இவன் பிறப்பில்பிராம்மணன்; மஹாத்மாவான அந்தராஜதர்மாவென்னும்பக்ஷிக்கு மித்திரன். காச்யபரின் பிள்ளையும் மஹாத்மாவுமான அந்தப்பக்ஷியால் இவன் அனுப்பப்பட்டிருக்கிறான். அந்தப்பக்ஷியோ எப்பொழுதும் என்னை அடுத்தது. நான் அதற்குப்பிரியத்தைச்செய்வேன். அந்தப்பக்ஷியானது எனக்கு உடன்பிறப்பும் பந்துவும் நட்புப்பிரியமுமுள்ளதுமாயிருக்கிறது. இப்பொழுது கார்த்திகைமாதத்தியபூர்ணிமாதிதியில் என்னுடைய வீட்டில் உத்தமர்களான ஆயிரம்பிராம்மணர்கள் போஜனஞ்செய்யப் போகிறார்கள். அதில் இந்தப்பிராம்மணனும் போஜனஞ்செய்யட்டும். இந்தப்பிராம்மணன்பொருட்டும் என்னுடையதனத்தைக் கொடுக்க*

வேண்டும். புண்யமான அந்தநாள் இப்பொழுது வந்திருக்கிறது. இந்தப்ராம்மணனும் அதிதியாகவந்திருக்கிறான். (அதற்காகத்) தனமும் ஸங்கல்பிக்கப்பட்டிருக்கிறது. இதற்குமேல் என்ன ஆலோசிக்கத்தக்கது?' என்று புத்தியால் ஆலோசித்தான். பிறகு, ஸ்நானஞ் செய்தவர்களும் [1]பூசத்தக்கவைகளைப்பூசிக்கொண்டவர்களும் புதிய வெண்பட்டு ஆடையுள்ளவர்களும் அறிஞர்களுமான ஆயிரம்பிராம்மணர்கள் அலங்கரிக்கப்பட்டவர்களாய் வந்தார்கள். அரசனே! விரூபாக்ஷனைவன் வந்த அந்தப்பிராம்மணச்ரேஷ்டர்களைச் சாஸ்திர விதியில்காணப்படும்முறைப்படி யோக்யதைக்குத்தக்கபடி வரவேற்றான். பாரதர்களில்மிகச்சிறந்தவனே! ராக்ஷஸராஜனுடைய உத்தரவுப்படி வேலைக்காரர்களால் அந்தப்பிராம்மணர்களுக்கு உத்தமமானகுசங்களால்பரப்பப்பட்ட ஆஸனங்கள் பூமியில்போடப்பட்டன. அந்தஆஸனங்களில்உட்கார்ந்த அந்தப்பிராம்மணச்ரேஷ்டர்கள் அரசனால்பூஜிக்கப்பட்டார்கள். பிறகு, பிராம்மணர்கள் விதிப்படி எள்ளாலும் தர்ப்பத்தாலும் ஜலத்தாலும் பூஜிக்கப்பட்டார்கள். விச்வேதேவர்களாகவும் பித்ருக்களாகவும் அக்நிகளாகவும் ஏற்படுத்தப்பட்டார்கள். மஹாராஜனே! சந்தனம்பூசப்பெற்றவர்களும் புஷ்பங்களையணிந்தவர்களும் நன்றாகப்பூஜிக்கப்பட்டவர்களும் நல்லஆசாரமுள்ளவர்களுமான பிராம்மணர்கள் பலசந்திரர்கள்போல விளங்கினார்கள். பிறகு, வஜ்ரத்தால் அடையாளம்பண்ணப்பட்டவைகளும் பரிசுத்தமானவைகளும் அழகுள்ளவைகளும் சிறந்த அன்னங்களால்நிறைந்தவைகளும் நெய்யினாலும் தேனாலும் நனைக்கப்பட்டவைகளுமான தங்கப்பாத்திரங்களைப் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். அவனுடைய வீட்டில் எப்பொழுதும் ச்ரேஷ்டமான ஆஷாடமாஸத்தியபூர்ணிமையிலும் மாகமாஸத்தியபூர்ணிமையிலும் பலபிராம்மணர்கள் மரியாதையுள்ளதும் விரும்பத்தக்கதுமான சிறந்தபோஜனத்தைப் பெறுவார்கள். விசேஷமாகச் சரத்காலத்தின்முடிவில் கார்த்திகைமாஸத்தியபூர்ணிமாதிதியில் பிராம்மணர்கள்பொருட்டு ரத்னங்களைக்கொடுப்பானென்று கேள்வி. பாரத! மிக்கபுகழ்பெற்ற அந்தவிரூபாக்ஷன் தக்ஷிணைக்காகத் தங்கத்தையும் வெள்ளியையும் மணிகளையும் முத்துக்களையும் அதிகவிலையுள்ளவஜ்ரங்களையும் வைடூர்யங்களையும் தோல்களையும் கம்பளங்களையும் ரத்னங்களுள்ளபாத்திரங்களையும்அளித்துப் பிராம்மணச்ரேஷ்டர்களைநோக்கி, 'ஓ! பிராம்மணோத்தமர்களே! உத்ஸாஹம்போல வேண்டியஅளவு இந்த ரத்னங்களைப் பெற்றுக்கொள்

[1] 'அநுலிப்தாகா:' என்பதுமூலம்.

ளுங்கள். எந்தஎந்தப்பாத்திரங்களில் போஜனஞ்செய்தீர்களோ அந்த அந்தப்பாத்திரங்களையும் எடுத்துக்கொண்டு உம்வீடுகளுக்குச்செல் லுங்கள்' என்றுசொன்னான். பாரத! மஹாத்மாவான அந்தராக்ஷ ஸராஜன் இவ்விதவசனத்தைச்சொன்னவுடன் பிராம்மணச்ரேஷ்டர் கள் அந்தரத்தினங்களை இஷ்டப்படி எடுத்துக்கொண்டார்கள். பிறகு, அந்த அரசனால் மிகச்சிறந்த சுபமான அந்தரத்தினங்களால் பூஜிக்கப் பட்டபிராம்மணர்கள் சுத்தமான ஆடையுள்ளவர்களும் மிகவும்பிரீதி யுள்ளவர்களும் ஸந்தோஷமுள்ளவர்களுமானார்கள். பிறகு, ராக்ஷஸர் களுக்குப்பதியான அந்தஅரசன் பலதேசங்களிலிருந்துவந்திருக்கும் பிராம்மணர்களை மரியாதைசெய்து அவர்களைநோக்கித் திரும்பவும், 'பிராம்மணர்களே! இன்று ஒருநாள் உங்களுக்கு ஓரிடத்திலும் ராக்ஷஸர்களிடமிருந்து பயமில்லை. ஸந்தோஷமடையுங்கள். தாமத மின்றி இஷ்டமானஇடத்திற்குச் செல்லுங்கள்' என்றவார்த்தையைச் சொன்னான். உடனே, எல்லாப்பிராம்மணக்கூட்டங்களும் நான்கு புறத்திலும்ஓடின. கௌதமனும் ஸுவர்ணத்தின்சுமையைஎடுத்து அந்தப்பாரத்தைக் கஷ்டத்துடன் தூக்கிக்கொண்டு விரைவாகஆலமரத் தைவந்தடைந்தான். அவன் ச்ரமமடைந்தவனும் வாடியவனும் பசி யுள்ளவனுமாய்உட்கார்ந்தான். அரசனே! பிறகு, பக்ஷிகளில்உத்தம மான ராஜதர்மாவானது அந்தக்கௌதமனை வந்தடைந்தது. மித்திரர் களிடம் ஸ்நேஹமுள்ளபக்ஷியானது கௌதமனை நல்வரவழைத்து ஸந்தோஷிப்பித்தது. புத்தியுள்ளகொக்கானது தன்சிறகின்நுனியை வீசுவதால் அவனுக்குள்ளச்ரமத்தை விலக்கியது. ஷிதிப்படி பூஜை யையும் போஜனத்தையும்செய்வித்தது. பிறகு, அந்தப்பக்ஷிராஜ னும் பிராம்மணனுமாகிய இருவர்களும் வார்த்தைசொல்லிக்கொ ண்டிருந்தார்கள். இரவில் கௌதமன் அந்தப்பக்ஷிக்கருகிலிருந்து கொண்டு ஆலோசிக்கத்தொடங்கினான். 'அழகானஸுவர்ணத்தின் மிகப்பெரியஇச்சுமை பேராசையாலும் அவிவேகத்தாலும் என்னு லடையப்பட்டது. எனக்குப் போகவேண்டியதும் தூரமாகஇருக் கிறது. வழியில் உயிரைக் காப்பாற்றத்தக்கபோஜனமும் எனக்கில்லை. எதைச்செய்தால் நன்றாகச் செய்யப்பட்டதாகும்?' என்று பெரியசிந் தையுள்ளவனானான். பிரபுவானபுருஷப்புலியே! பிறகு, வழியில்புஜிக் கத்தக்கதான ஒன்றையும் காணாதவனும் நன்றிகெட்டவனுமான அந் தக்கௌதமன், 'பக்கத்திலுள்ளதும் கொக்குக்களுக்குப்பதியுமான இந்தப்பக்ஷியானது நிறைந்தமாம்ஸப்பற்றுள்ளதும் பெரிதுமாயிருக் கிறது. இதைக்கொன்று இதன்மாம்ஸத்தைஎடுத்துக்கொண்டு செல் வேன்' என்று மனத்தில் இந்தஆலோசனையைச்செய்துகொண்டான்.

## நூற்றெழுபத்தோராவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)



**(பீஷ்மர், கௌதமன் அந்தக்கொக்கைக்கொன்று எடுத்துக்கொண்டு தன் கிராமத்தைக்குறித்துப் போனதையும், கொக்கு தன்னிடம் வராததால் விரூபாக்ஷன்ஸந்தேஹித்துத் தன்புத்திரனை அனுப்பியதையும், அவன் கௌதமனைக்கொன்றதையும் சொல்லியது.)**

பிறகு, அவ்விடத்தில் பெரியஜ்வாலையுள்ளதும் காற்றைஸஹாயமாகக்கொண்டதுமான தீயானது அந்தக்கௌதமனுக்குச் சமீபத்தில் ரக்ஷைக்குவேண்டிச் சிறந்தபக்ஷியால் உண்டுபண்ணப்பட்டிருந்தது. கொக்குக்களுக்கு அரசான அந்தப்பக்ஷியும் அப்பொழுது நம்பிக்கையுடன் பக்கத்தில் உறங்கத்தொடங்கிற்று. நன்றிகெட்டவனும் துஷ்டபுத்தியுள்ளவனுமான அந்தப்பிராம்மணனோ அந்தப் பக்ஷியைக் கொல்லவேண்டுமென்னும் விருப்பத்தினால் தூங்காமலிருந்தான். பிறகு, அவன், உறக்கமடைந்த அந்தப்பக்ஷியை எரிந்து கொண்டிருக்கும்கொள்ளியால் கொன்றான். கொன்றபின்னும் அவன் பாபத்தைநினையாமல் ஸந்தோஷத்துடனிருந்தான். அவன் அந்தப் பக்ஷியைச் சிறகையும் ரோமங்களையும் விலக்கி அப்பொழுது தீயினால் பாகஞ்செய்தான். பாகஞ்செய்த அந்தப்பக்ஷியையும் ஸுவர்ணத்தையும் எடுத்துக்கொண்டு அவன் மிகவும்வேகமாகப் புறப்பட்டான். பாரத! பிறகு, தாக்ஷாயணியின்பிள்ளையான அந்தப்பக்ஷி வாராமலிருப்பதைப்பற்றி வருத்தமுற்றமனத்துடன் விரூபாக்ஷன் சிந்தையுள்ளவனானான். பிறகு, மறுநாள்சென்றவுடன் விரூபாக்ஷன் தன்புத்திரனை நோக்கிச் சொல்லத்தொடங்கினான். 'மகனே! பக்ஷிகளுள் உத்தமமான ராஜதர்மாவை இன்றும் நான் காணேன். அஃது எப்பொழுதும் முதல்சந்தியில் பிரம்மதேவரை நமஸ்கரிக்கிறதற்காகப்போகும். அந்தப்பக்ஷியானது ஒருபொழுதும் என்னைப்பாராமல் வீடுசெல்லுகிறதில்லை. அஃது இரண்டுநாள் இரண்டுஸந்திகளிலும் என்னுடைய வீட்டிற்குவரவில்லை. ஆகையால், என்னுடையஎண்ணமானது தெளிவாயிருக்கவில்லை. ஸ்நேஹமுள்ள அதை அறியவேண்டும். வேதாத்யயனத்தைவிட்டுவிலகியவனும் பிராம்மணர்களுக்குரிய தேஜஸில்லாதவனுமான அந்தக்கௌதமன் அவ்விடத்திற்குச் சென்றிருக்கிறான். எனக்கு ஸந்தேஹமாயிருக்கிறது. பிராம்மணர்களுள் அதமனான அந்தக்கௌதமன் அந்தப்பக்ஷியைக் கொல்லுவான். கெட்டஆசார

முள்ள அந்தப்பிராம்மணன் தூர்ப்புத்தியுள்ளவனென்று இங்கிதங்களால்என்னாலறியப்பட்டான். தயையில்லாதவனும் குரூரமானஆகிருதியுள்ளவனும் துஷ்டனும் திருடன்போலஅதமனுமான அந்தக் கௌதமன் அவ்விடத்திற்குச்சென்றிருக்கிறான். அதனால், என்னுடையமனம் பயமடைந்திருக்கிறது. மகனே! சீக்கிரம் இவ்விடமிருந்து ராஜதர்மாவின் வீட்டிற்குப்போய்ப் பரிசுத்தமானபுத்தியுள்ள அந்தராஜதர்மாவானது ஜீவித்திருக்கிறதாவென்று [1]தாமதமின்றி அறியவேண்டும்' என்றுசொன்னான். இவ்விதஞ்சொல்லப்பட்ட அந்தப் புத்திரன் ராக்ஷஸர்களுடன்கூடிக்கொண்டு வேகமாகச்சென்றான். உடனே, ஆலமரத்தடியில் ராஜதர்மா கொல்லப்பட்டிருந்ததைக்கண்டான். அந்தராக்ஷஸன் அந்தராஜதர்மாவின்பொருட்டுப் பலவிதமாகப்புலம்பி அழுது பின் கோபங்கொண்டு கௌதமனைப்பிடிக்கவேண்டியதற்காகச் சென்றான். பாபியானகௌதமன், மிகவும்கோபம் மேலிட்டராக்ஷஸர்களால் பிடிக்கப்பட்டான். உடனே, ராஜதர்மாவினுடையசரீரத்தின்எலும்பும் எடுக்கப்பட்டது. உடனே, கோபத்தால் சிவந்தகண்ணுள்ளவர்களும் கொடியவர்களுமானராக்ஷஸர்கள் கௌதமனைக்கொலைசெய்வதில் உறுதியுள்ளவர்களாய் மனுவ்ரஜமென்னும்நகரை அடைந்தார்கள். அரசன்முன்னிலையில் ராஜதர்மாவின் எலும்புவைக்கப்பட்டது. அதைக்கண்டவுடன் அரசன் மந்திரிகளுடனும் மற்றக்கூட்டங்களுடனும் மனவருத்தமுள்ளவனானான். காச்யபரின்பிள்ளையானகொக்குக்கொல்லப்பட்டதும் மஹாத்மாவான அந்த அரசனுடையவீட்டில் ஸ்திரீக்கூட்டத்தினுடைய ெ ப துக்கத்வனியானது மிகவும்கிளம்பியது. அரசன் புத்திரனைநோக்கி, 'இந்தப் பாபியானகௌதமனைக் கொலைசெய்யவேண்டும்' என்றுசொன்னான். ராக்ஷஸர்கள், 'முன்பாபத்தைச்செய்தவனும் இப்பொழுது பாபத்தைச்செய்கிறவனும் பாபபுத்தியுள்ளவனும் பாபத்திலுறுதியுள்ளவனும் பாபவடிவமானவனும் நன்றிகெட்டவனுமான இவன் கொலைசெய்யப்படவேண்டியவன்தான். இதில் ஸந்தேஹமில்லை. இவனுடையமாம்ஸத்தை நாமனைவரும் ஒன்றுசேர்ந்து புஜித்துவிடுவோம்' என்று சொன்னார்கள். விரூபாக்ஷன், 'நன்றிகெட்டவனும் பாபச்செய்கையுள்ளவனுமான இவனைப்புஜிப்பதற்கு எனக்குஉத்ஸாஹமில்லை. மித்திரத்ரோஹியும் புருஷர்களுள் அதமனுமான இவனை வேலைக்காரர்களுக்குக் கொடுக்கவேண்டும்' என்றுசொன்னான். புருஷர்களிலுத்தமனே! (பிறகு) அழைக்கப்பட்டவேலைக்காரர்களெல்லாரும் அவ்

[1] வேறுபாடம்.

விதமே மற்றராக்ஷஸர்களும் நன்றிகெட்ட அந்தக்கௌதமனைப் புஜிப்பதற்கு விருப்பங்கொள்ளவில்லை. பிறகு, அவர்கள் வந்து தலைகளால் பூமியில்வணங்கி, 'மஹாராஜரே! பலாத்காரமாக [1]ஆஹாரத்திற்கு வேண்டிக் கஷ்டமானபாபத்தை நீர் ஒருபொழுதும் கொடுக்கத்தக்கவரல்லீர்,' என்றுசொன்னார்கள். பிறகு, 'பாபச்செய்கையுள்ள இவனை அறுக்கவேண்டும்; எரிக்கவேண்டும்; அல்லது தள்ளவேண்டும்; இவனை நமதுபார்வையிலிருந்து விலக்கவேண்டும்' என்று அரசனுக்குச் சொன்னார்கள். உடனே, அந்தவேலைக்காரர்கள் கோபமுள்ளவர்களும் சூலமும்கத்தியும் கையிலேந்தியவர்களுமாய் அவனை விகாரமாயிருக்கும்படி கண்டம்கண்டமாக வெட்டி மாம்ஸத்தைத்தின்னும்பிராணிகளிடம் போட்டார்கள். அரசச்ரேஷ்டனே! மாம்ஸத்தை ஆஹாரமாகக்கொண்டபிராணிகளும் விருப்பங்கொள்ளவில்லை. மாம்ஸம்தின்னும்பிராணிகள் கூட மரணமடைந்தவர்களாயினும் நன்றிகெட்டவர்களைப் புஜிக்கிறதில்லை. பிராம்மணர்களின்பொருளை அபஹரித்ததிருடனுக்கும் பிரம்மஹத்திசெய்தவனுக்கும் குருதாரத்திற்சென்றவனுக்கும் ஸாதுக்களால் பிராயச்சித்தம்விதிக்கப்பட்டிருக்கிறது. நன்றிகெட்டவனுக்குப் பிராயச்சித்தமில்லை. மித்திரர்களைத்ரோஹம் செய்பவனும் நன்றிகெட்டவனும் க்ரூரனுமான அதமமனிதனை மிருகங்களும் புழுக்களுங்கூட எப்பொழுதும் தின்பதேஇல்லை.

---

## நூற்றெழுபத்திரண்டாவது அத்தியாயம்.

## ஆபத்தர்மம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர், விருபாக்ஷன் கொக்கைச் சிதையிலேற்றுவித்ததையும் அது திரும்பஉயிர்பெற்றெழுந்ததையும் அதன்முயற்சியால் கௌதமன் பிழைத்துச்சென்றதையும் சொல்லியது.)

அறிவுள்ளராக்ஷஸராஜன் ராஜதர்மாவுக்கு ஸம்ஸ்காரஞ்செய்வித்தான். அவன் பரபரப்பில்லாமல் பலசந்தனக்கட்டைகளால் பூஜிக்கத்தக்கபடி தஹனஞ்செய்வித்தான். கொக்குகளுக்கு அரசான (அந்தக்) கொக்கானது தேவனான இந்திரனுடைய வசனத்தால்அந்த இந்திரனாலேயே அமிருதத்தால்நனைக்கப்பட்டுத் திரும்பவும் உயிருள்ளதாகச்செய்யப்பட்டது. ராஜதர்மாவும் சத்துருக்களை அடக்கும் அந்தஇந்திரனைநோக்கி, 'கௌதமனென்னும் பிராம்மணனெங்கே? என்னுடைய பிரியநண்பனான அவனைவிடவேண்டும்' என்று சொல்

---

[1] வேறுபாடம்.

ல் மிகச்சிறந்தவனான இந்திரன் அந்தராஜதர்மாவின் வசனத்தை அறிந்துகொண்டு கௌதமனுக்கும் அனுமதிகொடுத்துவிட்டுப் பிறகு ப்ரீதியுள்ளவனாகிப் புறப்படுவதில் உற்சாகமுள்ளவனானான். ப்ரஸித்திபெற்ற அழகான அந்தராஜதர்மாவும் தன் இருப்பிடம்போய்ச்சேர்ந்தது. க்ரூரனும் மித்திரத்ரோஹம்செய்தவனும் மனிதர்களில் அதமனும் விடப்பட்டவனுமான அந்தக்கௌதமன் பொருட்சுமையுடன் அப்பொழுது வேடச்சேரியைவந்தடைந்தான். அவ்விடத்தில் நரகத்திற்கொப்பான வேடஸ்திரீயின்சரீரத்தில் இவன் பிறப்படைந்தான். அப்பொழுது தேவக்கூட்டங்களால் அவனுக்கு இப்பெரியசாபமிடப்பட்டது. பராக்ரமமுள்ளராக்ஷஸராஜனால் பக்ஷிராஜாவானது தஹிக்கப்படும்பொழுது சிதைக்குப்பக்கத்தில் கறந்துகொண்டிருக்கும் காமதேனுவானது அந்தராஜதர்மாவைப்பிழைக்கச்செய்தது. குற்றமில்லாதவனே! அப்பொழுது அக்காமதேனுவின்வாயிலிருந்து நழுவியபாலின் நுரையானது காற்றினலிழுக்கப்பட்டு ராஜதர்மாவின் அந்தச்சிதையை அடைந்தது. அதன்பிறகு, தேவராஜன் விரூபாக்ஷனுடைய பட்டணத்தைஅடைந்தான். அப்பொழுது விரூபாக்ஷனும் அந்தஇந்திரனைநோக்கி, 'தேவனே! காச்யபரின்புத்திரனை என்ஸஹோதரன் ஜீவிக்கவேண்டும்' என்று திரும்பவும்திரும்பவும் வேண்டினான். ஈசனான இந்திரனும் விரூபாக்ஷனை நோக்கி, 'முன்னொருகாலத்தில் பிரம்மதேவர் கோபத்தால் ராஜதர்மாவைப்பார்த்துச்சொல்லத்தொடங்கினார். 'நீ என்னுடைய இச்சபையை எப்பொழுதும் பார்க்கவராமலிருக்கிற காரணத்தால் தர்மஸ்வபாவமுள்ளதும் பரமாத்மாவை அறிந்ததுமான கொக்காகப்பிறக்கப்போகிறாய். பாபகார்யத்தைச் செய்கிறவனும் வேடச்சேரியிலிருப்பவனும் நன்றிகெட்டவனும் சூத்திரமடந்தைக்குப்பதியுமான ஒருபிராம்மணன் ஒருஸமயம் உன்னுடைய இருப்பிடத்திற்குவருவான். அவன் எப்பொழுது கொல்வானோ அப்பொழுது உனக்கு விடுதலைவரும்' என்று அந்தராஜதர்மாவுக்குச் சொன்னார். ஆகையால், இந்தராஜதர்மாவானது உத்தமஸ்தானத்திலிருக்கும்பிராம்மதேவரின் உலகத்தை அடைந்தது' என்றுசொன்னான். குலத்தைக்கெடுத்தவனும் கெட்டசெய்கையுள்ளவனுமான அந்தப்பிராம்மணனும் நரகத்தை அடைந்தான். அரசச்ரேஷ்டனே! ஸபாமத்தியத்தில் அந்தவாக்யமா[illegible] நாரதரால் சொல்லப்பட்டது. இதைக்கேட்டநானும் உனக்கு [illegible] படி சொன்னேன். அரசனே! பிரம்மஹத்திசெய்[illegible] குடித்தவனுக்கும் திருடனுக்கும் அப்படியே [illegible]

ியவனுக்கும் பிராயச்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறது. நன்றிகொன்றவனுக்குப் பிராயச்சித்தமில்லை. நன்றிகொன்றவனுக்கு யசஸ்ஏது? ஸ்தானமேது? ஸுகமேது? நன்றிகொன்றவன் நம்பத்தக்கவனல்லன். நன்றிகொன்றவனுக்குப் பிராயச்சித்தமில்லை. மனிதன் விசேஷமாக மித்திரர்களுக்கு த்ரோஹத்தைச் செய்யாமலிருக்கவேண்டும். மித்ரர்களைத்துரோஹிப்பவன், கோரமானதும் முடிவில்லாததுமான நரகத்தைஅடைவான். குற்றமில்லாதவனே! நன்றியறிவுள்ளமனத்துடனும் மித்திரத்தன்மையுடனும் இருக்கவேண்டும். மித்திரனிடமிருந்து யாவுமுண்டாகும். மித்திரன் சிறந்தபாக்கியமென்று கூறப்படுகிறான். தனலாபம் மித்திரலாபம் இவ்விரண்டினுள்ளும் மித்திரலாபம் சிறந்ததாகும். மித்திரனால் தனங்கள் எளிதில்கிடைக்கக்கூடும். மித்திரனால் முயற்சிசெய்யக்கூடும். மித்திரனானவன் அபிமானிக்கப்பட்டதும் ஸ்நேஹமுள்ளதுமான பயனாவான். ஸாதுக்களுக்குள்ளபயனானமித்திரனை அறிவுள்ளவன் தன்ஜனங்களுடன்கூடி மர்யாதைகளுடன் பூஜிக்கவேண்டும். அறிவுள்ளவர்கள் கிருபணனும் குலத்தைக்கெடுத்தவனும் மித்திரர்களுக்குத்ரோஹஞ்செய்பவனும் குலத்துக்குக் கொள்ளிபோன்றவனும் குலத்திற்குஅதமனுமான பாபியை விலக்கவேண்டும். குற்றமில்லாதவனே! ஸாதுக்களின் சேர்க்கையைப்பற்றியதும் மித்திரர்களை த்ரோஹஞ்செய்யும் நன்றிகெட்டவனைப்பற்றியதுமான இந்தஅறிவு என்னால் கூறப்பட்டது. திரும்பவும் எதைக்கேட்கவிரும்புகிறாய்?' என்றுசொன்னார். ஜனமேஜயரே! பிறகு, மஹாத்மாவானபீஷ்மரால் சொல்லப்பட்ட இந்த வாக்யத்தைக்கேட்டு யுதிஷ்டிரரானவர் ஸந்தோஷமடைந்த மனமுள்ளவராயிருந்தார்.

ஆபத்தர்மம் முற்றிற்று.